# முன்னுரை

ஹரி நாராயண் ஆப்டே, மராத்தி நாவல்களில் மறுமலர்ச்சி ஏற்படுத்தியவராக இன்று கொண்டாடப்படுகிறார். 'ஹரிபாவு' என்றழைக்கப்படும் ஆப்டேக்குப் பின், இந்த எழுபத்தைந்து ஆண்டுகளில், மராத்தி நாவலின் எல்லைகள் எவ்வளவோ விரிவடைந்துள்ளன. புதிய சிந்தனை அலைகள் அதனுள் பிரவேசித்துள்ளன. ஹரிபாவுவின் நாவல்கள் இந்த முன்னேற்றத்துக்கெல்லாம் ஒரு நுழைவாயில்போல, கட்டியம் கூறுபவைபோல அமைந்தன. எனவே, அவர் தம் காலத்தில் சிறப்பிக்கப்பட்டது போல இன்றும் சிறப்பிக்கப்படுகிறார்.

மராத்தி இலக்கியம் மிகப் பழமையானதாக இருக்கலாம். ஆனால் அதில் நாவல்கள் தோன்றியது நூறு—நூற்றிருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்புதான். பன்னிரண்டாம் நூற்றாண்டில் இம்மொழியில் கிரந்தங்கள் எழுதுவது தொடங்கிவிட்டபோதிலும், நாவல் பிறந்தது பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தான். பாபா பதம்ஜியின் 'யமுனா பர்யடண்' (1857) மராத்தியில் எழுதப்பட்ட முதல் நாவலாகக் கருதப்படுகிறது. அக்காலத்துப் பிரச்னைகளை வைத்து எழுதப்பட்ட சுயேச்சையான நாவல் இது. இந்து விதவைகளின் வாழ்க்கை, அவர்களின் இழிந்த நிலை ஆகியவற்றை இந்நாவல் மனிதாபிமானத்துடன் சித்திரித்தது. ஆங்கில வாடை அதிகமாக வீசிய நடையில் இந்த நாவல் அமைந்திருந்ததுடன், கிறிஸ்துவ மதத்தின் உயர்வைப் பிரசாரம் செய்வதாகவும் இருந்தது. ஏனெனில் நாவலாசிரியர் தாமே கிறிஸ்துவ மதத்தைத் தழுவியிருந்தார். இதையடுத்து வந்த லக்ஷ்மண சாஸ்திரி ஹளவே அவர்களின் 'முக்தமாலா' (1861) மராத்தி மக்களிடையே புதியதொரு விழிப்புணர்ச்சியைத் தோற்றுவித்தது. கூடவே ரா. வி. குஞ்சீகரின் 'மோசனகட்' (1867) சரித்திர நாவலுக்குப் புதிய பரிமாணத்தைச் சேர்த்தது. ஹரிபாவுக்கு முந்திய இந்த யுகம் 'முக்தமாலா யுகம்' என்றழைக்கப்படுகிறது. இக்காலத்தில் வெளிவந்த நாவல்களில் நாவலுக்குரிய சிறப்புகள் எதுவுமே இருக்கவில்லை என்ற கருத்து முற்றும் சரியானதல்ல. அதே சமயத்தில் கலை நோக்கு, மற்றும்

யதார்த்த நோக்கில் இந்நாவல்கள் மிக மிக ஆரம்பக் கட்டத்தில் இருந்தன என்பதும் உண்மையே. ஒரு விதத்தில், ஹரிபாவுவின் யுகத்துக்கு ஒரு பீடிகையாக இக்காலம் விளங்கியதெனக் கூறலாம்.

ஹரிபாவு பிறந்த கால கட்டம், மகாராஷ்டிரத்தில் வெவ்வேறு துறைகளில் புதிய சிந்தனைகளும் துடிப்பும் மிக்கவர்களால் பெரும் பாதிப்புகள் ஏற்படத் தொடங்கியிருந்த கால கட்டம். ஒரு புறம் சமூக வாழ்வில் புதிய விழிப்பு ஏற்படுத்தும் இயக்கம்; மற்றொரு புறம், பிரிட்டிஷ் ஆட்சி மற்றும் மேற்கத்திய கலாசாரத்தின் மோதலால் விளைந்த புத்துணர்ச்சி. மறுமலர்ச்சியொன்று ஏற்படுவதற்கான சூழ்நிலை தயாராக இருந்தது.

'மதலி ஸ்திதி' (இடைக்கால நிலைமை) என்பது ஹரிபாவுவின் முதலாவது முக்கிய நாவல். 1885-ஆம் வருடத்திலிருந்து 'பூனா வைபவம்' பத்திரிகையில் இது தொடராக வெளியிடப்பட்டது. அப்போதிருந்தே பெருவாரியான வாசகர் கவனத்தை இது கவர்ந்தது. உண்மையில் ரெய்னால்ட்ஸ் எழுதிய 'பழைய லண்டன்' என்ற நாவலை மொழிபெயர்ப்பதுதான் அவர் திட்டமாயிருந்தது. ஆனால் நாவலைப் படித்த பிறகு தாமே சொந்தமாக எழுதலாமென்று அவருக்குத் தோன்றியது. 'தற்காலத்துக் கதைகள்' என்று தாம் எழுதியவற்றுக்குத் தலைப்புக் கொடுத்தார். எட்டு, ஒன்பது கதைகளை எழுதி அவற்றில் சில புதிய நிகழ்ச்சிகளையும் சேர்த்து நாவல் வடிவம் கொடுத்தார். பிற்பாடு அவர் 'கரமணூக்' (பொழுதுபோக்கு—1890) என்னும் பெயரில் சொந்தப் பத்திரிகையைத் தொடங்கினார். அதில் தொடராக வெளியிடப்பட்ட அவருடைய நாவல்கள் அந்தப் பத்திரிகையின் முக்கியமான கவர்ச்சி அம்சமாயின. 1917 வரை, அதாவது ஹரிபாவுவின் மரணத்துக்கு இரண்டு ஆண்டுகள் முன்புவரை, இப்பத்திரிகை வெளிவந்துகொண்டிருந்தது. இந்த இடைக்காலத்தில் அவர் இருபத்திரண்டு நாவல்கள், நான்கு சிறுகதைத் தொகுதிகள், எட்டு நாடகங்கள், மற்றும் சில விமரிசனக் கட்டுரைகள் வெளியிட்டிருந்தார்.

இலக்கியம் படைத்தலே ஹரிபாவுவின் வாழ்க்கை லட்சியமாக இருந்தது. அவர் மராத்தி நாவலைக் கற்பனைச் சூழல்களிலிருந்து விடுவித்து யதார்த்தமான சூழ்நிலைக்குக் கொண்டு நிறுத்தினார். மக்களின் ருசி எத்தகையது என்பதை அவர் அறியாதவரல்ல. மராத்தி வாசகர்களுக்கு அதீதமான, கிளர்ச்சி

யூட்டும் கற்பனைகளில்தான் நாட்டமிருந்தது. எனவே அவர் சரித்திர நாவல்கள் மூலம் அவர்களைக் கவரத் தலைப்பட்டார். அச்சமயம் பிரபலமாயிருந்த ஆங்கில ஆசிரியர் ஸ்காட்டின் பாணியைப் பின்பற்றி, வீரம், காதல், மர்மம் ஆகிய அம்சங்களைக் கொண்டு தம் நாவல்களை உருவாக்கிய அவர், இடையிடையே புதிய கருத்துகளை லாகவமாகப் புகுத்தினார். இவ்வாறு கருத்துகளைப் பிரதானமாகக் கொண்ட நாவல்களின் தொடக்கம் ஏற்பட்டது. வாசகர்களுக்குச் சரித்திர நாவல்களிலிருந்த ஈடுபாட்டை, தேசிய உணர்வு, சுதந்தரப் பற்று ஆகியவற்றை அவர்களிடையே உருவாக்க அவர் பயன்படுத்தினார். இவ்வகையில் அவருடைய நாவல்கள் 'முக்தமாலா யுகத்து' நாவல்களிலிருந்து வேறுபட்டிருந்தன. நாவல்களைச் சுவையானவையாகப் படைக்க முயலுகையில் மனிதாபிமான அம்சங்களை அவர் புறக்கணிக்கவில்லை. சம்பாஷணை, பழக்க வழக்கங்கள், அக்காலத்திய சமூகச் சூழல், மாதர் பிரச்னைகள் ஆகிய ஒவ்வொன்றிலும் விசேஷ கவனம் கொண்டு, தம் கருத்துகளை வலியுறுத்த இவற்றை அவர் பயன்படுத்தினார். 'சந்திரகுப்தன்', 'ரூப நகரத்தின் இராஜ கன்னிகை', 'காலகூட்' முதலிய நாவல்களில் அவர் உருவாக்கியுள்ள சரித்திரச் சூழ்நிலை, மகாராஷ்டிரத்துக்கு மட்டுமல்ல, அதன் எல்லைகளுக்கு அப்பாலும் பொருந்துவதாக உள்ளது. 'விடியும் நேரம்', 'கோட்டை கிடைத்தது ஆனால் சிங்கம் போயிற்று', 'வஜ்ரத் தாக்கு' ஆகிய அவருடைய நாவல்கள் தம் காலத்திய சூழ்நிலையைச் சித்திரிப்பதில் பெரிதும் வெற்றியடைந்துள்ளன. எந்த நோக்கில் பார்த்தாலும் இந்நாவல்கள் மிக உயர்ந்த தரத்தவை.

ஹரிபாவுவின் சமூக நாவல்களில், சமூகச் சீர்திருத்தம் பற்றிய ஒரு தனித்த பார்வையைக் காணலாம். இப்பார்வையின் அடிப்படையில், அவர் தம் சிந்தனைகளுக்குக் கலையுருவம் கொடுத்தார். அவருடை காலத்தில் கலைப் பார்வை, சமூகப் பார்வை என்று தனித் தனியாகச் சிந்திக்கும் வழக்கமில்லை. இவ்விரண்டு இழைகளும் அவருடைய நாவல்களில் கலை நயத்தோடு இணைந்துள்ளன.

'இடைக்கால நிலைமை' என்ற முதல் நாவல் ஹரிபாவுவின் சமூகப் பார்வையைத் தெளிவாக்கி விடுகிறது. மராத்தியரின் இயல்பும் எண்ணங்களும் இந்நாவலில் நன்கு பதிவாகியுள்ளன. 'என் நாவல்களில் கற்பனையான பாத்திரம் ஒன்றுகூடக்

கிடையாது' என்று ஹரிபாவு கூறியுள்ளார். இப்பாத்திரங்கள் நிஜ வாழ்வில் அவருக்கு மிகவும் நெருக்கமாயிருந்த சிலரே. உதாரணமாக 'பண் லக்ஷாத் கோண் கேதோ' (ஆனால் யார் கவலைப்படுகிறார்கள்?) என்னும் நாவலில் கதாநாயகி யமுவும் அவளுடைய மகனும் தம் சொற்களில் புரட்சிகரமான கருத்துகளை வெளியிட்ட வண்ணமிருக்கிறார்கள். வாசகருக்கு யாரோ பரிசயமான ஒருவரின் சுயசரிதையைப் படிப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது.

ஹரிபாவுவின் நாவல்களில் மகாராஷ்டிரத்துப் படித்த மத்திய தர வகுப்பினரின் குடும்ப வாழ்க்கைச் சித்திரம் கிடைக்கிறது; தேசீய எழுச்சியின் யதார்த்தம் புலனாகிறது. 'மதலி ஸ்திதி' (1885) யிலிருந்து 'கர்மயோக்' (1917) வரையில், மாறிவரும் சமூக நிலையின் சித்திரத்தைக் காண்கிறோம். ஆங்கிலக் கல்வியின் பாதிப்பிலிருந்து முதலாவது மகாயுத்தம் வரை மகாராஷ்டிரத்து மக்களின் வாழ்வில் ஏற்பட்ட சமூக, பௌதிக மாற்றங்கள் யாவும் இவர் நாவல்களில் நன்கு பதிவாகியுள்ளன. இந்தப் பெரும் பணியை, தமக்குப் பரிசயமாயிருந்த பல சிறிய, பெரிய மனிதர்களைப் பாத்திரங்களாக வார்ப்பதன் மூலம் இவர் சாதித்துள்ளார். சமூக வாழ்வில் ஏற்பட்டு வந்த மாற்றங்கள் எவ்வாறு குடும்ப வாழ்க்கையிலும் மாறுதல்கள் ஏற்படக் காரணமாயின என்பதை இவர் நுட்பமாகச் சித்திரித்துள்ளார். 'ஆனால் யார் கவலைப்படுகிறார்கள்?' நாவலில் எல்லா இடங்களிலும் இன்னலே நிறைந்து கிடக்கிறது. ஆனால் 'பயங்கரச் சிறப்பு' என்ற நாவலில் பல்வந்த் ராவ், துவாரகா பாய் இருவரும் மறு விவாகம் செய்துகொண்டவர்களாயினும் அவர்களுடையது மகிழ்ச்சியான குடும்பமாயிருக்கிறது. காரணம், காலம் மாறிவிட்டது. அவர்களுடைய குடும்பத்திலும் பிரச்னைகள் இல்லாமலில்லை; ஆனால் இப்பிரச்னைகள் வேறு வகையானவை. ஹரிபாவுவின் நாவல்களில் வரும் படித்த குடும்பத்தினர் உழைப்பில் நம்பிக்கை கொண்டவர்கள். உழைப்பு, படிப்பு ஆகிய வரையறைகளுக்குட்பட்டே இவர்கள் தம்முடைய வளமான எதிர்காலம் பற்றிய திட்டங்களைத் தீட்டுகிறார்கள்.

ஹரிபாவுவின் சமூக நாவல் 'நான்', 'கரமணூக்' வாரப் பத்திரிகையில் 1893–லிருந்து 1895 வரை தொடராக வெளிவந்தது. பிறகு 1916-இல் புத்தகமாக வெளியாயிற்று. சுயசரிதைப் பாணியை ஒட்டி, நாவலின் கதாநாயகரான பாவானந்தரின்

வாழ்க்கைச் சித்திரமாக இந்நாவல் உருவாக்கப்பட்டுள்ளது. இந்நாவலின் தொடக்கத்திலேயே ஆசிரியரின் சமூகச் சீர்திருத்தக் கருத்துகள் தெளிவாகி விடுகின்றன. கலை சம்பந்தமான அவருடைய கருத்துகளும் தெளிவாயிருந்தன. பயன், அழகு இவ்விரண்டும் எங்கே சேர்ந்து விளங்குகின்றனவோ, அதுவே சிறப்பானது என்று அவர் கூறிவந்தார். இதுவே புதிய எழுத்துக்கு அவருடைய முன்னுரை. பழைய மரபுகள், நீதிகள் ஆகியவற்றின் போலிப் பிரசாரமற்ற சிந்தனைச் சுதந்தரமே அவருக்கு விருப்பமானது. அவருடைய இந்த விசால மனப்பான்மை அவர் எழுத்துகளில் நன்கு பிரதிபலிக்கிறது. அவருடைய பாத்திரங்கள், சீர்திருத்தவாதிகள், பிரசாரகர்கள், உபதேசிகள், உயர் கல்வி பெற்றவர்கள். அவர் சுத்தக் கலைஞர் அல்ல, ஆதரிசவாதி. அதே சமயத்தில் இந்த ஆதரிசவாதம் மிகையான கற்பனை வகையைச் சேர்ந்ததல்ல. அவருடைய பாத்திரங்கள் மனித மனத்தின் நல்லியல்புகள் மேலோங்கி, மனிதாபிமானம் தழைப்பதற்காகப் பாடுபடுகிறவர்கள்.

உதாரணமாக, பாவானந்தர் மடம் ஸ்தாபித்தல் யதார்த்தத்துக்குப் புறம்பானதல்ல. ஹரிபாவுவின் பிரிய நண்பரான கோபாலகிருஷ்ண கோகலே நிறுவிய 'பாரத் சேவக் சமாஜ்' எனும் ஸ்தாபனத்தை ஒட்டிய கற்பனையே இது. இந்த ஸ்தாபனம் அரசியல், சமூக விழிப்புணர்வு ஏற்படப் பாடுபட்டது. நாவலில் பாவானந்தர் இதே நோக்கங்களுக்காகத் தம் மடத்தை நிறுவுகிறார்.

பாவானந்தரின் இளமையிலிருந்து இறப்புவரையிலான நிகழ்ச்சிகளை நாவல் விவரிக்கிறது. இந்நிகழ்ச்சிகளுடன்கூட, மாறுபட்டு வந்த சூழ்நிலையின் நாட்டுச் சித்திரமும் நமக்கு அளிக்கப்படுகிறது. ஆங்கில ஆட்சியின்கீழ் பாரதம் தன் தேசீயத்தைக் கிட்டத்தட்ட இழந்துவிட்டிருக்கிறது. இத்தருணத்தில்தான் பாவானந்தன் தேசபக்தி மற்றும் சுதந்தர வேட்கையினால் உந்தப்பட்டு, குடும்ப வாழ்வைத் துறந்து சேவை வாழ்வை மேற்கொள்ளுகிறான். இராவ்ஜியைப்போல் (மூளை கலங்கிய) விசித்திரமான போக்கைக் கொண்ட கணவனுடன் வாழ்வு முழுவதற்கும் ஒரு முடிச்சு விழுந்துவிட்டதால் குடும்பத்தில் வேதனையை அநுபவித்துக்கொண்டிருந்த பாவுவின் அம்மா, சிவராம் பந்த் அவர்களின் அறிவுரையைக் கேட்காமல், தனது பெண்ணின் திருமணத்தை, குடி முதலான தீயப் பழக்கங்களைக் கொண்ட வயது

முதிர்ந்த ஒருவனுடன் ஏற்பாடு செய்துவிடுகிருள். வாழ்க்கையில் தொடர்ந்து வருகிற மரபின் சின்னமாக, முன்னேக்கிச் செல்லும் தன்மையற்ற பெண்ணின் சித்திரத்தை ஹரிபாவு இங்கு வரைகிருர். இதற்கு எதிரிடையாக, பாவானந்தரின் சகோதரி, தனது வாழ்வின் முற்பகுதியில் 'ஐய்யய்யோ! நாங்கள் வீட்டில் கட்டிப் போடப்பட்ட ஊமைப் பிராணிகள்!' என்று முற்போக்கு அற்ற அடைபட்ட தன்மையைப் பிரதிபலித்தாலும், தனது வாழ்வின் பிற்பகுதியில் ஒளி பொருந்திய, தன்னம்பிக்கையின் இருப்பிடமான பாத்திரமாக மிளிர்ந்து, பாவானந்தரின் குறிக்கோள் கொண்ட வாழ்க்கைக்கு ஒரு தூண்டுகோல் சக்தியாக உருவெடுக்கிருள்.

பாவானந்தர், சுந்தரி இருவருடைய உறவும் நாவலில் சித்திரிக்கப்பட்டுள்ள விதம் அதன் யதார்த்தத் தன்மையை அதிகரிப்பதாக உள்ளது. இரண்டரை, மூன்று வயதுப் பெண்ணுக இருக்கும்பொழுது, சுந்தரி முதல் சந்திப்பில், அறியாமையில், 'மாப்ளே' என்று சொல்லி அழைத்து, அப்பொழுதிலிருந்தே பாவு அவர்களின் உள்ளத்தைக் கவர்ந்திருந்தும் கூட, இறுதியில் அவள் கவர்ச்சியுடைய ஓர் அன்பின் கதையாகவே நிலேபெற்று விடுகிருள். மிகக் குறுகிய காலதாமதத்திஞல் சுந்தரி, பாவு இவர்களின் திருமணம் ஆகும் நற்சமயம் நழுவிவிட்டதாகக் காட்டும்போது ஹரிபாவு அவர்கள் இயற்கையை வெற்றி கொள்ள முடியாது என்ற உண்மையைக் குறிப்பிடுகிருர். அதேபோல, எல்லா வகைகளிலும் அநுகூலமான ஒரு சூழ்நிலேயை உருவாக்கித் தந்துங்கூடச் சிவராம் பந்த் அவர்களால் சுந்தரியை அவர் விரும்பியபடி ஒரு சமூகச் சீர்திருத்தவாதியாக்க முடிவதில்லே (ஆனுல் அது அக்காவின் வாழ்வில் தாஞகவே உருவாகி விடுகிறது). இதை எடுத்துக்காட்டுவதன் மூலம் மனிதர்களேக் களிமண்ணுல் செய்யப்படும் உருவங்களேப் போல் தத்துவங்களின் அச்சில் வார்த்தெடுக்க முடியாது என்பதை அவர் நுட்பமாகச் சித்திரித்துள்ளார். சுந்தரியை மணந்து கொள்ள மறுத்துப் பாவு சந்நியாசம் கொள்வது, அவனுடைய குணவளர்ச்சியின் உச்சநிலேக் கட்டமாகிறது.

பாவுவின் இலட்சியவாதத் தன்மையில், எங்குமே மனிதத் தன்மையற்ற குறை இல்லே. கருணேயும், அன்புந்தான் அவரது இதயத்தின் தர்மமாகும். அம்மா, பாட்டி, அக்கா இவர்களுக்கு நடுவில்தான் அவன் பெரியவனுக வளருகிருன். சிவராம் பந்த்

அவர்கள் வழிகாட்டிக் கொடுக்கிறாரென்றால், சுந்தரி அந்த இலட்சிய வாழ்க்கையின் தூண்டுகோலாக இருக்கிறாள். அதிலிருந்துதான் பாவுவினின்றும் பாவானந் நாம் காணக்காண உருவெடுக்கிறார்.

பாவானந்தர் அகாலத்தில் மரணமடைவதும் யதார்த்தத்தை ஒட்டிய நிகழ்ச்சியே. அந்தக் கால கட்டத்தில் பெரும் சிந்தனையாளர்கள் பெரும்பாலும் தனியாட்களாகச் சமூகச் சீர்திருத்த நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டி வந்ததால், அவர்களுடைய சக்திகள் சூறையாடப்பட்டு மரணம் துரிதமாக்கப்பட்டது. பாவானந்தரின் நிலையும் இதுதான். அவர் அசாதாரணமான ஒரு மனிதர். யதார்த்தத்தின்மீது காலூன்றிக் கொண்டு ஆதரிசத்தின்மீது பார்வையை நாட்டியிருந்த அவருடைய சித்திரம் ஆசிரியரால் கலைத்திறனுடன் வரையப்பட்டிருக்கிறது.

ஹரிபாவு அவர்களின் கதைகளில் அளவுக்கு மீறிய வர்ணனை, சுற்றி வளைத்துச் சொல்லும் தன்மை ஆகிய குறைகள் இல்லாமலில்லை. வாரப் பத்திரிகையின் தேவைகளையொட்டி வாராவாரம் எழுதப்பட்டதால் இவை ஏற்பட்டிருக்கலாம். ஆனால் இவை பெரிய குறைகளென்று சொல்வதற்கில்லை. கதையின் உட்கருத்து, பாத்திரங்களின் தன்மை ஆகியவற்றில் எங்கும் சிதைவுகளோ, மாற்றங்களோ ஏற்படாததை நாம் காண்கிறோம். அவருடைய எழுத்துத் திறனால் சர்வசாதாரணமான குடும்பச் சூழல்கூட அபூர்வமான வண்ணங்களுடன் ஒளிரத் தொடங்குகிறது.

அற்புதச் சூழலிலிருந்து யதார்த்தச் சூழல் வரையிலான விசாலமான கான்வஸ், சுவையான கதை மூலம் கருத்துகளைக் கூறும் திறன், வாழ்க்கையை அதன் முழுமையில் காண விழைதல்—ஆகியவை ஹரிபாவு அவர்கள் மூலம் மராத்தி நாவல் பெற்றுள்ள வளங்கள்.

**அனந்த காணேகர்**

# 1. கதவில் பூட்டு

நான்! நான் யார்? இக்கேள்விக்கு உரிய பதிலாகத்தான் எனது முழுக் கதையையும் எழுதும் எண்ணத்தை உள்ளத்தில் கொண்டுள்ளேன்.

பொதுவாக வாழ்க்கைச் சரித்திரம் என்று பெரிய மனிதர்களுடைய வாழ்க்கையைத்தான் எழுதுவது வழக்கமாகும். பெரியவன் என்றால் அவன் குலத்தாலோ, குணத்தாலோ உயர்ந்தவனாக இருக்கலாம். தனது உயிரையும் பொருட்படுத்தாத வீரச் செயல், பரோபகாரம் அல்லது தேசத் தொண்டு போன்றவற்றால் உயர்ந்தவனாக ஆகியிருக்கலாம்; அல்லது குறைந்தபட்சம் தகாததும், பயங்கரமானதுமான செயல்களின் மூலம் உயர்ந்தவனாக, அதாவது பிரபலமடைந்தவனாக இருக்கலாம்.

நான் குலத்தால் உயர்ந்தவன் அல்ல; குணத்தால் உயர்ந்தவனா தாழ்ந்தவனா; எழுத்தில் வடித்து உலகத்தின்முன் அளிப்பதற்கு ஏற்றதாக என் கதை இருக்கிறதா இல்லையா, எனது கரத்தால் தேசத்தொண்டோ, பரோபகாரச் செயலோ செய்துள்ளேனா இல்லையா அல்லது அடிப்படையாக இவற்றில் ஒன்றுகூட இல்லையா—முதலானவற்றைப்பற்றி நான் இப்பொழுதே சொல்ல முனைந்தால் சாரம் அற்றதாகிவிடும்; வெளிப்பட்ட மூடுமந்திரம்போல் எனது கதை சுவை அற்றதாகிவிடும். எனவே, எனது கதையை எழுதும் காரணத்தை ஓர் இரகசியமாகவே வைத்து அதன் மதிப்பையும், அதை அறிவதில் உங்களுக்குள்ள ஆர்வத்தையும் காக்க விரும்புகின்றேன்.

கதையைப் படித்து முடித்த பின்னர் வேண்டுமானால் என்னை உயர்ந்தவன் என்றோ, தாழ்ந்தவன் என்றோ சொல்லுங்கள். என்னைப்பற்றிய உங்களுடைய அக்கருத்துபற்றி நான் எதுவும் சொல்வதற்கில்லை.

எனது குழந்தைப் பருவம், சுமாராக முதல் எட்டு ஆண்டுகள் எந்நிலையில், எவ்வகையில் கடந்தது என்பது எனது நினைவில் தெளிவாக இல்லை. அந்நாட்களைப்பற்றிய மிக மங்கலானதொரு நினைவே என்னுள்ளத்தில் தங்கியுள்ளது. அம்மங்கிய நினைவில்

உள்ளபடிதான் நிகழ்ச்சிகள் நிகழ்ந்தனவா அல்லது நிகழ்ந்தவை களைப்பற்றிய நினைவில் எனது கற்பனையின் கலவை அதிகமா என்பதைப்பற்றி நிச்சயமாக என்னால் ஒன்றும் சொல்ல முடிய வில்லை. எனினும், நினைவினுள் மிதக்கும் மிகப் பழமையான விஷயத்திலிருந்து எனது கதையைச் சொல்லத் துவங்கி, பின்னர் நிகழ்ந்தவையாகப் பிறர் மூலமாகத் தெரியவந்த நிகழ்ச்சிகளின் விவரத்தை அவர்கள் கூறியதுபோலவே அளிக்க முயல்கிறேன்.

என் நினைவுக்கு வருகிறது; நான் ஒரு முறை ஒரு முதிய அம்மா ளுடன் எங்கிருந்தோ பிரயாணம் செய்து வந்து போரி-பந்தர் ஸ்டேஷனில் இறங்கினேன். அந்த இரயில் நிலையம் இன்று உள்ள நிலையில் அன்று இருக்கவில்லை. ஒரு நீண்ட பலகையா லான பிளாட்பாரம்; அதில் ஆயிரம் விரிசல்கள். நாங்கள் நிலையத்தின் ஒரு கோடியில் இறங்கினோம். டிக்கட்டுகளைக் கொடுப்பதற்காக எங்களுக்கு நிலையத்தின் மறுகோடிவரை செல்லவேண்டி இருந்தது. எங்களுடன் கறுப்புக் கோட்டு அணிந்த ஒரு கறுத்த ஆளும் இருந்தார். ஓர் இளமங்கையும் இருந்தாள். நிலையத்தில் அங்கும் இங்குமாக நடை போட்டுக் கொண்டிருந்த சில ஆங்கில மாதுகளையும், அவர்களது உடைகளை யும் திரும்பித் திரும்பிப் பார்த்தவாறே அம் முதிய அம்மாளின் கையைப் பிடித்துக்கொண்டு நான் நடந்துகொண்டிருந்தேன்.

அச்சமயம் அக் கறுத்த ஆள், முதிய அம்மாளிடம் கூறினார்: 'இராவ்ஜீக்குக்கூட மிகுந்த ஆச்சரியம் ஏற்படும், தெரியுமா? அவர் இரண்டு மூன்று தடவைகள் என்னிடம் அடித்துச் சொல்லி இருந்தார், ''எல்லாரையும் அதற்குள்ளாக அழைத்துவர வேண்டாம்'' என்று. இப்போது நாம் எல்லோரும் போய் அவர் முன் நின்றால் ஆச்சரியத்தில் மூழ்கிவிடுவார்.'

உடனேயே முதியவள் கூறினாள்: 'ஆச்சரியம் அடைய அவருக்கு என்ன? இன்றைக்கு ஆறு ஆண்டுகள் என்ன, ஏழு ஆண்டுகளும் ஆகிவிட்டன. பெண்ணின் பெயரைக்கூட எடுக்க வில்லை. அதுமட்டுமல்ல, ஒரு நான்கு வரிக் கடிதம்கூட எழுதவில்லை. அப்படி நாங்கள் அவருக்கு என்ன தீங்கு இழைத்து விட்டோம்? அந்தப் பெண்ணுந்தான் என்ன தவறு செய்தாள் அவருக்கு? தனது நலத்தைத் தெரிவித்து ஒரு சிறு கடிதம் கூடவா அவர் எழுதக்கூடாது? அங்கிருந்தோ குறைந்தபட்சம் நூறு கடிதங்கள் அனுப்பப்பட்டிருக்கும். ''நான் இப்பொழுது

அங்கு வரப்போகிறேன். எனது வேலை முடிவுக்கு வந்துகொண்டிருக்கிறது.'' இப்படித்தான் ஓரிரு கடிதங்கள் வரும் . . .'

அம் முதியவள் இன்னமும் ஏதோ சொல்லவிருக்க, அதற்குள் அக் கறுத்த மனிதர் சொல்லலானார்: 'போகட்டும், விடுங்கள்! இப்பொழுது நீங்களே வந்துவிட்டீர்கள். பேரனையும் பெண்ணையும்கூட அழைத்து வந்திருக்கிறீர்கள். அவர்களைப் பார்த்ததுமே அவருள் ஒரு மோகம் ஏற்பட்டு, அவர் மீண்டும் . . .'

கறுத்த மனிதரின் அந்தப் பேச்சு அரைகுறையாகவே நின்றுவிட்டது. ஏனெனில், அதற்குள் நாங்கள் டிக்கட்டுகளைக் கொடுக்கவேண்டிய இடத்தை நெருங்கிவிட்டோம். பேச்சு மும்முரத்தில் அவர் மேலும் நடந்து போயிருப்பார். ஆனால் அவர் தோளில் ஓர் அடியுடன், 'டிக்கட் பதாவ்' என்று முரட்டுக் குரலில் ஒலித்த வார்த்தைகள் செவியில் விழவே, பேச்சை நிறுத்தி டிக்கட்டுகளைக் கொடுக்க வேண்டிவந்தது. அக் கறுத்த மனிதர் தன்னிடமிருந்து டிக்கட்டு வாங்கும் அவ்வெள்ளைக்கார ஆளை முறைத்துப் பார்த்தார். ஆனால் அவன் அதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அப்போது அந்த முதிய அம்மாளிடம், 'இந்த வெள்ளைக்காரர்களின் கர்வந்தான் என்ன? மனிதத் தன்மை என்ன என்பதே அறியாதவர்கள்' என்று அவர் சொல்லவும், அந்த அம்மாள் அதை ஆமோதித்தாள். அதற்குள் நாங்கள் நால்வரும் இரயில் நிலையத்தின் உடைந்த மரப்படிகளிலிருந்து கீழே இறங்கி வெளியே வந்தோம்.

நான் எனது கை விரலை வாயில் வைத்துச் சப்பிக்கொண்டே, வெளியில் காணப்பட்ட மாட்டுவண்டி, கார், மக்கள் ஆகியவற்றின் சந்தடிகளை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேன். அதற்குள் எதிர்பாராதவிதமாக என் கையின்மீது ஓர் அடி விழுந்தது. அவ்வடியின் தீவிரம் எனது கைக்கோ அல்லது அதைக் கொடுத்த அந்தக் கைக்கோதான் தெரியும். கையடியுடன் இந்தச் சொல் அடியும் கூடத்தான். 'கடன்காரா! உனக்கு எவ்வளவு தடவைகள்தான் சொல்வது, இவ்வாறு விரலை உறிஞ்சாதே என்று! பிறந்ததிலிருந்தே இந்தப் பிச்சைக்காரத்தனமான வழக்கங்கள்தான்.' சினத்தில் சீறியெழும்பிய இவ் வார்த்தைகள் என் காதுகளில் விழுந்தன. பேசியது அந்த இளம் பெண். அவளுடைய முகம் சினத்தாலும், உள்ளத்தின் எரிச்சலாலும் சிவந்து விசித்திரமாகக் காணப்பட்டது. எதிர்பாராத வகையிலும், மென்மையான கை நரம்புகளின்மீதும்

அவ்வடி பட்டதால் நான் துடித்துப் போனேன். அழத் தொடங்கி விட்டேன். பம்பாயில் காணப்பட்ட ஜன நெருக்கடியையும், மற்றக் காட்சிகளையும் காண்பதில் நினைவை நழுவ விட்டிருந்த அந்த முதிய அம்மாள் என்னையும், அந்த இளம் பெண்ணையும் திரும்பிப் பார்த்தவாறு சொன்னாள்: 'என்னடீ இது குஷீ! என்ன செய்துவிட்டான் அவன், இப்படி நீ அடிக்க?'

'அந்தப் படுபாவிக்கு அப்படித்தான் வேணும்! கடன்காரன்; பிறந்ததிலிருந்து ஒரு நாளாவது அவன் சுகத்தைக் கொண்டு வரவில்லை.' இவ்வாறு சூடாகப் பேசி அந்த இளம் பெண் என் கன்னத்தை மேலும் ஒரு முறை அழுத்தமாகக் கிள்ளினாள்.

அம்முதியவள் இளம் பெண்ணின் கையில் இடித்தாள் என்னைத் தனது இடுப்பில் எடுத்து வைத்துக்கொண்டவாறே கூறினாள்: 'சண்டாளி, அவனை எதற்காகப் பெற்றாய்? எப்பொழுது பார்த்தாலும் அவனைப் பழிக்கிறாய். அவனிடம் என்ன தவறு இருக்கிறது? உன்னுடைய அதிர்ஷ்டத்தைக் குறை சொல்.'

இனி, அந்த இளம் பெண் யார் என்பதை நான் எடுத்துக் கூற வேண்டியதில்லை. முதியவளின் இறுதிச் சொற்களைக் கேட்டதும் தொடர்ந்து எனது தாய் ஏதோ சொல்ல இருந்தாள். ஆனால், அதற்குள் மாட்டுவண்டியை ஏற்பாடு செய்வதற்காகச் சிறிது முன்னால் சென்றிருந்த அக் கறுத்த மனிதர் திரும்பி வந்து சொன்னார்: 'உம், புறப்படுங்கள்! வண்டியை ஏற்பாடு செய் தாகிவிட்டது. சீக்கிரம் ஏறி உட்காருங்கள். நாம் இம்மாதிரி எதிர்பாராதவிதமாய்ப் போய்க் குதித்தால், இராவ்ஜீ என்ன சொல்லப் போகிறாரோ? உம்... என்ன செய்வது பாட்டி, நான் இவ்வளவு வற்புறுத்தியிருக்கமாட்டேன். ஆனால், அவரது நிலையைக் காண எங்களுக்குப் பொறுக்கவில்லை. உங்கள் ஊருக்கு எப்படியும் வரவேண்டியிருந்ததால், அப்படியே உங்களை யும் பார்த்துப் பேசி, நீங்கள் சம்மதப்பட்டால் உங்களையும் அழைத்து வரவேண்டும் என்று எனக்குப் பட்டது. பொன்னான குடும்பம் இருக்க, அதைத் தூக்கி எறிவதா? எங்களுடைய அன்பின் கடமையை, சிநேக தர்மத்தை நாங்கள் செய்ய வேண்டும். இப்போது பாருங்கள், உங்களுடைய அழகான குடும்பம் எப்படிப் பழைய நிலைக்குக் கொண்டு வரப்படுகிறது என்று!' வண்டியில் சாமான்களை ஏற்றிக்கொண்டிருந்த சமயத்திலும், அதன் பிறகு எனது அம்மாவையும், பாட்டியையும் கை கொடுத்து வண்டியில் உட்கார வைக்கும்

சமயத்திலும் அவர் இவ்வாறு பேசிக்கொண்டிருந்தார். இறுதியில் என்னைத் தூக்கி அவர்கள் இருவருக்கும் இடையில் உட்கார வைக்கும்பொழுது அவர் சொன்னார்: 'எவ்வளவு அழகான குழந்தை! இவனை எனக்கு மிகவும் பிடித்தது. மேலும் . . .' ஆனால், அதற்குள் அவர் எங்களுக்கு முன்னால் இருந்த இடத்தில் ஏறி உட்கார்ந்தார். உடனேயே வண்டிக் காரன் வண்டியைக் கிளப்புவதற்காக, மாடுகளின் வயிற்றில் உதைத்து, கைகளால் அவற்றின் வால்களை முறுக்கி, வாயினால் 'ஸ்விஷ்க்' (இவ்வொலிக்குச் சரியான எழுத்து வடிவம் கொடுப்பது முடியாத காரியம்) என்று ஒலி யெழுப்பி, கையிலிருந்த குச்சியினால் ஒவ்வொரு மாட்டின்மீதும் ஓங்கி அடித்தான். மாடுகள் தம் கழுத்துச் சதங்கைகள் ஒலிக்க, அவ்வொலிக்குத் தாளம்போலக் கால்களை மெல்ல எடுத்து வைத்துக் கிளம்பின. இதன் காரணமாக அவருடைய பேச்சு தடைப்பட்டது. எனது புகழ்ச்சியைக் கேட்கும் நல்ல வாய்ப்பு போய்விட்டது. வெகுநேரம் யாரும் ஒன்றும் பேசவில்லை. என் தாய், தன் தாயை நோக்கினாள். நான் சுற்றுமுற்றும் எனது பார்வையைச் செலுத்திக்கொண்டிருந்தேன். அந்த மனிதர் எதுவும் பேசாமல் முன்னால் பார்த்துக்கொண்டிருந்தார். இடையில் பாட்டியிடம் திரும்பிச் சொல்லலானார்: 'இராவ்ஜீயின் தன்மையிலும், சுபாவத்திலும் சமீபத்தில் மிகுந்த மாறுதல் ஏற்பட்டிருக்கின்றன. ஆனாலும், எனக்கு முழு நம்பிக்கை இருக் கிறது, ஒரு முறை ஆள் குடும்பத்தில் சிக்கினால் பிறகு எல்லாம் மறந்துவிடும்.'

'அவர் குடும்பத்தில் சிக்குவதா? முன்பு குடும்பத்தில் இருக்க வில்லையா, என்ன? எல்லாம் அவராகவே வரவழைத்துக் கொண்டதுதானே! எவ்வளவு நல்ல வேலை!'

'கெட்டிக்கார மனிதர் அவர். வேலை என்ன, நினைத்தபோது கிடைக்கும். ஆனால் . . .'

'அந்த ''ஆனால்'' தானே குறுக்கே நிற்கிறது?'

'மற்றவர்களுக்கு என்ன என்று கேட்கிறீர்களா? உம் . . . அவர் நிலையைப் பார்த்து வேதனையடையாதவர்களே எங்கள் குழுவில் கிடையாது. அவருடைய சிறப்பான பேச்சும், நட வடிக்கைகளும்! வேலை கொடுக்க அவர் பின்னால் எத்தனை பேர் காத்துக்கொண்டிருக்கிறார்கள்! ஆனால் என்ன பயன்?

அந்தப் பேச்சை மட்டும் விட்டு விட்டு வேறு என்ன வேண்டும் சொல்லுங்கள், என்கிருர்.'

'நாங்களும் இதைப்பற்றித்தான் கவலைப்படுகிரும். இப்போது எங்கள் வீட்டில்தான் அவள் எவ்வளவு நாட்கள் தங்குவது? அவளுக்குத் தன்னைப்பற்றி என்ன தோன்றிக்கொண்டிருக்கிறதோ, பாவம்! ஒரு வாய் உணவு உள்ளே போவதில்லை. நாள் முழுவதும் உள்ளத்திலேயே குமைந்து போகிருள். என்ன செய்வாள் அவள்?'

'கஷ்டந்தான். ஆனுல், இதோ பாருங்கள்! இனி இதைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். இனி இதெல்லாம் எங்கள் பொறுப்பு. முன்போல் எல்லாம் சரியாகிவிடும். அவருடைய நிலைமை சீர்திருந்திவிடும் என்பதில் எங்களுக்குச் சந்தேகமேயில்லை. மனிதன் முட்டாளாகவோ நம்பத்தகாதவனுகவோ, ஏமாற்றுபவனுகவோ இருந்தால் வேறு விஷயம். ஆனுல் இவர் . . . தேடினுலும் இலட்சத்தில் ஒருவர் இவரைப் போல் கிடைப்பாரா என்ன? எவ்வளவு புத்திசாலி! எவ்வளவு எளிமை, உள்ளத்தில் எவ்வளவு கருணை! வேலை செய்வதில் எத்தனை ஆர்வம்! பாவம், திடீரென்று என்ன ஆயிற்ருே? அவர் மூளையில் என்ன நுழைந்ததோ? போகட்டும், விடுங்கள்! போனதைப்பற்றி இப்போது என்ன? வரப்போவதைப்பற்றித் தான் இனி யோசிக்கவேண்டும்.'

இராவ்ஜீயைப்பற்றிய அவருடைய இந்த வார்த்தைகள் என் தாய்க்கு மிகுந்த வேதனையளித்தன என்பதை நான் உணர்ந் தேன். பாட்டி இடையிடையே பெருமூச்சு விட்டுக்கொண்டு, அந்த மனிதருக்குத் தலையை ஆட்டிக்கொண்டிருந்தாள். ஆனுல் எதுவும் பேசவில்லை.

அந்த ஆள்தான் பேசிக்கொண்டே போனுர். இராவ்ஜீ யைப்பற்றித்தான். நடுவில் பார்க்கத் 'தகுந்த இடம், முக்கிய மான கட்டிடம் என்று ஏதாவது தென்பட்டால், அதைப் பற்றிய குறிப்பு தருவார். இடையில் ஏதாவது பொருளைக் காண்பித்து, 'அதன் விலை இத்தனை' என்பது போன்ற சாமானியப் பேச்சுக்கு இடம் கொடுப்பார். பிறகு மீண்டும் இராவ்ஜீயைப்பற்றிய விஷயத்துக்குத் திரும்புவார். இவ்வாறு நாங்கள் மாட்டு வண்டியில் சென்றுகொண்டிருந்தோம். நானே சதங்கையின் ஒலியில் என்னை அறியாமலேயே கண்ணயர்ந்துவிட் டேன். சற்று நேரத்துக்குப் பிறகு, கீழ்க்கண்ட வார்த்தைகளைக்

கேட்டவாறு கண் விழித்தேன். 'பத்துப் பதினைந்து நாட்கள் தான் ஆகியிருக்கும்; எங்களுடைய அறைக்கு இராவ்ஜீ வந்திருந் தார். அச்சமயம் என்னுடைய பிள்ளையின் பூணூல் சம்பந்தமாக நான் எனது தாயுடன் பேசிக்கொண்டிருந்தேன். அதற்குள் எனது தாய் இராவ்ஜீயிடம் சொன்னாள்: ''இராவ்ஜீ! உங்கள் பிள்ளையும் இப்போது பூணூல் போடுவதற்குரிய வயதை அடைந்திருப் பானே! இனி அவனை இங்கு வரவழைத்துப் பூணூல்கல்யாணத்தை நடத்திவிடுங்கள்.'' உடனே அதற்குப் பதில் அளிக்கும் முறையில் இராவ்ஜீ சொன்னார்: ''கொஞ்ச நாட்கள் பொறுங்கள். எனது கிரகங்கள் இப்போதைக்குப் பிரதிகூலமாக இருக்கின்றன. ஏழரை நாட்டானின் காலம் இன்னும் கொஞ்சம் மீதமிருக்கிறது. இந்த எஞ்சிய காலமும் கடந்துவிட்டால், நான் மேற்கொண் டுள்ள வேலை வெற்றிகரமாக முடிந்துவிடும். எனக்கு ஒரேயடி யாகப் பத்துப் பதினைந்தாயிரம் ரூபாய் கிடைக்கும். நான் ஒன்றுமே செய்யாமல் வெறுமனே உட்கார்ந்திருப்பதாக உங்க ளுக்குப் படுகிறது. ஆனால் அது உண்மையல்ல. கிரகங்கள் கொஞ்சம் அனுகூலம் ஆகிவிட்டால், பெண்ணின் கல்யாணத்தை யும், பையனின் உபநயனத்தையும் பம்பாயில் பிரமாதமாக நடத்திவிடுவேன்.'' நாங்கள் எல்லோரும் இதைக் கேட்டுச் சிரித்தோம். ஆனால், அவருக்கு அசைக்கமுடியாத நம்பிக்கை இருக்கிறது.'

'பத்தாயிரம் ரூபாய் ஒரேயடியாக ஈட்டித் தரும் அப்படிப்பட்ட வேலைதான் என்னவோ?' பாட்டி பதிலை எதிர்பார்த்தவண்ணம் சொல்லிக்கொண்டே அவரைப் பார்த்தாள்.

மெதுவாகப் புன்னகை செய்தவண்ணம் அவர் மேலாகச் சொன்னார்: 'அதே கேள்வியை நாங்களும் அவரிடம் கேட் டோம். ஆனால் பதில் ஒன்றும் கிடைக்கவில்லை.'

எனது உபநயனம் மிகுந்த விமரிசையாக நடக்கும் என்பதைக் கேட்டதும், அதைப்பற்றிய கற்பனையில் நான் திளைக்கலானேன். பம்பாய் போன்ற நகரத்தில் பாண்டும் காஸ் லைட்டுமாக நடக்கும் விசேடங்களின் ஆடம்பரத்தைப்பற்றி எனக்குச் சிறிதளவும் தெரி யாது. அதனால் எனது கற்பனை எங்களுடைய கிராமத்தில் நடக்கும் விசேடங்களின் ஆடம்பரத்தின் அளவுக்குத்தான் நீண்டது. அதே அளவுக்கு நான் கற்பனையின் ஆனந்தத்தை அநுபவித்தேன். பம்பாயில் நடக்கும் விசேடம் ஒன்றைப்

பார்த்திருந்தால், அப்பொழுதே கற்பனையிலாவது அச்சிறப்பின் அநுபவத்தை உணர்ந்திருப்பேன்.

அதற்குள் எங்கள் வண்டி பெரிய மூன்று மாடிக் கட்டிடம் ஒன்றின் முன்வந்து நின்றது. அப்பா! எவ்வளவு பெரிய வீடு! அதில் எவ்வளவு மனிதர்கள் தென்பட்டார்கள்! அப்பப்பா! இவ்வளவு பெரிய வீட்டை இதற்குமுன் நான் பார்த்திருக்க வில்லை. அதனால் அதை மேலும் கீழும் பார்த்தவண்ணம் இருந் தேன். எல்லோரும் வண்டியிலிருந்து கீழே இறங்கினார்கள். அக் கறுத்த மனிதர் என்னை எப்போது கீழே இறக்கிவிட்டார் என்பதைக்கூட நான் உணரவில்லை.

பல அறைகள் கொண்ட அம் மாபெரும் வீட்டை நான் வியப் புடன் பார்த்தவாறிருந்தேன். கடைசியில் அந்த ஆள் என் கையைப் பிடித்து, 'இராஜாவின் செல்வமே! புறப்படுங்கள், இப்பொழுது உங்கள் தந்தையிடம். ஒரு முறையாவது நீங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் தரிசித்திருக்கிறீர்களா?' என்று சொல்லியவாறே அந்தப் பெரிய வீட்டினுள் என்னை அழைத்துச் சென்றார். எங்களுக்குப் பின்னால் எனது அம்மாவும் எனது பாட்டி யும் தங்கள் மூட்டை முடிச்சுகளுடன் வந்துகொண்டிருந்தார்கள்.

மரப் படிக்கட்டில் ஏறி நாங்கள் மேலே வந்தோம். கீழே இருந்ததுபோலவே முதல் மாடியிலும் இருந்தது. அதனால் எனக்குக் கீழேயா மேலேயா, எங்கு இருக்கிறோம் என்பது தெளிவாகவில்லை. ஆனால் கால்களின் கடுப்பு மட்டும் அதைத் தெளிவாக்கிக்கொண்டிருந்தது. அதற்குள் இரண்டாவது மாடி ஏறி வந்தோம். அங்கும் அதே காட்சி. மூன்றாவது மாடியை அடைந்தவுடன் எங்களுடன் இருந்த அக் கறுத்த மனிதர் பலமாகச் சிரித்தவண்ணம் உரத்த குரலில் சொல்லலானார்: 'இராவ்ஜீ! ஓய் இராவ்ஜீ! உங்கள் வீட்டாரை அழைத்து வந்துள் ளேன். இதோ பாருங்கள் உங்கள் சிரஞ்சீவி!' ஆனால், இராவ்ஜீயிடமிருந்து பதில் வரவில்லை. பூட்டுத் தொங்கிக் கொண்டிருந்த ஒரு கதவின் முன்னால் சென்று நாங்கள் நின்றோம்.

'அடே! கதவைப் பூட்டிக்கொண்டு இராவ்ஜீ எங்கேயோ வெளி யில் போயிருக்கிறார்போல் இருக்கிறதே!' என்று அக் கறுத்த மனிதர் அங்கலாய்த்தார். அதற்குள் அம்மாவும், பாட்டியும் எங்கள் அருகில் வந்தார்கள். அந்த மனிதருக்கு மிகுந்த ஆச்சரிய மும், குழப்பமும் ஏற்பட்டன. அவர் எங்களிடம், 'கிளம்புங்கள், அவர் வெளியில் போயிருப்பதாகத் தெரிகிறது. அவர் வரும்

வரை எங்கள் வீட்டில் வந்து உட்காருங்கள்' என்று சொன்னார். நாங்கள் அத்தளத்தின் மறுகோடிக்குச் செல்ல முற்பட்டோம். அதே சமயத்தில் அங்கிருந்து ஓரிரு குழந்தைகள், 'நாநா, நாநா' என்று அழைத்தவண்ணம் ஓடிவந்தார்கள். அவர்களுடைய கூவலுக்கு அவர் பதில் குரல் கொடுக்கவே, அதைக் கேட்டு அக்குழந்தைகளுக்கு ஏற்பட்ட ஆனந்தம் அளவற்றதாக இருந்தது. ஒரு கணப்பொழுது எனக்குத் தோன்றியது: 'இராவ்ஜீயைப் பார்த்ததும் அவரைக் கட்டிப் பிடித்துக்கொண்டு நானும் இதே ஆனந்தத்தை அநுபவித்திருப்பேன். என்னைப் பார்த்ததும் மகிழ்ச்சியினால் அவரும் என்னை அணைத்துக் கசக்கிப் பிழிந்திருப்பார்; அல்லது இராவ்ஜீயை நான் இதுவரை என்றுமே பார்த்திராததால், மற்றவர்களின் ஆர்வத்திற்கும், இராவ்ஜீயின் அன்பழைப்புக்கும் இடையில் ஒரு வேளை நான் அவரை நெருங்குவதில் தயங்கி இருப்பேனோ?' எப்படியோ, அச்சமயம் இராவ்ஜீ தன் வீட்டின் கதவைப் பூட்டிக்கொண்டு எங்கோ போய்விட்டிருந்தார்.

இராவ்ஜீயின் வீட்டுக் கதவில் தொங்கிய பூட்டைப் பார்த்ததுமே, நாநாவின் முகத்தில் ஈயாடவில்லை. அவர் செயலற்றுப் போனார். பாட்டிக்கும் அம்மாவுக்குமோ மிகுந்த ஏமாற்றம். குறிப்பாக அம்மாவின் முகத்தில் பரிதாபக் களை பரவியது. விழிகளில் கண்ணீர் முட்டி நின்றது. ஆனால் அவள் மிகுந்த மனத்திண்மை கொண்டவள். (அல்லது பிடிவாதக்காரி என்று வைத்துக்கொள்ளுங்கள்.) ஆகையால், கண்ணீரை வெளிப்படுத்தாமல் எப்படியோ கட்டுப்படுத்திக் கொண்டுவிட்டாள். நான் இப்பொழுது வேண்டுமென்றே எனது கற்பனைக்கு ஓட்டம் கொடுத்துக்கொண்டிருக்கிறேன். ஆனால் எனது கண்களின் முன்பு அவளது அப்போதைய முகம் இப்போதும் படம் பிடித்தாற்போலத் தெரிகிறது.

நாநாவின் சொற்படி நாங்கள் யாவரும் அவருடைய வீட்டில் தங்கச் சென்றோம். வேறு எங்குப் போவது? ஆனால், எல்லோருடைய கண்களும் இராவ்ஜீயின் வீட்டின் மேலேயே நிலைத்திருந்தன. இராவ்ஜீ இதோ வருவார், அதோ வருவார் என்று தோன்றிக்கொண்டிருந்தது.

நிறைய நேரம் ஆகிவிட்டது. எங்களுடைய சாப்பாட்டுக் கடையும் முடிந்தது. மூக்கைப் பிடிக்கத் தின்றது நான் ஒருவன் தான். அம்மாவிற்கு உணவே செல்லவில்லை. பாட்டியின் நிலை

யும் அதுதான். நாள் முழுதும் செய்த பிரயாணத்தினுல் நான் களேப்படைந்திருந்தேன். அதனுல் எனக்குத் தூக்கமும் வந்து கொண்டிருந்தது.

நான் எப்போது படுத்தேன், எங்கே படுத்தேன் என்பது எனக்கே தெரியவில்லே. ஆழ்ந்த தூக்கம் என்னே ஆட்கொண்டது. அத்தூக்கத்தில் இன்பக் கனவுகளேக் கண்டேனு அல்லது துன்பக் கனவுகளேக் கண்டேனு என்பதும் எனக்கு நினேவில்லே. யார் கண்டது, அன்றுவரை நான் பார்த்திராத, பெயரால் மட்டுமே அறிந்திருந்த அந்த இராவ்ஜீ எனது கனவில் தோன்றி யிருப்பாரோ, என்னவோ?

ஆனுல் காலேயில் விழிப்பு வந்தவுடன் பாட்டி அருகில் இருக் கிருளா, இல்லேயா என்பதை வழக்கம்போல் முதலில் தடவிப் பார்த்துக்கொண்டேன். பம்பாயில் ஒரு புது இடத்தில் இருக் கிரும், அதுவும் பிரம்மாண்டமான ஒரு வீட்டின் மூன்ருவது மாடியின் அறை ஒன்றில் கிடக்கிரும் என்பது எனது நினேவில் தங்கியிருக்கவில்லே. தடவிப் பார்த்த என் கைக்கு எதுவும் தட்டுப்படாமல் போகவே, 'அம்மாவ்' என்று அலறுவதற்கு இருந்தேன். ஆனுல் அதற்குள் யாரோ விசும்பலுக்கு இடையில் சொன்ன, 'அவர் எங்கு வரப்போகிருரடீ? எனது வாழ்வு இப்படியே போகும்!' என்ற வார்த்தைகள் என் செவிகளில் விழுந்தன. இவ்வார்த்தைகளேக் கேட்டதுமே நான் வாயடைத்துப் போய்விட்டேன். எனது அழுகை எங்கோ மறைந்துவிட்டது. பாட்டி, அம்மாவிற்கு ஆறுதல் சொல்வதற் காகப் பலவாறு முயன்றுகொண்டிருந்தாள். ஆனுல் அம்மா, தான் சொன்னதையே மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருந் தாள். என்னுல் எவ்வளவு நேரந்தான் அழுகையை அடக்கிக் கொண்டிருக்க முடியும்? அம்மாவுக்குப் பயந்த நான், பாட்டி யைக் கூப்பிடக் கத்தினேன். அதே சமயத்தில் இருவர் வாயி னின்றும் வெளிப்பட்ட இவ்வார்த்தைகள் எனது காதுகளில் விழுந்தன. 'என்னம்மா இது! இப்படி இவன் உருண்டால் என்ன செய்வது? ஓர் அளவு கிடையாதா? எங்கேடாப்பா போனே?' என்றும், 'என்னம்மா உருளுகிருன்? கணப்பொழுதிற்குப் படுக்கையில் உடல் ஒட்டுமா கேள்! அதுவும் தரையில் போன தால் என்ன ஆகிவிட்டது? இப்படிக் கத்துவானேன் உடனேயே? எங்கே அவன், இழு அவனே இங்கு!' என்றும், இருவருடைய இப் பேச்சுக்களில் யார், எதைப் பேசியிருப்பார்கள் என்பதைப்

பற்றி எடுத்துச் சொல்லித்தான் ஆகவேண்டும் என்பதில்லை. யாரும் எளிதில் ஊகித்துவிடலாம். கீழே கொடுக்கப்பட்டிருக்கும் பாட்டியின் சொற்கள் இந்த ஊகத்தை மேலும் சுலபமாக்கும். 'என்னடீ, எப்பவும் இப்படிச் சொல்கிறாய் அவனைப் பற்றி? கேட்போருக்கு அவன் உன்னுடைய மகன் அல்ல, உனது சக்களத்தியின் மகன் என்று தோன்றும். சே சே, இப்போதெல்லாம் உனக்கு ரொம்ப . . .' ஆனால், பாட்டி மேற்கொண்டு என்ன சொல்ல இருந்தாள் என்பது தெரியவில்லை. காரணம், நான் உருண்டவாறே குரல் வந்த திசையில் சென்று அவளை நெருங்க, கைகளை நீட்டி அவள் என்னை எடுத்துக்கொண்டாள். நானோ பயந்துகொண்டே இருந்தேன், தெரியாமல் எங்காவது இச்சமயம் பாட்டி என்று கருதி அம்மாவின் கையில் சிக்கிவிட்டால்? ஆனால் ஆண்டவனுக்கு என்மேல் கருணையிருந்தது. அவன் அம்மாவின் கையில் என்னைச் சிக்கவைக்கவில்லை.

மேற்கூறியபடி பாட்டி, அம்மா இவர்களின் பேச்சு வார்த்தை முடிந்த சிறிது நேரத்திலேயே எனக்கு மீண்டும் தூக்கம் வந்தது. பிறகு நல்ல வெட்டவெளிச்சம் ஆகியதும்தான் எனக்கு விழிப்பு வந்தது. அன்றும் நாநா, இராவ்ஜீயைப் பல இடங்களில் தேடினார். ஆனால் அவரைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. இதோ வருவார், அதோ வருவார், மதியம் வருவார், மாலையில் வருவார் என்று சொல்லிச் சொல்லி மறுநாள் காலைப்பொழுதும் ஆயிற்று. இராவ்ஜீயின் வீட்டுக் கதவில் பூட்டு அப்படியே தொங்கிக்கொண்டிருந்தது.

தினந்தோறும் அவருடைய வீட்டுக் கதவின் முன்சென்று அப்பூட்டை உற்று நோக்கிக்கொண்டிருப்பதைத் தவிர நான் வேறு ஒன்றும் செய்யவில்லை. வீட்டில் உள்ளவர்களின் பார்வையிலிருந்தும், நாநாவின் குழந்தைகளின் கவனத்திலிருந்தும் தப்பி, திடீர் திடீரென்று இராவ்ஜீயின் அறைக்கு முன் வந்து, பால் உறியின்மீது கண் வைத்து அமர்ந்திருக்கும் பூனையைப்போல் அப்பூட்டையே உற்றுப் பார்த்தவண்ணம் நான் அமர்ந்திருப்பேன். எனக்குத் தெரியாமல் இராவ்ஜீ வந்து பூட்டைத் திறந்து சென்றுவிடுவாரோ என்ற அச்சம் எனக்கு அச்சமயம் ஏற்பட்டிருக்குமோ என்னவோ? இப்பொழுது காரணம் தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் மேற்சொன்னவாறு அப்படி நான் பார்த்துக்கொண் டிருந்தது மட்டும் உண்மை. இப்படியே அந்த நாளும் நகர்ந்து சென்றது. இரண்டாவது, மூன்றாவது, நான்கா

வது நாட்களும் சென்றன. ஆனால் இராவ்ஜீயைப்பற்றிய ஒரு செய்தியும் இல்லை.

நாநாவின் வற்புறுத்தலால் இராவ்ஜீயைப் பார்ப்பதற்காக நாங்கள் இங்குப் புறப்பட்டு வந்ததுபோல், ஒருவேளை எங்களைப் பார்க்கும் ஆவலினால் உந்தப்பட்டு அவரும் அங்குப் போயிருப்பாரோ என்னவோ என்று தோன்றியதால், பாட்டி, நாநாவின் மூலம் அவ்விடத்திற்குக் கடிதம் அனுப்பினாள். ஆனால், அதற்கு நான்காம் நாள், அவர் அங்கு வரவில்லை என்ற செய்தி தரும் கடிதம் வந்தது. எத்தனை ஏமாற்றம்! தனியாக இருக்கும்பொழுதெல்லாம் அழுவதும், பிறருக்கு நடுவில் இருக்கும்பொழுது மௌனம் சாதிப்பதுமாக இருந்தாள் அம்மா.

இப்படி இன்னும் இரண்டு நாட்கள் சென்றபிறகு, 'எங்களை இப்பொழுது திருப்பி அனுப்பிவிடுங்கள்' என்று பாட்டி, நாநாவை நச்சரிக்கத் தொடங்கினாள். அவரோ, 'உங்களை எவ்வளவு படாடோபத்தோடு அழைத்து வந்தேன். அப்படியிருக்க இராவ்ஜீயைச் சந்திக்க வைக்காமல் போக விடமாட்டேன்' என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டார். ஆனால் இப்படிப் பிடிவாதம் எவ்வளவு நாளைக்கு? அதுவும் எந்த ஆசையில்? அவரைப்பற்றியோ ஒரு விஷயமும் தெரியவில்லை. அப்படி இருக்க ஆசை மட்டும் காட்டிக்கொண்டிருந்தால் என்ன பயன்? திரும்பிப் போகும் பேச்சை எடுத்தால், 'கொஞ்சம் பொறுமையாக இருங்கள்; இன்னானை இன்ன இடத்தில் அனுப்பியிருக்கிறேன். அங்கிருந்து அவரைப்பற்றித் தெரிந்துவிடட்டும். பிறகு உங்களை நான் வற்புறுத்தமாட்டேன். அவன் நிச்சயம் அவரைப்பற்றித் தெரிந்துகொண்டு வருவான் என்று எனக்கு முழு நம்பிக்கை உண்டு. அப்படித் தோல்வி ஏற்பட்டாலோ, அதற்குமேல் எனது வழி அடைக்கப்பட்டு விட்டதாகவே நான் கருதுவேன்' என்று சொல்லுவார். இப்படிப்பட்ட பேச்சு மேலும் நான்கைந்து நாட்களை நகர்த்திச் சென்றது.

அப்படியும் இப்படியுமாகப் பதினைந்து நாட்கள் ஓடிவிட்டன. இராவ்ஜீ இருந்த இடம் தெரியவில்லை. எங்களை உடனே புறப்பட்டு வரும்படி தாத்தாவிடமிருந்து வேறு கடிதம் வந்தது. நாநா தன் வற்புறுத்தலில் சளைக்கவில்லை. கடைசியில் எப்படியோ ஒரு வழியாக, மறுநாள் கிளம்புவதாக முடிவு செய்யப்பட்டது.

இந்த முடிவை மேற்கொண்டதும் அம்மா அளவற்ற வருத்தம் அடைந்தாள். நான் அவளிடம் போவதே கிடையாது.

இராவ்ஜீயைத்தான் பார்க்கவில்லை, அவர் வீட்டுக் கதவின் பூட்டையாவது போகும்வரை பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும் என்று எண்ணி, அவ்வாறே நாள் முழுதும் செய்தேன்.

சுமார் நான்கு மணி இருக்கும்; யாரோ நான்கு பேர் தட தடவென்று படியேறி வந்தார்கள். கறுப்பு உடையும், மஞ்சள் தொப்பியுமாகக் காணப்பட்ட ஒருவனும், ஒரு மார்வாடியும், கழுத்தில் தோல் பையை மாட்டிக்கொண்டிருந்த இருவருமாக நான்கு பேர்கள். 'இராவ்ஜீ, இராவ்ஜீ' என்று அழைத்தவண்ணம் அவர்கள் நான் இருந்த அதே இடத்திற்கு வந்தார்கள். அங்கிருந்து பயந்து ஓடுவதா அல்லது மகிழ்ச்சியுடன் அங்கேயே நிற்பதா என்று எனக்கு ஒன்றும் புரியவில்லை. அங்கேயே நின்றேன். அந்த ஆட்கள் கூப்பிடுகிறார்கள். எங்களுக்கு இல்லை என்றாலும், அவர்களுக்காவது இராவ்ஜீ கிடைப்பாரோ என்னவோ என்ற எண்ணம் ஒரு பக்கம். இராவ்ஜீ இப்போது வெளியில் வருவார். அப்போது நான் மட்டும் தனியாக என்ன, பாட்டியும் பார்க்கட்டுமே என்ற எண்ணமும் மறுபக்கம் தோன்றவே, நான் ஓடிச் சென்று பாட்டியை இரைந்து கூப்பிட்டு, 'இராவ்ஜீயைத் தேடி யாரோ வந்திருக்கிறார்கள். அவரைக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள்; அதனால் அவர் இப்போது எங்கிருந்தாவது வருவார்' என்று சொல்லி அவளைப் பிடிவாதமாக வெளியில் கொணர்ந்தேன். பாவம், அவளும் என்னுடன் வெளியில் வந்து பூட்டிய கதவின் பக்கம் பார்த்தாள்.

பாட்டியைப் பின்தொடர்ந்தவாறே அம்மாவும் வந்தாள், 'அடீ, இந்தக் கடன்காரனின் வார்த்தைகளை ஏன் நம்புகிறாய்? கடன்காரன், ஏதாவது பொல்லாததைத்தான் கொண்டு வருவான்' என்று சொல்லிக்கொண்டே. ஆனால், மிகுந்த ஆர்வத்துடன் வெளியே வந்தாள். ஆனால் அங்கிருந்த ஆட்களைப் பார்த்ததும், தனக்குத்தானே ஏதோ முணுமுணுத்துக்கொண்டே திரும்பிச் சென்றாள்.

பாட்டி, நாநாவின் வீட்டிலிருந்து சிறிது தள்ளி நின்று, அந்த மார்வாடியின் கொச்சை மராட்டிப் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தாள். அவனுடன் இருந்தவர்களில் இருவர் போலீஸ் சிப்பாய்கள் என்றும், மற்றவன் கோர்ட்டுச் சேவகன் என்றும் பின்னர் எனக்குத் தெரிய வந்தது. (ஆனால் இதுபற்றிய விவரம் இங்குக் கொடுக்கவேண்டிய அவசியம் இருப்பதால் இங்கேயே குறிப்பிடுகிறேன்.) மார்வாடி அவர்களிடம் கதவின் பூட்டை

உடைத்துக் கதவைத் திறக்கும்படி வற்புறுத்திச் சொல்லிக் கொண்டிருந்தான். அவர்களும் அவனிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார்கள். இன்றைக்கும்கூட ஏதாவது ஒரு மார்வாடியைப் பார்த்தால், எனக்கு அந்த மூன்று குடுமிக்கார மார்வாடியின் நினைவுதான் வருகிறது. கடைசியில் அந்த மார்வாடி சொன்னபடியே அந்த ஆட்கள் பூட்டை உடைத்துக் கதவைத் திறந்தார்கள்.

கதவு திறக்கப்பட்டதுமே உள்ளே சென்று அங்கு என்ன இருக்கிறது என்று பார்ப்பதற்காக எனக்கு ஏற்பட்ட ஆவலைச் சொல்லி முடியாது. ஆனால், அந்த மஞ்சள் தொப்பிக்காரப் போலீஸின் கையில் இருந்த தடி என்னை உள்ளே செல்ல விட வில்லை. ஆகவே நான் தள்ளியே நின்றுகொண்டிருந்தேன்.

அக்குழு உள்ளே சென்றது. அறையில் இருந்த எல்லாப் பொருள்களையும் ஓரிடத்தில் குவிப்பதில் அந்நால்வரும் முனைந் தார்கள். நான் குனிந்து எட்டிப் பார்த்துக்கொண்டிருந் தேன். ஆனால் அவர்கள் ஒன்ருகச் சேர்த்துக்கொண்டிருந்த பொருள்கள் என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. பார்க்கப் போனல் உள்ளே ஒன்றும் இருக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இருந்தபோதிலும், கிடைத்தவற்றையெல்லம் அந்த மார்வாடி அறையின் நடுவில் ஒரு பாயின்மீது கொணர்ந்து குவித்துக்கொண்டே இருந்தான். சில காகிதங்கள், ஓரிரண்டு மண்ணெண்ணெய் விளக்குகள், சில காலியான எண்ணெய் டப்பாக்கள், மற்றும் உபயோகமற்ற சில்லறைப் பொருள்கள். எனக்கு நினைவில்லை; ஆனல் நான் பின்னர் அறிந்தபடி, அந்த மார்வாடி சரமாரியாகத் திட்டிக்கொண்டிருந்தான். ஆனல், யாரை என்பது மட்டும் எனக்குத் தெரியவில்லை. ஒன்று சேர்த்த சாமான்களை ஒரு மூட்டையாக அவன் கட்டவும், அங்கு நாநா வந்து சேரவும் சரியாக இருந்தது. என்றும் இல்லாமல் அன்று நாநா சீக்கிரம் வீடு திரும்பியிருந்தார். இராவ்ஜீயின் அறையில் ஒரே கலவரமாக இருந்ததைப் பார்த்தார். இராவ்ஜீதான் திரும்பி வந்திருப்பதாக அவருக்குப் பட்டதாகத் தோன்றியது. ஏனெனில் அவர் உடனேயே, 'என்ன இராவ்ஜீ, நீங்கள் நல்ல ஆள்தான் போங்க!' என்று சொல்லிக்கொண்டே வந்தார். அதற்குள் அங்கு அம் மார்வாடி அவர்முன் வந்து நிற்க, அவர் மேற்கொண்டு சொல்ல வந்த வார்த்தைகள் அவர் தொண்டை யிலேயே நின்றுவிட்டன. வியப்புடன் அவர் அறையில் நுழைந்

தார். அங்கு அவருக்கும், அங்கு இருந்தோருக்கும் இடையில் ஏதோ பேச்சு நடந்தது. பிறகு அவ்வறையைச் சுற்றி ஒரு பார்வையைச் செலுத்திவிட்டு அவர் வெளியில் வந்து தமது அறையை நோக்கி நடந்தார். நான் இருந்த இடத்திலேயே அடைபட்டது போன்று நின்றேன். மார்வாடி சாமான்களைப் போட்டுக் கட்டிய மூட்டையைத் தோளில் போட்டுக்கொண்டு நடந்தான்.

அப்போது அவ்வறையில் நுழைந்து பார்க்கவேண்டும் என்னும் எனது ஆவல் கட்டுக்கு அடங்காததாயிற்று. எப்படி என்பது இருக்கட்டும். நான் அங்கிருந்த இரண்டு மூன்று பேர்களின் பார்வையிலிருந்து தப்பித்துக்கொண்டு உள்ளே எப்படியோ நுழைந்துவிட்டேன். அதற்குள் அவர்கள் கதவைப் பூட்டிக் கொண்டு சென்றுவிட்டால் என்ன ஆகும் என்பதைப் பற்றிய எண்ணமே சிறிதளவும் இன்றி, அவர்கள் பார்க்க முடியாதபடி மூலையில் ஒளிந்தாற்போல அமைதியாக நின்று கொண்டேன். அதற்குள் கோர்ட்டுச் சேவகன் உள்ளே அங்கு மிங்கும் எட்டிப் பார்த்துவிட்டுச் சடக்கென்று கதவை இழுத்து மூடிவிட்டான். அப்பொழுதாவது நான் அடைபட்டுவிட்டேன் என்பது எனது அறிவிற்கு எட்டியிருக்க வேண்டும். ஆனால் அப்படி இல்லாமல், அவர்களுடைய கவனத்திலிருந்து தப்பிய என் சாமர்த்தியத்திற்காக நான் பெருமை பட்டுக்கொண்டேன். கதவு வெளியில் தாழிடப்படும் என்பது எனது கவனத்தை ஈர்க்கவேயில்லை. இப்போது கவலையின்றி அறையில் அங்கு மிங்கும் பார்க்கமுடியும் என்று நினைத்து எனக்கு நானே சிரித்துக்கொண்டேன்.

## 2. பயங்கர நிகழ்ச்சி !

ஒருவரும் அறியாதபடி எல்லோரையும் ஏமாற்றி, 'பெரிய தனம்' பண்ணினேன் என்று நினைத்துப் பெருமிதம் கொண்டேன் நான். அந்நினைவில் பொங்கிய மகிழ்ச்சியில் சில கணங்களைக் கழித்த பின்னர், அவ்வறையைச் சுற்றிப் பார்க்கத் தொடங்கினேன். அது ஏழெட்டு அடி நீளம் கொண்ட சதுரமான அறையாக இருந்தது. அதை யடுத்து அதே போல் மற்றுமோர் அறையும் இருந்தது. இரு அறைகளையும் இணைக்கும் வகையில் நடுவில் ஒரு கதவு. முதலில் முன்னறையின் மூலை முடுக்குகளை ஆராய்ந்தேன். பின்னர் உள்ளறைக்குச் சென்றேன். அங்கும் குறிப்பிடத் தகுந்ததாக எதுவும் புலப்படவில்லை. ஏதோ ஓர் உடைந்த அடுப்பு, தோலால் கட்டிய ஒரு மூட்டை, இரு விறகுக் கட்டைகள், இரு சுருட்டுகள், ஒரு மண்பாத்திரம், மேலும் பல கந்தைத் துணிகள்—இந்தச் சொத்துக்களே காணப்பட்டன. அவற்றைப் பார்த்து மனத்திற்கு ஒரு திருப்தியும் ஏற்படவில்லை. மகத்தானதும், விலை உயர்ந்ததுமான ஏதோ ஒரு பொருள் அந்த இரு அறைகளுக்குள் எங்கோ வைக்கப்பட்டிருக்கிறது என்ற உண்மையை நிச்சயமாக அறிந்தவன்போல் நான் மீண்டும் மீண்டும் வெளியறைக்கும், உள்ளறைக்குமாக நடை போட்டுக் கொண்டிருந்தேன். குறிப்பாக எந்த இடத்தில் இருக்கிறது என்பதை மட்டும் அறியாதவன்போல் அதைத் தேடி எடுப்பதற்காகப் பரபரப்படைந்த நிலையில் நான் இருந்தேன். அந்த நாள், அந்த வேளை, அந்த இடம், அந்த நிகழ்ச்சித் தொடர்புகள்—இவற்றின் நினைவு வந்தால் இப்போதும்கூட எனது உள்ளம் விசித்திரமான நிலையை அடைகிறது.

மேற்கூறியபடி உள்ளிருந்து வெளிக்கும், வெளியிலிருந்து உள்ளுக்குமாக நான் நடை போட்டுக்கொண்டிருக்கையில் அங்குக் கிடந்த கிழிந்த பாயின்கீழ் பார்க்கவேண்டும் என்று எதனாலோ எனக்குத் தோன்றியது. இவ்வாறு ஏன் தோன்றியது என்பது எனக்கே வியப்பை அளிப்பதாக இருந்தது. ஏனெனில், உண்மையாகச் சொல்லப் போனால் அந்தப் பாய் பல இடங்களில் கிழிந்திருந்தது. அதன் அடியில்

ஏதேனும் இருந்தால் அதை மறைக்கும் அளவிற்குக்கூடக் கிழிசலற்ற பாகம் அதில் இருந்ததா என்பது சந்தேகம். இருந்தாலும் மனத்தில் ஓர் எண்ணம் உருவானவுடன் அதன்படி உடனடியாகச் செய்துவிடத் துடிக்கும் பருவத்தில் நான் இருந்தேன். அந்தப் பாயை ஒரு பக்கம் இழுத்தேன். அழுக்குப் படிந்த காய்ந்த வெற்றிலைத் துண்டுகள், சுருட்டின் சாம்பல், எரிந்த தீக்குச்சிகள், தோல்கள், மேலும் நான்கைந்து காகிதத் துண்டுகள் ஆகியவற்றைத் தவிர வேறு ஒன்றும் காணப்படவில்லை. ஆனால், எனது இளம் கரங்களால் அந்தப் பாயை இழுத்த மாத்திரம் முன்னால் ஏதோ பட்டென்று தெறித்து விழுந்தாக எனக்குப் பட்டது. அது என்னவென்பது மட்டும் எனக்குத் தெரியவில்லை. முதலில் அது எனது கவனத்தை அவ்வளவாகக் கவரவில்லை. ஆனால், பாயை அகற்றியதும், அதன் அடியில் காணப்பட்ட மேற்கூறிய உபயோகமற்ற பொருள்களைத் தவிர வேறு ஒன்றும் புலப்படாததால், டபக்கென்ற ஒலியுடன் விழுந்த அப்பொருளைத் தேடுவதில் எனது குழந்தை உள்ளம் முனைந்தது.

நாம் எங்கு இருக்கிறோம், நமது நிலைமை என்ன என்ற கவலையே இன்றி, அப்பொருளைத் தேடுவதில் லயித்தேன். அச்சமயத்தில் வெளிச்சம் குறைந்துகொண்டே வர, முன் அறையில் நன்றாக இருள் பரவிக்கொண்டிருந்தது. அப்படி இருந்துங்கூடக் கீழே விழுந்த அந்தப் பொருளைத் தேடுவதில் மூழ்கி இருந்ததால் எனக்கு அதைப்பற்றி ஒன்றும் தோன்றவில்லை. இரண்டு மூன்று முறைகள் நான் அந்தப் பாயைக் கீழும் மேலுமாக நன்றாக உதறினேன். ஆனால், அப்பொருள் என்ன, எங்கு இருக்கிறது என்பதுமட்டும் தெரியவில்லை. மறுபடியும் நான் எல்லா இடங்களிலும், மூலை முடுக்குகளிலும் தேடுவதில் முனைந்தேன். கீழே விழுந்தது என்ன என்பதை அறியவேண்டும் என்பதே எனது முக்கிய நோக்கமாக இருந்தது. எனது வாழ்வின் பிற்காலத்திலும்கூட எந்தப் பொருளைப்பற்றியும் இந்த அளவு ஆர்வம் எனக்கு ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

இப்பொழுது ஒவ்வொரு கணமும் இருள் அதிகமாகிக் கொண்டே இருந்தது. அப்படியிருந்தும் நான் தேடுவதை நிறுத்தவில்லை. அதற்குள் காலில் ஏதோ இடறியது. எடுத்துப் பார்த்தால் அது ஒரு தீப்பெட்டியாக இருந்தது. உடனேயே ஏமாற்றத்தால் உள்ளம் சுருங்கிவிட்டது. உடனே அந்தத் தீப்பெட்டியில்

ஏதேனும் குச்சிகள் இருந்தால் ஏற்றிப் பார்க்கவேண்டும் என்ற எண்ணம் தோன்றவே, நான் அதன் மூடியைத் திறந்து பார்த்தேன். என்ன ஆனந்தம்! அதில் மூன்று மத்தாப்புக் குச்சிகள் இருந்தன. உடனேயே ஒரு குச்சியைப் பற்றவைத்து மேலே தூக்கிப் பிடித்துக்கொண்டேன். அறை முழுவதும் பளிச்சென்று வெளிச்சம் பரவியது. அந்த வெளிச்சத்தில் அவ்விரு அறைகளுக்கும் இடையில் இருந்த கதவின் இடுக்கில் சிக்கிக்கொண்டிருந்த ஒரு காகிதம் என் பார்வையில் பட்டது. அங்குக் கிடந்த மற்றக் காகிதத் துண்டுகளிலிருந்து அந்தக் காகிதம் வேறுபட்டதாகத் தோன்றியது. அதற்குள் அக்குச்சி விரலின் அருகில் எரிந்துவரவே சுட்டது. உடனேயே நான் அதைத் தூர எறிந்துவிட்டுக் கதவின் அருகில் ஓடிச்சென்று அக்கடிதத்தை எடுத்தேன். அது கனமாகப் பட்டது. உள்ளே முக்கியமானது ஏதோ இருக்கிறது என்று எனக்குத் தோன்றியது. முன்பு 'டபக்' என்று விழுந்ததும், நான் இதுவரைத் தேடிக்கொண்டிருந்ததுமான அப்பொருள்தான் இது என்று என் மனத்திற்குப் பட்டது. ஆனால் அது சாதாரணமான காகிதமாக இருக்கவில்லை. கடிதம் உள்ள உறையாக—கடிதந்தான் என்று சொல்லுங்களேன்—இருந்தது. அந்தச் சமயத்தில் என்னுடைய வயதுதான் என்ன? அந்தக் கடிதம் கண்டது முதற்கொண்டு, அது கையில் கிடைத்தது முதற்கொண்டு, எனக்கு ஏற்பட்ட ஆனந்தம்தான் என்னே!

சிறு வயதிலிருந்தே என் மனப்போக்கே விசித்திரமாகத்தான் இருந்தது. எந்தக் காரியத்தைச் செய்யவேண்டும் என்று உள்ளம் ஒருமுறை எண்ணுகிறதோ, அதைச் செய்து முடித்தாலொழிய உள்ளம் அமைதி கொள்வதில்லை. ஒருமுறை அக்காரியம் இக்கரங்களால் முடிந்தது என்றால், மனத்திற்குச் சமாதானம் ஏற்பட்டு, நான் மிகுந்த பாக்கியம் செய்தவன் என்று எனக்குத் தோன்றும். மனத்தின் இந்தப் போக்கின் காரணமாகப் பலமுறை நான் வருத்தப்பட நேர்ந்திருக்கிறது. பல முறை இலாபமும் ஏற்பட்டுள்ளது. மொத்தத்தில் எனக்கு இலாபம் ஏற்பட்டதா, நஷ்டம் ஏற்பட்டதா, எனக்கும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் நன்மை ஏற்பட்டதா, தீமை ஏற்பட்டதா என்பதை நான் இன்றே ஏன் சொல்லவேண்டும்?

அந்த உறையை நான் மும்முறை சோதித்துப் பார்த்தேன். அதனுள் என்ன இருந்ததாக எனக்குத் தோன்றியதோ, அது என்ன என்று நன்றாகப் பார்க்கவேண்டும் என்று நான்

உள்ளறைச் சன்னல் அருகில் சென்றேன். அங்கும் இப்பொழுது வெளிச்சம் மிகக் குறைவாக இருந்தது. அதற்குள் மறுபடியும் தீப்பெட்டியின் நினைவு வரவே, அதை எடுத்து இன்னொரு குச்சியைப் பற்றவைத்தேன். அதன் வெளிச்சத்தில் அதைப் பார்த்தேன். அது உண்மையாகவே ஒட்டப்பட்ட ஓர் உறையாக இருந்தது. அதன்மேல் மோடி எழுத்திலோ, ஆங்கில எழுத்திலோ, அல்லது வேறு ஏதோ மொழியைச் சார்ந்த எழுத்திலோ ஏதோ எழுதப்பட்டிருந்தது. 'வேறு ஏதோ மொழியைச் சார்ந்த எழுத்தில்' என்று நான் சொல்லக் காரணம், நான் அதை நன்குக அறிந்திருக்கவில்லை என்பது மட்டும் அல்ல. நான் குறைந்த அளவிற்கு அறிந்த எழுத்து மோடி எழுத்துக்கள்தான். அதன்படி அவ்வெழுத்துக்கள் காணப்படவில்லை. ஆனுல், அந்த உறை ஒட்டப்பட்டிருந்ததால் யாருக்கோ எழுதிய கடிதம் என்று நான் ஊகித்தேன். இப்போது இதை வெளியில் கொண்டு போய் நாநாவிற்குக் காண்பிக்கவேண்டும் என்ற எண்ணம் உதித்தது.

இந்த எண்ணம் உதித்தவுடனேயே 'வெளியில்' என்ற வார்த்தை என் கவனத்திற்கு வந்தது. உடனேயே கதவை நோக்கி நான் ஓட்டம் பிடித்தேன். கதவருகில் சென்றதுமே அதைத் திறக்க முற்பட்டேன். ஆனுல் கதவு திறந்தால்தானே? இத்தனை நேரம் இருள் என்னைப் பாதிக்கவில்லை. ஆனுல், அதன் காரணமாகவே மனத்தில் இப்போது அச்சம் ஏற்பட்டது. தந்தையின் சொத்தை ஆராய்வதில் என்னுள்ளம் ஆழ்ந்திருந்த வரையில், நாம் இருட்டில் இருக்கிறோம், தன்னந்தனியாக இருக்கிறோம், வெளியில் பூட்டப்பட்டிருக்கும் என்ற எண்ணங்கள் எனது உள்ளத்தைத் தொடக்கூட இல்லை. ஆனுல், அதிலிருந்து கவனம் அகன்று கதவின் பக்கம் போனதும் என் மனம் திடுக்குற்றது.

மேலும் வெளியில் அம்மா, பாட்டி, நாநா மூவரும் என்னைத் தேடிக்கொண்டிருப்பார்கள்; அப்போது என்னை எங்கும் காணுமல் அவர்கள் எந்த நிலையில் இருப்பார்கள் என்றெல்லாம் என் மனத்தில் தோன்றியது. இப்போது காரிருள் கவ்விக்கொண்டு வந்தது. நான் கதவைப் பலமாகத் தட்டினேன். 'பாட்டி! அம்மா! நாநா சாகேப்!' என்று இரைந்து கூவினேன். ஆனுல் எனது குரலைத் தவிர வேறு ஒன்றும் என் செவிக்கு எட்டவில்லை. இவ்வளவு நேரம் சூழ்ந்து வந்த இருள் அடியோடு என் கவனத்திற்கு வரவில்லை. வந்தும்கூட அதுபற்றி விசேடமாக ஒன்றும் தோன்ற

வில்லை. அதே இருள் இப்போது பயங்கரமாகத் தோன்ற லாயிற்று. அதற்குள் மிகுந்திருந்த ஒரு மத்தாப்புக் குச்சி நினைவிற்கு வந்தது. அதை நான் உடனேயே இழுத்துப் பற்றவைத்தேன். இழுத்த வேகத்தில் அது பற்றத் தவறவில்லை. ஆனால் குச்சி ஒடிந்து எங்கோ தெறித்து விழுந்தது. இதனால் நான் மிகுந்த ஏமாற்றம் அடைந்தேன். கடைசியில் குழந்தைப் பருவத்தின் அழுகை என்னும் ஒரே ஆயுதத்தைக் கூர்மையாக்கிக் கொண்டு, அதனைப் பிரயோகம் செய்யத் துவங்கினேன்.

கதவுக்காகத் துழாவும்போது ஏதோ ஒரு பக்கம் சுவரின்மீது கை படும்; உள்ளறைக்குச் செல்ல முயலும்போது பட்டென்று எங்கேயாவது இடிபடும். இவ்வாறு விசித்திரமான நிலைமை! கடைசியில் நான் தொப்பென்று எங்கோ உட்கார்ந்து, வீரிட்டு அழத் தொடங்கினேன். இருட்டின் காரணமாக நான் எங்கு உட்கார்ந்திருந்தேன் என்பது எனக்கே தெரியவில்லை. அச்சமயத்தில் ஏதுமறியா என் இளம் உள்ளத்தில் என்ன தோன்றியிருக்கும்?

உங்களில் யாருடைய வாழ்விலாவது இப்படிப்பட்ட நிகழ்ச்சி இளம்பருவத்தில் நிகழ்ந்திருக்குமானால், அந்நேரத்தில் எனக்கு ஏற்பட்டிருந்த நிலையை அவர்கள் மட்டுமே ஊகிக்கமுடியும். மற்றவர்களுக்கு என்ன தெரியப் போகிறது? மிகச் சிறிய வயதில் அம்மாவுடனோ, அப்பாவுடனோ எங்கேனும் வெளியில் போயிருக்கும்பொழுது வழி தவறிவிட்டால் விசித்திரமான அநுபவம் ஏற்படுகிறது. அழுவதைத் தவிர வேறு ஒன்றும் நமக்குத் தோன்றுவதில்லை. இப்பொழுது என்ன ஆகும்? எங்குப் போவது? இப்போது நமக்குச் சாப்பிடவும், குடிக்கவும் யார் தருவார்கள் என்பன போன்ற எண்ணங்கள் தோன்றி, ஓவென்று அழத் தொடங்கிவிடுகிறோம். ஆனால், அச்சமயத்திலாவது எதிர் கொண்டவர் கேட்பார் என்ற ஆறுதல் உண்டு. வழியில் பார்ப்பவர் அன்புடன் பேசுவார். பரிதாபத்துடன், 'குழந்தாய்! உன் வீடு வாசல் எங்கே? அப்பாவின் பெயர் என்ன, அம்மாவின் பெயர் என்ன?' என்றெல்லாம் கேட்பார்; யாரேனும் நம்மை வீட்டில் சேர்ப்பித்துவிடுவார்கள் என்று நமக்குத் தோன்றுகிறது. கருணையுள்ளம் கொண்ட யாராவது நமது அழுகையை நிறுத்துவதற்காக, தின்பதற்கு என்று நமக்குத் தரக்கூடச் செய்யலாம். ஆம். அப்போதைய என்னுடைய விசித்திர நிலையைக்காட்டிலும் ஒருவகையில் வழி தவறிய குழந்தையின் நிலையே சிறந்தது. இன்றுங்கூட அந்நிகழ்ச்சியின் நினைவு பயங்கரமாகப் படுகிறது.

நாலாபுறமும் சூழ்ந்திருந்தது கும்மிருட்டு. நான் தரையில் அந்தக் குப்பையில் உட்கார்ந்து, 'பாட்டியோ, அம்மாவ், நாநா சாகேப்' என்று விடாமல் கத்தியவண்ணம் அழுதுகொண்டிருக்கிறேன். அந்தப் பயங்கரக் காட்சி கண்களின்முன் தோன்றியதும் இப்போதும்கூடக் கண்களை மூடிக்கொண்டு, அக்காட்சியைக் கைகளால் கண்களின் முன்னின்று விலக்கி, இருந்த இடத்திலிருந்து ஓடிவிடவேண்டும் என்று தோன்றுகிறது.

மேற்கூறியவாறு, நான் எவ்வளவு நேரம் அழுதுகொண்டே உட்கார்ந்திருந்தேனோ? எத்தனை முறை கதவின் அருகில் சென்றிருப்பேனோ? எவ்வளவு இரைந்து கூவியிருப்பேனோ? அந்த நேரத்தில் வெளியில் அக்கம்பக்கத்து அறையில் இருந்தவர்க்கோ, எதிரிலுள்ள நடை பாதையில் வருவோர் போவோரில் ஒருவருக்கோ எனது கூப்பாடு ஏன் காதில் விழவில்லை என்பது எனக்கு விளங்கவில்லை. ஒருவேளை, எனது தலையெழுத்து மோசமாக இருந்ததால் தீய நிகழ்ச்சிகளுக்காகவே நான் பிறந்தேன் என்று என் தாய் அடிக்கடி சொல்வதுதான் உண்மையோ?

நான் இவ்வாறு துடித்துக்கொண்டிருந்தபோது திடீரென்று என் மூக்கிலும் வாயிலும் புகை நுழைந்து, மூச்சு அடைத்ததுபோலாயிற்று. கண்கள் எரிய ஆரம்பித்தன. என்ன என்று பார்க்கலாமென்றால் மூச்சு இழுக்க முடியவில்லை, கண்களைத் திறக்க வழியில்லை. அவ்வளவு புகை எனது கண்களில் போய்க்கொண்டிருந்தது. அதேபோல் மூக்கிலும், வாயிலும் புகை சென்றதால் மூச்சு திணறிக்கொண்டிருந்தது. மும்முறை நான் அழுகையை நிறுத்திப் பின்புறத்துச் சன்னல் அருகில் சென்றேன். அங்குச் சிறிது நன்றாக இருந்தது. ஆனால் புகையின் கூட்டம் அப்பக்கந்தான் சென்றுகொண்டிருந்ததாகப் பட்டது. ஏனெனில், அங்கும் எனக்கு மூச்சுத் திணறலின் அநுபவம் ஏற்படத்தான் செய்தது. அழுது அழுது எத்தனை நீர் கண்களிலிருந்து வெளிப்பட்டிருக்குமோ, அதைப் போல் ஆயிரம் பங்கு நீரைப் புகை வெளிப்படுத்திக்கொண்டிருந்தது. சோர்ந்த நிலையில் எனது அழுகை ஓயும் வேளை வந்தது. 'ஆ' என்றால் உடனே குப்பென்று புகை வாய்க்குள் போய் மூச்சுத் திணறும். இப்போது ஏதோ பயங்கர நிகழ்ச்சி என்னைத் தாக்கப்போகிறது என்று எனக்கு நிச்சயமாகப் பட்டது. மீண்டும் நான் அந்த வெளி அறைக்கு வந்தேன். கதவைப் பலமாகத் தட்டினேன். உடலில் இருந்த சக்தியையெல்லாம் ஒன்றாகத் திரட்டி இரைந்து கத்தினேன். ஆனால்

பயன் ஒன்றும் ஏற்படவில்லே. அங்குப் புகை நிறைந்திருந்தது என்று உள்ளறைக்குச் சென்றேன். அடுப்பில் இப்போது ஏதோ பற்றிக்கொண்டிருக்கவேண்டும் என்றே எனக்குத் தோன்றி யது. ஆகவே, பரபரப்புடன் அடுப்பின் அருகில் சென்று பார்த் தேன். ஆனுல் அங்கு ஒன்றுமே இருக்கவில்லே. அந்தப் பின் அறையின் சன்னல் அருகில் நின்று பலமாகக் கத்தினேன். மீண்டும் முன்னறைக்கு வந்து கதவைப் பலம் கொண்ட மட்டும் நான் தட்டினேன். தலேக்கு வந்தது என்ருல், உயிருக்கு ஆபத்து என்ருல், சிறிய பையனுகட்டும், பெரிய மனிதனுகட்டும் அவன் உடலில் அபரிமிதமான சக்தி வந்துவிடுகிறது. அப்படிப்பட்ட திடீர்ச் சக்தியைக் கொண்டு நான் கதவின்மீது இடித்தேன். கலவரத்துடன் கதறினேன். பிறகு மறுபடியும் பின் அறையின் சன்னல் அருகில் சென்று கத்தவேண்டும் என்று பின்னுல் திரும்பி னேன். அங்கே என்ன பயங்கரக் காட்சி! என்ன பயங்கர நிகழ்ச்சி! மூலேயில் எத்தனே பெரியதாகத் தீ எரியத் தொடங்கி யிருந்தது!

# 3. உறை ! கடித உறை !!

அந்தப் பயங்கரமான தீயைப் பார்த்ததும் என் நிலே என்ன ஆயிற்று என்பது எனக்குத்தான் தெரியும் அல்லது எனக்குக் கூடத் தெரியாது என்று சொன்னுல் பொருந்தும். ஏனெனில், அதுபற்றிய விவரம் ஒன்றுமே எனக்கு நினைவில்லே. எவ்வளவு பெரிய ஆபத்தில் நான் சிக்கியிருந்தேன், அதன் முடிவு என்ன என்பதை நான் உறுதியுடன் அறிந்திருந்தேன் என்று எனக்குத் தோன்றவில்லே. என்ன தெரிந்திருக்க முடியும்? அந்தத் தீ பற்றக் காரணந்தான் என்ன? இதுபற்றி யோசிக்கவோ, வேறு ஏதேனும் நான் செய்யவோ இல்லே. அதைப் பார்த்ததுமே ஓலமிட்டவாறு நான் கதவின் அருகில் சென்றேன். கதவை இப்பொழுது முன்னேவிடப் பலமாகத் தட்டினேன். இதற்குமேல் என் நினைவிற்கு ஒன்றும் வரவில்லே. காரணம் என்னவென்றுல் கூக்குரல் எழுப்பியதுதான் தாமதம்; அவ்வொலி அந்த அறையில் பரவ, நான் கதவின் அருகில் நினைவிழந்து விழுந்தேன். பின்னர் என்ன நடந்தது என்பது ஒன்றும் எனக்குத் தெரியாது.

எனது உடல் நிலே தேறத் தொடங்கிய நான்காவது நாளோ அல்லது ஐந்தாவது நாளோ திடீரென்று, 'நான் இராவ்ஜீயின் அறைக்கு எப்படிச் சென்றேன், அங்கு என்ன செய்தேன், அங்கு என்ன தேடிக்கொண்டிருக்கும்பொழுது என் கையில் என்ன சிக்கியது, எவ்வாறு எனக்குத் தீப்பெட்டி கிடைத்தது, அதில் இருந்த குச்சிகளில் எத்தனே நான் பற்றவைத்தேன்?' என்பன போன்ற விஷயங்கள் என் நினைவிற்கு வந்தன. தொடர்ந்து அந்த உறையின் நினைவும் வந்தது. உடனேயே நான் பாட்டியைக் கூப்பிட்டு, எனது மெலிந்த கம்மிய குரலே எழுப்பி அவளேக் கேட்டேன்: 'பாட்டி, எனது அந்த உறை எங்கே இருக்கிறது?' 'எப்படிப்பட்ட உறை, எங்கிருந்த உறை?' என்று அவள் திருப்பிக் கேட்கவே நான் குழப்பம் அடைந்தேன். நான் கேட்டது என்ன என்பது எனக்கே நினைவுக்கு வராததுபோல் ஆயிற்று. மீண்டும் மீண்டும் அந்த உறையின் நினைவு வந்து நான் அவளேக் கேட்டதும், 'அடே, ஏது உறை? நீ ஏன் இப்படிப்

பைத்தியம்போல் உளறிக்கொண்டிருக்கிறாய்?' என்று அவள் என்னைக் கேட்பதுமாக நடந்துகொண்டிருந்தது. ஒவ்வொரு கணமும் எனது அந்த உறை எங்கே போயிற்று என்ற கேள்வி விடாது என் மனத்தில் எழும்பிக்கொண்டே இருந்தது. பாட்டியின் பதிலைக் கேட்டு, உறையைப்பற்றி அறிவதில் எனது ஆர்வம் பெருகியதே ஒழியக் குறையவில்லை.

அந்த உறையை என்னிடம் யாரும் கொடுக்கவில்லை. அது மட்டுமின்றி, மீண்டும் நான் அந்த உறையைப்பற்றிப் பேசிய போதெல்லாம், 'என்ன பைத்தியக்காரப் பையன்! என்ன பிடிவாதக்காரப் பிள்ளை!' என்று சொல்லி எல்லோரும் என்னைக் கேலிதான் செய்தார்கள். இரண்டு நாட்களில் நான் பூர்ண குணமடைந்தேன். வந்த வழியில் திரும்பிப் போக வேண்டும் என்னும் ஆர்வம் எங்களுக்கு ஏற்பட்டது.

எந்த இடத்தில் சில நாட்களுக்கு முன்பு எனது வெற்றிக் கொடியை நாட்டினேனோ, அந்த எனது தந்தையின் இடத்தை மறுபடியும் ஒரு முறை பார்க்கவேண்டும் என்ற ஆசை என்னை ஆட்கொண்டது. அது என் உள்ளத்தில் எத்தனை தீவிரம் அடைந்தது! அந்த ஆசை, தனக்கு அடிமையான என்னை அங்கு இழுத்துச் சென்றது. ஆனால் போய்ப் பார்த்தால் வேறு ஒரு குடும்பத்தினர்தான் அங்கு இருப்பது தெரியவந்தது.

'குடும்பத்தினர்' என்ற சொல் இங்குத் தகுந்த பொருளில் உபயோகப்படுத்தப்படவில்லை. குடும்பத்தினர் என்றால் குறைந்தபட்சம் நான்கைந்து பேர்களாவது இருக்கவேண்டும் என்றுதான் வாசகர்களுக்குப் படும். ஆனால், நிலைமை உண்மையில் அவ்வாறு இருக்கவில்லை. அச்சமயத்தில் அந்த இடத்தில் எனது தாயின் வயதுள்ள ஓர் அம்மாளும், மேலும் சுமாராக இரண்டு அல்லது இரண்டரை வயதுள்ள ஒரு பெண்ணுமாக இருவரே இருந்தார்கள். அவர்கள் இருவரும் கதவருகிலேயே அமர்ந்திருந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் நான் சிறிது பின்னால் நகர்ந்தேன். ஆனால், அறைக்குள் எட்டிப் பார்க்க வேண்டும் என்ற எனது ஆசை ஒரேயடியாகக் கட்டுக்கு அடங்காமல் போகவே, நான் மீண்டும் அந்த அறையை நெருங்கினேன். அந்த அம்மாளை மிகவும் நெருங்கி, தலையை வளைத்து வளைத்து உள்ளே எட்டி எட்டிப் பார்க்கலானேன். எனது அச்செயலைப் பார்த்ததும் அந்த அம்மாளுக்குச் சிரிப்பு வந்ததுபோல் தோன்றியது. அவள் அதே சிரித்த முகத்துடன்

என்னை நோக்கிய வண்ணம் என்னிடம் சொல்லலானாள்: 'பையா, உனக்கு என்ன வேண்டும்? நீ என்ன பார்த்துக்கொண்டிருக்கிறாய்?' அவளுடைய அந்த மலர்ந்த, அழகிய, சிரித்த முகம் என் குழந்தை உள்ளத்திற்கு இன்பத்தைக் கொடுத்தது. அத்துடன் அவளுக்குப் பதில் சொல்வதற்கு வேண்டிய தைரியமும் எனக்கு ஏற்பட்டது. உடனேயே நான் அந்த அம்மாளிடம் சொன்னேன்: 'வந்து, எங்களுடைய இராவ்ஜீயின் அறை இது. அவருடைய ஒரு கடித உறை எனக்குக் கிடைத்திருந்தது. அது இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டிருந்தேன்.' இவ்வளவு நான் சொல்லி முடிப்பதற்குள், அந்த இரண்டு இரண்டரை வயதுப் பெண் மெதுவாக முன்னால் வந்தாள்.

# 4. முதல் சந்திப்பு

என் முன்னுல் வந்த பெண் இரண்டு இரண்டரை வயதினளாக இருந்தாள் என்பதை நான் மேலே கூறியிருக்கிறேன். அவள் நல்ல சிவந்த நிறத்தினளாக இருந்தாள். அவளுடைய கண் களும், மூக்கும் அழகாக இருந்தன. அவள் உடற்கட்டும் நன்ருக இருந்தது. வயதிற்கு ஏற்ற உயரந்தான் இல்லை. அவளைக் குள்ளம் என்றுதான் சொல்லவேண்டும். அவளுடைய முகமோ மிகுந்த அழகு உடையதாகவும், கவர்ச்சி உடையதாகவும் காணப்பட்டது. எனக்கு நன்ருக நினைவு இருக்கிறது, அவளைப் பார்த்தவுடனேயே எனது உள்ளம் ஒரு விசித்திர நிலையை அடைந்தது. ஒரு முறை அப்பெண்ணைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று என் மனம் விழைந்தது. நாநாவின் வீட்டில் குழந்தைகள் குறைவு என்பதோ அல்லது அவற்றில் மிகச் சிறு குழந்தையே இருக்கவில்லை என்பதோ அல்ல. எனினும் அக் குழந்தைகளில் எதுவும் என்னை ஏனே கவரவில்லை! ஆனல், இந்தப் பெண்ணைப் பார்த்தவுடனேயே, அவளை அருகில் அழைத்து அவளுடன் பேசவேண்டும், அவளை விளையாட வைக்க வேண்டும் என்றெல்லாம் எனக்குத் தோன்றியது.

அதற்குள் அந்தக் கவர்ச்சியுள்ள பெண்ணின் அழகிய வாயி லிருந்து பின்வரும் வார்த்தைகள் வெளிப்பட்டன:

'அம்மா, வந்து இந்த மாப்லேதான் நேக்குப் புச்சது. அந்த நத்தோ அண்ணு சொல்வாரே, இவன்தாளு அவன்? இவனை நேக்குக் குடு.' இரு கைகளையும் தன் பின்னுல் இடுப்பில் ஒன்றில் ஒன்றை இணைத்து வைத்துக்கொண்டு, நடுவில் கண்ணின் மீது விழுந்த முடிக் கற்றையை ஒதுக்கிக்கொண்டு, மீண்டும் கைகளைப் பழையபடி வைத்துக்கொண்டு, சிறிது குனிந்த வண்ணம், ஆனல் அதே சமயத்தில் நேராக என்னைப் பார்த்த வாறு, மிகுந்த கம்பீரத்துடன் அவள் சொன்னுள். மேலும் தனது தாய் என்ன முடிவு செய்கிருள் என்பதை உடனுக்குடன் அறிந்துகொள்ளவேண்டும் என்ற ஆர்வத்துடன் தன் தாயை நோக்கிய வண்ணம் நின்ருள். அவளது பேச்சைக் கேட்டு நான் எவ்வளவு வெட்கம் அடைந்தேன் என்பதை வார்த்தைகளால்

விவரிப்பது சாத்தியமில்லை. நான் ஓடிப்போகும் தருவாயில் இருந்தேன். காலைத் தூக்கக்கூடச் செய்தேன். அந்த மாப்பிள்ளை ஆகும் குழப்பத்தில் உறை கிறையைப்பற்றி அடியோடு மறந்து போயிருந்தேன். ஆனால், அதற்குள் அந்தப் பெண்ணின் தாய் கூறினாள்: 'சுந்தரே, உனக்கு இந்த மாப்பிள்ளை வேண்டுமா? அந்தப் ''பக்யா'' வேண்டாமா? அந்தப் பக்யாவிற்கு என்ன ஆயிற்று?' இந்தப் பேச்சைக் கேட்டதும் அங்கேயே தங்க வேண்டும் என்று தோன்றியது. மேற்கொண்டு தொடர்ந்த, 'அவன் மோசம், அவன் அழுக்கானவன், என்னைக் கடிக்கிறான், அவன் நேக்கு வாண்டாம். இவன்தான் வேணும். இவனை நேக்குத் தரயா?' என்ற அப்பெண்ணின் இந்தப் பேச்சைக் கேட்டு நான் அங்கே தங்கத்தான் செய்தேன். இருந்தாலும் வெட்கமாகத்தான் இருந்தது. வெட்கத்தினால் அடியெடுத்து வைக்க வேண்டும்போல் தோன்றியது. ஆனால், அந்தப் பெண்ணின் பேச்சை மேலும் கேட்கும் ஆவலினால், அங்கேயே நிற்க வேண்டும் என்றும் தோன்றியது. இறுதியில் நான் அங்கிருந்து அசையவில்லைதான். ஏனெனில், அந்தச் சுந்தரியின் தாய் சிரித்துக் கொண்டே சொன்னாள்: 'அடீ போக்கிரி! உனக்கு இப்போது நல்லதும் கெட்டதும் புரியத் தொடங்கிவிட்டதா? ஆனால், அவனுக்கு இப்படிப்பட்ட சாதாரணமான பெண் பிடிக்காது. தலை முடி எப்படிப் பரந்து கிடக்கிறது? மேலும் உடல் எவ்வளவு அழுக்காக இருக்கிறது?' இவ்வாறு சொல்லிக்கொண்டே அந்த அம்மாள் சுந்தரியைத் தன்னருகில் இழுத்துக்கொண்டாள்.

அவள் முகத்தை அன்புடன் வருடிய வண்ணம், அவள் கன்னங்களை மெதுவாகக் கசக்கி, மிகுந்த அன்புடன் அவளை முத்தமிட்டாள். அவள் மேலும் தன் பெண்ணிடம் சொன்னாள்: 'அவனுக்கு இப்படிப்பட்ட பைத்தியக்காரப் பெண் எதற்கு வேண்டும்? அவனுக்கு நீ வேண்டவே வேண்டாம்!' சுந்தரியின் தாயின் அச் சொற்களைக் கேட்டு என் உள்ளத்தில் ஏதோ விசித்திரமான உணர்ச்சி பரவியது. மேலும் திடீரென்று என் வாயிலிருந்து பின்வரும் வார்த்தைகள் வெளிப்பட்டன: 'ஏனுங்க? வேண்டாம் என்று ஏன் சொல்கிறீர்கள்? எனக்கு வேண்டும்.' நாம் இப்போது இவ்வாறு பேசவில்லை என்றால் கைக்கு வந்த மங்கை பிடியிலிருந்து நழுவி விடுவாளோ என்று பயப்படுகிறவனைப்போல நான் பேசினேன். அதைக் கேட்டு அந்த அம்மாள் பலமாகச் சிரித்தாள். சுந்தரியும்கூடச்

சிரித்தாள். அவ்விருவரின் சிரிப்பைக் கேட்டு நானும் பலமாகச் சிரித்தேன். அவ்விருவரின் சிரிப்பைக் கேட்டு யாராலும் சிரிப்பை அடக்கியிருக்க முடியாது. பின் நானே அவர்களுடைய இன்பத்தின் நிறைவிற்குக் காரணமான ஒருவனாகத்தான் இருந்தேன். நான் சிரித்தவுடன் சுந்தரியின் தாய் என்னிடம் கூறினாள்: 'ஓ! நீங்கள் உங்களுடைய சுயம்வரமே செய்யப் போகிறீர்கள்! பெண்ணுக்கு மாப்பிள்ளை பிடித்துள்ளது, மாப்பிள்ளைக்குப் பெண் பிடித்துவிட்டது. அதற்குமேல் என்ன வேண்டும்? அது சரி, நீ இங்கு எதற்காக வந்தாய்?'

நான்: 'வந்து, இது எங்களுடைய இராவ்ஜீயின் அறை, தெரியுமா? எங்கள் இராவ்ஜீயை நீங்கள் அறிவீர்களா?'

சுந்தரியின் தாய் சிரித்தவாறே, 'ஓ, தெரியுமே! அவர் இந்த அறையில் தங்கிக்கொண்டிருந்தாரா?'

நான்: 'இல்லை. அவர் ஒன்றும் தங்கிக்கொண்டு இருக்கவில்லை. அவருடைய அறையேதான் இது. மேலும் நான் அவருடைய மகன்.'

சுந்தரியின் தாய் விசேடமாகச் சிரித்து, 'அப்படியானால் அவர் இப்போது எங்கே போய்விட்டார்? நீ இங்கு எங்கிருந்து வந்தாய்?'

நான்: 'அவரா? அவர் எங்கோ வெளியில் போயிருக்கிறார். ஆனால் சுந்தரியின் அம்மா, நீங்கள் இங்கே எப்படி வந்தீர்கள்? எங்கள் இராவ்ஜீயின் பூட்டை நீங்கள் எப்படித் திறந்தீர்கள்? உங்களிடம் சாவி இருக்கிறதா? நான் வரட்டுமா, உங்கள் அறையில்? நான் இந்த அறையினுள் போயிருந்தேன், தெரியுமா? மேலும், அங்கு மிகப் பெரிய தீ பற்றிக்கொண்டது. மேலும், எனக்கு அங்கு ஓர் உறையும் கிடைத்தது. மேலும் அதை நான் என் கையில் இறுகப் பிடித்துக்கொண்டிருந்தேன். மேலும் அது எங்கேயோ விழுந்துவிட்டது. இருக்கிறதுங்களா, அது இந்த அறையில்?'

என்னுடைய அந்த 'மேலும்' என்ற வார்த்தையும், ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து கேட்கப்பட்ட எனது கேள்விகளும் சுந்தரியின் அம்மாவைத் திடுக்கிட வைத்திருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. இருந்தபோதிலும், அந்த அம்மாள் பாவம், சிரித்தாள். மேலும் சொல்லலானாள்: 'அப்போ? உனக்கு அந்த உறையை அறையினுள் பார்க்கவேண்டுமா? அடப் பைத்தியமே, இங்கே தங்குவதற்கு என்று இரண்டு நாட்களுக்கு

முன்பே நாங்கள் வந்தோம். அப்போது எல்லாவற்றையும் பெருக்கித் தள்ளியாகிவிட்டது. இப்போது இங்கு ஒன்றும் இல்லை. உனது உறை எங்கே கிடைக்கப் போகிறது?'

நான்: 'நீங்கள் இங்கே தங்குவதற்காக வந்தீர்களா? இது அவருடைய அறை என்று நாநா சொல்லிக்கொண்டிருந்தாரே? இராவ்ஜீயிடமிருந்து நீங்கள் இவ்வறையை வாங்கி விட்டீர்களா?'

இந்தக் கேள்வியைக் கேட்டதும், அவள் ஒரு விசித்திர மான வகையில் என்னைப் பார்க்க ஆரம்பித்தாள். நான் என்ன கேட்டுக்கொண்டிருந்தேன் என்பதன் பொருளே அவளுக்கு விளங்கியிருக்காது. அப்பொழுது சகஜமாகவே அவள் பின்வரும் கேள்வியைக் கேட்கலானாள்: 'இராவ்ஜீ யார்? அவர் இங்குத் தங்கியிருந்தபொழுது நீயும் இங்கு இருந்தாயா?' அவள் என்னிடம் கேள்வி கேட்பதும், நான் அவளுக்குப் பதில் சொல்வது மாக இவ்வாறு நடந்துகொண்டிருந்தது. 'இராவ்ஜீ யார்? யார் என்றால் எங்கள் இராவ்ஜீ. நான் யார்? யார் எனில் நான் இராவ்ஜீயின் மகன். மேலும் அவரிடம் தங்கி இருக்கவேயில்லை!'

மொத்தத்தில் எனது இந்தப் பதிலைக் கேட்டு அந்த மாமியாருக்குத்தான் எத்தனை விவரம் தெரிய வந்திருக்கும்! நான் இந்தப் பதிலைக் கொடுத்துக்கொண்டிருக்கும்பொழுதுகூட எனது முழுப் பார்வையும் உள்ளறைப் பக்கமாக இருந்தது என்பது அந்த அம்மாளுக்குத் தெரிந்திருக்கவேண்டும் எனத் தோன்றியது. ஏனெனில், அதற்குள் தனது வேலையை ஒரு பக்கம் வைத்துவிட்டு அவள் என்னிடம் சொன்னாள்: 'உள்ளேதான் வாயேன் ஒரு முறை. உனக்கு அறையில் எதைப் பார்க்கவேண்டுமோ பார், வா!' தாயின் பேச்சைக் கேட்டுத் தானே என்னவோ ஊக்கம் கொண்டு சுந்தரியும் என்னிடம் சொன்னாள்: 'வாதா, வாதா (வாடா, வாடா) மாப்ளே! வந்தேன்னு அம்மா நோக்குப் பப்பு குடுப்பா, வா!' அந்த வாக்கியத்தைக் கேட்டு அவள் தாய்க்குத்தான் எவ்வளவு சிரிப்பு வந்தது என்கிறீர்கள்! அவளுக்கு எத்தனை சிரிப்பு வந்ததோ, எனக்கு அத்தனை வெட்கம் ஏற்பட்டது. உண்மை யாகவே மாமியார் வீட்டிற்கு நாம் போகிறோம் என்பதுபோல் எனக்குப் பட்டது. எப்படியிருந்தாலும் சரி. ஆனால் நான் உள்ளே போனவுடன் அதென்ன வேடிக்கை! முன்பு இருந்தபடி ஒன்றுமே அங்குக் காணப்படவில்லை. எங்குப் பார்த்தாலும் பளிச்

சென்று இருந்தது. அத்தனைக் குப்பை கூளங்களும் இருந்த இடம் தெரியவில்லை. சுத்தம் என்றால் சுத்தம்; அவ்வளவு சுத்த மாகக் காணப்பட்டது. எல்லா இடங்களிலும் நான் பார்த் தேன். இது இராவ்ஜீயின் அறையே இல்லை என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். ஏனெனில், இராவ்ஜீயின் அறை என்று முன்பு எந்த அறையில் நான் போயிருந்தேனோ, அப்போது அது எப்படி இருந்தது என்பதை நான் தெளிவாக மேலே எடுத்துச் சொல்லியிருக்கிறேன். அப்படியிருக்க, அந்த முறையில் அது அடியோடு காணப்படாமல், அதற்கு நேர்விரோதமான முறை யில் இருப்பதைப் பார்த்ததும், அது இராவ்ஜீயின் அறைதான் என்று என் உள்ளம் எப்படிக் கொள்ளும்? இவ்வாறு நான் எண்ணிக்கொண்டிருந்த சமயத்தில் அந்த அம்மாள் ஒரு பலகை மீதிருந்து எதையோ எடுத்துச் சிரித்துக்கொண்டே என்னைப் பார்த்தவண்ணம் கூறினாள்: 'கிடைத்ததா உனது உறை?' நான் சொன்னேன்: 'இல்லை. உங்களுக்குக் கிடைத்ததா? கிடைத்திருந்தால் என்னிடம் கொடுங்கள்.'

'முன்பே உனக்குச் சொன்னேன் இல்லையா, நாங்கள் இங்குத் தங்குவதற்கு வரும் முன்னால்தான் எல்லாக் குப்பை கூளங்களையும் தூர எடுத்து எறிந்துவிட்டோம் என்று. மேலும், அடே, நீ ஒரு மிகச் சிறு பையன், உனக்கு எதற்கு அந்த உறை?'

இதற்குமேல் நான் என்ன பதில் சொல்வது? எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. நான் படிக்க அறிந்திருக்கவில்லை. உறை என்றால் என்ன? அதை எதனுடன் சேர்த்துச் சாப்பிடுவது என்பதாவது எனக்குத் தெரிந்து இருந்ததா, இல்லையா என்பதும் சந்தேகந்தான். இருந்தபோதிலும் நான்பாட்டுக்குச் சுந்தரியின் தாயிடம் சொன்னேன்: 'வந்து ... வந்து ... அந்த உறை வந்து எனக்குச் சும்மாத்தான் வேண்டும்!'

'சும்மாத்தான்' என்ற இந்த வார்த்தை சிறு வயதில் எத்தனை காரியங்களுக்கு உபயோகப்பட்டுக்கொண்டிருந்தது என்கிறீர்கள்? அதைப்போல் சௌகரியமான வார்த்தை வேறு எதுவுமே இருக்க முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. 'எந்தச் சந்தர்ப்பத் திலும் உனக்கு ஏன் வேண்டும், இன்னதை நீ ஏன் இப்படிச் செய்தாய்?' என்பன போன்ற கேள்விகளை யாராவது கேட்டு, அதற்குத் தகுந்த பதில் ஒன்றும் இல்லை என்றால், உடனேயே 'சும்மாத்தான்' என்று பதில் வந்ததாகவே கொள்ளவேண்டும். அதுவும், அதனால் கேள்வி கேட்போருக்கு முழுச் சமாதானம்

ஏற்பட்டே ஆகவேண்டும் என்ற வகையில் அது அவ்வளவு அழுத்தமாக வரவேண்டும். இல்லை என்றால் ஒரு பயனும் இல்லை. அவர்கள் அந்த அளவில் சமாதானம் அடைந்துதான் ஆக வேண்டும் என்ற அளவிற்குச் 'சும்மாத்தான்' என்ற இந்த வார்த்தையின் முக்கியத்துவம் குறைந்தபட்சம் குழந்தைப் பருவத்திலாவது இருக்கிறது. நிற்க.

நான் எனது அந்தச் சிதறிய துண்டுப் பதிலைக் கொடுத்துக் கொண்டிருந்தபொழுது அந்த அம்மாள் சிறிய லட்டு போட்ட ஒரு கிண்ணத்தை என் முன்னால் நீட்டியவாறு என்னிடம் சொன்னாள்: 'இந்தப் பட்சணத்தைச் சாப்பிடு, என்ன!' அதைக் கேட்டு எனக்கு அச்சமயம் உண்மையாகவே விசித்திரமாகப் பட்டது. ஏனெனில், சுந்தரியோ எனக்கு 'மாப்ளே' என்று நிச்சயமாகப் பெயர் சூட்டிவிட்டாள். அது எனக்குப் பிடிக்கவில்லை என்பதில்லை. உண்மையைச் சொல்லப் போனால், எனக்கு அது மிகவும் பிடித்தது. மேலும் அவள் அப்படித்தான் சொல்லவேண்டும் என்று உள்ளூற எனக்குத் தோன்றிக்கொண்டிருந்தது. ஆனால், அவள் அப்படிச் சொல்லும்பொழுது எனக்குச் சிறிது கூச்சமாக மட்டும் இருக்கும். 'நான் உடெச்சு குடுக்கட்டுமா?' என்று அவள் சொல்ல, உடனேயே அவள் தாய் அவளிடம் சொன்னாள்: 'வேண்டாம், தாங்கள் ஒன்றும் உடைத்துக் கொடுக்க வேண்டாம். எவ்வளவுதான் உடைத்துக் கொடுப்பீர்கள்? முதலில் கண்களின்மீது வந்து விழும் முடியை விலக்குங்கள்.'

சுந்தரிக்கு இல்லாமல் எனக்கு மட்டும் லட்டு கொடுத்தது எனக்குச் சரியாகப் படவில்லை. அதனால் நான் உடனேயே சுந்தரியின் தாயிடம் சொன்னேன்: 'சுந்தரியின் அம்மா! எனக்கு லட்டு கொடுத்தீர்கள். ஆனால் இவளுக்குக் கொடுக்கவில்லையே?' அதைக் கேட்டதுமே சுந்தரி சொன்னாள்: 'வாண்டாம், வாண்டாம். எனக்கு வாண்டாம். நான் தின்னாச்சு. மேலும், அண்ணா வந்தார்ன்னா அப்புறம் சாப்பிடுவேன்.' இருந்த போதிலும் நான் வற்புறுத்தி ஒரு துண்டை அவளிடம் கொடுக்கலானேன். அதற்குள் என் பெயரை இரைந்து கூப்பிட்டவண்ணம் என்னுடைய அம்மா அங்கே வந்தாள். அவ்வாறு அவள் உரக்க என் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதைக் கேட்டதுமே, அப்பா! நான் எவ்வளவு பயந்து போய்விட்டேன்! அதைப்பற்றி ஒன்றும் கேட்காதீர்கள். அப்போதுதான் ஒரு துண்டை வாயில் போட இருந்தேன். ஆனால் அதை அரைகுறையாக வாயில் போடப்

போட எழுந்து ஓடும் நிலைக்கு வந்தேன். சுந்தரியின் தாய் இவை யாவற்றையும் ஊகித்து அறிந்துகொண்டாள். மேலும் என்னிடம் கூறலானாள்: 'ஏன்? உன்னை யாராவது கூப்பிடுகிறார்களா? இதோ பார்க்கிறேன்.' இவ்வாறு சொல்லிக்கொண்டே அவள் சடக்கென்று முன் கதவுப் பக்கம் சென்றாள். அதற்குள் என் தாய் அங்கு வந்தாள். அவளைப் பார்த்ததுமே சுந்தரியின் தாய் அவளிடம் வினவினாள்: 'என்னங்க, நீங்கள் இந்தப் பையனுக்காகத்தான் பார்க்கிறீர்களா?' இதைச் சொல்லும்பொழுது சுந்தரியின் தாய் கதவிலிருந்து சிறிது தள்ளி வந்து என்னைச் சுட்டிக் காட்டியவண்ணம் நின்றுகொண்டிருந்தாள். அந்த லட்டோ எனது தொண்டைக்குள் இறங்கவில்லை. எப்படி இறங்கும்? அம்மா வெளியில் போயிருக்கிறாள், பாட்டி வீட்டில் அப்போதுதான் படுத்திருந்தாள் என்று நிச்சயமாக அறிந்துதான், மற்றவர்களின் கவனத்திலிருந்து தப்பி அப்போதுதான் இராவ்ஜீயின் அறையை நோக்கி அடியேன் கிளம்பி வந்திருந்தேன்.

எனது தாயின் முகம் சினத்தால் சிவந்திருந்தது. என்னைப் பார்த்ததும் அவள் மளமளவென்று உள்ளே நுழைந்தாள். வழியிலிருந்த சுந்தரியின் தாயை விலக்கிக்கொண்டே வந்து என்னை நெருங்கினாள். தொடர்ந்து, 'பாவி, உனக்கு இப்படிப் பொல்லாத வழி ஏன்தான் தோன்றிற்றோ? இவ்வாறு ஏன் ஒவ்வொரு வாசலாகப் பிச்சை வாங்கிச் சுற்ற ஆரம்பித்திருக்கிறாய்? உனக்குச் சொல்லியிருந்தேனா இல்லையா நான், வாசலைத் தாண்டிச் சென்றால் காலை ஒடித்துவிடுவேன் என்று? வெறுமனே என்னைப் படுத்தவேண்டும் என்று ஏண்டா பிறந்தாய்? பழிகாரா! வேறு ஒன்றும் இல்லை, வனவாசம், வெறும் வனவாசந்தான் கொண்டு வந்தாய் பிறந்ததிலிருந்து.' இவ்வாறு சொல்லிக்கொண்டே அவள் எனக்கு இரண்டு மூன்று அறை கொடுக்கவும் செய்தாள். நான் எவ்வளவு துடித்துப் போனேன்? எப்படி அழத் தொடங்கிவிட்டேன்? என் அழுகையையும் ஓலத்தையும் கேட்டுச் சுந்தரியோ மிக மிகப் பயந்துபோனாள். மேலும் அவள், 'என் மாப்பிள்ளையை அடிச்சா' என்று மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டே கூச்சலிட்டாள். அவள் தாய் என்னை என் தாயின் பிடியிலிருந்து விடுவிப்பதற்காகத் தொடர்ந்து, 'இது என்னம்மா, இப்படிச் செய்கிறீர்கள்? அவனை விடுங்கள். அவன் அப்படி என்ன செய்துவிட்டான்? அவன் பாவம் வெளியில்தான் இருந்தான். நான்தான் அவனை உள்ளே அழைத்தேன். அடிக்காதீர்கள்

அவனை. இப்படி ஏன் அடிக்கிறீர்கள்? ஐயயோ! பையன் துடித்துப் போகிறான் பாருங்கள்' என்று சொன்னாள். இவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது அந்த அம்மாளின் கண்களில் பாவம், நீர் பெருகிவரத் தொடங்கியது. ஆனால் என் தாயின் உள்ளத்தில் கருணையின் ஊற்று தோன்றியதாகத் தெரியவில்லை. மாறாக, அவள் சொன்னாள்: 'ஏங்க, உங்களுக்கு என்ன தெரியும் இந்தப் பாவியின் செயல்? கேளுங்கள், இரண்டு நாட்களுக்கு முன்பு தான் எங்கள் எல்லோருடைய கழுத்திலும் கயிற்றைக் கட்டும் வேலையைக் கொண்டு வந்தான். இதே அறையில் எரிந்து மடிந்து போயிருப்பான். எங்களுக்குத் தெரியக்கூடச் செய்திருக்காது. உங்களுக்கு என்ன சொல்வது?' என்று சொல்லித் திடீரென்று அம்மா அழத் தொடங்கிவிட்டாள். அவள் அழத் தொடங்கியது ஒரு வகையில் எனக்கு நல்லதாகப் பட்டது. ஏனெனில், என்மீது சரமாரியாக அடிகளைப் பொழிந்துகொண்டிருந்த அவளது கை கொஞ்சமாவது நின்றது. தங்கள் குழந்தைகளின்மீது பெண் களுக்குள்ள அன்பு ஒரு பெரிய இரகசியமாகும். குழந்தையை அடித்துக்கொண்டிருக்கும்போதே, அது அவ்வடியினால் துடித்துப் போவதைக் கண்டதும் அவர்களது கண்களினின்றும் நீர் வழியத் தொடங்கிவிடுகிறது. இந்த எல்லா உண்மைகளின் பின்னால் இருக்கும் தத்துவம் என்னவாக இருக்குமோ? விநோதமாக எழுதும் ஓர் எழுத்தாளர் இவ்வாறு சொன்னது உண்மைதான்: 'குழந்தை காணாமல் போய்விட்டது என்றால் ஆயா அழு அழு என்று அழுகிறாள். பின் குழந்தை கிடைத்துவிட்டது என்றால் அதை அடி அடி என்று அடிக்கிறாள்!' எப்படி, இதனுடைய அநுபவமும் எனக்குக் கிடைத்தது! குறைந்தபட்சம் எனக்குத் தான் எவ்வளவு முறை கிடைத்தது. இப்படிப்பட்ட அநுபவம் எல்லோருக்குமே கிடைத்திருக்கும். நிற்க . . .

மேற்கூறியவாறு அம்மாவின் கை சிறிது தளரவே, உடனேயே எனக்குச் சிறிது சமாதானமாக இருந்தது. மேலும், அம்மாவும் சிறிது களைத்துப் போனதுபோல் காணப்பட்டாள். இதைத் தவிர, சுந்தரியின் தாய் ஏதோ பேசியும், சுந்தரி தனது இயற்கை யான இனிய குரலில் இனிய வார்த்தைகளைப் பேசியும் அவ ளுடைய சினத்தைச் சிறிது தணித்தார்கள். அதற்குள் சுந்தரி அடியேனுக்குக் கொடுத்த அந்தப் புதிய பெயரைச் சொன்னது எனது தாயின் சினம் இன்னமும் குறையக் காரணமாயிற்று. மேலும், அதைக் கொண்டே சுந்தரியின் தாய் எங்கள் இருவரை யும் கேலி செய்ததால் ஒரே வேடிக்கையாக இருந்தது.

# 5. ஆஹா! கடிதம் கிடைத்தது!!

பாட்டியிடம் சென்றதுமே, அம்மாவின் சொல்லடிப் பிரவாகம் தொடங்கியது; கையடியும் துவங்கவே இருந்தது. ஆனால், அந்தக் கை தூர விலக்கப்பட்டதால், அதனின்றும் நான் தப்பினேன். பாட்டி எனக்குச் செல்லம் கொடுக்கிறாள் என்றுதான் நான் இப்படித் தலையில் ஏறி உட்காருகிறேன் என்றெல்லாம் சொற்களின் குண்டு வீச்சு பாட்டியின்மீதும் தொடங்கியது. அதன்மேல் 'நான் என்ன செல்லம் கொடுக்கிறேன்? பிள்ளைகளின் சுபாவமே அதுதான். அவனுக்கு இங்குப் பொழுதுபோயிருக்காது. நான் படுத்திருந்தேன் என்று சிறிது நேரம் எங்கேயாயினும் வெளியில் போயிருப்பான். அதனால் இப்படி அவனை அடிக்கவும் இடிக்கவும் செய்வானேன்? நீங்கள் இந்த நிலைக்கு வந்தீர்கள், உங்களுக்கும் ஓரிரு வார்த்தைகள் சொன்னால் நீங்களே கேட்பதில்லை. பின் அவனோ ஒரு சிறு பிள்ளைதானே!'

இப்படி எனக்குப் பக்கபலமாக இருந்த வார்த்தைகள் பாட்டியின் வாயினின்றும் வெளிப்பட்டதும் எனக்கு மிகுந்த ஆறுதலாக இருந்தது. வெறும் ஆறுதல் மட்டும் இல்லை. இப்பொழுது என் மீது அடி ஒன்றும் விழாது. ஆனால் பாட்டியின் நிழலை விட்டு மட்டும் செல்லக்கூடாது என்று நான் நிச்சயமாக எண்ணினேன்.

பாட்டியின் அப்பேச்சைக் கேட்டுத் தாயார் மிகுந்த வருத்தம் அடைந்தார்கள். உடனேயே அவர் எனது இரு தோள்களையும் பிடித்து, 'ஏய்! இருக்கட்டும், போடா, போ. போய் இன்னமும் விளையாடு. போய், முழுக் கட்டிடத்திற்கும் தீயேற்று. போடாப்பா குழந்தே!' என்று பரிகாசம் நிறைந்த குரலில் சொல்லி உண்மையாகவே என்னை முன்னறையில் தள்ளினார். அச்சமயத்தில் நானும் அத்துப் பித்து என்று ஒன்றும் விரோதம் செய்யாமல் அமைதியாக வெளியிலேயே இருப்பது தான் நல்லது என்று எண்ணினேன். யார் அறிவார், இப்பொழுது உள்ளே திரும்பிச் சென்றால் என்மீது அடி மழை விழத் தொடங்கலாம். அதனால் வெளி அறையில் நானா சாகேப் வழக்கப்படி உட்காரும் இடத்தில் சென்று ஒரு மூலையில் நான் திருடனைப் போல் பதுங்கி உட்கார்ந்தேன். இதுவரை நானா

சாகேப்பின் குழந்தைகளோ அல்லது நாநா சாகேப்போ வந்திருக்கவில்லை. நான் ஐந்தாறு நிமிடங்கள் அங்கு உட்கார்ந்து இருந்திருப்பேன். அதற்குமேல் கையைக் கட்டிக் கொண்டு உட்கார என்னுல் முடியவில்லை. அதற்கு, எனது சஞ்சல குணம், உழைப்பின் விருப்பம் அல்லது உபத்திரவம் செய்யும் தன்மை, இவற்றுள் எதை வேண்டுமானுலும் காரணமாகச் சொல்லுங்கள். இந்த மூன்றையும் நான் இங்குக் குறிப்பிடுவதற்குக் காரணம் உண்டு. ஏனெனில், எந்த ஒரு மனிதனையும் சஞ்சல சித்தம் கொண்டவன் என்றே, உழைப்பாளி என்றே அல்லது உபத்திரவக்காரன் என்றே சொல்வது அவனவன் செய்யும் வேலையின் பயனுள்ள தன்மையையும், பயனற்ற தன்மையையும் பொறுத்தே இருக்கிறது. காலித்தனமானவன் அல்லது அதற்கு எதிராகப் பிறருக்குத் தீங்கிழைப்பவன் முயற்சி செய்தான் என்றுல் அவனுக்குத்தான் 'உபத்திரவக்காரன்' என்ற இந்தப் பெயர் கிடைக்கிறது. அதே முயற்சி நல்ல வெற்றி அடைந்தால் அதற்கு 'உழைப்பு' என்ற சிறந்த பெயர் கிடைக்கிறது. அப்படி இருக்க, எனது அந்த வயதில் செய்யக்கூடிய வேலைகளின் பயனற்ற தன்மையினுல், அதற்கு 'உபத்திரவம்' என்ற பெயர்தான் கிடைக்கும் என்பது நிச்சயம்.

அப்படியிருக்க, என்னைப் போன்ற அர்த்தமற்ற காரியம் செய்யும் அல்லது உபத்திரவம் செய்யும் தன்மையுள்ளவனுக்கு அமைதியுடன் எவ்வளவு நேரம் உட்கார்ந்திருக்க முடியும்? உடனேயே நான் கால்களை அங்குமிங்கும் அசைக்க ஆரம்பித்தேன். சும்மா வாயினும் கீழ் விரிப்பின் முனையைச் சுருட்ட ஆரம்பித்தேன். பிறகு அந்த அறையில் எவ்வளவு பொருள்கள் இருக்கின்றன என்பதை எண்ணிப் பார்க்க ஆரம்பித்தேன். அதன் பிறகு மெதுவாக இடத்திலிருந்து எழுந்து, அந்தப் பொருள்கள் என்னென்ன என்று பார்ப்பதற்காக அந்தந்தப் பொருள்களின் அருகில் சென்றேன். வெறுமனே அவற்றைப் பார்த்து எண்ணுவதுடன் இப்போது உள்ளம் திருப்தி கொள்ளாதது ஆயிற்று. அந்தப் பொருள்களை இப்போது தொட்டுப் பார்க்கவேண்டும் என்ற ஆசை மனத்தை உந்தித் தள்ளியது. அதற்குமேல் அந்தப் பொருள்களைச் சோதிப்பதற்கென அடியேனின் கைகள் முன்னுல் நீண்டன. அதற்குள் திடீரென்று இராவ்ஜீயின் அறையில் கிட்டிய கடிதத்தின் நினைவு வரவே, அதைத் தேடி எடுக்கும் வேலையில் நான் முனைந்தேன்.

இப்பொழுது மற்றப் பொருள்களைச் சோதித்துப் பார்க்கும் ஆசை அடியோடு மறைந்து போயிற்று. ஏதேனும் காகிதம் அகப் பட்டால் அதில் அந்தக் கடிதம் எங்கேனும் இருக்கிறதோ என்று பார்க்கவேண்டும் என்னும் அளவற்ற ஆவல் எனக்கு ஏற்பட்டது. (இராவ்ஜீயின் அறையில் மயங்கி விழுந்த எனது கையில் அக்கடிதம் இருந்து, அப்படியே நான் இங்குக் கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும். எனவே அது இங்கு எங்கேயாவது எடுத்து வைக்கப் பட்டிருக்கக்கூடும் என்று எனக்குத் தோன்றியதால்) நான் அந்தக் கடிதத்திற்காக எல்லா இடங்களிலும் மும்முரமாகப் பார்க்கலானேன். ஆனால் ஒன்றும் கண்ணில் படவில்லை. மீண்டும் ஒரு முறை ஆவல் குதித்தெழுந்து என்னை மேசையின் அருகில் இழுத்துச் சென்றது. மேசையின் அறைகளில் அந்தக் கடிதம் குறிப்பாக எங்கோ வைக்கப்பட்டிருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அதனால் அறையைத் திறந்து பார்ப்பதற்கென நான் மேசை அருகில் சென்றேன். தேடிக்கொண்டே இருக்கும் பொழுது எனக்கு வேண்டியிருந்த அந்தக் கடித உறை எனக்குக் கிடைத்துவிட்டது. ஆஹா! என்னே என் ஆனந்தம்! ஆனால் இப்பொழுது அது பிரிக்கப்பட்டிருந்தது. அதற்குள்ளே இன்னும் ஒரு பிரிக்கப்பட்ட உறையும் இருந்தது. ஆனால் எனது உறையைக் காட்டிலும் அது சிறியதாக இருந்தது. எனது உறையின்மீது அஞ்சல் முத்திரை (ஸ்டாம்பு) இருக்கவில்லை; உள்ளிருந்த உறையின்மீது அது இருந்தது. எனது உறையுள் ஒரு கடிதம் இருந்தது. அதனுடன் அந்தச் சிறிய உறையும் இருந்தது. எனது உறை கிடைக்கப் பெற்றதுமே நான் எத்தனை இன்பம் அடைந்தேன்!

# 6. கடிதம் மறைந்த மாயம்

இந்த வகையில் இடையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளுக்குப் பின்னர், அம்மா, பாட்டி இவர்களுடன் அடியேன் புறப்பட்ட இடத்திற்கு வந்து சேர்ந்தேன்.

குறிப்பிட்ட நேரத்திற்கு இரயில் வண்டி நிலையத்தை வந்து அடைந்தது. எங்களை நிலையத்திலிருந்து அழைத்துச் செல்வதற்காக வீட்டிலிருந்து யாரேனும் வருவார்கள் என்று நாங்கள் எதிர்பார்த்திருந்தோம். அதனால்தான் இங்கும் அங்கும் ஆயிரம் முறை பார்த்தோம். பாட்டியும், அம்மாவும் மூட்டைகளைத் தூக்கிய வண்ணம் என்னையும் இழுத்துக் கொண்டு நாலைந்து முறை அங்கும் இங்குமாக நடை போட்டார்கள். ஆனால் ஒரு பயனும் இல்லை. வீட்டிலிருந்து ஒருவரும் வந்ததாகத் தெரியவில்லை. இறுதியில் ஏமாற்றம் அடைந்து, 'இப்படித்தான் அவர்கள்! யாருக்கு என்ன போயிற்று? இவர்களுக்குத் தங்கள் தூக்கத்தைத் தவிர வேறு நினைவிற்குத்தான் வந்திருக்குமா? ஆனந்தியாவது, யாரிடமாவது சொல்லியிருக்க வேண்டாமா? வேலைக்காரனிடம் ஒருவேளை சொல்லியிருக்கக் கூடும். ஆனால், அவன் ஏன் காதில் போட்டுக்கொள்கிறான்? அவசியந்தான் யாருக்கு இருக்கிறது? "எங்களுடன் துணை ஒருவரும் இல்லை; யாரையாவது இரயிலடிக்கு அனுப்புங்கள்" என்று முன்னதாகவே தெளிவாகக் கடிதத்தில் எழுதியிருந்தோம். எதற்கு அனுப்புகிறார்கள்? சே சே! போம்மா! எனக்கு அடியோடு இந்தக் குடும்பத்தில் வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. உண்மையாகச் சொல்லப் போனால் இப்போது எங்கேயாவது ஓடிப் போய்விடவேண்டும் என்று தோன்றுகிறது' என்று படபடத்துக்கொண்டே பாட்டி எங்களை அழைத்துக்கொண்டு நிலையத்திற்கு வெளியே வந்தாள். எங்களுடைய வேலைக்காரன் வந்திருக்கிறானா என்று அங்கும் பலமுறை பார்த்தோம். பாட்டி அவன் பேரைச் சொல்லிக் கூப்பிட்டுப் பார்த்தாள். அம்மாவும் கூடக் கூப்பிட்டுப் பார்த்தாள். நானும் கூடத்தான் அடிவயிற்றி

லிருந்து கத்தினேன். ஆனால், கடைசியாக அவன் எங்குமே காணப்படவில்லை. அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள் சிரிக்க ஆரம்பித்தார்கள். ஆகவே, இப்போது நாமே வண்டியை ஏற்பாடு செய்துகொண்டு கிளம்பவேண்டும் என்ற முடிவுக்கு வந்தோம். ஆனால் என்ன பயன்? முதலாவதாக நிலையத்தி லிருந்து வெளியில் வருவதற்கே எங்களுக்கு நிறைய நேரமாகி விட்டது. அதனால் அநேகமாக எல்லாக் குதிரை வண்டிகளும் கிளம்பிப் போய்விட்டிருந்தன. வெளியில் வந்த பிறகும் தேடுவதில் சிறிது காலத்தைக் கடத்தினதால் அச் சமயத்தில் மிகுந்திருந்த வண்டிகளும் போய்விட்டன. வெளியில் வந்தவுடனேயே எங்களை ஓரிரு வண்டிக்காரர்கள் கேட்டார்கள். ஆனால் அப்போது, 'வீட்டிலிருந்து எங்கள் வேலையாள் வந்திருப் பான். அவன் வண்டியை ஏற்பாடு செய்திருப்பான்' என்று பாட்டி அவர்களுக்குப் பதிலிறுத்தாள். அதன் பிறகு ஒரு வண்டிதான் மிகுந்திருந்தது. அந்த வண்டிக்காரன் ஒரு ரூபாய் கேட்கலானான். இறுதியில் வருத்தமும், வேதனையும் மிகுந்து பாட்டி ஒரு மாட்டு வண்டியை ஏற்பாடு செய்ய, ஒருவாறாக நாங்கள் எங்களுடைய வீட்டிற்கு வந்து சேர்ந்தோம். 'எங்க ளுடைய' என்றால் பாட்டியின் வீடுதான் என்பது வாசகர்களின் கவனத்திற்கு நிச்சயம் வந்திருக்கும். பிறந்ததிலிருந்து எந்த வீட்டில் சொந்த வீடுபோல் பழகியிருக்கிறேனோ, அந்த வீட்டை எனதாகவே நான் கருதினால் அதில் ஆச்சரியம் என்ன?

எங்களது இவ்வீடு சதாசிவப்பேட்டையில் இருந்தது. ஆனால் பெருஞ் சாலையில் இருக்கவில்லை. வண்டியின் அசைவில் எங்க ளுடைய எலும்புகளைக் குலுக்கிய வண்ணமும், அசைந்தாடும் மாடுகளின்மீது வசைமாரி பொழிந்த வண்ணமும் வண்டிக்காரன் ஒருவாறாக எங்கள் வீட்டு வாசலில் எங்களைக் கொண்டு விட்டான். வண்டியிலிருந்து கீழே அடியை வைத்ததிலிருந்து குதித்த வண்ணமே நான் வாசலைக் கடந்து தாழ்வாரத்தை அடைந்தேன். உள்ளே காலை வைத்ததுமே பார்த்தால் ஊஞ்ச லின்மீது தாத்தா உட்கார்ந்திருந்தார். உட்கார்ந்தவாறே அவர் தூங்கி வழிந்துகொண்டிருந்தார் என்று சொல்வது உண்மைக்கு முற்றும் பொருந்தும். அவர் அருகில் கங்கி (என்னைவிட ஒன்றரை வயது பெரியவளான எனது சகோதரி) உட்கார்ந்திருந்தாள். நான் முன்னேக்கிச் சென்றதுமே கங்கி, 'தாத்தா தாத்தா! தம்பி, அம்மா, பாட்டி வந்திருக்கிறார்கள்'

என்று தாத்தாவிடம் சொன்னாள். இருந்தபோதிலும் தாத்தா தனது கற்கண்டு போன்ற தூக்கத்தின் ஆனந்தத்தில் மூழ்கியிருந்தார். ஆனால், திண்ணைக்கு வந்ததும் பாட்டி இடிமுழக்கம் செய்யத் துவங்கியதும் அவர் விழித்துக்கொண்டார். என்ன ஆயிற்று என்று அவர் கேட்கலானார். வேலையாள் இரயிலடிக்கு வரவில்லை என்ற காரணத்தால் இவ்வளவு கோபம் என்பதை ஒருவாறு புரிந்துகொண்டு, 'அவனைப் போகச் சொல்லியிருந்தேன். அவன் போயிருப்பான்; நீங்கள்தான் அவசரப் பட்டுக்கொண்டு வந்திருப்பீர்கள்' என்று பொருள்படும்படி சில வார்த்தைகளை முணுமுணுத்த வண்ணம் அவர் மீண்டும் தமது பழைய மயக்க நிலைக்குத் திரும்பினாற்போல் தோன்றியது.

பாட்டி சிறிது நேரம் அங்குப் படபடத்துப் பேசிவிட்டுப் பிறகு உள்ளே சென்றாள். அவளுடன் கங்கியும், நானும் சென்றோம். அதற்குள் எனது தாயைவிடக் கொஞ்சம் பெரியவளான ஓர் அம்மாள் வெளியில் வந்தாள். உடனேயே அவள் மீதும் வசைமாரி பொழிந்தாள் பாட்டி. இறுதியாகச் சிறிது நேரத்தில் அந்த வேலையாளும் எங்கோ வெளியிலிருந்து திரும்பி வந்தான். வந்ததும், 'இஸ்டேசனில் எனக்கு ஒருத்தரும் தெரியல்லீங்க' என்று சொன்னான். அப்பொழுது இதுவரை இருந்த வருத்தம் எல்லை கடந்து போயிற்று. ஏனெனில், அவன் இரயில் நிலையத்திற்குப் போகாமலேயே வீடு திரும்பி வந்து இரயிலடியில் ஒருவரையும் காணவில்லை என்று சொல்லிக் கொண்டு வந்திருக்கிறான் என்று இயற்கையாகவே எல்லாருக்கும் பட்டது. எல்லாரையும் வேண்டிய அளவு பேசிப் பேசியும், எல்லாவற்றிற்கும் மேலாகத் தனது தலையெழுத்தை நொந்து கொண்டும், இறுதியில் ஓய்ந்து போய்ப் பாட்டி கீழே உட்கார்ந்தாள். சிறிது நேரத்திற்கெல்லாம் ஆனந்தி மெதுவாக அவளிடம் குளிப்பதற்காக 'எழுந்திருங்கள்' என்று சொல்லலானாள். பாட்டியும் இவ்வளவு நேரம் பேசிப் பேசிக் களைத்திருந்தாள். அதனால் அதிகம் ஒன்றும் பேசாமல் அவள் மௌனமாக எழுந்து சென்றாள்.

நானும் கங்கியும் விளையாடுவதற்காகத் திண்ணைக்குச் சென்றோம். அன்றைக்குத்தான் நான் ஊரிலிருந்து வந்திருந்ததால் உடனடியாகச் சண்டை போட முடியவில்லை என்பதனால் என்று சொல்லுங்கள்; இல்லை, ஐந்து நாட்களுக்குப் பின்னர் அவளைச் சந்தித்துக்கொண்டிருந்தேன் என்பதனால் என்று

சொல்லுங்கள். எதுவாக இருந்தாலும் எனது உள் மனம் அவ ளுடன் சண்டை போடுவதை விரும்பவில்லை. ஆகையினால் நாங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் மிகவும் நெருங்கி உட்கார்ந்து அன்பினால் குழையக் குழையப் பேசத் தொடங் கினோம். பல அறைகள் கொண்ட பம்பாயின் அந்த உயர்ந்த மாபெரும் கட்டிடங்களைப்பற்றி அவளுக்கு நான் வருணித்துச் சொன்னேன். இராவ்ஜீயின் அந்த அறைகளை வருணித்துச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது இருந்தாற்போலிருந்து எனக்கு அக்கடிதத்தின் நினைவு வந்தது. தொடர்ந்தாற்போல் அது எனது கால் சட்டைப் பையில் இருக்கிறதா என்று துழாவிப் பார்க்கத் துவங்கினேன். அன்று நான் என் கால் சட்டைப் பைகளைப் பத்திரப்படுத்திக் கொண்டிருந்தேன். அவற்றுள் ஏதோ ஒரு பொருளை ஒருவருக்கும் தெரியாமல் ஒளித்துக்கொண் டிருந்தேன் என்பதெல்லாம் கங்கு அக்காவின் கவனத்திற்கு வந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. மெள்ள மெள்ள தூங்கும் நேரம் நெருங்கியது. நாள் முழுதும் செய்த குறும்புத் தனத்தின் காரணமாக ஓய்ந்து போனதால், நான் கண் அயர ஆரம்பித்தேன். கடைசியில் வேறு வழி இல்லை என்று கருதி, கால் சட்டையைப் போட்டுக்கொண்ட வண்ணமே நான் தூங்கிவிட்டேன். இரவில்தான் என்ன ஆழ்ந்த தூக்கம்!

காலையில் பாட்டி எழுப்பும்வரை நான் இந்த உலகத்தில்தான் இருந்தேனா, இல்லையா என்பது சிறிதளவும் எனக்குத் தெரிய வில்லை. காலையில் எழுந்தேன். அந்த உறையின் நினைவே எனக்கு வரவில்லை. ஆனால் ஏழு அல்லது எட்டு மணிக்கு வண்ணான் வந்தபொழுது, எனது கால் சட்டையைச் சலவைக்குப் போடுவதற்காக அதை எடுத்துக் கொடுக்கும்படி பாட்டி கேட்டாள். அப்பொழுது முதலில் நான் தரவும் இல்லை. ஏன் தர முடியாது என்பதன் காரணத்தைச் சொல்லவும் இல்லை. பின்னர் கொடுத்தாலன்றி வேறு வழி இல்லை என்ற நிலையில், உறையை எடுத்து ஒளித்தாவது வைக்கவேண்டும் என்று ஓடி ஒரு மூலைக்குச் சென்றேன். ஆனால் இது என்ன? சட்டைப் பையில் கையைப் போட்டுப் பார்த்தால் அங்கு உறையையே காணோம்!

# 7. முழு ஏமாற்றம்!

மொத்தத்தில் எதற்காக என்று அளவற்ற முயற்சிகள் செய்தேனோ, அந்த உறையா என் சட்டைப் பையிலிருந்து மறைய வேண்டும்? அதுவும் அதைக் கங்கு அக்காவா எடுத்துக்கொள்ள வேண்டும்? அவளைத் தவிர வேறு யாருமே அதை எடுத்திருக்க முடியாது என்று எனக்கு முழு நம்பிக்கை இருந்தது. இதைப் போல் இழிவான காரியம் வேறு இல்லை. இதைவிட அந்த உறை என் கைக்கு வராமலேயே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! இப்போது அது மறுபடியும் என் கையில் கிடைப்பதற்கு என்ன சூழ்ச்சி செய்யவேண்டும்? கங்கு அக்காவை . . . கங்கு மக்காவை. . . கங்கி பிங்கியைப் போய்க் கடிப்பதா—பிறாண்டுவதா, உடலைக் கிள்ளி எடுப்பதா . . . என்ன செய்வது. . .? எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. அது எங்கே போயிற்று, எப்படிப் போயிற்று என்பதைப்பற்றி நான் சிந்தனையைக் கிளறியவாறு இருந்தேன். அந்த அக்கா—மக்கா தனியாக என் கையில் சிக்கியதுமே அவள் முதுகுப் புறமாகச் சென்று, 'எனது சட்டைப் பையிலிருந்த உறை எங்கே?' என்று நான் அவளை நன்றாக மிரட்டிக் கேட்டேன். கேட்டு, அவள் பதில் சொல்ல வாயைத் திறந்தாளோ இல்லையோ, உடனேயே அவளைப் பிடித்துக் குலுக்கி, அவள் தோளை ஒரு கடி கடித்தேன், பாருங்கள்! அது என் பற்களுக்கும் அவள் தோளுக்குந்தான் தெரியும். நான் அவள் தோளைக் கடித்ததும் அவள் வீரிட்டுக் கத்த, அதைக் கேட்ட அம்மா என் முதுகுப்புறமாக வந்து என்னை ஓர் அறை அறைந்தாள். ஒரே அறையோடு நிற்கவில்லை. அவள் என் காதைப் பிடித்து நன்றாக முறுக்கினாள். என் வாயிலும் பளார் என்று அறைந்தாள். அந்த அடியினால் என் பற்களில் மிகுந்திருந்த கொஞ்ச நஞ்ச ஆவேச உணர்ச்சியின் நடுக்கமும் மறைந்து போய்விட்டது. அது மட்டுமல்ல. பற்களே மறைந்துபோகும் நிலைகூட வந்திருக்கும். ஆனால் விசித்திரம் என்ன என்றால், யாரை நான் நன்கு கடித்துவிட்டேனோ, எனக்கு அடி கிடைப்பதைப் பார்த்து யார் மகிழ்ச்சி அடைந்திருக்க வேண்டுமோ, மேலும் அடி கிடைக்க யார் வழி செய்ய வேண்டுமோ,

அதே கங்கு அக்கா தனது அழுகையைச் சட்டென்று நிறுத்தி என்னை அடியின் பிடியிலிருந்து விடுவிப்பதற்காக முன்னுல் விரைந்தாள். அம்மாவின் கையைப் பிடித்து, 'இது என்ன?' என்று சொல்ல ஆரம்பித்தாள். அவளுடைய அச்செயலின் மதிப்பை அந்தச் சமயத்தில் நான் உணரவில்லைதான். ஏனெனில் அந்தத் தருணம் இதைப்பற்றி யோசிப்பதற்கு ஏற்றதாக இருக்க வில்லை. ஆனுல், அவள் அம்மாவின் கையை ஒரு பக்கம் ஒதுக்கிய காரணத்தால் எனக்கு அழுது புரண்டாயினும், அம்மாவின் பிடியிலிருந்து தப்பி ஓடிப்போகும் அளவிற்கேனும் லாபம் ஏற்பட்டது. 'இவளே எனது உறையை ஒளித்து வைத்து எனக்கு அடியும் வாங்கிக் கொடுத்தாள். அதனுல் அவளுடன் "டூ" விட்டு, இந்த வாழ்வில் மறுபடியும் அவளுடன் என்றுமே பேசக்கூடாது, அவள் அருகில்கூடப் போகக்கூடாது, அவளைத் தொடவே கூடாது, அவளும் என்னைத் தொடவே அனுமதிக்கக்கூடாது' என்று நிச்சயம் செய்துகொண்டேன். மேலும், அம்மாவிட மிருந்து எனக்கு அடி வாங்கிக் கொடுத்ததால், பாட்டியிடம் சொல்லி நானும் அவளுக்கு அடி வாங்கித் தர வேண்டும் என்றும் நிச்சயம் செய்துகொண்டேன். ஆனுல், எல்லாம் வீணுயிற்று.

என்னை நன்ருக அடித்ததால் அழுதுகொண்டே பாட்டியிடம் போகவேண்டும் என்று முழு வீட்டையும் தேடி அலைந்தேன். ஆனுல் பாட்டியை எங்குமே காணவில்லை. அப்போது இன்னும் அழுதால், அம்மா இன்னும் சீறுவாள். அதைத் தவிர வேறு எந்தவித லாபமும் ஏற்படப்போவதில்லை என்று விரைவில் புரிந்துகொள்ள வேண்டியிருந்தது. எங்களுடைய ஆனந்தி மாமி இருந்தாள். அவளுக்கு என்னிடம் கொஞ்சம் அன்பு உண்டு. ஆனுல் அவளும் எங்கும் தென்படவில்லை. அவள் இருந்திருந் தாலும் குறிப்பிடத் தகுந்த வகையில் பயனேதும் ஏற்பட்டிருக் காதுதான். ஏனெனில், நான் விரும்பும் அளவிற்கு அவள் கங்கு அக்காவை அடித்திருக்கமாட்டாள். அப்போதைய சூழ்நிலை யில், ஒரு மூலையில் போய்ப் பேசாமல் உட்காருவதைத் தவிர வேறெதுவும் என்னுல் செய்ய முடியவில்லை.

இருளடர்ந்தமாடி இத்தகைய சந்தர்ப்பங்களுக்கு ஏற்ற புகலிட மாக இருந்தது. ஆகவே, இப்பொழுது அங்கே போய் உட்கார வேண்டும், யார் எவ்வளவு அழைத்தாலும் கீழே போகவே கூடாது என்ற உறுதியுடன் அங்குப் போய் அமர்ந்துகொண்டேன். ஆனுல், என்னை யாராவது கூப்பிடுகிருர்களா என்பதை

அறிவதிலேயே எனது கவனமெல்லாம் இருந்தது. எங்கள் வீட்டில் இடம் பெரிதாகவும், ஆட்கள் குறைவாகவும் இருந்தமையால், அந்த மாடியில் ஒரு குடி வைத்திருந்தார்கள். அந்தக் குடித்தனக்காரர்கள் மேலும் கீழும் வந்து போய்க்கொண்டிருப்பார்கள். அவர்கள் காலடிச் சத்தம் கேட்டதுமே என்னைச் சமாதானப் படுத்தி அழைத்துச் செல்லத்தான் யாரோ வருகிறார்கள் என்று எனக்குத் தோன்றும். இப்படித் தோன்றியதும் என்னதான் ஆனாலும் கீழே போகக்கூடாது என்று மனத்தை இன்னும் உறுதிப்படுத்திக்கொண்டு இன்னும் அதிகமாகச் சுருங்கி உட்காருவேன். ஆனால், அதற்குள் வந்தவர் அந்தக் குடியிருப்பவர் வீட்டைச் சேர்ந்தவர் என்று தெரிந்து, மீண்டும் மனம் தளர்ந்து போய் உட்காருவேன். இவ்வாறு ஓர் அரைமணி நேரம் சென்றது. ஆனால் வீட்டிலிருந்து ஒருவர்கூட வரவில்லை. ஒருவராவது வந்தால்தானே! அப்போது மெதுவாக மாடிப் படியின் அருகில் சென்று செவிமடுத்துக் கேட்க வேண்டும் என்று தோன்றியது. என்னைப்பற்றி யாரேனும் ஏதேனும் பேசுகிறார்களா, இல்லையா என்றாவது பார்க்கவேண்டும் என்று மெள்ள மெள்ளப் படிகளில் பாதிவழி இறங்கிச் சென்றேன்.

அப்பொழுது அறையில் யாரோ பேசிக்கொண்டிருந்ததுபோல் தோன்றியது. செவிமடுத்துக் கேட்டேன். பின்வரும் வார்த்தைகள் காதுகளில் விழுந்தன: 'அம்மா, இப்படி என்னத்துக்காகம்மா அழுகிறாய்? தம்பி எங்கே காணவில்லை?'

இந்தக் கடைசி வார்த்தைகளைக் கேட்டதும் எனக்குச் சிறிது ஆறுதலாக இருந்தது. அம்மா, அவளுடைய அடி காரணமாக நான் எங்கோ அழுதுகொண்டிருப்பேன் என்று சீக்கிரமே என்னைத் தேடி வந்து என்னைச் சமாதானப்படுத்துவார்கள் என்று தோன்றினதால், மீண்டும் பழைய இடத்திற்குச் சென்று சுருங்கி உட்கார வேண்டும் என்று நினைத்தேன். அதேபோல் நான் செய்யவே இருந்தேன். ஆனால் அதற்குள் பின்வரும் வார்த்தைகள் காதில் விழுந்தன: 'இருப்பான் கடன்காரன், எங்கேயாவது போய் உட்கார்ந்திருப்பான் சுடுகாட்டில். அந்தப் பாவிப் பயலின் பெயர்கூட வேண்டாம்போல் இருக்கிறது.'

அம்மாவின் அந்த வார்த்தைகளைக் கேட்டு என் மனம் என்ன பாடுபட்டிருக்குமென்று நீங்களே ஊகித்துக்கொள்ளலாம். என் மனக்கோட்டைகள் யாவும் இடிந்து விழுந்தன. ஆனால் அம்மாவின் பேச்சிற்குப் பிறகு கங்கு அக்கா சொன்ன வார்த்தைகளைக்

கேட்டதும் அடியோடு சாயவிருந்த அந்தக் கோட்டையின் அஸ்திவாரமாவது அழியாது நின்றது. மேலும் அவள், 'அவன் மாடியில் இருக்கிருனு என்று பார்க்கிறேன் நான்' என்று சொல்லிப் படிகளை நோக்கி அடியெடுத்து வைக்க முற்பட்டாள்.

அதைக் கேட்டதும் குலைந்த எனது மன நிலை மீண்டும் தனது பழைய நிலையை அடைந்தது. அவளது முதல் காலடி மாடியின் கீழ்ப்படியில் விழுந்ததைக் கேட்ட மாத்திரத்தில், நான் அங்கிருந்து ஓடிச் சென்று, பழைய இடத்தை அடைந்து ஒடுங்கிச் சுருங்கி உட்கார்ந்தேன். கங்கு அக்கா வந்தாள். முன் மாடியில், உள் அறையில், இடையில் இருந்த மாடிப் பகுதியில், அருகிலுள்ள மாடியின் வலப்புறப் பகுதியில், அந்தக் குடி இருந்த பக்கத்தில்—இவ்வாருக அவள் பல இடங்களிலும் சென்று பார்த்தாள். ஆனுல் என்னைத் தேடிக் கண்டுபிடிப்பது அவ்வளவு சுலபமா என்ன? ஒரேயடியாக இருளடைந்து கிடந்த ஒரு மூலையில் அல்லவா நான் உட்கார்ந்திருந்தேன். இறுதியில் ஏமாற்றம் அடைந்துதானே என்னவோ அவள் இருள் கப்பிய மாடிப்பக்கம் வந்து அங்கும் இங்கும் பார்த்தாள். நான் பேச்சு மூச்சு இல்லாமல் இன்னும் ஒடுங்கி அமர்ந்தேன். அவள் என்னைப் பார்க்கவேண்டும், 'கீழே போகலாம் வா' என்று சொல்ல வேண்டும் என்று உள்ளூற ஆசைப்பட்டேன். ஆனுல் அந்தக் குருடிக்கு நான் தெரியவே இல்லை. கடைசியில் அவள், 'என்னடீ செய்வது இப்போ? எங்கே போனுன் என்று யாருக்குத் தெரியும்?' என்று பெரியவர்களைப் போல் நிராசையுடன் கூறியவாறு, அங்கிருந்து போகவும் கிளம்பிவிட்டாள்.

அப்போதும்கூட நான் எனது அகம்பாவத்தை விடவில்லை. கதவு வரை அவள் சென்றதும், அடியேனுக்குத் தோன்றியது, 'இனிப் பயனில்லை, நானுகவே முன்வந்து எனது இருக்கையைக் குறிப்பால் தெரிவிக்க வேண்டியதுதான்' என்று. உடனடியாகச் சிறிது இருமி, நான் அங்கிருப்பதை அறிவித்துக்கொண்டேன். முதல் முயற்சியில் அதன் ஒலி அவள் செவிகளை எட்டவில்லையென்று தோன்றியது. ஏனெனில், இரண்டொரு படிகள் இறங்கும் அவளது காலடிச் சத்தம் கேட்டது. பிறகு என்ன? இனி ஏதாவது பேசினுலொழிய வேறு வழியில்லை. நான் தடதடவென்று படிக்கட்டின் அருகில் சென்று சினத்துடன் சொன்னேன்: 'ஏண்டீ அக்கா கொக்கா! என்னைத் தேடி ஏன் வந்தாய் நீ? நான் உனக்கு அகப்படமாட்டேன் போ. நீ

என்னிடம் பேசாதே, இனி இந்த வாழ்வில் அடியோடு, ஒரு முறைகூட உன்னோடு என்றுமே பேசப்போவதில்லை என்று நிச்சயம் செய்துள்ளேன். ஜாக்கிரதை! என்னைப் பேச வைத்தா யானால் பார்த்துக்கொள்! என்னை வேண்டுமென்றே அடி வாங்க வைத்தாய் இல்லையா?' இவ்வளவு பேச்சு போதுமானதாக இருந்தது. இதனால் நான் வேண்டியது சாத்தியமாகிவிடும் என்று எண்ணி, மீண்டும் பழைய இடத்தில் போய் உட்கார்ந் தேன். கங்கு அக்கா என்னைச் சமாதானப்படுத்த நிச்சயம் வருவாள் என்று நினைத்தேன். எதிர்பார்த்தபடியே அவளும் வந்தாள். நான் இன்னும் சுருண்டு ஒதுங்கினேன். 'உன்னிடம் இனி இந்த வாழ்வு முழுவதும் பேசப்போவதில்லை. நீ வெறுமனே என்னைப் பேச வைக்காதே' என்று குறைந்தபட்சம் இருபத்தைந்து முறைகள் அவளிடம் சொல்லியிருப்பேன். இருந்தபோதிலும் மும்முறை அவள், 'தம்பி, ஏனடா இப்படிச் செய்கிறாய்? நான் போய்ச் சொன்னேனடா அம்மாவிடம்? நீ என்னை எப்படிக் கடித்துவிட்டாய்? அதனால் நான் கத்தினேன், அதைக் கேட்டு அம்மா ஓடிவந்தாள். அவளாகவேதான் உன்னை அடித்தாள். அதற்கு நான் என்ன செய்ய முடியும்? பார்க்கப் போனால் நான்தானே உன்னை விடுவித்தேன். வா, போகலாம் கீழே. சாப்பிடும் நேரம் ஆயிற்று. பாட்டியும் வருவாள் இப்போது. கோவிலுக்குப் போயிருக்கிறாள் அவள்' என்றெல் லாம் அக்கா எவ்வளவுக்கெவ்வளவு என்னை வேண்டினாளோ, அவ்வளவுக்கவ்வளவு எனது வீம்பு இன்னும் அதிகமாகிக் கொண்டே சென்றது. அவள்தான் பாவம், எவ்வளவு எளிமை யும், இனிய சுபாவமும் கொண்டவள்!

அவள் என்பிடிவாதத்தை மாற்றப் பல வழிகளில் முயன்றாள். நியாயமாகப் பார்க்கப்போனால் என்மீது சினம்கொள்ளும் உரிமை கூட அவளுக்கு இருந்தது. நான் எத்தனை ஆழமாக அவளைக் கடித் திருந்தேன்! இன்றும் அவளுடைய தோளில் அந்தக் காயத்தின் தழும்பு இருக்கிறதென்றால், கடித்த அச்சமயத்தில் அக்காயம் எவ்வளவு பயங்கரமானதாக இருந்திருக்க வேண்டும் என்பதை வாசகர்களே கற்பனை செய்துகொள்ளலாம். இருந்தும், அவை எல்லாவற்றையும் மறந்து என்னைச் சமாதானப்படுத்த அவள் வர வேண்டும் என்றால், அவள் எத்தனை மேன்மையான இயல் புடையவள் என்பது தெரிகிறதல்லவா?

அவள் எவ்வளவுக்கெவ்வளவு என்னைச் சமாதானப்படுத்த முயன்றாளோ, அவ்வளவுக்கவ்வளவு நான் பிடிவாதமாக விட்டுக் கொடுக்காமல் இருந்தேன். உண்மையில் நான் வேண்டுமென்றே அவளை, 'நீ இப்படித்தானுக்கும், அப்படித்தானுக்கும்' என்றெல் லாம்கூடச் சொன்னேன். 'நீ வரவில்லை என்றால் நானும் சாப்பிட மாட்டேன்' என்று அவள் சொன்னாள். ஆனால், அதற்கும் அசைந்து கொடுக்காமல், 'சாப்பிடமாட்டாய்? போயேன், என்னிடம் எதற்குச் சொல்கிறாய்?' என்று நான் சொன்னேன்.

அவள் எவ்வளவுதான் நல்லவள் என்றாலும், அவளும் என்னைப் போல் சிறியவள் தானே? என்னைவிடச் சிறிதளவேதான் பெரியவள். எவ்வளவு நேரந்தான் பொறுமையுடன் இருப்பாள்? இவ்வளவு முயன்றும் நான் கேட்கவில்லை என்பதைக் கண்டதும், இறுதியில் அவள், 'என் பேச்சைக் கேட்கமாட்டாய் இல்லையா? சரிதான் போ!' என்று சொல்லிப் போகத் தொடங்கினாள்.

எனக்கோ அவள் இன்னமும் நிறைய வற்புறுத்தவேண்டும் என்ற ஆசை. ஆனால் அதற்கும் ஓர் எல்லை கிடையாதா? அதற் குள் கீழேயிருந்து பாட்டி அவளைக் கூப்பிட்டாள். பாட்டியின் அக்குரலைக் கேட்டதும் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. இன்னும் பிடிவாதம் செய்தால் இப்பொழுது நல்ல வேடிக்கை யாக இருக்கும் என்று எனக்குத் தோன்றியது. கங்கு அக்கா விற்கு அடி வாங்கிக் கொடுக்கவேண்டும் என்ற எனது மன விருப்பம் கைகூடும் என்று நான் அங்கேயே சப்பணமிட்டு உட்கார்ந்தேன். மேலும், கங்கு அக்காவை உந்தித் தள்ளாத குறையாகச் சொன்னேன்: 'போயேன்! கிளம்பு, கிளம்பு! என் னுடன் பேசவேண்டாம்.' அவள் பாவம், மனம் தளர்ந்து போயிருந்தாள். அவளுக்கும் வெறுத்துப் போயிருந்தது. ஆகவே, உடனே கிளம்பிச் சென்றுவிட்டாள். ஆனால் படி இறங்கிப் போகும்பொழுது மட்டும் அவள், 'தம்பி வரமாட்டேங்கிறும்மா, அவனுக்கு எவ்வளவு சொன்னேன்' என்று பாட்டியிடம் முறை யிட்டுக்கொண்டே போனாள். அதைத் தொடர்ந்தாற்போல், 'வரவே வேண்டாம் அவன். நான் எல்லாம் கேட்டேன் இப் போது. எங்கே கடித்தான் காட்டு பார்க்கலாம்! அடியம்மா! இருக்கட்டும், இப்போது அவன் அங்கேயே. அவனுக்கு இன்றைக் குச் சாப்பாடே போடவேண்டாம். நீ வா. அவனை மறுபடியும் நாளையிலிருந்து பள்ளிக்கூடத்தில் மாட்டிவிடுகிறேன். அவனுக்கு ரொம்பவும் துளிர்த்துப் போய்விட்டது இப்போதெல்லாம்.

அவனே அழைத்துவர யாருமே போகாதீர்கள்!' என்ற வார்த்தைகள் பாட்டியின் வாயிலிருந்து வெளிப்பட்டன. பாட்டி! அவளுங்கூட இப்படிச் சொல்வாள் என்று நான் சிறிதும் நினைத்திருக்கவில்லை. ஆனால் அவள்கூட இவ்வாறு பேசினாள். இனி என்ன செய்வது? மொத்தத்தில் எனக்கு முழு ஏமாற்றந்தான்.

மேலும், ஐந்து பத்து நிமிடங்கள் காத்திருந்தபின், நானே எழுந்து கீழே செல்லவேண்டிய நிலை ஏற்படும் என்று தோன்றியது. 'தன் வினை தன்னைச் சுடும்' என்ற வகையில்தான் எல்லாம் நடந்திருந்தன. இப்பொழுது மீண்டும் கங்கு அக்கா வந்து ஒரு முறையாவது சொன்னால், போகலாம் என்று மனத்தில் உறுதியாக எண்ணிக்கொண்டு, யாரேனும் வருகிறார்களா என்று காதை நிமிர்த்திக் கேட்க ஆரம்பித்தேன். யாரேனும் வந்து 'வா' என்று சொல்லும்வரை இடத்தைவிட்டு அசைவதில்லை என்ற உறுதியான தீர்மானம். அதற்குள் படிக்கட்டில் யாருடைய காலடிச் சத்தமோ கேட்டது. அநேகமாக என்னை அழைத்துச் செல்லத்தான் யாரோ வரவேண்டும் என்று தோன்றியது. ஆனால் அது யார்? நிச்சயம் கங்கு அக்கா இல்லை. பாட்டி—ஆமாம், அவளாகத்தான் இருக்கும். வந்துகொண்டிருந்தவர் மேலே வந்து கதவருகில் இருந்தே, 'என்னடா, வரப் போகிறாயா இல்லையா கீழே? இல்லை இன்னும் . . . '

அம்மா மேலே என்ன சொல்வாள் என்பது எனக்கு முன்பே தெரிந்திருந்தது. இந்த வார்த்தைகளை அவள் சொன்ன தோரணையே எனக்குக் குலைநடுக்கம் ஏற்படுத்தியது. உடலெல்லாம் வெடவெட என நடுங்க நான் பேசாமல், இருந்த இடத்திலிருந்து எழுந்தேன். ஏனெனில், எனக்கு முன்பு நடந்ததன் நினைவு வந்தது. ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவள் முன் வந்து மெதுவாகக் கீழே நழுவிவிடவேண்டும் என்று எண்ணினேன். அதற்குள் அவள் என் கையைப் பிடித்துவிட்டாள். அப்புறம் என்ன செய்வது? மௌனமாக அவளுடன் கீழே போகலானேன். ஆனால், கீழே இப்போது ஒருவருடனும் பேசுவதில்லை என்று மனத்துள் உறுதி செய்துகொண்டேன். வீட்டில் இருப்பவர்கள் எல்லோரும் மிகவும் கெட்டவர்கள், நான் போய் மதித்துப் பேசத் தகுந்த வகையில் ஒருவருமே இல்லை என்று தோன்றியது. கொண்ட உறுதிப்படியே சாப்பிடும்போது யாருடனும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. சாப்பிட்டு முடிந்தவுடனேயே மீண்டும் எனது பழைய இடத்திற்கே போய்விட

வேண்டும் என்று மனத்தில் எண்ணிக்கொண்டேன். ஆனால், 'இப்பொழுது மேலே (இருட்டில்) நீ போகவேண்டாம்' என்று பாட்டி ஒருபக்கம் சொல்ல, அப்படியிருந்தும் நான் மேலே போகத் தொடங்க, உடனேயே மறுபக்கம் அம்மாவும் தடுத்தாள். பாட்டி இவ்வளவு கொடூரமாக ஆவாள், அதுவும் அவளது கொடூரம் இவ்வளவு நேரம் நீடித்து நிற்கும் என்று நான் எதிர்பார்த்திருந்தவனே அல்ல. அதனால் மிகுந்த விசித்திர நிலையை நான் அநுபவித்தேன். என்ன செய்வது? பேசாமல் அங்கேயே உட்கார்ந்தேன். பாட்டி சாப்பிட்டு முடித்தாள். அப்போது அவள் என்னிடம் சொன்னாள்: 'கொஞ்சம் பொறு. இன்று அவளை நீ கடித்தாயல்லவா? அதனால் பழையபடி உன்னைப் பள்ளிக்கூடத்தில் தள்ளிவிடுகிறேன், பார்!'

பம்பாய்க்கு வருவதற்கு முன்பு சில நாட்களுக்காக என்னைப் பள்ளிக்கு அனுப்பிக்கொண்டுதான் இருந்தார்கள். இப்பொழுது பம்பாயிலிருந்து திரும்பி வந்ததும் ஓரிரண்டு நாட்களில் பள்ளிக்கூடத்திற்குச் செல்லவேண்டி வரும் என்று முன்பிருந்தே எனது உள்ளத்தில் பரபரப்பு ஒன்று இருக்கவே செய்தது. அதனால் அது ஒன்றும் பெரிதாகப் படவில்லை. இருந்தாலும் அன்று பள்ளிக்கூடம் போக மனம் இருக்கவில்லை. அதனால் இப்பொழுது என்ன செய்வது, எப்படித் தப்பித்துக்கொள்வது என்று ஆகிவிட்டது.

பள்ளிக்குப் போவதைத் தவிர்ப்பதற்குப் பாட்டியின் பக்கபலத்தைத் தவிர வேறு வழியே இல்லை. ஆனால் இன்றோ, பாட்டி 'அருகில் வா' என்றுகூட அழைப்பவளாக இல்லை. அப்படிப்பட்ட நிலையில் அழுது அலறிப் பாசாங்கு செய்தாலும் பலன் இருக்காது என்பதை நான் அறிந்திருந்தேன். பாட்டி இப்போதுதான் சாப்பிட்டு எழுந்திருந்தாள். சிறிது படுத்துக்கொள்வாள். அச்சமயத்தில் அவள் பின்பக்கமாகச் சென்று சிறிது கொஞ்சிக் குலாவிப் பேச்சுக் கொடுப்போம்! இவ்வாறு நமது வேலையை முடித்துக்கொள்வோம் என்ற நிச்சயத்தில் இருந்தேன். ஆனால் அன்று அவளுக்கு விளக்குத் திரியோ என்னவோ போடவேண்டிய வேலை மிகுந்திருந்தது. பம்பாய்க்குச் சென்றதன் காரணமாக, இப்போது அவற்றைச் செய்யவேண்டும் என்று சொல்லி, அன்றைக்குப் பாட்டி, அம்மா, ஆனந்தி மாமி எல்லோரும் திரிகளைச் செய்வதற்காக உட்கார்ந்துவிட்டார்கள். ஆகவே, முழு ஏமாற்றம் அடைந்து அழுது புரண்டு முணுமுணுத்துக்கொண்டே அன்று பள்ளிக்குப் போகவேண்டி வந்தது.

# 8. இது என்ன ஆயிற்று?

இவ்வாறு சமாதானமற்ற ஒரு மனநிலையில், நான் பள்ளிக்கூடத்திற்குக் கிளம்பிச் சென்றேன். பள்ளியை நான் நெருங்கிய சமயத்தில் பள்ளி அநேகமாக நிரம்பியிருந்தது. எங்களுடைய பேராசிரியர், பெரிய 'சர்' மட்டும் இன்னும் வரவில்லை என்பது வெகு தூரத்திலிருந்தே தெரிந்துவிட்டது. பையன்களின் லூட்டி அதைத் தெளிவாக எடுத்துக் காட்டியது. இத்தகைய குழப்ப நிலை எனக்கு மிகவும் பிடித்த ஒன்று. ஏனெனில் இப்படிப்பட்ட வேளையில் போனால் நம்மீது யார் கவனமும் இருப்பதில்லை.

ஆனால் பள்ளியில் நான் காலை வைத்ததுமே, விநாயக்கின் கட்சியைச் சேர்ந்த ஒரு பையன் கத்திச் சொன்னான்: 'ஹுர்ரேயோ! ஹுர்ரேயோ! இவர் வந்தார் பாருங்கள், பம்பாயிலிருந்து. திரும்பி வருவதாக இருக்கவில்லை அவர். தமது தந்தையாரிடம் போயிருந்தார் அவர். ஹுர்ரேயோ! ஹுர்ரேயோ!'

அவனுடைய அந்த வீர முழக்கத்தைக் கேட்டதுமே, பெரும்பாலான பையன்களின் கவனம் என் பக்கம் திரும்பியது. அப்பொழுது எனக்கு எவ்வளவு சங்கடமாக இருந்தது என்பதை விவரிப்பது கடினம். நான் ஒரேயடியாக வெட்கம் அடைந்து உடல் குன்றிப் போனேன். பம்பாய்க்குப் போகுமுன்பு, மறுபடியும் அந்தப் பிச்சைக்காரப் பையன்களுடன் உட்காரத் திரும்பி வரப் போவதில்லை என்று விநாயக்கிடமும், அவன் கட்சியைச் சேர்ந்த மற்றவர்களிடமும் பெருமை பீற்றிக்கொண்டிருந்தேன். நம் தந்தை பம்பாயில் இருக்கிறார், நாம் இப்போது அவருடன் போயிருக்கப் போகிறோம். திரும்பி இப்போது புனாவுக்கு வரப் போவதில்லை என்று என் உள்ளத்துக்கு உறுதியாகப் பட்டிருந்தது.

மனத்தில் தோன்றியவுடனேயே கணப்பொழுதும் தாமதமின்றி அதை வெளியில் சொல்லிவிடும் வயதாகவும் அது இருந்தது. அதனால் நான் எனது வருங்காலப் போக்கைப்பற்றியும், திரும்பி இங்கு வரப்போவதில்லை என்பதைப்பற்றியும் முறையாகப் பறையறைந்து சொல்லியிருந்தேன். அந்த வீரப் பேச்சின் பின் விளைவுகளைப்பற்றி அப்போது நான் நினைத்துப் பார்த்திருக்கவில்லை. ஆனால் அப்படிப்பட்ட வேளையும் வந்துவிட்டது.

மேலும், முன்பு அத்தனை பெருமை அடித்துக்கொண்டிருந்தேன் என்பதும் எனக்கு இப்போது மறந்து போயிருந்தது. அதற்கும் மேலாக, மற்றவர் எவர்க்கேனும் அதுபற்றிய நினைவிருந்து, அவர் என்னைக் கேலி செய்யும் தருணம் வரும் என்றும் நான் எதிர்பார்த்திருக்கவில்லை. வீட்டில் இருந்தவர்களின் கருணையற்ற தன்மையாலும், தாமதமாகிவிட்ட காரணத்தினால் ஆசிரியரிடமிருந்து அடி வாங்க வேண்டியிருக்குமோ என்ற பயத்தாலும் முன்னதாகவே நிலை குலைந்திருந்த உள்ளத்தை இந்தச் சொற்கள் மேலும் புண்படுத்தின. நான் மிகவும் மனம் குன்றிப் போனேன்.

ஆனால், கணப்பொழுதில் மனத்தை நிலைப்படுத்திக்கொண்டு, நிமிர்ந்து அந்தப் பையனைப் பார்த்தேன். சீற்றத்துடன் கூறினேன்: 'இருக்கட்டும் போயேன். நான் நினைத்தால் வருவேன், நினைத்தால் போவேன். நீ யார் பேசுவதற்கு?' இந்த என் சொற்களினால் பெரும்பயன் எதுவும் ஏற்படவில்லை. விநாயக்கும் அவன் கட்சியைச் சேர்ந்த இன்னும் சிலரும் 'ஹுர்யோ! ஹுர்யோ!' என்று கத்தத் தொடங்கினார்கள். உடனேயே எனது இரத்தம் கொதிக்கத் தொடங்கியது. அதற்குள் ஒரு பையன், 'நான் பம்பாய்க்குப் போகப்போகிறேனே! இப்போது என் அப்பாவிடம் போகப்போகிறேனே! இனிமேல் என்றைக்கும் திரும்பி வரப்போவதில்லையே!' என்று என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டியவண்ணம் இரைந்து சொன்னான். அவன் இவ்வாறு சொல்லி முடித்தானோ இல்லையோ, உடனேயே விநாயக் முன்னால் வந்து சொன்னான்: 'அடே! அப்பா கைவிட்டு விட்டார். அவர் எங்கே வைத்துக்கொள்ளப் போகிறார்?'

என் கட்சியைச் சேர்ந்தவர்களாக இன்று ஒருவர்கூடத் தென்படவில்லை என்பது ஆச்சரியமாக இருந்தது. இருந்த ஏதோ ஒரு சிலரில் ஒருவரும் வாயைத் திறக்கவே இல்லை. அப்படியென்றால், என்னிடம் அவர்களுக்கிருந்த அன்பு நான்கு நாட்களில் குறைந்துவிட்டிருந்ததா என்ன? யார் கண்டது! இருக்கட்டும். விநாயக்கின் அந்தச் சொற்களைக் கேட்டுக் கோபத்தில் நான் என் வசமிழந்தேன். அவனை நோக்கிப் பாய்ந்து, அவன் தொப்பியைக் கிழித்து எறிந்து, அவனது குடுமியைப் பிடித்தேன். அதைக் குலுக்கி இழுக்கவும் செய்தேன். அச்சமயத்தில் நான் கோபத்தில் மிகவும் கண்மூடித்தனமாக நடந்துகொண்டு விட்டேன். சிறிய 'சர்' (சிறிய ஆசிரியர்) பள்ளியில் வந்து உட்கார்ந்திருக்கிறார் என்பதுகூட எனக்குத் தெரியவில்லை.

விநாயக்கின் குடுமியைப் பிடித்திழுத்துக் குலுக்கி அவனைக் கீழே தள்ளவேண்டும் என்பது ஒன்றே என் கருத்தில் ஒன்றியிருந்தது. அதன்படி அவனைக் குலுக்கித் தள்ளத்தான் செய்தேன். என் கையிலிருந்து தன் குடுமியை விடுவித்துக்கொள்ள அவன் முயன்றுகொண்டிருந்தான். எல்லாப் பையன்களும் கத்திக்கொண்டிருந்தார்கள். அதற்குள் தனது கம்மிய குரலை முடிந்தவரை உயர்த்தி, 'அடே, என்னடா இது? என்னடா இது?' என்று சொல்லிக்கொண்டு எங்களுடைய உதவி ஆசிரியர் அங்கு வந்தார். ஆனால் ஒன்றும் பலனில்லை. எங்கள் கலவரம் அடங்கவில்லை. விநாயக் தனது குடுமியை விடுவித்துக்கொண்டு எனது குடுமியைப் பிடிப்பதற்காக முயற்சி செய்துகொண்டிருந்தான். நான் அவனைக் கீழே தள்ளி அவன் நெஞ்சின்மீது உட்கார முயற்சி செய்துகொண்டிருந்தேன். பையன்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆசிரியருடையது ஒன்றும் நடக்கவில்லை. தன்னால் முடிந்த அளவு எங்களை விடுவிக்க முயன்றுகொண்டிருந்தார். ஆனால், அவரால் இயலவில்லை.

நான், விநாயக்கை முழுதும் என் கட்டுக்குள் கொணர்ந்து அவனைக் கீழே தள்ளும் தறுவாயில் இருந்தேன். அதற்குள் எல்லாப் பையன்களின் இரைச்சலும் அடங்கி அவர்கள் திடீரென்று அங்கும் இங்கும் ஓடத் தொடங்கினார்கள். இப்படி இரைச்சல் சட்டென்று அடங்குவதற்கு ஒரே ஒரு காரணந்தான் உண்டு. ஆனால், அப்போது அது என் கவனத்திற்கு வரவில்லை. எனது உள்ளம் ஒரு காரியத்தில் லயித்து இருந்தது. அப்போது எனக்கு வேறு என்ன தெரியப் போகிறது? விநாயக்கைக் கீழே தள்ளுவதற்கு நல்ல வாய்ப்பு கிடைத்தது என்று எண்ணி அந்த வேலையில் நான் மூழ்கியிருந்தேன். அதற்குள் என்ன ஆயிற்று என்பது இருக்கட்டும். ஆனால் விநாயக் எனது குடுமியைப் பிடிக்கும் தன் முயற்சியைத் திடீரென்று கைவிட்டுவிட்டான். அவன் முகம் பயத்தால் வெளிறிப் போயிற்று. மேலும், 'சர்' என்ற வார்த்தையை உச்சரித்த வண்ணம் அவன் பிரமை அடைந்தவன்போல் காணப்பட்டான். அதைக் கண்டவுடனேயே நான் இன்னும் உற்சாகம் அடைந்து, 'இப்போது ஏண்டா கோழை ''சர்''ஐக் கூப்பிடுகிறாய்?' என்று சொல்லி அவனைக் கீழே தள்ளினேன். அவன் கீழே விழுந்ததுமே, அவன் நெஞ்சின்மீது ஏறி உட்கார்ந்து மேலும் செய்யவேண்டியதைக் கவனிக்கும் தறுவாயில் இருந்தேன். அதற்குள் யாரோ என் முதுகில் ஓங்கி

அடித்தார்கள். விநாயக்கின் பக்கத்தைச் சேர்ந்த யாரேனும் இருப்பார்கள் என்று எண்ணி, 'முதுகுப்புறத்திலிருந்து ஏன், முன்னால் வா, கோழைப் பெண்ணே!' என்று சொல்லிக் கொண்டே பின்னால் திரும்பிப் பார்த்தால், அட, இது யார்? எங்களுடைய 'சர்!'

அதற்குள் ஆசிரியர், 'முன்னால் வரேன், கோழைப் பெண், என்ன?' என்று சொல்லி என்னைச் 'சரக்' என்று பிடித்திழுத்து, தரதரவென்று தன்னிடத்திற்குக் கொண்டு சென்றது எப்படி என்பது எனக்குத்தான் தெரியும் அல்லது என் கைகளுக்குத்தான் தெரியும். இப்பொழுது என்னுடைய முடிவே வந்துவிட்டது என்ற நிச்சயம் எனக்கு ஏற்பட்டதில் ஆச்சரியமில்லை. எந்த வகையில் அம்முடிவு வரப்போகிறது என்பதில்தான் சந்தேகம். இதுவரை கிடைத்த, அநுபவித்த தண்டனைகள் எல்லாம் நினைவுக்கு வந்தன. ஆனால், இச்சமயத்து எனது குற்றம் மிகப் பயங்கர மானதாக இருந்தது. அதற்கு ஏற்றாற்போல் அத்தண்டனைகள் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து என்னைத் தீர்த்துக் கட்டுவார் என்று தோன்றியது. இதுவரை தேள் கடிதான் என்றால் இப் போது தேள், பாம்பு, நாகம் போன்ற எனக்குத் தெரிந்த எத்தனை நஞ்சுள்ள பிராணிகள் இருந்தனவோ, அவை யாவும் சேர்ந்து தீண்டினால் எப்படி இருக்குமோ, அதனின்றும் 'சர்' ஒருகாலும் குறைக்கப்போவதில்லை என்று தோன்றியது.

கொலைக்குற்றம் சாட்டப்பட்ட ஒரு கொலையாளி தூக்கு மேடைக்குச் சென்று நிற்பதுபோல், நானும் சிம்மாசனத் திற்குமுன் நின்றேன். ஆசிரியர் கிருஷ்ணமூர்த்தி, கறுத்த உருவம். அவர்முன் நான், ஓநாயின் முன்னால் ஆட்டுக்குட்டி நிற்பதுபோல் நின்றேன். விநாயக் எப்போதோ ஓடிச்சென்று தன்னிடத்தில் உட்கார்ந்துவிட்டான். என்னை இழுத்துச் சென்று, தனது இடத்தை அடைந்து உட்கார்ந்ததும், 'சர்' தனது தலைப் பாகையை வழக்கமான இடத்தில் வைத்தார். அவரது ஆசனத்தை 'அஸிஸ்டென்ட்' சரியாகப் போட்டு வைப்பது வழக்கம். ஆனால் இன்றையக் கலவரத்தில் அவர் மறந்துவிட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அவர் அருகில் இருந்த ஒரு பையனிடம் அதைச் சரியாகப் போடுமாறு கட்டளை இட்டு, பையைக் கீழே வைத்து, பிறகு பெரியார் ஆசனத்தில் வீற்றார். ஓரிரு முறை இருமித் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, 'என்னடா இது?' என்று எல்லாரையும் அதட்டினார். அத்துடன்

தமது அனல் பறக்கும் கண்களை நாலாபுறத்திலும் சுழற்றி, பின்னர் மேலும் உறுமியவண்ணம், 'அஸிஸ்டென்ட்'டைக் கூப்பிட்டார். இவையெல்லாம் நடந்துகொண்டிருந்தபொழுது நான் தலை குனிந்தவண்ணம் நின்றிருந்தேன். 'அஸிஸ்டென்ட்' 'சர்'ரின் முழக்கத்தைக் கேட்டதும் அவர் 'ஓ' என்று பதில் குரலென்னவோ கொடுத்தார்; ஆனால் உடனடியாக 'சர்' எதிரில் வந்து நிற்கவில்லை. ஆகவே இரண்டாம் முறை 'சர்' இன்னமும் பலமாகக் கர்ஜித்தார். ஆனால் அதிலும் 'இங்கு வா' என்ற பொருளில் ஒரு வார்த்தையும் இல்லாததால்தானோ என்னவோ, ஒரு பையனுக்கு ஏதோ சொல்லிக் கொடுத்துக்கொண் டிருந்த வேலையிலிருந்து தமது கவனத்தைச் சிறிதும் நழுவவிடாமல், முன்போலவே அதே அமைதியுடன் 'ஓ' என்று குரல் கொடுத்தார். பெரிய 'சர்' ஒரேயடியாகச் சினந்துகொண்டார். ஆனால் தமது சினத்தைச் சிறிதளவும் வெளிப்படுத்தாமல், அவர் மேலே சொன்னார்: 'இதுவரை உங்களை மும்முறை அழைத்தேன்.'

உடனேயே தமது மெலிந்த குரலில், ஆனால், திடத்தோடு உதவி ஆசிரியர் பதில் இறுத்தார்: 'ஆமாம், அதே எண்ணிக்கைக்கு நானுங்கூட ''ஓ'' என்றேன்.' இந்தப் பதில் சினந்துகொண்டுள்ள எந்த மனிதனுக்கும் எரிச்சலைக் கொடுக்கும்படிதான் இருந்தது. அவர் பதில் சொன்ன தோரணையும் எரிச்சலைக் கொடுக்கும்படியாகவே இருந்தது. ஆகவே, அந்தப் பதிலால் 'சர்' அவர்களின் சினத்தின் வெப்பம் கொதிநிலையை அடைந்தது. இருந்தபோதிலும் அவர் வெறுமனே இருமிய வண்ணம் (இப்படிப்பட்ட இருமல் அவருடைய சினத்தின் ஓர் அளவுகோலாகவே இருந்தது.) சொன்னார்: 'அது சரி, இப்பொழுது இங்கே வாருங்கள்.' அதற்கு அவர், 'இவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துவிட்டு வருகிறேன்' என்று சொல்லியவாறு தமது காரியத்தைத் தொடர்ந்து செய்யலானார். 'இல்லை, முதலில் வாருங்கள்' என்று 'சர்' அவர்களின் கர்ஜனை முழங்கியது.

ஆனால், உதவி ஆசிரியர் அடியோடு இடத்தைவிட்டு அசையவில்லை. அவர் காதில் அவ்வார்த்தைகள் விழவே இல்லை போன்று அவர் இருந்தார்.

'வாருங்கள்!' மீண்டும் பலத்த கர்ஜனை கேட்டது. ஆனால், அத்துடன் அதனுடைய எதிரொலியைத் தவிர வேறு ஒன்றும் கேட்கவில்லை. அதற்குள் தம் பாடத்தை முடித்துக்கொண்டு

உதவி ஆசிரியர் தம்மிடத்தினின்றும் எழுந்து சர் அவர்களின் இடத்திற்கு வந்தார். அவருடைய இன்றைய நடத்தை மிகவும் விசித்திரமாக இருந்தது. அவர் வந்ததும், 'நான் எத்தனை நேரமாக உங்களைக் கூப்பிடுகிறேன்? ''முதலில் வாருங்கள்'' என்று நான் கத்திச் சொல்லியுங்கூட நீங்கள் ஏன் வரவில்லை, சொல்லுங்கள்?' என்று சர் மீண்டும் முழக்கம் செய்தார். உதவி ஆசிரியர் கணப்பொழுதிற்குத் தம் உதடுகளை இறுக மூடிக் கொண்டார். அவரைப் பார்த்தால் பதிலிறுக்கும் முன்பு தமக்குத் தாமே ஏதோ மன உறுதி செய்துகொள்வதுபோல் தோன்றியது. பின்னர் மெதுவாகச் சொல்லலானார்: 'அந்தப் பையனின் படிப்பில் வீணாகத் தடங்கல் ஏற்படுவதை நான் விரும்பவில்லை.' இந்தப் பதிலினால் நிலைமை எல்லையைக் கடந்து விட்டது. பேராசிரியரின் 'கடன் வாங்கிய பெருந்தன்மைத் தோற்றம்' அடியோடு இல்லாமற் போயிற்று. அடைத்து அடைத்து நிரப்பப்பட்ட மருந்துப் பொடி சில சமயம் குழாயை உடைத்துக்கொண்டு, குழாயின் உடைந்த துண்டுகளுடன் இங்கும் அங்கும் சிதறித் தெறித்து விழுவதுபோல், இதுவரை அடைத்து அடைத்து வைக்கப்பட்டிருந்த ஆசிரியரின் சினம் குப்பென்று பொங்கி வெளியில் வரத்தொடங்கியது. அதுவும் அவை யாவும் உதவி ஆசிரியரின் உடலின்மீது வழியலாயிற்று.

'போதும், போதும்! ஒரு சல்லிக் காசு பெறும் அளவிற்குக்கூட உங்களுக்கு அறிவு கிடையாது. மாணவர்களுக்காக மிகவும் அக்கறை கொண்டவர்போல் காண்பித்துக்கொள்கிறீர்கள். ஆனால், உங்களைப் போல் சிறிதும் அக்கறையற்ற மனிதனை நான் வேறு எங்குமே பார்த்ததில்லை. மாணவர்கள்மீது உங்களுக்குச் சிறிதளவும் பற்றுதல் இல்லை. நான் இதுவரை கணக்கற்ற முறை இதைப்பற்றி உங்களிடம் சொல்லியிருக்கிறேன். உங்களுக்கு ஒன்றுமே தெரிவதில்லை. உங்களிடம் சமர்த்து என்பது இல்லை. நீங்கள் பிச்சை எடுக்கும் நிலைக்குப் போவீர்கள் என்பதால் இதுவரை உங்கள்மீது இரக்கம் கொண்டேன். ஆனால், இன்றைய உங்களுடைய மனிதத்தன்மையற்ற செயலைப் பார்த்து, இனி ஒரு கணப்பொழுதும் உங்களை இங்கு வைத்துக் கொள்வதில்லை என்ற முடிவுக்கு வந்துள்ளேன். புரிந்ததா? இப்போது இந்தக் காரியத்தில் ஒருவருடைய சிபாரிசோ வேறு எதுவுமோ செல்லாது. உங்களைப் போன்ற அறிவே இல்லாத ஆளின் தேவை எனக்கு இல்லை. நீங்கள் பார்த்துக்கொண்டிருக்க

பையன்கள் அடிதடி செய்கிருர்கள், குடுமியைப் பிடிக்கிருர்கள், ஒருவர் நெஞ்சின்மீது ஒருவர் ஏறி உட்காருகிருர்கள். நாளைக்கு அவர்கள் உங்களுடன் குஸ்தி விளையாடுவார்கள், உங்களுடைய குடுமியைப் பிடிப்பார்கள், உங்கள் மார்பின்மீது ஏறி உட்காரு வார்கள். சொல்லுங்கள், உங்களுக்கு என்ன சொல்லவேண்டி யிருக்கிறதோ அதை.'

இவ்வாறு எரிந்து விழுந்ததும், ஆசிரியர் சிறிது நிறுத்திஞர். இந்த வெடி வெடித்துக் கொண்டிருக்கும்பொழுது உதவி ஆசிரியர் முன்போல் தமது உதடுகளை இறுக மூடிக்கொண்டு, அமைதியாக நின்றுகொண்டிருந்தார். எனக்குத் தண்டனை கிடைக்கப் போகிறது என்று எண்ணி உள்ளம் பதறிப் போய் மருண்டு அங்கு நின்றிருந்த நான், நடந்ததையெல்லாம் பார்த்து எனது நிலையை அடியோடு மறந்துவிட்டேன். எனக்கு ஏதோ பயங்கரமான தண்டனை கிடைக்கப் போகிறது என்ற எண்ணம் என் மனத்திலிருந்து முழுதும் மறைந்துவிட்டது. நடந்துகொண் டிருந்த நிகழ்ச்சியில் மனம் ஒன்றிப் போயிற்று. நான் இரு ஆசிரியர்களையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தேன். எல்லாப் பையன்களுடைய பார்வையும் அவ்விரு ஆசிரியர் களிடமும் லயித்திருந்தது. சிறிய ஆசிரியரை, பெரிய ஆசிரியர் இவ்வாறு தூக்கி எறிந்து பேசியது எங்களுக்குப் புதுமை யாக இருந்தது என்பதில்லை. இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் இன்று வரை பலமுறை நிகழ்ந்திருக்கின்றன. ஆனுல், இன்றைய நிகழ்ச்சி இதுவரை நடந்ததினின்றும் வேறுபட்டதாக இருந்தது. சிறிய ஆசிரியர் இன்று நடந்துகொண்ட முறை மிகவும் விசித்திர மானதாக இருந்தது.

'உங்களுக்கு என்ன சொல்ல வேண்டியிருக்கிறதோ, சொல் லுங்கள்' என்று சொல்லி, பெரிய ஆசிரியர் பதிலை எதிர்பார்த்துக் கணப்பொழுது மௌனமாக இருந்தார். ஆனுல், இறுகி மூடிய உதடுகளைத் திறக்கும் எண்ணமே இல்லாதவர் போன்று நின் றிருந்த சிறிய ஆசிரியரைப் பார்த்து அவர் தாமாகவே மேலே சொன்னுர்: 'உங்கள் பேச்சினுல் ஏதும் பயன் ஏற்படும் என்ப தில்லை. உங்கள் பக்கத்தைக் கேட்காமலேயே வெறுமனே உங்களை விரட்டி விட்டேன் என்று ஆகக்கூடாது என்பதற்காகத் தான் பேசச் சொல்கிறேன். உம், பேசுங்கள்!'

சிறிய ஆசிரியரின் நெற்றியில் சுருக்கங்கள் விழுந்தன. அவருடைய உதடுகள் இன்னமும் இறுகின. அவர் பெரிய

ஆசிரியரை மிக விசித்திரமான முறையில் பார்க்கத் தொடங்கினார். பிறகு திடீரென்று, ஆனால், மிக அமைதியுடன் சொன்னார்: 'எந்தப் பேச்சினால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லையோ, அந்தப் பேச்சை நான் பேச விரும்பவில்லை.' இவ்வளவு பேசி மீண்டும் அவர் தமது உதடுகளை இறுக மூடிக் கொண்டார்.

இச்சொற்கள் காதில் விழுந்ததுமே பெரிய ஆசிரியருக்கு எந்த நிலை ஏற்பட்டதோ, அது உண்மையாகவே காணத் தகுந்ததாக இருந்தது.

# 9. எங்கள் குதூகலம்

மேற்கூறிய வார்த்தைகள் காதில் விழுந்ததுமே அவர் (பேராசிரியர்) மிகப் பலமாக முழக்கம் செய்த வண்ணம், 'உங்களுடைய இந்தப் பதிலின் முடிவு என்ன ஆகும் என்பது உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார். அந்தக் கேள்வியைக் கேட்டதும் ஏளனமான ஒரு சிரிப்பு உதவி ஆசிரியரின் முகத்தில் தோன்றியது. 'அது தெரியாமல் நான் பேசுகிறேனு? நான் முன் பின் எல்லாவற்றையும் நன்கு ஆலோசித்த பின்னர்தான் பேசுகிறேன்' என்று சொன்னதும் அவர் மீண்டும் தனது உதடுகளே இறுக மூடிக்கொண்டார்.

இரு ஆசிரியர்களின் பதில்களும் மேலும் மேலும் அதிகப் பிரசங்கித்தனம் கொண்டதாக ஆகிக்கொண்டிருந்தன. அத்துடன் சர் அவர்களின் சினம் கொதிநிலையை எட்டி விட்டிருந்தது. நாலாபுறமும் ஒரே அமைதி பரவி இருந்தது. ஆனல், அந்த அமைதி உடனடியாகத் தொடரவிருந்த பயங்கரமான புயலின் அறிகுறியாகும் என்பதை எங்களால் உணர முடிந்தது.

'கோபி! கோப்யா!!' சர் சினத்துடன் கனத்த குரலில், தமது கண்கள் சிவக்கச் சொன்னுர். 'கோப்யா! கோப்யா!' இவ் வார்த்தைகளைக் கேட்டதுமே மாணவர்கள் எல்லோரும் பயந்து விட்டனர். அவர்கள் பைத்தியம் பிடித்ததுபோல் பார்க்கத் தொடங்கினுர்கள். கோபி என்பது ஏதோ பொல்லாத்தனம் செய்யும் ஒரு மாணவனின் பெயராக இருக்கவேண்டும் என்று எல்லோருக்கும் தோன்றியது. கோபால், கோபிநாத் என்ற பெயருடைய பையன்கள் நடுங்கிய வண்ணம் எழுந்து நின்றுர்கள். தாம் என்ன குற்றம் செய்தோம், தம்மை இவ்வாறு இரைந்து சினத்துடன் கூப்பிடும்படி அச்சமயம் தாம் என்ன செய்துகொண்டிருந்தோம் என்பது அவர்களுக்குச் சிறிதும் விளங்கவில்லைபோல் தெரிந்தது. பாவம், நடுக்கத்துடன் எழுந்து நின்று பெரிய ஆசிரியரின் பக்கம் சிலரும், ஒருவரை

ஒருவர் சிலரும் பார்க்கலானுர்கள். ஆனுல், ஆசிரியருடைய கவனம் அங்குச் செல்லவேயில்லை. அவர் தான் பாட்டுக்கு மேலும் சொல்லிக்கொண்டு போனுர்: 'கோப்யா, நன்றி கெட்டவனே, உனக்குப் பிச்சை கேட்கும் நிலை வந்திருந்தது, அப்படியிருக்க அதிலிருந்து விடுவித்துக் கைதூக்கிவிட்டு உனது வயிற்றுப்பாட்டுக்கு ஏற்பாடு செய்தேன். உண்மையாகவே உனக்கு அறிவு கிடையாது. உனக்கு ஒன்றும் தெரியாது. இருந்தும் நானுக உன்னை வைத்துக்கொண்டேன்.'

இந்த வார்த்தைகளைக் கேட்டதும்தான், 'கோப்யா' என்பது எங்கள் குழுவைச் சேர்ந்தவர் எவருமல்ல, அது எங்கள் இரண்டாவது ஆசிரியரின் பெயர் என்று நாங்கள் புரிந்து கொண்டோம். எங்களுக்கு முன்னுல் இதுவரை 'சர்', 'இரண்டாவது சரை' பெயர் சொல்லி அழைத்ததில்லை.

'சர்'ரின் பேச்சு மேலும் தொடர்ந்துகொண்டிருந்தது: 'அடே நன்றியற்றவனே, உனக்கு எவ்வளவு உபகாரம் செய்திருக்கிறேன். இருந்தபோதிலும் இன்று நீ இப்படிப்பட்ட பதிலை என்னிடம் சொல்லத் துணிந்தாய். நன்றி கெட்டவன், வெறும் நன்றி கெட்டவன்!'

ஒரு பக்கம் அவருடைய இந்தப் பேச்சு நடந்துகொண்டிருந்தது. மறுபக்கம் எங்களது அந்தச் சிறிய ஆசிரியரும் சினத்தால் சிவந்துகொண்டே வந்தார். 'சர்'ரின் வாயிலிருந்து மேற் கூறிய வார்த்தைகள் வெளிப்பட்டதும், உதவி ஆசிரியர் இரைந்து சொன்னுர்: 'போதும், போதும். மறுபடியும் இவ்வாறு வசையை உச்சரித்தீர்களானுல், நினைவிருக்கட்டும். நன்றி கெட்டவனு: யார் நன்றி கெட்டவன்? நீங்களா, இல்லை நானு? நான் பிச்சை வாங்கிக்கொண்டிருந்தேன் தான். ஆனுல், என்னை அந்த நிலைக்குக் கொண்டு வந்தவர் யார்? எனது சொத்துக்கள் எல்லாம் நிறைந்திருந்தபொழுது, அது எப்படி, எங்கே போயிற்று, அவை போக யார் காரணம் என்பது எனக்குத் தெரியாது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? ராஜாவைப்போல் இன்று இருந்திருக்க வேண்டியவனை என்னை, இப்படிப் பாழ் நிலைக்குக் கொண்டு வந்தவர் யார் என்பதை இன்னும் அறியாம லிருக்கும் அளவுக்கு நான் முட்டாள் என்பது உங்கள் எண்ணமா? உங்களுடைய இரகசியம் இன்றுவரை எனது கவனத்திற்கு வர வில்லை என்பதில்லை. ஆனுல், உங்களது குடுமி எனது கைப்பிடி யில் வரவில்லை என்பதாலேயே நான் மௌனமாக இருந்தேன்,

தெரிந்ததா? இப்போது நான் அவ்வாறு மௌனமாக உட்கார்ந் திருப்பதற்குக் காரணமே இல்லே. இப்பொழுது உங்களுடையது எது, என்ன என்று எல்லாம் பார்த்துக்கொள்கிறேன். நான் என்ன பேசுகிறேன், அதன் முடிவு என்ன ஆகும் என்பது எனக்கு மிக நன்ருகப் புரிகிறது; தெரிந்ததா? உங்களே நான் இன்று வரை . . .'

ஆனால், தலைமை ஆசிரியர் தொடர்ந்து அவருடைய இவ் வார்த்தைகளேச் செவிமடுத்ததாகத் தெரியவில்லே. அவருடைய குடுமி தனது கைப்பிடியில் வருவதைப்பற்றி இவன் ஏதோ பேசுகிருன் என்று அறிந்ததும் பேராசிரியரின் போக்கு மிகவும் விசித்திரமானதாக ஆயிற்று. உள்ளத்துச் சூழ்ச்சிகள், குடுமி இவ்விரண்டும் தமது கையில் வருவதைப்பற்றி அவர் சொன்ன சொற்கள் காதில் விழுந்ததும், அவர் கண்கள் தாழத் தாழப் போய்க்கொண்டிருந்தன. இடையில் சடக்கென்று அவருக்கு என்ன தோன்றியதோ, திடீரென்று அவர் சொன்னுர்: 'போதும், போதும்! போதும் உனது பிதற்றல். நீ இன்றிலிருந்து இங்கிருந்து நடையைக் கட்டு! நன்றி கெட்ட உனக்கு . . .'

'நன்றி கெட்டவன்! மீண்டும் என்னே நன்றி கெட்டவன் என்று சொல்கிறீர்களா? உப்பிட்டவருக்கு இரண்டகம் செய்து, வெளிக் கிடந்த அவரது மனேவியை ஏமாற்றி, அவரது சிறு பிள்ளேயைப் பாழடைந்த நிலேக்குத் தள்ளி . . . மீண்டும் என்னே நன்றி கெட்டவன் என்று சொல்லுகிறீர்களா? இல்லே, இப்பொழுது இந்த மாணவர்கள் முன்னிலேயில் நான் மேற்கொண்டு ஒன்றும் சொல்லப் போவதில்லே. ஆனுல், இவ்வளவு மட்டும் நிச்சயம் கவனத்தில் கொள்ளுங்கள். இப்பொழுது மறுபடியும் நீங்கள் அதிகப்பிரசங்கித்தனமாக ஒரு பதிலேக் கூடச் சொல்வீர்களே யானுல், பாருங்கள் உங்கள் . . . பின் கவனம் இருக்கட்டும். இனி நான் உங்களுடன் இருக்கப் போவதில்லேதான். இருந்த என் வேலேயை முடித்துக்கொண்டேன். இனி எனக்குத் தோன்றியபடி செய்வேன், தெரிந்ததா?'

பேராசிரியரின் முதல் வீரப்பிரதாபம் முழுவதும் மறைந்து போய்விட்டதாகத் தெரிந்தது. 'சரி, சரி, நீ எனது பார்வையி லிருந்து போய்விடு, போ.' இந்த வார்த்தைகளே மிகுந்த வேதனே யுடன் அவர் சொன்னுர். இதையும் எதிர்த்து ஏதாவது சொல்லப் போகிருனே என்று அவருக்குத் தோன்றியதோ என்னவோ? ஆனுல் அவருடைய பயம் ஆதாரமற்றதாயிற்று; அவர் வாயி

லிருந்து மேற்சொன்ன வார்த்தைகள் முழுவதும் வெளிப்படக் கூட இல்லை, அதற்குள் அந்த இரண்டாவது ஆசிரியர் பள்ளியி னின்றும் கிளம்பி வெளியே போய்விட்டார். அவர் போனதும் பேராசிரியர் ஓரிரு கணங்கள் அசைவற்று உட்கார்ந்திருந்தார். பின்னர் என்னைப் பார்த்துச் சொன்னார்: 'ம்! அப்புறம் என்ன? கோழைப் பெண் உனக்கு முன்னால் வரவேண்டுமா? கொண்டு வருகிறேன் உன் முன்னால். இப்பொழுது, என்ன? . . . (தோளைப் பிடித்துக் குலுக்கி) கோழைப் பெண் உன் முன்னால் வரவேண்டும், இல்லையா? ம்?'

'இல்லை மாஸ்தர். இல்லை சர். இல்லை சர் . . .' என்று அக் கேள்விக்கு எனது இப்பதில் வெளிப்பட்டது.

'என்ன இல்லை மாஸ்தர்? ம்? இப்பத்தானே சொன்னாய், கோழைப் பெண்ணே, ஏன் முன்புறத்திலிருந்து வரமாட்டேன் என்கிறாய் என்று?'

'இல்லை சர். இல்லை சர். அப்படி இல்லை சர் . . . உங்களுக்கு இல்லை, கோழைப் பெண் சர்.'

'எங்களுக்கு இல்லை, கோழைப் பெண் சர்? ''கோழைப் பெண் சர்'' என்றால் என்னடா அர்த்தம்? ம், என்னடா?'

'இல்லை சர், நான் இல்லை சர். கோழைப் பெண் நீங்கள் என்று சொன்னேன்.'

நான் என்ன பேசிக்கொண்டிருக்கிறேன்; மேலும் நான் பேசுவதன் பொருள் என்ன என்பது ஒன்றும் என் கவனத்திற்கு வரவில்லை. மனத்தில் பேச நினைப்பது ஒன்று, வாயிலிருந்து வெளிப்படுவது முற்றும் வேறொன்று!

'அதே, அதேதான் நானும் சொல்கிறேன். கோழைப் பெண் நீங்கள் என்று சொன்னாய் அல்லவா?'

'இல்லை சர், நீங்கள் இல்லை சர், நான் இல்லை சர் . . .'

'பின் யார் சர்?' என்று எங்களுடைய சர் எனது தோளைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கி, பரிகாசம் செய்யும் வகையில் வாயைக் கோணிக்கொண்டு சொன்னார்.

'ஒருத்தரும் இல்லை சர். நான் சர். நான் பாட்டுக்கு சர் . . . சும்மாத்தான் சர் . . .'

'சர், சர் என்று இதென்ன இடையறாது பொழிந்து தள்ளு கிறாய்? ம், சொல்லு! அவனைக் கீழே தள்ளி, அவன் மார்பின் மீது உட்கார்ந்து . . . எத்தனை போக்கிரித்தனம் செய்துகொண் டிருந்தீர்கள், நீங்கள்? ம் . . . (பளார் என்று என் கன்னத்தில்

ஓர் அறை அறைந்து) சொல்லடா? இன்று பள்ளியில் காலை வைத்ததுமே முதல் முதலாக ஒரேயடியாக ஒருவர் மார்பின் மீது ஒருவர் உட்கார்ந்து அடிதடி? ம்? (கன்னத்தில் இன்னும் ஓர் அறை கொடுத்து) சொல்.'

சர் விநாயக்கைக் கூப்பிட்டு, 'என்னடா, என்ன ஆயிற்று?' என்று கேட்டார். அந்த வாய்ப்புக் கிடைத்ததுமே, அவன், தான் குற்றம் அற்றவன், நான்தான் காரணம் இன்றி அவன் குழுவைத் தாக்கிப் பொல்லாத்தனம் செய்தேன் என்று அவன் தன் மனம் விரும்பியபடியெல்லாம் சொன்னான். 'அப்படி இல்லை, அவன் பொய் சொல்கிறான்' என்று சொல்ல என் உதடுவரை வார்த்தைகள் வந்தன. ஆனால், எனக்குத் தைரியம் வரவில்லை. கடைசியாக ஒருமுறை விநாயக் ஆசிரியரிடம் மாபெரும் பொய்யான ஓர் அபாண்டப் பழியை என்மீது ஏற்றிச் சொன்னான். 'நான் உன் அப்பாவாகி இருக்கிறேன்' என்று நான் சொன்னதாக அவன் சொன்னான். அதைக் கேட்டதுமே ஆசிரியரின் கோபம் எல்லையைக் கடந்தது.

இனி நான் உயிருடன் தப்பப் போவதில்லை என்று என் மனத்திற்கு உறுதியாகப்பட்டது. அப்போது ஆசிரியர் விநாயக்கை மிக அருகில் அழைத்துக்கொண்டு, என்னிடம் சொன்னார்: 'நீ எவ்வளவு சிறிய போக்கிரிப் பயல்? அப்பா, கிப்பா என்ற வார்த்தை எப்படியடா தோன்றுகிறது உனக்கு? ம், பிச்சைக்காரப் பயலே! தடியனே! யாரைப் போல் சமர்த்து ஆகப்போகிறாய்? அந்த அப்பன் உட்கார்ந்திருக்கிறான் எங்கோ பிச்சை வாங்கிக்கொண்டு. அவனைப் போல் பிச்சைக்காரன் ஆகப்போகிறாய் நீ! யாரைப் பார், திட்டுவது! யாருக்கோ அப்பன் என்கிறாய்; யாரையோ கோழை என்கிறாய். யாருடைய மார்பின் மேலாவது உட்கார்ந்து பொல்லாத்தனம் செய்கிறாய். கொஞ்சம் பொறு, இன்று உன்னுடைய எலும்பை முறித்துக் கொடுக்கிறேன். உன்னை விரட்டி அடிக்கிறேன். மீண்டும் எந்தப் பள்ளியிலும் உன்னைச் சேர்க்கமாட்டார்கள். என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாயடா நீ? எல்லாருடைய அப்பனும் ஆகியிருக்கிறாய் அல்லவா? வா, காண்பித்துக் கொடுக்கிறேன் உனக்கு, அது எப்படி, என்ன அப்பாவாகி இருக்கிறாய் என்று!' இப்படிச் சொல்லி ஈவிரக்கமின்றி என்னை இழுத்தார். இது போதாதென்று, இதைக் கண்டு விநாயக் சிரித்துக்கொண்டிருந்ததையும்

நான் பார்த்து அறிந்துகொண்டேன். அப்போது எனக்கு வந்த கோபத்தைப்பற்றி ஒன்றும் கேட்காதீர்கள்.

உடனேயே நான் கத்திச் சொன்னேன்: 'சர், அவன் பொய் சொல்கிருன். நான் சொல்லவே இல்லை. சர், நான் ஒருவரை யும் திட்டவில்லை. உங்கள்மீது ஆணையிட்டுச் சொல்கிறேன் சர். வேண்டிய சபதம் செய்யத் தயார். சர், சர், உண்மை யாகவே சர், நான் முற்றும் உண்மையாகச் சொல்கிறேன், சர், நீங்கள் என்னை வீணுக அடிக்காதீர்கள் சர்! எனக்கு அடி கிடைக்க வேண்டும் என்பதற்காகவே அவன் பொய் சொல்லு கிருன் சர். நீங்கள் வேறு யாரை வேண்டும் என்ருலும் கேட்டுப் பாருங்கள் சர்.' இவ்வாறு பல வகையிலும் மன்ருடிக் கேட்ட வண்ணம் நான் மிகவும் பரிதாபமாக அழத் தொடங்கி விட்டேன். ஆனுல், 'நன்றி கெட்டவனே, இன்னமும் வாய் கொடுத்துப் பேசுகிருயா? இன்னும் பொய் சொல்லுகிருயா?' என்று சொல்லி என்னைப் பிடித்துக் குலுக்கிய வண்ணம் இன்னும் ஓங்கி அறைந்தார் அவர். குச்சியாலும், தடியாலும் அடித்தார். ஆனுல், அதிலும்கூட அவர் சமாதானமடையவில்லை. கடைசியில் என்ன வேடிக்கையான எண்ணம் அவருக்குத் தோன்றியது!

அவர் சொன்னுர்: 'விநாயக்கின்முன் மூக்கைத் தேய்த்து, காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டாயானுல், நான் இந்தத் தடவை உன்னை மன்னித்துவிடுவேன். இல்லையென்ருல், இன்று உன் முடிவு காலம் வந்ததாகக் கொள்.' நான் வாங்கிய அளவற்ற அடியினுல், அழுவதற்கு வேண்டிய தெம்புகூட எனது உடலில் இருக்கவில்லை. ஆனுல், விநாயக்கிடம் மன்னிப்புக் கேட்பது, மூக்கைத் தேய்ப்பது என்றெல்லாம் அவர் பேச்சை எடுத்ததும், எனக்கு மறுபடியும் என்ன ஆயிற்று என்று ஒன்றும் கேட்காதீர்கள். என்னதான் ஆனுலும், இந்த ஒன்றை மட்டும் முக்காலத்திலும் நான் செய்யப்போவதில்லை என்று மனத்தில் உறுதிகொண்டு, அந்த உறுதியை நானே அநுபவித்த வண்ணம் கம்பீரமாக நின்றேன். நான் சிறிதும் அசையாமல் நின்றதைப் பார்த்து அவர் மீண்டும் எனக்குச் சொன்னுர்: 'உம்! கிளம்பு, முடி வேலையை! பிறகு பள்ளி வேலைக்குத் தாமதமாகிவிடும். விழு அவன் காலில்.' அவனிடத்தில் எனக்கு அளவற்ற வெறுப்பு இருக்கிறது. அவன் காலைத் தொடச் சொன்னதால், எனக்குச் சரியான தண்டனை கிடைத்தது என்று அவர் உள் மனத்தில் தோன்றியதோ என்னவோ, தெரியவில்லை. எதுவா

யினும் இருக்கட்டும். அவர் மீண்டும் மீண்டும் ஒரு முறை, இரண்டு முறை, 'போ, அவன் முன் விழுந்து மன்னிப்புக் கேள்' என்று சொன்னார். ஆனல், நானே அசையாது கம்பம் போன்று நின்றுகொண்டிருந்தேன். கடைசியில் விஷயம் உச்ச நிலையை அடைந்தபொழுது, நான் ஒரேயடியாக, 'நீங்கள் வேண்டுமானல் என்னை அடித்துக் கொல்லுங்கள். ஆனல் நான் அவன் காலில் விழப்போவதில்லை' என்று சொன்னேன்.

# 10. பிரிந்தவர் சேர்ந்தோம் !

உடனேயே அவர் தம்மிடத்தினின்றும் எழுந்து என்னை மூலையில் கொண்டு போனார். பிறகு எல்லா மாணவர்களையும் அங்குக் கவனிக்கும்படி சொல்லி, 'ஆசிரியர் சொற்படி நடக்கவில்லை என்றால் என்ன ஆகும் என்று பாருங்கள்' என்று சத்தமாகச் சொல்லி என்னை நன்றாக அடித்தார். நான் விநாயக்கிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும் என்று மீண்டும் சொன்னார். நானும், 'செத்தாலும் நான் மன்னிப்புக் கேட்கப் போவதில்லை' என்று அடித்துச் சொன்னேன். அதன்மேல் என் மூச்சுத் திணற அவர் என்னை அடித்தார். ஆனால், இருமுறை இம்மாதிரி மூச்சுத் திணற அடித்த பிறகு அவர் என்னை இடத்திற்குப் போய் உட்காரும்படி சொன்னார். அவ்வாறு வேதனையுற்ற நிலையில் நான் அழுதுகொண்டும், விசும்பிக்கொண்டும் எனது இடத்தில் போய் உட்காரும்பொழுது, எனது பார்வை விநாயக்கின் பக்கம் போயிற்று. அவன் என்னைப் பார்த்து உள்ளூறச் சிரித்துக்கொண்டிருந்தான் என்று எனக்குத் தோன்றியது. அதைப் பார்த்ததும் எனக்கு மிகுந்த கோபம் வந்தது. கிடைத்த தண்டனையின் வேதனையினால் ஏற்பட்ட அழுகை ஒரு பக்கம், இப்படிப்பட்ட நிலையிலும் என்னைப் பார்த்து விநாயக்கின் மகிழ்ச்சியைக் கண்டு மனத்துள் ஏற்பட்ட கோபம் மறுபக்கம்—இவை இரண்டுக்கும் இடையில் பயங்கரமான போர் நடந்தது. சிறிது நேரத்திலேயே தன்மானம் வெற்றி கொண்டு தலைதூக்க, தண்டனையினால் எனக்குக் கிடைத்த துன்பம் அப்பொழுதே இல்லாததாயிற்று.

மறுநாள் காலை உற்சாகம் தளராத எங்களது மாணவர் குழு மீண்டும் பள்ளிக்கு வந்தது. நான் போனபொழுது ஏதோ இரு பையன்கள்தான் பள்ளிக்கு வந்திருந்தார்கள். என் பின்னாலேயே விநாயக்கும் வந்தான். அவன் வந்தவுடனேயே எனக்கு முதல் நாள் நடந்தவை யாவும் நினைவுக்கு வந்தன. நாமாகவே ஏதாவது குற்றத்தைக் கண்டுபிடித்து இப்பொழுது அவனைப் பழி வாங்கவேண்டும் என்று எனது உள்ளத்தின் பொல்லாத பகுதி என்னை எண்ணத் தூண்டியது. அதன்படியே அது என்னைச் செயல்படவும் வைத்திருக்கும். ஆனால் உள்ளத்தின் மேன்மை

யான பகுதி, உடனடியாக நல்லெண்ணத்தின் ஒலியை நான் கேட்கும்படி செய்தது. நான் பேசாமல், கண்கொட்டாமல் அவனையே பார்த்துக்கொண்டிருந்தேன். அவனது முகம் மிகவும் வாடிப் போயிருந்தது. மனத்தில் ஏதோ சொல்ல வேண்டும் என்ற ஆசை. ஆனால் அதைச் சொல்வதா வேண்டாமா என்று அவன் தயங்குவதாகத் தோன்றியது. உதடுகள் முன்னுக்கு வரும், மீண்டும் பின்னுக்குச் செல்லும். இறுதியில் அவன் சொல்ல நினைத்தது உள்ளத்தின் உள்ளேயே கரைந்துவிட்டதுபோல் தோன்றியது. மேலும், மாணவர்கள் வரவே நான் ஒரு பக்கமும், அவன் ஒரு பக்கமுமாக ஆனோம்.

வகுப்புத் தொடங்கியது. அன்று எங்களது இரண்டாவது 'சர்' வரவில்லை. அதனால் 'சர்' அவர்களே புத்தகத்தினின்றும எங்களை ஏதோ எழுதச் சொன்னார். ஒரு சிலரை சில பகுதிகளை மனப்பாடம் செய்யச் சொன்னார். வேறு சிலரைச் சில கணக்குகளைப் போடும்படி சொன்னார். அந்நிலையில் திடீரென்று என்மீது ஒரு காகிதச் சுருள் வந்து விழுந்தது. அச்சுருள் யாரிடமிருந்து வந்திருக்கவேண்டும் என்பது எனக்கு உடனேயே தெரிந்துவிட்டது. 'நாம் அதைக் கொண்டு போய்ச் ''சாரு''க்குக் காண்பிக்கவேண்டும்' என்று முதலெடுத்ததும் எனக்குத் தோன்றியது. ஆனால், 'உடனேயே அதைத் திறந்து படி' என்று விநாயக் என்னைப் பார்க்காமலேயே, ஆனால் எனக்காக வேண்டிக் கூறினான். அதனால் எனக்கு இன்னும் விசேடமாகக் கோபம் வந்தது. எனவே, நான் அதைச் 'சாரி'டம் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும் என்று அதிகத் துடிப்புக் கொண்டேன்.

ஆனால், அதற்குள் அதில் என்ன இருக்கிறது என்று முதலில் தெரிந்துகொள்ளவேண்டும்; பின்னர் 'சாரி'டம் கொண்டு கொடுக்கவேண்டும் என்றும் தோன்றியது. உடனேயே அதை நான் திறந்து பார்த்தேன். 'உன்னிடம் எனக்கு ஏதோ சொல்ல வேண்டியிருக்கிறது, நீ பேசுவாயா?' என்று அதில் எழுதப்பட்டிருந்தது. அதைப் படித்தவுடன் முதலில் எனக்கு மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது. நான் வியப்புடன் அவனைப் பார்க்கலானேன். அதன் பிறகு அவனுக்குக் கடிதத்தின்மூலம் பதில் அனுப்ப நினைத்து, ஒரு காகிதத்தில், 'நீ பொய்ச் சொல்கிறாய். ஒரு காரணமும் இல்லாதபொழுது என்னை அடி வாங்க வைத்தாய்; இப்பொழுது நீ என்னிடம் மன்னிப்புக் கேட்டாலன்றி நான் ஒரு நாளும் உன்னுடன் பேசப் போவதில்லை' என்று பொருள்படும்

படி ஓரிரு வாக்கியங்களை எழுதி அக்காகிதத்தைச் சுருட்டி அவனிடம் எறிந்தேன். மீண்டும் அவன் ஏதோ எழுதினுன். பிறகு நான் எழுதினேன். இப்படியே சிறிதுநேரம் நடந்துகொண்டிருந்தது. இறுதியில், நான் அம்ருத் என்ற எனது தோழனுக்குச் சைகை செய்தேன், 'பாத்ரூமுக்கு' வருமாறு. வெளியில் வந்து அவனிடம் முழு விவரத்தையும் சொன்னேன். உடனேயே அவன், 'அவன் இவ்வளவு கெஞ்சும் நிலைக்கு வந்து பேசவேண்டும் என்று சொல்கிறுனென்றுல், நாம் கூடி ஆலோசிப்பதுதான் சரியாகும்' என்று தனது கருத்தைத் தெரிவித்தான்.

பள்ளிக்கூடம் முடிந்ததும், வேறு இரு நண்பர்களையும் சேர்த்துக் கொண்டு பேசி முடிவு செய்வோம் என்று சொல்லி நாங்கள் மறுபடியும் வகுப்பிற்குள் சென்றுேம். நினைத்தபடி பள்ளி விட்டதும் எங்கள் 'கவுன்சில்' (கூட்டம்) கூடியது. அதில் ஸ்ரீதரன் சொன்னுன்: 'அதொன்றும் இல்லை. அவன் மிகவும் இழிந்த குணம் உடையவன். அவனிடம் சிறிதளவும் கருணை கொள்ளாதீர்கள்.' ஆனுல், 'அவன் தானுகவே மன்னிப்புக் கோருவதால் நாமும் அவனை மன்னிக்கவேண்டும்' என்று நானும் மற்ற இருவரும் கருதினுேம். அக்கருத்தின்படியே செய்வதாக முடிவு செய்யப்பட்டு உடனேயே அவனுக்கு அது தெரிவிக்கப் பட்டது. அதைக் கேட்டதும் அவன் மகிழ்ச்சி அடைந்ததாகத் தெரிந்தது. எங்களுடைய நிபந்தனை இவ்வளவுதான்: 'நமது நண்பர்களின் முன்னிலையில், ''நான் உங்களுடைய மன்னிப்பைக் கோருகிறேன்'' என்று அவன் தெளிவாகச் சொல்லவேண்டும்.' ஆனுல், அதற்கு அவன் இணங்கத் தயாராக இல்லை. ஏனெனில், அவன் சொன்னுன்: 'அவர்களை இதில் சேர்க்கக்கூடாது' என்று. ஆமாம், இல்லை என்று இப்படியே இழுத்தடித்துக் கடைசியில், நான் நின்றுகொண்டிருக்கும்பொழுது அவன் என் முதுகுப்புறம் வந்து எனது தோளின்மீது கை வைத்து, 'நான் தவறு செய்தேன், என்னை மன்னித்துவிடு' என்று சொல்ல, பிறகு நான், 'நீ எங்களைச் சேர்ந்தவனுனுய்' என்று நான் சிரித்துக் கொண்டே சொல்லவேண்டும் என்றும், அதற்கு அவனும், 'ஆமாம், ஆமாம்' என்று இருமுறை சொல்லி, பிறகு ஒவ்வொருவரும் தத்தம் மீது ஆணையிட்டு வாழ்நாள் முழுதும் நட்பை வளர்ப்போம் என்று உறுதிகொள்ளவேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது.

விநாயக் தனது செருக்கை ஏன் விட்டுக்கொடுத்தான் என்பதன் காரணத்தைச் சொன்னதும், எங்கள் நட்பு மேலும் உறுதி

அடைவதற்கு அது காரணமாக இருந்தது. அவன் சொன்ன காரணம் இதுதான்; நான் இறந்துவிட்டதாக அவனது கனவில் யாரோ சொன்னூர்களாம். அது உண்மை எனத் தோன்றி, அதனுல் தனது முதல் நாள் செயலுக்காக அவனுக்கு மிகவும் வருத்தம் ஏற்பட்டதாம். மறுநாள் காலே அவன் தனது கனவைப் பற்றி யாருக்கோ சொன்னபொழுது அவர், கனவில் யாரை யாவது இறந்ததாகக் கண்டாலோ அல்லது யாராயினும் இறந்த தாகக் கேள்விப்பட்டாலோ அவருக்கு ஒன்றும் நேராது என்று சொன்னூர்களாம். ஆனுலும் அது தனது உள்ளத்தைக் கலவரப் படுத்திவிட்டதாக அவன் சொன்னுன்.

# 11. திடீர்ச் சந்திப்பு

நான் பிறக்கு முன்பு எனது தந்தைக்கு ஒரு நல்ல வேலை இருந்தது. நான் பிறந்த சமயத்தில்தான் அவருடைய மூளை கலங்கி, அவர் மண்டையில் ஏதோ கோளாறு ஏற்பட்டது. அவர் திடீரென்று வேலையை விட்டுவிட்டு 'ஊர்த்வாய திசே ப்ரஹ்மஸே நம' என்று சொல்லிக் குடும்பத்திற்கே முழுக்குப் போட்டுவிட்டார் என்பதெல்லாம் மறைமுகமாக வாசகர்களுக்குத் தெரிந்துவிட்டிருக்கும். ஆகவே, இப்பொழுது நான் எல்லா விவரங்களையும் இங்குச் சொல்லவேண்டும் என்பதில்லை. எங்களைப் பராமரிக்கும் பொறுப்பும், அக்காவின் திருமணத்தை நடத்தும் பொறுப்பும் எங்களுடைய மாமாவின் தலையில் விழுந்தன. எங்கள் வீட்டின் எல்லாப் பகுதிகளும் எங்களுடைய உபயோகத்திலேயே இருந்தது என்பதே கிடையாது. எங்களுக்குப் போதுமான இடத்தை வைத்துக்கொண்டு, மிகுந்த இடத்தை அநேகமாக வாடகைக்கு விட்டிருப்போம்.

ஒரு நாள் ஓர் ஆள் வந்து இடம் பார்த்துவிட்டு, மாற்றலாகி வெளியூரிலிருந்து வரவிருந்த தன் குடும்பத்தினருக்கு அந்த இடம் போதும் என்று சொன்னார். மேலும், வீடு நல்ல வட்டாரத்தில் மையமாகவும், சுத்தமாகவும் இருந்ததால் அவருக்குப் பிடித்திருந்தது. அதனால் வாடகை எவ்வளவு ஆனாலும் கொடுக்கத் தயார் என்றும், இப்பொழுது கல்யாணம் கார்த்திகை என்ற காரணத்தைச் சொல்லாமல் 'இடத்தை நீங்கள் அவசியம் கொடுக்கவேண்டும். உங்கள் வீட்டுக் கல்யாண சமயத்தில் அவர்கள் ஒரே அறையில் தங்களுடைய சௌகரியத்தைச் செய்து கொண்டு உங்களுக்கு இடத்தைக் கொடுப்பார்கள்; வீட்டுக்காரரும் மிகவும் நல்ல மனிதர். அவருடைய மனைவியும் நல்லவள், மற்றவர்களுக்கு இடையில் என்றும் தலையிடாதவர்கள்' என்றும் சொன்னார்.

ஆனால், அந்தப் புதுக்குடி எங்கள் வீட்டிற்கு வருவதற்கு முன்பு எங்கள் வீட்டில் நடந்த விசித்திரமான நிகழ்ச்சி ஒன்றைப்பற்றி இங்குக் குறிப்பிடுவது அவசியமென எனக்குப் படுகிறது. இராவ்ஜீயிடமிருந்து பின்வருமாறு ஒரு கடிதம் வந்தது: 'இப்பொழுது

விரைவிலேயே எனது வேலை நிறைவேறிவிடும். கல்யாண காரியங்களை மிகச் சிறந்த முறையில் செய்வதற்காகவும், மீண்டும் படாடோபத்தோடு குடும்பத்தை நடத்துவதற்காகவும் நான் வருவதாக இருக்கிறேன். பெண்ணின் கல்யாணத்தைப் பற்றியோ, பையனின் படிப்பைப்பற்றியோ உங்களுக்கு ஒரு கவலையும் வேண்டாம். ''போதாத காலம்'' இப்போது முடிந்து விட்டது. எனக்கு இருந்த குரு தசை இப்போது ஒன்றேகால் மாதமே மிகுந்திருக்கிறது. இந்த ஒன்றேகால் மாதம் கடந்து விட்டால் என்னைப் புனுவில் இருப்பவனாகவே கொள்ளவேண்டும். பின்னர் வாழ்நாள் முழுதும் அங்கிருந்து அசையவேண்டிய அவசியம் இருக்கப் போவதில்லை. வீட்டையெல்லாம் துப்புறவாக வைத்திருக்கவேண்டும். நமது வீட்டில் வேறு குடிவைக்கும் குழப்பத்தில் விழவேண்டாம். வீடு முழுதும் எனக்கு வேண்டும். கொஞ்சநஞ்ச இடத்தில் ஒன்றும் சரிப்படப் போவதில்லை. என் னுடன் மூட்டை முடிச்சுகள், வருவோர் போவோர், விருந்தினர் என்று பெரும் அளவில் இருப்பார்கள். இங்கேயே ஓர் ஊர் ஜமீன்தார் இருக்கிறார். இறைவனிடம் நம்பிக்கை கொண்ட வர்கள், நல்ல குலத்தவர்கள், பரம்பரையாகவே நல்ல செல்வ நிலையில் இருப்பவர்கள், தர்மத்தை அனுசரித்துச் செல்பவர்கள். அவர்களுடைய பையன் மிகவும் நல்லவன். அவனுடன் பெண் ணின் கல்யாணப் பேச்சை எடுத்திருக்கிறேன். அவர்கள் இரண் டாயிரம் ரூபாய் வரதட்சிணை கொடுத்து, ஓர் ஆயிரம்வரை மற்றவை எல்லாம் செய்யவேண்டும் என்று சொல்லுகிறார்கள். எல்லாம் மொத்தமாக இரண்டாயிரத்திற்கு ஒத்துக்கொள்ளுங் களென்று நான் சொல்லியிருக்கிறேன். எப்படி, என்ன கைகூடி வருகிறது என்று பார்க்கலாம். இப்பொழுது இந்தத் தடவை ஒன்றும் அமைந்து வரப்போவதில்லைதான். அடுத்த ஆண்டு முடித்துவிடுவோம்.'

இப்படிப்பட்ட கடிதத்தைப் பார்த்ததும், பாட்டி வீட்டைச் சீர்ப்படுத்துவதிலும், தந்தையை வரவேற்பதற்குச் செய்ய வேண்டிய ஏற்பாடுகளிலும் முனைந்திருப்பாள். அம்மாவின் ஆனந்தமோ விண்ணைத் தொட்டிருக்கும் என்று தோன்றியிருக் கும் இல்லையா? வெளிப்படைதான். எவரைத் தேடிப் பம்பாய்க் குச் சென்றோமோ, அந்த எங்களுடைய தந்தை அப்போது மிகச் சிறிய அறையில் வண்டி குப்பையின் மத்தியில் கிழிந்த பாயைப் போட்டுத் தங்கியிருந்ததாக எங்களுக்குத் தெரியவந்தது. அவரே

இப்போது பெரும் கூட்டத்துடன் புனாவிற்கு வந்து, பெரிய வீட்டில் எங்களுடன் இருக்கப்போகிறார் என்று அறிந்த பின்னர் ஏன் ஆனந்தம் ஏற்படக்கூடாது? குறைந்தபட்சம் எங்களுக்காவது ஆனந்தம் ஏற்பட்டிருக்கும் என்றாவது மக்களுக்கு ஏன் தோன்றக் கூடாது? ஆனால் என்ன ஆச்சரியம் பாருங்கள்! எனது சொந்த விஷயம் வேறானது. எனக்கு உண்மையாகவே அந்தக் கடிதம் படித்தது முதற்கொண்டு ஆனந்தம் ஏற்பட்டது. அதுமட்டு மல்ல. அதன் காரணமாகச் சிறிதளவு பூரித்தும் போயிருப்பேன். அதேபோல் கங்கு அக்காவிற்கும் நல்ல இடத்தில் வாழ்க்கைப் படப்போகிறோம் என்று ஒருவேளை ஆனந்தம் ஏற்பட்டிருக்கும்.

ஆனால், அக்கடிதத்தைப் படித்தது முதற்கொண்டு அம்மாவின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துக்கொண்டிருந்தது. பாட்டிக்கும் அக்கடிதத்தினால் விசேடமாக ஒரு சமாதானமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஏனெனில், அம்மாவைப்போல் சினத்தால் அவள் சீறவில்லை என்றாலும், சோகம் அடைந்தவ ளாகவே காணப்பட்டாள். அதுபோலவேதான் நல்ல இடத்தில் கல்யாணமாகிப் போகப்போகிறோம் என்று கங்கு அக்கா மகிழ்ந் திருப்பாள் என்று நான் சொன்னது பொய்யாக இல்லாமலிருக்க லாம். ஆனால், அவள் நடவடிக்கைகளிலிருந்து அப்படி ஒன்றும் தெரியவில்லை. ஏனெனில், சாதாரணமாகப் பரிகாசம் செய்த வண்ணம் அவளை 'ஏஹே, ஜமீன்தாரம்மா இல்லையா இப் போது?' என்று சொன்னது அவளுக்கு அடியோடு பிடிக்கவில்லை போல் தோன்றியது. அம்மாவின் பேச்சோ இப்படி: 'சனியன் பிடித்த எனது அதிர்ஷ்டமே ஓட்டைதான். இவர் கையால் என்ன ஆகப்போகிறது என்பது தெரிந்த விஷயந்தான். வீண் பேச்சுப் பேசுவதற்கும், மனம் போனபடி கடிதம் எழுதுவதற்கும் என்ன செலவு? அம்மா, நல்ல இடம் பார்த்துப் பெண்ணின் கல்யாணத்தை முடித்துவிடு என்று நீ தாத்தாவிற்கு எழுது! இதுபோன்ற கடிதங்கள் கொஞ்சமாகவா வந்துள்ளன? தங்கமான பையன் இங்கு வந்து தங்கினாலும், அமைதியுடன் இருக்கவிடப் போவதில்லை. மனத்தில் வேறு என்ன? வனவாசம்! வனவாசம்!! பிறந்ததிலிருந்து என் தலையில் வனவாசந்தான் எழுதியிருக்கிறது.' அம்மாவின் இந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது, சட்டென்று என் மனத்தில் என்ன தோன்றியதோ? நான் உடனே அவரும், பாட்டியும் உட்கார்ந் திருந்த இடத்திற்குச் சென்று, 'பாட்டி, அந்த இராவ்ஜீயின்

கடிதம் எங்கே இருக்கிறது? அதை என்னிடம் கொடு. அதில் என்ன எழுதியிருக்கிறது என்பதை நான் படித்துப் பார்க்கிறேன். கொண்டு வா. எனக்கு இப்போது படிக்கத் தெரியும். நான் அதை உனக்குப் படித்துக் காண்பிக்கட்டுமா? பாட்டி, நாங்கள் புது வீட்டிற்குத் தங்கச் சென்ருல், நீயும்கூட எங்களுடன் இருக்க வருவாய் அல்லவா?' என்று கேட்டேன். மனத்தில் தோன்றி யதை அடக்க முடியாமல் எனது குழந்தைத்தனத்திஞலேயே இப்படி நான் பேசினேன். ஆனல், என் தாய்க்கு என்னுடைய அந்த வார்த்தைகள் நஞ்சாகப் பட்டதுபோல் தோன்றியது. ஏனெனில், என் தோளைப் பிடித்துக் குலுக்கியவாறு தன்னிடம் என்னை இழுத்துக்கொண்டு, 'பாழாய்ப் போனவனே! வா இங்கே, பாட்டி வருவாளா, இல்லையா என்பதை உனக்குச் சொல் கிறேன். மேலும், கடிதமும் கொடுக்கிறேன். பாவி பிறந்ததி லிருந்து நான் காண்பது எல்லாம் போதாத காலந்தான். அப் பொழுதிலிருந்து இந்தக் கிரகதசைதான் விடாமல் பின் தொடர்ந்து கொண்டிருக்கிறது.' இப்படிக் கூறியவாறு எனக்கு நல்ல அடியும் கொடுத்தாள்.

அடி வாங்கியதும் துடிதுடித்துக்கொண்டே எங்கள் வீட்டு மாடிமீது போய் ஒரு மூலையில் உட்கார இருந்தேன். ஆனல், அங்கு இருந்த கதவு தாழிடப்பட்டு இருந்தது. அதனுல் அருகில் வாடகைக்கு விடப்பட இருந்த, மாடிப்பக்கம் பின்புறத்து முற்றத்திலிருந்து வெளிச்சம் வந்துகொண்டிருந்த கதவருகில் சென்று உட்கார்ந்தேன். அழுது அழுது ஓய்ந்து போய் நான் அங்கேயே தூங்கிப் போயிருக்கவேண்டும். தூக்கத்தினின்றும் விழித்துக்கொண்டபொழுது, வாடகைக்கு விடப்பட இருந்த அப்பகுதியில் ஏதோ கலவரம் ஏற்பட்டிருந்ததுபோல் தெரிந்தது. யார் யாரோ வந்து போய்க்கொண்டிருந்தார்கள். அதற்குள் நான் படுத்திருந்த இடத்திற்கு அருகில் வந்து ஒரு பெண், 'அம்மாவ், அம்மாவ், அம்மாவோ! இங்கே யார் படுத்திருக் கிருர்கள் பார்?' என்று இரைந்து கத்திஞள். அந்தப் பெண்ணின் குரல் சட்டென்று தெரிந்த மாதிரி பட்டது. ஆனல், என் காதில் விழுந்த வார்த்தைகள் தெளிவாக இருந்தமையால் எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இருந்தபோதிலும் நான் எழுந்து அவளைக் கூர்ந்து கவனித்தேன். நான் எழுந்தவுடன் அவள் திடுக்கிட்டுத் தனது மாடிப்பக்கம் ஓடலாஞள். அதற்குள் உள்ளே ஏற்றி வைத்திருந்த விளக்கின் ஒளி அவள் முகத்தில்

விழவே, எனக்கு நம்பிக்கை ஏற்பட்டது. அளவற்ற ஆனந்தமும், அளவற்ற வியப்பும் கலந்த குரலில் நான் உடனேயே, 'யார்? சுந்தரி!' என்று சொல்லி அவள் பக்கம் விரைந்து சென்றேன். தன் பெயரைச் சொல்லித் தன்னை அழைப்பது யார் என்று அவள் ஆவலோடு என்னைப் பார்க்க ஆரம்பித்தாள். அவள் என்னை அடையாளம் கண்டு கொண்டிருக்கமாட்டாள் என்று முதலில் எனக்குத் தோன்றியது.

ஆனால், உடனேயே அவள், 'அம்மா, அம்மா! இது யார் பார்த்தாயா?' என்று அவள் எந்தக் குரலில் தனது தாயிடம் சொன்னாளோ, அந்தக் குரலையும் அவளுடைய அந்த வார்த்தைகளையும் கேட்டு ஒன்று அல்லது ஒன்றேகால் ஆண்டுகள் பழையதான நினைவு அவளுக்கு வந்திருக்க வேண்டுமென்பது தெரிந்தது. அவளுடைய அம்மாவும் என்னை அடையாளம் கண்டுகொண்டாள். சிறிதுநேரம் ஏதேதோ விசாரித்தாள். கடைசியில், 'அடே, உன்னைத்தான் கீழே தேடிக்கொண்டிருக்கிறாள். போ சீக்கிரம்' என்று என்னிடம் சொன்னாள். அது மட்டுமல்லாமல், முற்றத்தின் ஓரத்தில் சென்று கீழே எட்டிப் பார்த்து என் பாட்டியைக் கூப்பிட்டு, 'இதோ, உங்கள் பையன் இங்கே இருக்கிறான்' என்று பலமாகச் சொன்னாள். ஆகவே, எனக்கு உடனே கீழே செல்லவேண்டி வந்தது. ஆனால், அந்தச் சமயத்தில் நான் எவ்வளவு வருத்தத்துடன் சென்றேன்! சுந்தரியை அங்கே பார்த்தவுடன் எனது உள்ளத்தின் எல்லாச் சோகமும் கரைந்து போயிற்று. அவள் மீண்டும் கண்ணில் தென்படுவாள் என்று நான் என்றுமே எண்ணியிருக்கவில்லை. ஆனால் இன்று இவ்வாறு எதிர்பாராத வண்ணம், மேலும் உள்ளம் இவ்வாறு கொந்தளிப்பான நிலையில் இருந்தபொழுது, அவள் திடீரென்று என் கண்களின் முன்னால் நின்றதும் எனக்கு ஏற்பட்ட இன்பத்தை வருணித்துச் சொல்லமுடியாது.

# 12. எங்கள் பரீட்சை

சுந்தரியும் அவளது குடும்பத்தினரும் எங்கள் வீட்டின் அப் பகுதியில் தங்க வந்த அதே இரவு, நான் அவளைப் பார்த்தேன். அவளைப் பார்த்ததுமே வருத்தத்துடன் கீழே போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சாப்பாட்டிற்குப் பின்னர் மீண்டும் மனத்துள் மாடிக்குச் செல்ல வேண்டும் என்று இருந்தது. ஆனால், அம்மாவின் பார்வையிலிருந்து தப்பிச் செல்வது என்பது முடியாத காரியம். ஒரு முறை முயன்று பார்த்தேன். ஆனால், பயனில்லாமல் போயிற்று. எப்படியோ எல்லாருடைய கவனத் துக்கும் தப்பி மேலே போவதற்கென்று படிக்கட்டின்மீது காலை வைத்ததுமே, 'வாடா இங்கே, பாழாய்ப் போனவனே! எங்கேடா இரவில் போகிறாய் மாடி மேலே?'

இப்படி அம்மா கொடூரமாகக் கத்தவும், திடுக்கிட்டுப் போய் முன்வைத்த காலைப் பின்வாங்க வேண்டி வந்தது. பின் வாங்கினேன். வேறென்ன செய்ய? அந்தச் சமயத்தில் எனக்கு அம்மாவின்மீது ஒரு கோபம் வந்தது பாருங்கள், ஏன் கேட்கிறீர்கள்? ஆனால் என்ன பயன்? எனது உள்ளத்தையும், எனது ஆசையையும் நன்றாகக் கட்டுப்படுத்திக்கொண்டு படுக்கை யில் போய் விழுந்தேன். அப்பொழுதும், 'சாப்பிட்டாயிற்றோ இல்லையோ, போய்ப் படுத்துவிட்டான். எழுந்திரு. ஏதாவது பாடம் படிப்பு உண்டா இல்லையா? இல்லை கொடுக்கட்டுமா இடுப்பில் ஓர் உதை?' என்ற சொற்கள் தொடர்ந்து கேட்டன. பேசாமல் எழுந்திருந்து புத்தகத்தை வைத்துக்கொண்டு படிக்கத் தான் வேண்டியிருந்தது. சிறிது நேரம் ஏதோ முணுமுணுத்தேன். ஆனால், கடைசியில் கண்களைத் திறந்து வைத்துக்கொள்ள முடியாத அளவிற்குத் தூக்கம் இமைகளை அழுத்த, வேறு வழி இல்லாமல் போகவே, யார் என்ன சொல்வார்களோ என்பதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் நான் தூங்கிவிட்டேன்.

மறுநாள் சாப்பிட்டு முடிந்த பின்னர் அங்கும் இங்கும் சுற்றிப் பார்க்காமல் எனது புத்தகப் பையைக் கையில் எடுத்துக் கொண்டு மேலே போனேன். அப்பொழுது சுமார் பதினொன்று அல்லது பதினொன்றரை மணி இருக்கும். நான் போனேன்.

ஆனுல், கதவு உள்பக்கமாகத் தாழிடப்பட்டு இருந்தது. அதைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்திற்கு ஓர் அளவு இல்லே. 'கதவைத் திறவுங்களேன்!' என்று சொல்லத் தைரியம் இருக்கவில்லே. பேசாமல் திரும்பவேண்டும், கீழே போகவேண்டும். இல்லேயெனில் வேறு எங்காவது போக வேண்டும் என்று எண்ணினேன். இவ்வாறு எண்ணி, நான் திரும்பவே இருந்தேன். அதற்குள் கீழ்க்கண்ட வார்த்தைகள் என் காதில் விழுந்தன:

'அம்மா, அண்ணு கொடுத்த அந்தப் புத்தகத்தை எப்போது படிப்பது? வந்து, அதைச் சீக்கிரம் படித்தால் அவர் இன்னென்று கொண்டு வந்து கொடுக்கப் போகிருர், தெரியுமா?'

'இப்போது எனது இந்த வேலே முடிந்ததோ இல்லேயோ, உடனேயே அதை எடுக்கலாம், படிக்க. இங்கே வா, நான் இந்தப் பாத்திரங்களே அலம்பியிருக்கிறேன். இவற்றைச் சுவரின் ஓரமாகக் கொண்டு வை. பிறகு இந்தச் சின்னப் பாத்திரத்தைத் துண்டால் துடை; பின் எனது வேலேயும் சீக்கிரம் முடியும். பிறகு தைப்பதற்காக நான் அந்தச் சட்டையை எடுத்துக்கொள்வேன். நீ உட்கார்ந்து உனது அந்தப் புத்தகத்தை எடுத்துப் படி. தவறினுல் நான் சொல்லித் தருவேன். இன்று நீ ஒழுங்காகப் படிக்க வேண்டும், தெரிந்ததா? மறுபடியும் இரவில் படித்துக் காண்பிக்கச் சொன்னுல் மடமடவென்று படிக்கத் தெரியவேண்டும்.'

தாய்க்கும் பெண்ணுக்குமிடையில் நடந்த இந்தப் பேச்சு வார்த்தையைக் கேட்டு நான் உண்மையாகவே பிரமித்துப் போனேன். இது என்ன? எனக்கு ஒன்றும் புரியவே இல்லே. இதுவரை என்றுமே படிப்பு விஷயமாகப் பெண்கள் பேசியதாக நான் அறிந்ததில்லே. எங்கள் வீட்டிலேயே என்னுடைய பாட்டி, அம்மா, மாமி அல்லது கங்கு அக்கா இவர்களில் யாருக்குமே படிப்பின் வாசனேகூடக் கிடையாது. ஆனுல் சுந்தரியோ சொல்கிருள்: 'அம்மா, அந்தப் புத்தகம் படிக்க வேண்டும் அல்லவா?' அவள் அம்மாவும் சொல்கிருள்: 'என் வேலே முடிந்தது என்ருல் எனது அருகில் உட்கார்ந்து படி. தவறின இடத்தில் சொல்லித் தருவேன்!' இந்த இரகசியந்தான் என்ன? சுந்தரிக்குப் படிக்க எப்படித் தெரியும்? அவள் அம்மாவுக்குக் கற்றுக் கொடுக்க எப்படித் தெரியும்? இவை யாவற்றையும் கண்ணெதிரில் பார்க்க வேண்டும் என்ற கட்டுக்கு அடங்காத

ஆவல் ஏற்பட்டது. உடனேயே சுந்தரியைக் கூப்பிட்டு, 'நான் உனக்குக் கற்றுக் கொடுக்கிறேன், என்ன?' என்று சொல்லிக் கதவைத் திறக்கச் சொல்லவேண்டும் என்னும் ஆவல் ஏற்பட்டது. கதவைத் தட்டி, 'சுந்தரே' என்று அழைக்கும் தறுவாயிலும் இருந்தேன். ஆனால், எனக்கே என்னைப்பற்றி என்ன தோன்றியதோ? இருக்கட்டும், எப்படியும் சுந்தரியின் அம்மாவின் வேலை முடிந்து, அவளும், சுந்தரியும் வந்து உட்காரும் வரை நாம் போகக்கூடாது என்று நினைத்தேன். நினைத்தவாறே நடந்துகொள்ள முடிவு செய்தேன்.

உடனேயே அந்த இடத்திலிருந்து திரும்பினேன். பிறகு எங்களுடைய சாமான்களைப் போடுவதற்கான இடத்திற்குப் போய் உட்கார்ந்தேன். அங்கும் இங்கும் பார்த்தேன். எனது பையிலிருந்த எல்லாப் பொருள்களையும் கீழே கொட்டினேன். அவற்றையெல்லாம் எண்ணினேன்; பல்வேறு வகைகளில் அவற்றை அடுக்கி வைத்தேன். பிறகு அது பிடிக்கவில்லை என்று அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்தேன்; மீண்டும் வேறு முறையில் அடுக்கினேன். பிறகு மறுபடியும் அதை ஒன்று சேர்த்தேன். இவற்றுள் எதையெல்லாம் சுந்தரிக்குக் காண்பிக்க வேண்டும், அவளுக்கு எது எது பிடிக்குமோ, அவள் எதையெல்லாம் கேட்பாளோ, இல்லையெனில் நாமாகவே அவளுக்கு என்னவெல்லாம் கொடுக்கவேண்டுமோ என்பன போன்ற எண்ணங்கள் எனது இதயத்தில் உதயமாகிக் கொண்டிருந்தன.

வேறு சமயங்களில் இதே பொருள்களைக் கடை பரப்பி உட்கார்ந்திருக்கும்பொழுது கங்கு அக்கா வந்து ஓர் ஓட்டைச் சல்லிக் காசைத் தூக்கினாலும், அதனால் அலறிக் கதறி எனது உயிர் சுக்குநூறாகி விடுவதுபோல ஆகும். ஆனால், இன்று அப் பொருள்களில் ஒவ்வொன்றும் சுந்தரிக்குப் பிடிக்குமா, நாம் அதை அவளுக்குக் கொடுக்கலாமா, அவளுக்குக் கொடுத்தால் அவள் எப்படி அளவற்ற ஆனந்தம் அடைவாள், அவள் எப்படி மகிழ்வுடன் சிரிப்பாள், பின் நாமும் சிரிப்போம், அவள் எவ்வளவு நல்லவள்—இப்படிப்பட்ட எண்ணங்களே என் உள்ளத்தில் எழும்பிக்கொண்டிருந்தன. 'அவை எப்படி வந்தன, ஏன் வந்தன?' என்று ஆய்ந்து பார்க்கும் திறன் எனக்கு இல்லை என்று முன்பே சொல்லியிருக்கிறேன். அப்படி இருக்க அதை மீண்டும் எதற்குச் சொல்லவேண்டும்? கங்கு அக்கா எனது சொந்த சகோதரி. அவள் பார்ப்பதற்கு அழகாகத்தான்

இருந்தாள்; குணத்தில் சிறந்தவள்தான். என்னிடம் மிக அன்புடன் பழகுவாள். குறைந்த பட்சம் அந்தச் சமயத்திலாவது சுந்தரிக்கும் அவளுக்கும் இடையில் வயதைத் தவிர வேறு ஒரு வேறுபாடும் இருந்ததாகத் தெரியவில்லை. சுந்தரி என்னைவிட இரண்டு மூன்று ஆண்டுகள் சின்னவளாக இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. அக்கா என்னைவிடப் பெரியவளாக இருந்தாள். ஆனால், அந்த வயதிலிருந்தே எனக்குச் சுந்தரியிடம் ஒரு விசித்திரமான கவர்ச்சி ஏற்பட்டிருந்தது. சுந்தரிக்குப் பிடித்த ஏதேனும் சில பொருள்களைக் கங்கு அக்கா எடுத்துக் கொண்டுவிடுவாளோ என்று தோன்ற, இப்பொழுது நமது விசித்திரப் பொருள்களின் சேர்க்கையை நல்ல பாதுகாப்புடன் வைக்கவேண்டும் என்று எண்ணி, அவ்வாறே செய்தேன்.

பிறகு அங்கிருந்து சென்றேன். நேராக அவர்களுடைய வாசல் கதவின்முன் சென்று நின்றேன். கதவு இன்னமும் மூடியவாறே இருந்தது. ஆனால், தனது இனிய குரலில் சுந்தரி ஏதோ படித்துக் கொண்டிருந்தது மட்டும் எனக்குத் தெளிவாகக் கேட்டது. நான் கவனித்துக் கேட்டேன். அவள் படித்த கதையின் தலைப்பு என் காதில் தெளிவாக விழுந்தது. தொடர்ந்து, அவள் அந்தக் கதையைத் தெளிவாகப் படிக்கத் தொடங்கினாள். அவள் படிக்கும்பொழுது மிகக் குறைந்த இடங்களில்தான் தடுமாறினாள். அதிலும் ஒருமுறை தன்னைத்தானே திருத்திக் கொண்டாள். இரண்டாவது இடத்தில் மட்டும் அம்மா அவளுக்குச் சொல்லிக் கொடுத்தாள். அவற்றையெல்லாம் கேட்டு உண்மையிலேயே நான் பிரமித்துப் போய்விட்டேன். வாசகர்களே, சொல்வதற்கு எனக்கு வெட்கமாக இருக்கிறது! ஆனால், உண்மையைச் சொல்வதில் வெட்கப்பட்டு என்ன பயன்? நான் எவ்வளவு நாளாகப் பள்ளிக்கூடத்திற்குச் சென்று வந்துகொண்டிருந்தேன். ஆனால், அச்சமயம் எனக்கு அவளைப்போல் மடமடவென்று படிப்பதற்கு வரவில்லை.

பம்பாய்க்கு நான் சென்றிருந்தபோது மழலைப் பேச்சு பேசிய அதே பெண், ஒரே ஆண்டில் ஈஸாப் நீதிக் கதைப் புத்தகத்திலிருந்து (அவள் கையில் இருந்த புத்தகம் 'ஈஸாப் நீதி' என்று உள்ளே போன பின்னர்தான் எனக்குத் தெரிந்தது.) சரமாரியாகப் படிப்பாள் என்பது நடக்கக்கூடிய காரியம் என்று எனக்குத் தோன்றவே இல்லை. என்னைப் பொறுத்தவரையில், எங்களுடைய பாடப் புத்தகத்தைத்தான் நான் கடகடவென்று

படித்துக்கொண்டிருந்தேன். வேறு எந்தப் புத்தகத்தையும் அதுவரை பார்த்ததாகக்கூட எனக்கு நினைவு இல்லை! வேறு புத்தகத்தை நான் எங்கிருந்து பார்ப்பேன்? எங்கள் வீட்டில் புத்தகந்தான் எதற்கு வரப்போகிறது? வீட்டில் படிப்பவன் நான் ஒருவன்தான். எனது அறிவும் 'அ' வரைக்கும்தான் வந்திருந்தது! 'ஔ' இன்னும் எவ்வளவோ தொலைவில் இருந்தது! நிற்க. சுந்தரி அந்தமாதிரி படிப்பதைக் கேட்டு நானே பிரமித்துவிட்டேன். மேலும், 'நான் உனக்குக் கற்றுக் கொடுக்கிறேன்' என்று சொல்லி, அவளிடம் கதவைத் திறக்கச் சொல்லவேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் முதலில் (முதலில் நான் கதவருகில் சென்ற சமயம் படிப்பைப்பற்றித் தாய் பெண்ணிற்கிடையே பேச்சைக் கேட்டபொழுது) தோன்றியதே; அதற்காக நான் இப்பொழுது வெட்கம் அடைந்தேன்.

இருந்தபோதிலும் அங்கிருந்து ஓடிப் போக வேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை. அவள் எந்தப் புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறாள் என்று பார்க்க வேண்டும், அதை நாமும் படித்துக் காட்டவேண்டும் என்று என் மனத்தில் தோன்றியது. அப்போது முன்பின் பார்க்காமல் நான், 'சுந்தரே, சுந்தரியின் அம்மா' என்று கூப்பிட்டேன். உடனே சுந்தரியின் தாய் எழுந்து வந்து கதவைத் திறந்தாள். 'வாருங்கள், உட்காருங்கள்' என்று அவள் சொன்னாள். அவள் முன்னால் கத்தரித்த பெரிய வெள்ளைத் துணி ஒன்று இருந்தது. அதை அவள் தைத்துக் கொண்டிருந்தாள். சுந்தரி தன் கையில் திறந்த புத்தகத்தைப் பிடித்தவண்ணம் என்மீது பார்வையைச் செலுத்தினாள்.

'சுந்தரியின் தாய் இவ்வளவு பெரியதாக என்ன தைத்துக் கொண்டிருக்கிறாள்?' என்று எண்ணியதும், சட்டை (ஷர்ட்) தைக்கும் பேச்சை அவள் முன்பே சொல்லியது எனது நினைவிற்கு வந்தது. இதை எண்ணி வியந்த வண்ணம் நான் அங்கே சுந்தரியின் அருகில் அமர்ந்தேன். அதற்குள் அவள் அம்மா அவளிடம், 'ம், முடிக்கிறாயல்லவா சீக்கிரம்? மேலும் வேறு கதையைப் படிக்கவேண்டும் இல்லையா? இரவில் அவர் கேட்பார் நிறையக் கதைகளை. அப்போது உனக்குப் படிக்க வரவில்லையென்றால் பிறகு அவமானந்தான். பார்த்துக்கொள்! ''சே, வெட்கக்கேடு!'' என்று சொல்வார்!'

'ஐயோ, ஆமாம்! நான் வெட்கம் அற்றவள் என்ற பெயரைக் கேட்டுக் கொள்வேன்' என்று சுந்தரி சிரித்தவண்ணம்,

ஆனல், உறுதியுடன் கூறினள். 'நான் இந்தக் கதைகளை மட மடவென்று விடாமல் சொல்லி முடித்துவிட்டு பிறகு, ''அண்ணு தான் ஏமாந்து போனுர்'' என்று சொல்வேன்' என்று சொன்னுள்.

'ஏய்! பெரியவர்களை இப்படிச் சொல்லக்கூடாது. சரி, படியேன் பார்க்கலாம். நீ பிழை செய்தால் இவர் திருத்துவார்; என்ன? நன்ருகப் படி. இல்லையென்ருல் அவர் வந்த பிறகு என்ன, இப்பொழுதே உனக்கு அவமானம் ஆகும்' என்று சுந்தரியின் அம்மா சொன்னுள்.

வாசகர்களே! இப்பேச்சைக் கேட்டு எனது உள்ளத்தின் நிலை என்ன ஆகியிருக்கும் என்பதை நீங்களே ஊகித்துப் பாருங்கள். எனக்கு ஏற்பட்ட அவமானத்தை நானே சொல்லிக் கொள்ளப் போவதில்லை. 'சுந்தரி தவருகப் படித்தால் நான் திருத்தப் போகிறேன்!' என்ற வார்த்தைகளைக் கேட்டதுமே நான் எவ்வளவு வெட்கம் அடைந்தேன் என்பதைப்பற்றி ஏன் கேட்கிறீர்கள்? அங்கிருந்து எழுந்து ஓடிப்போய் விடவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ஏனெனில், சுந்தரியைப் போல் எனக்கு விரைந்து படிக்கத் தெரியாது என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். அவள் தவறிய இடத்தில் அவளைத் திருத்துவதற்கு ஏற்ற அளவு திறமை எனக்கு உண்டு என்று எனக்குத் தோன்றவில்லை. ஆனல், இடத்தைவிட்டு மட்டும் நான் எழுந்திருக்கவில்லை. சுந்தரி மீண்டும் படிக்கத் தொடங்கினள். நான் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தேன். அவள் ஒரு கதை படித்து முடித்ததுமே, சுந்தரியின் அம்மா என்னிடம் சொன்னுள்: 'இப்பொழுது அடுத்த கதையை நீங்கள் படியுங்கள், என்ன? பார்க்கலாம், எப்படிப் படிக்கிறீர்கள் என்பதை! இந்தப் பெண்ணுக்கு இவ்வளவு நாட்களாகச் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருக்கிறேன். இப்பொழுதுதான் ஏதோ கொஞ்சம் படிக்க ஆரம்பித்திருக்கிருள். நீங்கள் படியுங்கள் பார்க்கலாம், நன்ருக. அப்பொழுது அவளுக்குத் தெரியும் எப்படிப் படிக்கிறது என்பது!' சுந்தரியின் அம்மா இவ்வார்த்தைகளை மிகச் சாதாரணமாகத்தான் சொன்னுள். அவள் மனத்தில் வேறு எந்த எண்ணமுமே இருக்கவில்லை. ஆனல், அது எனது உள்ளத்தை எவ்வளவு சுருங்கச் செய்தது என்பதைப்பற்றி என் சொல்ல? நான் மிகவும் வெட்கம் அடைந்தேன். எனக்கு அவ்வளவு மள மளவென்று படிக்க வராது என்று எனக்கு நிச்சயமாகப் பட்டது.

ஆனால், அங்கிருந்து எழுந்து வெளியில் செல்வதற்கும் எனக்கு மனம் வரவில்லை. ஒருமுறை இலேசாகச் சிரித்து, வெட்கத்தோடு நான் சொன்னேன்: 'வந்து, நான் இந்தப் புத்தகத்தை இன்னும் படிக்கவில்லை!' இப்பொழுது நிச்சயமாக ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. ஆனால், இவ்வாறு நான் சொல்வதில் எனது நோக்கம், 'அப்படியானால் சரி, படிக்கவேண்டாம் நீங்கள்' என்று அவர் சொல்லவேண்டும் என்பதுதான்.

ஆனால், நான் எதிர்பார்த்தது நடக்கவில்லை. மாறாக, அந்த அம்மாள் சொன்னாள்: 'மிகவும் நல்லதாகப் போயிற்று. அப்போது உங்களுக்கு இன்னமும் ஆனந்தமாக இருக்கும். இந்தக் கதை வேடிக்கையாக இருக்கிறது. வாசியுங்கள்!' இவ்வளவு சொன்ன பிறகு எப்படித் தப்பித்துக்கொள்வது? கவர்ச்சிகரமான புத்தகத்தை எடுத்துக்கொண்டு எனது மேலான படிக்கும் தோரணையையும் என்னிடம் இருந்த மனோதிடத்தையும் ஒன்றாகத் திரட்டி வரவழைத்துக்கொண்டு ஒருமுறை படிப்பதில் என் தீரத்தைக் காட்டத்தான் செய்தேன். ஆனால், சாதாரணமாகப் படிப்பதற்கும், நமது பரீட்சையே நடக்கப்போகிறது என்ற உணர்வுடன் படிப்பதற்கும் எவ்வளவு வித்தியாசம்!

முதலில் நான் சாதாரணமாகவே படிக்க ஆரம்பித்தபோதிலும் அந்தக் கதையைப் படிப்பதில் பல தவறுகள் செய்திருப்பேன். எனது பரீட்சை நடக்கப்போகிறது என்று எண்ணிப் படிக்கத் தொடங்கினேன். எவ்வளவோ முறை நான் தடுமாறியிருப்பேன். ஆனால், எப்படியோ ஒருவாறாகக் கதையைப் படித்து முடித்துவிட்டேன். அது மட்டும் அல்ல. சுந்தரியின் தாய், 'பலே! பலே! அழகாகப் படித்தீர்கள்!' என்று சொல்லி நன்றாக என் முதுகில் தட்டிக் கொடுத்தாள். சுந்தரியும் இதுபோலவே ஏதோ பேசினாள். ஆனால், கேளுங்கள்! உண்மை என்ன என்பதை நான் அறிந்திருந்தேன். சுந்தரியின் வாசிப்புடன் ஒப்பிடும்போது என்னுடைய வாசிப்பு படுமட்டமாக இருந்தது என்பதை நான் நிச்சயமாக அறிந்திருந்ததால், அதைப்பற்றி அதிகம் ஒன்றும் பேசாமல், அந்த விஷயத்தையே நான் மாற்ற முயற்சி செய்தேன். 'என்னங்க, சுந்தரியின் அம்மா, நீங்கள் இவ்வளவு பெரிய சட்டையை யாருக்காகத் தைக்கிறீர்கள்?'

இந்தக் கேள்விக்கு நேரடியாகப் பதில் கூறாமல், என்னைப் பார்த்து மெதுவாகச் சிரித்தவண்ணம் அவர் கேட்டார்: 'யாருடையது சொல்லுங்கள் பார்க்கலாம்?' அவர் என்னிடமே

அக்கேள்வியைத் திருப்பிக்கேட்டதும் நான் வியப்பு அடைந்தேன். அதன் பொருளே எனக்குப் புரியவில்லே. நான் மீண்டும் அவரிடம் இவ்வாறு சொன்னேன்: 'எனக்கு என்ன தெரியும்? இவ்வளவு பெரிதாக இருக்கிறது! அதனல் நிச்சயம் சுந்தரியின் பொம்மை களுடையதாக இருக்காது' என்று நான் சொன்னதும், சுந்தரி சட்டென்று வந்து, 'அது எங்க அண்ணுவினுடையது' என்ருள்.

'உங்க அண்ணுவுடையதா? உங்க அண்ணு யார்?'

'அப்படின்னுக்க உங்களுக்கு எங்க அண்ணுவைத் தெரியாது? அவர் வந்து இப்போது ஆப்பீஸுக்குப் போயிருக்கிருர். அவருடைய சட்டை இது.'

'உங்க அண்ணு என்ருல் உங்க அப்பாவா?' என் மூளையில் திடீரென்று ஒளி விழுந்ததுபோலாகி நான் மீண்டும் கேட்டேன்.

'ஆமாம், ஆமாம். அவர் வந்து ஆப்பீஸுக்குப் போயிருக் கிருர். அவரது சட்டை.'

சுந்தரியின் அம்மா மௌனமாக எங்கள் இருவரின் பேச்சையும் கேட்டுக்கொண்டிருந்தாள். நான் அவரிடம் திரும்பிச் சொன் னேன்: 'அவருடைய சட்டையை நீங்களே தைக்கிறீர்களா? தையற்காரன் தைக்கமாட்டாஞ?'

'தைக்கமாட்டான். அப்புறம் என்ன செய்வது? நாமே தைத்துக்கொள்ள வேண்டாமா?' அவள் கலகல என்று சிரித்துக் கொண்டே சொன்னுர். பின் உடனேயே தொடர்ந்து என்னிடம் சொன்னுள்: 'சரி, இப்போது நீங்கள் படித்தீர்களே. அந்தக் கதையின் கருத்து எழுதியிருக்கிறது அல்லவா கீழே? அதன் பொருளேச் சொல்லுங்கள், பார்க்கலாம்?'

நான் கருத்தைப் படித்திருந்தேன். ஆனல், அதன் பொருள் யாருக்குப் புரிந்தது? அவள் சுந்தரியையும் கேட்டாள். அவள் ஏதோ தப்பும் தவறுமாகச் சொன்னுள். பின்னர் சுந்தரியின் அம்மா அதை நன்ருக விளக்கி அதன் பொருளேத் தெளிவாகப் புரியவைத்தாள். அதன் பிறகு சுந்தரி தன் தாயிடம் சொன்னுள்: 'அம்மா, இங்குள்ள வேலேகளே முடித்துக் கொண்டதும் எங்கேயோ போகவேண்டும் என்று சொன்னுயே?' அத்துடன் அந்த அம்மாளும் வேலேயைச் சுருட்டி வைத்து விட்டு எழுந்தாள். அங்கேயே இருக்கவேண்டும், சுந்தரிக்கும், அவள் அம்மாவுக்கும் சாமான்களே ஒழுங்குபடுத்துவதில் உதவி செய்யவேண்டும் என்று எனக்கு உள்ளூற ஆசையாக இருந்தது.

அந்த எண்ணம் தோன்றியதுமே எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆனல், அதற்குள் பள்ளிக்கூடத்திற்குப் போக வேண்டிய நேரமாகிவிட்டது. 'இந்தப் பாவி எங்கே போய் உட்கார்ந்திருக்கிருனே?' என்ற வார்த்தைகள் காதில் விழுந் ததுமே, மிகுந்த துக்கத்துடனும் வேதனையுடனும் என்னை நானே அங்கிருந்து இழுத்துச் செல்லவேண்டியிருந்தது.

# 13. பூமியில் சுவர்க்கம்

சுந்தரியின் தந்தை எங்கள் வீட்டில் தங்க வந்த நாள், எனது வாழ்க்கைச் சரித்திரத்தின் முதல் பகுதியில் மிக மகத்தான நாளாக இருந்தது. அந்த நாளிலிருந்து ஒரேயடியாக, திடீரென்று அல்ல; ஆனால், மொத்தத்தில் மெள்ள மெள்ள எனது நிலையில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்பட்டது. சுந்தரியின் அப்பா மிக நல்ல மனிதர். அவர், அவர் மனைவி, சுந்தரி இம்மூவரும் ஒருவரை ஒருவர் தெய்வமாகவே கருதி வந்தார்கள். யாருக்கு யார்மீது அன்பு அதிகம் என்று சொல்வது கடினம். சுந்தரியின் அம்மா, அப்பா இருவரும் ஒருவரை ஒருவரும், சுந்தரியையும் கவனித்துக்கொள்வதில் ஈடுபட்டிருந்தார்கள். அவர்களுடைய ஒழுங்குமுறை, காரியங்களின் திட்டமிட்ட தன்மை, இடையறாது உழைக்கும் தன்மை முதலான அலௌகிக குணங்களைப் பார்த்தும், மேலும் அவர்கள் என்னிடம் மிகவும் அன்புடன் பழகியதாலும், நான் மெள்ள மெள்ள எனது பொல்லாத்தனத்தை விட்டுவிட்டு நல்லவனாக ஆகத் தொடங்கியதில் ஆச்சரியமில்லை. சுந்தரியின் அப்பாவின் கால நியமனங்கள் மிகச் சிறந்த முறையில் திட்டமிடப்பட்டவையாக இருந்தன. நான் பார்த்தவரை ஒரு நாள்கூட அவர் காலம் தவறி ஒரு காரியத்தைச் செய்ததாக எனக்கு நினைவில்லை. காலையில் ஐந்து மணியிலிருந்து இரவு பத்துமணி வரை ஒவ்வொரு மணி நேரமும் அந்தந்தக் காரியம் குறிப்பிட்டு வைத்ததுபோல் ஒழுங்காக நடக்கும்.

அவருக்குப் படிப்பதில் அளவு கடந்த ஆர்வம் இருந்தது. இரவில் சாப்பிட்டான பிறகு, ஒன்றரை மணி நேரம் உட்கார்ந்து ஏதாவது படித்துக்கொண்டிருப்பது அவருடைய தவறாத பழக்கமாக இருந்தது. பிறகு காலையில் ஐந்து மணிக்கு எழுந்து காலைக் கடன்களை முடித்ததும் ஏதோ புத்தகம் எழுதுவதில் தவறாமல் இரண்டு மணி நேரம் செல்லும். காலையில் ஆறு மணியிலிருந்து எட்டு மணி வரை எப்பொழுதும் எழுதுவதில் ஈடுபட்டவராக அவர் காணப்படுவார். ஏதாவது தவிர்க்க முடியாத தடங்கல் ஏற்பட்டாலோ அல்லது யாரேனும் வந்து

சமயத்தை எடுத்துக்கொண்டாலோ, மறுநாள் விடியற்காலே, முதல் நாள் குறைந்த அளவு நேரத்தைத் தூக்கத்தில் குறைத்து, குறித்த காரியத்தைச் செய்துவிடுவார். அவர் என்ன புத்தகம் எழுதிக்கொண்டிருந்தார், அது பின்னர் என்ன ஆயிற்று என்பது பற்றிப் பின்னுல் சொல்கிறேன். என் உள்ளத்தில் நல்ல மாறுதலே ஏற்படுத்தும் வகையில் அவருடைய கூட்டுறவில் என்ன இருந்தது என்பது வாசகர்களுக்குத் தெளிவாகத் தெரிய வேண்டும் என்பதற்காகத்தான், இப்போதைக்கு நாளுகவே அவரது தினசரி அட்டவணையைப்பற்றிச் சொன்னேன். மணி எட்டு அடித்தால் அவர் சுந்தரியை அருகில் உட்கார வைத்துக் கொண்டு பாடம் சொல்லிக் கொடுப்பார். பின்னர் நானும் ஏதேனும் கற்றுக் கொள்வதற்காகப் போகலானேன். அவரும் மிகவும் மனப்பூர்வமாகச் சொல்லிக் கொடுப்பார். இவ்வாறு அவரும், மதியப் பொழுதில் சுந்தரியின் அம்மாவும் அவளுக்குச் சிறு வயதிலிருந்து கற்றுக் கொடுத்து வந்ததால், ஒரே ஆண்டுக் காலத்தில் சுந்தரிக்கு என்னேவிட நன்ருகப் படிக்க வந்துவிட்டது என்பதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது?

அதிலும் அவள் அப்பா சொல்லிக் கொடுக்கும் முறையில் சொல்ல முடியாத அன்புக் கசிவும், உள்ளத்தைக் கவரும் தன்மையும் இருந்தன. அதன் காரணமாக எங்கள் உள்மனம் அதில் லயித்துவிடும். சில சமயங்களில் மாலே நேரங்களிலும், ஞாயிற்றுக்கிழமையன்று மதியத்திலும் சுந்தரியின் அம்மா தனது தையல் வேலேயையோ அல்லது அரிசி பொறுக்கும் வேலேயையோ செய்துகொண்டே எங்கள் அருகில் உட்கார்ந்தவண்ணம் எங்களுக்குப் பலவகை வேடிக்கையான கதைகளேச் சொல்வாள்; அல்லது எங்களுக்குச் சொல்லப்பட்ட கதைகளேக் கேட்பாள். சில சமயங்களில் நாங்கள் எல்லோருமே, சுந்தரியின் அப்பாவும் கூட அரிசி பொறுக்கும் வேலேயில் பங்கு கொள்வோம்.

அவர்கள் குடிவந்த புதிதில் சுந்தரியின் அம்மா அதிகமாக எங்கள் வீட்டிற்கு வந்துகொண்டிருக்கவில்லே. அவள் படிக் கிருள், சட்டை தைக்கிருள் என்ற விஷயங்கள் எங்கள் வீட்டில் இருந்தவர்களுக்குத் தெரிந்தபொழுது, 'சீர்திருத்தவாதி போலும்! என்னம்மா இந்தப் பொண்டுகள்! அவர்களுக்கு இப் பொழுதும் புத்தகம் படிக்கவேண்டும். எங்களேப் போன்றவர் களிடம் பேசக்கூட வேண்டாம். ஷர்ட் தைப்பது, கவுன் தைப்பது, பெண்ணுக்கு வெள்ளேக்காரர்களின் முறைப்படி

பாவாடை அணிவது' என்ற பேச்சு ஆரம்பித்தது. ஆனால், போகப் போக நற்குணம் கொண்ட அந்த அம்மாளின் பண்புகள், வேலைத் திறன்கள் ஆகியவற்றின் சிறப்பு பரவி, அவற்றின் உபயோகமும் நிரூபணமானபொழுது, எங்கள் வீட்டில் இருந்த மங்கையர்க்கும்கூட அவளிடத்தில் மதிப்பு ஏற்பட்டது.

அதேபோல் முதன்முதலில் நான் அவர்களிடம் போகத் தொடங்கியபோது எனக்கு ஒரேயடியாகத் தடைவிதிக்கப்பட்டுக் கொண்டிருந்த நிலை மாறியது. அந்த ஆள் எனக்குக் கற்றுக் கொடுக்கிறார், அவர் நன்றாகச் சொல்லிக் கொடுப்பதால் என்னுடைய நடைமுறையிலும் இலேசாக மாறுதல் ஏற்பட்டு வந்தது, என்னுடைய பொல்லாத்தனம் குறைந்து நான் மிகவும் அமைதியும், பொறுமையும் கொண்டவனாக ஆனேன் என்று வீட்டில் இருப்பவர்களுக்குத் தெரிந்தபொழுது, என்னை அவர்கள் தொந்தரவு செய்வது மிகவும் குறைந்தது. மாடியில் அவர் களிடம் போவதற்கு எனக்கு எப்போதும் அநுமதி கிடைக்க லாயிற்று. இவ்வாறு எனது வாழ்வில் சில நாட்கள் மிக மிக ஆனந்தமாகக் கழிந்தன. சுந்தரியுடன் எனது சிநேகம் பெருகியது.

# 14. கனவா? நினைவா?

நான் எழுதுகிறேன். ஆனால், பெரும்பாலான வாசகர்கள் என்னை வெட்கமற்றவன் என்றோ, பொல்லாதவன் என்றோ சொல்வார்கள். ஆனால் வேறு வழியில்லை. என் மனத்தில் தோன்றுவனபற்றியும், என் கையால் அறிந்தோ அறியாமலோ நிகழ்ந்தவைபற்றியும் நான் தெளிவாக எடுத்துச் சொல்லப் போகிறேன். சுந்தரியுடனும் அவள் பெற்றோர்களுடனும் நான் எவ்வளவுக் கெவ்வளவு நெருங்கிப் பழகினேனோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிகமாக எனது உள்ளம் அவர்களிடத்தில் ஒன்றியது. மேலும், அது எவ்வளவுக் கெவ்வளவு அவர்களிடம் ஒன்றியதோ, அவ்வளவுக் கவ்வளவு அது வீட்டிலிருந்து விடுபட்டது. அப்படி வீட்டில் ஒட்டுவதற்கு விசேடமாக ஒரு காரணமாவது இருந்தது என்பதும் இல்லை. இப்போது அது புது இடத்தில் வேறு ஒன்றி விட்டது. பின் என்ன?

ஆனால், வீட்டிலிருந்தோர்க்கு அது தவறாகப்படவில்லை என்ற அளவுக்கு நான் மகிழ்ந்தேன். பார்க்கப் போனால், நான் வீட்டில் இருந்தால் பொல்லாத்தனம் செய்கிறேன், அது இப்பொழுது மறைந்தது என்று அவர்களுக்குச் சமாதானம் ஏற்பட்டது. சுந்தரியின் குடும்பத்தினர் எங்கள் வீட்டிற்கு வந்த பிறகு எனது பள்ளியில் அரை ஆண்டுத் தேர்வு நடந்தது. அதில் எல்லாப் பாடங்களிலும் நான் தேறி, வகுப்பில் மூன்றாவது இடம் பெற்றேன். அதைக் கண்டு என் பாட்டிக்கு அளவற்ற ஆனந்தம். அவள் அதற்காக என்னை மிகவும் பாராட்டினாள். அதன் காரணமாக அவளுக்கு உண்மையிலேயே மிகுந்த பெருமை ஏற்பட்டது. அதனால் அவள் எல்லோருக்கும் கற்கண்டு அளித்தாள். ஆனால், 'ஏன் மூன்றாவது இடந்தான் கிடைத்தது, முதல் இடம் பெறுவதற்கு என்ன?' என்று அம்மா மட்டும் என்னைக் கடிந்துகொண்டாள். இருந்தபோதிலும் உள்ளூற அவள் மகிழ்ந்தாள் என்பது எனக்குத் தெரிய வந்தது. ஏனெனில், நான் அருகில் இல்லை என்று எண்ணி ஒருமுறை அவள் பாட்டியிடம் சொன்னாள்: 'பையன் எவ்வளவோ திருந்தியிருக்கிறான். இவ்வாறு திருந்துவான் என்று எனக்குத் தோன்றி

யிருக்கவில்லே. இந்தச் சிவராம் பந்த் அவர்கள் கற்றுக் கொடுத்த தன் பலன்தான்! மிக நல்ல மனிதர். இப்பொழுதெல்லாம் அவனுடைய தொணதொணப்பு இருப்பதில்லே. ஒரு தொந்தரவும் செய்வதில்லே. நாள் முழுதும் மேலேயே இருக்கிருன். மேலும், அந்தப் பெண் மிகவும் . . .' இவ்வளவு அவள் பேசியதும் நான் இருப்பது அவள் கவனத்தில் வந்துவிட்டது. உடனேயே சிறிது சிரித்து, ஆனுல் கோபத்தையும் வரவழைத்துக்கொண்டு, 'பாவி! மறைந்து நின்று பேச்சைக் கேட்கிருயா? மூச்சைப் பிடித்துக்கொள், ஜாக்கிரதை!' என்ருள். ஆனுல், நான் எங்கே மூச்சைப் பிடித்துக் கொள்கிறேன். நான் அங்கிருந்து ஓடியே போய்விட்டேன். 'அந்தப் பெண் மிகவும் ...' இந்த வார்த்தைகளேக் கேட்டதுமே நான் இவள் சுந்தரியைப்பற்றி என்ன சொல்லப்போகிருள் என்பதை அறிய ஆவல் கொண்டேன்.

ஆனுல் எல்லாம் காற்றில் பறந்து போயிற்று. அதனுல் எனக்கு வருத்தமாக இருந்தது. ஆனுல், என்ன பயன்? போகட்டும்! ஆனுல், நான் முக்கியமாகச் சொல்ல விரும்பியது என்னவென்ருல், சுந்தரியின் அப்பா சொல்லிக் கொடுக்கத் தொடங்கியதால் எனக்கு நல்ல பலன் ஏற்பட்டது தெரிய வந்ததும் எனக்கு மிகுந்த இலாபம் ஏற்பட்டது. வீட்டில் எனக்கு யாரும் ஒரு தொந்தரவும் கொடுக்கவில்லே. தாம் சொல்லிக் கொடுப்பதைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்ளும் பையன் இவன் எனத் தோன்றி, சிவராம் பந்த் அவர்களின் தனி அன்பும் எனக்குக் கிடைத்தது. ஓரளவுக்குச் சொல்லப் போனுல் நான் அவருடைய மகனுகவே கருதப்பட்டேன் என்று சொல்வதில் தவறு இல்லே. ஒவ்வொரு பாடத்தையும் எனக்கு நன்ருகச் சொல்லிக் கொடுத்து, அதை நான் நன்கு தயார் செய்கிறேனு இல்லேயா என்றும் பார்ப்பார்.

இவ்வாறு இகலோக சுவர்க்கத்தில் எனது நாட்கள் ஆனந்தமாகக் கழிந்தன.

சுந்தரியின் சிநேகம் வளர்ந்துகொண்டே வந்தது. அவளே மணந்து கொள்ளவேண்டும், அவள் என் மனேவி ஆகவேண்டும் என்ற எண்ணங்கள் என் இதயத்தில் உதித்த வண்ணம் இருந்தன என்பதன் குறிப்பு வாசகர்களுக்கு முன்பே கிடைத்துள்ளது. அவள் மனத்திலும் என்னேப்பற்றி இவ்வாறு தோன்றியதா, இல்லேயா என்பதுபற்றி எனக்குப் பல நாட்கள் தெளிவாகாமலே இருந்தது. பிறகு ஒருநாள் அதைப்பற்றித் தெரிந்து

கொள்ளச் செய்த ஒரு நிகழ்ச்சி—மிக விசித்திரமானதொன்று—நிகழ்ந்தது.

என் பாட்டிக்குத் தெரிந்தவர் ஒருவர் வீட்டில் ஒரு கல்யாணம் இருந்தது. அவ்வீட்டு அம்மாள் பாட்டியிடம் முன்பே வழக்கமாக வந்து போய்க்கொண்டிருந்தவள். பெண்ணின் கல்யாணம் நிச்சயமானவுடன், இன்னும் அடிக்கடி வரத் தொடங்கினாள். அவளும் சுந்தரியின் தாயும் எங்கள் வீட்டில்தான் ஒருவருக்கொருவர் அறிமுகம் ஆனார்கள். கல்யாணப் பெண்ணுங்கூட எங்கள் வீட்டிற்கு வருவதுண்டு. ஆகவே, சுந்தரியும் நானுங்கூட அவளுக்கு அறிமுகம் ஆனோம். அவள் கல்யாணம் நிச்சயமானவுடன் எங்கள் வீட்டிற்கும் அழைப்பு வந்தது. எங்கள் பாட்டி, சுந்தரியின் அம்மா முதலானவர்களுடன் நாங்கள் இருவரும் கூடக் கல்யாணத்திற்குச் சென்றோம்.

அங்குக் கல்யாணச் சடங்குகளைப் பார்த்ததும் என் மனத்தில் எனது கல்யாணத்தைப்பற்றிய எண்ணம் தோன்றி என் உள்ளத்தைக் குழப்பியது. அதிலும் அந்தக் கங்கணம் கட்டும் நிகழ்ச்சியின்பொழுது அங்கிருந்த புரோகிதர்களில் ஒருவர் அந்தப் பெண்ணையும், மாப்பிள்ளையையும் பார்த்துச் சிரித்துக்கொண்டே சொன்னார்: 'ஆமாம், இப்போது இருவரும் வாழ்நாள் முழுவதுக்குமான கட்டினால் இணைக்கப்பட்டு விட்டார்கள். இப்பொழுது அதிலிருந்து விடுபடுவது என்பது முடியாத காரியம்.'

இவ்வாறு மணச் சடங்குகள் நடந்தபோது என் உள்ளத்தில் சுந்தரியுடன் எனது கல்யாணத்தைப்பற்றிய கற்பனைகள் திரைப்படக் காட்சிகளைப் போன்று ஓடிக்கொண்டிருந்தன. எங்கள் கல்யாணமும் இப்படித்தான் நடக்கும், இந்தக் காரியத்தை இப்படிச் செய்வார்கள், அந்தக் காரியத்தை அப்படிச் செய்வார்கள், இது இப்படியாகும், அது அப்படியாகும். மொத்தத்தில் என்னவெல்லாம் அங்கு நடந்ததை நான் பார்த்துக்கொண்டிருந்தேனோ, அவையெல்லாம் நாமும் அநுபவிப்போம் என்று மனத்தில் தோன்றிக்கொண்டிருந்தது. இந்த எண்ணங்கள் உள்ளத்தில் தோன்றும்போது அடிக்கடி என் பார்வை சுந்தரியின் பக்கம் சென்றுகொண்டிருந்தது. அவளும், இதே போன்ற எண்ணங்கள் தன் மனத்தில் குமிழியிட, அடிக்கடி என்னைப் பார்த்துக்கொண்டிருந்தாள் என்று தோன்றியது. மேலும் ஒருமுறை எங்கள் இருவரின் பார்வைகளும் சந்திக்க,

இருவருமே சிரித்தோம். அப்பொழுதிலிருந்து அந்தக் கல்யாணத்தைப்பற்றிய எண்ணங்கள் என் மனத்தில் சுழன்ற வாறு இருக்கத் தொடங்கின. இரவில் அந்த அம்மாள் எங்களைச் சாப்பிட்டுவிட்டுத்தான் செல்லவேண்டும் என்று வற்புறுத்திச் சொன்னுள். சாப்பாடு முடியும்வரை இருக்கும்படி பாட்டியை யும் வற்புறுத்தினுள். ஆகவே, இறுதியில் பாட்டி சம்மதித்தாள்.

நானும் சுந்தரியின் அம்மாவிடம் வற்புறுத்தவே, அவளும் சுந்தரியை இருக்க அனுமதித்தாள். ஆகவே, நாங்கள் இருவருமே கல்யாணத்தின் விசேட இராச் சாப்பாடு முடியும்வரை எல்லாச் சடங்குகளையும் பார்த்தோம். பார்த்தவற்றையெல்லாம் நான் கற்பனையில் அநுபவிக்கவும் செய்தேன். சாப்பாடு முடிந்த பிறகு பாட்டி எங்களை அழைத்துக்கொண்டு வீடு திரும்பினுள்.

சுந்தரி தன் வீட்டிற்குச் சென்றுள். நான் எனது படுக்கையில் போய் விழுந்தேன். ஆனல், எனது உள்ளம் அந்த இன்ப நினைவுகளால் ஒரேயடியாகக் குழம்பியிருந்தது. அதனல் எனக்குத் தூக்கமே வரவில்லை. மேலும், 'எனது கல்யாணத்தை ஏன் பண்ணி முடித்துவிட மாட்டேன் என்கிறுய்?' என்று பாட்டியைக் கேட்க வேண்டும்போல் இருந்தது. அப்படி ஏதாவது கேட்டால் அம்மா மிகுந்த கோபம் அடைந்து அடித்து கிடித்து விடுவாளோ என்று கூடவே பயமும் ஏற்பட்டது. ஆனல், கேட்க வேண்டும் என்ற ஆசைக்கு முன்னல் (அதுவும் அந்த அறியாத வயதில் ஏற்படும் ஆசை!) அந்தப் பயம் எந்த மூலைக்கு? அதுவும் அப்பொழுது அம்மா தூங்கிவிட்டிருந்தாள். ஆகவே, உருண்டுகொண்டே நான் பாட்டியின் அருகில் சென்றேன். 'பாட்டி, என் கல்யாணத்தை ஏன் பண்ணிவிடக் கூடாது?' என்று மெதுவாக அவளிடம் கேட்டேன். எனது அந்தக் கேள்வியைக் கேட்டதும் பாட்டிக்கு என்ன தோன்றி யதோ, அவள் இலேசாகச் சிரித்துவிட்டு, 'பண்ணிவிடலாமே சீக்கிரம். நாளையிலிருந்தே பெண் தேட ஆரம்பித்துவிடலாம்' என்று சொன்னுள். 'பெண் தேடவா?' நான் வியப்பினுல் உந்தப் பட்டுக் கேட்டேன்: 'பெண்ணை எதற்குப் பார்க்கவேண்டும்? எனக்கு வேறு பெண் வேண்டாம். என்னுடைய சுந்தரி இல்லையா? பலே! நீ ஒரேயடியாக மறந்துவிட்டாய்போல் இருக் கிறது? எனக்கு வேண்டாம்ப்பா, வேறு எந்தப் பெண்ணும்!'

'போடா! உன்னைப் போன்ற பைத்தியத்திற்கு எங்கே கொடுக் கப் போகிறுர்கள், அந்தச் சுந்தரியை! சுந்தரிக்காக அவளுடைய

அப்பா எப்படி நல்ல பணக்கார மாப்பிள்ளையைப் பார்க்கப் போகிறார் தெரியுமா?' இந்த வாக்கியத்தைப் பாட்டி சொன்ன பொழுது அதைச் சாதாரணமாகத்தான் வேடிக்கையாகச் சொன்னாளா அல்லது ஏதேனும் உள்ளர்த்தத்துடன் சொன்னாளா என்பதைப் புரிந்துகொள்ள, அந்த வயதில் எனக்கு வேண்டிய அறிவு இருக்கவில்லை. இருந்தாலும், நான் செல்வத்திலோ அல்லது சாமர்த்தியத்திலோ சுந்தரிக்குத் தகுந்தவன் அல்ல என்ற பாட்டியின் கருத்தை மட்டும் நான் அப்பொழுதே புரிந்துகொண்டுவிட்டேன். அதன்பேரில் நான் மேலும் கேள்வி கேட்க இருந்தேன். ஆனால், அவளுக்குத் தூக்கம் வந்துவிட்டதுபோல் தோன்றியது. இருந்தும் நான் அவளை அசைத்து அக்கேள்வியைக் கேட்கத்தான் செய்தேன். ஆனால், அவளுக்குத் தூக்கம் வந்துவிட்டிருந்ததால், 'படு சும்மா; இப்போது தொந்தரவு பண்ணாதே' என்று சொன்னாள்.

ஆகவே, நான் மனத்திலேயே அந்த எண்ணங்களை அலசிக் கொண்டிருந்தேன். பிறகு என்னை அறியாமலேயே நான் தூங்கி விட்டேன். 'மனத்தில் இருப்பது கனவில் தெரியும்' என்ற வாக்கு பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் ஒரே மாதிரி பொருந்துகிறது என்பது எனக்கு அப்போதிலிருந்தே தெரிய வந்திருந்தது. அந்த இரவில் நான் என்ன என்ன பார்த்தேனோ, என்ன என்ன எண்ணங்கள் என் மனத்தில் தோன்றினவோ அவை யாவும் எனது கனவில் எனக்குத் தெரிந்தன. முதலில் எனக்குத் தெரிந்தது: எங்கள் வீட்டில் கல்யாணம் சம்பந்தமான காரியங்கள் நடக்கின்றன. அதன் காரணமாக ஒரே கலகலப்பாக இருக்கிறது. உண்மையில், அப்போது நடந்து முடிந்திருந்த கல்யாணத்தில் நடந்த எல்லா நிகழ்ச்சிகளையும், எனது கனவில் நடந்த கல்யாணத்திலும் நான் கண்டேன். நானும் சுந்தரியும் மிக ஆனந்தமாக இருக்கிறோம். ஆனால், அவள் என்னிடமோ, நான் அவளிடமோ பேசுவது மட்டும் இல்லை. வெறுமனே ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்கிறோம். நானோ உள்ளத்தில் மிகவும் மகிழ்ந்திருக்கிறேன். என்னுடைய மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையே இருக்கவில்லை என்று சொன்னாலும் பொருந்தும். கல்யாணச் சடங்குகள் மும்முரமாகத் தொடங்கின. பார்த்துக்கொண்டிருப்பவனாகிய நான் வேறாகவும், கல்யாண மாப்பிள்ளைப் பதவியில் இருந்து கொண்டு எல்லாவற்றையும் அநுபவித்துக்கொண்டிருக்கும் நான்

வேருகவும் இருக்கிறேன்—என்பதுபோல் விசித்திரமாக என் கனவில் எனக்குத் தெரிந்துகொண்டிருந்தது. போகப் போக இடையில் திரை பிடிக்கும் நிகழ்ச்சிக்கு உரிய தருணமும் வந்து சேர்ந்தது. இரு புரோகிதர்களும் இடைத்திரையைப் பிடித்தார்கள். வரனின் இடத்தில் நான் இருந்து, அதைத் தவிர பார்க்க வந்தவர்களிலும் 'ஒரு நான்' இருக்கிறேன் என்பது போல அதுவரை எனக்குத் தெரிந்துகொண்டிருந்தது. ஆனல், என்ன வேடிக்கை என்று பாருங்கள்! இடைத்திரையைப் பிடித்துக்கொண்டு புரோகிதர்கள் 'மங்கலாஷ்டக'த்தைச் சொல்ல ஆரம்பித்ததும் 'வரன்' இடத்தில் இருக்கும் 'நான்'—என்னுடைய(து) என்று வேண்டுமானல் சொல்லுங்கள்—முகம் மிகவும் மங்கலாகத் தெரிய ஆரம்பித்தது. எனது உருவம் இப்படி ஏன் ஆயிற்று என்று எட்டி எட்டிப் பார்க்கலானேன். ஆனல், அந்த எனது முகம் ஒவ்வொரு கணமும் மேலும் அதிகமாக மங்கலாகிக்கொண்டே வந்தது. இப்பொழுது கொஞ்சமும் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாமல் ஆயிற்று. மெள்ள மெள்ள மிக அருகில் நெருங்கிச் சென்று நான் பார்க்கலானேன். ஆனல், அங்கு ஒருவருமே புலப்படவில்லை.

சுந்தரியின் முகம் தெளிவாகத் தெரிந்துகொண்டிருந்தது. ஆனல், அது ஒளி இழந்தும், உற்சாகமே அற்றதாகவும் காணப்பட்டது. என்னையே நான் தேடும் குழப்பம் ஏற்பட்டது. அதற்குள் அந்தப் புரோகிதர்களின் 'மங்கலாஷ்டக' மந்திரங்கள் முடியவும், இடைத்திரை அகற்றப்பட்டது. உடனேயே வரனின் மணையில் வரன் தெரிந்தான். வாசகர்களே, அதைப் பார்த்ததுமே எனக்கு மாபெரும் ஆனந்தம் ஏற்பட்டிருக்கும் என்று நினைக்கிறீர்கள் அல்லவா? அதுதான் இல்லை. அந்த வரனைப் பார்த்ததுமே, மிதமிஞ்சிய வருத்தமும், கோபமும் எனது உள்ளத்தில் ஒரு புயலை எழுப்பின; கண்களிலிருந்து கண்ணீரைப் பெருக வைத்தன. அதற்குள் நான் நேராகப் பார்த்திருந்த நிஜக் கல்யாணத்தில் அந்தப் புரோகிதர் சொன்ன அதே வாக்கியத்தை அதே புரோகிதர் சுந்தரியிடமும், அவளுடைய வரனிடமும் சிரித்தவாறே உச்சரிக்கவும், என் காதுகளில் இடி விழுந்தது போல் ஆயிற்று. 'இப்படியெல்லாம் நடப்பதற்குக் காரணம் . . . காரணம் . . . காரணம் என்னவாக இருக்கும்? காரணம் என்னவென்ருல், இடைத்திரையை விலக்கியதும் மணையில் அமர்ந்திருந்த 'வரன்' நானுக இருக்கவில்லை. வேறு யாராகவோ,

நான் நன்கு அறிந்திருந்த ஒருவனாக இருந்தான். 'இப்பொழுது வாழ்நாள் முழுவதற்கும் உங்களை ஒருவருடன் ஒருவரை இணைத்தாகிவிட்டது, என்ன! இனி அடியோடு விடுதலை கிடையாது!' இந்த வாக்கியத்தைப் புரோகிதர் உச்சரித்த பொழுது அது என்னையும் சுந்தரியையும் உத்தேசித்து இல்லாமல் —பின்—அந்த—அந்த இரண்டாவது வரனையும், சுந்தரியையும் உத்தேசித்து இருந்தது. நிற்க. இவை யாவற்றையும் பார்த்து அந்தக் கோபம் முதலான உணர்ச்சிகளின் பயங்கரமான தாக்குதலினால் நான் நிலைகுலைந்து பதறிப் போய் விழித்துக் கொண்டேன். கண்களைத் திறந்தேன். எங்கும் இருள். ஒன்றுமே புலப்படவில்லை. இன்னமும் நான் உறக்கத்தில் இருந்தேனா அல்லது விழித்துக்கொண்டிருந்தேனா என்பதே அடியோடு எனது அறிவிற்கு எட்டவில்லை.

# 15. எனது முதல் எழுத்து வேலை

நான் தூக்கத்தினின்று எழுந்தேன். கண்களைத் திறந்தேன். ஆனால், என்னால் எழுந்திருக்க முடியவில்லை. என்ன செய்தும் அந்தக் கனவு என்னுடைய கண்களுக்கு முன்னாலிருந்து போகவில்லை. மீண்டும் மீண்டும் கனவில் கண்ட அக்காட்சி என் கண்களுக்குமுன் தோன்றியது. அப்பொழுது மேலும் ஒரு காட்சியை நான் எனது கண்களுக்கு முன்னால் கொண்டு வந்தேன். அது எது? சுந்தரியுடன் எனது கல்யாணம் நடந்துகொண்டே இருக்கும் பொழுது வரனின் இடத்திலிருந்த நான் சிறிது சிறிதாக மங்கிப் போய் முழுதும் இல்லாமல் போனேன். பிறகு அங்கு வேறு யாரோ ஒருவருடைய உருவம் மங்கலாகத் தெரியலாயிற்று. அந்த உருவம் யாருடையது? இதைப்பற்றி நான் வெகுநேரம் சிந்தித்துக்கொண்டிருந்தேன். அந்தச் சிந்தனையினால் எனது தலை கிறுகிறுத்தாற்போல் ஆயிற்று. ஏனெனில், மேற்கொண்டு எனக்கு வேறு ஒன்றுமே தோன்றவில்லை. நானோ மிகச் சிறிய பிள்ளை. ஆனால், அந்தச் சிந்தனையின் காரணமாக எனது சிறு பிள்ளைத்தனம் எங்கேயோ ஒரு மூலையில் ஒடுங்கிவிட்டது. இன்று வரை எந்த ஒரு மனோவிகாரம் எனது உள்ளத்திற்குத் தெரியாமல் இருந்ததோ, அது எனது உள்ளத்தில் பிறந்தது. 'பொறாமையின் பிறப்பிடம் அன்பில்' என்று சொல்கிறார்களே, அது சிறிதளவும் பொய்யல்ல.

'நாங்கள் இருவரும் இதுவரை தூய அன்புடன் பழகினோம். அதேபோல் எப்பொழுதுமே இருவரும் ஒன்றாகச் சேர்ந்து இருக்கவேண்டும், எழுதும்பொழுதும், படிக்கும்பொழுதும், சிரித்து விளையாடும்பொழுதும் நாங்கள் கூடியிருப்பது என்றென்றும் நிலைக்கவேண்டும்' என்றே கல்யாணத்தைப் பற்றிய எண்ணம் என் மனத்தில் தோன்றியது. எனது அன்பு மிகவும் தூய்மையானதாகவும், களங்கம் அற்றதாகவும் இருந்தது. அதில் இதுவரை கலப்படம் இருக்கவில்லை. ஆனால், இன்று அதே மிகத் தூய்மையான, சிறிதும் களங்கமற்ற அன்பிலிருந்து வேறொரு தூய்மையற்ற, அழுக்கடைந்த அன்பின் உதயம் ஏற்பட்டது. அதுதான் காமம். ஆமாம், எனது உள்ளத்தில்

காமம் என்ற வார்த்தை நுழைந்தது. எனக்கு உகந்த இடத்திலிருந்து என்னைக் கீழே தள்ளிவிடும் அந்தப் பிராணி யார்? இப்படி இடையறுது என் மனத்தில் தோன்றிக்கொண்டே இருந்தது. அந்தக் கற்பனைப் பிராணியை நான் எனது விரோதி என்று எண்ணி அதை அலட்சியப்படுத்தலானேன்.

அன்றுதான் சுந்தரியின் பாட்டிக்கு (அம்மாவின் அம்மாவிற்கு) உடல்நிலை சரியாக இல்லை என்றும், அவர்கள் இருவரையும் உடனேயே அனுப்பிவைக்கும்படியும் ஒரு கடிதம் வந்தது. சொந்தத் தாய்க்கு உடல் நலம் சரியாயில்லாதபோது பார்வதி அம்மாளுக்குப் போகாமல் இருக்க எப்படி மனம் கேட்கும்? அப்படிப் போகும்போது சுந்தரியைத் தனியாக எப்படி இங்கே விட்டுச் செல்ல முடியும்? மேலும், அவளுக்கும் பாட்டியைப் பார்க்கவேண்டித்தான் இருந்தது. சுந்தரியை அழைத்துச் செல்ல வேண்டாம் என்று ஒருமுறை சிவராம பந்த் சொன்னபொழுது, எனக்கு எவ்வளவு ஆனந்தம் ஏற்பட்டது! ஆனுல், அது நிலைக்கவில்லை. கடைசியில் மறுநாள் சுந்தரியும், அவள் அம்மாவும் போய் விட்டார்கள். அவள் போவதற்கு முன்னுல் எனது கனவைப் பற்றி அவளுக்குச் சொல்லலாம் என்று நினைத்துக்கொண்டேயிருந்தேன். ஆனுல் நடக்கவில்லை. அவள் போவதற்கு முன்னுல் அவளிடம் மெதுவாகப் பேச ஒரு கணப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது. அப்பொழுது நான் இவ்வளவுதான் சொன்னேன்: 'சுந்தரே! நேற்றுக் காலையிலிருந்து நான் உன்னிடம் ஏதோ சொல்லவேண்டும் என்று இருந்தேன். வேறு ஒருவர் முன்னிலையிலும் அது சொல்லக்கூடியதாக இல்லை. மேலும்...மேலும்...'

இதைச் சொல்லும்பொழுது என்னுடைய முகம் விசித்திரமாக ஆகியிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. ஏனெனில், அவள் இடையிலேயே குறுக்கிட்டு என்னிடம் சொன்னுள்: 'தம்பி, இதென்ன! அப்படி என்ன குறிப்பாகச் சொல்லவேண்டியிருக்கிறது? நேற்று ஏன் சொல்லவில்லை?'

அந்தக் கேள்வியைக் கேட்கும்போது அவள் குரலிலிருந்த பரபரப்பிலிருந்தே, நான் சொல்லவிருக்கும் செய்தியை அறிவதில் அவளுக்கிருந்த ஆர்வத்தை நான் ஊகித்தேன். அதனுல் எனக்கு அளவற்ற ஆனந்தம் ஏற்பட்டது. நான் அவளிடம் சொன்னேன்: 'என்ன செய்வேன்? தனியாக ஓர் இடத்தில் உன்னைச் சந்திக்க முடியவில்லை.'

'அதைச் சொல்வதற்காக என்னைத் தனியாக ஓரிடத்தில் சந்திக்க வேண்டியிருந்ததா?' என்று அவள் மிகுந்த வியப்புடன் என்னைக் கேட்டாள்.

'ஆமாம்!' என்று நான் மெதுவாக, தலைகுனிந்தவாறு பதில் அளித்தேன்.

'அப்படி என்னதான் இருக்கிறது?' அவள் மீண்டும் ஆவலுடன் என்னைப் பார்த்தவாறு கேட்டாள்.

'இதோ பார், இரண்டு நாட்களுக்கு முன்பு அந்தக் கல்யாணத்திற்குப் போய் வந்தோமா இல்லையா?' என்று நான் என்னுடைய கதையைத் தொடங்கினேன். ஆனால், 'இல்லையா?' என்ற வார்த்தை என் வாயினின்றும் வெளிப்பட்ட அதே கணத்தில், சுந்தரியின் அம்மா, 'சுந்தரே, சீக்கிரம் இங்கே வா' என்று சொன்னாள். உடனேயே, அந்தத் தாய் பக்தி கொண்ட பெண் சட்டென்று தாயிடம் போக முற்பட்டாள். நான் அவளிடம், 'என் பேச்சைக் கேட்கிறாய் அல்லவா?' என்று சொன்னேன். ஆனால், அவள் 'வேண்டாம், அம்மா கூப்பிட்டுக்கொண்டிருக்கிறாள். ஆகவே என்னால் இங்குத் தாமதிக்க முடியாது' என்று சொல்லிக்கொண்டே மேலே போய்விட்டாள். அவளை அப்படியே பிடித்து நிறுத்தவேண்டும் என்று என் மனத்தில் தோன்றியது. ஆனால் அந்த எண்ணத்தைச் செயலாக்கவில்லை.

குறிப்பிட்ட நேரம் வந்ததும், சுந்தரியும், அவள் தாயும் இரயிலடிக்குக் கிளம்பினார்கள். அவர்கள் இருவரும் கிளம்பியதைப் பார்த்ததும் எனக்கு ஒரேயடியாக அழுகைக் குமுறிக்கொண்டு வந்தது. இரயில் நிலையம் வரையிலாயினும் போக வேண்டும் என்று நான் மிகமிகப் பிடிவாதம் பிடித்தேன். அம்மா போக விடுவதாக இருக்கவில்லை. ஆனால் சிவராம் பந்த் அவர்கள் 'அழைத்துச் செல்கிறேன்' என்று சொன்னதும், அம்மாவினால் மறுத்துச் சொல்ல முடியவில்லை. அவர் பொருட்டு அவள் எனக்குச் சம்மதம் கொடுத்தாள். நான் இரயில் நிலையத்திற்குச் சென்றேன். அவர்கள் இருவரும் வண்டியில் உட்கார்ந்தார்கள். வண்டி கிளம்பும் நேரம் ஆனபொழுது சிவராம் பந்த் அவர்கள் பார்வதி அம்மாளிடம், 'போய்ச் சேர்ந்தவுடனேயே கடிதம் போடுங்கள், என்ன?' என்று சொன்னதும், எனக்கும் ஆவேசம் வந்து நான் சுந்தரியிடம் சொன்னேன்: 'நீயும் எனக்குக் கடிதம் எழுது. நான் எதிர்பார்த்துக்கொண்டே யிருப்பேன்.' எனது இச்சொற்களைக் கேட்டும், அதற்குப் பதிலாகச் சுந்தரி, 'சரி.

போய்ச் சேர்ந்ததுமே எழுதுவேன். அம்மா எனக்கு ஒரு கார்டு தருவாள். நான் முன்பே அவளைக் கேட்டேன்' என்று சொன்னதைக் கேட்டும், அந்தத் தம்பதியர் ஒருவரை ஒருவர் பார்த்துக் கலகலவென்று சிரித்தார்கள். ஆனால், அச்சமயத்தில் என் உள்ளத்தில் பிறந்த ஒரு புதிய எண்ணத்தில் நான் மூழ்கியிருந்தேன். 'கடிதம்', 'கடிதம் எழுதுவது', 'செய்தி தெரிவிப்பது' முதலான வார்த்தைகளை நான் இதுவரை என்றுமே கேட்டிருக்கவில்லை என்பதில்லை அல்லது கடிதம் எழுதுவது என்றால் என்ன என்பது எனக்குத் தெரிந்திருக்கவில்லை என்பதுமில்லை. ஆனால், தனது நலத்தைத் தவிர வேறு ஏதேனும்கூட எழுதினால் . . .?

இப்படி விசித்திரமான எண்ணம் என் மனத்தில் எழுந்தது. சுந்தரிக்கு நான் எனது கனவைப்பற்றி எழுதித் தெரிவித்தால்?— இந்தக் கேள்வி இரயில் நிலையத்தில் நின்றுகொண்டு வண்டியினுள் உட்கார்ந்திருந்த சுந்தரியைப் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது என் உள்ளத்தில் தோன்றியது. அந்தக் கனவை எழுத்தில் வடித்து எடுப்பது என்று அந்த இடத்திலேயே மனம் முடிவு செய்துகொண்டது.

# 16. முதலும் முடிவும்

திரும்பிச் செல்லும் வழியில் அந்தக் கனவைப்பற்றி எழுது வதைத் தவிர வேறு எண்ணமே மனத்தில் இருக்கவில்லை. இப் பொழுது வீட்டிற்குத் திரும்பியதுமே நான் பேனாவும் காகிதமும் எடுத்துக்கொண்டு எழுத உட்காருவேன், அந்தக் கடிதத்தை இப்படி எழுதத் தொடங்குவேன், அப்படி எழுதத் தொடங்கு வேன் என்று எண்ணம் ஓடிக்கொண்டிருந்தது. ஆனால், வாசற் படியில் நான் அடி வைத்ததும் வைக்காததுமாக என் தாயார் அம்மணி அவர்கள் என்னிடம் சொல்லலானார்: 'பாழாப்போன வனே! காரணம் இல்லாமல் உன்னை இதுவரையில் வண்டியில் போட்டுக்கொண்டு சேர்ப்பிக்க வைத்து, மீண்டும் டாங்காவில் போகும் வீண் செலவை அவருக்கு வைத்தாயல்லவா? இரயி லடிக்குப் போகவில்லை என்றால் என்ன கெட்டுப் போய்விடும்? கிளம்பு, இப்பொழுது இங்கிருந்து பள்ளிக்கூடத்திற்கு! யாரோ ஊருக்குப் போகிறார்கள் என்று பள்ளிக்கு முழுக்குப் போடப் பார்க்கிறான் இவன். எங்கே இருக்கிறது உனது அந்தப் பை?'

என்னுடைய பையை எடுத்துக்கொண்டு அங்கிருந்து நடை யைக் கட்டினேன். வீட்டினின்றும் வெளியில் கிளம்பிச் சிறிது தூரம் செல்வதற்குள்ளாகவே, இனி நாம் என்றுமே திரும்பி வீட்டிற்குச் செல்லக்கூடாது என்று எனக்குத் தோன்றலாயிற்று. ஒரு முறை தோன்றியது, பள்ளிக்கூடத்திற்குப் போகாமல் எங்கா வது வெகு தூரத்தில் சென்று நமது அந்தக் கனவைப்பற்றி எழுதிவிடவேண்டும் என்று. ஆனால், அவ்விரு எண்ணங்களில் எதையும் என்னால் செயலாக்க முடியவில்லை.

இரவு சாப்பாடு முடிந்த பிறகு, சிறிது நேரம் நான் படிக்க உட்காருவது உண்டு. இன்று ஏதோ எழுதவேண்டி இருந்ததால் அதிக நேரம் உட்காருவது என முடிவு செய்தேன். நான் என்ன எழுதுகிறேன், என்ன எழுதவில்லை என்பதை யாராவது பார்க்கக் கூடும் என்ற பயம் எனக்குத் துளிக்கூட இருக்கவில்லை. ஏனெ னில், என் அம்மா எழுதப் படிக்கத் தெரிந்தவள் அல்ல. நல்ல பெரிய முத்திரை எழுத்துக்களாக இருக்குமானால் ட, ப சொல்லத் தெரிந்திருக்குமோ என்னவோ, ஒரு வேளை!

பாட்டிக்கோ அதன் வாசனைகூடக் கிடையாது. ஆகவே, நான் என்ன எழுதுகிறேன், என்ன எழுதவில்லை என்பதைப்பற்றி யாருக்கும் சந்தேகம் ஏற்பட இடம் இல்லை. அது போலவே நான் சிறிதளவு தூக்கம் முழித்து எழுதிக்கொண்டு உட்கார்ந்தாலும், அதற்காக யாரும் வருத்தப்பட்டிருக்கமாட்டார்கள். மாறாக, பையன் தூக்கத்தையும் கெடுத்துக்கொண்டு படிக்கிறான் என்று அம்மாவுக்கு ஆனந்தமே ஏற்பட்டிருக்கும்.

வாசகர்களே! இரவு பதினொன்று அல்லது பதினொன்றரை மணி ஆகியிருக்கும். வீட்டில் இருந்த யாவரும் உறங்கியிருந்தார்கள். அப்படிப்பட்ட வேளையில் என் போன்ற சிறு பையன் தனது கனவின், தனது கற்பனையின் அடிமையாகி, தனது மிகக் குறைந்த மொழியறிவின் உதவியைக் கொண்டுகாகிதங்களின்மீது கிறுக்கிக் கொண்டிருக்கிறான் என்ற கற்பனைகூட உங்களுக்கு விசித்திர மாகப்படும், இல்லையா? நானோ உண்மையில் அப்படித்தான் உட்கார்ந்திருந்தேன். எனக்கு அந்தச் சமயத்தில் பேய், பூதம், இருள் அல்லது வேறு எதனுடைய பயமும் ஏற்படவில்லை. என்னுடைய உள்ளம் முழுமையாக என்னுடைய வேலையில் ஒன்றிப்போயிருந்தது. அதில் வேறு இரண்டாவது, மூன்றாவது எண்ணங்கள் நுழைவதற்கு இடமே இல்லை. சின்னஞ் சிறிய சதுரக் காகிதங்களில் நான் பரபரவென்று கிறுக்கித் தள்ளிக் கொண்டிருந்தேன். என்ன கிறுக்கிக்கொண்டிருந்தேன் என்பது சிறிதளவும் எனக்குத் தெரியவில்லை. அப்பொழுது நான் என் வசத்திலேயே இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது. எனக்கு வார்த்தைகள் தாமாகவே வந்துகொண்டிருந்தன; எண்ணங்கள் தாமாகவே தோன்றிக்கொண்டிருந்தன. நான் வர்ணிப்பது எல்லாம் என் கண்களின் முன்னால் தெரிந்துகொண்டிருப்பது போல் தோன்றியது. மேலும், எனக்குத் தெரியாமலேயே வார்த்தைகள் காகிதத்தின்மீது பதிந்துகொண்டிருந்தன. அவை சுத்தமானவையாக, பிழையற்றனவாக இருக்கவில்லை. கிறுக்க லாகவும், தெளிவில்லாமலும் அவை இருந்ததால் மீண்டும் அதை என்னாலேயே சரியாகப் படிக்க முடியவில்லை. இருந்தபோதி லும் நான் எனது நிச்சயத்தின்படி எழுதிக்கொண்டிருந்தேன். இந்த விஷயத்தை மட்டும் நான் என்றுமே மறக்கமுடியாது. ஏனெனில், அதனுடைய மகத்துவம் அப்படிப்பட்டது என்று நான் கருதுகிறேன். கடைசியாக, எனது எழுதும் வேலை முடிந்தது. நான் சுயநினைவு பெற்றவனாக, அங்கும் இங்கும் பார்க்கத் தொடங்கி

னேன். அதற்குள் வீட்டில் ஏதோ 'தப்' என்று விழும் பலத்த ஒலி கேட்டது. தொடர்ந்தாற்போல் பாட்டி, 'என்ன அது? என்ன அது?' என்றவாறு எழுந்தாள். அவளுக்குப் பின்னுலேயே அம்மாவும் எழுந்தாள். நான் இன்னமும் விழித்துக்கொண்டிருக்கிறேன்; எழுதுவதும் துடைப்பதுமான எனது வேலையில் மூழ்கி இருக்கிறேன் என்பதைப் பார்த்ததும் அவர்கள் இருவருமே வியப்பு அடைந்ததாகத் தோன்றுகிறது. அவர்கள் என்னிடம், 'அடே, இன்று இது என்ன இவ்வளவு நேரம் உனது படிப்பு நடந்துகொண்டிருக்கிறது? போதுமாயிற்று, படு இப்பொழுது!' என்று சொன்னுர்கள். நாம் நினைத்தபடி நமது எழுதும் வேலையோ முடிந்துவிட்டது என்று எண்ணி என் மனத்திற்கு ஒருவகையான ஆனந்தம் ஏற்பட்டிருந்தது. அதனுல் இனி எதுவும் செய்வதில் அர்த்தமில்லை என்று எண்ணி, பரப்பிய என் கடையைச் சுருட்டலானேன்.

அந்தக் கடிதத்தை ஒருமுறை படித்துப் பார்க்கவேண்டும் என்று தோன்றியது. என்ன விழுந்தது என்பதைப் பார்க்கச் சென்றிருந்த பாட்டி திரும்பி வந்து, 'அடே, உனது கடை இன்னுமா முடியவில்லை? போய்ப் படு, போ! போதுமாயிற்று, உன்னுடைய படிப்பு இப்பொழுது! எங்காவது உடம்பைக் கெடுத்துக்கொள்ளும் எண்ணமா? அந்தப் பாழாய்ப்போன ஆசிரியர் இவ்வளவு என்ன வேலை கொடுத்திருக்கிறுர்? உடம்புக்கு வரப்போகிறது' என்று சொன்னுள். நான் உடனே சட்டென்று எனது கடையைக் கட்டினேன். அந்தக் கடிதங்களை ஒன்ருகச் சேர்த்து நன்ருக மடித்து வைத்தேன். மறுநாள் காலையில் எழுந்ததும் முதல் வேலையாக அக்கடிதத்தைப் படிக்கவேண்டும் என்று முடிவு செய்தேன். பிறகு என்னுடைய படுக்கையில் போய்த் தலைவைத்துப் படுத்தேன். மனத்திலிருந்த ஆசை நிறைவேறியதாலோ அல்லது எனது இளங் கண்களின்மீது, அவ்வளவு நேரம் விழித்து வேலை செய்ததனுல் அதன் பாரம் அழுத்திக்கொண்டிருந்ததாலோ, படுத்த உடனேயே நான் ஆழ்ந்த நித்திரையில் ஆழ்ந்தேன். கனவு இல்லை, ஒன்றும் இல்லை.

காலையில் நல்ல வெயில் அடிக்கத் தொடங்கியதும் எனது சகோதரி என்னை எழுப்பினுள். பாட்டி வேண்டுமென்றே வழக்கமான நேரத்தில் என்னை எழுப்பவில்லை. எழுந்தவுடனேயே எனது முதல் ஓட்டம், எனது அந்தக் கடிதத்தை நோக்கித்தான்! அது இருக்கிறதா, இல்லை யாரேனும் அதை எடுத்துக்கொண்டுவிட்

டார்களா என்று பார்க்கவேண்டும் என்பதுதான் முதல் எண்ணம். நாம் உண்மையிலேயே இரவில் எழுதிக்கொண்டிருந் தோம், எழுதியதை இப்பொழுது மடித்து வைத்து, சுந்தரி வந்த வுடன் அவளிடம் கொடுக்கவேண்டும் என்று பலவாறாக மனத்தில் எண்ணம் ஓடிக்கொண்டிருந்தது. தனது குட்டிகளின் பாதுகாப்புக் குறித்து ஒரு பூனை கலக்கமுற்று இருப்பதுபோலவே, நானும் எனது அக் கடிதத்தின் பாதுகாப்பிற்காகக் கலக்கமுற்று இருந் தேன். ஆனால், போய்ப் பார்த்தால் அங்கு அந்தக் கடிதம் இருக்கவில்லை!

# 17. ஒரு புதுச் செய்தி

வழக்கம்போல் பள்ளிக்குச் சென்றேன். ஒரு சிலருக்குப் பொய் யாகப்படலாம். ஆனால் உண்மையாகவே அன்றைத் தினம் எனது மனம் பள்ளியில் சிறிதளவும் லயிக்கவில்லை. நான் எனது காரியங்களை, தானாகவே இயங்கும் ஒரு யந்திரத்தைப் போல் செய்துகொண்டிருந்தேன். அதற்குள் இருந்தாற்போலிருந்து எனக்கு ஒரு கற்பனை தோன்றியது. என்னுடைய கடிதம் காற் றில் பறந்து இன்ன இடத்தில் விழுந்திருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அது ஏன், எப்படி அங்குச் சென்றது என்பதைப்பற்றி என்னால் யோசித்துக்கூடப் பார்க்கமுடியவில்லை. ஆனால், கடிதம் விழுந்திருக்கவேண்டிய இடத்தைப்பற்றிய கற்பனை தோன்றியதுமே, இடைவேளையின்போது நாம் போய் அந்த இடத்தில் தேடவேண்டும் என்று முடிவு செய்தேன்.

ஆனந்தத்தைப் பொழியும் பள்ளி மணியின் ஒலி எனது காதுகளில் விழுந்தது. ஆசிரியர் புத்தகத்தை மூடினார். பள்ளிக்கு வெளியில் வந்து ஓட்டமும் நடையுமாக வீட்டை அடைந்தேன். வாசலை அடைந்ததும் பார்த்தால் கதவு மூடப்பட்டிருந்தது. ஆனால், நல்ல வேளையாக, ஒரு குரல் கொடுத்ததுமே திண்ணையி லிருந்தவர் யாரோ தாழ்ப்பாளைத் திறந்தார்கள். நேராக நான் சந்தேகப்பட்ட தலத்திற்குச் சென்றேன். ஆனால், அங்கு எனது கண்ணில் பட்டது என்ன? எனது சகோதரி கங்கு அக்கா அந்தக் காகிதங்களைத் தன் முன்னால் பரப்பிக்கொண்டு, சிறிது தடுமாறி னாலும், ஆர்வத்துடனும் பரபரப்புடனும் அதைப் படிப்பதில் ஒன்றிப் போயிருந்தாள். எதைப்பற்றி எனக்குச் சிறிதளவும் அச்சம் ஏற்படவில்லையோ, எந்த விஷயம் எனது கனவில்கூடத் தோன்றவில்லையோ, அதைப் பார்த்ததும் எனக்கு எப்படி இருக்கும்? நான் விரைந்து அவள் முன்னால் சென்று அவளுடைய கைகளிலிருந்து அக்காகிதங்களைப் பிடுங்கிக்கொண்டேன். கூடவே, வெறி பிடித்த நாய் ஒன்று எவர்மீதேனும் பாய்ந்து குரைப்பதுபோலவே, அவள்மீது பாய்ந்து குரைக்கவும் செய் தேன் என்பதும் பொருந்தும். அந்தக் காகிதங்களை அவளிட மிருந்து பிடுங்கி, அவளைக் கன்னாபின்னா என்று பேசினேன்.

திட்டவே செய்தேன் என்று சொல்லுங்களேன்! ஆனால், அவள் ஒரேயடியாக மௌனமாக நின்றுகொண்டிருந்தாள். ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவளுடைய கண்களினின்று கண்ணீர் மட்டும் வழிந்துகொண்டிருந்தது. கோபத்தில் மூழ்கியிருந்த எனக்கு அது ஏன் கண்ணில் படுகிறது? மேலும் கண்ணில் பட்டாலும் எனக்கு அதைப்பற்றி என்ன போயிற்று? பேசவேண்டியிருந்ததை மளமளவென்று பேசி முடித்தேன்; இறுதியில் அவள் கன்னத்தில் ஓர் அறை கொடுத்தேன். இப்பொழுது அக்கடிதத்தை அவள் கண்ணில் படும்படி வைத்தால், அதை அவள் அங்கிருந்து மீண்டும் எடுத்துக்கொள்வாள் என்று எண்ணி, நான் அதை எனது கால்சட்டைப் பையில் திணித்துக் கொண்டேன். மேலும் அவளை ஏதோ சொல்லி, அங்கிருந்து நான் கிளம்பவே இருந்தேன். அதற்குள் அவள் திடீரென என்னிடம் சொன்னாள்: 'தம்பி, நீ மிகவும் நல்லவன். மிகமிக நல்லவன் என்று சுந்தரி எப்பொழுதுமே சொல்கிறாளே, இது தான் அந்த நல்லதனமா? சரி, அது இருக்கட்டும். ஆனால் எனக்குப் படிக்கத் தெரியும் என்றும், நான் உனது கடிதத்தைப் படித்துக்கொண்டிருந்தேன் என்றும், நீ அம்மாவிடம் சொல் லாதே, என்ன?'

சுந்தரியின் பெயர், சுந்தரியின் பேச்சு ஆகிய இரண்டும் எனது உள்ளத்தை மென்மையாக்க வல்ல மோகினி ஆயுதங்கள் என்று அக்காவிற்குச் சொல்லி வைக்கப்பட்டிருந்ததா என்ன? அவள் அந்தப் பெயரை எடுத்ததும், அத்துடன் விசேடமாக, 'அவள் எப்பொழுதும் உன்னை நல்லவன் என்று சொல்கிறாளே, இது தானா நீ நல்லவன் என்பதற்கு அடையாளம்?' என்ற வாக்கியத் தைச் சொன்னதும், உண்மையாகவே எனது கோபம் தணிந்து விட்டது. நாம் சுந்தரிக்குப் பிடிக்காத ஒரு காரியத்தைச் செய்து விட்டோம் என்று நிச்சயமாக என் மனத்தில் பட்டது. அதற் காக என் மனத்தில் வருத்தமும் ஏற்பட்டது. அதிலும் அவள் இந்த வார்த்தைகளைச் சொன்ன தனிப்பட்ட முறை இருந்ததே, அது என் மனத்தை என்னவோ செய்தது. ஆனால், மனத்தில் இருந்த சினத்தின் பிடி இன்னும் தளரவில்லை. அதனால் நான் அப்படியே கொதிப்புடனும், துடிப்புடனும் கீழே போய் அங்கிருந்து பள்ளிக்கு விரைந்தேன். பள்ளிக்கு அருகில் செல்லச் செல்ல, இடைவேளை முடிய இன்னமும் நிறைய நேரம் மிகுந் திருப்பதை அறிந்தேன். ஆகவே, அந்தச் சமயத்தில் எங்கே

யாவது போய் நமது காகிதங்கள் எல்லாம் பத்திரமாக இருக்கின்றனவா இல்லையா என்று பார்க்கவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. நான் பள்ளிக்கூடத்தின் பின்புறத்தில், பையன்கள் அநேகமாகப் போகாத இடத்துக்குச் சென்று, அங்கு ஒரு வீட்டின் திண்ணையில் உட்கார்ந்தேன். அந்தக் காகிதங்களைச் சரி பார்க்கத் தொடங்கினேன். தன் முன்னால் அவள் வைத்திருந்தபடியே அவற்றை நான் எடுத்து வந்திருந்தேன். அதனால் அவள் எந்தத் தாளைப் படித்துக்கொண்டிருந்தாளோ, அந்தத் தாள்தான் மேலாக இருந்தது. அது நான்காவது தாளாக இருந்தது. எனது காகிதங்கள் யாவும் பத்திரமாக இருக்கின்றன என்பதை முதலில் நிச்சயம் செய்துகொண்டேன். அதன் பிறகு, 'அவளுக்கு இவ்வளவு படிக்க வந்தது எப்படி?' என்ற கேள்வி என் மனத்தில் எழுந்தது. அவளுக்கு எழுத்து வாசனைகூட இருக்கும் என்று எனக்குச் சிறிதும் தோன்றியிருக்கவில்லை.

எங்கள் அம்மாவின் பார்வையே கூர்மையானது. அதிலும் எங்கள் அருகே அந்தச் 'சீர்திருத்தவாதி' குடிவந்த பின்னர், தளரவேண்டிய அந்தப் பார்வை, குறைந்தபட்சம் அக்காவின் படிப்பைப் பொறுத்தவரையில் இன்னும் அதிகம் ஆகியிருந்ததாகவே எனக்குத் தோன்றியது. சிவராம் பந்த் அவர்கள் எனக்கு வேறு வகையான உபதேசம் செய்திருக்கவில்லை என்றால், அத்துடன் சுந்தரியின் கண் கண்ட உதாரணம் என் முன்னால் இருக்கவில்லை என்றால், நானும் என்னுடைய அம்மாவைப் போலவே பெண்களின் படிப்பு விஷயத்தில் எரிச்சல் கொண்டிருப்பேன்.

மாலையில் வீடு திரும்பியதும் நான் உட்கார்ந்து படிக்கும் இடத்திற்கு வரும்படி மிகுந்த கனிவுடன் அக்காவை மெதுவாக வேண்டினேன். அவளும் வந்தாள். அப்பொழுது, 'நான் மதியம் உன்னை அடித்தேன்; உன்னைப் பேசினேன்; உன்னைத் திட்டினேன். இதற்காக நீ என்னை மன்னித்துவிடு. நான் மறுபடியும் என்றுமே உன்னை இவ்வாறு திட்டவோ, அடிக்கவோ செய்யமாட்டேன்' என்று சொன்னேன். பிறகு அவள் எழுதுவதற்கும், படிப்பதற்கும் எப்படிக் கற்றுக்கொண்டாள் என்று மெதுவாகக் கேட்டேன். அவள் எப்படிக் கற்றுக்கொண்டிருப்பாள் என்பதை நான் முன்னதாகவே ஊகித்திருந்தேன். ஆனால், அந்த ஊகத்தை உண்மையென உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டியிருந்தது, அவ்வளவுதான். நான் நினைத்ததுபோலத்

தான் ஆகியிருந்தது. விளையாடும் காரணத்தைக் கொண்டு சுந்தரியும் அவளும் மதியப் பொழுதில் ஓரிடத்தில் உட்காருவது வழக்கம். அப்பொழுது சுந்தரி அவளுக்குக் கற்றுக்கொடுப்பாள். இதில் வியப்பு அடையும்படி ஒன்றுமே இருக்கவில்லை. ஆனால், இன்றுவரை இந்த விஷயத்தைப்பற்றி அறிந்துகொள்ள நான் ஏன் ஆர்வம் கொள்ளவில்லை என்றுதான் எனக்கு வியப்பு ஏற் பட்டது. எந்த நாளைப்பற்றிய விவரங்களை இங்குத் தந்திருக் கின்றேனோ, அந்த நாளை எனது வாழ்வின் முதற் பகுதியின் நினைவில் கொள்ளத்தக்க ஒரு நாளாக நான் கருதுகிறேன். அந்த நாளன்று, பிறர் சொல்லி அல்ல, இயற்கையான முறை யில் நானும் அக்காவும் உள்ளத்தால் ஒன்றினோம். சுந்தரி இருந்தவரை அவளுடைய தோழமையிலேயே நான் மகிழ்ந்திருந் தேன். அக்கா என்று யாரோ இருக்கிருள், இவ்வளவுதான், எனக்குத் தெரிந்தாற்போல் நான் இருந்தேன். அதற்கு அப்பாற் பட்டு அவளுக்கும் எனக்கும் ஒரு தொடர்பும் இல்லை என்று இருந்தது. ஆனால், இப்போது நிலைமை அடியோடு மாறி விட்டது. சுந்தரி போனதிலிருந்து இன்றுவரை எனக்கு நான் தனியாக ஆனதுபோல் இருந்தது. இப்பொழுது அப்படி நான் உணர வேண்டியதில்லை என்று தோன்றியது. எங்கள் இருவரின் உள்ளங்களின் திரை விலகி அவை ஒன்று சேர்ந்தாற்போல் எனக்குப் பட்டது. உறக்க நிலையில் இருந்து வந்த எங்கள் பரஸ்பர அன்பு திடீரென்று மலர்ந்ததாகத் தோன்றியது. அந்த நாளி லிருந்து அவளிடம் நானும், என்னிடம் அவளும் மிகவும் பிரியத் துடன் நடந்துகொள்ளலானோம்.

# 18. அக்கா

அக்காவின் கண்களிலிருந்து கண்ணீர் பிரவாகமாய் வழிந்து கொண்டிருந்தது; அவள் அழுதுகொண்டே இருந்தாள். ஆனால், யாருக்காவது கேட்கும் என்ற பயத்தில், மிக மெதுவாக, புடைவைத் தலைப்பினால் கண்களைத் துடைத்துக்கொள்வாள், ஆனால் அவற்றைத் துடைத்து, தலைப்பைக் கீழே விடுவதற் குள்ளேயே மீண்டும் கண்ணீர் கன்னங்களில் வழிந்து ஓடும். பல மாக வெளிக் கிளம்பப் பார்க்கும் விசும்பல்களை அடக்கிக்கொள் வதற்கு அவள் முயற்சி செய்துகொண்டிருந்தாள் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. இருந்தபோதிலும் அவளுடைய முகம் எனக்கு முழுவதும் தெரியவில்லை. சுந்தரியோ எனக்கு முதுகைக் காட்டியவண்ணம் இருந்தாள். ஆனால், அவளும் வருத்தமுடன் இருப்பதாகவே தோன்றியது. அக்காவின் தோளில் கையை வைத்து, 'அக்கா, அழும்படி என்ன ஆயிற்று?' என்று கேட்கவேண்டும்போல எனக்குத் தோன்றியது. அந்த வார்த்தை களை உச்சரிப்பதற்காக எனது உதடுகள் துடித்தன. உச்சரித்தும் இருப்பேன். ஆனால், அதற்குள் இந்தப் பரிதாபகரமான சொற் கள் காதில் விழுந்தன: 'சுந்தரே, நீ என்ன வேண்டுமானாலும் சொல். ஆனால் அம்மா இன்று என்ன சொல்லியிருக்கிறாளோ, அதன்படி அவள் செய்யத் தவறமாட்டாள். ஆஹா! உன் நிலை என்னுடையதைவிட எவ்வளவு மேலானது! அம்மா என்ன சொல்லியிருக்கிறாளோ, அதன்படிதான் நடக்கப் போகிறது. சுந்தரி, உன்னுடைய விஷயமென்ன? உங்கள் அண்ணா, தாம் சொல்வதைப் போல உண்மையாகவே செய்யப்போகிறாராடீ?'

'உண்மையாகவே அக்கா, நீ என்னுடைய சொந்த அக்கா வாக இருந்தால், நான் அளவற்ற ஆனந்தம் அடைந்திருப்பேன். நாம் இருவரும் அப்படி அப்படியே இருந்திருப்போம்' என்று சுந்தரி உடனேயே சொன்னாள்.

'பின்னே என்னடீ? இவ்வளவு கிழவனான ஒருவனைக் கல்யாணம் செய்துகொள்வதைவிட, உன் அண்ணா சொல் கிறாரே, அது எவ்வளவோ சிறந்தது. ஆனால் என்ன செய்வேன்? அம்மா அதைச் செய்யப் போகிறாள். அவள் அதைச் செய்து

முடித்துவிடப் போகிறேன் என்று சொல்லத்தான் செய்தாள். சுந்தரே! எனக்கு ஒன்றும் புரிவதில்லை என்று அவள் நினைத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் நான் என்ன நினைக்கிறேன், என்ன நினைக்கவில்லை என்பது எனக்குத்தான் தெரியும். நீ சிறியவள்; இருந்தாலும் உன்னைத் தவிர எனக்கு வேறு யாரும் இல்லை என்று நான் உன்னிடம் சொல்கிறேன்' என்று சொல்லி, அக்கா தனது புடைவைத் தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். பிறகு சுந்தரியின் தோளில் கையைப் போட்டு அவள் திரும்பினாள்.

அவள் என்னைப் பார்த்தாள். அதே சமயத்தில், 'அக்கா, நீ ஏன் இவ்வாறு பயப்படுகிறாய்? அம்மா என்ன செய்யப் போகிறாள் என்பதைப் பார்த்துவிடலாம்?' என்று தைரியத் தைக் கொடுக்கும் வார்த்தைகள் சட்டென்று என் வாயிலிருந்து வெளிப்பட்டன. என் பேச்சைக் கேட்டதுமே நான் அவர்களுடைய பேச்சைக் கேட்டேன் என்பதை அவர்கள் புரிந்து கொண்டிருப்பார்கள். 'தம்பி, நீ எப்பொழுது வந்தாய்?' என்று கீழே பார்த்தவண்ணம் அக்கா இலேசாக முணுமுணுத்தாள். எனக்குப் பதில் சொல்ல ஒன்றும் தோன்றவில்லை. கண்களில் சிறிது வெட்கம், சிறிது ஆர்வம், சிறிது கோபம் முதலிய பல உணர்ச்சிகளின் கலவையுடன் சுந்தரி என்னைப் பார்த்துக் கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றியது. நான் மறைந்து நின்று அவர்கள் பேச்சைக் கேட்டது அவளுக்கு அடியோடு பிடிக்கவில்லைபோல் தோன்றியது; குறைந்தபட்சம் எனக்கு அப்படிப் பட்டது. நான் அம்மாவிடம் ஒருவேளை போய்ச் சொல்லிவிடுவேன் என்ற அளவுக்கு அக்காவின் மனத்தில் அவ நம்பிக்கை ஏற்பட்டுவிட்டதா? இப்படித் தோன்றியதும் உள்ளம் கலவரம் அடைந்தது. அதற்குள், 'அக்கா, நான் இதை அம்மா விடம் போய்ச் சொல்வேன் என்று உனக்கு எப்படித் தோன்றியது?' என்ற பொருளுடைய வார்த்தைகள் என் வாயி லிருந்து தானாகவே வெளிப்பட்டன. 'அக்கா, உனக்கு நான் எப்படிப்பட்டவனாகத் தோன்றுகிறேன்? பொல்லாதவனாகவா? சே சே! உன்மீது (கழுத்தில்) ஆணையிட்டுச் சொல்கிறேன். இதை நான் அம்மாவிடம் போய்ச் சொல்லப் போவதில்லை.'

இந்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே என்னுடைய கண்கள் தானாகவே சுந்தரியின் முகத்தைப் பார்க்க ஆரம்பித்தனவோ என்னவோ, நிச்சயமாகச் சொல்லமுடியாது.

ஒருவேளை அக்காவைப்போல் சுந்தரி என்மீது அவநம்பிக்கை கொண்டவளாக இருக்கமாட்டாள் என்று நான் நினைத்திருக்கலாம். அவள் கொஞ்சமும் அசையாமல், எதுவும் பேசாமல் நின்றிருந்தாள்.

வேப்ப மரத்தினடியில் நாங்கள் நின்றுகொண்டிருந்தோம் என்று நினைக்கிறேன். அம்மரத்திலிருந்து பழங்கள் 'டப் டப்' என்று இடையருது விழுந்துகொண்டிருந்தன. ஒருவருடைய கவனமும் அங்குச் செல்லவில்லை. மூவரும் அவரவர் எண்ணங்களில் மூழ்கியிருந்தோம், ஏதோ முழு உலகின் வருங்கால நிலையின் பொறுப்பே எங்கள் தலையில் விழுந்தாற்போல! ஆனால் அப்படியும் இருக்கலாம்; இல்லை என்று எதைப்பற்றித்தான் சொல்லமுடியும்?

அதற்குள் எங்கள் பெயரை இரைந்து கூப்பிடுவது கேட்டது. நம்பிக்கையெனும் மலையின் மீதிருந்து ஏமாற்றம் என்னும் பள்ளத்தில் தள்ளப்பட்டதுபோல நான் உணர்ந்தேன். நாங்கள் வீட்டிற்குள் வந்தோம். வந்ததுமே அம்மாவின் கொடுஞ்சொற்களின் புயலில் சிக்கினோம். அக்காவின்மீது அவளுடைய தாக்குதல் மிக அதிகமாக இருந்தது. 'குதிர்போல வளர்ந்திருக்கிறாய். நாளைக்குக் கல்யாணம் ஆகப்போகிறது. பார்ப்பவன் எல்லாம் பெண் பெரியவள் என்று சொல்லி முகத்தைத் திருப்பிக் கொண்டு செல்கிறான். வீட்டு வேலை செய்வதில் கொஞ்சமும் சிரத்தையில்லாமல் இருக்கிறாய். நாள் முழுதும் வெளியில் இருப்பது, இல்லையெனில் மாடியில் புத்தகம் படிப்பது. ஜாக்கிரதை! மறுபடியும் எங்கேயாவது வெளியில் போவது என் கண்ணில் பட்டால், தொலைத்துவிடுவேன், தொலைத்து! இரண்டாந்தாரமாக வாழ்க்கைப்படுவதுதான் உன் தலையெழுத்துப் போலிருக்கிறது! ஹும்! கொடுத்து வைத்தது அவ்வளவுதான்.'

அந்த நாளுக்குப் பிறகு அக்காவின் தன்மையில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்பட்டது. குழந்தைத்தனம், விளையாட்டுத்தனம் முதலியவை மறைந்து அவள் முற்றிலும் புதியதொரு பெண்ணானாள். என்னுடன் விளையாடும், என்னுடன் சண்டை போடும் அந்தப் பழைய அக்கா மறைந்து போய் ஒரு புதிய—மிகவும் முதிர்ந்தவளான—ஓர் அக்கா உதயமாகியிருந்தாள். பெண்களுக்கு இயற்கையாகத் தோன்றும் எளிமை அவள் உடல் முழுதும் தெரியலாயிற்று. வேலை செய்வதில் அவள் பின்வாங்கவில்லை. யாராயினும் எவ்வளவு சினந்துகொண்டாலும்,

திருப்பிப் பதில் சொல்வது கிடையாது. ஆனால், படிப்பது என்னும் ஒரு காரியத்தில் மட்டும் அம்மாவிற்கு விட்டுக் கொடுப்ப தில்லை என்று அவள் முடிவு செய்திருந்தாள் போலத் தோன்றியது. அவள் எவ்வளவுதான் பேசட்டும், ஒழிந்த நேரத் தில் அவள் புத்தகத்தை எடுக்கத்தான் செய்தாள். படிப்பதில் இருந்த அவளுடைய ஆசை பன்மடங்கு வளர்ந்தது. சிவராம் பந்த் அவர்களிடம் இருந்த புத்தகங்களையெல்லாம் அநேகமாக அவள் படித்துவிட்டாள். அவர் ஒரு தினப்பத்திரிகை வாங்குவது உண்டு. அது வந்ததோ இல்லையோ, எப்படியாவது வேலைக்கு இடையில் நேரம் ஏற்படுத்திக்கொண்டு, அம்மாவின் திட்டை வாங்கிக் கொண்டாவது எவ்வாறேனும் படித்து முடித்து விடுவாள். நான் ஆண்பிள்ளை; எனக்குப் படிக்க அநுமதி உண்டு. அதற்கான சாதனங்களையும் பெற்றிருந்தேன். ஆனால், எனக்கு இல்லாத ஆர்வம் அவளுக்கு இருந்தது. இயல்பாகவே படிப்பதில் அவளுக்கு மிகுந்த நாட்டம் இருந்தது. வேறு ஏதேனும் புத்தகமோ அல்லது தினப்பத்திரிகையோ கிடைக்க வில்லை என்றால், அவள் வைத்திருந்த தனக்குப் பிடித்த ஒரு புத்தகத்தையே அவள் மீண்டும் மீண்டும் படிப்பாள். குறைந்த அளவு பத்துப் பதினைந்து முறை அவள் அதைப் பாராயணம் செய்திருப்பாள். அவளிடம் ஏற்பட்ட இந்த மாற்றம், எங்க ளுடைய, குறிப்பாகச் சுந்தரியுடைய குணத்தில் மாறுதல் ஏற் படுத்தத் தவறவில்லை. அந்த நாளுக்குப் பின்னர் எங்கள் வீட்டிற்கு யாரேனும் விருந்தினர் வந்திருந்தால், அவருக்கு வயதில் இளையவர்களாயினும், பழக்க வழக்கங்களிலும், எண்ணங்களிலும் பெருமிதம் உடையவர்களாக, வயதிற்கு மீறிப் பக்குவம் அடைந்த ஒரு முக்கூட்டாக நாங்கள் மூவரும் விளங்குவது தெரிந்திருக்கும்.

அந்த நாளுக்குப் பிறகு, சுமார் இரண்டு அல்லது இரண்டரை மாதங்களில் மீண்டும் எங்களுடைய தந்தையின் கடிதம் வந்தது. அதில், 'கல்யாண முகூர்த்தம் அருகில் வந்திருக்கிறது; வீணாக அவசரப்பட்டு வேண்டாத இடத்தை நிச்சயம் செய்யப் போகிறீர் கள். பெண்ணின் பாக்கியத்தை நன்றாக மலரவைக்கவேண்டும் என்று என் மனத்தில் இருக்கிறது. நான் மிகச் சிறந்த இடமாகப் பார்த்து வைத்திருக்கிறேன். கூடிய சீக்கிரம் வேலை முடிவடையப் போவதை நான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். வேலை முடிந்த அக்கணமே அங்கு வருகிறேன். வந்ததுமே மிகச் சிறந்த

முறையில் கல்யாணத்தை நிகழ்த்திவிடுகிறேன். குழந்தையை மணமகளாக ஆக்கிவிடுகிறேன். காரணம் இன்றி அவசரப்படாதீர்கள்' என்ற செய்தி இருந்தது. இந்தக் கடிதத்தைப் படித்ததுமே அம்மாவிற்குப் பாதங்களிலிருந்த சூடு மண்டைக்கு ஏறியது. அவளுடைய உள்ளத்தில் ஏதோ ஒரு நிச்சயம் ஏற்பட்டது. எங்கள் எல்லாருடைய துர்ப்பாக்கியத்திலும் அது காரியத்திலும் காட்டப்பட்டது.

# 19. அன்னையின் உறுதி

எங்கள் தந்தையின் கடிதம் வந்த பின்னர், அவளுடைய தீர்மானம் உறுதிப்பட்டது. 'இவர் மனத்தில் இந்தப் பாவிப் பெண்ணை இப்படியே கல்யாணமில்லாமல் பெரியவளாக வளர விட்டு, கடைசியில் நமது குலத்திற்கும், பெயருக்கும் களங்கத்தை ஏற்படுத்தும் எண்ணந்தான் இருக்கிறது. வேறு ஒன்றும் இல்லை. அம்மா, நீ ஒன்றும் கேட்காதேடீ அவர் பேச்சை! எது எப்படி யானாலும் ஆகட்டும். நான் இந்த மார்கழியில் பெண்ணின் கல்யாணத்தை முடித்து விடப்போகிறேன்' என்றாள் அவள்.

நாங்கள் ஏழைகள். அப்படியிருக்க எங்களுக்கு நல்ல, முதல்தர மான வரன் எங்கிருந்து கிடைக்கும்? சில இடங்கள் வந்தன; அவை மிகுந்த வறுமை நிலையில் இருந்தவை. ஒரே ஒரு மிகச் சிறந்த இடம் வந்தது. ஆள் பணக்காரன், ஒரே பிள்ளை; கல்லூரியில் படிப்பவன். அவனுக்கு என் அக்காவைப் பிடித்தும் இருந்தது. ஆனால், அருகில் இருந்த வேலைவெட்டி இல்லாத, வெறும் வாயையே மெல்லும் பழக்கம் கொண்ட சில தம்பதிகள், எங்கள் அம்மாவிடம் வந்து, 'அந்த ஆள் பயங்கரமான அள விற்குச் சீர்திருத்தவாதி' என்று அவள் காதில் ஊதிவிட்டார்கள்.

கல்யாணம் ஆனவுடனேயே பெண்ணை நவநாகரிக உடையில் பள்ளிக்கு அனுப்புவார். மேலும் தேநீர்—பிஸ்கோத்து போன்ற பலவகைப்பட்ட பொருள்களின்மேல் ஆசையைத் தூண்டிவிடு வார். பின் என்ன கேட்கிறீர்கள்? எரியும் நெருப்பில் எண்ணெயை ஊற்றிவிட்டார்கள். அம்மாவிடம் கன்னுபின்னு என்று ஏதோ சொல்லி, அவள் உள்ளத்தை யாரோ கலைத்திருக்கிறார்கள் என்பதை அறிந்ததும், சிவராம் பந்த் அவளிடம், 'இதோ பாருங்கள்! நீங்கள் வேண்டாத எண்ணங்களுக்கு இடம் கொடுக்காதீர்கள். இடம் மிகச் சிறந்ததாக இருக்கிறது. உங்க ளுக்கு ஒரு தம்படிச் செலவு ஆகாமல் எல்லாம் நல்லபடியாக நடக்கும். அவர் சீர்திருத்தவாதியாவது, மண்ணாங்கட்டியாவது. உங்கள் மனத்தை யாரோ கெடுக்கப் பார்த்திருக்கிறார்கள். பள்ளிக்கு அனுப்புவதானால் அனுப்பிவிட்டுப் போகட்டுமே. உங்களுக்கு என்ன போயிற்று? அவருக்குக் கொடுத்துவிட்டோம்

பெண்ணை என்றால், அவள் அவருடையதாக ஆகிவிடுகிறாள். என்ன வேண்டுமானாலும் செய்துவிட்டுப் போகட்டுமே! காரண மின்றி இந்தப் பாழாய்ப் போன ஜனங்களுடைய பேச்சை நம்பிக் கையில் கிடைத்துள்ள நல்ல இடத்தை நழுவவிடாதீர்கள்' என்றும், இவ்வாறு பொருள்படும்படி மேலும் பலவும் சொல்லிப் பார்த்தார். சிவராம் பந்த் அவர்கள்தாம் இந்த இடத்தைப் பற்றிச் சொன்னவர். இப்படிப்பட்ட விவகாரங்களில் தலையிட வேண்டிய அவசியம் பார்க்கப் போனால் அவருக்கு இருக்கவில்லை. அவர் ஒருபொழுதும் அப்படித் தலையிடுபவரும் அல்ல. ஆனால், கடைசியில் எனது அக்காவின் நிலை என்ன ஆகும் என்பது அவ ருக்குத் தெரிந்திருந்தது. ஆகவே, தம் கையால் ஏதாவது நல்லது செய்ய முடிந்தால் செய்யலாமே என்றுதான் அவர் அந்த இடத்தைக் கொண்டு வந்தார். தன்னால் முடிந்தவரை அம்மா வுக்கு அதன் சிலாக்கியங்களை எடுத்துச் சொல்லவும் செய்தார்.

ஆனால், சிவராம் பந்த் ஒரு சீர்திருத்தவாதி என்று எங்கள் வீட்டிலிருந்தோர்க்கு முதலில் இருந்தே அவர்மீது ஒரு கண். அவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்த வரனை, அவரைத் தவிர வேறு யாருமே நல்லதாகக் கருதவில்லை. ஒவ்வொருவரும் ஏதாவது ஒன்று சொல்லி அந்த வரனுக்கு முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். மேலும் அந்த ஆளும், அந்த அம்மாளும் அந்த இடத்தைப்பற்றி அம்மாவிடம் இல்லாததையும் பொல்லாததை யும் சொல்லி அவள் மனத்தைக் கலைத்தார்கள். சிவராம் பந்த் அவரைத் திட்டினார் என்று அவர் காதில் விழுந்திருந்தது. அதற் காகப் பழி வாங்கவேண்டும் என்றுதானோ என்னவோ, அவர் தம் மனைவியின் மூலமாகக் கீழ்க்கண்ட செய்தியை அம்மாவின் காதில் விழச் செய்தார்: 'அந்தச் சீர்திருத்தவாதிப் பையனுக்கு ஏதோ வியாதி பிடித்திருப்பதனால் யாரும் பெண் கொடுப்பதற்கு இசைய வில்லை. எனவே, சிவராம் பந்த் அவர்களுக்கு ஐந்நூறு ரூபாய் கொடுத்து உங்கள் பெண் நல்ல அழகு, குலம், குணம் உடையவ ளாக இருப்பதால், அவளைப் பெறுவதற்காக முயற்சி செய்திருக் கிறார்கள்.'

சிவராம் பந்த் ஐந்நூறு ரூபாயை அடைவதற்காக இப்படிப் பட்ட இழிந்த காரியத்தைச் செய்வாரா இல்லையா என்பதைப் பற்றி யார் யோசிக்கிறார்கள்? ஒரு முறை அவர் சீர்திருத்தவாதி என்று சொன்னதுமே அவரிடம் வேண்டிய நீசத்தனத்திற்கு இடமுண்டுதான். மேலும், அந்த இடத்தைக் கொண்டு வந்தவர்

அவர்தாம். அங்குப் பெண்ணைக் கொடுக்கவேண்டும் என்று வற்புறுத்த வேறு செய்கிறார்! 'அவ்வளவு நல்ல இடமானால், தமது பாவிப் பெண்ணை அவ்விடத்தில் ஏன் கொடுக்கக்கூடாது? எங்கள் பெண்ணை விற்று ஐந்நூறு ரூபாய் சேர்க்கவேண்டி இருக்கிறது? தமது பாவிப் பெண்ணை இன்னும் பெரியவளாக்கி, பின்னர் கொடுக்கட்டும், ஏதேனும் ஒரு பெரிய ஆளுக்கு! யார் வரப் போகிறார்கள் குறுக்கே? என்ன வற்புறுத்தல், நான் பெண்ணை அங்கே கொடுக்கவேண்டும் என்று! ஐந்நூறு ரூபாய் அடையவேண்டும் அல்லவா? என் பெண்ணினால் ஐந்நூறு சேர்ப்பவர், தம் பெண்ணினாலேயே ஏன் ஆயிரம், இரண்டாயிரம் சேர்க்கக்கூடாது? அழகாக இருக்கிறாள் வெள்ளை வெளேரென்று!' என்று இந்த ரீதியில் பேசத் தொடங்கி விட்டாள் அம்மா.

அன்று சாயங்காலம் பாட்டி என்னைக் கூப்பிட்டு, சிவராம் பந்திடம் போய், 'நாளை இடத்தைக் காலி பண்ணுங்கள்' என்று சொல்லிவிட்டு வா என்று சொன்னாள். அதைக் கேட்டதும் எனக்கு எப்படி இருந்திருக்கும்? சிவராம் பந்த் அவர்களிடம் இவ்வாறு சொல்லும் வேலை எனக்கா தரப்படவேண்டும்? இந்தச் செய்தியை நான் எப்படிச் சொல்வேன்? நான் தயங்கிக் கொண்டே நின்றேன். அம்மா அருகில்தான் இருந்தாள். அவள் நான் தயங்குவதைக் கண்டு கொண்டாள். கொதித்தவாறு என்மீது பாய்ந்து அவள் சொன்னாள்: 'பாழாய்ப் போனவன் இடத்தைவிட்டு அசைகிறானா பார்! அவனுக்கு அவர்கள் வேண்டியிருக்கிறார்கள். அவர்களைப் போல் சீர்திருத்தவாதி ஆகவேண்டியிருக்கும். அவர்கள் பெண் என் மாட்டுப் பெண்ணாம்! எனக்கு என்ன, தலையில் எழுதியிருக்கிறது அவளை மாட்டுப்பெண்ணாக ஆக்கிக்கொள்ள? வெட்கங் கெட்ட இந்தப் பாவி அவள்தான் தன் மனைவி என்று சொல்கிறான். அவள்தான் மனைவி என்பதைக் காண்பிக்கிறேன் பார். ஜாக்கிரதை! உம், கிளம்பு. போகப் போகிறாயா இல்லையா, அவர்களுக்குச் செய்தியைச் சொல்ல? இல்லை, கொடுக்கட்டுமா இடுப்பில் ஓர் உதை?' இப்படிச் சொல் மாரி என்மீதும் பொழியத் தொடங்கியது. மேலும், அந்தச் சொல்மாரி அடிமாரியாகும் வேளையும் வந்தது. நான் அங்கிருந்து ஓட்டம் பிடித்தேன். நம்மிடம் சொல்லப்பட்ட அந்த வேலையை எப்படி நாம் செய்து முடிக்கப் போகிறோம் என்பது மட்டும் எனக்குத் தெரியவில்லை. செய்யவில்லை என்றால் சாப்பாட்டுக்கு

வீட்டுக்குப் போக வழியில்லை. வீட்டைவிட்டுப் போகச் சொல்வது என்றால் என்ன? அதன் உண்மையான பொருள் எனக்கு அப்பொழுதுதான் தெரிந்தது. அவர்கள் வீட்டைவிட்டுப் போவது என்றால் சுந்தரியும் நானும் பிரிந்து போவது. அதாவது, எனது அன்பிற்குப் பாத்திரமானவளிடமிருந்து பிரிவது. பாட்டியிடம் சென்று அதை மாற்றுவதற்குச் சிபாரிசு செய்யவேண்டும் என்றுகூட அச்சமயம் என் உள்ளத்தில் தோன்றியது.

கடைசியில், எப்படியாயினும் மாடிக்குப் போகவாவது வேண்டும் என்று மனத்தில் எண்ணி நான் மாடிப் படியேறி மேலே சென்றேன். அங்குப் போய்ப் பார்த்தால், இருளடைந்த மாடியின் இடைக்கட்டில் அக்காவும், சுந்தரியும் ஓவென்று அலறி அழுதுகொண்டிருந்தது தெரிந்தது. நானும் அவ்வாறு அழுகிற மனநிலையில்தான் அப்போது இருந்தேன். அந்தக் காட்சியைக் கண்டதுமே எனது விசும்பலும் வெளிப்பட்டது. மதியத்திலிருந்து அம்மாவின் சொற்பொழிவு முன்பே எல்லாவற்றையும் செய்து முடித்துவிட்டிருந்தது. சுந்தரியின் அம்மா இரண்டாவது அல்லது மூன்றாவது நாள் குடியைப் பெயர்த்துச் செல்ல முடிவு செய்திருந்தாள். சிவராம் பந்த் அவர்கள் வந்தவுடனேயே அதற்குச் சம்மதமும் பெற்றாள். இந்த எல்லா விவரங்களையும் சுந்தரி அக்காவிடம் சொன்னாள், பின்னர் எனக்கும் தெரிய வந்தது. இது அக்காவிற்குத் தெரிந்ததால்தான் அவர்களுடைய அந்தத் 'துக்கம்' நடந்துகொண்டிருந்தது. அதற்குள் நானும் அங்குப் போய்ச் சேர்ந்திருந்தேன். ஆனால், அந்தச் சமயத்தில் மனம் தீர அழுவதும் எங்கே சாத்தியமாக இருந்தது? யாராவது கூப்பிடுவார்கள், யாராவது வருவார்கள் என்ற அச்சம்; என்றால் என்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. நான் நேராகச் சிவராம் பந்த் அவர்களின் முன்னால் சென்றேன். கீழே எனக்கு இடப்பட்ட கட்டளையை அவர் கேட்டிருந்ததாக எனக்குத் தோன்றியது. அவர் ஓரளவுக்குச் சிந்தனையில் மூழ்கியவராகக் காணப்பட்டார். என்னைப் பார்த்ததுமே அவர் என்னிடம் சொன்னார்: 'நீ என்னிடம் என்ன சொல்ல வந்திருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். போ, நான்கைந்து நாட்களில் இடம் காலி ஆகும் என்று அவரிடம் போய்ச் சொல். அதுவரை . . . '

ஆனால், நான் அவரை முழுதும் பேசவிடவில்லை. என்னால் சும்மா இருக்க முடியவில்லை. நான் ஒரேயடியாக அவரிடம்

சொன்னேன்:—'வேண்டாம்! நீங்கள் போகாதீர்கள். குறைந்த பட்சம் சுந்தரியை அழைத்துச் செல்லாதீர்கள். எங்கள் வீட்டிலேயே இருக்கவிடுங்கள்.'

நான் என்ன பேசினேன் என்பது எனக்கே உண்மையில் விளங்கவில்லை. அவர்கள் போன பிறகு சுந்தரி இங்குத் தங்குவது நடக்கக்கூடிய காரியம் என்று நினைக்கும் அளவுக்கு நான் அறியாப் பருவத்தினளாக இருந்தேன் என்பதும் இல்லை. ஆனால், தண்ணீரில் விழுந்து தவிப்பவனுக்கு ஒரு சிறு துரும்பு கிடைத்தாலும் அதை ஆதாரமாக அவன் இறுகப் பிடித்துக்கொள்வது போல்தான் அந்த வருத்தம் தோய்ந்த சூழ்நிலையில் எந்த ஒரு பொருள் கிடைக்குமோ, அதைப் பிடிக்கத் தாவினேன். அதனால் என்ன பயன்? கடைசியில் அவர்கள் போகத்தான் முடிவு செய்தார்கள். அக்கா, சுந்தரியின் தோளில் சாய்ந்து ஓயாது அழுதவண்ணம் இருந்தாள். அழுகைக்கு நடுவில் அவள் சொன்னாள்: 'சுந்தரே, நீ என்னைவிட எவ்வளவோ பாக்கியசாலி! உன்னுடைய கல்யாணத்தை நீ உனக்கு வேண்டிய பொழுது செய்துகொள்ள முடியும். என்னுடையது மட்டும்...' அவள் மேற்கொண்டு சொன்ன வார்த்தைகள் அவள் ஓலமிட்டு அழுத அழுகையில் கரைந்து போயின. என் காதில் அவை விழவில்லை. அதன் பிறகு வெகுநேரத்துக்கு எங்கள் மூவருடைய அழுகையும் பேச்சும் நீடித்தன. அம்மாவின் பொல்லாத வற்புறுத்தலால்தான், தான் நஷ்டப்படவேண்டியிருக்கிறது என்று அவள் தெளிவாக எடுத்துச் சொன்னாள். ஆனால், அதை எங்களிடம் சொல்லி என்ன பயன்?

# 20. ஊமை விலங்குகள்

அக்காவுக்குத்தான் சுந்தரி எவ்வளவு பெரும் ஆதாரமாக விளங்கினுள்! ஆனுல், அந்த ஆதாரம் இன்று துண்டிக்கப்பட்டு விட்டது. எங்களுடைய அன்பான தோழி எங்களுக்கு இல்லாது போனுள்; அதுவும் மறுபடியும் எங்கள் வீட்டிற்கு என்றுமே வர முடியாத நிலையில். ஆமாம், அவர்கள் அந்த அளவு அவமதிக்கப் பட்டு இங்கிருந்து கிளப்பப்பட்டிருந்தார்கள். அப்படி இருக்க, அவள் எப்படி வரமுடியும்? சிவராம் பந்த் அவர்களுக்குத் தன்மானம் கிடையாதா? அவர் மனைவிக்கு மான அவமான உணர்ச்சி கிடையாதா? சுந்தரி கடைசியாக எங்களிடம் விடை பெறும்போது, 'நான் வருகிறேன், என்ன?' என்று சொன்னதுமே, அவள், அக்கா, நான் ஆகிய மூவரின் கண்களி லிருந்தும் கண்ணீரின் புது ஊற்று பெருகி வந்தது. அக்காவின் வாயினின்றும், 'சுந்தரே, நாம் இனி என்றும் சந்திக்கப் போவ தில்லை. நீ ஒன்றும் இங்கு வரப்போவதில்லை.' இவ்வளவே வார்த்தைகள் கிளம்பின. மேற்கொண்டு அவளால் ஒன்றுமே பேசமுடியவில்லை. ஒரேயடியாகப் பெரிய விசும்பல் வந்து, அதில் தொடர்ந்து வந்த வார்த்தைகள் அடியோடு மறைந்து போயின. அதைப் பார்த்து எனக்கும் அழுகைக் குமுறிக்கொண்டு வந்தது. இருந்தபோதிலும் நான் அவளிடம் சொன்னேன்: 'அக்கா, இது என்ன இப்படிப் பண்ணுகிறுய்? ஒருகால் அவள் வரவில்லை என்றுலும், நமக்குப் போகமுடியாதா? நாம் அவ்வப்போது போகலாமே!' இந்த வார்த்தைகள் என் வாயிலிருந்து கிளம்பியதும், சிறிது நேரம் நாங்கள் மூவரும் மௌனமாக இருந் தோம். அதற்குள் அக்கா தன்னைச் சமாளித்துக்கொண்டு, கண்ணீர் சுரந்து பளபளக்கும் தனது அசைவற்ற விழிகளால் என்னை நோக்கியவண்ணம் சொன்னுள்: 'தம்பி, நீ சொல்வது சரிதான். நினைத்தபொழுது உன்னுல் போகமுடியும். ஆனுல் நான்? பெண்களாகிய நாங்கள் வீட்டில் இருக்கும் ஊமை விலங்குகள்! யாராவது அடித்தார்கள் என்றுல், அடி தின்ன

வேண்டும். போ என்று சொன்னால் போகவேண்டும். வேண்டாம் என்றால் குத்திட்டு நின்றுவிடவேண்டும்.' அக்காவின் இந்தச் பேச்சின் முழு அர்த்தமும் எனக்கு அந்தச் சமயத்தில் விளங்கவில்லை.

மறுநாள் மாலைப்பொழுதில் பள்ளி முடிந்ததும் சுந்தரியின் புதுக் குடி இருக்கும் இடத்திற்குச் சென்று அவளைப் பார்ப்பது என்று அந்தச் சமயத்திலேயே என் மனம் முடிவு செய்திருந்தது. இந்த எண்ணத்தைப்பற்றி நான் அக்காவிடம் மட்டுந்தான் சொன்னேன்; அதுவும் வேறு ஒருவரும் அறியாதபடி. அவள் உடனேயே தான் காலையில் சொன்னதை நினைவுபடுத்தி, மேலும் சொன்னாள்: 'பார்த்தாயா தம்பி, உனக்கு எப்படி இப்பொழுது ஒருவருக்கும் தெரியாமல் போகக் கிடைக்கிறது பார்! ஆனால், இப்பொழுது போகிறேன் என்று நான் சொல்வேனேயானால், இருக்கிறதா ஏதேனும் வழி? நீயே சொல். நாங்கள் வீட்டில் கட்டிப் போடப்பட்ட ஊமைப் பிராணிகள் என்று நான் சொன்னது பொய்யா?'

மறுநாள் விடிந்தது. சுந்தரி இருக்குமிடத்தைப் பார்க்கவும், அவளுடன் அரட்டை அடிக்கவும் கிடைக்கப் போகும் நேரம் அருகில் நெருங்கி வந்துகொண்டிருப்பதை எண்ணி எண்ணி, அதிலேயே எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. சரியாகப் பள்ளிக்குப் புறப்படுகிற சமயத்தில் அக்காவிற்கு ஓர் எண்ணம் தோன்றியது. அவள் என்னிடம் சொன்னாள்: 'இதோ பார், தம்பி! ஏதாவது ஒரு வழியைச் செய்து, எப்படியாவது நான் சுந்தரியைச் சந்திப்பேன் என்று அவளிடம் சொல். ஆனால், நம் அம்மாவின் தொந்தரவினால் ஒருவேளை அது கைகூடவில்லை என்றால் அவள் எப்படியாயினும் என்னை இந்த அருகிலுள்ள இராமர் கோவிலில் வந்து சந்தித்து . . .' இவ்வாறு சுந்தரியை மாலையில் சந்திக்கும் போது அவளிடம் நான் என்ன சொல்ல வேண்டுமென்பதை என்னிடம் அவள் சொல்லிக்கொண்டிருக்க, அதற்கு மேற்கொண்டும் அவள் வாயினின்றும் சொற்கள் வெளிப்பட இருக்க, அதற்குள் அவள் பின்னால் யாருடைய கையோ மேலெழும்பியது என் கண்ணில் படவே, நான், 'அக்கா, அக்கா! நிறுத்து, பேசாதே!' என்று அரைகுறையாக ஏதோ சொல்ல இருந்தேன். அதற்குள் பின்புறத்தில் மேலெழுந்திருந்த அந்தக் கை அவள் முதுகில் அடியைப் போட்டுவிட்டது. அந்தக் கையடியுடன் இந்தச் சொல்லடியும் செவிகளில் விழுந்தது: 'அடி மூதேவி! உனக்கு

அம்மாவின் தொந்தரவு ஏற்பட்டிருக்கிறது, அல்லவா?' இதைப் பார்த்ததுமே நான் ஒவ்வோர் அடியாகப் பின்வாங்கிய வண்ணம் ஓட்டம் பிடித்துக்கொண்டிருந்தேன். ஆனால், கொடூரமும், கேட்பதற்கு அருவருப்பு நிறைந்ததுமான அந்தக் குரல் என்மீதும் சீறி எழுந்தபொழுது, எங்ஙனம் போவது? மாபெரும் இடியுடன்கூடிய நிலையற்ற ஒளியைக் கொண்ட மின்னற்கொடி எதிர்பாராமல் கண்ணைக் கூசவைத்துப் பளிச்சிட்டுச் செல்லும் பொழுது எப்படி ஒரு மனிதன் திடுக்கிட்டு அசைவற்று நின்றுவிடுகிறானோ அதேபோல் நானும் நின்றேன்.

மாலையில் பள்ளி முடியும் வேளை. உடனேயே சுந்தரி குடியிருக்கும் வீட்டை நோக்கி, அவளும், அவள் தாய் தந்தையரும் சொல்லியிருந்த அடையாளத்தைக் கொண்டு அவ்வழியில் ஓட்டமாக ஓடிச் சென்றேன். அங்குப் போய்ச் சேர்ந்ததும் சுந்தரியைச் சந்தித்தேன். அவளுடைய அம்மாவைச் சந்தித்தேன். 'இனி தினந்தோறும் பள்ளி முடிந்ததும் உங்கள் வீட்டிற்கு வரப் போகிறேன்' என்று அவர்களிடம் சொன்னேன். ஆனால், 'அம்மா வேண்டாம் என்று சொல்லும்பொழுது பிடிவாதமாக வருவது சரியல்ல' என்று அவர்கள் எனக்கு உபதேசம் செய்தார்கள்.

சுந்தரியிடம், காலையில் நிகழ்ந்தவற்றிற்கு அவள் கூற்று காரணமானதை விவரமாகச் சொன்னேன். 'அப்பொழுது அம்மா அக்காவை நன்கு அடித்திருப்பாளே? ஆகவே, நீ சீக்கிரம் வீட்டுக்குப் போய் அவளுக்கு ஆறுதல் சொல். நான் எப்படியாவது அவளைச் சந்திப்பேன்' என்று சொல்லி, அவள் என்னை வழியனுப்பலானாள். அவள் இப்படிச் சொன்னதும் நான் கிளம்பி வீடு வந்து சேர்ந்தேன். இங்கு வந்து பார்த்தால் வீடு வெறிச் சென்றிருந்தது. அம்மா, அக்கா இருவருமே வீட்டில் இருக்கவில்லை. அவர்கள் எங்கே போனார்களோ என்ற யோசனையில் ஆழ்ந்திருந்தேன். நான் வந்தபொழுது அம்மா வீட்டில் இருக்கவில்லை என்பது எனது நல்ல காலந்தான். ஏனெனில், நான் வீட்டிற்குத் தாமதித்து வந்ததை அவள் அறிய நேரிடவில்லை.

அம்மா, அக்காவை அழைத்துக்கொண்டு எங்கேயோ வெளியில் போயிருந்தாள். அவள் வெகுநேரம் கழித்துத் திரும்பி வந்தாள். அக்காவை அலங்கரித்து அழைத்துச் சென்றிருந்தாள். ஆகவே, ஏதோ இடம் பார்க்கத்தான் சென்றிருந்தாள் என்று எனக்குத் தோன்றியது. தோன்றுவது என்ன? யாரிடத்திலோ அவளைக் காண்பிக்கத்தான் அழைத்துச் சென்றிருந்தாள்

என்று எனக்குப் பின்னர் நிச்சயமாகத் தெரிந்தது. அன்று மாலையிலும், அன்று இரவிலும் அக்காவும் நானும் தனிமையில் சந்திக்கவே முடியவில்லை. ஆனால், மறுநாள் வாய்ப்புக் கிடைத்தது. அச்சமயத்தில் அவள் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவள்போல் தோன்றினாள். அவள் நெற்றியில் சுருக்கம் விழுந்திருந்தது. அந்தச் சுருக்கம் சீக்கிரம் மறைந்தது. அவள் அப்பொழுது என்னிடம் மெதுவாகச் சொன்னாள்: 'நான் நேற்று மதியப்போதில் ஒரு கடிதம் எழுதி வைத்திருக்கிறேன். அதைச் சுந்தரியின் அப்பாவிடம் கொண்டு போய்க் கொடு. நீ படிக்காதே. அதற்கு நீ ஒத்துக்கொண்டால், நான் அதை உன்னிடம் தருகிறேன். இல்லையென்றால் . . .' மேற்கொண்டு அவள் வாயினின்றும் ஒரு வார்த்தைகூடக் கிளம்பவில்லை.

# 21. கடைசியில்!

மறு நாள் விடிந்தது. காலைக் கடன்கள் யாவும் முடிந்தன. சாப்பாட்டு நேரம் ஆயிற்று. சாப்பாடு ஆயிற்று. நான் பள்ளிக்குச் செல்லக் கிளம்பினேன். என்னைச் சிறிது தங்கும்படி அக்கா சைகையினால் கூறினாள். பிறகு என்னிடம் வந்து மெதுவாகச் சொன்னாள்: 'மாடியில் இருக்கும் அறையிலுள்ள பெட்டியின் அடியிலிருந்து நான் எழுதி வைத்திருக்கும் அந்தக் கடிதத்தைத் தயவு செய்து எடுத்துக்கொண்டு போ. ஆனால், இதோ பார், நீ அதைப் படிக்காதே. படிப்பதில்லை என்று வாக்குறுதி கொடுத்திருக்கிறாய்.' அவள் பேசினதும், அதற்கு மேல் நான் ஏதோ சொல்லவிருந்தேன். ஆனால், அதற்கு முன்பே அவள் சடக்கென்று போய்விட்டாள். நான் விரைந்து மாடிக்குச் சென்று அவள் சொன்ன இடத்தில் கைவிட்டு அந்தக் கடிதத்தை எடுத்தேன். தாறுமாறாக மடிக்கப்படாமல், கடிதம் நன்கு ஒழுங்காக மடிக்கப்பட்டு, அதன்மேல் சிவராம் பந்த் அவர்களின் பெயர் எழுதப்பட்டிருந்ததைக் கண்டேன். அந்தப் பெயர் தவறு இல்லாமல் எழுதப்படவில்லை என்றாலும், தெளிவாக எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்து நான் வியப்புற்றேன். பள்ளிக்குப் போகும் வழியெல்லாம் என் சட்டைப் பையிலிருந்த அந்தக் கடிதம் என் உள்ளத்தில் உறுத்திக் கொண்டே யிருந்தது. என் உள்ளத்தின் ஒரு பகுதி அதைப் படிக்குமாறு தூண்டிக்கொண்டும், மற்றொரு பகுதி அக்காவுக்கு நான் கொடுத்திருந்த வாக்கை நினைவூட்டி, வேண்டாமென்று தடுத்தவாறும் இருந்தது.

கடைசியில் உள்ளத்தின் நல்லுபதேசப்படி நான் நடந்து கொண்டேன். கடிதம் இருந்த இடத்தை எட்டிக்கூடப் பார்க்காமல் பள்ளியை அடைந்தேன். பள்ளி நேரம் முடிந்தது. நான் சுந்தரியின் வீட்டை நோக்கிச் சென்றேன். ஆனால், வீட்டை நெருங்கியதும் உள்ளே போகாமல் அங்கேயே நின்றுகொண்டு கடிதத்தில் உள்ள செய்தியை முதலில் படித்து அறிந்துகொள்ள முடிவு செய்து, சட்டைப் பையில் கையைப் போட்டு அந்தக் கடித உறையை வெளியில் இழுத்து, அதைத் திறக்கும் தறுவா

யில் இருந்தேன். அதற்குள் எல்லாப் பாவங்களிலிருந்தும் ஏற்ற சமயத்தில் என்னை விடுவிக்கும் அந்தச் சுந்தரியின் உருவம் தனது அன்பு கனிந்த இனிய குரலில் என் பெயரைச் சொல்லி என்னை அழைப்பதாக எனக்குத் தோன்றியது. நான் தலை நிமிர்ந்து நோக்கினேன். அப்பொழுது உண்மையாகவே அவள் கதவருகில் நின்றுகொண்டிருந்தாள். நான் திடுக்கிட்டேன்; கலவரம் அடைந்தேன். என் கையிலிருந்து அந்தக் கடிதம் கீழே விழுந்தது. எனது மனத்தின் கலவரத்தையும், முகத்திலிருந்த துணுக்குற்ற பாவத்தையும் மறைப்பதற்காக, கடிதத்தை எடுக்கும் காரணத்தைக் கொண்டு நான் கீழே குனிந்தேன்.

உள்ளத்தில் எழுந்த எல்லாப் போரிலும் கடைசியில் நாம் தோல்வியே அடைந்திருந்தோம். இதன் காரணமாக எனக்கு மிகுந்த வெட்கம் ஏற்பட்டது. சுந்தரி அன்புடனும், மகிழ்ச்சியுடனும் என்னைக் கூப்பிட்டாள். ஆனால், அவளுக்குப் பதில் கொடுப்பதற்குக்கூட எனக்குத் துணிவு பிறக்கவில்லை. என் நிலை அவளுக்கு வியப்பளித்திருக்க வேண்டும். அவள் என்னிடம், ‘என்ன இப்படிப் பேசாமல் இருக்கிறாய்?’ என்று கேட்டாள். நான் அவளிடம், ‘ஒன்றும் இல்லை. இந்தக் கடிதத்தை அக்கா உங்கள் அண்ணாவிடம் கொடுக்கும்படி சொல்லிக் கொடுத்திருக்கிறாள்’ என்று சொல்லி அக்கடிதத்தை அவள் கையில் கொடுத்தேன். இப்பொழுது அவளுடன் நாம் உள்ளே போவதா வேண்டாமா என்ற சந்தேகம் ஏற்பட்டது. அந்த வீட்டிற்குள் நுழைவதற்கு நான் அருகதை உடையவன் அல்ல என்று என் மனத்திற்குத் தோன்றியிருக்கவேண்டும். இருந்த போதிலும் உள்ளே போகவேண்டாம் என்றும் மனத்திற்கு உறுதியாகத் தோன்றவுமில்லை. எப்படித் தோன்றும்? மாலையில் அவள் வீட்டிற்குப் போய் அரை மணி நேரமோ அல்லது ஒரு மணி நேரமோ அவளுடன் சேர்ந்திருப்பதில் கிடைக்கும் ஆனந்தத்திற்காகவே இங்கு வந்திருக்கிறேன். அப்படியிருக்க அதை எப்படிக் கைவிட முடியும்? கடைசியில் நான் உள்ளே சென்றேன். அதற்குள் சுந்தரி என்னைக் கேட்டாள்: ‘கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது?’ மீண்டும் நான் மிகுந்த கலவரம் அடைந்து அவளிடம் சொன்னேன்: ‘எனக்குத் தெரியாது. அதைப் படிக்கவேண்டாம் என்று அக்கா என்னிடம் சொல்லியிருந்தாள். நான் படிக்கவில்லை.’ கடைசி வார்த்தைகளைச் சொல்லும்பொழுது எனக்கு என்னவோபோல் இருந்தது.

அன்றைய நாள் வழக்கம்போல் சுந்தரியுடன் சுமார் நாற்பது நாற்பத்தைந்து நிமிடங்கள் செலவழித்தேன் என்பது உண்மை தான். ஆனால் என்னுடைய மனநிலை கெட்டிருந்ததால் எனக்கு அதனால் எள்ளளவும் ஆனந்தம் கிடைக்கவில்லை. நாங்கள் அக்காவைப்பற்றியும் மற்றும் பலவும் நிறையப் பேசினோம். ஆனால் என்ன பேசினோம், என்ன பேசவில்லை என்பது எனக்கே ஒன்றும் தெரிந்திருக்கவில்லை என்று தோன்றுகிறது. எனக்கு நேரம் ஆனதும், அங்கிருந்து நான் கிளம்பிச் சென்றேன்.

தெருவில் வந்ததுமே, வாசலில் ஒரு வண்டி நின்றிருப்பதையும், எங்கிருந்தோ ஊரிலிருந்து வந்த விருந்தினர் குழு ஒன்று அதனின்றும் இறங்கிக்கொண்டிருந்ததையும் நான் பார்த்தேன். அந்தக் குழுவில் என் வயதுப் பையன் ஒருவனும் என் கண்ணில் பட்டான். அவன் எனக்குக் கொஞ்சம் தெரிந்தவன் மாதிரி தோன்றினான். ஆனால், அப்பொழுது எனது மனநிலை சரியாக இல்லாததால் நான் அப்படியே அங்கிருந்து போய்விட்டேன்.

வீட்டிற்குப் போனபொழுது, அக்காவை எங்கும் காணவில்லை. கடைசியில் தாழ்வாரத்திற்குச் சென்றேன். முன்பு எந்த இடத்தில் அவள் சுந்தரியிடம் தனது இன்னலைப் பகிர்ந்து கொண்டாளோ, அதே இடத்தில் வில்வ மரத்தின் அடியில் சிவனின் ஒரு சிலை இருந்த இடத்தில் உட்கார்ந்து, 'கடவுளே, மஹாதேவா! நீ எனக்கு இப்படிப்பட்ட தண்டனை கொடுப் பதற்கு நான் என்ன பாவம் செய்தேன்?' என்று சொல்லி அவள் ஓவென்று அழுதுகொண்டிருந்ததைப் பார்த்தேன். நான் மௌனமாகப் பின்னால் நின்றுகொண்டிருக்க, அவள் வில்வ மரத்தின் அடியில் சிவனின் உருவத்தின் முன்னால் தனது வருத்தத்தை விண்ணப்பித்த வண்ணம் உட்கார்ந்திருந்தாள்.

அவளுடைய சோகம் பார்ப்போர் உள்ளத்தை உருக்குவதாக இருந்தது. இடையிடையில் பார்வதி—மகாதேவனிடம் அவள் செய்துகொண்ட முறையீடு அந்தக் கல்லையும் இளக வைக்கக் கூடியதாயிருந்தது. என்னால் அந்தக் காட்சியை அதிக நேரம் பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை. நாம் சொல்லவேண்டி இருக்கும் செய்தியைச் சொன்னால் சிறிதளவு அவளுக்கு ஆறுதல் ஏற்படும் என்று எனக்குத் தோன்றியது. ஆகவே, நான் மிகுந்த கசிவுடன் அவள் தோளில் கை வைத்து, அன்பொழுக அவளிடம் கூறினேன்: 'அக்கா, நான் உன்னுடைய கடிதத்தைச் சொன்ன படி படிக்காமலேயே சுந்தரியிடம் கொடுத்தேன். அவள், தன்

அண்ணு வீட்டிற்கு வந்ததுமே அவரிடம் அதைக் கொடுத்து விடுவாள்.' நான் தந்த இந்தச் செய்தியினுல் அவளுடைய வருத்தம் பன்மடங்குக் குறையும் என்று நான் நினைத் தேன். ஆனுல், அவ்வாறு ஆனதற்கு ஓர் அடையாளமும் காணப்படவில்லை. அதுமட்டுமல்ல. அவள் ஒரேயடியாக, 'இனி என்ன பயன்? தம்பி, நடக்கவேண்டியது நடந்தே தீரும். இன்று அதற்கு வேண்டிய பிரமாணம் கிடைத்துவிட்டது' என்ருள்.

அவள் வெகுநேரம் கல்லாகச் சமைந்து நின்ருள். பிறகு திடீரென்று என்னிடம் கேட்டாள்: 'நீ சுந்தரியிடம் கொடுத்த பொழுது, அதை அவள் திறந்து வாசித்தாளாடா?' அவளுடைய இந்தக் கேள்வி எனக்கு மிக்க விசித்திரமாகப் பட்டது. நான் உடனேயே அவளிடம் சொன்னேன்: 'அக்கா, அநுமதியின்றி அவள் பிறர் கடிதத்தை எடுத்துப் படிப்பாள் என்று உனக்கு எப்படித் தோன்றியது?' உடனே அவள் சொன்னுள்: 'அவள் படித்துப் பார்த்திருந்தாலும் பரவாயில்லை.' மேற்கொண்டு அவள் ஒன்றும் பேசவில்லை. மொத்தத்தில் சுந்தரி அதைப் படித்துப் பார்ப்பதில் அவளுக்குத் தடையேதுமில்லை யென்று தோன்றியது. பின் என்னை மட்டும் அதைப் படிப்பதிலிருந்து ஏன் தடுத்தாள்? இவ்வாறு எண்ணி நான் உள்ளத்தில் சிறிது வருத்தம் அடைந்தேன். உடனேயே நான் அவளிடம் சொன்னேன்: 'அக்கா, நான் படித்திருந்தால் மட்டும் என்ன ஆகியிருக்கும்?'

'ஆகிறது என்ன தம்பி? இப்பொழுது ஏதாவது ஆகப்போவது மிகுந்திருக்கிறது என்பது இல்லை. ஆனுல், அந்தச் செய்தி உனக்குப் புரிந்திருக்காது என்று எனக்குத் தோன்றியது. மேலும் அது உன் வாயில் நிற்கவும் செய்யாது.' ஓர் உணர்ச்சியற்ற நீண்ட பெருமூச்சு விட்டவண்ணம் அக்கா சொன்னுள். அதன் பிறகு சிறிது நிறுத்தினுள். பிறகு மீண்டும் அதேபோல் நீண்ட கனத்த ஒரு பெருமூச்சு இழுத்த வண்ணம் மிகுந்த பரிதாபத் துடன் என்னைப் பார்த்தவாறு சொன்னுள்: 'ஆனுல், அதனுல் இப்பொழுது என்ன? நடக்கவேண்டியது எதுவுமே நடக்கத் தவறுவதில்லை. அப்படியிருக்க இன்னும் பத்து இருபது காகிதங்கள் எழுதுவதினுலோ, உனக்குச் சொல்வதினுலோ என்ன பயன்?' அதற்குள் எங்கள் பேச்சுக்குத் தடங்கலாக ஒரு குரல் ஒலித்தது. அந்தக் குரலை அடையாளம் கண்டு கொண்ட

அக்கா, சட்டென்று தன் கண்களைத் துடைத்துக்கொண்டு வீட்டை நோக்கி ஓடினுள். நானும் அங்குச் சிறிது நேரம் நின்று நடந்தவற்றைப்பற்றிச் சிந்தனை செய்தவாறு வீட்டிற்குள் சென்றேன்.

அன்று இரவு எனக்கு அக்காவின் வருத்தத்தின் காரணம் தானுகவே தெரிந்தது. அக்காவின் கல்யாணம் நிச்சயமாயிற்று. அன்றைய எட்டாம் நாள் முகூர்த்த நாளாக இருந்தது. அந்த முகூர்த்தத்தில் அக்காவின் கல்யாணத்தை நடத்திவிட முடிவு செய்து அம்மா, அன்று மத்தியானமே மாமா விற்குக் கடிதமும் எழுதிவிட்டாள். அக்காவிற்காகப் பார்த் திருந்த அந்த ஆள், தன்னைத்தானே முப்பத்தைந்து வயதுள்ள வராகக் கூறிக்கொண்டார். அவருடைய முதல் இரண்டு மனைவிகள் இறந்து போய்விட்டார்கள். அக்கா அவனுடைய மூன்ருவது தாரம். அவனுடைய நிஜமான வயது கிட்டத்தட்ட அறுபதை ஒட்டி இருக்குமென்று தோன்றியது. அவர் அக்காவை நேரில் இருமுறை பார்த்தார். நல்ல செல்வந்தர். முதல் மனைவி யின் பிள்ளை ஒருவன் பெரியவனுக இருந்தான். இரண்டாம் தாரத்தின் ஒரு பெண் கல்யாணமாகி இருந்தாள். அவருடைய இக்குழந்தைகள் தங்கள் அப்பாவிடம், இப்போது கல்யாணம் செய்துகொள்ளவேண்டாம் என்று ஏதோ சொல்லிக்கொண் டிருந்தார்கள். ஆனுல், அவர் கல்யாணம் செய்துகொள்ளத் துடித்துக்கொண்டிருந்தார். குழந்தைகளுடைய உபதேசம் இந்தத் துடிப்பைத் தணித்துவிடுமா என்ன? அவர் அக்காவைப் பார்த்துவிட்டுப் போன நாளிலிருந்து தாமே நேராகவும், பிறர் மூலமாகவும் வற்புறுத்தத் தொடங்கினுர். நகை நட்டுகளின் விவரங்களைச் சொன்னுர். அண்ணு சாகேப் என்ற புனை பெயர் உள்ள அந்தச் சகாராம் பந்த் அவர்களின் கல்யாணத்தை நிச்சயம் செய்து தருவதில் யார் யாருக்கெல்லாம் இலாபம் இருந் ததோ அவர்களெல்லாம் எங்கள் வீட்டு வாசற்படியைத் தங்கள் காலால் தேய்த்தார்கள். மேலும், கோவிலிலும் மற்ற இடங்களி லும் சந்திக்கும் மாமிகளும், வம்புக்காரிகளும், 'ஒன்றும் பரவா யில்லைங்க; உங்கள் பெண் நன்ருகப் பெரியவளாக வளர்ந்திருக் கிருள். நீங்கள் பின்வாங்கவே வாங்காதீர்கள். தங்கமான இடத்தைக் கைவிட்டு விடாதீர்கள். உங்கள் பெண்ணிற்கு இது மிகவும் ஏற்ற இடம். இதோ பாருங்கள் வளரும் பெண். நாளைக்கே அவளுக்குக் குழந்தை பிறக்கும். இரண்டாம் தாரம்,

மூன்றும் தாரம் என்பதையெல்லாம் அடியோடு மனத்தில் கொண்டு வராதீர்கள். கண்ணை மூடிக்கொண்டு கல்யாணத்தைச் செய்துவிடுங்கள்' என்று உபதேசம் செய்தார்கள். பிற கென்ன? எல்லாக் கல்யாண காரியங்களையும் விரைவில் முடித்துக் கொள்ளவேண்டும் என்று அம்மா திட்டம் போட்டு அதற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தாள்.

மறுநாள் பொழுது விடிந்ததுமே ஒருவரிடமும் ஒன்றுமே சொல்லாமல் உடனடியாகச் சிவராம் பந்த் அவர்களிடம் போனேன். அக்காவிற்குக்கூட ஒன்றும் தெரிவிக்கவில்லை. சிவராம் பந்த் அவர்களிடம் சென்றவுடனேயே முதலில் எல்லா விவரங்களையும் சொன்னேன். மேலும், 'இப்பொழுது அவளை விடுவிக்க முடியுமானல் பாருங்கள்!' என்றும் சொன்னேன். சுந்தரி அங்கு நின்று இதையெல்லாம் கேட்டுக்கொண்டுதான் இருந்தாள். நான் எனது அக்காவின் நிலைபற்றிச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது அவள் கண்களில் நீர் நிறைந்தது. நான் சொன்ன விவரங்களையும், இறுதியில் எனது வேண்டுதலை யும் கேட்டு, சிவராம் பந்த் சிறிது நேரம் அசைவற்று மௌன மாக உட்கார்ந்திருந்தார். பின்னர் என்னிடம் மெள்ளச் சொன்னர்: 'தம்பி, நீ சிறியவன். இல்லையென்றால் நான் உன்னைக் கொண்டே ஏதாவது வழி செய்திருப்பேன். ஆனல் கடவுளே, என் கையால் செய்யக்கூடியது எதுவுமே இல்லை. நான் உனது அக்காவின் கடிதத்தை, எனது ஒரு சொந்தக் கடிதத்துடன் நேற்றுதான் உன் மாமாவிடம் அனுப்பியிருக் கிறேன். அவர் வந்து ஏதாவது செய்தால்தான் உண்டு. மற்றபடி என் கையாலோ, வேறு எவருடைய கையாலோ என்ன ஆகப் போகிறது? ஒன்றுமே இல்லை!'

கடைசியில் சிவராம் பந்த் அவர்கள் உடனே புறப்பட்டு வரும்படி மாமாவுக்குத் தந்தி அடித்தார். இதுதான் கடைசி வழியாக இருந்தது. தான் வருவதாலோ பேசுவதாலோ உபாயம் ஒன்றும் ஏற்படாமல் அபாயம் மட்டுந்தான் ஏற்படும் என்று நிச்சயமாகத் தெரிந்திருந்துங்கூட ஒரு முயற்சியாவது செய்து பார்க்கவேண்டும் என்று நினைத்து அவர் அம்மாவையும் பாட்டியையும் வந்து பார்த்து அக்கல்யாணம் விரும்பத்தகாத தாக இருப்பதை எடுத்துச் சொன்னர். ஆனல், என்ன பயன்?

கோரஜ முகூர்த்தம். மூன்று மணி அடித்தது, நான்கு அடித்தது, ஐந்து அடித்தது, ஆறு அடித்தது. மாமா வரக்

காணேம். மாப்பிள்ளேயின் குதிரை வாசலுக்குமுன் வந்தது. புரோகிதர்கள் அவசரப்படுத்தி இடைத்திரையைப் பிடித்தார்கள். கடைசியில் காளேயைப் பலியிடும் சமயத்தில், அதை அடித்து அடித்துக் கொல்லும்பொழுது அது பரிதாபமான குரலில் எழுப்பும் ஓலம் காதில் விழாமல் இருக்கட்டும் என்று தாஞே என்னவோ, எவ்வாறு ருத்விஜம் முதலான மந்திரங்களுடன், கொட்டுமேளம் போன்ற வாத்தியங்களே ஒலிக்கிருர்களோ, அதேபோல் அந்தணர், புரோகிதர் ஆகியவர்களின் 'சுபமங்கல சாவதான' என்ற ஒலிகளுக்கிடையே எங்கள் அக்கா பலியிடப்பட்டாள்.

# 22. நண்பர்களின் சந்திப்பு

கல்யாணத்தின் மங்கல காரியங்களின் இரு நாட்கள் கழியும் வரைஎனக்குச் சுந்தரியிடம் செல்ல வாய்ப்புக் கிடைக்கவேயில்லே. மூன்றும் நாள் நான் சுந்தரியிடம் போனேன். எப்போதடா அவளிடம் எல்லாம் சொல்வது என்று எனக்கு ஆகியிருந்தது என்பது அவளுக்கும் தெரிந்திருந்தது. ஆனல், இருவர் வாயி லிருந்தும் ஒரு வார்த்தைகூடக் கிளம்பவில்லே. அவள் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது. நான் பார்த்துக்கொண்டிருக் கும்போதே அக்கண்ணீர் வழியத் தொடங்கியது. தழுதழுக்கும் குரலில் அவள் சொன்னுள்: 'தம்பி, நடக்கவேண்டியது நடந்துவிட்டது அல்லவா?'

துக்கத்தின் இந்த ஆவேசப் பெருக்குக் குறைந்து, நாங்கள் ஓரளவு அமைதியடைந்ததும் நான் சுந்தரியிடம் எல்லா விவரங் களேயும் சொன்னதையும், பின்னர் இருவருமாக அவள் அம்மா விடம் எல்லாவற்றையும் தெரிவித்ததையும் அவளுக்குச் சொன்னேன். அன்று சிவராம் பந்த் அவர்களும் சீக்கிரம் வீட்டிற்குத் திரும்பி வந்தார். அப்பொழுது மீண்டும் அவரிடமும் ஒருமுறை நான் எல்லாவற்றையும் தெளிவாக எடுத்துச் சொன்னேன். எல்லாரும் சேர்ந்து அம்மாவின் பிடிவாதத்தை மிகவும் நிந்தனே செய்தார்கள். மாமா வரவில்லே என்பதைப் பற்றி மிகவும் விவாதம் நடந்தது. இவ்வாருக வெகுநேரம் அவர்கள் வீட்டில் நேரத்தைச் செலவழித்த பின்னர் அங்கிருந்து புறப்பட இருந்த சமயத்தில், சிவராம் பந்த் பேச்சுவாக்கில் என்னிடம் சொன்னுர்: 'எங்கள் வீட்டிற்கு அருகில் இருக்கும் அந்த வீட்டில், இரண்டு நாட்களுக்குமுன் வந்துள்ள புதுக் குடியினரின் பிள்ளேக்காக வேண்டியும் உன்னேக் கூப்பிட்டு அனுப்ப இருந்தேன். நீயும் அந்தப் பையனும் ஒருவரை ஒருவர் நன்கு அறிந்தவர்போல் தோன்றுகிறது. நீயும் அவனும் ஒரே வகுப்பில் படித்துக்கொண்டிருந்ததாக அவன் அன்று சொல்லிக்கொண் டிருந்தான்.'

'எந்தப் பையன்?' என்று வியப்புடன் கேட்டேன். எந்தப் பையனுக இருக்கவேண்டும் என்பது ஒன்றும் எனது அறிவிற்குப் பிடிபடவில்லே.

'அவன் பெயர் விநாயக்.'

'விநாயக்?' நான் ஆச்சரியத்தில் மூழ்கியவனாய்க் கேட்டேன். அதற்குள், 'ஆமாம், ஆமாம், விநாயக்தான். பலே, பலே! என்ன தம்பியாரே, எங்களை அதற்குள் மறந்துவிட்டீர்களா, நீங்கள்?' என்றவாறு எனக்குப் பரிச்சயமான குரலில் வார்த்தைகள் என் காதில் விழுந்தன. நான் திரும்பிப் பார்த்தேன். பார்த்தால் அங்கு எனது இளம் பருவத்து நண்பன் விநாயக்ராவ்! எவனுடன் அந்தக் கிராமத்துப் பள்ளியில் நான் லூட்டி யடித்தேனோ, பிரிந்து நின்று சண்டை பூசல் செய்தேனோ அவனே தான்!

விநாயக் இப்பொழுது நன்கு வளர்ந்திருந்தான். சிறுவயதில் எவ்வளவு உயரமாகத் தோன்றினானோ, அதைவிட மிக உயரமாக அவன் காணப்பட்டான். மொத்தத்தில் அவனுடைய தோற்றத்தில் நல்ல மாறுதல் இருந்தது. அவனைப் பார்த்ததும் எனக்கு ஆனந்தம் ஏற்பட்டதா அல்லது வேறு ஏதேனும் தோன்றியதா என்பதைப்பற்றி ஒன்றும் சொல்லமுடியாது. வீட்டிற்குப் போகக் கிளம்பி விட்டிருந்தவன், அவனைப் பார்த்தவுடன் இன்னும் சிறிது நேரம் அங்கேயே இருந்தேன். அவன் எனக்குச் சமநிலையில்தான் படித்துக்கொண்டிருக்கிறான் என்றும், இப்பொழுது எனது பள்ளியிலேயே வந்து சேரப்போகிறான் என்றும் எனக்குத் தெரிந்தது. அதைக் கேட்டதும் எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. சீக்கிரமே அவ்வாறு செய்யுமாறு அவனை நான் வற்புறுத்தினேன். அவனும் அதற்கு ஒத்துக்கொண்டான். அதன்பிறகு வெகுநேரம் ஆகிவிட்டதால், வேறு வழியில்லாமல் நான் அங்கிருந்து கிளம்பிச் சென்றேன்.

கல்யாண விசேடங்களின் ஓரிரு நாட்கள் எனக்குப் பள்ளிக்குப் போகாமல் வீட்டில் இருக்க நேர்ந்தது. ஆனால், மூன்றாவது நாளோ, நான்காவது நாளோ எனக்கு மீண்டும் பள்ளிக்குப் போகவேண்டித்தான் வந்தது. அன்றுதான் விநாயக் என்னுடன் வந்தான். வழக்கமான சில பரீட்சைகளுக்குப் பிறகு அவனை எங்கள் வகுப்பில் சேர்த்துக்கொள்ளக்கூடும் என்று முடிவு செய்து அவனை எங்கள் வகுப்பில் சேர்த்துக்கொண்டார்கள். சிறு வயதில் எங்களிடையே இருந்த விரோதம், குறைந்தபட்சம் அப்போதைக்கேனும் இல்லாதிருந்ததால், உண்மையாகவே எனக்கும் ஆனந்தமாக இருந்தது; அவனுக்கும் ஆனந்தமாக இருந்தது. அதிலும் தினந்தோறும் மாலையில் சுந்தரியைப் பார்ப்பதற்காக அவள் வீட்டிற்குச் செல்லவேண்டி இருந்ததால்

நானும் விநாயக்கும் சேர்ந்து அவள் வீட்டிற்குப் போகலானோம். மெள்ள மெள்ள, பள்ளிக்குப் போகும்போதும் சேர்ந்து போக வேண்டும் என்ற காரணத்தைக் கொண்டு காலையிலும் சிறிது குறுக்கு வழியில் போய் அவன் வீட்டிற்குப் போகலானேன். காரணம் என்ன? அந்த அளவுக்குச் சுந்தரியைப் பார்க்கவும், அவளுடன் பேசவும் வாய்ப்புக் கிடைக்கும் என்பதுதான்.

ஒருநாள் காலையில் பள்ளிக்கூடத்திற்குப் போகும் நேரத்தில் நான் அவன் வீட்டிற்குச் சென்றேன். அங்குச் சென்றதும் அவன் வீட்டிற்குள் அடி எடுத்து வைக்கவே இருந்தேன். அதற்குள் கீழ்க்கண்ட சொற்கள் என் காதுகளில் விழுந்தன: 'பலே! பெண் என்றால் பெண்ணுக்கும்! விநாயக்கிற்குக் கொடுப்பார்களே யானால் அவசியம் செய்துகொள்ளவேண்டும். மேலும் கொடுப் பார்கள் என்பதில் சிறிதும் . . .' மேலே தொடர்ந்த சொற்களை நான் கேட்கவில்லை. யார் மீதாயினும் எதிர்பாராத தருணத்தில் திடீரென்று மின்னல் தாக்கிச் சென்றால் எப்படி இருக்குமோ, அப்படித்தான் இருந்தது என் நிலையும். தாக்குதல் நேரடியாக என் உள்ளத்தின்மீது நிகழ்ந்திருந்தது. நான் முன்பின் பார்க்கவில்லை. உடனேயே பின்னால் திரும்பினேன். சுந்தரியைப் பார்க்க வேண்டுமென்றுகூடத் தோன்றவில்லை. அங்கிருந்து ஓட்டம் பிடித்தேன். அவ்வீட்டை விட்டு எவ்வளவு தூரம் ஓடிப் போக முடியுமோ அவ்வளவு தூரம் ஓடிப் போய்விட வேண்டும் என்று தோன்றியது. சுந்தரி அந்த வீட்டில் இருக்கிறாள்; நாம் தினமும் அவளுக்காகத்தான் அங்குப் போகிறோம் என்பதெல்லாவற்றை யும் நான் சட்டென்று மறந்துவிட்டேன். உள்ளேயிருந்து ஒலித்த அச்சொற்கள் அந்தக் கதவுக்கு வெளியில் நின்றுகொண் டிருந்த என் காதில் விழுந்தபொழுது சூடேற்றிய இரும்புக் குச்சியை என் காதினுள் நுழைத்தது போலத்தான் எனக்குத் தோன்றியிருந்தது. அந்தச் சொற்கள் என் காதுகளில் எந்தச் சமயத்தில் விழுந்தனவோ, அதே சமயத்தில், அதே நிமிடத்தில், ஏன் அதே விநாடியில் என்று வேண்டுமானாலும் சொல்லுங்கள், எனது பால பருவம் அழிந்து போய்விட்டது. எனது உள்ளத்தில் இருந்த பால பருவத்தின் அத்தனை குறும்புகளும் அழிவுற்றுப் போலாயின. நான் ஒரு விசித்திரமான உணர்ச்சியின் அடிமை ஆனேன். அதுவே விநாயக்கிடம் என்னுள் வெறுப்பைத் தோற்று வித்தது. வழியெல்லாம் பல எண்ணங்கள் மனத்தில் தோன்றிக் கொண்டிருக்க, ஒருவாறாக நான் பள்ளியை வந்து அடைந்தேன்.

# 23. அக்காவின் கல்யாணம்

அன்றைப்பொழுது எப்படியோ கழிந்தது. பள்ளியில் இடைவேளையின்போது நான் விநாயக்கைச் சந்திப்பதை எவ்வாறோ தவிர்த்தேன். மாலையிலும் அதேபோல அவனிட மிருந்து தப்பித்து, சுந்தரியிடமும் போகாமல் நேராக எனது வீட்டிற்குத் திரும்பி வரும் எண்ணத்தில் இருந்தேன். ஆனால், விநாயக் என்னை மடக்கிவிட்டான். அவன் என்னுடனேயே வரலானான். 'இன்று காலையிலிருந்து இதென்ன நீ இப்படிச் செய்கிறாய்?' என்று அவன் இரண்டு மூன்று முறை என்னைக் கேட்டான். ஆனால், அவனுக்கு நான் பதிலே கொடுக்கவில்லை. எங்கள் வீட்டிற்குப் போகும் இடத்திற்குப் பாதை திரும்பிய பொழுது, அங்கே நான் நின்றேன். பிறகு ஓரமாகச் செல்லத் தொடங்கினேன். அப்பொழுதே அவனுக்கு அன்றைய என் னுடைய நடத்தை மிகுந்த விசித்திரமாகப் பட்டிருக்க வேண்டும். நான் மேலே போகத் தொடங்கியதும், என்னை இழுத்து அவன் சொன்னான்: 'என்னடா இது? காலையிலும் வரவில்லை, இப் பொழுதும் போகிறாய். இன்று உன் மனத்தில் என்னதான் இருக்கிறது? நானே இன்று உனக்குப் பெரிய வேடிக்கை சொல் வதாக இருக்கிறேன்.'

'வேடிக்கை சொல்ல இருக்கிறேன்' என்று சொன்னதைக் கேட்டதும், அது என்னவாக இருந்தாலும் இருக்கட்டும், அநேக மாகக் காலையில் கேட்ட அந்த விரும்பாத செய்தியைப்பற்றிய தாகக்கூட இருக்கலாம் என்று எனக்குத் தோன்றியது. இருப்பதா, போவதா என்று கணப்பொழுது நான் குழப்பம் அடைந்தாற்போல் ஆனேன். அப்புறம் அவனுடைய அந்த வேடிக்கையைக் கேட்கத்தான் வேண்டும் என்று மனத்தில் எழவே, 'என்ன அது, என்ன அது?' என்று ஆர்வத்துடன் நான் அவனைக் கேட்டேன். கேட்டுக்கொண்டே நான் அவன் வீட்டின் திக்கை நோக்கி நடக்கலானேன். அதைப் பார்த்ததுமே அவன் இலேசாகச் சிரித்தவாறு சொன்னான்: 'நீ என்னைக் கேலி பண்ண மாட்டாய் என்றால் சொல்கிறேன்.'

'சொல்லு, சொல்லு, நான் எதற்குக் கேலி செய்கிறேன்?' என்றேன் சிறிது சினத்துடன்.

'ஒன்றுமில்லை' சிரித்த வண்ணம் அவன் சொன்னான்: 'எனக்கு மணப் பேச்சு நடந்துகொண்டிருக்கிறது!'

'அப்படியா?' நான் மிக விசித்திரமான குரலில் கேட்டேன், 'பெண் எங்கிருந்து?' என்று.

'நீயே தெரிந்துகொள்! உனக்குத் தெரியும்.'

'யார்? சுந்தரியா?' என்று வெறுப்பு, இன்னல், கோபம் முதலான பல உணர்ச்சிகள் கலந்த ஒரு குரலில் அவனைக் கேட்டேன்.

அதற்கு, 'ஆமாம், சரியாகக் கண்டுபிடித்துவிட்டாய்' என்று அவனுடைய பதில் வந்தது.

'சுந்தரி!' நான் அவனிடம் முன்பைவிட அதிகமான சினங் கொண்ட குரலில் கேட்டேன். மேலும் அவன் பதிலைச் சிறிதும் எதிர்பார்க்காமல் நான் அங்கிருந்து ஓட்டம் பிடித்தேன்.

ஏதேனும் ஒரு திசையை நோக்கி இயக்கிவிடப்பட்ட ஓர் இயந்திரம் எவ்வாறு இயங்கியவாறு இருக்குமோ, அதேபோல் நான் வீட்டை நோக்கி ஓடிக்கொண்டிருந்தேன். வீட்டிற்குப் போனேன். ஆனால், அங்கும் அதே எண்ணந்தான்! அந்த எண்ணங்கள் என் உள்ளத்தில் ஏற்படுத்திய புயல், அப்பப்பா! அந்த எண்ணங்களினால் உள்ளம் தீவிரம் அடைந்ததால், எனது உடலும் பாதிக்கப்பட்டது. இரவில் அடியோடு தூக்கம் வர வில்லை என்று சொன்னாலும் பொருந்தும். அவ்வளவும் மண்டை யில் பிடித்திருந்த பிரமை.

எவ்வளவு நேரம் ஆகியும், இரவு முடிவதற்குரிய அறிகுறியே காணப்படவில்லை. ஆனால் எனக்கு அது தெரியவில்லை என்றாலும், எந்த நேரத்திற்கு அது புலப்பட வேண்டுமோ, அதே நேரத்திற்கு அது புலப்படலாயிற்று. உரிய நேரத்தில் விடியற்காலை ஆயிற்று. சூடேறிய எனது தலை உறக்கமின்மையினால் மேலும் சூடேறிய தாக ஆயிற்று. உடம்பிலிருந்து சூடு வெளிப்பட்டுக்கொண் டிருப்பதாக எனக்குத் தோன்றியது. எழுந்திருக்க முயன்றேன். ஆனால் எழுந்திருக்க முடியவில்லை. எவ்வளவோ நேரம் எழுந் திருக்கும் எண்ணத்தில் இருந்தேன். ஆனால், அது செயல்பட வில்லை. உடம்பெல்லாம் கட்டையான மாதிரி தோன்றியது. இது என்ன ஆயிற்று என்று எனக்கே புரியவில்லை. அதற்குள் இன்னமும் அதிகமாக என் உடலினின்றும் வெப்பம் வெளிப் பட்டுக் கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றியது. மேலும், எழுந்திருப்பதற்கு வேண்டிய தெம்பு எங்ஙனம் உடலில் இல்லா

மற்போயிற்று என்பது குறிப்பாக உள்ளத்தில் தோன்றலாயிற்று. தலையில் 'விண்' என்று வலி பரவியது. எனது உடலில் சுரம் சிறிது நேரத்திற்குள் சட்டென்று அதிகமாயிற்று என்று எனக்குத் தெரிந்தது. நான் இதுபோல் வெகு நேரம் வரை என்றுமே படுத்திருந்ததில்லை. அப்படி இருக்க இன்று இவ்வளவு நேரம் ஆகியும்கூட நான் ஏன் எழுந்திருக்கவில்லை எனத் தோன்றி, வீட்டில் இருந்தவர்கள் என்னை எழுப்ப வந்தார்கள். அப்பொழுது நான் சுரத்தால் துடித்துக்கொண்டிருந்தேன்.

வீட்டில் இருந்தவர் யாவரும் பயந்து போய்விட்டார்கள். திடீரென்று இப்படிச் சுரம் வருவதற்குக் காரணம் ஒருவருக்கும் புரியவில்லை. ஒரு நாள் ஆயிற்று, இரண்டு நாள் ஆயிற்று, மூன்று நாள் ஆயிற்று, நான்காவது நாளும் கடந்து சென்றது. ஆனால், சுரம் சிறிதும் குறையவில்லை. மாறாக, அது மேலும் அதிகமாகிக் கொண்டே போயிற்று. எனது பெரும்பாலான நேரம் சுரத்தின் வேதனையில் தவிப்பதிலேயே கழிந்தது. அந்த நிலையில் என்ன ஆயிற்று, நான் என்ன பேசினேன் என்பது எனக்குச் சிறிதளவும் தெரியாது. பதினேழாவது அல்லது பதினெட்டாவது நாள் சுமார் நள்ளிரவுச் சமயத்தில் நான் விழித்துக்கொண்டேன். உடனேயே அங்கும் இங்கும் பார்க்கலானேன். அப்பொழுது எல்லாரும் என்னைச் சுற்றி நாலாபுறமும் மௌனமாகக் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டேன். யார் யார் என்பது மட்டும் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இருந்த போதிலும் என் அக்கா எனது தலையணைக்கு அருகில் அமர்ந்திருந் தாள் என்பதை மட்டும் நான் அறிந்துகொண்டேன். அதனால் எனக்குச் சமாதானமும் ஏற்பட்டது.

நான் மீண்டும் ஒருமுறை எல்லாரையும் பார்த்தேன். பிறகு அடியோடு சக்தியற்றுத் தளர்ந்துபோன எனது கையை அக்காவின் மடிமீது வைத்து மெலிந்த என் குரலில் நான் அவளிடம் கேட்டேன்: 'அக்கா, கல்யாணம் ஆயிற்றடீ?'

அந்தக் கேள்வியைக் கேட்டதுமே, அக்கா தனது முகத்தை என் முகத்தின் அருகில் கொண்டு வந்து என்னிடம் சொன்னாள்: 'தம்பி, நீ நினைவு பெற்றாயா . . .? நீ என்னிடம் இது என்ன கேட்டாய்?' இந்தச் சொற்கள் என் காதில் விழ, ஒரு நீண்ட பெருமூச்சின் சூடான காற்றுடன், கண்களிலிருந்து படக்கென்று விழுந்த சூடான கண்ணீர்த் துளி ஒன்றும் எனது கன்னத்தின்மீது சட்டென்று விழுந்தது. எனக்கு அது ஒன்றுமே

புரியவில்லை. என்னுடைய கேள்விக்குப் பதில் அளிக்காமல் அக்கா ஏன் உடனேயே அழ ஆரம்பித்துவிட்டாள்? இவை யாவும் நிகழ்ந்த பிறகு மேலும் ஒரு முப்பத்தாறு மணிநேர அளவுக்கு நான் மீண்டும் இம்மண்ணுலகை விட்டுப் போனவன் மாதிரி இருந்தேன். எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. ஆனால், அந்தக் கால வரம்புக்குள் வீட்டில் உள்ள எல்லாரும் என்மீது முழு நம்பிக்கையையும் கைவிட்டு, என்னை அநேகமாக மூடி வைத்த வாறு எனது மூக்கில் நூலை வைத்து உட்கார்ந்திருந்தார்கள். இவை யாவும் எனக்குப் பிறகுதான் தெரியவந்தன. மீண்டும் நான் நினைவு பெற்றபொழுது காலையில் பதினொரு மணி அடிக்கும் நேரமாக இருந்தது. என்னிடம் ஒரே ஓர் ஆள் தலைமாட்டில் உட்கார்ந்திருந்ததை உணர்ந்தேன். மற்றபடி அருகில் வேறு யாரும் இருக்கவில்லை. அந்த ஆள் யார் என்று நான் நன்கு கவனித்துப் பார்க்க ஆரம்பித்தேன். அதே சமயத்தில் எனது காதருகில் குனிந்து மிகுந்த குழைவுடன் அக்கா என்னைக் கேட்டாள்: 'தம்பி, தம்பி, விழித்துக்கொண்டாயா? எப்போதடா தம்பி, நினைவு பெறப் போகிறாய், நீ?'

'அக்கா, கல்யாணம் ஆகிவிட்டதாடீ' என்று மீண்டும் நான் கேட்டிருக்கிறேன். அதற்கு அவள், 'உன் மனத்தில் என்னதான் இருக்கிறது? யாருடைய கல்யாணம் ஆயிற்று என்று கேட்கிறாய்? என்னுடையதா? என்னுடைய கல்யாணம் ஆயிற்று என்பது உனக்குத் தெரியாதா?' இந்தச் சொற்களை, குறிப் பாகக் கடைசியாகச் சொன்னதை, அவள் எவ்வளவு வேதனை யுடன் சொல்லியிருப்பாள் என்பது அவளுக்குத்தான் தெரியும். ஆனால், அந்தச் சமயத்தில் எனக்கு அவற்றின் காரணமாக ஓர் உணர்ச்சியும் தோன்றவில்லை. எனது கேள்வி தனது கல்யாணத்தைப்பற்றி என்று நினைத்துக்கொண்டுதான் அவள் இவ்வளவு நேரம் பதில் சொல்லிக்கொண்டிருந்தாள் என்று தெரிந்ததும் என்னுடைய உள்ளத்தில் நம்பிக்கையின் ஒரு சிறு முளை தோன்றியதாலோ என்னவோ, என் வாயினின்றும் ஒரேயடி யாக இந்த வார்த்தைகள் வெளிப்பட்டன: 'சே, சே, அக்கா உன்னுடைய கல்யாணத்தைப்பற்றியா நான் கேட்பேன்? எனக்குத் தெரியாதா உனக்குக் கல்யாணம் ஆயிற்று என்று! நான் உன் கல்யாணத்தைப்பற்றி ஒன்றும் கேட்கவில்லை.'

'அப்படி என்றால் பின் வேறு யாருடைய கல்யாணத்தைப் பற்றிக் கேட்டாய்? உனது சுரத்தின் வேதனையில் கல்யாணம்

கார்த்திகை என்றெல்லாம் உனக்குக் கனவு வந்துகொண்டிருந் ததா?'

'இல்லை, நான் கனவு ஒன்றும் கண்டு கொண்டிருக்கவில்லை, அக்கா. நான் கேட்டதை நல்ல நினைவுடன்தான் கேட்டேன்.'

'அடே, அப்படி என்றால் பின் யாருடைய கல்யாணம் அது? என்னுடையது அல்ல என்றால், பின் யாருடையது? இன்னும் வேறு யாராவது இருக்கிறார்களா கல்யாணத்திற்கு நம் வீட்டில்?'

'இல்லை.'

'பின் யாருடைய கல்யாணம் ஆயிற்று என்று மும்முறை கேட்டாய் நேற்றிலிருந்து?'

இருபத்தைந்து முறைகள் என் உதடுகள் வரை அந்த நான் கெழுத்துப் பெயர் வந்தது. ஆனால், எவ்வளவு முயற்சித்தும் அதை உச்சரிக்க முடியவில்லை. அப்பொழுது கடைசியாக நான் ஒரேயடியாக அசைவற்றுக் கண்களை மூடியவண்ணம் கிடந்தேன். எனக்கும் ஒன்றும் தோன்றவில்லை. அக்காவும் வெகுநேரம் என்னிடம் ஒன்றும் பேசவில்லை. சிறிது நேரம் கழிந்த பின்னர் அவள் என்னிடம் மெதுவாகச் சொன்னாள்: 'தம்பி, நீ ஏதாவது சொல்ல விரும்பினால் சீக்கிரம் சொல். இல்லையென்றால் சாப்பிடப் போயிருப்பவர்கள் எல்லாரும் இப்பொழுது வந்து விடுவார்கள்.' நான் கேட்கும் செய்தியில் ஏதோ மர்மம் இருக்கிறது, அது வேறு யாருக்கும் தெரியக்கூடாது என்று என் மனத்தில் இருப்பதாக அவளுக்குத் தெரிந்து போயிருக்க வேண்டும் என்று எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. மேலும் அதற்குள் எனக்கு ஏதோ எண்ணம் தோன்றியது என்பதனாலோ என்னவோ, அந்தப் பெயரைத் தெளிவாகச் சொல்லுவதற்கு வேண்டிய மனோதிடம் ஏற்பட்டதுபோல் தோன்றியது. உடனேயே நான் அக்காவின் முகத்தை என் கைகளினால் எனது முகத்தருகில் இழுத்துக்கொண்டு, மெதுவாக அவள் காதில் அந்த வார்த்தையை உச்சரித்தேன். உடனேயே ஏதோ விசேட மாக வியப்பு அடைந்தவள்போல் ஆகி, அவள் என்னிடம் சொன்னாள்:

'என்ன சொல்கிறாய்? சுந்தரியின் கல்யாணம் ஆயிற்றாவா?'

'ஆமாம்.'

'உனக்கு யார் சொன்னார்கள், அது ஆகப் போவதாக இருந்தது என்று?'

'எனக்குத் தெரிந்திருந்தது.'

'உனக்கு என்ன தெரியும்?'

'எனக்குத் தானுகவே தெரிந்தது. ஆனுல், ஆயிற்ரு என்பது மட்டும் சொல்!'

'ஏதோ பைத்தியம் பிடித்தாற்போல் கேட்கிருய். என்ன டாப்பா கேட்கிருய் என்று நான் பார்த்தேன்!'

'சொல்கிறேன் என்ருய் அல்லவா? சொல், ஆயிற்ரு?'

'அட, இது என்ன கேட்கிருய்? இதோ பார், ஒரு பெரிய செய்தியை உன் காதில் போட்டு வைக்கிறேன்.'

நான் மிகுந்த ஆர்வத்தோடு என் காதுகளை நிமிர்த்தினேன்.

'இங்கே பார், வந்து அவளுடைய . . .'

ஆனுல், மேற்கொண்டு தொடர்ந்த வார்த்தைகள் என் காதில் விழுவதற்கு முன்னரே, 'அடே, பலே! இவன் நினைவுக்கு வந்துவிட்டான்போல் இருக்கிறது!' என்று இதுவரை நான் கேட்டிராத, நான் அறியாத ஒரு குரலில் இவ்வார்த்தைகள் என் காதில் விழுந்தன. ஆகவே, அக்காவின் 'பெரிய செய்தி' அப்படியே நின்றுவிட்டது. அதனுல் எனக்குப் பெரிய ஏமாற்றம் ஏற்பட்டது.

# 24. இது யார்? இது என்ன?

'தம்பி, மகனே! இப்பொழுது நான் வந்திருக்கிறேன். உன் உடலின்மீது என் கையால் தடவிக் கொடுத்திருக்கிறேன். ஆகவே, நீ குணமடைந்து விடுவாய் என்பது உறுதி என்று அறிந்துகொள். உனக்கு இப்பொழுது ஓய்வு கிடைக்கும். என்னுடைய கைராசி யாக்கும் அப்படி. (அக்காவிடம் திரும்பி), மகளே, நீ ஏனடீ என்னைப் பார்த்து இப்படி வெட்கப்படுகிறாய்? வா பார்க்கலாம், இங்கே. கல்யாணம் ஆகிவிட்டது என்று என்னைப் பார்த்தா வெட்கப்படுகிறாய்? ஏய், வா இங்கே! வந்து உட்கார், அவன் அருகில் உட்கார்ந்திருந்தாற்போல்' என்று சொல்லி, வந்திருந்த அந்த ஆள் ஒரு பெரிய நீண்ட ஏப்பம் விட்டு, தமது பையைத் திறந்தார். பிறகு பாக்குவெட்டியால் பாக்கை வெட்ட ஆரம்பித்தார். இவ்வாறு சாதாரணமாகப் பேசி, வீட்டு மனிதர்போல் பழகும் இந்த ஆள் யாராக இருக்கமுடியும் என்று நான் என் மனத்தில் சிந்திக்கலானேன்.

சிந்தனையில் நான் மூழ்கியிருக்கும்பொழுது, அவர் மீண்டும் என்னிடம் சொன்னார்: 'எழுந்திரு மகனே, சீக்கிரம் குண மடைந்துவிடு. பிறகு புது வீட்டிற்குப் போகலாம். நீ குணமடை யும் முன்னால் இங்கிருந்து போவது சரியல்ல. வேறு புதிய வீட்டை ஏற்பாடு செய்து உங்களைக் குடிவைக்கும் வேலையைச் செய்துவிட்டால், அதன்பிறகு நான் எனது வேலைக்குச் செல்வேன், தெரிந்ததா? நான் ஆயிரம் தடவை கடிதம் எழுதி யிருப்பேன்: ''அவசரப்படவேண்டாம், நான் அங்கு வருகிறேன், மிக நல்ல இடம் பார்த்திருக்கிறேன்'' என்று. சரி இருக்கட்டும். போனதைப்பற்றி யோசிக்கக்கூடாது. இனி அதைப்பற்றி என்ன? இனிமேல் ஆகவேண்டியது என்ன என்பதை இப்பொழுது கவனிக்கவேண்டும். இரண்டு மூன்று ஆண்டுகள் என்னுடைய கிரகநிலை மோசமாக இருந்தது; துரதிர்ஷ்ட மானவை சில நடக்கவேண்டுமென்று இருந்தது. நடக்கவேண்டியவை என்றும் தவறுவதில்லை. ''यद्भावी न तद्भावी'' என்பது ஒன்றும் என்றுமே பொய்யாகாது. ஆக வேண்டிய அளவிற்கு எல்லாம் நியமப்படி ஆகத்தான் செய்யும்,

அதுவும் அந்தந்த வகையில் மூளைக்குத் தோன்றத்தான் செய்யும். கல்யாணம் ஆகிவிட்டது. அதனால் ஒன்றும் கெட்டுப் போக வில்லை. நமக்கு என்றுமே கெடுதல் ஏற்படாது. நான் பிறந்த வேளையே மிகச் சிறந்ததாக்கும்! ஒரே ஒரு கிரகத்தின் குறைவு உள்ளது. அந்தச் சந்திரன் ஒருவன் நல்ல இடத்தில் இருந் திருந்தால் நான் எங்கேயாவது ஒரு நாட்டின் (சம்ஸ்தானத்தின்) அதிபதியாகி இருந்திருப்பேன்!'

இவ்வாறாக அவர் விடாமல் ஏதோ பேசிக்கொண்டிருந்தார். அதற்குள் எங்கள் பாட்டி வரவே, அவளை நோக்கியவாறு இந்தச் சொற்பொழிவு நடக்கத் தொடங்கியது. அவள் பாவம் ஈ என்று இளித்தவண்ணம் கேட்டுக்கொண்டிருந்தாள். அதற்குள் அம்மா சத்தமாக அவளைக் கூப்பிட்டுச் சொன்னாள்: 'சாப்பாடு போடவேண்டிய ஏற்பாடுகளை எனக்குச் செய்யவேண்டும்.'

அந்தப் புதிய மனிதர் உடனேயே சொன்னார். 'கொண்டு வாருங்கள், கொண்டு வாருங்கள்! நான் இங்கு உட்கார்ந்தே இருக்கிறேன். ஆகவே, நானே அவனுக்கு ஊட்டுகிறேன்.' அதைக் கேட்டதுமே அம்மா பாட்டியைக் கூப்பிட்டுச் சொன்னாள்: 'வேண்டாம், வேண்டாம்! வேறு யாரும் கொடுக்க வேண்டாம். நீயே போடு. இல்லையென்றால் நான் வந்து கொடுக்கிறேன்.'

அதைக் கேட்டதுமே என்னருகில் இருந்த அந்த ஆள் சொன்னார்: 'என்ன பார், முதலிலிருந்தே இவளுடைய இந்தச் சுபாவம், தன் மனம் விரும்பியபடி நடப்பது. இன்ன இன்ன மாதிரியான மனைவி கிடைப்பாள் என்று என்னுடைய ஜாதகத்தில் எழுதியிருக்கிறது. என்னுடைய ஜாதகத்தில் இருக்கும் ஓர் எழுத்துக்கூடத் தவறவில்லை. இவன் கையில் பணம் சிறிதளவும் நிலைக்காது என்று அதில் சொல்லப் பட்டிருக்கிறது. அதேபோல் ஒவ்வொரு கணமும் எனக்கு அநுபவம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. இலட்சக்கணக்கான வர்களுக்குப் பணம் பங்கிடப்படும். அதற்கு ஒன்றும் குறை வில்லை. ஆனால், கையில் காசு சிறிதும் மிச்சமிருக்காது. எவ்வளவு வேலைக்காரர்கள், பணியாட்கள்! எவ்வளவு பணம் இவர்களுக்குச் சம்பளமாகப் பங்கீடு செய்து கொடுக்கப்படும்! ஆனால், என்னிடத்திலோ மிச்சம்? ம், உம், ''ராமாய தஸ்மை நம:'' என் கையின்மீது பார். இந்தத் தோல்தான் எவ்வளவு தடித்திருக்கிறது. தவிர, கையின் ஒன்பது விரல்களிலும்

சங்கு இருக்கிறது. பத்துச், சங்குகள் இருந்தால்...? பத்துச் சங்குகள் உடையன் ஊதாரி என்ற நிலை ஏற்பட்டிருக்கும். அந்த ஒரு சங்கு குறைகிறது. அதுவும் கூட இருந்திருந்தால் பின் என்ன, எல்லாம் பாழடைந்து போயிருக்கும். ஆனால், அப்படியில்லை. கிரகங்கள் நல்ல பலங் கொண்டவையாக இருக்கின்றன. அவற்றின் அளவற்ற சிறப்பின் காரணமாகத்தான், நான் கொஞ்சத்தில் தப்பினேன். அவ்வாறு கைவிரல்களில் சங்குகள் இல்லாமலிருந்திருந்தால், ஏதேனும் ஓர் ஆதீனத்தின் தலைமையே கிடைத்திருக்கும்.'

இராவ்ஜீ என் உடலைத் தம் கையால் தடவிக் கொடுத்தார் என்பதனால் என்று சொல்லுங்கள்; இல்லை, வெறுமனே அவரது வருகையினாலேயே என்று சொல்லுங்கள்; இல்லை, எந்தக் காரணத்தினால் இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டதோ, அதெல்லாம் ஆதாரமற்றவை என்று தெரிந்ததால் என்று சொல்லுங்கள்; இல்லை எனது அநுபவிக்கவேண்டிய காலம் முடிவடைந்ததால் என்று சொல்லுங்கள்; அன்றைத் தினத்திலிருந்து நான் நன்கு குணம் அடையத் தொடங்கினேன். இரண்டு மூன்று நாட்களிலேயே நான் எழுந்து இங்குமங்கும் நடக்கத் தொடங்கினேன். எனது உடல் நிலையைப்பற்றி அறிந்துகொள்வதற்காக ஓரிரு முறை சிவராம் பந்த் வந்தார். எட்டு நாளில் முழுதும் குணம் அடைந்துவிட்டேன். அக்கா எனக்குச் சொல்ல இருந்த அந்தப் 'பெரிய செய்தியை'யும் அன்று என்னிடம் சொன்னாள்.

எங்களது புதுக் குடித்தனம் ஆரம்பித்தது. நான் பாட்டுக்குக் கவலையின்றி அமைதியுடன் காலம் கழித்து வந்தேன். இன்னமும் குணம் அடைந்தவுடன் நான் பள்ளிக்குச் செல்லத் துவங்கினேன். சிவராம் பந்த் அவர்களின் வீட்டுக்கும் மீண்டும் நான் போகத் துவங்கி, சுந்தரியுடன் சேர்ந்திருக்கும் இன்பத்தையும் அடைய ஆரம்பித்தேன். இவ்வாறு நாள் ஓட ஓட, சுமார் நான்கு மாத காலம் கடந்து மறைந்திருக்கும். இவ்வளவு காலத்திற்குள் இராவ்ஜீயின் தாராள மனப்பான்மை குறைந்துகொண்டே வந்ததாக எனக்கு மெள்ள மெள்ளத் தோன்ற ஆரம்பித்தது. முதலிலிருந்த அவருடைய அந்த நாக்கின் தீவிரம், அநேகமாக மந்தம் அடைந்தது. மற்றபடி ஒரு விஷயத்தில் மட்டும் அவர் வழக்கம்போலவே தாராளமாக இருந்தார். ஒருகால் செலவுக் காரியங்களில் தாராள மனப்பான்மை குறைந்துகொண்டே வந்ததால்தான், அவ்வளவுக்கவ்வளவு மற்ற விஷயங்களில்

தாராளத்தன்மை அதிகமாக வளர்ந்துகொண்டே போயிற்று என்றும் தோன்றியது. இப்பொழுது ஏதாவது பொருளைக் கொண்டு வரும்படி நான் பிடிவாதம் செய்தால், முன்போல் சட்டென்று அவர் கொண்டு வருவதில்லை; அநேகமாகக் கொண்டு வராமலும்கூட இருந்தார். ஆனால், அதைக் கொண்டு வருகிறேன் என்று ஆறுதல் சொல்வதில் மட்டும் அவர் குறைவு வைக்கவில்லை. அதுமட்டுமன்றி, அவர் தமது சிம்லா, கல்கத்தா வேலைகளைப்பற்றி எல்லா விவரங்களும் எனக்குச் சொல்லி, எவ்வளவு பணம் கிடைக்கப் போகிறது என்பதைப்பற்றியும், அப்பணம் கிடைத்ததுமே நாம் இருக்கும் நிலையில் எவ்வளவு அபிவிருத்தி ஏற்படப்போகிறது என்பதைப்பற்றியும் மிகச் சிறந்த கற்பனையைக் கொடுத்தார். வண்டிகள், குதிரைகள், வேலைக்காரர்கள் முதலானவை யாவும் என் கண்முன் நிற்பனபோல் எனக்குத் தோன்றியது. மேலும் பல சமயங்களில், முன்பு நான் எந்தெந்த பொருள்களுக்காகப் பிடிவாதம் செய்திருப்பேனோ, அவை யாவும் வருங்காலத்து இன்ப நினைவின் அலையில் பிரமிப் படைந்து போய் ஒரேயடியாக மறந்து போகலாயின. நிலைமை இப்படி இருக்கும்பொழுது, ஒருநாள் மாலை நான் வீடு திரும்பி வந்ததும் இராவ்ஜீக்கும் அம்மாவுக்கும் பயங்கரமான சண்டை நடந்துகொண்டிருப்பதைப் பார்த்தேன். நான் அப்படியே வெளியில் இராவ்ஜீ உட்காரும் அறையில் அசைவற்று நின்று விட்டேன். அப்பொழுது பின்வரும் பேச்சு வார்த்தை என் காதில் விழுந்தது:

'எல்லாமே எனக்குப் புரிகிறது என்பதைத் தெரிந்துகொள்ளுங்கள். நான் ஒன்றும் துணியில் ஒத்திப் பாலைக் குடிப்பதில்லை. இந்த எல்லா இலட்சணங்களுமே எனக்கு முதல் நாளிலிருந்தே தெரிந்து போயிருந்தன. ஆனால், என்ன செய்வது?'

'உனக்கு என்ன புரிகிறது? கொண்டா, கொண்டா அந்தக் கழுத்தணியை இங்கே. அடியே, என்னுடைய வேலை முடிந்து விட்டது என்றால் உன்னை நிறைத்துவிடுவேன் தங்கத்தாலேயே. நீ என்ன இப்படி நினைத்துக்கொண்டிருக்கிறாய்? மேலும் நீ இவ்வாறு பயப்படாதே. நாளைக்கு என்னுடைய பணம், ஒரு நானூற்றைம்பது ரூபாய் வரவேண்டியிருக்கிறது, ஃபாஜல்பூர் நவாப்பிடமிருந்து. நான் இன்று காலையில்தான் அவனுக்குத் தந்தி அனுப்பினேன். அநேகமாக நாளைக்குத் தந்தி மணியார்டரே வரக்கூடும். அதிகமாகப் போனால் நாளைக்கு மறுநாள்.

கொண்டா அதை. இந்த இவ்வளவு பணத்தைக் கொடுத்துத் தான் ஆகவேண்டும் என்று நான் அந்தக் கழுத்தணியைச் சிறிது கேட்கிறேன். வேறு என்ன?'

'ஒருமுறை நான் சொன்னேன் அல்லவா, நான் துணியில் ஒத்திப் பாலைக் குடிப்பது இல்லை என்று? நான்கு நாட்களுக்கு முன்னால் கையில் அணியும் வளையல்கள் போயின; இன்று கழுத் தணியைக் கேட்கிறீர்கள். ஆனால், உயிர் போனாலும் நான் இனி ஒன்றும் தரப்போவதில்லை. எனது உயிர் போய்விட்டது என்றால், பின்னர் எதுவேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள். என்னை அடகு வைத்தாலும் எனக்கு அதைப்பற்றி ஒன்றும் இல்லை, தெரிந்துகொண்டீர்களா? குடித்தனம் பண்ணத் தொடங்கியபொழுதே நான் இவற்றையெல்லாம் ஊகித்துத் தான் இருந்தேன். நான் ஏதோ ஒரு நூறு நூற் றைம்பது ரூபாய் கொண்டு வந்திருந்தேன், அதை விழுங்கி விட்டீர்கள். ஆகவே, இனி என் நகைகளின்மீது பெரியார் கை வைக்கத்தான் போகிறார் என்று எனக்கு அப்பொழுதே தெரிந்துவிட்டிருந்தது. வளையல்களை வெளியில் காண்பிப்பதற்கு என்று கேட்டபொழுதே, இனி அதன்மீது எனது கை படப்போவ தில்லை என்று எனக்குத் தோன்றிவிட்டிருந்தது. ஆனால், முதலில் எப்படி வந்ததோ, அப்படிப் போகும் என்று நினைத்தேன். உங்களுடையது என்று அந்த வளையல்கள் மட்டுந் தான் மிகுந்திருந்தன. ஆகவே, அதுவும் போகட்டுமே என்று சொல்லிக்கொண்டேன். மீண்டும் தொடர்பு வேண்டாம். ஆனால், கழுத்தணியோ அல்லது வேறு எதுவுமே இப்பொழுது என்னிடம் இருந்து கிடைக்கப்போவதில்லை. பிறகு என்ன? உங்களுக்குத் தோன்றியதைத் தாராளமாகச் செய்யுங்கள். அந்தப் பாழடைந்தவளுக்கு ஒரு வழி செய்தது நல்ல தாகப் போயிற்று. இல்லையென்றால் அவள் பணத்தையும் எடுத்துக்கொள்வதில் நீங்கள் பின்வாங்கியிருக்கமாட்டீர்கள். எனக்கும் என்னுடைய பையனுக்கும் தலையில் இனி என்ன எழுதி யிருக்கிறது என்பதைப்பற்றி எனக்கு நிச்சயமாக எல்லாம் தெரியும்.'

'தெரியும் தலை உனக்கு! நாளைக்கு நான் சிம்லாவிற்குப் போய்க் கவர்னர் சாகேப்பைச் சந்தித்தேனே ஆனால், பணம் புரளத் தொடங்கும். அவருடைய அந்தத் தந்தியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இன்று நாளைக்குள் தந்தி வந்தால் நான்

கிளம்பிவிடுவேன். எனக்கு என்ன செய்யவேண்டியிருக்கிறது? நீ ஆச்சு, உன்னுடைய பிள்ளை ஆச்சு. கணப்பொழுது என்மீது உனக்கு நம்பிக்கை இல்லை என்றால், நான் மட்டும் இப்படி வேதனைப்பட்டுக்கொண்டு பணம் சேர்ப்பதற்காக உயிரை விடுவானேன்? உன் விருப்பப்படி எதை வேண்டுமானாலும் இங்கு நீ செய். ஆனால், இங்கே பார். சமயத்தில் யாரையும் இப்படித் தடுக்கக்கூடாது. கொண்டா . . .'

'ஊஹூம்! அதை என்றைக்குமே கொடுக்கப் போவதில்லை. நான் இனி இப்பொழுது ஒன்றுமே கேட்கப்போவதில்லை, தெரிந்ததா? இனி இப்படிப்பட்ட நிறைய நிறையப் பணம், நகை இவைகளைப்பற்றிய பேச்சினால் நான் ஏமாறப்போவதில்லை. மொத்தத்தில் இனி என்ன நமது தலையில் எழுதியிருக்கிறது என்பது எனக்கு முழுக்க முழுக்கத் தெரிந்திருக்கிறது என்று ஒரு சில முறை சொன்னேன். அந்தப் பாவியினிடமிருந்தும் வருங்காலத்தில் எத்தனை சுகம் எனக்குக் கிடைக்கப் போகிறது என்பதும் எனக்குத் தெரிந்திருக்கிறது . . .'

'சே! சே! சே! என்ன இல்லாததும் பொல்லாததும். அந்தப் பையன் மிகச் சிறந்தவனாக உருவெடுக்கப் போகிறான். நான் நேற்றைக்கு முதல் நாள்தான் பிறவிக் குறிப்பை அறிந்து வந்தேன். மிகவும் பாக்கியசாலிப் பையனாக வரப்போகிறான். நானே அவனது கிரக நிலையை அறிந்து ஆச்சரியத்தில் மூழ்கி விட்டேன். ஜோஷீ பாகவதர்கூட இவ்வளவு சிறந்த ஜாதகத்தை இதுவரை எங்கும் பார்த்ததில்லை என்று சொல்லி வாயில் விரலை வைத்துக்கொண்டார். ஏதோ ஒரு சில கணங்களினால் தாக்குதல் ஏற்பட்டிருக்கிறது. இல்லையெனில், அவன் சக்கரவர்த்தியே ஆகவேண்டியவன்! மற்றபடி அவனுடைய ஜாதகத்தில் முதலிலிருந்தே பொருள் ஈட்டுதல் இல்லை. அவன் தந்தையின் செல்வத்தைக் கொண்டுதான் வளரவேண்டியதாக இருக்கிறது. சரி, அப்புறம் என்ன? அந்தக் கழுத்தணியை மட்டும் கொஞ்சம் . . .'

'மறுபடியும் மறுபடியும் கேட்டதையே ஏன் என்னிடம் கேட்கிறீர்கள்? இதற்குள் நான் நான்கு முறை உங்களுக்குச் சொல்லியாயிற்று, நான் எதையுமே கொடுக்கப்போவதில்லை என்று. நேற்றைய அந்த எனது வளையல்களை நான் முதலில் அடையட்டும், பார்க்கலாம்.'

'வளையல் வரும், வளையல் திரும்பி வரும். நான் இங்கிருந்து போனதுமே உனது வளையலை நீ திரும்பப் பெறுவதற்கு ஏற்பாடு செய்கிறேன். அந்த வளையல்களைப்பற்றி நீ சிறிதளவும் கவலைப் படாமல் இரு. என்னுடைய பாதகமான கிரக நிலைக்கு இப்பொழுது பதின்மூன்றும் நாள் முழுதாக முடியப்போகிறது. ஆகவே, என்னென்ன இன்னல்கள் ஏற்படவேண்டுமோ அவையெல்லாம் இந்த மூன்று நாட்களில்தான். கிரகங்கள் இடமாற்றத்தின் காரணமாகச் சுற்றும்பொழுது பழிவாங்காமல் விடாது. அதனால்தான் இவ்வளவு இடைஞ்சல். நான் இப்பொழுது இரண்டு நாட்களில் சாந்தியுங்கூடச் செய்யப் போகிறேன். அதில்லாமல் பயன் இல்லை. பார், நான் சொல்வதைக் கேள் நீ.'

'இப்பொழுது நான் இங்கிருந்து ஒரேயடியாகப் போய்விடுகிறேன், பாருங்கள். அதற்கு அப்புறம் உங்களுக்கு என்னவெல்லாம் ஆகவேண்டுமோ, அதெல்லாம் ஆகட்டும். நான் ஒரு முறை சொன்னால் சொன்னதுதான். இப்பொழுது ஒரு நூலிழை அளவுகூட ஒன்றும் கொடுக்கப் போவதில்லை. இரண்டு நாட்களுக்கு முன்னால் வளையல் ஏமாற்றத்தினால் போயிற்று.'

ஆனால், என் கையில் இருந்த புத்தகங்கள்தான் எவ்வளவு மோசம்! அவற்றினின்றும் ஒன்று எனக்குத் தெரியாமல் சிறிது சிறிதாக நகர்ந்து. சத்தமாகக் கீழே விழுந்தது. அது விழுந்ததும் ஏற்பட்ட சத்தத்தைக் கேட்டு, உடனே இராவ்ஜீ, 'யார் அங்கே?' என்று சத்தம் போட்டு, அம்மாவிடம், 'சரி சரி, போதும். இப்பொழுது அந்தப் பையன் வந்திருப்பான். அவனுக்கு முன்னாலாவது வெறுமனே நம்முடைய இது வேண்டாம். நீ என்னை இப்படி இழிவாக நடத்துபவள் என்பது எனக்கு முதலில் இருந்தே தெரியும். போ' என்று சொல்லி வெளியில் வந்தார். வந்ததும் என்னிடம், 'என்னடா, எப்போது வந்தாய்?' என்று சொல்லி என்னருகில் வந்தார். நான் மிகுந்த குழப்பம் அடைந்துவிட்டிருந்தேன். இப்பொழுது இவர் மேற்கொண்டு என்னை ஏதாவது கேட்டுவிடுவாரோ என்று தோன்றியது. அதைத் தவிர்ப்பதற்கென்றே கீழே உட்கார்ந்து கீழே விழுந்த எனது புத்தகத்தின்மீது கவனத்தைச் செலுத்தினேன். அவரும் மேற்கொண்டு என்னை ஒன்றும் கேட்கவில்லை. ஆனால், அந்தச்சமயத்தில் நான் என்னவெல்லாம் கேட்டேனோ, அவை என் உள்ளத்தில் மீண்டும் மீண்டும் வட்டமிடத் தொடங்கின. கற்பனை அலைகள்

பலவாறாக அலைபாயத் தொடங்கின. இருந்தபோதிலும் இரண்டாம் நாள் நானூற்றைம்பது ரூபாய் தந்தியின்மூலம் வரவேண்டியிருந்ததே!

ஆனால், அந்தப் பணம் வரவில்லை. மூன்று நாட்கள் ஆயின; அந்தப் பணத்தின் ஒரு சின்னத்தையும் காணோம். கடைசியில் இராவ்ஜீ, 'நான் நேரில் போய் அவன் காதைப் பிடித்தால் ஒழிய அவன் பணத்தை அனுப்பப் போவதில்லை. இந்த நவாப் பெரிய சோம்பேறி, கொழுப்புப் பிடித்தவன்' என்று பலவாறாக நவாப்பைத் திட்டினார். ஆனால், வெறும் திட்டுக்களினால் ஒரு பயனும் ஏற்படவில்லை. முக்கியமாகத் தந்தியின்மூலம் இல்லையெனில் தபால்மூலம் வரும் என்று தபால்காரனின் வழிமேல் விழிவைத்துக் கவனமாக இருக்கும்படி இராவ்ஜீ என்னிடம் சொன்னார். ஆனால், அவன் எவ்வளவு படுபாவி என்கிறீர்கள், பணம் கொடுப்பது ஒருபுறம் இருக்கட்டும்; இராவ்ஜீயின் பெயரில் ஒரு கடிதத்தைக்கூடக் கொண்டுவந்து தரவில்லை!

இராவ்ஜீயின் மோசமான கிரகநிலை முடிவுக்கு வருவதாக இருந்த அந்த நாளும்கூடக் கடந்து சென்றது. அந்த நாள் முடியும் வரை கிரகங்களின் விரும்பத் தகாத அறிகுறி என்று இராவ்ஜீக்கு ஓர் ஆறுதலாவது ஏற்பட்டுக்கொண்டிருந்தது. ஆனால் கிரகங்களின் காலம் முடிந்தது. அப்படியிருந்தும் மறுநாள் தபால்காரன் இருந்த இடம் தெரியவில்லை. அவன் அக்கம்பக்கத்தில் எவ்வளவோ கடிதங்களும், மணியார்டர்களும் கொண்டு வந்து கொடுப்பதுண்டு. ஆனால், எங்கள் இராவ்ஜீயின் பெயரில் ஒரு மணியார்டரும் கொடுக்கவில்லை. கடிதங்கள் மட்டும் எப்பொழுதாவது கொடுப்பதுண்டு. இராவ்ஜீ அவனையும், எவரிடம் இருந்து பணம் வரவேண்டியிருந்ததோ அவரையும் திட்டலானார். ஆனால், அதன் பயன் என்ன? கிரக தசை நல்லபடியாக மாறியபொழுதும்கூட, பழைய நிலையே நிலைத்து நிற்பதைக் கண்டதும், இராவ்ஜீ கிரகங்களின்மீதும் சினந்து கொண்டார். அந்தச் சினம் ஓரளவுக்கு எங்கள்மீதும் பாய்ந்தது. இவ்வளவு நாட்கள் வரை நான் அவருடைய உயிரென இருந்தவன், இப்பொழுது அதனினும் சிறிது குறைந்தவனாக ஆனதை உணர்ந்தேன். அம்மாவிடம் அவர் பழகிய முறையிலும் முன்பு இருந்திராத ஒரு கடுகடுப்பு இப்போது தோன்றியிருந்தது. அதுவரை என் முன்னால் அவர்களுக்கு இடையில் சொற்போர் நிகழ்ந்துகொண்டிருக்கவில்லை. அதுவும் இப்பொழுது என் முன்னாலேயே நடக்கத் தொடங்கியது. அம்மாவிடம் அப்படி

ஏதாவது பேசிக்கொண்டிருக்கும்பொழுது நான் அக்கம்பக்கத்தில் இருப்பதாகத் தோன்றினால், அவளையும் கட்டுப்படுத்தி, தாமும் மௌனமாக ஆகிவிடும் அதே இராவ்ஜீ, இப்பொழுது தாமே இன்னும் சத்தமாகச் சிடுசிடுத்தவண்ணம் அவள்மீது எரிந்து விழலானார். அத்துடன், 'உனக்கு உன் கணவனின் மரியாதையைப்பற்றி லவலேசமும் கவலை கிடையாது. உனக்குக் கணவனை விட நகைகள்தான் அதிகப் பிரியமானவை. நகைகளைப் போடுபவனாக இருந்தால், அந்தக் கணவன் வேண்டும். பணம் காசு இல்லாதவனாக இருந்தால், அவன் கண்முன்னால்கூட நிற்கக் கூடாது. இவ்வாறாக உனது தன்மை இருக்கிறது என்பதை நான் முதலிலிருந்தே நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறேன்' என்றும் சொல்லலானார். இவ்வாறும், இதைப் போன்றதுமான பல பேச்சுக்கள் என் முன்னாலேயே அவர் வாயினின்றும் வெளிப்படத் தொடங்கின. என் தாயாரும் எந்தவிதத்திலும் சளைத்தவராக இருக்கவில்லை. அவரும் சுடச்சுடப் பதில் கொடுப்பதற்குத் தயங்கவில்லை.

போகப் போக ஒரு நாள் அடிதடி வந்துவிடுமோ என்று எனக்குத் தோன்றியது. ஆனால், அம்மாவின் பேச்சுத் திறனால் அது தவிர்க்கப்பட்டது. இராவ்ஜீ நிறையப் பேசுவார், அவ்வளவுதான். ஆனால், அவளுடைய கொடூரமான எதிர்ப் பதில்களுக்கு முன்னால் அவருடையது ஒன்றுமே செல்லவில்லை. மேலும் அவர் அவளை எவ்வளவுதான் பேசினாலும், அவள்மீது கையை வைப்பதற்குரிய திண்மை அவரிடம் இருக்கவில்லை என்று எனக்குப் பட்டது. இராவ்ஜீயின் கவனம் ஓரிரு பொருள்களின்மீது இருந்தது. அப்பொருள்கள் தம் கைவசம் கிடைக்கும் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது. அவ்வளவுக்காகத்தான் இவ்வாறெல்லாம் நடந்துகொண்டிருந்தது என்று எனக்குத் தோன்றியது. கடைசியில் ஒருநாள் விஷயம் உச்சநிலையை அடையவே செய்தது. 'இப்பொழுது எனக்குப் போகவேண்டும். போவதற்கு பயணச் செலவிற்குப் பணம் வேண்டும். ஆகவே, நீ உன்னுடைய அந்தக் கழுத்தணியைக் கொடு. இல்லையென்றால் நான் உடம்பில் சாம்பலைப் பூசிக்கொண்டு, சந்நியாசி ஆகி ஊர் ஊராகப் போவேன். பின் உனது கண்ணில் படமாட்டேன்' என்று முதலில் அவர் அமைதியாகத்தான் கூறினார். ஆனால் அந்த நாளின் நிகழ்ச்சியே எல்லையைக் கடந்து விட்டிருந்ததால், அந்த சாந்தத் தன்மை விரைவிலேயே சினவடிவம் கொண்டதாக ஆயிற்று.

# 25. இராவ்ஜீ போனுர்

அன்றைத் தினம் அவர் அவள்மீது கையை ஓங்குமளவுக்குச் சென்றுவிட்டார். ஆனால் அதற்குள் அவள் இரைந்து சொன்னாள்: 'ஜாக்கிரதை, என்மீது கை வைத்தீர்களோ, பாருங்கள்! இன்றுவரை நான் நிறைய அவமானங்களைப் பொறுத்துக் கொண்டேன். குழந்தை குட்டிகளுக்கு முன்னால் என்னை நீங்கள் அடித்தீர்களோ, நான் இந்தக் கணத்தில் இதே இடத்தில் உயிரை விட்டுவிடுவேன்.' அவளுடைய கண்கள் அச்சமயத்தில் சினத்தினால் செக்கச் செவேலென்று ஆகியிருந்தன. இன்றுவரை நான் அவளுடைய கோபத்தின் உருவத்தைப் பல முறை கண்டிருக்கிறேன். ஆனால், இன்றுபோலக் கண்டதில்லை. அவள் தன் பற்களினால் கீழுதட்டைப் பலமாக அழுத்தியவண்ணம் மிகுந்த கோபத்தோடு இராவ்ஜீயைப் பார்த்துக்கொண்டிருந்தாள். மேலும் அவர் அவள்மீது பாய்ந்தபொழுது, அவள் அவரைத் தடுத்துப் பின்னால் தள்ளுவதற்கென்றே நீட்டியது போல் ஒரு விசித்திரமான ஆவேசத்துடன் தனது ஒரு கையை நீட்டினாள். அதைக் கண்டதும் இராவ்ஜீ உண்மையாகவே பின்வாங்கினார். அம்மா சிறிது நேரம் நின்றாள். அவள் கண்களில் கண்ணீர் தேங்கியது. இன்றுவரை ஏதோ ஓரிரு முறைதான் அவள் கண்கள் கலங்கியதை நான் கண்டிருக்கிறேன். அன்றைத் தினத்துக் கண்ணீரோ விசித்திரமான முறையில் வந்திருந்தது. கணப்பொழுதில் அவள் முன்னால் நீட்டியிருந்த தன் கையை இடுப்பில் வைத்துக்கொண்டாள். இன்னொரு கையை முன்னதாகவே மற்றொருபுறம் இடுப்பின்மீது வைத்துக் கொண்டுதான் இருந்தாள். ஒரு காலை முன்னாலும், ஒரு காலைப் பின்னாலும் வைத்தவாறு அவள் நின்றுகொண்டிருந்தாள். இராவ்ஜீ கழுத்தணியின் பேச்சை எடுத்தபொழுது, அவள் புடைவையின் கீழ்ப்பாகத்தை மேலே இடுப்பில் தூக்கிச் செருகிக் கொண்டு வேலை செய்துகொண்டிருந்தாள். ஆகவே அது அப்படியே இருந்தது. இவற்றின் காரணமாகச் சினங்கொண்ட அவளுடைய தோற்றம் மொத்தத்தில் பயங்கரமாகத் தோன்றிக் கொண்டிருந்தது. அந்த நிலையிலேயே அவள் அவரிடம் சொன்

ளுள்: 'போதும், இனிமேல் நான் அணுவளவும் பொறுத்துக் கொள்ளப்போவதில்லை. நீங்கள் எங்கு வேண்டுமானாலும் போங்கள்; எதை வேண்டுமானாலும் செய்யுங்கள். நான் மற்றப் பெண்கள் மாதிரி இல்லை. நான் சொன்னபடி செய்பவள். ஒரு முறை எதைச் செய்கிறேன் என்று சொன்னேனோ, அதைச் செய்வேன். இல்லை என்று சொன்னால், பிறகு அதை உயிரே போனாலும் செய்யமாட்டேன். நான் இன்று இங்கிருந்து எனது பிறந்த வீட்டிற்குப் போகப்போகிறேன். என்ன ஆகுமோ அது ஆகும். பிச்சை வாங்கும் நிலை வந்தாலும் பரவாயில்லை. ஆனால், இதற்குமேல் உங்களுடன் தொடர்பு வேண்டாம்.'

எவ்வளவு உரத்த குரலில் அவள் பேசத் தொடங்கினாளோ அதே குரல் கடைசிவரை நிலைத்திருக்கவில்லை. அதில் ஒரு மென்மை வந்தது. அவள் கண்களிலிருந்து கண்ணீர் பொலபொலவென்று வழியத் தொடங்கியது. இருந்தபோதிலும் அந்தக் குரலில் தொனித்த உறுதி சிறிதும் குறையவில்லை. அவள் சிறிது நேரம் நிறுத்தினாள். தனது குரலின் தீவிரமும், தனது மனோதிடமும் குறைந்துகொண்டே வந்ததாற்போலும், அவற்றை மறுபடியும் மீட்பதற்காகவும், தழைந்து வந்த தனது முடிவை மறுபடியும் சரி செய்துகொள்வதற்காகவுமே அவள் சிறிது நிறுத்தினாற் போலும் தோன்றியது. பின்னர் அதே குரலில், அதே பழைய உறுதியுடன் அவள் சொன்னாள்: 'கல்யாணம் ஆனதி லிருந்து இன்றுவரை நானும் பார்த்துக்கொண்டிருக்கிறேன். சுகமான நாள் எப்படியிருக்கும் என்பது ஒருமுறை கூட எனக்குத் தெரிந்ததில்லை. கல்யாணம் ஆனதிலிருந்து பெரியவளாகும் வரை மாமியார் படாதபாடு படுத்தினாள். அந்தச் சமயத்தில் உங்கள் கையில் ஒன்றும் இல்லை. நீங்கள் பிறர் கையை எதிர்பார்த்தவ ராக இருந்தீர் என்று எனக்கு வாயை மூடிக்கொண்டு எல்லா இன்னல்களையும் பொறுத்துக்கொள்ளவேண்டி வந்தது. பின்னர் அவர் இறந்ததும் அவருடைய பிடியிலிருந்து விடுபட்டு உங்கள் பிடியில் சிக்கினேன். அப்பொழுது நான்கைந்து ஆண்டுகள் இன்பம் என்று சொல்லக்கூடியவாறு என்ன கிடைத்திருக்குமோ அவ்வளவுதான். மேற்கொண்டு நமக்குச் சோதனை ஆரம்பித்தது. வீட்டிலிருந்த பணம் போயிற்று. எனது நகை நட்டுக்கள் யாவும் போயின. வீட்டில் நமது என்று சொல்வதற்குப் பஞ்சின் ஒரு நூலிழைகூட மிஞ்சவில்லை. பொன்னான வேலை இருந்தது; அதை யும் இழந்தீர்கள். மேலும், கடைசியில் என்னைத் தனியாக

விட்டுவிட்டுக் கிளம்பிப் போய்விட்டீர்கள். தலையெழுத்தை மாற்ற ஒருவராலும் முடியாது. ஆனால் தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொண்டு தலையெழுத்தைக் குற்றம் சொல்வதாலும் என்ன பயன்? எனக்கு என்ன, பணம் ஒன்றுதான் தெரிகிறது என்று நீங்கள் சொல்கிறீர்கள். பணம் இருந்தால் தான் எனக்கு நீங்கள் வேண்டும் என்றும் நீங்கள் சொல்லுங்கள், இல்லை, என்ன வேண்டுமானாலும் பேசுங்கள். ஆனால், போய் ஐந்து பத்து என்று ஏதோ சம்பாதித்துக்கொண்டு வாருங்கள் என்று நான் சொல்கிறேன். நான் நான்கு பேருக்கு நடுவில் எவ்வளவு கஷ்டப்பட்டாயினும், என்ன வேண்டுமாயினும் செய்து, பெருந்தன்மையோடு குடும்பத்தை நடத்திக் காண்பிப் பேன். ஆனால், இன்றைக்கு ஒன்று, மூன்றும் நாள் முற்றும் வேறு. இன்று விண்ணில், நாளை மண்ணில் என்பது மட்டும் எனக்கு என்றுமே சரிப்படப் போவதில்லை. நமது குடும்பம் சிறப் புற்றதாக இருக்கவேண்டும், நாம் சுதந்தரமாக இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுவதில்லையா? ஆனால், அப்படி என் தலையில் எங்கே எழுதியிருக்கிறது? போங்கள், சாது ஆகப்போகி றீர்கள், இல்லையா? போங்கள். நான் பெண் இனத்தைச் சேர்ந்தவள் என்று என்னை ஏனோ தானோ என்று நினைக்கா தீர்கள். நான் யாருக்கும் எங்கும் பயப்படப் போவதில்லை. நாலு இடத்தில் கூலி வேலை செய்வேன். படாதபாடு படுவேன். ஆனால், மறுபடியும் என்று . . .' மீண்டும் அவள் குரல் மிகவும் உணர்ச்சி வசப்பட்டது. அது அவளை மேற்கொண்டு பேசவிடவில்லை. மேலும் அவளுடைய கண்களிலிருந்தும் கண்ணீர் இடையறாது வழியத் தொடங்கியது.

இராவ்ஜீ ஒரு வார்த்தைகூடப் பேசாமல், மௌனமாக நின்று கொண்டிருந்தார். அசைவற்று! அடியோடு அசைவற்று! மனம் ஒன்றிப் போய் அவள் பேச்சைக் கவனித்துக் கேட்க வேண்டும் என்பதற்காகவே அவர் இங்ஙனம் சிறிதும் அசைவற்ற நிலையில் நின்றிருக்கவேண்டும். சிறிது நேரத்தில் மேல் துண்டை யும், தொப்பியையும் போட்டுக்கொண்டு வெளியில் போனார். அம்மா வீட்டிற்குள் சென்று ஓரிடத்தில் ஒதுங்கி உட்கார்ந்து மனம் தீர அழுதுகொண்டிருந்தாள். இவ்வளவு அதிகமாக அவள் அழுததை நான் இதற்கு முன்னால் எப்பொழுதும் பார்த்திருக்க வில்லை. அம்மாவிடம் எனக்குப் பாசம் என்று விசேடமாக ஒன்றும் இருந்ததில்லை. இருந்தாலும், அன்று அவளுடைய

அந்த நிலையைப் பார்த்து என் உள்ளம் அவள்பால் கவரப் பட்டது. நான் இப்பொழுது ஒன்றும் அவ்வளவு சிறியவனாக இருக்கவில்லை. எனக்கு எல்லாம் புரியத் தொடங்கியிருந்தது. ஆகவே, அவள் அருகில் போய் உட்காருவதாலோ அல்லது ஒரு சில வார்த்தைகளை நாம் பேசுவதாலோ அவள் மனத்திற்கு அந்த அளவிற்கு ஆறுதலாக இருக்கும் என்று எனக்குத் தோன்றியது.

நான் பயந்தவாறே மெல்ல மெல்ல அவள் அருகில் சென்றேன். முதலில் தூரத்தில் நின்றேன். பிறகு ஒவ்வோர் அடியாக முன்னால் நகர்ந்தேன். அவள் கவனம் என்னிடம் இருக்கவில்லை தான். நான் அவளை மிகவும் நெருங்கினேன். அப்பொழுதும் அவள் என்னைப் பார்க்கவில்லை. நான் இன்னும் நெருங்கினேன். நெருங்கியதும் மெதுவாக, பயந்து பயந்து அவள் தோளில் கையை வைத்தேன். உடனேயே அவள் சரக்கென்று பின்னால் திரும்பினாள். எதிர்பாராமல் என்னை அங்கே பார்த்ததும், அவள் என்மீது சீறிய வண்ணம் சொன்னாள்: 'பாவி! போய்விடு, இங்கிருந்து. என் அருகில் வராதே. நீ அவரைச் சேர்ந்தவன் தான். உங்கள் பிறவி பிறர் சுகத்துக்காக இல்லை. மற்றவர் களைப் பழி வாங்குவதற்குத்தான் இருக்கிறது. பெரியவனான பிறகு, நீயும் இப்படியே உன் மனைவியைப் பழி வாங்கு. இப்படியே அவளை வாழ்நாள் முழுதும் அழ வை. போய்விடு, என் கண் முன்னால் நிற்காதே. அவர் போனார் . . . அவர் பின்னாலேயே நீயும் போ.' இந்த வார்த்தைகளைக் கேட்டதுமே நான் எவ்வளவு திடுக்கிட்டுப் போனேன்? எனக்கு எவ்வளவு வருத்தமாக இருந்தது; எவ்வளவு ஏமாற்றமாக இருந்தது! நான் அருகில் போவதால் அவளுக்கு ஆறுதல் கிடைக்கும், எனது பேச்சைக் கேட்டு அவள் அமைதிகொள்வாள், எனது கை பட்டதும் அவ ளுடைய உள்ளம் இன்பம் கொள்ளும் என்று எனக்குத் தோன்றி யிருந்த எண்ணம் எல்லாம், அந்த நம்பிக்கை எல்லாம், கணப் பொழுதில் அழிந்து போயின. நாம் நமது அம்மாவிற்கு எள்ள ளவும் பிடிப்பதில்லை என்று எனக்கு உறுதியாகப் பட்டது. ஆகவே நான் விலகிச் சென்றேன். இராவ்ஜீ மீண்டும் திரும்பி வரப் போகிறாரா இல்லையா என்பதுபற்றி எனக்குப் பெரும் சந்தேகம் ஏற்பட்டது. ஆனால், சிறிது நேரத்தில் அவர் திரும்பி வந்தார். வந்தவர் ஒன்றுமே பேசவில்லை.

அதன் பின்னர் இரண்டு நாட்கள்கூட ஆகியிருக்கவில்லை. 'போகிறேன்' என்று சொல்லியிருந்தாள் அம்மா. ஆனால் அவளும்

போகவில்லை. இராவ்ஜீயும் எங்கும் போகவில்லை. சமீபத்தில் மூன்று நான்கு நாட்களில் நடந்த நிகழ்ச்சிகளைப்பற்றி யாரிடமாவது போய்ச் சொல்லவேண்டுமென எனக்கு ஆகியிருந்தது.

அக்காவும் அந்த நான்கு நாட்களில் வரவில்லை. சுந்தரிக்குச் சொல்லலாமென்றால், வாய்ப்பே கிடைக்கவில்லை.

மீண்டும் ஒரு நாள் இரவில் ஏதோ சச்சரவு நடந்திருக்க வேண்டும். ஏனெனில், மறுநாள் காலையில் இராவ்ஜீ, தாம் போவதைப்பற்றி இரைந்து பேசிக்கொண்டிருந்தார். அம்மா அந்தச் சமயத்தில் அவரை ஒன்றும் சொல்லவில்லை. ஆனால், 'நீ இந்த அளவிற்குத் தன்னிலையினின்றும் மாறிவிட்டாய். என்னைப் பற்றிய கவலையே உனக்கு இல்லை. அப்படியிருக்க நான் இங்கு எதற்காக இருக்கவேண்டும்? நான் போய்விடுகிறேன்' என்றவாறு அவர் பேசிக்கொண்டிருந்தார். 'நான் போய்விடுகிறேன், நான் போய்விடுகிறேன்!' என்ற வார்த்தைகளை அவர் கடந்த எட்டு நாட்களில் எவ்வளவு தடவைதான் சொல்லியிருப்பாரோ? ஆகவே, அவருடைய 'போவது' என்பது ஒன்றும் இப்பொழுது நடக்கப்போவதில்லை; 'போகிறேன்', 'போய்விடுகிறேன்' என்று வெறுமனே அவர் பயம் காட்டுகிறார் என்று எங்களுக்கு உறுதியாகத் தோன்றியது. ஆனால், இன்றைய அவருடைய 'போகுதல்' அவற்றைச் சேர்ந்ததாக இருக்கவில்லை என்று தெரிந்தது. அவர் மிகவும் கோபம் அடைந்திருந்தார். அத்துடன் அவருடைய தொணதொணப்பும் அதிகமாகியிருந்தது. 'நீ உன்னுடைய சகோதரன் தயவின் பேரில் இப்படிக் குதியாட்டம் போடுகிறாய் என்பது எனக்குத் தெரியும். அவனுடைய பாதுகாப்பு உனக்கு இருக்கிறது என்றுதான் இவ்வளவு பெருமை அடித்துக்கொள்கிறாய். இல்லையென்றால், இப்பொழுது இரண்டாந்தாரத்தைக் கொண்ட மாப்பிள்ளையை அடைந்திருக்கிறாய். அவன் வீட்டில் போய் பெண்ணுடன் இருக்கும் எண்ணம் இருக்கலாம்! அந்த மாப்பிள்ளை பணக்காரன்; கணவனோ பிச்சைக்காரன். ஆகவே இனிக் கணவன் எதற்குத் தேவை?' அவருடைய இந்தப் பேச்சிற்குத் தலையும் இல்லை, காலும் இல்லை. அம்மா முதலில் மௌனமாக இருந்தாள். ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஆனால், இறுதியாகச் சொன்ன மாப்பிள்ளையைப்பற்றிய வார்த்தைகள் மட்டும் அவள் நெஞ்சில் நஞ்சு போல் வேலை செய்திருக்கவேண்டும். ஏன் செய்யாது?

அவள் அளவற்ற கோபம் அடைந்தாள். பிறகு ஒரேயடியாகச் சொன்னாள்: 'போதும்! இதற்குமேல் உங்களுடைய பேச்சைக் கூட கேட்பதற்காக இனி நான் இங்குத் தங்கப் போவதில்லை. இந்தாருங்கள், உங்களுடைய கழுத்தணியை எடுத்துக்கொள்ளுங்கள். இந்தச் சில்லறைப் பொருள்களையும் எடுத்துக்கொள்ளுங்கள். நானும் இதோ கிளம்பிவிட்டேன். இனி உங்களுக்கு நானும், எனக்கு நீங்களும் இறந்து போனவர்கள். நான் இதோ போகிறேன். ஆமாம், இப்பொழுது நான் எனது சகோதரனின் தயவில்தான் காலம் கழிக்கப் போகிறேன். அவனுடைய ஆதாரத்தின் பேரில்தான் நான் அடித்துக்கொள்ளும் பெருமையெல்லாம். மாப்பிள்ளையின் வீட்டில் போயிருக்கப் போகிறேன். எனக்குத் தோன்றியபடி எல்லாம் இப்பொழுது நான் செய்யப் போகிறேன்.' இவ்வாறு சொல்லி அவள் உடனடியாக வீட்டை விட்டு வெளியே சென்றாள்.

இதுவரை வேறு எவருடைய வாழ்க்கையிலும் இப்படிப்பட்ட விசித்திரமான குழப்பங்கள் நிகழ்ந்திருக்க முடியாது. என்னுடையது எல்லாமே விசித்திரமானவை. குழந்தைப் பருவத்திலிருந்தே எனது சூழ்நிலை, எனது வளர்ப்பு, எனது அநுபவங்கள், எனது காரியங்கள், எனது எண்ணங்கள், மேலும் என் வாழ்வில் குறுக்கிட்ட மனிதர்களின் நடத்தை, அவர்களுடைய நிலைமை இவை யாவும் சாதாரண மனிதர்களின் நடத்தை, நிலைமை இவற்றினின்றும் முற்றும் மாறுபட்டவை. இதைப் போல் யாருக்கும் கிடைக்காது. என்னுடைய சொந்த விஷயங்கள் அபூர்வமானவை. அது மட்டும் அல்ல. சில விஷயங்களில் எனது சொந்த அறிவும், எனது எண்ணங்களும், எனது உணர்ச்சிகளும் கூட மிகுந்த அபூர்வமானவையாகவும், வயதிற்கு மிகுந்த பக்குவத்தை உடையனவாகவும் இருந்தன. அது போலவே எனது நினைவுத் திறனும்கூட. முன்னதாகவே இப்படிப்பட்ட நிலைமை, அதற்கும் மேலாகப் பெரும்பாலான—அசாதாரணமான சண்டைகள் என் கண் முன்னால் நடந்து, கடைசியில் அம்மா அன்றைத் தினம் வீட்டைவிட்டு வெளியேறிச் சென்றாள். அந்தச் சண்டையினால் ஏற்பட்ட கோபத்தின் அலை மோத, இராவ்ஜீக்கு அச்சமயம் அதன் காரணமாக ஒன்றும் மனத்திற்குப் படவில்லை. ஆனால், பதினைந்து நிமிடங்கள்கூட ஆகியிருக்காது. அவர் ஒரேயடியாக என்னிடம் சொன்னார்: 'ஏய் பயலே, போ, போ! எங்குப் போனாளோ, பார்த்துவிட்டு வா. உன்னுடைய பாட்டியிடம்

தான் போனாளோ, இல்லை, உயிரையே விடப் போய்விட்டாளோ?' நான் அவருடைய இந்தக் கட்டளையைத்தான் முற்றும் எதிர் நோக்கியவன்போல் இருந்தேன். அவருடைய வார்த்தைகள் காதில் விழுந்தனவோ இல்லையோ, அம்புபோல் எம்பி விரைந் தேன். அவர் இறுதியில் எழுப்பிய அந்தச் சந்தேகம் எனக்கு முதலில் தோன்றியிருக்கவில்லை. ஆனால், அவர் அதை எழுப்பிய தும், எனக்கும் அதிகமாக அந்தச் சந்தேகம் ஏற்பட்டது. ஆகவே, முதலில் பாட்டியின் வீட்டிற்குப் போய்ப் பார்ப்பதா, இல்லை, குளம் குட்டைகளில் பார்ப்பதா என்பது எனக்கு விளங்கவில்லை. கடைசியில், நான் பாட்டியின் வீட்டிற்குத்தான் போனேன். அம்மாவும் அங்கு இருந்தாள். அவளைப் பார்த்ததுமே எனக்கு ஆறுதலாக இருந்தது. ஆனால் திரும்பிப் போய் நாம் இராவ்ஜீ யிடம் அதைப்பற்றி சொல்லவேண்டும் என்று தோன்ற வில்லை. அம்மாவும் பாட்டியும் ஒன்றும் பேசிக்கொண்டிருக்க வில்லை. அம்மா வெறுமனே அழுதுகொண்டிருந்தாள்; பாட்டி வெறுமனே கேள்வி கேட்டுக்கொண்டிருந்தாள். நான் ஒரு கற்சிலைபோல் அசைவற்று அவர்களிடமிருந்து சிறிது தள்ளி நின்றுகொண்டிருந்தேன். தேடுவதற்காக இராவ்ஜீயிடமிருந்து மேற்கொண்டு யாரும் வரவில்லை.

மாலையில் பாட்டி என்னைப் பிடித்து வெளியில் தள்ளாத குறை யோடு சொன்னாள்: 'இராவ்ஜீ எங்கே இருக்கிறார், என்ன செய்து கொண்டிருக்கிறார் என்பதைப் போய்ப் பார்த்து வா.' நான் போனேன். வீட்டை நெருங்கியதுமே பார்த்தால், கதவில் பூட்டு! எனக்குச் சட்டென்று அந்தச் சமயத்தில், சிறு வயதில் பம்பாய்க்குச் சென்றிருந்ததன் நினைவு வந்தது. அதே போன்ற நிகழ்ச்சி மீண்டும் நிகழப் போகிறதோ என்னவோ என்று எனக்குத் தோன்றியது. ஆனால், யார் அறிவார்? இராவ்ஜீ வெளியில் போயிருக்கக் கூடும் என்றும் தோன்றிற்று. பிறகு நான் திரும்பி வந்து கதவில் பூட்டு இருக்கும் செய்தியைச் சொன்னபொழுது அப்படிப்பட்ட செய்தி வரும் என்று அம்மா வுக்கு நிச்சயம் தெரிந்திருந்தது. மறுநாளும் கதவில் பூட்டுத் இருக்கிறதா என்ன என்பதைப் பார்க்க எனக்குப் பேராவல் ஏற்பட்டது. காலையிலேயே எழுந்து கதவருகில் சென்று வந்தேன். உண்மையாகவே அப்பொழுதும் பூட்டு இருந்தது. பிறகு என்ன? இராவ்ஜீ நிச்சயம் போய்விட்டார் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது. என்னுடைய பள்ளிப் புத்தகங்கள் எல்லாம்

உள்ளே மாட்டிக்கொண்டன. அப்போது பள்ளிக்கு எடுத்துச் செல்ல ஒரு புத்தகம்கூட இல்லை. அதனால் நிச்சயமாகவே அன்றைத் தினம் வீட்டிலேயே இருக்கவேண்டி வரும். ஆனால், வீட்டில் இருந்தால் நிம்மதியாக இருக்காது என்று சாப்பாடு ஆன வுடன் நான் மெதுவாக அங்கிருந்து நழுவி, சுந்தரியின் வீட்டிற் குப் போனேன்.

அன்று சிறிது உடல் நலமின்றி இருந்ததால், சிவராம் பந்த் அவர்கள் தமது காரியாலயத்திற்குச் செல்லவில்லை. நான் வந்ததைக் கண்டதும் அவர் என்னிடம், 'இந்த நேரத்தில் நீ எப்படி வந்தாய்? பள்ளிக்கூடத்திற்கு ஏன் போகவில்லை?' என்று கேட்டார். நான் நடந்ததையெல்லாம் அவரிடம் கூறினேன். அவர் ஒரு பெருமூச்சுவிட்டுச் சிறிது நேரம் மௌன மாக உட்கார்ந்திருந்தார். அதன்பின் இலேசாக எனது உடலைத் தம் கையால் தடவிக் கொடுத்த வண்ணம் என்னிடம் சொன்னார்:

'தம்பி, வெகு நாட்களாக உன்னிடம் ஏதோ சொல்ல வேண்டுமென்று தோன்றிக்கொண்டிருந்தது. ஆனால் இன்ன மும் நீ சிறியவனாக இருக்கிறாய். உனக்கு ஒருவேளை நான் சொல்லப் போவதன் மகத்துவம் நன்கு விளங்காது என்று தோன்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. இன்று நீ சொன்ன விவரங்களைக் கேட்டதும், நீ மிகவும் அறிவுள்ளவனாக வும், கூர்மையான பார்வையுள்ளவனாகவும் இருக்கிறாய் என்று எனக்குத் தெரிய வருகிறது. நான் ஏதாவது செய்திகளை உனக் குச் சொன்னால், அவை உனக்குப் புரியும் இல்லையா?'

# 26. சிவராம் பந்த் என்ன சொன்னர்?

என்னிடமிருந்து, 'ஆமாம்' என்ற பதில் வந்தவுடனேயே சிவ ராம் பந்த் அவர்களுக்குச் சமாதானமாக இருந்ததாகத் தோன்றியது. அவர் சிறிது நேரம் தாமதித்தார்; பின்னர் சட்டென்று சொல்லலானுர்: 'தம்பி, உன்னுடைய நிலைமை உனக்கு இன்னமும் முழுமையாகப் புரியவில்லை என்று தோன்றுகிறது. ஆனுல், சிந்தித்துப் பார். நீ உன்னுடைய படிப்பை எவ்வளவு சீக்கிரம் முடித்துக்கொள்வாயோ, எவ்வளவு சீக்கிரம் உனது கால்களின்மீதே நிற்கக் கற்றுக்கொள்வாயோ அவ்வளவு நல்லது. உன்னுடைய அப்பாவின் நிலைமை எப்படி இருக்கிறது? உன்னுடைய அம்மா எப்படிப்பட்டவளாக இருக்கிருள்? நீ உன்னுடைய சொந்தத் தீரத்திஞலும், முயற்சியிஞலும் தனக்குத் தானே நல்ல நிலையை ஏற்படுத்திக்கொள்ளவில்லை என்ருல், என்ன ஆகும் என்பதைப் பற்றியெல்லாம் நன்கு சிந்தித்துப் பார். முடிந்த அளவுக்கு நாம், நம் கையால் முயன்று முடிந்ததைச் செய்யவேண்டும். நாம் நமது சொந்த சாமர்த்தியத்தைக் கொண்டு நமது படிப்பிற்கு ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும்; முழுப் படிப்பிற்கும் உபகாரச் சம்பளம் பெறவேண்டும்; முடிந்த வரைக்கும் நமது சாப்பாட்டுச் செலவின் பாரம் மற்றவர்மீது விழப்போவதில்லை என்று மனத்தில் உறுதி பூண்டு, அதற்காக முயலவேண்டும். இதுவரை படிப்பில் உன்னுடைய நிலை மோசமாக இருக்கிறது என்று நான் சொல்லவில்லை. முற்றும் இருக்கவேண்டியபடி இல்லை என்ருலுங்கூட, அது நன்ருகத்தான் இருக்கிறது. ஆனுல், இதற்கு மேலும் சிறப்பானதாக அது இருக்க வேண்டும். ஏனெனில், தவிருது எப்பொழுதுமே நீ சிறந்த நிலையில் இருந்தால்தான் உனக்கு நலம் உண்டு என்றபடி உனது நிலை இருக்கிறது. உனது அறிவு நல்ல சுறுசுறுப்பாக இருக்கிறது என்பதால்தான் நான் உனக்கு முக்கியமாக இதைச் சொல்கிறேன். ஆனுல், இதோ பார், நீ கூர்மையான அறிவு உடையவன் என்று எண்ணிச் செருக்கு அடைவதால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை.'

இவ்வளவு சொல்லி அவர் மௌனமாக உட்கார்ந்தார். நான் அவர் சொன்னதைப்பற்றி அமைதியாக ஆலோசித்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரம் கழிந்த பின்னர் அவர் என்னிடம் மீண்டும் சொல்லலானார்: 'நான் இதுவரை உனக்கு மனப்பூர்வமாகச் சொன்னதெல்லாம் வீணாகச் சொல்லவில்லை. உன்மீது எனக்கு மிகுந்த ஆசை உண்டு. உன்னுடைய நிலையைப் பற்றி நான் மிக மிக வருந்துகிறேன். முக்கியமாக உன்னுடைய அம்மா அப்படி இருக்கிருள் என்று இன்னும் அதிக வருத்தம் ஏற் படுகிறது. ஒருவகையில் எனக்கு அவளிடம் மிகுந்த மதிப்பு உண்டு. அவள் மிகுந்த மன உறுதிகொண்டவள்; தன்னெளி கொண்டவள். அவளுடைய இந்தக் குணங்களின் நல்ல பயன் உனக்கு ஏற்படப் போகிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனல், எந்த விஷயங்களில் அதனுடைய உபயோகம் ஏற்பட வேண்டுமோ, அவ்வளவுடன் நிற்காமல், மற்ற விஷயங்களிலும் கூட அந்தக் குணங்கள் உன்னை ஆட்கொண்டுவிடுமோ என்று தான் பயமாக இருக்கிறது. அவளுடைய மன உறுதி, அவளுடைய அபிமானம் இவற்றினை உதாரணமாகக் கொண்டு, அந்தக் குணங்களை நீ அவளிடமிருந்து கற்றுக்கொள்வாயே யானல், மேலும் தகுந்த காரியத்தில் அவற்றைப் பயன்படுத்து வாயே யானல், நீ ஏதாவது ஒரு வகையில் நிச்சயம் நற்பெயரைச் சம்பாதிப்பாய். இன்னும் ஒரு விஷயத்தைப்பற்றி நான் உனக்கு சொல்லப் போகிறேன். அதையும் இன்றே சொல்லி வைக் கிறேன். நன்ருகக் கவனத்தில் வைத்துக்கொள். உன்னுடைய அம்மா மிகுந்த பிடிவாதம் கொண்டவள். உன் னுடைய கல்யாணத்தைச் சீக்கிரம் செய்துவிடவேண்டும் என்று ஒருமுறை அவள் மனத்தில் தோன்றியதோ, உடனேயே அதைச் செய்து முடிக்க அவள் தவறப் போவதில்லை. ஆனல், நீ மற்ற எல்லா விஷயங்களிலும் அவளுடைய ஆணையின்படி நடந்தாயே யானலும், உனது வயதின் பதினெட்டாவது ஆண்டுவரை—அதாவது இன்னும் நான்கு ஆண்டுக் காலம் கழியும் வரை, கல்யாண விஷயத்தில் மட்டும் அவள் பேச்சைச் சிறிதளவும் கேட்காதே. இதோ பார், கல்யாணம் செய்துகொண்டு கழுத்தில் ஒரு பளுவை மாட்டிக்கொள்வது உன்னுடைய நிலையி லிருக்கும் பையனுக்கு எவ்வளவு ஆபத்தானது என்பதுபற்றி, பாவம், உனக்குக் கற்பனைகூடக் கிடையாது. ஆனல், நான் சொல்லும் இதை நன்ருக நினைவில் வைத்துக்கொண்டு நீ அதற்கு

ஏற்றவாறு நடந்துகொள். மகனே, நீயும் உனது தாயும் பிறர் தயவில் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறீர்கள். அதில் இன்னும் ஓர் ஆளின் பாரத்தை அவர்மீது போடுவது நல்லதா? இது பற்றி உனக்கு எவ்வளவு சொன்னாலும் அது குறைவாகத்தான் இருக்கும். மேலும், இதோ பார். நான் . . .'

சிவராம் பந்த் மேற்கொண்டு என்ன பேச இருந்தார், என்ன சொல்ல இருந்தார் என்பது வெளிப்படாமலேயே தங்கிவிட்டது. அவரிடம் வேறு யாரோ ஒரு குடும்பத்தினர் வந்தனர். ஆகவே அவர் பேச்சு அத்துடன் நின்றுவிட்டது. சிறிது நேரத்தில் எனக்கும் அங்கிருந்து கிளம்பி வீட்டிற்குச் செல்லவேண்டியிருந்தது.

# 27. ஆச்சரியம்! பேராச்சரியம்!!

காலம் நான்கு ஆண்டுகளைத் தனது எரியும் வயிற்றில் தள்ளியது.

நான் இப்பொழுது இளங்காளை ஆனேன். சிறு வயதில் நான் ஏறக்குறைய காவாலி போன்று காணப்பட்டேன். ஆனால், இப்பொழுது நன்றாகத் திருந்திவிட்டேன். எலும்புக் கட்டு பலங் கொண்டதாக இருந்ததாலும், அதற்குமேல் சதையமைப்பும் என்மேல் கருணை காட்டியிருந்ததாலும், எனது தோற்றம் கவர்ச்சி கொண்டதாக இருக்கிறது என்று எல்லாரும் சொல்ல லானார்கள். ஆனால் தோழர் கூட்டம், நான் 'இளைத்து'ப் போன தாகச் சொல்லி என்னைக் கேலி செய்தது. அந்தப் பரிகாசம் ஆறுதல் கொடுக்கக் கூடியதாகத்தான் இருந்தது. இது எனது சொந்த மனமாற்றம், உடல் மாற்றம் இவற்றின் உண்மை நிலை ஆயிற்று. அது மட்டுமன்றி, எனது சூழ்நிலையிலும் குறிப்பிடத் தகுந்த மாறுதல் ஏற்பட்டது. எங்களுடைய தாத்தா மேலுல கத்தை அடைந்தார். ஆகவே, எங்கள் பாட்டிக்கு இப்பொழுது புனாவில் இருக்கவேண்டும் என்பதற்கு உண்மையான காரணம் இருக்கவில்லை. இரண்டு இடங்களில் தனித்தனியாகக் குடி வைப்பதற்கு ஓர் அவசியமும் இல்லை என்று எண்ணி, மாமா, பாட்டியைத் தன்னிடத்திற்கு அழைத்துச் செல்ல முடிவு செய் தார். எனது தாயையும்கூட அவர் தம்மிடத்திற்கு அழைத் தார். ஆனால், என்னுடைய படிப்பு முடியவேண்டும்; அதுவரை என்னை விட்டுத் தனியாக இருப்பது முடியாத காரியம் என்று அவள் சொன்னாள்.

வகுப்பில் நான் முதல் இடம், அதிகமாகப் போனால் இரண் டாவது இடம்; இது என்றுமே தப்பவில்லை. பொருள் சலுகை யும், பரிசுகளும் எனது பிடியிலிருந்து என்றுமே விட்டுப் போக வில்லை. இதனாலும், மேலும் எனது படிப்பின் முன்னேற்றத்தைப் பற்றிய ஆறு மாத, ஓராண்டு அறிக்கைகள் மாமாவிடம் சென்று கொண்டிருந்ததாலும், தாம் உதவி அளிப்பதுபற்றி மாமாவுக் குப் பச்சாத்தாபம் ஏற்படுவதற்கு ஒரு நாளும் காரணம் ஏற்பட வில்லை.

நான் இன்னும் பெரியவன் ஆனேன். பள்ளியில் கெட்டிக் காரன் என்று புகழ் அடையத் தொடங்கினேன். அதன் காரண மாக எனக்குப் பெண்கள் இடம் தேடி வரத் தொடங்கினர். யாராவது அம்மாவை வந்து சந்திப்பது, யாராவது மாமாவிற்குக் கடிதம் அனுப்புவது என்று நடந்துகொண்டிருந்தது. நாட்கள் இவ்வாறு கடந்துகொண்டிருக்கும்பொழுது, மாமாவின் நண்பர் ஒருவருக்கு ஒரு பெண் இருந்ததனுல், அவர் மாமா விற்கு நிறைய தூபம் போட்டுக் கடிதம் எழுதினுர். இவருக்குப் பக்கபலமாகப் பாட்டியின் வற்புறுத்தலும் ஏற்பட்டது. பேரனே யும், சிறு மாட்டுப் பெண்ணேயும் பார்க்கவேண்டும் என்ற பேராவல் அவளுக்கு ஏற்பட்டது. இதுபற்றி மாமா, அம்மா விற்கு ஒரு நீண்ட கடிதத்தை அனுப்பினுர். யார் மூலமாகவோ படிக்க வைத்துக் கேட்ட பின்னர், அம்மா அதை அலட்சியம் செய்தாள். அதற்கு அடியோடு பதிலே அனுப்பவில்லே. அந்தக் குடும்பத்தினரின் நச்சரிப்பினுல் மாமா அதைப்பற்றி மற்றும் ஒரு கடிதம் எழுதி அம்மாவைக் கேட்டார். 'தம்பியின் பள்ளிக் கூடத்திற்குக் கோடை விடுமுறை வரும். அப்பொழுது நாங்கள் நேரடியாக அங்கு வருவோம். அப்பொழுது என்ன என்பது யோசிப்போம்' என்று என்னேக் கொண்டு இவ்வளவு மட்டும் அம்மா அவருக்கு எழுதி அனுப்பினுள். இந்தக் கடிதத்தை எழுதின சமயத்தில், இப்பொழுது நமக்கு நம்முடைய பிடிவாதத்தன்மையும் எப்படி இருக்கிறது என்று சோதித்துப் பார்க்கும் வேளே வந்துகொண்டிருக்கிறது எனத் தோன்றியது.

பள்ளி நாட்கள் முடிந்தன. விடுமுறை வந்து சேர்ந்தது. விடு முறைக்காக நானும் அம்மாவும் மாமாவின் வீட்டில் தங்குவதற் காகச் சென்றேம். என் மனத்தில் அவை யாவும் மீண்டும் மீண்டும் நினேவுக்கு வந்துகொண்டே இருந்தன. அதைப்பற்றிய பேச்சு இன்று கிளம்பும், நாளே கிளம்பும் என்று நான் தயாராகக் காத்துக்கொண்டிருந்தேன். அவர்கள் பேச்சை எடுத்தபொழுது பார்த்துக்கொள்ளலாம் என்று அம்மா நினேத்திருப்பதாகவும், அவள் அந்தப் பேச்சை எடுத்தபொழுது நாம் பேசிக்கொள்வோம் என்று மாமாவும், பாட்டியும் நினேத்திருப்பதாகவும் எனக்குத் தோன்றியது. மொத்தத்தில் எப்படி இருப்பினும், எட்டு நாட் களில் அதைப்பற்றி ஒரு பேச்சும் கிளம்பவில்லே. ஆனுல், வய தான மனிதர்களால் இதுபோன்ற விஷயத்தில், அதிலும் பேர னின் கல்யாண விஷயத்தில் ஒரு பேச்சும் பேசாமல் எப்படி

இருக்க முடியும்? ஒரு நாள் எதைப்பற்றியோ பேசிக்கொண்டிருந்தபொழுது பாட்டி பேச்சுவாக்கில் அப்பேச்சைக் கடைசியில் எடுத்தாள். பேச்சு கிளம்பியது. ஆனால் அம்மா ஒன்றுமே பேசவில்லை. நான் அங்கு இருந்தேன். அவள் என்னைப் பார்த்தாள். தான் பேசியது ஒருவேளை காதில் விழுந்திருக்காது என்று எண்ணி, பாட்டி மீண்டும் பேச்சை எடுத்தாள். உடனே என்ன ஆச்சரியம்! பேராச்சரியம்! அம்மா உடனடியாகச் சொன்னாள்: 'அவன் தன்னையே புரிந்துகொள்ளவேண்டும்; அவனுடைய பரீட்சை முடிந்து அவன் சம்பாதிக்கத் தொடங்க வேண்டும். அதுவரை அவனுடைய கல்யாணத்தைப்பற்றி நான் ஒரு பேச்சும் எடுக்கப் போவதில்லை. வேறு யாரும் எடுக்கவும் வேண்டாம். பிருகஸ்பதி எப்படி உருவெடுக்கப் போகிறார், இல்லை என்று யாருக்குத் தெரியும்? நம்மைக் கொண்டு உலகத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஏதேனும் ஒரு பெண்ணின் கழுத்தை நாம் முறித்து வாழ்நாள் முழுதும் அவள் வசையைத் தின்று கொண்டிருக்கவேண்டாம்!'

இப்படிப்பட்ட பதில், அதுவும் அம்மாவின் வாயிலிருந்து வெளிப்படும் என்று என்றென்றும் எனக்குக் கனவிலும்கூடத் தோன்றியிருக்கவில்லை. தனது சொந்த அநுபவத்தின் காரணமாக, அவளுக்கு இந்த எண்ணம் தோன்றியது ஆச்சரியந்தான். ஏனெனில் தனது அநுபவத்தின் பேரில் கெட்டிக்காரத்தனத்தை அடையப் பெறுபவர்கள் இவ்வுலகில் மிகவும் குறைவாகத்தான் இருக்கிறார்கள். சுமார் நான்கு ஆண்டுகளுக்கு முன்பு சிவராம் பந்த் அவர்கள் அம்மாவைப்பற்றி என்னிடம் கூறியிருந்தவற்றை நினைத்துக்கொண்டேன்.

அம்மா இப்படிப் பதில் சொன்ன பிறகு அந்தப் பேச்சுக்கு ஒரு முடிவு ஏற்பட்டது. 'அந்தப் பெண் கேட்கப் போவதில்லை. தான் சொன்னதை உண்மையாக்குவாள். இந்தப் பொல்லாத சுபாவத்தினால்தான் முழுக் குடும்பமும் பாழடைந்தது' என்று பாட்டியின் வாயினின்றும் சொற்கள் கிளம்பின. நல்ல வேளையாக அவை அம்மாவின் காதில் விழவில்லை. இல்லையெனில் ஒரு கணப்பொழுதும் இனி அவள் வீட்டில் தங்கமாட்டாள் என்று எனக்குத் தோன்றியது. ஆனால், பாட்டி தானே என்னிடம் பேசினாள். எனது எண்ணத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் அல்லது அவளுடைய விருப்பப்படி நான் செய்யத் தயாராக இருக்கிறேனா இல்லையா என்று பார்க்கவேண்டும் என்று

நினைத்து அவள் அப்படிப் பேசி விஷயத்தை என்முன் வைத்தாள். ஆனால், நானாகவே அம்மாவின் பக்கத்தை ஒத்துக்கொண்டு, 'அவள் சொல்வது உண்மைதான். அவள் மனத்தில் இல்லாததை நான் எப்படிச் செய்வது?' என்றவாறெல்லாம் சொல்லி, பாட்டியின் முயற்சிகள் அத்தனையையும் தூக்கி அடித்தேன். இவ்வாறாக மிகுந்த ஆச்சரியப்படக்கூடிய முறையில், அப்போதைய அந்த எல்லாச் சங்கடங்களிலிருந்தும் நான் காப்பாற்றப்பட்டேன். என்னுடைய அம்மா ஒருமுறை என்ன சொன்னாளோ, அதை மாற்றுவது முடியாத காரியம் என்பதை நன்கு அறிந்து, மாமா மீண்டும் அந்த விஷயத்தைப்பற்றி ஒரு வார்த்தைகூட எடுக்கவில்லை. பாட்டி அப்பேச்சை எடுத்தாள்; ஆனால் யாரும் அதை மதிக்கவில்லை.

# 28. அக்காவைப்பற்றிய உண்மை

அக்கா, அக்காவின் கணவன் இருவருக்குமிடையில் என்றுமே ஒத்து வரவில்லை. முதல் இரண்டு, இரண்டரை ஆண்டுகளிலேயே அக்காவின் கணவன் அவளிடம் கொண்ட நடத்தையினாலும், அவளை மிகவும் பாடுபடுத்தியதாலும் அவளுடைய போக்கு மாறிக்கொண்டே சென்றது. காணக் காண அவளுடைய சுபாவத்தில் மாறுதல் ஏற்பட்டது. அதுவரை மிகப் பொறுமை சாலியாக இருந்த அக்கா, பிற்காலத்தில் அதேபோல் இருக்க வில்லை. ஏதோ ஒரு வளையாத உறுதியுடைய, அச்சமற்ற, ஐயமற்ற ஒரு பிராணியைப் போன்று அவள் நடமாடலானாள்.

முதல் இரண்டு, இரண்டரை ஆண்டுகள் அவள் கணவன் அவளை அளவின்றித் துன்பப்படுத்தினான். இரண்டாம் தாரத் தைக் கொண்டவன் என்றால், அவன் தன் மனைவியின் விருப்பப் படி செய்யத் தலைகீழாக நிற்பான் என்று சொல்லுகிறார்கள். ஆனால், அக்காவின் கணவன் என்றுமே அவ்வாறு நடந்து கொண்டதாகத் தெரியவில்லை என்று எனக்குத் தோன்றுகிறது.

அவளைப் பிறந்த வீட்டிற்கு அனுப்பும் விஷயத்தில் எப் போதுமே விரோதம். எப்பொழுதாயினும் அனுப்பத்தான் செய் தாலும், அவள் உடலில் இருக்கும் நகைகளைக் கொடுக்கச் சொல்லி அடிதடிதான். இல்லையெனில், இரவில் எவரையேனும் அனுப்பி அதை எடுத்துக்கொள்வது, காலையில் அதைக் கேட்கச் சென்றால், ஆயிரத்தெட்டு சொல்லித் தருவது அல்லது தராமலும் இருப்பது. இவ்வாறாக எல்லாம் நடந்துகொண்டிருந்தது. பாவம், அக்கா ஒரு பொழுதும் ஒரு வார்த்தைக்கூடப் பேசமாட்டாள். போகப் போக அக்கா பிறந்த வீட்டிற்கு வருவதையே நிறுத்தி விட்டாள். ஒரு முறை அவள் வந்திருந்தபொழுது, இரவில் சுமார் பத்து மணியாக இருக்கும்பொழுது, மாப்பிள்ளை அவளை உடனடியாக வீட்டிற்கு வரும்படி சொல்லி ஆளை அனுப்பினார். அவர் அனுப்பிய அச்செய்தியைக் கேட்டதும் எங்கள் அம்மா விற்கு அளவற்ற கோபம் வந்தது. ‘அவள் இரவின் இந்நேரத்தில் வரமாட்டாள். நாளைக் காலையில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வருவாள்’ என்று அம்மா பதில் சொல்லியனுப்பினாள்.

செய்தி கிடைத்ததுமே எதிராகப் பதில் வந்தது: 'இப்பொழுதைக்கு இப்பொழுதே வந்தாகவேண்டும்; இல்லையெனில், மீண்டும் பெயரையும் எடுக்காமல் மறு கல்யாணம் செய்து கொள்ளப்படும்.' எங்கள் அம்மாவின் தைரியத்திற்கு அந்தத் தருணம் ஒரு பரீட்சையாக இருந்தது. மேற்கொண்டு என்ன ஆகப்போகிறது, இல்லை என்பதைப்பற்றி அணுவளவும் சிந்திக்காமல், அல்லது சிந்தித்துப் பார்த்துத்தானோ என்னவோ, அவள் மீண்டும் இவ்வாறு செய்தியைச் சொல்லி அனுப்பினாள்: 'என்ன ஆகவேண்டி இருக்கிறதோ அது ஆகட்டும். நான் இன்று அவளை அனுப்பப்போவதில்லை.' அக்காவிற்கு இந்த முடிவு பிடிக்கவில்லை. அவள் அம்மாவை அமுக்குவதற்கு முயற்சி செய்து, அத்தனை இரவில் கிளம்பிவிட்டாள்.

மற்றும் ஒருமுறை நடந்த ஒரு விஷயம் மிகவும் விசித்திரமாக இருந்தது. அதைப் பார்த்து எனது உடலும் சினத்தால் படபடத்தது. ஒருநாள் காலை, சுமார் ஆறு அல்லது ஆறரை மணி இருக்கும். அன்று எங்கள் வீட்டில் ஏதோ ஏற்றத்தாழ்வு இருந்தது என்று அம்மா சொன்னதன்பேரில், அக்காவை வீட்டிற்கு அழைத்து வருவதற்கென்று நான் போயிருந்தேன். நான் வாசலை அடைவதற்கும், அவள் வீட்டிலிருந்து ஓர் அம்மாள் வெளியில் கிளம்பி வருவதற்கும் சரியாக இருந்தது. அவள் குடும்பப் பெண்ணாகவும் தென்படவில்லை. மேலும் இதற்கு முன்பு அவர்கள் வீட்டில் அவளை என்றுமே பார்த்திருக்கவும் இல்லை. அவள் கண்களை விழித்து என்னை ஒருமுறை பார்த்தாள். அந்த அம்மாள் இன்னாளாக இருக்கும் என்று அப்போது எனக்குத் தோன்றவில்லை. இப்படி மினுக்கிக்கொண்டு டாங்காவில் உட்கார்ந்துபோன அந்த அம்மாள் யாராக இருக்கும் என்று எண்ணுவதில் நான் மூழ்கியிருந்தேன். அப்படியே வியந்த வண்ணம் நான் உள்ளே சென்றேன். எனக்கு அப்படியொன்றும் தாறுமாறான சந்தேகம் ஏற்பட்டிராததால், நான் நேராக வீட்டினுள் அக்காவிடம் சென்றேன். நான் வந்த காரணத்தை அவளிடம் சொன்னேன். பிறகு அவள் கணவனையும் அழைப்பதற்காக அவனுடைய அறையை நோக்கிச் செல்ல முற்பட்டேன். அதற்குள் அக்கா என்னிடம், 'இதற்குள் போகாதே. சிறிது நேரம் பொறு' என்று சொன்னாள். ஆமாம், நான் நின்றுவிட்டேன். வெறுமனே ஒருவரை ஒருவர் பார்த்தவண்ணம் நின்றுகொண்டிருப்பது முடியக்கூடிய காரியமாகவா இருந்தது?

அநாயாசமாகவே என் வாயினின்றும் அவளை நோக்கி, 'அக்கா, இப்பொழுது உங்கள் வீட்டிலிருந்து இன்ன மாதிரியான ஓர் அம்மாள் போனாளே, அவள் யாரடீ?' என்ற கேள்வி வெளிப் பட, அதைக் கேட்டதுமே அவள் திடுக்கிட்டுப் போனாள். அவள் முகம் வெளிறிப் போயிற்று. அவள் ஓரேயடியாக அழத் தொடங்கிவிட்டாள். எனக்கோ அவளுடைய அழுகைக்குக் காரணமே புரியவில்லை. இது எல்லாம் என்ன? திடீரென்று அக்கா அழுவதற்குக் காரணம்தான் என்ன? இவ்வாறான கேள்விகள் தோன்றி என் மனத்தில் ஒரே குழப்பம் ஏற்பட்டது.

அவள் என் கேள்விக்குப் பதில் ஒன்றும் தரவில்லை. ஆனால், சிறிது நேரத்திற்குள்ளேயே அவள் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு, அமைதியாக என்னிடம் சொன்னாள்: 'தம்பி, நீ இப்போது போய்விடு. நான் இன்று வரவில்லை. வீணாக அவ ரிடம் கேட்கப் போய் வம்பில் விழாதே. மேலும் இதோ பார்...' என்று கூறி, தனது குரலை மிகவும் தாழ்த்தி அவள் மேலே சொன்னாள்: 'இங்கு யாரைப் பார்த்தாய், என்ன பார்த்தாய் என்பதைப்பற்றி வேறு யாரிடமும் ஒன்றுமே சொல்லாதே. என் கழுத்தின்மீது ஆணை.' சாதாரணப் பேச்சுக் களுக்காக அக்கா இவ்வாறு ஆணை இடுபவள் அல்ல என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஆகவே, எனக்கு அதைப் பார்த்து மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது. இது என்ன குழப்பமோ என்று எண்ணினேன். நான் அவளைக் கேட்கவும் செய்தேன். ஆனால், அவள் அதன் இரகசியத்தை எனக்கு வெளிப்படுத்த வில்லை. அவள் மீண்டும் மீண்டும் அழுத்தந் திருத்தமாக என்னிடம் சொன்னதெல்லாம் இவ்வளவுதான்: 'நான் இன்று வரப்போவதில்லை. நீ அழைக்கும் குழப்பத்தில் விழாதே.'

அவளுடைய உறுதியைக் கண்டு, அங்கிருந்து பேசாமல் நான் கிளம்பி வரவேண்டியிருந்தது. அந்த அம்மாள் என் மண்டையைக் குழப்பிக்கொண்டுதான் இருந்தாள். அவள் யாராக இருக்கலாம் என்பதைப்பற்றி என் மனம் இடை யறாது யோசித்த வண்ணம் இருந்தது. கடைசியில் நான் திரும்பி வரும் வழியில் ஒரு மாடியின் முன்பக்கத்தில் அதே அம்மாள் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்தேன். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. மொத்தத்தில் நமது மைத்துனர் இந்த வலையிலும் விழுந்திருக்கிறாரா என்ன?

ஒரு ஞாயிற்றுக்கிழமை யன்று, அம்மா வேலையாக எங்கோ வெளியில் போயிருந்தாள். சுமார் ஐந்து மணி அடிக்கும் நேர மாக இருந்தது. நான் வீட்டில் தனியாக இருந்தேன். மழைக் காலமாக இருந்தது. ஆகாயத்தில் மேகங்கள் நிறைந்திருந்தன. அப்படியிருந்துங்கூட நான் சன்னலின் அருகில் உட்கார்ந்து, அப்பொழுது இருந்த மங்கலான வெளிச்சத்திலும் என் மனத் தைத் தன்னுள் ஆழ்த்தும் வண்ணம் இருந்த ஒரு புத்தகத் தைப் படித்துக்கொண்டிருந்தேன். அது ஓர் அழகான கதைப் புத்தகம். நாள் முழுவதும் நான் அதையே படித்துக்கொண் டிருந்ததால், அதில் வரும் நாயகன், நாயகி இருவரின் இன்ப துன்பங்களில் என் மனம் ஒன்றிப் போயிருந்தது. அந்தப் பெருங் கதையில், உள்ளத்தைத் தொடும் ஒரு நிகழ்ச்சியைப்பற்றிப் படித்துக்கொண்டிருந்தபொழுது, என் கண்களில் கண்ணீர் நிரம்பியது எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. அதற்குள் யாரோ மிக மென்மையானதும், சில்லிட்டிருந்ததுமான தனது கையை எனது தோளின்மீது வைத்தார்கள். திடுக்கிட்டு நான் நிமிர்ந்த போது, அக்காவின் பரிதாபமான உருவம் என் பார்வையில் பட்டது. விடாது பெய்துகொண்டிருந்த மழையில் ஒட்ட நனைந்து போயிருந்த அவள், கண்ணீர் ததும்பும் தனது கண்க ளால் கணப்பொழுது இமை கொட்டாது என்னைப் பார்த்தவாறு நின்ருள். பின்னர் ஒரேயடியாக என்னிடம் சொன்ஞள்: 'என்னுடைய வாழ்வில் எனக்கு அளவற்ற வெறுப்பு ஏற்பட் டிருக்கிறது. ஒன்றுமே தோன்றுவதில்லை. தம்பி, என்ருவது ஒருநாள் என்னைப்பற்றி நீ ஏதாவது விபரீதமாகக் கேள்விப் பட்டால் வருத்தப்படாதே, என்ன? உனது ஒரு சகோதரி யம வேதனையினின்றும் விடுபட்டாள் என்று எண்ணி எல்லாருக் கும் கற்கண்டு பகிர்ந்து கொடு.'

அவளுடைய இந்தச் சொற்களைக் கேட்டு என் மனம் என்ன நிலையை அடைந்திருக்கும் என்பதைப்பற்றி யாரால் ஊகிக்க முடியும்? ஆனால், அப்படி என்னதான் நடந்தது என்பதை அறிந்து கொண்டு அவளுக்கு ஆறுதல் சொல்ல எண்ணி, நான் அவளிடம், 'அக்கா, என்ன ஆயிற்று, என்னிடம் சொல்' என்று சொன் னேன். ஆனல், ஒரேயடியாகப் பெரிதாக அவள் அழத் தொடங்கிவிட்டாள். அதற்குள் அவளுக்கே என்ன தோன்றி யதோ, அவள் தன் அழுகையை நிறுத்தி, 'தம்பி, சொன்ன விஷயத்தைக் கவனத்தில் வைத்துக்கொள். நான் போகிறேன்.

அம்மா வீட்டில் இல்லை என்பதும் நல்லதாகப் போயிற்று' என்று கூறினாள். நான் ஏதோ பேச இருந்தேன். ஆனால், அதற்குள்ளேயே அவள் புறப்பட்டுப் போய்விட்டாள். நான் பின் சென்று, 'போகாதே' என்று அவளிடம் மிகவும் வேண்டினேன். ஆனால் எல்லாம் வீண்; அவள் போயே போய்விட்டாள்!

இவ்வாறு அவள் கண்டிப்போடு, பயமின்றி, உறுதியுடன் நடந்துகொள்ள ஆரம்பித்தாள். சமீபகாலத்திலிருந்துதான் இப்படி. அதாவது கல்யாணமாகிச் சுமார் நான்கு அல்லது நான்கரை ஆண்டுகள் சென்றபிறகு இப்படிப்பட்ட நிலை ஒரேயடியாக ஏற்படத் திடீரென்று என்ன காரணம் என்று எனக்கு விளங்கவில்லை. இப்பொழுது அவள் தன்னிச்சைப்படி எப்பொழுது வேண்டுமானாலும் வீட்டிலிருந்து கிளம்பித் தன் ஆருயிர்த் தோழியிடம் செல்ல ஆரம்பித்தாள். நினைத்தபொழுது எழுந்து எங்கள் வீட்டுக்கு வருவாள். யாரேனும் அவளிடம் பேசினாலோ அல்லது, 'நீ இது என்ன செய்கிறாய்?' என்று கேட்டாலோ, அவள் தெளிவாகச் சொல்வாள்: 'என் மனத்திற்குத் தோன்றியபடி நான் நடந்துகொள்வேன். நான் இனி எவருக்கும் கட்டுப்பட்டு இருக்கப் போவதில்லை. என்மீது யாருடைய கட்டுப்பாடும் இல்லை. இன்றுவரை மிகவும் பொறுமையுடன் நடந்துகொண்டேன் என்பதுதான் எனது தவறு.' இவ்வாறே ஒரு முறை திமிருடன் அவள் பேசியபொழுது, 'இப்படிச் செய்வதால் கணவனுடன் அடியோடு ஒத்துவரப்போவதில்லை' என்று யாரோ அவளிடம் சொல்லவும், அதற்கு அவள், 'இதுவரைக்கும் தான் எங்கு ஒத்து வந்தது, இனிமேல் ஒத்துவரப்போவதில்லை என்பதற்கு?' என்று பதில் கொடுத்தாள். ஒருமுறை யாரோ ஒருவர் அவளிடம், 'இனிமேல் அவர் உன்னை அடிக்கவும் செய்வார்' என்று சொன்னபொழுது, அவள் பல்லைக் கடித்துக் கொண்டு சொன்னாள்: 'இப்பொழுது நான் அதைத்தான் எதிர்பார்க்கிறேன். அவ்வளவு நடந்துவிட்டால், எல்லாவற்றிற்கும் ஒரு முடிவு வந்துவிடும்.' அவளுடைய இந்தப் பதிலின் பொருள் ஆழம் யாருக்கும் பிடிபடுவதாக இருக்கவில்லை. அதன் பொருளை அவளிடம் ஒருமுறை கேட்டபொழுது, அவள் பட்டென்று பதில் அளித்தாள்: 'சமயம் வந்தால் எல்லாம் தெரியும். இப்பொழுதே கேட்டு என்ன செய்யப் போகிறீர்கள்?'

# 29. குறிப்பிட்ட நாளின் நிகழ்ச்சி

ஒரு நாள் மாலை நேரத்தில் சிவராம் பந்த் அவர்கள் என்னைச் சாப்பிடக் கூப்பிட்டிருந்தார். அன்றைத் தினமே அவருடைய மிகப் பழைய நண்பர் ஒருவரும் அவர் வீட்டிற்குச் சாப்பிடுவதற்காக வர இருந்தார். பள்ளிக்கூடம் விட்டதும் நான் அங்குப் போய்ச் சேர்ந்தபொழுது சிவராம் பந்த் அவர்களும், அவருடைய நண்பரும் அமைதியாக உட்கார்ந்திருந்தார்கள். ஏதோ மிகப் பழைய விஷயங்களைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். என் மனம் ஈடுபடும்படி அப்பேச்சில் குறிப்பாக ஒன்றும் இல்லாததால், நான் தள்ளி, சன்னலில் கிடந்த ஒரு புத்தகத்தைப் படித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். அந்தப் புத்தகமாவது, 'லூதரின் வாழ்க்கைச் சுருக்கம்'.

அந்தப் புத்தகத்தைப் படிப்பதில் நான் ஒரேயடியாக மூழ்கியிருந்தேன். லூதரின் தோழர்கள் அவனைப் போப்பிடம் போக வேண்டாம் என்று சொன்னபொழுதும்கூட அவன் தனது முடிவை மாற்றிக்கொள்ளவில்லை. உள்ளத்தை உருக்கும் பகுதியைப் படித்துக்கொண்டிருந்தேன். அதற்குள் சிவராம் பந்த் அவர்களின் நண்பர், இதுவரைப் பேசிக்கொண்டிருந்ததை விட உரத்த குரலில் ஏதோ பேசினார். ஆகவே எனது கவனம் அரைகுறையாக அவரிடம் சென்றது. அதிலும் குறிப்பாக அவருடைய அந்த வார்த்தைகள் எனது உள்ளத்தைத் தன் னிலையினின்றும் இழுத்துக்கொள்ளும் வண்ணம் இருந்தன. 'இருக்கட்டும், இப்பொழுது நீ உனது பெண்ணின் கல்யாணத்தை எப்போது செய்யப்போகிறாய் என்பதை முதலில் சொல்லு?'

'பண்ணினால் போகிறது! இப்பொழுது என்ன அவசரம்?' என்று சிவராம் பந்த் நிதானமாகப் பதில் சொன்னார்.

சிவராம் பந்த், நிதானமாகக் கொடுத்த அந்தப் பதிலைக் கேட்டு அந்த ஆள் சும்மா உட்காரவில்லை. உடனேயே அவரிடம் சொன்னார்: 'இதோ பார், இந்த மாதிரி ஏனோதானோ என்று பதில் சொல்வதில் ஒரு பொருளும் இல்லை. பெண் எவ்வளவோ பெரியவளாக வளர்ந்திருக்கிறாள். அப்படியிருக்க, இன்னமும், ''பண்ணினால் போகிறது. இதற்குள் என்ன

அவசரம்?'' என்று பதில் அளிப்பது என்றால் மிகவும் விசித்திர மாக இருக்கிறது. பெண்ணின் வயது பதின்மூன்று முடிந் திருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது; இல்லையா? இருந்தும் இப்பொழுதே கல்யாணத்திற்கு என்ன அவசரம் என்று நீ சொல்கிறாய்!'

சிவராம் பந்த் வெறுமனே சிரித்தார். அப்போது அந்த ஆள் மேலே சொன்னார்: 'ஏன் சிரிக்கிறாய்? தெளிவாக எனக்கு இப் பொழுது சொல்லிவிடேன். நேற்று ஓர் இடத்தில் உனது பெண்ணைப்பற்றிய பேச்சு கிளம்பியிருந்தது. அப்பொழுது அங்கு இருந்தவர்கள் எல்லாரும் முகத்தைச் சுளித்துக்கொண்டு இல்லாததும் பொல்லாததும் எவ்வளவோ பேசினார்கள் என்று தான் நான் உன்னைக் கேட்கிறேன். என்ன இருக்கிறதோ அதை என்னிடம் தெளிவாக எடுத்துச் சொல்வதற்குக்கூட உனக்கு வெட்கமாக இருக்கிறதா? நாம் செய்வது நன்றாக இல்லை என்று உனக்குப் படுகிறது என்றுதான் விஷயத்தை எனக்குத் தெளி வாகச் சொல்வதில் பின்வாங்குகிறாய்ப் போலிருக்கிறது.'

அந்த ஆளின் அந்த நீண்ட பேச்சு முடிந்ததுமே, அவர் ஆர்வத்தோடு சிவராம் பந்த் அவர்களைப் பார்க்கத் தொடங் கினார். சிறிது தாமதித்து, சிவராம் பந்த் அவரிடம் சொன்னார்: 'இதோ பார் பாபு, நம் இருவருக்கும் இடையில் ஏறக்குறைய முப்பது ஆண்டுக் காலமாக நட்பு இருக்கிறது. அப்படியிருக்க, எந்த ஒரு விஷயத்தையுமே உனக்குச் சொல்லக்கூடாது என்பது இல்லை. ஆனால், சில விஷயங்களைப்பற்றி நான் என்றுமே ஒருவ ரிடமும் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. எந்த விஷயங்கள் என் ஒருவனுடைய அல்லது எனது குடும்பத்தினரின் எண்ணப்படி நடக்கக்கூடியவையாகவும், என்னுடைய அல்லது என்னுடைய குடும்பத்தினரின் நன்மை, தீமைக்காக இருப்பனவாகவும் இருக் கின்றனவோ, அவற்றைப்பற்றி மற்றவர்களிடம் பேசுவதிலோ, விவாதம் செய்வதிலோ என்ன அர்த்தம் இருக்கிறது? அவற்றுடன் பிறருடைய தொடர்பு ஏற்படும்பொழுது, நான் நிச்சயம் அவர்களுக்குச் சொல்வேன்; என்றும் பின்வாங்க மாட்டேன். நீ இப்பொழுது கேட்டுக்கொண்டிருக்கிறாய், மேலும் இப்படிக் கேட்பதில் இளப்பம் செய்யும் எண்ணம் உனக்கு இல்லை என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஆகவே உனக்கு நான் சொல்கிறேன், முடிந்தவரைக்கும் பெண்ணின் கல்யாணத்தை நாம் செய்யக்கூடாது என்று நிச்சயமாக முடிவு

செய்திருக்கிறேன். குறைந்தபட்சம் இன்னும் ஐந்து ஆண்டு களுக்கு இந்த விஷயத்தை நான் கனவிலும் கொண்டுவரப் போவதில்லை. என்னுடைய இந்த எண்ணத்தில் இனிச் சிறிதள வும் மாறுதல் ஏற்படப் போவதில்லை.'

உறுதியுடன், ஆனுல் மிகுந்த நிதானத்துடனும், பெருந் தன்மையோடும் உச்சரித்த சிவராம் பந்த் அவர்களின் சொற் களைக் கேட்டு அந்த ஆள் திடுக்கிட்டுப் போனுற்போலத்தான் காணப்பட்டார். கணப்பொழுது அவர் அசையக்கூட இல்லை. அதற்குமேல் சொல்ல என்ன இருக்கிறது? கண்களை அகல விரித்து அவர் மௌனமாக அவரைப் பார்த்துக்கொண்டிருந் தார். இப்படிக் கண்டிப்பும், உறுதியும் கொண்ட பதில் வரும் என்று அவர் நினைத்திருக்கவில்லை போலும். அந்தப் பதிலைக் கேட்டதும் ஏற்பட்ட அசைவற்ற நிலைமை சிறிது குறைந்த பிறகு, அவர் மீண்டும் சொல்லலானுர்: 'அடே சிவராம் பந்த், இது என்ன பைத்தியக்காரத்தனமான எண்ணத்தைத் தலையில் கொண்டிருக்கிருய்? இப்படிப்பட்ட குழப்பத்தில் விழும் அருகதை உனக்குக் கிடையாது; உனக்கு அது கட்டுபடியும் ஆகாது. பிறகு பெரிய பெரிய மனிதர்களின் வாயில் மண்ணைப் போட வேண்டி நேரிடும், தெரியுமா? நீ பெண்ணை இவ்வளவு பெரியவளாக்கினுய், இதுவே போதுமாயிற்று. இப்பொழுது ஏதேனும் ஒரு நல்ல இடத்தைப் பார்த்துக் கல்யாணத்தைப் பண்ணி முடித்துவிடு. ஐயோ, இதுபோன்ற காரியங்களைச் செய்வதற்குப் பணத் தின் பக்கபலம் வேண்டும் அல்லது மக்களின் பக்கபலமாவது வேண்டும். இரண்டில் ஒன்றுயினும் உனக்கு இருக்கிறதா? இல்லவே இல்லை. நாளைக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டால், உன்னுடைய நிலைமை என்ன[ஆகும்?'

'பாபு, பணத்தின் பக்கபலம் எனக்கு இல்லை என்பதை நினைவில் வைத்துக்கொள்ளாமலா நான் இவ்வாறு முடிவு செய் திருக்கிறேன்? இப்படிப்பட்ட உறுதியைக் கொள்ளுவதற்குப் பண பக்கபலத்தின் அவசியம் அணுவளவும் இருப்பதில்லை என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஊராரின் பக்கபலம் இல்லை என்ருல், இவ்வாறு நான் செய்வதற்கு நீ என்னை ஏன் குற்றம் சாட்டுகிருய்? மேலும் பேச்சு இவ்வளவு தூரம் எதற்கு வளர்ந்திருக்கும்?'

'உனக்கு வேண்டாம் என்ருல் சரி. நாங்கள் ஒன்றும் பேச வில்லை. ஆனுல், நீ இப்படிச் செய்வது எங்களுக்குச் சரியாகப்

படவில்லை. இப்படி நீ செய்வது ஒருவேளை உனக்குப் பிடித்திருந்தாலும்கூட, உன்னுடைய மனைவிக்கும் இது பிடித்திருக்கும் என்று எதைக் கொண்டு சொல்லமுடியும்? பெண்ணின்மீது உனக்கு எவ்வளவு உரிமை உண்டோ, அவ்வளவு அவளுக்கும் இல்லையா?'

'இருக்கிறது. இல்லை என்று யார் சொல்லுகிறார்கள்? ஆனால், எனது இச்செயலில் அவளுடைய முழுச் சம்மதமும் உண்டு. அது மட்டுமல்ல. நேரடியாகப் பெண்ணின் சம்மதமும் உண்டு. எனது நற்காலத்தினால் என்னுடைய பெண் மிகவும் கெட்டிக்காரியாக இருக்கிறாள். நானாகவே இவ்வாறு சொல்லக்கூடாது; இதுவரை இவ்வாறு நான் என்றும் சொல்லவும் இல்லை. ஆனால், இன்று அது என் வாயிலிருந்து வெளிப்பட்டுவிட்டது; அதற்கு வேறு வழியில்லை. அவளுக்குப் படிப்பில் அபரிமிதமான சுவை ஏற்பட்டிருக்கிறது. சொன்ன விஷயத்தை அவள் உடனடியாகப் புரிந்துகொள்கிறாள். சிறு வயதிலிருந்தே நான் எனது எண்ணத்தை அவளுக்குச் சொல்லி வருவது வழக்கம். ஆனால், சுமாராக இரு மாதங்களுக்கு முன்னால் அவளை வேண்டுமென்றே தனித்து ஓரிடத்தில் கொண்டு சென்று, அவளிடம் சொன்னேன்: ''சுந்தரே, உலகத்தின் நோக்குப்படி உனது வயது கல்யாண வயதின் படியைக் கடந்து சென்றுவிட்டது. இருந்தாலும் ஒரேயடியாக முற்றும் கடந்துவிட்டது என்று இல்லை. எனது மனத்தில் முடிந்தவரைக்கும் இன்னும் சில ஆண்டுகள் உனக்குக் கல்யாணம் செய்யவேண்டாம் என்று இருக்கிறது. உன்னை மிகவும் தெளிவாகக் கேட்கிறேன்; நீ தெளிவாகப் பதில் அளிக்கச் சிறிதளவும் வெட்கப்படாதே. என்னுடைய எண்ணத்தை உன் அம்மா முற்றும் ஆமோதிக்கிறாள். ஆனால், நீ ஒன்றும் புரிந்துகொள்ளாதவள் இல்லை. ஆகவே, உன்னையும் கேட்கவேண்டும் என்று எண்ணி உன்னைக் கேட்கிறேன்.'' அச் சமயத்தில் அவள் எனக்குப் பதில் அளிக்கவில்லை. ஆனால் தனது தாயின் மூலம் அவள் எனக்குத் தெரிவித்த பதில் எனது எண்ணத்திற்கு முற்றும் ஏற்றதாகவே இருந்தது. இவ்வளவு பக்கபலம் எனக்கு இருக்கும்பொழுது, பின்னர் பாபு அவர்களே, வேறு யாருடைய பக்கபலம் எனக்கு வேண்டும்? பணத்தின் பக்க பலம்? இப்படிப்பட்ட விஷயங்களில் பணத்தின் பக்க பலம் இருந்தால் வழி எளிதாகிறது, அவ்வளவுதான்! ஆனால், பணத்தின் பக்கபலம் இன்றி இவ்விஷயங்கள் நடக்கக்கூடியன

வாக இருக்கவே முடியாது என்று மட்டும் யாரும் நினைக்க வேண்டாம்.'

கணப்பொழுது மௌனமாக இருந்து, பின்னர் பாபு சொன்னார்: 'உன்னை நிந்தனையோ அல்லது பரிகாசமோ செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் நான் உன்னைக் கேட்கவே இல்லை. ஆனால், என் மனத்தில் என்ன தோன்றியிருக்கிறதோ அதைக் கேட்காமல் இருக்க என்னால் முடியவில்லை.' உயர்ந்த குரலில் இவ்வளவு சொன்னதும், தமது குரலை மிகவும் தாழ்த்தி அவர் மேலும் சொன்னார்: 'இன்று நீ சொல்வது சரிதான். ஆனால், நாளைக்குப் பெண் வயதிற்கு வந்த பின்னர், தவறான வழியில் அவளுடைய காலடி விழுந்தால், அதனால் ஏற்படும் அவமானம் யாருக்கு?'

சிவராம் பந்த் அதைக் கேட்டுச் சிரிந்தார். மேலும் சொல்லலானார்: 'நான் அவளுடைய கல்யாணத்தைச் செய்து கொடுத்து, இரண்டாம் நாள் அவளுடைய கணவன் இறந்துபோனால், அதற்குப் பின்னர் அவள் காலடி தவறிய வழியில் விழுந்தால், அப்பொழுது அந்த அவமானம் யாருக்கு? பாபு, இது என்ன பைத்தியக்காரத்தனமான கேள்வி? அடே, அவளுக்கு நல் வழியின் அறிவைப் புகட்டுவது நமது வேலை. அதை நான் கொடுக்கும் வரை, அவளுடைய உள்ளத்தில் நல்லெண்ணங்களே அரசு புரிவதற்கு வேண்டிய ஏற்பாட்டை நான் செய்தவனாவேன். பின், அவள் அப்படிப்பட்ட செயலை ஏன் புரியவேண்டும்? ஒரு வேளை அப்படி ஏதாவது நடந்தாலும், நான் கல்யாணம் செய்து கொடுக்கவில்லை என்பதால்தான் அப்படி நடந்தது என்று மட்டும் நான் என்றுமே சொல்லமாட்டேன். இப்படிப்பட்ட விஷயங்களைப் பற்றிப் பேசுவது மிகவும் துன்பகரமாக இருக்கிறது. ஆனால், பாபா, பாலவிதவைக் காலத்தில் நற்குணங்களின் பாதுகாப்பு ஏற்படுகிறது என்றால், கன்னிப்பருவத்தில் அது ஏன் ஏற்படக்கூடாது? அவள் எனது புகழை உயர்த்துவாள் என்று எனக்கு அசைக்கமுடியாத நம்பிக்கை இருக்கிறது. என்னுடைய பெயருக்கும், தன்னுடைய பெயருக்கும் அவள் என்றுமே இழுக்கைத் தருபவள் அல்ல.'

சிவராம் பந்த் இவ்வளவு சொல்லி மௌனமாக அமர்ந்திருந்தார். அந்த விருந்தாளி மனிதர் மேலே ஒன்றும் பேசவில்லை. மேலே ஒன்றும் பேசுவதற்கு அவருக்கு இடமே இருக்கவில்லை. ஏனெனில், வீட்டில் சாப்பாடு தயாரானதைப்பற்றி அறிவிக்கப்

பட்டது. ஆகவே, அப்பேச்சு அத்துடன் நிற்க, நாங்கள் சாப்பிடுவதற்காகச் சென்றோம். இதுவரை எவ்வளவோ நாட்களாக எந்த விஷயம் அரைகுறையாகத் தெளிவற்ற முறையில் தெரிந்திருந்ததோ, அது இன்று முற்றும் சுத்தமான முறையில் தெரியவந்தது. சாப்பாடு யாவும் முடிந்த பிறகு அவர்களிடையே குறிப்பிடத் தகுந்த வகையில் ஒரு பேச்சு வார்த்தையும் நிகழவில்லை. மேலும் எனக்கு நேரம் ஆகிவிட்டதால், அங்கு உட்காருவதற்கு வாய்ப்பு இருக்கவில்லை. ஆகவே, நான் உடனடியாகப் புறப்பட்டுப் போய்விட்டேன். ஆனால், அன்றைத் தினம் கேட்ட பேச்சினால் மொத்தத்தில் என் மனத்திற்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. மனம் மிகவும் குதூகலம் அடைந்தது. அந்த இன்பத்தின் நிறைவோடு நான் வீட்டிற்குக் கிளம்பிச் சென்றேன். எனது உள்ளத்தில் எதைப்பற்றியாயினும் நம்பிக்கையின் முளை தோன்றியதா என்ன?

# 30. சுந்தரியின் வாழ்வில் மாற்றம்

இருக்கும், இல்லை என்று எப்படிச் சொல்வது? ஆனால், அந்த நம்பிக்கையின் முளை தோன்றியதன் காரணமாக எனக்கு அச்சமயத்தில் அந்த ஆனந்தம் ஏற்பட்டது என்பதைவிட, அன்றைத் தினம் காணக் கிடைத்த சிவராம் பந்த் அவர்களின் பரந்த மனப்பான்மையின் தோற்றம் காரணமாகவும், அத் தோற்றத்தினால் என்னுள்ளத்தின்மீது விழுந்த ஒரு தனிச் சிறப்புடைய பளுவினால் ஏற்பட்ட எண்ணத்தாலுந்தான், அந்த இன்பம் ஏற்பட்டது என்று சொல்வது பொருத்தமாயிருக்கும்.

சுந்தரிக்கு நீண்ட காலம் வரை கல்யாணம் செய்யாமலிருக்க வேண்டும் என்பது மட்டும் சிவராம் பந்த் அவர்களின் முடிவாக இருக்கவில்லை. அவளுக்குப் புது முறைப்படி கல்வி அளிக்க வேண்டும் என்ற உறுதியும் அவர் கொண்டிருந்தார். பள்ளிக் கூடத்திற்கு அனுப்புவதனால் நமக்கு வேண்டிய முறைப்படி கல்வி கிடைப்பதில்லை என்பது முதலிலிருந்தே அவருடைய அபிப் பிராயமாக இருந்ததனால், அவர் பல விஷயங்களைப்பற்றிய கல்வியை வெகு நாட்கள் வீட்டிலேயே அவளுக்கு அளித்து வந்தார். ஆனால், இப்பொழுது மேற்கொண்டு அவளுடைய மேற்படிப்பைத் தொடங்கும் நாள் வந்தது. அதற்கு என்ன ஏற்பாடு செய்யவேண்டும் என்ற எண்ணத்தில் அவர் மூழ்கி யிருந்தார்.

சுந்தரி என்று பள்ளிக்கூடத்திற்குப் போக இருந்தாளோ, அதற்கு முதல் நாள் நான் அவள் வீட்டிற்குச் சென்றிருந்தேன். அதிர்ஷ்டவசமாக அதே சமயத்தில் சிவராம் பந்த் அவளை அருகில் உட்கார வைத்துக்கொண்டு ஏதோ சொல்லிக்கொண் டிருந்தார். நான் கதவருகில் சென்று அதைக் கண்டவுடன் பின்னால் திரும்பினேன். ஆனால், 'தம்பி, நான் இவளுக்குச் சொல்லிக்கொண்டிருப்பதை நீயும் கேட்டதனால் ஒன்றும் பரவாயில்லை, வா நீ!' என்று சொல்லிச் சிவராம் பந்த் என்னை உள்ளே அழைத்தார். நானும் சென்றேன். சுந்தரியும் நானும் இப்பொழுது வயதில் பெரியவர்கள் ஆனதன் காரண மாக, முன்போன்று ஒருவரிடம் ஒருவர் பயமின்றிப் பழகுபவர்

களாக இருக்கவில்லை. இருந்தபோதிலும் ஒரேயடியாக அறிமுகம் இல்லாதவர்கள் போலவும் இருவரும் பரஸ்பரம் நடந்து கொள்ளவில்லை. பழையபடியேதான் ஒருவரிடம் ஒருவர் பேசுவதும், நடந்துகொள்வதும். அதேபோல் எங்களுக்கு இடையில் இன்ப துன்பங்களின் பேச்சுகளும் நடக்கும். அதில் முக்கியமாக அக்காவைப்பற்றிய பேச்சு நிச்சயமாக இருக்கும்.

தந்தை அளித்த எல்லா நல்லுரையையும் ஒன்றிய மனத்தோடு சுந்தரி கேட்டுக்கொண்டிருந்தாள். சுந்தரியைப்போலவே நானும் ஒன்றிய மனத்துடன் அவருடைய பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தேன். கடைசியில் அவர் சிறிது நேரம் நிறுத்தினுர். ஆனுல், அதற்கு இடையிலேயே அவர் மனத்தில் என்ன எண்ணம் தோன்றியதோ, அவர் உடனேயே சொல்லலானுர்: 'சுந்தரே, இன்னும் ஒரு விஷயத்தைப்பற்றி நான் உனக்குக் கொஞ்சம் சொல்லப் போகிறேன். இதோ பார், நான் உன்னை எந்தப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப் போகிறேனே, அந்தப் பள்ளிக் கூடம் முற்றும் வேறு வகையைச் சேர்ந்தது. உண்மையில் நீ அங்குச் செல்வதில் எனக்கு விருப்பமில்லை. ஆனுல், வேறு பள்ளிக் கூடம் இல்லை என்பதனுல், வழி இல்லை. அது மட்டு மல்லாமல், நமது பிற்கால நலனுக்கு எந்தக் குணங்களை நாம் கற்றுக்கொள்ள வேண்டுமோ, அந்தக் குணங்களை வேறெந்தப் பள்ளிக்கூடத்தை விடவும் இந்தப் பள்ளிக்கூடத்தில் சீக்கிரமாகக் கற்றுக்கொள்ள இயலுமென்று நான் இந்த ஏற்பாட்டைச் செய்தேன். ஆனுல், நீ உன் மனத்தை நன்கு கட்டுப்படுத்தி நடந்துகொள். அவர்கள் நமது இந்து மதத்தை எவ்வளவுதான் இகழ்ந்து பேசினுலும், இல்லை, தமது கிறிஸ்தவ மதத்தை எவ்வளவுதான் புகழ்ந்து பேசினுலுங்கூட, நீ அந்த இகழ்ச்சியாலோ அல்லது புகழ்ச்சியாலோ உனது மனத்தைச் சிறிதளவும் சிதற விடாதே. இந்து மதத்தைப் போன்று வேறு மதம் இல்லை; நமது சாதியைப்போல் வேறு சாதி இல்லை என்ற வார்த்தைகளை ஒவ்வொரு கணமும் நினைவு படுத்திக்கொண்டே இரு. நல்லதோ கெட்டதோ, நம்முடைய இந்து மதம் நம்முடையதுதான் என்று மனத்தில் கொண்டு, அங்குச் செய்யவேண்டியதைச் செய்து கொண்டே போ. அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டியதை எல்லாம் கற்றுக்கொள். ஆனுல், இந்த மதத்தைப்பற்றிய விஷயத்தில் மட்டும் காதுகள் திறந்திருந்தும் மூடிவைத்துக் கொள். நான் உனக்குச் சொல்லவேண்டும் என்பது இல்லை.

ஆனால், மகளே, அவர்களுடைய பேச்சினால் உன்னிடம் மாறுதல் ஏற்படக்கூடாது என்பதற்காகவே உனக்கு இதைச் சொல்லி வைக்கிறேன். நமக்கு என்னவெல்லாம் செய்யவேண்டி இருக்கிறதோ, அவற்றை நமது சாதியில், நமது மதத்தில் சேர்ந்தவாறு இருந்து செய்யவேண்டும். கல்வி, மதம் இரண்டுக்குமிடையில் ஒரு தொடர்பும் இல்லை. அவர்கள் கூட்டத்தினர் தமது கல்வி வரிசையை நடத்திக்கொண்டிருக்கை யிலேயே இடையிடையில் பைபிளில் இருக்கும் விஷயங்களை நுழைத்து அந்தப் புத்தகத்தையும், அந்த மதத்தையும் உயர்த்திப் பேசாமல் இருக்கப் போவதில்லை. இவற்றையெல்லாம் நன்கு அறிந்திருந்தும்கூட நான் உன்னை அப்பள்ளிக்கு அனுப்ப முடிவு செய்துள்ளேன். ஆகவே, உன்மீது என் மனத்தில் எவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள். அவர்கள் இனிக்க இனிக்கப் பேசினாலும்கூட, உனது உள்ளத்தில் அணுவளவும் மாற்றம் ஏற்படாது என்று நான் நிச்சயம் நம்புகிறேன். இப்பொழுது நீ எனது அந்த நம்பிக்கையை எவ்வளவு நிலைநிறுத்தப் போகிறாய் என்பதைப் பார்க்கலாம்!'

விநயன் அங்கேயே வசித்து வந்ததால், அவள் பள்ளிக்கூடம் போவதுபற்றி அவனுக்கு எல்லாம் தெரிந்திருந்தது. ஆகவே, அவன் அன்றைத் தினம் நேர் வாசலில் வேரூன்றி நிற்பதுபோல் நின்றான். அதுவும் தனியாக அல்ல, தன்னுடன் அவன் தன்னைப் போன்றே ஒரு பொல்லாத தோழனை வேண்டுமென்றே அழைத்து வந்திருந்தான். வாசலுக்கு இருபுறத்திலும் இருவரும் நின்று கொண்டு நடுவிலிருந்து அவள் எப்படிப் போகிறாள் என்பதைப் பார்க்க, இல்லை, ஒருவேளை அந்தச் சமயத்தில் பொல்லாத சொற்களைச் சொல்வதற்காகவோ, அவர்களுடைய மூளையும், அவர்களுடைய நாக்குகளும் மிகுந்த ஆர்வம் கொண்டனவாக இருந்தன. குறித்த நேரத்தில் சுந்தரியின் பள்ளிக்கூடத்திலிருந்து வேலையாள் வந்து அவளுடைய புத்தகங்களை எடுத்துக்கொண்டு முன்னால் நடந்தான். அவளும் பின்னாலேயே வந்தாள். ஆனால், இந்தத் தடியன்கள் இருவரும் இரு பக்கங்களிலும் தத்தம் இடத்திலேயே நின்றவண்ணம் இருந்தனர். அந்த வேலையாள் வழி விடும்படி அவர்களிடம் சொன்னான். ஆனால், 'நாங்கள் நின்று கொண்டிருப்பதனால் என்ன ஆயிற்று? இடையிலிருப்பது வழி இல்லையா?' என்று ஒருவனும், 'எங்களைப்போன்று இப்பொழுது புத்தகம் கித்தகம் எடுத்துக்கொண்டு பள்ளிக்கூடத்திற்குப்

போகத்தான் வேண்டுமென்ருல், பின் எங்களைப் பார்த்து என்ன வெட்கம்?' என்று மற்றவனும் சொன்னுர்கள். சுந்தரி, பாவம், ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் மௌனமாகத் தன் உடலைக் கூசிக்கொண்டு வெளியில் சென்ருள். இதுவே தனது புதிய நிலையில் அவளுக்குப் பொறுத்துக்கொள்ள வேண்டியிருந்த முதல் ஆபத்து. இந்த முதல் நாளின் நிகழ்ச்சியைப்பற்றி எனக்குப் பள்ளியில் விநயாஜீயிடமிருந்தே தெரியவந்தது. அதில் அவன் மிகுந்த போக்கிரித்தனத்தைச் சேர்த்தும், தனது அந்தப் பொல்லாத தோழனின் உதவியிஞல் அதை முடிந்தவரை மிகைப் படுத்தியும், எனக்கும் தெரியவேண்டும் என்பதற்காகவே, தனது எல்லா நண்பர்களிடமும் உரக்கச் சொல்லிக்கொண்டிருந்தான்.

# 31. கடைசியில் நடந்தது என்ன?

ஒரு நாள் நான் வீட்டில் காலடி வைத்தபொழுது அம்மாவும் பெண்ணுமாக இருவரும் ஓயாமல் அழுதுகொண்டிருந்தார்கள். நான் வெளியில் போனபிறகு அக்கா எப்பொழுது வந்தாள், மேலும் என்ன நடந்தது என்பது ஒன்றுமே எனக்குத் தெரியாது. அக்காவின் கேசம் கலைந்து, அவள் உடலின்மீது பரவியிருந்தது. அவள் மிகுந்த சினங்கொண்டவளாகக் காணப்பட்டாள்; மிகவும் அழுதுகொண்டும் இருந்தாள். அந்த அழுகையில் கோபத்தின் அளவு எவ்வளவு இருந்தது என்று சொல்வது மிகக் கடினமாக இருந்தது. அம்மாவின் கண்கள், அவற்றில் கண்ணீர் மிக அபூர்வமாகத்தான் காணப்படும்; ஆனால் அந்த அபூர்வ நிகழ்ச்சி இன்று வந்து சேர்ந்திருந்தது. அதிலும் நாளுக்கு நாள் அவள் இன்னமும் வயதானவளாக ஆகிக்கொண்டு வந்ததனால், அவளது உள்ளம் மேலும் மேலும் மென்மை அடைந்துகொண்டு வந்ததாகத் தோன்றியது. இப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சியே இதற்குமுன் எப்பொழுதாவது வந்திருந்தால், அவள் அழுதிருக்கவே மாட்டாள். அது மட்டுமல்ல, அவள் அக்காவை மிகவும் சினந்துகொண்டிருப்பாள்.

நான் அவர்களைப் பார்த்துக்கொண்டே வெகுநேரம் நின்று கொண்டிருந்தேன். அவர்களுடைய அந்த அழுகைக்குக் காரணம் என்ன என்பது எனக்குச் சிறிதும் பிடிபடவில்லை. கடைசியில், 'என்ன ஆயிற்று?' என்று நான் கேட்கவே இருந்தேன். அதற்குள், 'அம்மா, இப்பொழுது நீ செருப்பை ஓங்கி என்னை விரட்டி அடித்தாலும், நான் இங்கிருந்து அசையப் போவதில்லை. தர தரவென்று என்னை வெளியில் இழுத்துத் தள்ளுவாயேயெனில், எனது உயிருக்கு என்னமாவது நேரிடும்படி செய்வேன் என்பதைப் பற்றியும் நான் இப்பொழுது சொல்லப்போவதில்லை' என்று சொல்லி முடித்ததும் அக்கா மீண்டும் ஓவென்று அழத் தொடங்கினாள். அவளுடைய அந்தப் பேச்சைக் கொண்டு அவளுக்கு என்ன நேர்ந்திருக்கக் கூடும் என்பதைப்பற்றி நிச்சயமாக ஒன்றும்

என்ருல் ஊகிக்க முடியவில்லை. மொத்தத்தில் அவளுடைய போக்கில் இன்றுவரைச் சிறிது சிறிதாக ஏற்பட்டுக்கொண்டிருந்த மாறுதல், இப்பொழுது அநேகமாக உச்சத்தை அடைவதற்கு ஏதேனும் தீவிரமான காரணம் இருக்கவேண்டும் என்பது மட்டும் வெளிப்படையாக இருந்தது. அந்தக் காரணம் என்ன என்பது மட்டும் எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. அப்பொழுது நாணுகக் கேட்கக்கூடிய சமயமாகவும் இருக்கவில்லை.

இரண்டொரு விநாடிகளில் அம்மா, அக்கா இவ்விருவரின் முதல் கொதிப்பும் அடங்கி, இருவரும் சிறிது அமைதி அடைந்து உள்ளே சென்ருர்கள். அம்மா, அக்காவை ஒன்றுமே சொல்லவில்லை. எனக்கும் ஒன்றும் கேட்கவேண்டும் என்று தோன்றவில்லை. இரவு சுமார் பத்து மணியாக இருந்தது.

நாள் முழுதும் நடந்தவைகளைப்பற்றி, அவற்ருல் ஏற்பட்ட, நான், என்னுடைய அம்மா, என்னுடைய அக்கா ஆகிய மூவரின் போக்கைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தேன். உள்ளம் மிகுந்த பிரமிப்பு அடைந்திருந்தது. அதற்குள் என் பெயரை யாரோ கூப்பிடுவதுபோல எனக்குத் தோன்றியது. எங்கள் வீடு தெருவிலிருந்து தள்ளி இருந்ததால் யாராகிலும் கூப்பிட்டால் மிகத் தெளிவாகக் காதில் விழாது. இருந்துங்கூட இன்று எனது இந்தச் சிந்தனைகளின் காரணமாக நான் விழித்துக்கொண்டிருந்ததனுல் எனக்கு இன்று அந்த அழைப்பு தெளிவாகக் காதில் விழுந்தது. சிறிது அஞ்சியவண்ணமே நான் சட்டென்று எழுந்து நேரே கதவருகில் சென்றேன். அங்குக் கதவிடுக்கின் வழியாக முற்றத்தில் விழுந்த விளக்கொளியைக் கண்டேன். அந்த விளக்கொளியைக் கண்டதுமே நான் மிகவும் திடுக்கிட்டேன்.

இப்படிப்பட்ட இரவு நேரத்தில் கையில் விளக்கேந்திய வண்ணம் என் பெயரைச் சொல்லிக் கூப்பிடுபவன் யாராக இருக்கக்கூடும்? குரலோ தெரிந்த குரலாகத் தெரியவில்லை. கடைசியில் கதவைத் திறந்து பார்த்தால், விளக்கைப் பிடித்து நின்றுகொண்டிருந்த ஒரு வேலைக்காரன் முன்னுல் நிற்க, அவனுக்குப் பின்னுல் வயதான என் அத்திம்பேரும், அவருடன் வயது முதிர்ந்த மற்ருெர் ஆளும் நின்றுகொண்டிருந்தனர். இப்படி இரவு நேரத்தில் பெரியவர் இங்கு பவனி வரக் காரணம் உடனேயே என் கவனத்திற்கு வந்துவிட்டது. நானே முந்திக்கொண்டு ஏதோ சொல்ல இருந்தேன். அதற்குள் எங்கள் அத்திம்பேருடன் இருந்த அந்த ஆள் சொன்னுர்: 'இதோ பாருங்கள், மன்னி,

அவளை இப்பொழுது வீட்டிற்கு அழைத்துச் செல்வதற்காக அண்ணு சாகேப் வந்திருக்கிறுர். வேறு யாரையாவது அனுப்பினுல் அவள் வரமாட்டாள் என்று அவரே வந்திருக்கிறுர். எங்கே இருக்கிறுள் அவள்?'

அந்தக் கிழவனின் பேச்சைக் கேட்டதுமே எனக்கு வந்த கோபத்தைச் சொல்லி முடியாது. எனது நாக்கின் நுனியில் பதில் தயாராக வந்து நின்றது. ஆனுல், எனக்குப் பேசுவதற்குச் சமயம் கொடுக்காமலேயே அத்திம்பேர் சொல்லலானுர்: 'எங்களை வாசலில் நிற்க வைப்பதற்கு ஒரு காரணமும் இல்லை. அவள் எங்கு இருக்கிறுள் என்பதைக் காட்டுங்கள். யாரைக் கேட்டு என்னவென்று எண்ணிக்கொண்டு வந்தாள் என்று நான் அவளைக் கேட்கவேண்டும். கிழவர்களின் மனைவிகள் இரண்டாவது என்றும், மூன்றுவது என்றும் இருந்தார்களேயானுல், நாம் ஆட்டி வைப்பதுபோல் கணவன் ஆடவேண்டும் என்று அவர் களுக்குத் தோன்றுகிறது. ஆனுல், நான் அப்படிப்பட்ட மாப்பிள்ளை அல்ல. இதை அவளுக்கு நன்ருகப் புரியவைக்கும் படி சொல்லப்போகிறேன் நான். உம்...அவள் எங்கே இருக்கிறுள் என்பதை எனக்குக் காட்டுங்கள். இன்று அவள் என்னுடன் வரவில்லை என்ருல், மீண்டும் அவள் பெயரை எடுக்கமாட்டேன் நான். அது மட்டும் அல்ல.' இதற்குமேல் கிழவனின் கோபம் கட்டுக்கு அடங்காமற் போகவே, அவர் வாயினின்றும் ஒரு வார்த்தைகூட வெளிப்படவில்லை. வாய்க்குள்ளேயே வார்த்தைகள் தடுமாறின. இப்படிப்பட்ட நிலையில் என்ன செய்யவேண்டும் என்பது எனக்கு விளங்கவில்லை. இறுதியில், நான் என்னுல் முடிந்தவரை அமைதியாகச் சொன்னேன்: 'எல்லாரும் இப்பொழுது படுத்துக்கொண்டிருக்கிறுர்கள். நீங்கள் வந்த விஷயத்தைப்பற்றி நான் காலையில் அவளுக்குச் சொல்வேன். பிறகு அவள் விரும்பினுல் அனுப்பி வைப்பேன். அவளுக்கு மிகுந்த தலைவலியாக இருக்கிறது. மேலும் . . .'

'மேலும் கீழும் எல்லாம் எனக்குப் பயன்படக்கூடியது அல்ல.' அண்ணு சாகேப் ஒரேயடியாக எரிந்துவிழுந்தார். 'நான் இப் பொழுதே அவளைச் சந்திக்கவேண்டும். வருவதற்குத் தயாராக இருக்கிறுளேயானுல், நான் இப்பொழுது அவளை அழைத்துச் செல்வேன். இல்லையென்ருல், பின்னுல் எனக்குத் தோன்றியபடி நான் செய்வேன். அவள் வரும்பொழுது என்ன நகைகளையெல் லாம் கொண்டு வந்தாள் என்பதன் விவரம் எனக்கு வேண்டும்.'

அந்த இடம் இவ்வாறு சண்டை போடுவதற்கு ஏற்றதல்ல. இரவு பத்து அல்லது பத்தரை மணி அடிக்கும் சமயமாக இருந் தது. இப்படிப்பட்ட நேரத்தில் தெருவில் நின்றுகொண்டு அந்த விசித்திரமான சண்டையைப் போடுவதைவிட, வீட்டிற்குள் அழைத்துவந்து, பின்னர் என்ன பேசவேண்டுமோ அதை அவனைப் பேசவிடவேண்டும். மேலும் அம்மாவிற்கு என்ன பேசவேண்டி யிருக்கிறதோ, அதை அவளும் பேசுவாள் என்று எண்ணிப் பேசாமல் அவர்களிடம், 'வீட்டிற்குள் வாருங்கள். நீங்கள் கேட்கப்போவதில்லை என்றால், பிறகு வேறு வழி இல்லை' என்று சொல்லி உள்ளே திரும்பினேன். அவர்கள் இருவரும், மேலும் அந்த விளக்கேந்திய வேலைக்காரனும், என் பின்னாலேயே வந்தார்கள்.

படுத்துக்கொண்டிருந்த அம்மாவையும், அக்காவையும் கூப்பிட்டு, அண்ணா சாகேப் வந்திருக்கிறார் என்று நான் சொன்னேன். மதியம் அநுபவித்த துன்பத்திற்குப் பிறகு, இப் பொழுதுதான் அவர்கள் சிறிது கண்ணயரத் தொடங்கியிருந் தார்கள்போல் தோன்றியது. நான் கூப்பிடுவதைக் கேட்டதும் திடுக்கிட்டவர்களைப் போல் அவர்கள் விழித்துக்கொண்டு, சட் டென்று எழுந்து நின்றார்கள்.

உள்ளே வந்ததுமே அண்ணா சாகேப்பின் தொணதொணப்பு தொடங்கிவிடும் என்று நினைத்திருந்தேன். ஆனால், அவர் பேசுவதற்கு முன்பே, அவருடன் இருந்தவர் சொன்னார்: 'மன்னி, வெறுமனே ஊரார் சிரிக்கும்படி செய்வதில் ஒரு பொருளும் இல்லை. ஒருவரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் நீங்கள் வீட்டிலிருந்து புறப்பட்டு வந்தீர்கள். அண்ணா சாகேப் எட்டு அல்லது ஒன்பது மணிக்குத் திரும்பி வந்தார். நடந்ததைக் கேட்டதும் அவர் மிகவும் சினந்தார். பிறகு நான் எப்படியோ அவரை அமைதிப்படுத்தினேன். இதற்கு முன்பு ஒருமுறை இப்படித்தான் இரவில் உங்களுக்கு அழைப்பு வந்திருந்தது. அப் பொழுது நீங்கள் பேசாமல் வந்தீர்கள். இன்று அவரே வந்திருக் கிறார்; எனவே நீங்கள் பேசாமல் திரும்பிவிடுங்கள். நடக்கக் கூடாத விஷயம் நேர்ந்துவிட்டது. இப்படிக் கேட்காமல் நீங்கள் வந்தது தவறுதான். ஆனால், இப்பொழுது பேசாமல் நடந் தீர்கள் என்றால் அவை யாவும் மறைந்து போகும். கிளம்புங்கள்.'

வெறும் வாயை மெல்லும் அக்கிழவனின் (சமீப காலமாக அத்திம்பேரின் வீட்டில் இவனுடைய ஆதிக்கந்தான் இருந்தது.)

பேச்சைக் கேட்டு அக்கா இப்பொழுது என்ன பேசப்போகிறளோ என்று நான் மிகவும் பயந்துகொண்டிருந்தேன். அவளுடைய முகபாவம் விசித்திரமாகக் காணப்பட்டது. இப்பொழுது அவள் ஏதேனும் பயங்கரமாகச் சொல்லி, சண்டை தொடங்கிவிடும் என்று தோன்றியது. அச்சமயத்தில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது.

எங்கள் அம்மா மிக உறுதியோடும், கோபத்தோடும், வருத்தத்தோடும் பேச முற்படும் பொழுது அவளுடைய முகம் எப்படி இருக்குமோ, முற்றும் அதே மாதிரியாக அக்காவின் முகமும் ஆயிற்று. கணப்பொழுது அவர்கள் இருவரின் முகங்களையும் மாறி மாறிப் பார்த்து, அந்த அற்புதமான ஒற்றுமையைக் கண்டு, மீண்டும் இரண்டு மூன்று முறை அவர்களைப் பார்த்துப் பார்த்து நான் மிகவும் வியப்படைந்தேன். அவர்கள் இருவரின் தோற்றத்திலும் இருந்த அந்த அளவு ஒற்றுமையைக் கண்டதும், அது அம்மாவினுடைய, இரு சமயங்களில் காணப் படும் இரு முகங்களாக இருக்கலாமோ என்றுகூடத் தோன்றியது.

நான் ஏதாவது பேசவேண்டுமா இல்லையா என்பதைப்பற்றி என்னல் முடிவு செய்ய முடியவில்லை. இப்படிப்பட்ட குழப்பத்தில் நான் விழுந்திருந்தபொழுது, அங்கே அக்காவின் உதடுகள் ஏதோ சொல்வதற்காகத் துடிக்கத் தொடங்கினற்போல் காணப் பட்டன. தனது இரு கைகளையும் பின்புறமாக ஒன்றுசேர வைத்துக்கொண்டு அம்மா சுவர்மீது சாய்ந்து கீழே பார்த்த வண்ணம் நின்றுகொண்டிருந்தாள். அந்தக் கிழவனின் அப் பேச்சுக்கு யாரும் பதில் கொடுக்கவில்லை என்பதைப் பார்த்ததும், அண்ணு சாகேப் மிகுந்த தளுக்குடன் சொன்னர்: ‘எனது உதவியாளர் சொன்னது ஒன்றும் காதில் விழவில்லைபோலிருக்கிறது. கேட்கவில்லையோ? இப்பொழுதே என்னுடன் புறப்படு. மறுபடியும் இப்படி என்னைக் கேட்காமல் மட்டும் வந்தாயோ, வீட்டில் வரவிடமாட்டேன். யாரைக் கேட்டு வந்தாய்? ம்? என்னிடம் கேட்டாயா? எனது உதவியாளரிடம் கேட்டிருந்தாயா? இல்லை, வேறு யாரையாவது கேட்டு வந்தாயா? இல்லை. பின் என்ன நினைத்துக்கொண்டு இங்கு வந்தாய்? இந்தத் தடவை மட்டும் மன்னித்துவிடுகிறேன். ஆனல், மீண்டும் இப்படி நேர்ந்தால் நான் பொல்லாதவனுக இருப்பேன். நான் இப்படிப்பட்ட பிடிவாதங்களுக்கு மசிகிறவன் அல்ல. நான் ஒரு கணமும் உன்னுடைய விருப்பப்படி நடக்க விடப்போவதில்லை. அங்கிருந்து போட்டுக்கொண்டும், எடுத்துக்கொண்டும் வந்த

நகைநட்டுக்களை எடுத்துக்கொண்டு இப்பொழுதே என்னுடன் நட! கிளம்பு! பிர்யா,* நட முன்னால்!' இந்த இளக்காரம் எல்லாம் காதில் விழுந்துகொண்டிருந்தபொழுது அக்கா தலையைத் தூக்கிக்கூடப் பார்க்கவில்லை. அவள் மௌன மாக, ஆனால் கோபத்துடன் கீழுதட்டைப் பற்களினால் கடித்த வண்ணம் தரையைப் பார்த்தவாறு நின்றுகொண்டிருந்தாள். இடையிடையில் படக்கென்று ஓரிரு கண்ணீர்த் துளிகள் விழும் பொழுது விளக்கின் வெளிச்சத்தில் மினுக்கும். அதனால், அவள் கண்ணீர் பொழிந்துகொண்டிருந்தாள் என்பது தெரிந்தது.

அண்ணா சாகேப்பும், அவர் உதவியாளரும் மேலும் சிறிது நேரம் மௌனமாக நின்றார்கள். ஆனால், அக்காவோ அல்லது வேறு யாராவதோ அசையவுமில்லை, பேசவுமில்லை. அப்பொழுது மீண்டும் அந்த உதவியாளர், 'உம், புறப்படுங்கள். காரணம் இன்றி அண்ணா சாகேப்பைச் சினத்திற்கு ஆளாக்காதீர்கள். இன்னமும் அவர் பலகாரங்கூடச் சாப்பிடவில்லை. இந்த நிலையில் கோபமேற்பட்டால் அது அவருடைய உடல்நிலைக்கு நல்ல தல்ல. நடந்தது நடந்துவிட்டது. அதைப்பற்றி நான் ஒன்றும் பேசப்போவதில்லை. அண்ணா சாகேப் அவர்களும்கூட ஒன்றும் சொல்லமாட்டார். கிளம்பினீர்கள் என்றால் போதும்.'

அந்த உதவியாளரின் பேச்சு முடிந்து ஐந்து நிமிடங்கள் ஆன பிறகும் அக்கா பேசவோ, அசையவோ இல்லை. அப்பொழுது உண்மையாகவே அண்ணா சாகேப் என்னும் எனது அத்திம்பேர் மேலும் அதிகமாகக் கோபங்கொண்டு, 'என்ன? இவரும், நானும் மனிதர்களாகத் தெரியவில்லையா? யாரிடமாவது பேசிக் கொண்டிருக்கிறோமா, இல்லை கழுதையாகிக் கத்திக்கொண் டிருக்கிறோமா? கிளம்பு, நட முன்னால். இல்லையென்றால், இப் பொழுது கையால் பிடித்துத் தரதரவென்று இழுத்துக்கொண்டு போவேன். இல்லையெனில், இனி உன் பெயர்கூட எனக்கு வேண்டாம். இவ்விடத்தில் கொடுத்தால் விரும்பியபடி ஆட்டம் போடலாம், வேண்டிய அளவு பணம், நகை இவற்றை விழுங்க முடியும் என்ற ஆசையில் இவர்கள் இதெல்லாம் செய்தார்கள். ஆனால், நான் ஒரு நூல் இழையைக்கூட இங்கு வைத்திருக்க உன்னை விடப்போவதில்லை. வருவதாய் இருந்தால் வா. இல்லை என்றால் எனது நகைகளைக் கீழே வை. மேலும் இவர்கள்

---

* பிர்யா என்பது கையில் விளக்கை ஏந்தி உடன் வந்திருந்த வேலையாளின் பெயர்.

முற்றிலும் . . . நகைகளைக் கைவசமாக்கிக்கொள்வதற்கென்றே இவ்வளவு கெஞ்சிக் கேட்டு . . . ஆனால், நான் மற்றக் கிழவர் களைப்போல் இல்லை, தெரியுமா? நீ இதற்குள் அதை நிச்சயம் உணர்ந்திருப்பாய். இரண்டாவது, மூன்றாவது மனைவி என்று அவளுடைய கைப்பொம்மை ஆகிவிடும் ஆள் அல்ல நான். கிளம்பு, நட முன்னால். இல்லையென்றால் அந்த நகைகள் எல்லா வற்றையும் எடு! வருவதாக இருந்தால் . . . '

'வரமாட்டேன்! வரமாட்டேன்!! வரமாட்டேன்!!!' நம்பிக்கை இழந்த நிலையில், உயிரின்மீது கருணைகொண்ட ஒரு பெண்மான் தனது கொம்புகளை நீட்டிக்கொண்டு வேடனின் மேல் பாய்வதுபோல், அக்காவின் வாயினின்றும் இந்தச் சொற்கள் வெளிப்பட, அவள் சினத்தின் பெருக்கினால் உந்தப் பட்டுச் சிறிது முன்னால் நகர்ந்தாள். சின மிகுதியினால் அவள் சீறிக்கொண்டிருந்தாள். 'வரமாட்டேன்! வரமாட்டேன்!! வரமாட்டேன்!!!' என்று மும்முறை சொல்லிய பிறகு அவள் கணப்பொழுது மௌனமானாள். பிறகு அவள் தொடர்ந்து சொல்லலானாள்: 'வீட்டில் உங்களுடைய கூத்து என்ன என்ன நடக்கிறது, உங்களுடைய தொந்தரவு என்ன என்ன இருக்கிறது என்பதெல்லாம் அம்மாவிற்குத் தெரியவேண்டாம் என்று இது வரை ஒரு வார்த்தைகூட நான் பேசவுமில்லை, பேசப்போவதாக வும் இருக்கவில்லை. ஆனால், அப்படி எங்கு நடக்கப்போகிறது? என்னுடன், அவள் உயிருக்கும் நீங்கள் துன்பத்தைக் கொடுக் காமல் எங்கு விடப்போகிறீர்கள்? ஜன்ம ஜன்மாந்தரத்தின் விரோதத்திற்குப் பழி தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றுதான் இதெல்லாம் நடந்தது. போங்கள். உங்களுக்கு வேண்டியதை யெல்லாம் செய்யுங்கள். வீட்டில் அந்தப் பாழடைந்த சூழ்நிலை, அந்த மூதேவி இருக்கும்வரை வீட்டில் அடி எடுத்து வைக்க மாட்டேன். என்னை யார் என்ன செய்கிறார்கள் என்று பார்த்து விடுகிறேன். என் கையைப் பிடித்திழுக்க யார் வருகிறார்கள் என்பதையும் பார்த்துவிடுகிறேன். இரண்டு பேர் அருகிலும் உட்கார்ந்து என்னைக் காலைப் பிடிக்கச் சொல்கிறீர்கள்? நான் அவளுடைய கால் செருப்பு என்று உங்களுக்குத் தோன்றியதா என்ன?'

இந்த விசித்திரமான வார்த்தைகளை உச்சரிக்கும்பொழுது அக்காவின் கோபம் எல்லையைக் கடந்துவிட்டது. அவள் வாயி லிருந்து அதற்குமேல் வார்த்தைகளே கிளம்பவில்லை. இடை

யருது அவள் கண்களினின்றும் நீர் வழிய ஆரம்பித்தது. அவள் கடைசி கடைசியாகச் சொன்ன வார்த்தைகளின் பொருள் அம்மாவுக்கு விளங்கியிருக்காது என்று தோன்றியது. அதைக் கேட்டதும் அவளுடைய நிலே என்ன ஆகியிருக்கும் என்பது அவ ளுக்குத்தான் தெரியும். யாரிடமுமே சண்டை போடுவதில் என்றுமே பின்வாங்காத அவள், இந்த நேரத்தில் மிகவும் தாழ்மையுடன், தனது பெண்ணேயும், மாப்பிள்ளேயையும் பார்ப்பதற்காகக்கூடக் கண்களே உயர்த்தாமல், மௌனமாக நின்றிருந்தாள். தனது பிடிவாதத்தின் பலனுகத்தான் இதைத் தான் பார்க்கவேண்டியிருக்கிறது என்று உள்ளத்தில் தோன்றிய தனுல்தான் அவள் இவ்வளவு மௌனமாகிவிட்டாளோ? தான் இச்சமயத்தில் எது பேசியும் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லே, தனது பெண், தன்னேக் காட்டிலும் கோபமும், உறுதியும் கொண்டவளாகக் காணப்படுகிருள் என்று அவள் நினேத்தாளா என்ன? அல்லது தன் மகள் இறுதியில் சொன்ன வார்த்தைகள் உண்மையாக இருக்குமாளுல், அவள் கொடுக்கும் பதிலே தகுந்த தாகும். ஆகவே தான் ஒரு வார்த்தைகூடப் பேசக்கூடாது என்று எண்ணி அவள் ஒரேயடியாக மௌனமாக நின்ருளா என்ன? அவள் ஏன் இப்படி மௌனமாக நின்ருள் என்பது எனக்குப் புரியவே யில்லே. அவள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லே.

அக்கா கோபத்தினுல் துடித்துக்கொண்டுதான் இருந்தாள். ஆளுல், அவள் எவ்வளவு பேசினுளோ, அதனுலேயே மிகவும் களேப்படைந்துவிட்டதனுலோ அல்லது வாயிலிருந்து வார்த்தை வெளிப்படாது போயிற்று என்பதனுலோ, அவள் மௌனமாக நின்ருள். அவள் மூச்சின் வேகம் மட்டும் மிக அதிகமாகி யிருந்தது.

உதவியாளர் பயந்தவண்ணம் அண்ணு சாகேப்பிடம் சொன் ஞர்: 'இப்படி ஏதாவது நடக்கும் என்று எனக்கு முன்பே தோன்றி யிருந்தது. நான் அப்பொழுதே உங்களுக்குச் சொல்லியிருந் தேன், பெண் பார்க்கவேண்டும் என்ருல் நல்ல குலத்துப் பெண்ணுகப் பார்க்கவேண்டும் என்று. ஆளுல் . . .' உதவி யாளர் இப்படிப் பேசிக்கொண்டிருந்தபொழுதே, அளவற்ற கோபத்தினுல் எனது உடலெல்லாம் படபடத்தது. நான் ஏதோ சொல்லவிருந்தேன். ஆளுல் எரியும் நெருப்பில் எண்ணெயை ஊற்றுவதுபோல், அண்ணு சாகேப்பின் பேச்சினுல் எனது உடல் நெருப்பாகிப் பொறி பறக்க எரிந்தது. அண்ணு சாகேப்பின் வாயி

லிருந்து வெளிப்பட்ட சொற்கள் இவையாகும்: 'அது உண்மை! அது உண்மை! நீங்கள் சொல்வது பொய்யல்ல. கணவனை விட்டுத் தனித்து வாழும் இந்தத் தவறான வழியைத் தாய் தொடங்கிவிட்டிருக்கும்போது, பெண் அதைத் தொடர்ந்து செல்வதில் ஆச்சரியம் என்ன?'

என் வீட்டில், என் முன்னால் நேரடியாக எனது தாயைப் பற்றி, அதுவும் இப்படிப்பட்ட மனிதர்கள் இவ்வாறு இழிவான பேச்சைப் பேசுவதா? அவர்கள்மீது பாய்ந்தாற்போல் நான் இரைந்து சொன்னேன்: 'வாயை மூடுங்கள்! உங்களைப் போன்ற கணவன் இருந்தால், அவனை விட்டுவிடத்தான் வேண்டும். என்னுடைய அக்கா நற்குலத்தவள் என்பதால், நீங்கள் வீட்டில் கடைத்தெருப் பெண்களை வரவழைத்தும்கூட அவள் சும்மா இருந்தாள். கால் செருப்பின் தூசிக்கும் இணையாகாத அப்பெண்களை வீட்டில் கொண்டுவந்து பெரும் ஆர்ப்பாட்டம் செய்து, அவர்களுடைய கால்களை அழுத்தச் சொல்லியும், மௌனமாக இருக்கும் அளவுக்கு நற்பண்பு அவள் உடலில் இல்லை என்பதே நல்லதாயிற்று. இன்று நான் அவள்மீது மிகவும் பெருமை கொள்கிறேன். இங்கிருந்து நடையைக் கட்டுங்கள், நீங்கள்! வரமாட்டாள் அவள். என்ன செய்வீர்கள் என்பதை நானும் பார்த்துவிடுகிறேன்.' இவ்வளவு சொல்லி நான் மிகுந்த செருக்குடன் அவர்களுக்கும் அக்காவுக்கும் இடையில் நின்றேன்.

அந்தச் சமயத்தில் இத்தனை திண்மை, இத்தனை பலம், இத்தனை பேச்சுத் திறமை, இவ்வளவு நாக்கு எனக்கு எங்கிருந்து வந்தன என்பது எனக்கே விளங்கவில்லை. அம்மாவும்கூட ஆச்சரியப்பட்டிருப்பாள். ஏனெனில், இன்றுவரை இந்தக் குணங்கள் என்னால் என்றுமே வெளிப்படுத்தப்பட்டிருக்கவில்லை. என்னுடைய அந்த எழுச்சியைக் கண்டு அண்ணா சாகேப்பும், அவருடைய உதவியாளரும் மிகவும் திடுக்கிட்டு நாலடி பின்சென்றார்கள். அக்காவின் எல்லா ஆவேசமும் தணிந்தது. அம்மா இருந்த இடத்திலேயே மௌனமாகி நின்றாள். நான் மட்டும் தூண்போல் நின்றிருந்தேன். அப்பொழுது அண்ணா சாகேப் அந்தச் சிறிது நேரத்திற்குள்ளேயே வெறுப்பைக் காண்பித்து அக்காவிடம் திரும்பிச் சொன்னார்: 'பின் என்ன? வரப்போவதில்லையா?'

'வரமாட்டாள்! வீட்டில் இருக்கும் அந்த அசிங்கங்களை அப்புறப்படுத்துங்கள். அப்புறம் வருவாள்.' நான் அடித்துப் பதில் சொன்னேன்.

அந்தப் பதிலுக்கு ஏற்பட்ட பலன், 'குலம் இழிவானது. தாயின் உதாரணம் மோசமானது. எழுதப் படிக்க வேறு வரும். அப்போது கணவனின் வீட்டை விட்டுவிடவேண்டும் என்று தோன்றுவதில் ஆச்சரியம் என்ன? இருக்கட்டும். இரு இப்பொழுது, கணவன் இருந்தும் விதவையாக!' இவ்வளவு பேசியதும், அவர் உடலின்மீது பாய்ந்து நான் அவரை வெளியில் உந்தித் தள்ளுவேன் என்ற பயத்தினுல்தானே என்னவோ, அண்ணு சாகேப் தாமாகவே வெளியே நடந்தார்.

## 32. துன்பங்களின் மிகுதி!

அவர்கள் போன பிறகு எவ்வளவோ நேரம் நான் கதவிற்கு வெளியில் முற்றும் பைத்தியம்போல் நின்றுகொண்டிருந்தேன். 'என்ன ஆயிற்று உங்களுக்கு?' என்று யாரோ கேட்ட வார்த்தைகள் என் காதில் விழுந்தபொழுதுதான், நான் திடுக்கிட்டு விழித்துக்கொண்டவன்போல் நினைவுக்கு வந்தேன். அவ்வாறு எங்கள் வீட்டிற்கருகிலேயே குடியிருந்த ஒரு வீட்டுக்காரர்தான் கேட்டார். மேலும், நான்கைந்து வெவ்வேறான கதவுகளின் சத்தம் கேட்கவே, நடந்த இந்த விஷயம் இரகசியமாக இருக்கவில்லை; அதற்குச் சாட்சிகளும் இருந்தனர் என்பது எனது கவனத்திற்கு வந்ததும், எனக்குச் சிறிது வருத்தமாக இருந்தது. கேள்வி கேட்டவரிடம் நான், 'ஒன்றும் இல்லை' என்று சொல்லி, பெரிய கதவைத் தாழிடுவதற்காக முன்னால் சென்றேன். உடனேயே, 'ஊர் முழுதும் தெரியும்படி விஷயங்கள் நடந்தாலும்கூட எங்களிடமிருந்து மறைத்து வைப்பார்கள்!' என்று இகழ்ச்சிகொண்டதும், இளப்பம் கலந்ததுமான வார்த்தைகள் என் காதுகளில் விழ, அதே சமயத்தில் அவ்வாறு சொன்னவரும் சட்டென்று கதவைச் சாத்தினார். அதற்கு வேறு எங்கிருந்தோ, 'இப்படித்தான் இருக்கிறது அது . . .' என்ற பதில் வந்து அந்தக் கதவும் மூடிக்கொண்டது.

அக்காவும் அம்மாவும் முன்பு இருந்த அதே நிலையில் இருந்தார்கள். அவர்களால் அணுவளவும் அசைய முடியவில்லை என்று தோன்றியது. சிறிது நேரம் நானும் அவர்கள் முன்னால் அதேபோல் அசைவற்று நின்றேன். அக்கா, அம்மா—இருவரின் மனத்திலும் என்ன நடந்துகொண்டிருந்தது என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை. அக்கா இடையறாது அழுதுகொண்டே இருந்தாள். அசையவுமில்லை, நகரவுமில்லை, ஒரு வார்த்தைகூட அவள் வாயிலிருந்து வெளிப்படவுமில்லை. நான் அவர்கள் இருவரையும் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தேன். அம்மாவின் கண்கள், கீழே தனது கால்களின் பக்கமே திரும்பியிருந்தன. அக்கா அழுதுகொண்டிருந்ததால், அவள் எங்கும்

பார்த்துக்கொண்டிருக்கவில்லை. நானும் யோசனையில் ஆழ்ந்தவனாய், அம்மாவையும் அக்காவையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தேன். குத்துவிளக்கு மினுமினுத்துக்கொண்டே எங்களில் ஒவ்வொருவர் இருப்பையும் மற்றவருக்குத் தெரிவித்துக்கொண்டிருந்தது. அதிலிருந்த எண்ணெய் எப்பொழுதோ தீர்ந்துவிட்டிருந்தது. நாங்கள் யாரும் அதைக் கவனித்திருக்கவில்லை. திடீரென்று அணைந்து போவதற்கு அடையாளமாக விளக்கின் சுடர் படபடத்தது. ஆகவே, எனது கவனம் அங்கே சென்றது. உடனே, 'அம்மா, எண்ணெய் எங்கு இருக்கிறது?' என்று சொல்லியவாறு திரியைச் சிறிது சரிப்படுத்தவேண்டும் என்பதற்காக முன்னால் சென்றேன். நான் சென்ற வேகத்தில் காற்று பட்டதனாலோ அல்லது திரி இப்பொழுது முற்றும் எண்ணெய்ப் பசையற்றதாகியது என்பதனாலோ, அது அடியோடு அணைந்து போய்விட்டது. அப்பொழுது நான் மீண்டும் தீப்பெட்டி எங்கு இருக்கிறது என்று அம்மாவைக் கேட்கவே இருந்தேன். அதற்குள் தொப்பென்று பெரும் ஒலியுடன் ஏதோ விழுந்த சத்தம் கேட்டது. கணப்பொழுதுதான் ஆகியிருக்கும்; நாலா புறமும் இருள் பரவியது. அக்கா மிகவும் பயந்து போய், 'தம்பி, தம்பி, என்னடா விழுந்தது?' என்று அழு(ம்) குரலில் கேட்டுக்கொண்டே பயத்துடன் என்னை நெருங்கினாள். நான் அம்மாவைக் கூப்பிட்டு, 'தீப்பெட்டி எங்கே இருக்கிறது?' என்று பலமாகக் கேட்டேன். ஆனால் பதில் இல்லை. அழுகுரலில் அக்கா என்னிடம் சொன்னாள்: 'ஒருவேளை அம்மாதான் விழுந்துவிட்டாளோ?' என் மனத்தில் தோன்றிய எண்ணமும் அதேதான்.

கிலியுடனும் பரபரப்புடனும் நான் இருளில் அங்குமிங்குமாக நிதானமின்றித் துழாவலானேன், தீப்பெட்டிக்காக. சிறிது நேரத்தில் மிகவும் சில்லென்று ஏதோ என் கைகளில் பட்டது. பார்த்தால் அது யாருடைய காலோ? 'அம்மாவுடையதா?' என்ற கேள்வி எவ்வளவு விரைவில் என் மனத்தில் வந்திருக்கும், தெரியுமா? மனத்தில் அந்தக் கேள்வி எழுந்து நின்றதுமே, அத்துடன் வேறு எந்தப் பயங்கரமான கேள்வியும் மனத்தில் தோன்றி உள்ளம் அதிர்ச்சி அடைந்தது தெரியுமா? இப்பொழுது எங்கு எதைத் தேடுவது என்பது ஒன்றும் எனக்கு ஓடவேயில்லை. இதயம் தடதடவென்று அடித்துக்கொள்ளத் தொடங்கியது. அதற்குள் உற்சாகம் எல்லாம் இழந்துபோன

ஒரு பிராணி தடபுடல் செய்வதுபோன்று செய்துகொண்டே நான் வீடு முழுவதும் துழாவிப் பார்த்தேன். கடைசியில் தீப்பெட்டி அகப்பட்டது. ஆனால், இப்படிப்பட்ட சமயங்களில் தவறாமல் நிகழ்வதுபோல், தீப்பெட்டி இடத்தினின்றும் அசைய வில்லை. அசைந்த பிறகு அந்தப் பாழாய்ப் போன குச்சிகள் பற்றாமற் போயின. கடைசியில் ஒன்று பற்றியதும், அம்மாவுக்கு என்ன ஆயிற்று என்று பார்க்கப் போனேன். ஆனால், அதற்குள் அது அணைந்துவிட்டது. மீண்டும் இழுத்த ஒரு குச்சி எரிய ஆரம் பித்தது. ஆனால் அது எனக்கு எவ்வளவு பயங்கரக் காட்சியைக் காண்பித்தது! அம்மா வெறும் பிணம்போல் ஆகிக் கிடந்தாள். அக்காவையோ எங்குமே காணவில்லை! இதெல்லாம் என்ன? எனக்கு அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது.

நான் மீண்டும் ஒரு தீக்குச்சியை இழுத்தேன். இப்பொழுது மனத்தைத் தைரியப்படுத்திக்கொண்டு, எங்களுடைய பெரிய எண்ணெய்ப் பாத்திரம் வைத்திருக்கும் இடத்திற்குக் குத்து விளக்கைக் கொண்டுபோய், அதில் எப்படியோ எண்ணெயை விட்டேன். அதற்குள் மீண்டும் குச்சி அணைந்தது. மறுபடியும் ஒரு குச்சியைப் பற்ற வைத்தேன்; விளக்கை ஏற்றினேன். பிறகு வெளியில் வந்தேன். அதே சமயத்தில் அக்காவும், பக்கத்தி லிருக்கும் இரு மாமிகளும் உள்ளே வந்தார்கள். பயந்து போய் அக்கா அவர்களை அழைத்துவரச் சென்றிருந்தாள் என்று தெரிய வந்தது. நான் சட்டென்று அம்மாவிடம் சென்றேன். மறுபடியும் அம்மாவின் உடலைத் தொட்டுப் பார்த்தேன். ஆனால் ஒன்றுமே இல்லை. எங்குக் கை வைத்தாலும் சில்லென்று இருந்தது. அம்மா எங்களைவிட்டுப் போய்விட்டாள் என்பது தெளிவாயிற்று. அக்கா பெரிதாக அழ ஆரம்பித்துவிட்டாள். எனக்கும் அழுகையை அடக்கமுடியவில்லை. அந்த இரண்டு மாமிகளும் எங்களுக்கு ஆறுதல் சொல்லலானார்கள். ஒரு பக்கம் நான் அம்மாவைக் கூப்பிட்டுக்கொண்டே இருந்தேன். அவளுடைய கையையும், காலையும், மார்பையும், வயிற்றையும், தலையையும், மூக்கையும் கையால் தடவித் தடவிப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் அதற்குள்ளேயே எங்களை விட்டுப் போயிருப்பாள் என்பது உண்மையெனப் படவேயில்லை. அதற்குள் அவள் ஒரு பெருமூச்சு விட்டதாக எனக்குப் பிரமை ஏற்பட்டது. இது பிரமைதானா அல்லது அதில் ஏதேனும் உண்மையும் இருந்ததா என்று எனக்குப் புரியவில்லை. அக்காவிற்கும்

இப்படித் தோன்றியதா என்று நான் அவளைக் கேட்டேன். ஆனால் மனத்துக்கு உற்சாகத்தைக் கொடுக்கும் பதில் எனக்குக் கிடைக்கவில்லை. ஆகவே, எனக்கு ஏமாற்றந்தான் ஏற்பட்டது. ஆனால், மறுபடியும் ஒரு கணப்பொழுதுகூட ஆகியிருக்கவில்லை. மீண்டும் எனக்கு அதே பிரமை ஏற்பட்டது. அது மட்டும் அல்ல. அவள் தனது காலை அசைத்ததுபோலவும் எனக்குத் தோன்றியது. பின்னர் அவள் கை அசைந்தாற் போலிருந்தது.

சமயம் வந்தது என்றால், ஆட்டிற்கு ஓநாயைப் போன்ற வீரம் ஏற்படுகிறது என்று சொல்கிறார்கள், அது பொய்யல்ல. எனக்கு அந்த நேரத்தில் வேறு யாருடைய உதவியும் இருக்கவில்லை. உதவி என்று இருப்பது அக்காவினுடையதுதான். ஆனால், அவள் அச்சமயத்தில் அம்மாவின் பிரிவினால் ஓலமிட்டு அழுது கொண்டிருந்தாள். வந்திருந்த அந்தப் பக்கத்து வீட்டுக்காரிகள் இருவரும் எனக்கு ஓர் உதவியும் செய்யாமல், அவளுக்குமட்டும் அவளுடைய அழுகையில் ஒத்தாசை செய்துகொண்டிருந் தார்கள். எனக்கு அந்தச் சமயத்தில் வருத்தத்தை ஒரு பக்கம் ஒதுக்கி வைத்து டாக்டரிடம் ஓடவேண்டும் என்ற அறிவு தோன்றியது. எனவே அந்த மாமிகளிடமும், அக்காவிடமும் அவ்வாறு சொல்லி நான் வெளியில் ஓட்டம் பிடித்தேன்.

சிவராம் பந்த் அவர்கள் வீட்டை அடைந்து, அவரையும் உடன்கொண்டு, அவருக்குத் தெரிந்த ஒரு டாக்டரை அழைத்துக் கொண்டு விரைந்து வீட்டிற்கு வந்தேன். இத்தனை நேரத் திற்குள் என்ன வேண்டுமானாலும் நடந்திருக்கலாம் என்ற அச்சம் இடையறாது மனத்தைக் கவ்விய வண்ணம் இருந்தது. தாற்காலிகமாக நம் கையால் ஏதேனும் உபாயம் செய்யப் பட்டிருக்கவேண்டும். அது எனது அறிவிற்கு எட்டாமற் போய்விட்டிருந்தது என்று ஒவ்வொரு கணமும் மனத்தில் தோன்ற, நான் தைரியம் இழந்தவன் ஆனேன். இருந்த போதிலும், நம்முடைய அம்மா இதற்குள்ளாகவே நமக்கு இல்லாதவள் ஆகிவிடுவாள் என்பது மட்டும் அணுவளவும் என் மனத்தில் உறுதிப்படவில்லை. இது முற்றிலும் நடக்கவே முடியாது என்று தோன்றியது. வீட்டை அடைந்ததும் நான் எப்படி விரைந்து நடந்தேன், என்னவெல்லாம் செய்தேன் என்பது இப்பொழுது எனக்கே தெரியவில்லை. அம்மாவின் அந்த அறையில் சென்று பார்த்தபொழுது அம்மா நினைவைப் பெற்றுத்

துடிதுடித்துக்கொண்டிருந்தாள். அதைக் கண்டதுமே எனக்கு எவ்வளவு ஆனந்தம் ஏற்பட்டது! அவள் தலையணைக்கு அருகில் அமர்ந்து அக்கா அவளிடம், 'அம்மா, அம்மா, உனக்கு என்ன செய்கிறது? நீ ஏன் தவித்துக்கொண்டிருக்கிறாய்?' என்ற கேள்விகளை அழுதுகொண்டே கேட்டுக்கொண்டிருந்தாள்.

உண்மையாகவே நான் அவற்றையெல்லாம் பார்த்து மிகுந்த ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தேன். சிறிது நேரத்திற்குள் டாக்டர் அவளைப் பரிசோதித்துப் பார்த்தார். முதலிலிருந்தே அவர் என்னிடம் எல்லா விவரமும் கேட்டிருந்தார். மேலே அவள் எங்ஙனம் விழித்துக்கொண்டாள் என்பதைப்பற்றிக் கேட்டதும், அங்குக் கூடியிருந்த அக்கம்பக்கத்து வீட்டுக்காரிகளில் புதிதான ஒருத்தி, தான் கண்களில் அஞ்சனம் கொண்ட கை விரலை நன்றாகத் தடவியதால், அவள் சிறிதே விழித்துக் கொண்டவுடன், நிறைய இஞ்சியின் ரசத்தை வாயில் விட்டதாகவும், அதனால் அவள் நன்கு விழித்துக்கொண்டதாகவும் சொன்னாள். ஆனால், இப்பொழுது விர்ரென்று சுரம் ஏறிக் கொண்டிருந்தது. அவள் நினைவு இழந்திருந்தாள். யாரேனும் கூப்பிட்டால் அவளிடமிருந்து பதிலே இல்லை. ஏதாவது சொன்னால் அவளுக்கு விளங்குகிறதா என்பதும் சந்தேகம். எல்லா விவரங்களையும் கேட்டறிந்து டாக்டர் சாகேப் தம் வழக்கப்படியே வெறுமனே 'உம், உம்' என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

எங்களுடைய கவலை மிகுந்த கேள்விகளுக்கு நேரடியாகப் பதில் கொடுக்காமல், உடனே காகிதம், மை, எழுதுகோல் இவற்றைக் கேட்டு வாங்கிக்கொண்டு, டாக்டர் ஒரு 'ப்ரிஸ்கிரிப்ஷன்' எழுதத் தொடங்கினார். என் மனத்தில் எழுந்த கேள்விகளை நான் அவரிடம் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். அவரும் வெறுமனே 'உம்', 'ஆகும் அவ்வாறு', 'செய்ய வேண்டும்', 'ஒன்றும் கேடு இல்லை' என்றவாறு பதில் சொல்லிக் கொண்டிருந்தார். கடைசியில் அவர் 'ப்ரிஸ்கிரிப்ஷன்' எழுதி முடிந்தது. உடனேயே நான், சிவராம் பந்த் இருவரும் அவர்கூட அதே வண்டியில் திரும்பிச் சென்றோம். போகும்பொழுது மறுபடியும் சிவராம்பந்த் அவர்களைக் கொண்டு அதே கேள்விகளைக் கேட்க வைத்தேன். அப்பொழுதுமட்டும் பதில்கள் கிடைத்தன. மொத்தத்தில் அவற்றின் சாராம்சம் இவ்வாறு இருந்தது: 'எல்லையற்ற கோபத்தின் பலனாகும் இது. அஞ்சனம்

போட்டிருக்காவிட்டால் அந்த அம்மாள் கைக்குக் கிடைத்திருக்க மாட்டாள். இன்னமும் அவள் கைக்குக் கிடைப்பாள் என்றும் உறுதியாகச் சொல்ல முடியாது. உள்ளிருந்து எல்லாம் சுரண்டி விட்டாற்போன்று அவள் நிலே ஆகியிருக்கிறது. மேலும், இப்பொழுது ஏறிக்கொண்டு வரும் சுரமும் நல்ல அறிகுறி இல்லே. ஏழெட்டு நாட்களில் மேலும் எவ்வளவு முறைகள் இப்படிப்பட்ட தாக்குதல்கள் ஏற்படும் என்பதைப்பற்றி நிச்சய மாக ஒன்றும் சொல்லமுடியாது. நான் இப்பொழுது மருந்தை எழுதிக் கொடுத்திருக்கிறேன். அதனுல் என்ன மாறுதல் ஏற்படு கிறது என்பதைப் பார்த்தாலொழிய உறுதியுடன் ஒன்றும் சொல்ல முடியாது. ஒரு வேளே பிழைக்கலாம், ஒரு வேளே ஏமாற்றிவிடலாம். ஆனுல், இந்த மாதிரியான நிலேயில் எப்பொழுதும் விடாது அருகில் இருந்து அவள் கவனிக்கப்பட வேண்டும். மிகவும் ஜாக்கிரதையுடன் நடந்துகொள்ளவேண்டும். இல்லே என்ருல் என்ன ஆகும் என்பதைப்பற்றி ஒன்றும் சொல்ல முடியாது.'

இதேபோல் நான்கைந்து முறை அவர் திருப்பித் திருப்பிச் சொன்னுர். அதனுல் நான் மிகவும் கலவரம் அடைந் தேன். இப்பொழுது வீட்டில் என்ன, நாங்கள் இரண்டே பேர்தான். இரண்டு பேர்களும் எத்தனே கவனித்துக்கொள்ள முடியுமோ அவ்வளவுதான். டாக்டரிடமிருந்து மருந்தை வாங்கிக்கொண்டு, அதுபற்றித் தெரிந்துகொள்ளவேண்டிய விவரங்களேயும் கேட்டறிந்து வீட்டிற்கு வந்தேன். அப்பொழுது அம்மாவின் தவிப்பு முழுதும் அடங்கியிருந்தது. அவள் காய்ச்சலினுல் மட்டும் துடிதுடித்துக்கொண்டிருந்தாள்.

கூடியிருந்த மூன்று நான்கு மாமிகளில் இப்பொழுது ஒருத்தி மட்டுந்தான் அந்த இடத்தில் மிகுந்திருந்தாள். அவள்தான் சமயோசித அறிவுடன் நடந்துகொண்டு கண்களில் அஞ்சனம் போட்டவள்; இஞ்சியின் சாற்றை ஊட்டினவள். அவள் மட்டுந் தான் இருந்தாள்; மற்றவர் யாவரும் போய்விட்டனர். நான் வந்தவுடன், அவளும் எழுந்துபோய்விட்டாள். நாங்கள் இருவரும் இருபுறத்திலும் உட்கார்ந்து இரவைக் கழித்தோம்.

டாக்டர் சொன்னபடி மருந்தெல்லாம் கொடுக்கப்பட்டுக் கொண்டிருந்தது. எப்பொழுது விடியும் என்று எங்களுக்கு ஆகி விட்டது. அம்மாவை மும்முறை கூப்பிட்டுப் பார்த்தோம், குலுக்கிப் பார்த்தோம். அசைவே இல்லே. அவளுக்கு நினேவே

இல்லை என்று தோன்றியது. அதனால் மனத்துக்குப் பயம் ஏற்பட்டது. கடைசியாகக் காலைப்பொழுது ஆக ஆக அவளது காய்ச்சல் இறங்கியது. காலையில் எட்டு, ஒன்பது மணி அளவுக்கு மேலும் குறைந்தது. அப்பொழுது எங்கள் உள்ளத்தில் சிறிது தைரியம் ஏற்பட்டது. இன்னமும் ஓரிரு மணி நேரத்தில் சுரம் அப்படியே இருந்தபோதிலும், அவள் கண்களைத் திறந்து பார்க்க ஆரம்பித்தாள். அவள் முதல் முதலில் கண்களைத் திறந்த பொழுது, அங்கு நான் தனியாகத்தான் இருந்தேன். அக்கா ஏதோ வேலை செய்யப் போயிருந்தாள். அவளை நான் உடனேயே கூப்பிட்டேன். அம்மா பார்த்தாள். ஆனால் பேச்சு ஒன்றுமே இல்லை. அன்றைய தினம் மதியப் பொழுதில் மீண்டும் முந்தின இரவைப்போல் ஒரு முறை மயக்கம் வந்தது. மறுபடியும் மை முதலியவை தடவிக் கொடுத்து அவளை நினைவிற்குக் கொண்டு வரும் முயற்சி நடந்தது. மீண்டும் காய்ச்சல் கண்டது. நான் மாமாவிற்குத் தந்தி அடித்தேன். மாமா அல்லது பாட்டி யாராவது வரும்வரை, சுந்தரியின் அம்மா எங்கள் வீட்டில் வந்து இருப்பது என்று முடிவு செய்யப்பட்டது. அவ்வாறே நடக்கவும் செய்தது. சுந்தரியும் ஓரிரு முறை வரத்தான் செய்தாள். இவ்வாறு மூன்று நாட்கள் ஆயின. முதல் நாள் நடந்தவாறே மூன்று நாட்கள்வரை நடந்தது. ஒரு நாளைக்கு இரண்டு முறை மயக்கம் வந்தது. அஞ்சனம் முதலியவற்றால் மயக்கம் தெளியும்போது அவள் கண்களைத் திறப்பதுண்டு. கண்களைத் திறந்து எங்களைச் சில விநாடிகள் பார்ப்பாள். ஆனால் பேச்சுக் கிடையாது.

எங்கள் அம்மாவின் சுபாவம் எப்படிப்பட்டதாக இருந்த போதிலும், குழந்தைகளான எங்களுக்கு வேண்டாத எவ்வளவோ காரியங்களை எங்களைச் செய்ய வைத்திருந்த போதிலும், எங்கள் இருவருக்கும் அவள்மீது அளவற்ற அன்பு இருந்தது. அதேபோல் அவள் தனது வார்த்தைகளால் என்றும் வெளிப்படுத்திக்கொண்டிருக்கவில்லை என்றாலும், பெரும்பாலும் வார்த்தைகளால் வெளிப்பட்டது உண்மைக்கு நேர்விரோத மானதாகவே காணப்பட்டபோதிலும், அவளுக்கும் என்னிடம் அளவற்ற அன்பு இருந்தது. நான் அவளிடமிருந்து தொலைவில் சென்றால், அவள் மிகவும் கலவரம் அடைந்துவிடுவாள். இந்த விஷயங்கள் எல்லாம் சமீபத்தில்தான் என் உள்ளத்தைத் தொடு வதற்கு ஆரம்பித்திருந்தன. சமீப காலமாகத்தான் சிறப்பாக

எனக்கு அவளிடம் அன்பும் ஆதரவும் ஏற்பட்டிருந்தன. எனது வருங்கால வாழ்க்கையில் எவ்வெப்பொழுது எந்தெந்த வகையில் அவளுக்குச் சுகத்தைக் கொடுக்கலாம், என்ன செய்யலாம் என்றெல்லாம் நான் எண்ணிக்கொண் டிருப்பதுண்டு. இப்படிப் பட்ட நிலையில், எங்காவது அம்மா எங்களுக்கு இல்லை என்று ஆகிவிடுவாளோ என்ற அச்சம் ஏற்பட்டபொழுது, என் இதயம் பட்ட பாட்டை விவரிப்பது சாத்தியமில்லை.

அம்மாவின் அந்த விசித்திரமான நிலை தொடர்ந்து மூன்று நாளைக்கு நீடித்தது என்பதைப்பற்றி நான் மேலே சொல்லியிருக்கிறேன். மூன்று நாளைக்கும் டாக்டர் வருவதும், மருந்து முதலியன கொடுப்பதுமாக நடந்துகொண்டிருந்தது. முதல் நாளைப்போலவே டாக்டர் எங்களுக்கு ஏதாவது பயம் காண்பிப்பதும், ஏதாவது ஆறுதல் சொல்வதுமாக இருந்தார். நான்காவது நாள்மட்டும் நாங்களே எங்களுடைய தைரியத்தை இழக்கலானோம். ஏனெனில், அம்மாவிற்கு வந்த அந்த மயக்கம் காலையிலிருந்து ஒரே நிலையில் நிலைத்திருந்தது. என்ன செய்தும் அது தெளியவில்லை. அவளுடைய உடலோ வெறும் கட்டையாகிக் கிடந்தது. அன்றைய தினம் மூன்று அல்லது நான்கு தடவைகள் நான் டாக்டரிடம் ஓடியிருப்பேன். ஓரிரு முறை அவரைக் கண்டு என்னுடன் அவரை அழைத்தும் வந்தேன். முன்போலவேதான் அவர், மிகுந்த ஜாக்கிரதையுடன் கவனித்துக்கொண்டால், அவள் இதிலிருந்தும் பிழைத்துக்கொள்வாள், இல்லை என்று யார் சொல்லமுடியும்—என்று சொன்னார். ஆனால், எனக்கு நம்பிக்கையே ஏற்படவில்லை. அக்காவோ இடையறாது ஆர்ப்பாட்டம் செய்துகொண்டிருந்தாள். சுந்தரி, சுந்தரியின் அம்மா இருவரும் அன்று வீட்டிலேயே இருந்தார்கள் (சுந்தரியின் அம்மாவோ இரண்டு மூன்று நாட்களாகவே எங்கள் வீட்டில் தான் இருந்தாள்). அவரும் மிகுந்த வேதனையடைந்து பல முறை அழுதுகொண்டிருந்தார். ஆனால், அவர் எனக்கு ஆறுதல் சொல்லிக்கொண்டும் இருந்தார். இப்பொழுது முடிந்த வரை அம்மாவைவிட்டு எழுந்து போகாமல் இருக்கவேண்டும் என்று சுந்தரியின் அம்மா எனக்குச் சொன்னார். அவர் அப்படிச் சொன்ன பிறகு எனது நம்பிக்கை முழுதும் பறந்துவிட்டது. நான் நிலைகுலைந்து அம்மாவின் தலைமாட்டில் உட்கார்ந்தேன்.

இன்று மாலைப்போது தாண்டினால் அவள் நினைவு பெறுவாள் என்று டாக்டர் எங்களிடம் சொல்லியிருந்தார். ஆகவே, நான்

மாலைப்பொழுதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். ஒவ்வொரு நிமிடத்தையும், ஒவ்வொரு கணத்தையும் எண்ணிக்கொண்டிருந்தேன். மாலைப்பொழுது தாண்டுவது மிகக் கடினம் என்று என்னவோ மனத்துக்குத் தோன்றிக்கொண்டுதான் இருந்தது. ஆனால், நம்பிக்கை, என்று, யாரை முழுதும் கைவிட்டிருக்கிறது? நான் எனது நிராசையால் நிரம்பியிருந்த உள்ளத்தில் தோன்றிய எள்ளளவு நம்பிக்கையைக் கண்டு காலத்தைத் தள்ளிக்கொண்டிருந்தேன். மெள்ள மெள்ள மாலையில் ஐந்து, ஐந்தரை, ஆறு, ஏழு அடித்தது. பயப்படும் வேளை என்னவோ கடந்துவிட்டது; குறைந்தபட்சம் கடந்துவிட்டதுபோல் தோன்றியது. நம்பிக்கை சிறிது தூண்டுதல் பெற்றது. இப்பொழுது அம்மாவை இழக்கப்போவதில்லை என்று தோன்றி, ஓரளவு மலர்ந்த முகத்துடன் ஒருவரை ஒருவர் பார்ப்பதற்காகத் தலையைச் சிறிது தூக்கினோம். அதே சமயத்தில் அம்மாவின் மயக்கம் முழுதும் தெளிந்தது. அவள் திடுக்கிட்டு விழித்துக்கொண்டவள்போல் ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கம் திரும்பியவாறு, கண்களை அகல விரித்து எங்கள் எல்லாரையும் பார்க்கத் தொடங்கினாள். ஓ! அவளுடைய அந்தக் கண்கள் இன்றும் இந்த நேரத்தில் என் முன்னால் தெரிந்துகொண்டிருக்கின்றன. அவற்றின் ஒளியற்ற தன்மையைப்போல் என்றுமே நான் கண்டதில்லை. அக்கண்களைக் கண்டதுமே எனது உள்ளம் விண்டு சென்றது. அதற்குள் அவளுக்கு எங்கிருந்து தெம்பு வந்ததோ (மூன்று நாட்களில் சோற்றின் ஒரு பருக்கையோ அல்லது பாலின் ஒரு துளி என்ன, தண்ணீரின் துளிகூட அவள் வயிற்றில் சென்றிருக்கவில்லை), அவள் கலகல என ஒலிக்கும் குரலில், 'தம்பி!' என்று சொல்லி என்னைக் கூப்பிட்டாள். உடனேயே நான், 'என்ன?' என்று கேட்கவே இருந்தேன். அதற்குள்ளேயே அவள் தடால் என்று கீழே விழுந்தாள். நான் சட்டென்று அவளைத் தாங்கினேன். ஆனால் ஒன்றும் இல்லை. அவளுடைய வீரம் எல்லாம் கரைந்து சென்று, அவள் செயலற்று விழுந்தாள். அவள் ஏதோ பேசுவதற்கு முயன்றுகொண்டிருப்பதாக மட்டும் எனக்குத் தோன்றியது. அதனால் அவளுடைய வாயின் அருகில் நான் காதைக் கொண்டு போனேன். அப்பொழுது 'தம்பி, தம்பி, அவளை விட்டுக் கொடுக்காதே. அவள் ஒரேயடியாக . . . விட்டுக் கொடுத்தாயே! ஆனால் . . . அமங்கலம் . . . தோன்றியபடி செய் . . .' இவ்வாறு துண்டித்த சொற்கள் எனக்குக் கேட்டன. அதற்குப் பின்னர் பதினைந்து, இருபது நிமிடங்களில் நாங்கள் இருவரும் தாயற்றவர்கள் ஆனோம்.

# 33. இனி மேற்கொண்டு!

நன்கு எரிந்துகொண்டிருக்கும் தீப்பந்தத்தின் வெளிச்சத்தைக் கொண்டு காட்டினுள் சென்றுகொண்டிருக்கும் பொழுது, இடையிலேயே திடீரென்று எதிர்பார்க்காத சமயத்தில் அந்தத் தீப்பந்தம் காற்றின் வேகத்தினுல் அணைந்துபோய் இங்கும் அங்குமாக எங்குப் பார்த்தாலும் இருள், பெரும் காரிருள் பரவிவிடுவதுபோல் எங்கள் நிலை ஆயிற்று. குழந்தைப் பருவத்திலிருந்தே எங்கள் எல்லாருடைய வாழ்க்கைத் தொடர்ச்சியும் வெறும் முள்ளும் புதரும் நிறைந்ததும், புலி, ஓநாய் முதலிய கொடூரமான விலங்குகளினுல் சூழப்பட்டதும், பாம்பு முதலான பொல்லாத பிராணிகளினுல் பயங்கரமாக ஆக்கப்பட்டதுமான ஜன நடமாட்டமற்ற காட்டினூடே செய்யப்பட்ட பிரயாணம்போல் இருந்தது என்பது வாசகர்களுக்குத் தெரிந்ததுதான். இப்படிப்பட்ட பயங்கரமானதும் மக்கள் நடமாட்டமற்றதுமான காட்டின் வழியே தனது அசைக்க முடியாத நம்பிக்கையின் ஒளியினுல், ஒரு தீப்பந்தத்தைப்போல, எங்களைப் பாதுகாப்புடன் அழைத்துச் செல்ல எங்கள் அம்மா உதவினுள்.

எப்பொழுதாயினும் எங்களுக்கு மிகவும் இன்னல் ஏற்படுவதுபோல் தோன்றினுலும்கூட, அந்த ஒளியினுல்தான் எங்களுடைய இந்நாள் வரையிலான பாதுகாப்பு ஏற்பட்டது என்பதிலும் சந்தேகமில்லை. அந்த எங்களுடைய தீப்பந்தம் இன்று திடீரென்று அணைந்துவிட்டது. அது மிகவும் வேண்டிய சரியான சமயத்தில் எங்களைப் பயங்கரமான நிலையில் தள்ளிவிட்டது. இன்றுவரை எங்களுடைய நாட்கள் எல்லா விதங்களிலும் சுகத்தில் கழிந்தன என்பது இல்லை. பெரும்பாலும் அவை மிகுந்த துன்பத்தில்தான் கழிந்தன என்றே சொன்னுலும் பொருந்தும். ஆனுல், அவற்றுக்கு இடையில் அவளுடைய தனிப்பட்ட உறுதியினுல் எந்த ஒரு சிறப்பு தலைதூக்கி நின்றதோ, அது மற்ற எல்லா விஷயங்களையும் மறைத்துவிடும் தன்மை கொண்டதாக இருந்தது. எங்களுடைய அம்மா இருக்

கிருள் என்ருல் எல்லாம் உண்டு என்று எங்களுக்குச் சமீபகால மாகத் தோன்றிக்கொண்டிருந்தது. அவள்தான் எங்களுடைய ஆதாரம்; அவள்தான் எங்களுடைய புகலிடம் என்ற எண்ணம் தோன்றிக்கொண்டிருந்தது. தன் மனத்துக்குப் பிடிக்காத காரியங்களும் நடக்கின்றன என்பதனுல் எவ்வாறு அவள் வீட்டில் இருப்போர் யாரையும் என்றுமே பொருட்படுத்தாமல் இருந் தாளோ, அதுபோலவே அவள் ஊராரைப் பொருட்படுத்தாமல் சில காரியங்களை எனது விருப்பப்படி என்னைச் செய்யவிட்டிருப் பாள் அல்லது அக்காவின் இன்பத்திற்காக அவள் ஏதேனும் வழி செய்திருப்பாள். அக்காவைப்பற்றி அவளுக்கு என்ன தோன்றிக்கொண்டிருந்தது என்பது அவள் இறக்கும்போது சொன்ன சொற்களினுல் தெளிவாகத் தெரியவந்தது. அவளைச் சிறிதளவு விட்டுக் கொடுத்தாலும்கூட எனக்குத் தீங்கு ஏற்படும் என்று என்னிடம் அவள் தெளிவாகச் சொல்லியிருந்தாள்.

எனவே, இவ்விஷயத்தில் எனக்குத் தோன்றியபடிதான் அவளுக்குத் தோன்றத் தொடங்கியிருந்தது என்பதில் சந்தேக மில்லை. இல்லையென்ருல் அவளுடைய முடிவு இவ்வாறு ஏற்பட் டிருக்காது. மேலும் முடிவுக் காலத்தில் அவள் வாயிலிருந்து இப்படிப்பட்ட சொற்களும் வெளிப்பட்டிருக்கமாட்டா. இவ்வாருன சொற்கள் அவளிடமிருந்து வெளிப்பட்டு அவள் உயிர் பிரிந்து சென்ற சமயத்தில் நான் அவள் தலைமீது கை வைத்து இவ்வாறு உறுதி செய்துகொண்டேன்: 'அம்மா, அக்காவை நான் அணுவளவும் விட்டுக்கொடுக்கமாட்டேன். இவ்வளவே அல்ல; அவளுடைய இன்பத்திற்காக உடலால், பேச்சால், உள்ளத்தால் தாமதமின்றிச் செயல்பட முனைவேன். மேலும், என்னைவிட்டு அகன்று செல்ல அவளை என்றுமே விடப் போவதில்லை. பிச்சை வாங்கி வயிற்றை நிரப்பும் நிலை வந்தாலும்கூட வாங்குவேன். ஆனுல் அவளை என்னருகில் வைத்துக்கொண்டு அவள், நான் ஆகிய இருவரின் வயிற்றையும் நிரப்புவேன். மேலும், அம்மா, நீ உனது எண்ணத்தைச் செயலாக்குவதில் இன்றுவரை எவ்வாறு என்றுமே யாருக்கும் தோற்றுவிடவில்லையோ, எவ்வாறு யாருக்கும் அடிபணிய வில்லையோ, அதேபோல் நானும் வீட்டில் அல்லது வெளியில் இருக்கும் எந்த மனிதரையும் பொருட்படுத்தாமல் உன்னைப் போலவே உண்மையான வழியில் நடந்துகொள்வேன். இதற்கு நீயேதான் சாட்சி! இதை உன்மீதே ஆணையிடுகிறேன்!'

அம்மாவின் பிணம் முன்னுல் கிடந்தது. நான் எனது வலது கையை அவளது குளிர்ந்து போன, அந்த நேரத்தில் திடீரெனத் தோன்றிய வேர்வைத் துளிகளால் நனைந்திருந்த நெற்றியில் வைத்தவண்ணம், கண்களினின்றும் இடையருது கண்ணீர் பெருக்கியவாறு அமர்ந்திருந்த அந்தப் பயங்கர நிலை இப்பொழுதும் தத்ரூபமாக என் கண்களின் முன்னுல் நின்று கொண்டிருக்கிறது.

மேற்கூறியவாறு சபதம் செய்ய என்னுல் முடியும் என்று அந்தக் காரியம் நிறைவேறுவதற்கு இரண்டு நிமிடங்களுக்கு முன்புகூட யாராவது என்னிடம் சொல்லியிருந்தால், அதை நான் உண்மை யெனக் கொண்டிருக்கமாட்டேன். ஆனுல், அந்தக் கணத்தில் அது நடந்தது. அது நடந்தவுடனேயே—அது வெறும் பிரமை யாகத்தான் இருந்ததா, இல்லை எனது அம்மாவின் ஆத்மாவிற்கு எனது மனத்தின் சபதம் தெரிந்துதான் அவ்வாறு நேர்ந்ததோ—யார் அறிவார்? ஆனுல், அவளுடைய உயிரற்ற முகத்தின்மீது படிந்திருந்த துன்பமயமான களை முற்றும் மறைந்து, ஆறுதல் அடைந்த தன்மையின் களை பரவியது. திடீரென்று அவளுடைய தோற்றம் மாறியது. இறக்கும் சமயத்தில் அவள் உள்ளத்தில் இருந்த கவலை நீங்கிவிட்டதுபோல் தோன்றியதா, என்ன? மனம் கொண்ட ஆறுதலினுல் முகத்தில் தென்படும் புன்னகையும் மின்னலாயிற்ரு, என்ன? ஆமாம். குறைந்தபட்சம் எனது உள்ளம் அவ்வாறு என் முன்னுல் தோன்றச் செய்தது. அவளுடைய கவலை தோய்ந்த தோற்றம், ஆறுதல் தழுவிய தோற்றமாக மாறியது. கவலையின் சோகம் மறைந்து ஆறுதலின் புன்முறுவல் தெளிவாகத் தென்படலாயிற்று. அது ஒரே கணந்தான். ஆனுல் அந்த ஒரு கணம் எனது வாழ்வில் முக்கியமான ஒரு மாறுதலுக்குக் காரணமாகி, இன்றுவரை இருந்த எனது சிறு பிள்ளைத்தனமும், இன்றுவரை இருந்த எனது மனத்தின் பலவீனமும் திடீரென்று என்னை விட்டுச் செல்லவே, நான் மிகவும் தீரம் கொண்டவன் ஆனேன். 'எப்படிப்பட்ட துன்பங்கள் வந்தாலும் நாம் தலை நிமிர்ந்து நின்று அதை எதிர்ப்போம். அச்சம் அடையப் போவதில்லை' என்று உறுதியாக எனக்குத் தோன்றலாயிற்று.

அம்மாவின் அந்த உயிர்க் களை இழந்த முகத்தின்மீது ஆறுதல் குறியைக் கண்டவுடனேயே, எனது செயலால் எனக்கு ஆறுதல் ஏற்பட்டது. அம்மாவை இழந்துவிட்டபோதிலும், அவள் மனத்துக்கு மிகுந்த சமாதானம் ஏற்படும் வகையில் நாம்

நடந்துகொண்டோம் என்று தோன்றி அவ்வளவுக்கவ்வளவு மனம் மகிழ்ந்தது. எனது கண்ணீர் முற்றும் வற்றியது. இப்பொழுது கண்களில் சிறிதளவும் கண்ணீர் இருக்கவில்லை. நடந்து போனது திரும்பி வரப்போவதில்லை என்ற வேதாந்தம் எனது இளம் உள்ளத்தில் அந்த நேரத்தில் வரத்தொடங்கியது. ஆகவே, நான் மற்ற எல்லாவற்றையும் ஓரிடத்தில் ஒதுக்கித் தள்ளி, அலறிக்கொண்டிருந்த அக்காவிற்கு ஆறுதல் கூற முற்பட்டேன்.

அங்கிருந்த மற்ற எல்லோருக்கும் நான் சிறிதும் கருணையற்ற பிராணியாக, அம்மாவின் இறப்பினுல் சிறிதும் பாதிக்கப்படாதவனுக அப்போது தோன்றியிருப்பேன். என்னைப் போன்றவனின் உள்ளத்தின் ஆழத்தில் இருக்கும் அன்பும், சோகமும் சாதாரண மனிதர்களுக்கு என்ன தெரியப்போகிறது? ஓலமிட்டு அழுவது, மிகுந்த பரிதாபகரமான சொற்களைச் சொல்வது, இடையருது தலையில் அடித்துக்கொள்வது முதலான வெளிப்படைக் காரியங்களில்தான் அந்த உண்மை அன்பும், உண்மைச் சோகமும் இருக்கிறது என்று எப்பொழுதும் நினைப்பவர்களுக்கு, என்னைப் போன்றவனின் மிகவும் ஆழ்ந்த வருத்தமும், மிகவும் தாராளமான அன்பும் என்ன புரியப்போகிறது? அல்லது எனது சித்தத்தில் எழுந்த ஒரு விசித்திரமான உறுதியின் காரணமாக எனது நடவடிக்கையில் திடீரென்று ஏற்பட்ட மாறுதல் மேலாகப் பார்க்கும் சாதாரண தரத்தைச் சேர்ந்த மனிதர்களுக்கு வேறு உருவத்தில் காணப்பட்டிருந்தால், அதில் வியப்பு அடைவதற்கு என்ன இருக்கிறது?

ஓர் அம்மாளின் வாயிலிருந்து நான் இச்சொற்களைக் கேட்டேன்: 'என்ன பிள்ளைங்க இவன்! கண்ணெதிரில் அம்மா இறந்து போனுள். எனினும் இந்தப் பிள்ளைக்குச் சிறிதளவும் வருத்தம் ஏற்படவில்லை.' உடனேயே அதைக் கேட்டவர்களும் அதை ஆமோதித்தார்கள். அந்தச் சொற்கள் தெளிவாக என் காதில் விழுந்தன. அதைக் கேட்டதும் மனத்திற்கு வருத்தமாக இருப்பது ஒரு பக்கம் இருக்க, அதற்கெதிராக எனக்குச் சிரிப்புத் தான் வந்தது.

மாமா வந்திருந்தார். அவர் அக்காவிடம், முதலில் தன் வீட்டிற்குச் சென்று நடந்துபோனவற்றிற்காக மன்னிப்புக் கேட்டுக் கணவனுடன் சேர்ந்திருக்கும்படி சொன்னுர். அது அவளுக்கு ஏற்கவில்லை. மேலும் அவளைவிட எனக்குக் கொஞ்

சமும் ஏற்கவில்லை. அவ்வாறு மாமா சொன்னபொழுது, எனது உடலெல்லாம் கோபத்தால் துடித்தது. மீண்டும் தோன்றியது, அம்மா இருந்திருந்தால் இப்படிப்பட்ட நிகழ்ச்சி எங்களுக்கு ஏன் ஏற்படுகிறது? ஆம். நமது சபதத்தின்படி நடந்துகொள்ள வேண்டும். நமது உறுதியைக் காண்பித்துக்கொள்ள இதுதான் முதல் வாய்ப்பு. இந்த நேரத்தில் தயங்கக்கூடாது. இந்த எண்ணம் மனத்தில் தோன்றியதும், உடனேயே நான் அவரிடம் சொன்னேன்: 'என்ன, அந்தக் கெட்ட பழக்கங்களைக் கொண்ட அமங்கலமான கிழவனின் காலில் விழுந்து அவன் மன்னிப்பைக் கேட்டு, வீட்டில் அவன் கொணர்ந்த மூதேவிக்குப் பணிபுரிந்து வயிற்றுப் பிழைப்பை நடத்த அவளுக்குச் சொல்கிறீர்களா? மாமா, பிச்சை வாங்கும் வேலை வந்தால்கூட அதை ஏற்றுக் கொள்வேன். ஆனால் எனது அக்காவை நான் இனித் திருப்பி அனுப்பப் போவதில்லை. அங்கு அவள் எத்தனை பாடுபடுத்தப் படுகிறாள் என்பதை யாராலும் கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாது. அந்தக் கிழவன் எவ்வளவு பாவியாக இருக்கிறான் என்று உங்களுக்கு என்ன தெரியும்? அன்று இரவு நீங்கள் இருந்து, நடந்தவற்றையெல்லாம் நேராகப் பார்த்திருந்தால் உங்களுக்கு எல்லாம் புரிந்திருக்கும். அந்தத் துஷ்டனின் பொல்லாத்தன மான நடத்தையினால்தான் இன்று எங்களுக்கு, எங்களுடைய அம்மா இல்லாது போனாள். அவனுடைய இழிவான சொற் களைக் கேட்டுத்தான் அவளுக்கு அளவற்ற கோபம் ஏற்பட்டது. அதன் விளைவாக எங்களை அநாதை ஆக்கிச் சென்று விட்டாள். அவளுடைய குலத்தைப்பற்றியும், குணத்தைப் பற்றியும் கன்னா பின்னா என்று அவன் பேசினான். அப்படி யிருந்தும் அவன் வீட்டிற்கு நீங்கள் மறுபடியும் அவளை அனுப்பு கிறீர்களா? '

மேற்கொண்டு என்னால் பேசமுடியவில்லை. இந்தப் பேச்சுத் திறமையும், இந்த முழுப் பிரவாகமும் எங்கிருந்து தூண்டப் பட்டு என் வாயில் வந்தன என்பதைப்பற்றி எனக்கே வியப்புத் தோன்றும் வண்ணம் நடந்தது. மாமாவிற்கும், அந்தச் சமயத்தில் அங்கு இருந்த சிவராம் பந்த் அவர்களுக்கும் நான் உணர்ச்சிவசப்பட்டதைக் கண்டு மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது போல் தோன்றியது. மாமாவோ கண்களை அகல விரித்து என்னைப் பார்க்கலானார். பேசுவது நான்தானா என்று வியப்பது போல, நான் அடித்துப் பேசிக்கொண்டே இருந்தேன். இடை

யிடையே அக்கா, சிவராம் பந்த் ஆகிய இருவரின் முகத்தை யும் பார்த்துக்கொண்டிருந்தேன். என் பேச்சைக் கேட்டு அக்காவின் மனத்துக்கு மிகுந்த சமாதானம் ஏற்பட்ட அறிகுறி அவள் முகத்தில் காணப்பட்டது. சிவராம் பந்த் அவர் களுங்கூடச் சிறிது சமாதானப்பட்டதாகவே காணப்பட்டார். ஆனால் மற்றவர்களுக்கு அந்தச் சமயத்தில் நான் ஓர் அதிகப் பிரசங்கியைப் போல்தான் காணப்பட்டிருப்பேன்.

# 34. ஆலோசனை தீவிரமாக நடந்தது

அன்றைய நாள் வரை எனது நிலையைக் குறித்து எனக்கு என்றும் வருத்தம் ஏற்பட்டிருக்கவில்லை. ஆனால், மாமாவின் அந்தப் பேச்சைக் கேட்டவுடன் என்னுடைய கதியற்ற நிலைபற்றியும், திறமையற்றுப்போன தன்மைபற்றியும் அளவற்ற வருத்தம் ஏற்பட்டது. மாமாவிடம் மேற்கூறியவாறு சொல்லி நான் அங்கிருந்து எழுந்து போய்விட்டேன். தனித்து ஓரிடத்தில் போய் உட்கார்ந்து தொடர்ந்து உள்ளத்திலேயே யோசித்தவாறு இருந்தேன். அந்தச் சமயத்தில் எனது உள்ளத்தில் தோன்றிய மிக விசித்திரமானதும் வருத்தத்தில் தோய்ந்ததுமான எண்ணங்களைப் போல் இதற்கு முன்பு என்றுமே என் மனத்தில் எழுந்ததாக எனக்கு நினைவு இல்லை. எனது ஏழ்மையைப்பற்றி, எனது இள வயதைப்பற்றி, எனது பரீட்சை முதலியன இன்னமும் முடிவுறாததுபற்றி, . . . ஒன்று, இரண்டா? ஆயிரக்கணக்கான விஷயங்களைப்பற்றி எனக்கு வருத்தம் ஏற்பட்டது. என் கைக்குட் படாதிருக்கும் விஷயங்களைப்பற்றியும்கூட எனக்கு வருத்தம் ஏற்பட்டது. ஆனால், வெறுமனே வருத்தப்படுவதால் என்ன பயன்? இனி மேற்கொண்டு என்ன? இந்தக் கேள்வி பளிச் சென்று தெளிவாக என் முன்னால் தோன்றியது.

இப்படிப்பட்ட எண்ணங்களில் மூழ்கியவாறு நான் தனியாக ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தேன். அந்தச் சமயத்தில் திடீரென்று பின்புறத்திலிருந்து, 'தம்பி, தம்பி!' என்று மென்மையும், கருணையும் கலந்த குரலில் யாரோ என்னைக் கூப்பிட்டார்கள். நான் திரும்பிப் பார்த்தபொழுது, அங்கு வேறு யாரும் இன்றி எனது அக்காதான் இருந்தாள். அந்த நேரத்தில் அவளைப் பார்த்ததும் என் வேதனை மேலும் அதிகமாயிற்று. அவள் அந்தச் சமயத்தில் எவ்வளவு பரிதாபகரமாகக் காணப்பட்டாள். குழந்தைப் பருவத்தில் மிகவும் திடமான உடல் கட்டுடன் துருதுரு என்று இருந்த என்னுடைய அக்கா நாளுக்கு நாள் எப்படி இளைத்துத் துரும்பாகிவிட்டிருந்தாள்! இதைப்பற்றி யாருக்கும் கற்பனை கூடச் செய்து பார்க்கமுடியாது. மொத்தத்தில் விஷயம் என்ன

என்றால், அம்மாவின் உடல் நிலை குன்றியது முதற்கொண்டு இன்றுவரை அவள் எவ்வளவு வாடி வதங்கிப் போனாளோ, அவ்வளவு அதற்கு முற்பட்ட ஓரிரண்டு ஆண்டுகளிலும் வாடியிருக்க மாட்டாள். அவளைப் பார்த்ததுமே எனது உள்ளத்தில் மிகவும் பயங்கரமான ஓர் எண்ணம் உதித்தது. அந்த எண்ணம் மனத்தில் எழுந்தவுடனேயே நான் மிகுந்த அச்சம் அடைந்தேன்.

அக்கா சீக்கிரமே அம்மாவைப் பின்தொடர்ந்து செல்லப் போகிறாளா என்ன? நாளுக்கு நாள் அவள் இப்படியே இளைத்துக் கொண்டு போகப்போகிறாளா என்ன? இவ்வாறு தேய்ந்து கொண்டே போனால் அவள் முடிவு என்ன ஆகும்? இந்தக் கேள்விகள் மனத்தில் தோன்றியவுடனேயே, எனக்கு அவை யாவும் அப்படியே நடக்கப் போகிறது என்று தோன்றலாயிற்று. இல்லை, அப்படியே நடந்துவிட்டாற்போல் எனது கண்களுக்கு முன் தென்படலாயிற்று. அம்மாவின் இறுதிக் காலத்தின் அந்த எல்லாக் காட்சிகளும் மீண்டும் என் முன்னால் நின்றன. அம்மாவின் இடத்தில் இப்போது அக்கா தெரிந்தாள். எனது உள்ளம் எவ்வளவு பக்குவம் இன்றியும், பலவீனமாகவும் இருந்தது.

அவள் சிறிது நேரம் மௌனமாக நின்று, முன்னைவிடத் தழுதழுத்த குரலில் என்னிடம் சொன்னாள்: 'தம்பி, தம்பி! ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? நான் எனது பாரத்தை உன்மீது போடமாட்டேன். மாமா சொன்னபடி நான் போகிறேன். பூர்வ வாழ்க்கையில் செய்த பாவங்களுக்கு ஈடாக என்னவெல்லாம் தொல்லைகளைப் பொறுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறதோ, அவ்வளவையும் பொறுத்துக்கொண்டு மிகுந்திருக்கும் கடைசி நான்கைந்து மாதங்களைக் கழித்துவிடுகிறேன். நீ என்னைப்பற்றி அடியோடு கவலைப்படாதே!' நான் இதைக் கேட்டதும் கண்ணீர் பொழிந்த வண்ணம் சொன்னேன்: 'அக்கா, அக்கா! நீ என்ன சொல்லிக்கொண்டிருக்கிறாய்? உனக்கு மீண்டும் இப் பொழுது . . .'

ஆனால் அவள் என்னை மேலே பேசவிடவில்லை. தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே, மிகவும் அமைதியோடு சொன்னாள்: 'தம்பி, மாமா இப்பொழுது உன்னிடம் சொன்னதை நான் கேட்டேன். இப்பொழுது என் தலையில் இப்படித்தான் ஏதாவது விடியும் என்பதைப்பற்றி முன்பே நான் கனவு கண்டிருந்தேன். தம்பி, மாமா சொன்னபடி செய்யவில்லை

என்ருல், நாம் நம்மை எப்படிக் காப்பாற்றிக்கொள்ளப் போகிருேம்? நாம் இதுவரை முற்றும் அவரை நம்பியிருந்தோம். இன்றுவரை நமக்கு அம்மாவின் பெரிய ஆதாரம் இருந்தது. அவள் இருந்தால் . . .? ஆனுல் இப்பொழுது அதைப்பற்றிப் பேசி என்ன பயன்? இப்பொழுது நமக்கு அவரை நம்பித்தான் இருக்க வேண்டும் என்ருல், அவர் சொன்னபடி நடந்துகொள்ளத்தான் வேண்டும். அவர் பேச்சைக் கேட்காமல் நமது காலம் எப்படியப்பா நடக்கப் போகிறது?'

'சட்டென்று வழி கிடைக்கும்!' நான் உடனடியாக அவளிடம் சொன்னேன்: 'வழி அமைத்துக்கொள்ளவேண்டும் என்று உறுதி கொண்டால், உடனேயே வழி ஏற்படும்!'

'தம்பி, இன்னும் உனது முழுப் படிப்பும் முடியவேண்டியிருக்கிறது. மாமாவின் சொற்படி நடக்கவில்லை என்ருல், மாமாவிடம் சண்டை போட்டுக்கொண்டோம் என்ருல், அவர் விருப்பத்திற்கு எதிராகக் காரியம் செய்தோம் என்ருல், அவர் என்னவென்று நமக்கு உதவி செய்வார்? என்னவென்று நம்மை வளர்த்துவார்?'

'நம்மைப் பார்த்துக்கொள்ளவில்லை என்ருல் வேண்டாம்! இன்றே எனக்கு எங்கேயாவது ஓரிடம் தேடிக்கொள்ள வேண்டிவரும், அவ்வளவுதானே? நான் தேடுவேன். ஆனுல், என் சபதத்தை நான் மீறப்போவதில்லை. என்ன ஆனுலும் நான் உன்னை விட்டுக் கொடுக்கப் போவதில்லை. அதுமட்டும் அல்ல; இப்பொழுது உன்னைவிட்டு நான் எங்கும் தனியாக இருக்கப் போவதில்லை. ஊரார் சிரிக்கட்டும், திட்டட்டும், என்ன வேண்டுமென்ருலும் நடக்கட்டும். ஆனுல் நான் இட்ட ஆணையை முக்காலத்திலும் மீறப்போவதில்லை. அதிகமாகப் போனுல், பி.ஏ., எம்.ஏ. ஆகப்போவதில்லை. மேலும் நூற்றுக்கணக்கான ரூபாய் கிடைக்கப் போவதில்லை, அவ்வளவுதானே? கிடைக்கவில்லை என்ருல் ரொம்ப நல்லதாகப் போயிற்று! ஏதோ ஐந்து பத்து என்று கிடைத்தால், அதைக் கொண்டே வயிற்றை நிரப்பிக் கொள்ளுவோம். நான்கைந்து மாதங்கள் முயற்சி செய்தால் எங்கேயாவது வேலை கிடைக்கும். ஆனுல் அக்கா, செய்த சபதத்தை மறந்து, இன்று உன்னை மறுபடியும் அந்த இழிவான நிலைக்குப் போகச் செய்தால் . . .'

மேற்கூறிய பேச்சு நடந்துகொண்டிருக்கும்பொழுது 'செய்த சபதம்', 'செய்த சபதம்' என்ற வார்த்தைகளைச் சொல்லும்

பொழுதெல்லாம் அக்கா ஒரு விசித்திரமான முகபாவத்துடன் என்னைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுக்கு அந்தச் சொற்களின் பொருளே விளங்கவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது. பெரிய மகத்துவத்தைக் கொண்டதும், கம்பீரமானதுமான பேச்சு நடந்து கொண்டிருக்கும்பொழுதும்கூட அவளுடைய அந்தக் கலவரம் அடைந்த தோற்றத்தோடு பார்க்கும் முறை வேடிக்கையாகத் தோன்றியது.

சிறிது நேரத்தில் நான் அக்காவிடம் சொன்னேன்: 'அக்கா, அம்மா இருந்தபொழுது நமக்குப் பணம் அனுப்பிக்கொண்டு வந்தபடியே இப்பொழுதும் மாமா கொடுத்தாரேயானால் மிகவும் நல்லதாயிற்று. நான்கு நாட்களுக்காக உன்னை அவர் தன்னிடத்திற்கு அழைத்துச் செல்கிறேன் என்று சொன்னால், இப்போதைக்கு நாம் அதற்கு ஒத்துக்கொள்வோம். இதற்கு மேலும் அவர் தமது பழைய பிடிவாதத்தைப் பிடித்தாரென்றால், நமது வழியை நாமே செய்துகொள்ள வேண்டிவரும். அம்மாவின் மறைவினால் வேறு வழியின்றி, இப்பொழுது நீ திரும்பிச் செல்வாயே ஆனால், உனக்கு எவ்வளவு தொல்லையும், எவ்வளவு அவமானமும் ஏற்படும் என்பதைப்பற்றி உனக்குக் கற்பனை உண்டா? இவளுக்கு இனி எங்கும் புகலிடம் இல்லை என்று உன் கணவனுக்குத் தோன்றும். அவன் எவ்வளவு மோசமாக நடத்தினாலும், வாசற்படியைத் தாண்டி வெளியில் செல்லமுடியாது. அந்த மோசக்காரன் சமயம் கிடைத்தபொழுது பாய்ந்து உன்னை அடிக்கக் கூடத் தயங்கமாட்டான். நீ தானாகவே வம்பில் விழாதே. இருக்கும் நிலையில் எவ்வளவோ காரியம் செய்து, பெருந்தன்மையோடு நல்லபடியாக நாம் இருப்போம். நீ ஏன் இவ்வாறு கவலைப் படுகிறாய்? வறுமையில் வாழவேண்டிவரும், அவ்வளவுதானே? ம்! அதனால் என்ன ஆயிற்று?'

நான் இவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது அக்கா மௌனமாகத் தலைகுனிந்தவண்ணம் நின்றுகொண்டிருந்தவள், இடையில் சொன்னாள்: 'தம்பி, என் மனத்தில் ஓர் எண்ணம் தோன்றியிருக்கிறது. ஒருவேளை மாமா என்னை அழைத்துச் செல்லவில்லை என்றால் . . .'

ஆனால், மாமா அதற்குள் எங்கள் இருவரையும் கூப்பிட்டார்.

# 35. அக்காவும் நானும் பிரிதல்

நானும் அக்காவும் அருகில் சென்றவுடனேயே, மாமா என்னைப் பார்த்து மிகவும் கசிவுடன் சொன்னார்: 'தம்பி, பின் நீ என்ன முடிவு செய்தாய்? மகனே, கணவனைவிட்டு மனைவி பிரிந்து இருப்பது நல்லது அல்ல. அது இருக்கட்டும். அதைப்பற்றி இப்போதே என்ன? இப்போதைக்கு நான் இவளை என்னுடன் அழைத்துச் செல்கிறேன். நீ இங்கேதான் இருக்கவேண்டும். முன்போலவே என்னால் முடிந்தவரை நான் உன்னைக் கவனித்துக் கொள்கிறேன். நீ உனது படிப்பில் ஒரு குறையும் வைக்காதே. அப்படிக் குறை வைக்கமாட்டாய் என்று எனக்கு நம்பிக்கை உண்டு. இன்றுவரை உன்னுடைய படிப்பைப் பொறுத்தவரை எனக்கு உன்னிடம் ஒரு குற்றச்சாட்டும் இல்லை. குழந்தைகளே, எனக்கு ஒரே சகோதரிதான். அவள் எத்தனை பிடிவாதக்காரி யாக, எத்தனை பொல்லாத குணம் உடையவளாக இருந்த போதிலும், அவளிடம் எனக்கு எத்தனை அன்பு இருந்தது என்பது உங்களுக்குத் தெரிந்ததுதான். என்னுடைய உடலில் உயிர் இருக்கும்வரை நான் என்றும் அவளை விட்டுக் கொடுத் திருக்கமாட்டேன். அவளைக் கைவிடவும் இல்லை என்பதும் உங்களுக்குத் தெரியும். அவளுடையது என்று நீங்கள் இரண்டு பேர்தான். அவள் இன்று இல்லை என்று ஆகிவிட்டாள். நான் உள்ளத்தில் பகைமை கொண்டவன் ஆனேன் என்பதாகத் தோன்றியதை அறிந்து எனக்கு எவ்வளவு வருத்தமாக இருக் கிறது? அம்மாவின் நிலை என்ன ஆகியிருக்கும் என்பதைப்பற்றி நினைத்துக்கூடப் பார்க்கமுடியவில்லை. இப்பொழுது எங்களுக்கு அவள் ஞாபகமாக நீங்கள் இருவருந்தான். அப்படி இருக்க, நான் உங்களைக் கைவிட்டுவிடுவேன் என்று உங்களுக்குத் தோன்றியதா? ஆனால், இவள் தன் வீட்டில் சுகமாகப் பொருந்த வேண்டும் என்று எண்ணித்தான் நான் அவளைத் திரும்பிப் போ என்று சொன்னேன். நீ சொல்வது போன்ற நிலைமை இருந்தால், நான் வற்புறுத்தமாட்டேன். நான் அவளை என்னுடன் அழைத் துச் செல்கிறேன். மகளே! உன்னுடைய அம்மாவைப்போலவே நான் உன்னை நடத்துவேன், தெரிந்ததா? அவளுடைய . . .'

மாமாவின் வாயிலிருந்து மேற்கொண்டு வார்த்தைகள் கிளம்பவில்லை. அவருடைய குரல் மிகவும் கரகரத்தது. அவருடைய கண்கள் கண்ணீரால் நனைந்தன. என்னுடைய அம்மாவின்மீது அவருக்கு அளவற்ற அன்பு இருந்தது என்ற செய்தி எங்களுக்குப் புதிதாக இருக்கவில்லை. ஆனால், அவர் இவ்வளவு மென்மையான உள்ளத்தைக் கொண்டவராக இருப்பார் என்று நான் நினைத்திருக்கவில்லை. அவருடைய உள்ளத்தின் அந்த மென்மையைக் கண்டு, மேலும் அந்த நேரத்தில் ஏற்பட்ட அவருடைய அந்த உணர்ச்சிவசப்பட்ட நிலையைப் பார்த்து, எனது எல்லாக் கொடூரமும் இளகியது. மாமாவைப்பற்றிப் பைத்தியக்காரத்தனமாக ஏதேதோ எண்ணினோமே என்று நினைத்து நானே வெட்கம் அடைந்தேன். மாமாவைப்போலவே நானும் மிகவும் உணர்ச்சிவசப்பட்டேன். பேசமுடியும் என்ற நிலை ஏற்பட்டவுடனேயே நான் அவரிடம் சொன்னேன்: 'மாமா, நான் சிறிது முன்னால் உங்களிடம் அதிகப்பிரசங்கித்தனமாகப் பேசிவிட்டேன். அதற்காக என்னை மன்னித்துவிடுங்கள். நான், நீங்கள் பேசியதைப்பற்றித் தப்பாக எண்ணி . . .' மேலே என்னால் கொஞ்சமும் பேசமுடியவில்லை. நான் தலையைக் குனிந்து கொண்டு ஒன்றும் பேசாமல் நின்றுகொண்டேன்.

மாமாவின் அந்தப் பேச்சைக் கேட்டு அக்காவோ ஒரேயடியாக அழத் தொடங்கினாள். அவள் என்ன சொல்லுவாள்? நாங்கள் மூவருமே சுமார் பதினைந்து இருபது நிமிடங்கள் இவ்வாறான நிலையில் இருந்தோம். பின்னர் மாமா என்னிடம் மெதுவாகச் சொன்னார்: 'தம்பி, நீ வருத்தப்படாதே. உன்னுடைய பேச்சினால் எனக்குச் சிறிதளவும் வருத்தம் ஏற்படவில்லை. மாறாக, சகோதரியின்மீது உன்னுடைய அளவற்ற அன்பைக் கண்டு எனக்கு ஆறுதலே ஏற்பட்டது, தெரிந்ததா? போ, இப்போது நான் நாளைக்குக் கிளம்பப் போகிறேன். இவளை நான் என்னுடன் அழைத்துச் செல்லட்டும் அல்லவா? நீயும் அவளும் இருவருமே இங்கு இருந்து என்ன நடக்கப்போகிறது? அது நன்றாக இருக்காது. மேலும் இவள் கணவன் உனக்குத் தொல்லையளித்தால் எப்படி நடக்கும்? ஆகவே, கிளம்பு! இவளை அனுப்புவதற்கு வேண்டிய ஏற்பாடு செய். எனக்கு நாளைக்கே போயாகவேண்டும். தம்பி, இனி உனக்கு இவ்வளவுதான் சொல்லவேண்டும். நீ இனி இங்கே தனியாக இருக்கப் போகிறாய். இன்றுவரை உனது நிலை முற்றும் வேறாக இருந்தது. இது

வரை உனது அம்மா இருந்ததால், உன்னைப்பற்றி ஒரு கவலையும் இருக்கவில்லை. ஆனால், இப்பொழுது உனக்கு அந்த ஆதாரம் இல்லை. நாங்களோ தொலைவில், கடிதங்கூடச் சமயத்தில் வந்து சேரப்போவதில்லை. உன்மீது இப்போது எத்தனை பளு விழுந்திருக்கிறது என்பதை உணர்ந்து நீ நடந்துகொள்ளப்பா. இதை உணர்ந்து நடந்துகொள்ளாமல், எதிர்ப்பட்டவருடனெல்லாம் சேர்ந்து பழகத் தொடங்குவாயானால், அதன் பலன் நல்லதாக ஆகப்போவதில்லை. இந்தச் சமயத்தில் நீ உன்னையே பாது காத்துக்கொண்டாயே ஆனால், அது முடிவில் உனக்கு நன்மையையே விளைவிக்கும். ஒருமுறை உன் மனம் உனது ஆதிக்கத்திலிருந்து நழுவி மற்றவர் கையில் போயிற்றோ, பிறகு அது எங்கு வழிதவறிச் சுற்றும் என்பதைப்பற்றி அணுவளவும் ஒன்றும் சொல்லமுடியாது. உன்னைத்தான் நான் மிகவும் நம்பி யிருக்கிறேன். நீ எனது சொந்த மகன் அல்ல. ஆனால் சொந்த மகனையும்விட அதிகமாக உன்னை நான் நேசிக்கிறேன். பணம் காசின் கவலையை உன்னை நெருங்க விடாதே. என் உடலில் சக்தி உள்ளவரை, எனக்குப் பணம் கிடைத்துக்கொண்டிருக்கும் வரை, உனக்குப் பணத்தின் கவலை வேண்டாம். உன் படிப்பிற்கு வேண்டிய செலவை நான் ஏற்றுக்கொள்கிறேன். நீ எவ்வளவு பரீட்சை கொடுக்க விரும்புகிறாயோ, எதுவரை படிக்க விரும்பு கிறாயோ, அதுவரை நீ படி. ஆனால் ஒன்றுமட்டும் கவனத்தில் வைத்துக்கொள்ளப்பா! நேர்வழியை மட்டும் நீ என்றுமே விட்டுச் செல்லாதே. உன்னுடைய அம்மாவின் சுபாவம் மிகுந்த விசித்திரமாக இருந்தது. ஆனால், அவளிடம் இருந்த ஒரு குணத் தினால் அவள் எனக்கு மிகவும் பிரியமானவளாகியிருந்தாள். அவளைப்போல் அத்தனை எளிமையாகவும், கபடமற்றவளாகவும் இருக்கும் பெண்ணை நான் இதுவரை எங்கும் பார்த்ததில்லை. என்னால் இப்பொழுது ஒன்றும் பேசமுடியவில்லை. இப்பொழுது போங்கள். கணப்பொழுது என்னைத் தனியாக இருக்க விடுங்கள்.' உடனேயே நாங்கள் வெளியில் சென்றோம். இவற்றை யெல்லாம் பார்த்து எங்களுக்கு வெறும் ஆச்சரியம் ஏற்பட்டது. எங்கள் அம்மாவைப்பற்றிய விஷயத்தில் மாமாவின் மனம் இத் தனை மென்மை கொண்டதாக இருக்கும் என்று எனக்குத் தோன்றியிருக்கவில்லை.

# 36. பின்னர் நடந்த சில விஷயங்கள்

அக்கா மாமாவுடன் புறப்பட்டுச் சென்ற மறுநாள் காலையில் எழுந்த பிறகு, எந்த உணவு விடுதியில் போய்ச் சாப்பிடுவது என்ற எண்ணத்தில் இருந்தேன். இன்றுவரை எத்தனையோ வகைப்பட்ட துன்பகரமான அநுபவங்களை நான் அடைந்திருந் தேன். ஆனால், 'இப்பொழுது சாப்பாட்டிற்கு எப்படி ஏற்பாடு செய்வது?' என்ற கேள்வியினால் மனம் என்றும் குழம்பியிருக்க வில்லை. உணவு விடுதியில் கிடைக்கும் உணவுப் பண்டங்களைப் பற்றியும், அங்குள்ள பணிப்பெண்கள், வேலையாட்கள், மேலும் அங்கு உணவு அருந்த வரும் மக்கள் ஆகியவர்களைப்பற்றியும் பல விஷயங்களை எனது ஓரிரு நண்பர்களின் மூலம் நான் கேட்டிருக் கிறேன். ஆனால், அவற்றை நேரில் அநுபவிக்கும் சந்தர்ப்பம் ஏற்படும் என்று என்றுமே நினைத்திருக்கவில்லை. இதன் காரண மாக எனது உள்ளம் கனத்ததுபோல் ஆகியிருந்தது. மேலும், அந்த எண்ணத்தின் காரணமாக எல்லாமே, காரியங்களும் கூடச் சுறுசுறுப்பின்றி நகர்ந்துகொண்டிருந்தன.

அதற்குள் யாரோ என்னைக் கூப்பிட்டதுபோல் தோன்றியது. யாராக இருக்கும் என்பதையும் ஊகித்துவிட்டேன். ஆனால் யாருடைய குரலாக இருக்கும் என்று எனக்குத் தோன்றியதோ, அந்த ஆளுடையதாகத்தான் அது இருக்கும் என்ற நம்பிக்கையே மனத்திற்கு ஏற்படவில்லை. இருந்தபோதிலும் அந்தக் குரலைக் கேட்ட மாத்திரத்தில் நான் மனம் மகிழ்ந்து மிகுந்த ஆவலுடன் கதவைத் திறந்தேன். அப்பொழுது என் கண்முன்னால் நின்றவர் யார், தெரியுமா? சுந்தரி! சுந்தரி, அதுவும் இந்த நேரத்தில் எப்படி வந்தாள்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. நான் கதவைத் திறந்ததுமே அவள் உள்ளே வந்து, சிறிது இலேசாகச் சிரித்து என்னிடம் சொன்னாள்: 'பாபுராவ், தங்களைப் பார்க்க வேண்டும் என்று அண்ணா நேற்று இரண்டு முறை வந்து சென்றார். ஆனால், இரவு ஒன்பது, ஒன்பதரை மணிவரை உங்களைக் காண வில்லை. கடைசி நேரத்தில் முடிவை மாற்றிக்கொண்டு மாமா வுடன் சென்றுவிட்டீர்களோ என்னவோ என்று எங்களுக்குத்

தோன்றியது. இப்பொழுது அவர்தான் வருவதாக இருந்தார். அவருக்கு வேலை அதிகமாக இருந்ததனல் அவரால் வரமுடிய வில்லை. உங்களை அவர் உடனேயே வீட்டிற்கு வரச்சொன்ஞர்.'

இவ்வளவு சொல்லிப் பணிவுடன் சுந்தரி தலை குனிந்தபடி நின்ருள். 'நீங்கள்', 'உங்களுடைய' என்ற சொற்களைக் கேட்டு எனக்கு எப்படியோ இருந்தது. சில நாட்களுக்கு முன்புவரை அவள் என்னை 'அடே', 'நீ' என்று சொல்லிக்கொண்டிருந்தாள். சமீபகாலமாக அவள் நேராகப் பேசும் சந்தர்ப்பங்கள் குறை வாக இருந்த காரணத்திஞல் அவள் எவ்வாறு பேசுகிருள் என்பது அவ்வளவாகக் கவனத்தில் வராமல் இருந்திருக்க வேண்டும். ஆனல் இன்று அவள் பேசிய முறை என்னை மிகுந்த ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. இன்று அவள் என்னை அழைத்துப் பேசிய முறை மிகவும் தாழ்மையும் பணிவும் கொண்டதாக இருந்தது உண்மைதான். ஆனல் என் செவிகளுக்கு அது கொடூரமாகப் பட்டது. அவள் சொன்ன செய்தியைச் சிறிதும் மனத்தில் கொள்ளாமல் நான் அவளிடம் சொன்னேன்: 'சுந்தரே! பேசும் இந்தப் புது முறையை எங்கிருந்து கொண்டு வந்தாய்? குழந்தைப் பருவத்திலிருந்து இருந்துவரும் நம்முடைய தொடர்பை மறந்துவிட்டாயா? ''தாங்கள்'', ''தங்களுடைய'' என்ற சொற்களைச் சொல்லாதேப்பா! இந்தச் சொற்களை நீ உபயோகப்படுத்துவதைக் கேட்டால் எனக்கு என்னவோபோல் இருக்கிறது. சுந்தரே, உன்னையும், உன் பெற்ருேர்களையும் தவிர எனக்கு வேறு யாராவது இருக்கிருர்களா? நான் அண்ணு விடம் இன்று மாலை வருவதாகத்தான் இருந்தேன். இப்பொழுது அவர் வேலைக்குப் போய்விடுவார். மேலும் எனக்கும் இப் பொழுது உணவு விடுதிக்குப் போய்ச் சொல்லிவிட்டு வரவேண்டி யிருக்கிறது.'

கடைசி வாக்கியத்தை நான் சொல்லி முடிப்பதற்குள்ளேயே சுந்தரி என்னிடம் சொன்ஞள்: 'சே சே, உணவு விடுதிக்கு ஒன்றும் போகவேண்டாம்; வீட்டில் சாப்பிடக் கூப்பிடவேண்டும் என்றுதான் அண்ணு என்னைச் சீக்கிரம் அனுப்பிஞர்.'

நான் சட்டென்று கேட்டேன்: 'சாப்பிடுவதற்கு இன்று என்ன?'

அவள் இலேசாகச் சிரித்தவண்ணம் சொன்ஞள்: 'இன்று என்ன இருக்கும்? என்றும் இருப்பதுபோல்தான் இன்றும்.'

பிறகு நான் அதிகம் ஒன்றும் பேசவில்லை. அவளுடன் போகக் கிளம்பினேன். வழியில் நாங்கள் இருவரும் அக்காவைப்பற்றி நிறையப் பேசினோம். தனக்குக் கடிதம் அனுப்ப அக்கா ஒத்துக் கொண்டிருப்பதாக அவள் எனக்குச் சொன்னாள். நானும் அக்காவிடம் நிறையக் காகிதங்களையும் உறைகளையும் கொடுத் திருப்பதாக அவளுக்குச் சொன்னேன்.

இப்படி இருவரும் பேசிக்கொண்டு செல்கையில், சில தடியன்கள் அவளைச் சுட்டிக் காட்டிய வண்ணம் ஏளனமாக இளித்துக்கொண்டே அல்லது என்னைப்பற்றித் தங்களுக் குள்ளேயே ஏதோ சொல்லிக்கொண்டே சென்றார்கள். நான் இந்தக் காட்சியை இன்றுதான் பார்த்திருந்தேன். ஆனால், சுந்தரிக்கு இது ஒரு வழக்கமான அநுபவமாக இருந்திருக்க வேண்டும். அவள் பேசாமல் தலைகுனிந்த வண்ணம் நடந்து கொண்டிருந்தாள். அந்தக் காவாலி மனிதர்களின் மோசமான நடத்தையினால் அவளுக்கு வருத்தம் ஏற்படாமல் இருந்தது என்பது இல்லை. ஆனால், எதைக் கடமை என்று அவளும், அவளுடைய பெற்றோர்களும் சேர்ந்து முடிவு செய்திருந் தார்களோ, அந்தக் கடமைக்கு அந்த வருத்தத்தினால் அணுவள வும் பங்கம் ஏற்படக்கூடாது என்ற உறுதிகொண்டிருந்ததனால் தான் அவள் பொறுமையை மேற்கொண்டிருந்தாள். நான் மட்டும் அந்த ஒரு நாளைய அநுபவத்தைப் பார்த்தும், இத்தகைய அநுபவம் சுந்தரிக்குத் தினந்தோறும் ஏற்பட்டு வருகிறது என்பதை நினைத்தும் மிகவும் வருத்தம் அடைந்தேன். நானும் அவளும் வீடு போய்ச் சேர்ந்தோம்.

சிவராம் பந்த் அண்ணா எங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டே இருந்தார். போன உடனேயே அவர் என்னிடம் சொன்னார்: 'தம்பி, நீ சாப்பிடுவதற்காக உணவு விடுதிக்குச் செல்லவேண்டும் என்பது சுந்தரியின் அம்மாவுக்கும், எனக் கும் சரியாகப் படவில்லை. நேற்று மாலை இரண்டு முறை இதைச் சொல்வதற்காக உன்னிடம் வந்தேன். ஆனால் நீ இருக்கவில்லை. காலையில் எனக்கு அளவற்ற வேலை இருந்தது. ஆகவே, உன்னை அழைத்து வருவதற்கு என்று சுந்தரியை உன்னிடம் அனுப்பினேன். அப்புறம் வேறு என்ன? நீ எங்களிடம் சாப்பிடுவதற்கு வந்துவிடு. மேலும், இங்கு அக்கம் பக்கத்தில் எங்கேயாவது அறை எடுத்துக்கொண்டுவிட்டால் மிகவும் நல்லது. நான் உன்னுடைய படிப்பிலும் உதவி

செய்வேன். குறைந்தபட்சம் எல்லாம் ஒழுங்காகச் செய்கிறுயா, இல்லையா என்பதைப் பார்ப்பேன், தெரிந்ததா?'

சிவராம் பந்த் அவர்களின் அப்பேச்சைக் கேட்டு நான் சிறிது வியப்பு அடைந்தேன். அவரிடமிருந்து ஒருவேளை இப்படி அழைப்பு வரும் என்று எனக்கு அரைகுறையாகத் தோன்றி யிருந்தது. ஆனால், நான் அதைப்பற்றி யோசித்திருக்கவில்லை. நான் தயங்குகிறேன் என்பதைப் பார்த்து அவர் உடனேயே என்னிடம் சொன்னூர்: 'அடே, தயங்குவதற்கு அவசியமே இல்லை. என்மீது வீணுக எதற்குப் பாரத்தைப் போடவேண்டும் என்று நீ நினைத்துக்கொண்டிருப்பாய். ஆனல் அப்படி நினைக்க வேண்டியதில்லை. உன்னல் பாரமா? யாருக்கு அப்படித் தோன்றும்? அதைப்பற்றியெல்லாம் அடியோடு கவலைப்படாதே. நீ உணவு விடுதிக்குப் போவதென்பது எங்களுள் ஒருவருக்குக் கூடப் பிடிக்கவில்லை. எழுந்திரு, சட்டையை எடுத்துவிட்டு வா, சாப்பிட!'

சிவராம் பந்த் அவர்கள் மிகவும் எளிய மனிதர். அங்கு உள்ளே ஒன்று, வெளியே ஒன்று என்பதே கிடையாது. இதுபற்றி நான் இதுவரை அறிந்திருக்கவில்லை என்பதில்லை. ஆனல், இன்றைய அவருடைய தெளிவானதும், எளிமையானது மான பேச்சினல் நான் சிறிது வியப்படையத்தான் செய்தேன். மேற்கொண்டு சிறிதளவும் பிகு செய்துகொள்ளாமல் அவர் சொன்னபடி சாப்பாட்டின் ஏற்பாட்டிற்கு ஒத்துக்கொண்டு விட்டேன். இந்த வகையில் உணவு விடுதியின் தலைவலி தப்பியது. அது மட்டுமல்லாமல், எந்த இடத்தில் தங்குவது எனக்கு மிகவும் விருப்பமோ, அந்த வீட்டாரைச் சேர்ந்தது போலவே எனக்குத் தங்கவும் இடம் கிடைத்தது.

இதன் பின்னர் மூன்று மாதங்கள் கழிந்ததும் நான் பரீட்சைக்கு உட்காரும் நாள் நெருங்கியது. ஆகவே, நான் படிப்பில் மூழ்கிப் போனேன்.

# 37. கடிதங்கள் இடம் மாறின

நான் பரீட்சையில் தேறினேன். மேற்படிப்புக்காகக் கல்லூரிக்குப் போகத் தொடங்கினேன். எனக்கும், சுந்தரிக்கும் முன்போலவே அக்காவிடமிருந்து கடிதங்கள் வந்துகொண்டிருந்தன. என்னிடமிருந்தும் அவளுக்குக் கடிதங்கள் சென்றுகொண்டிருந்தன. அவளிடமிருந்து இப்போது வந்த கடிதங்கள், அவள் முன்னைவிட மிகுந்த வேதனையுடன் எழுதிக்கொண்டிருந்தாள் என்பதை எனக்கு மேலும் மேலும் தெளிவாக்கிக்கொண்டிருந்தன. அவள் மிகச் சிரமப்பட்டுத் தனது வேதனையை என்னிடமிருந்து மறைத்து வைத்துக்கொண்டிருக்கிறாள் என்று அவளிடமிருந்து எனக்கு வந்த கடிதங்களின் ஒவ்வொரு வாக்கியத்திலிருந்தும் எனக்குத் தோன்றலாயிற்று. ஒரு சமயம் எனது கல்லூரி விலாசத்திற்கு அவளிடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது. இந்தக் கடிதத்தினால் எனது சந்தேகம் மேலும் வலுத்தது. ஆகவே, நான் உடனேயே அவளுக்கு ஒரு கடிதம் எழுதி இவ்வாறு தெளிவாகக் கேட்டேன்: 'ஏதோ ஒரு காரணத்தினால் உன் மனத்துக்கு அளவற்ற வேதனை ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. இருந்தும் நான் வேதனை அடையக்கூடாது என்று உன் இன்னலை நீ மூடிவைக்கிறாய் என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே, எனக்குத் தோன்றுவது சரிதான் என்றால் மறு தபாலின்மூலமாக உண்மையான விஷயம் என்ன என்பதை எழுது. சிறிதளவும் தாமதிக்காதே.'

அன்றைய தினம் கிடைத்த அவளுடைய அந்தக் கடிதம் என்னை மிகுந்த வருத்தத்தில் ஆழ்த்தியது. அவள் கடிதத்தில் குறிப்பிடத்தக்கவாறு ஏதோ செய்தி இருந்தது என்பது இல்லை. செய்தி நலத்தைப்பற்றி மட்டுந்தான் இருந்தது. வேறு ஒன்றும் இருக்கவில்லை. ஆனால் அக்கடிதத்தை எழுதும்போது அவள் கண்களினின்றும் கண்ணீர் ததும்பிக்கொண்டிருந்திருக்க வேண்டும். ஓரிரு முறை கண்ணீரின் துளிகள் அக்கடிதத்தின்மீது விழுந்தன என்பது தெளிவாகத் தெரிந்துகொண்டிருந்தது. ஓரிடத்தில் எழுத்துக்களின் மை பரவியிருந்தது. இந்த அடையாளங்கள்

இதற்குமுன் கிடைத்த கடிதங்களில் தெளிவாகத் தெரியவில்லை. ஆகவே, அவை என் கவனத்தை விசேஷமாகக் கவர்ந்தன. எனது கடிதத்தை அனுப்பிய மூன்றும் நாள், அவளுடைய கடிதத்தை நான் எதிர்பார்த்தேன். ஆனால், அவளிடமிருந்து கடிதமேதும் வரவில்லை. எனக்கும் இல்லை, சுந்தரிக்கும் இல்லை.

ஒன்றல்ல, இரண்டல்ல, ஆயிரக்கணக்கான எண்ணங்கள் என் மனத்தில் எழுந்தன. அவை எனது உள்ளத்தை மிகவும் கலவரப் படுத்திக்கொண்டிருந்தன. எனது எண்ணங்களை எவரிடமேனும் சொல்லி ஓரளவுக்காயினும் உள்ளத்தை இலேசாக்கிக் கொண்டா லொழிய உள்ளம் அமைதியடையாது என்று என் மனத்திற்கு உறுதியாகப் பட்டதனால், சுந்தரியைத் தனியாக ஓரிடத்தில் சந்தித்து எல்லாவற்றையும் அவளிடம் சொல்லி, அவள் என்ன சொல்கிறாள் என்று பார்க்கவேண்டும் என்று முடிவு செய்தேன். அதேபோல் வாய்ப்பும் கிடைத்தது. ஒரு சனிக்கிழமையன்று மதியப்பொழுதிலேயே கல்லூரியிலிருந்து கிளம்பி நான் விரைந்து அவள் வீட்டிற்குச் சென்றேன். அவளுக்கும் அன்று காலையில் மட்டுந்தான் பள்ளிக்கூடம் இருந்தது. கல்லூரிக்குப் போகத் துவங்கியதிலிருந்து ஒவ்வொரு சனிக்கிழமையும் சிவராம் பந்த் அவர்களின் வீட்டிற்கு வந்து, ஞாயிற்றுக்கிழமை மாலையில் திரும்பிப்போவது எனது வழக்கமாக இருந்தது. நான் இப்பொழுது எந்தச் சனிக்கிழமையின் நிகழ்ச்சியைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கிறேனே, அந்தச் சனிக்கிழமையன்று அவள் தனியாகக் கிடைக்கக்கூடும் என்று, நான் வேண்டுமென்றே பகல் பன்னிரண்டு மணிக்கே புறப்பட்டு வந்தேன்.

வீட்டைப் பார்த்துக்கொள்ள அவளை விட்டுவிட்டு அவள் அம்மா எங்கேயோ போவதாக இருந்ததுபற்றிக் கடந்த ஞாயிறு அன்றே பேச்சுக் கிளம்பியிருந்தது. அதை நான் பயன்படுத்திக் கொண்டேன். வீட்டை அடைந்தேன். எல்லாம் நான் எதிர் பார்த்தபடியே இருந்தது. சுந்தரி ஏதோ கைவேலையில் ஈடுபட் டிருந்தாள். கதவு வெறுமனே மூடப்பட்டிருந்தது. போனவுடன் முதலில் வேறு யாராவது இருக்கிறார்களா என்ன என்று நான் நின்று கவனித்தேன். சுந்தரி எதிர்ப்பக்கம் சன்னலில் உட்கார்ந் திருந்தாள். அவள் தன் வேலையில் மனம் ஒன்றிப் போயிருந்தாள். நான் கதவைத் தள்ளினது கூட அவளுக்குத் தெரியவில்லை. தனது வேலையில் மூழ்கியிருந்த அவளது அழகிய வடிவைக் கண்டு எனது உள்ளம் இன்பத்தால் நிறைந்தது. நான் வந்த வேலையை

யும் மறந்து அவளை, அவளுடைய அழகிய வடிவைப் பார்த்த வாறு நின்றேன். அவள் இவ்வாறே தனது வேலையில் ஈடுபட்டிருந்தவாறும், நான் அவளைப் பார்த்துக்கொண்டு நின்றவாறும் எப்போதுமே இருக்க முடிந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும் என்று எனக்குத் தோன்றியது. அப்படிக் கணப்பொழுது கிடைக்கவும் செய்தது. நான் அசைவற்று நின்று ஆர்வத்தோடு பார்த்துக்கொண்டிருந்தேன். அதற்குள் அவளுக்கு என்ன தோன்றிற்ருே யாருக்குத் தெரியும்? அவள் ஓர் அழகிய பாட்டின் பல்லவியைப் பாடத் தொடங்கிஞள். அந்த இனிய குரலைக் கேட்டதும் எனது உடல் முழுதும் பரவசம் பரவியது. எனது கண்களையும் செவிகளையும் அவளுடைய வடிவத்திலும், அவளுடைய சொற்களிலும் ஈடுபடச் செய்தேன். ஆனுல், இந்த இன்பம் வெகுநேரம் நீடிக்கவில்லை. சற்று நேரத்துக்குப் பிறகு அவள் தலை நிமிர்ந்து பார்த்தாள். உடனேயே, 'ஐயய்யோ, எப்போது வந்தீர்கள், பாவு ராவ்?' என்றவாறு, தனது வேலையைக் கீழே வைத்துவிட்டுச் சட்டென்று அவள் எழுந்து நின்ருள். நான் சிறிது வெட்கம் அடைந்தேன். வந்தவுடனேயே அவளை நான் கூப்பிடாமல் இருந்தது சரியல்ல என்று எனக்குத் தோன்றியது.

நான் அவளிடம், 'நீங்கள் தன்னை மறந்து வேலையில் ஈடுபட்டிருந்தீர்கள் என்று நான் ஒன்றும் பேசவில்லை. ஆனுல், இப்பொழுதுதான் வந்தேன். இரண்டொரு நிமிடங்கள்தான் ஆகியிருக்கும்' என்று சொன்னேன். பிறகு உடனேயே சாதாரண மாகவே அவளிடம் சொன்னேன்: 'அக்காவைப்பற்றி உங்களிடம் தனியாக ஏதோ கேட்கவேண்டியிருந்தது. இன்று அம்மா வெளியில் போவதாக இருக்கிருர் என்பது தெரிந்திருந்ததால் தான் நான் கல்லூரியிலிருந்து வேண்டுமென்றே மதியப் பொழுதில் கிளம்பி வந்தேன்.'

இவ்வளவு பேசி நான் நிறுத்தினேன். சுந்தரி வியப்புடன் என்னைப் பார்க்கலானுள். அம்மா வெளியில் போவதைக் கவனத்தில் கொண்டு, நான் திட்டமிட்டு அந்தச் சமயத்தில் வந்தேன் என்பதைக் கேட்டு அவளுக்கு ஆச்சரியம் ஏற்பட்டதா, என்ன? ஆனுல், நான் அவளை அந்த வியப்பில் வெகுநேரம் மூழ்கியிருக்கவிடவில்லை. நான் அவளிடம் சொன்னேன்: 'அக்காவைப்பற்றி எனக்கு உங்களிடம் (நான் இப்பொழுதெல்லாம்—அதுவும் இந்தச் சமயத்தில் சிறப்பாக, அவளை 'வாங்க, போங்க' என்று சொல்ல ஆரம்பித்திருந்தேன்.) இவ்வளவுதான்

கேட்கவேண்டியிருந்தது. அவள் மாமாவிடம் இருக்கிருளே, அங்கே சுகமாக இருக்கிருளா? அவள் சுகமாக, ஆனந்தமாக இல்லை என்று எனக்கு இப்போதெல்லாம் தோன்ற ஆரம்பித்திருக் கிறது. அவள் மிகவும் துன்புற்றிருப்பதாக எனக்குப் படுகிறது. அவளிடமிருந்து எனக்கு வரும் கடிதங்களைப் படித்து, அவளுக்கு ஏதோ இதய நோய் கண்டிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. அவளுடைய கடிதங்கள் அப்படி இருக்கின்றன. எனக்கு எழுதும் கடிதங்களில் அவள் மனத்தைவிட்டு ஒன்றும் எழுதுவதில்லை. ஆனல், உங்களுக்கு அனுப்பும் கடிதங்களில் அவள் தனது உள்ளத்தைத் திறந்து எல்லாம் தெளிவாக எழுதிக்கொண்டிருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. உண்மையில் அப்படி இருக்குமானல், உண்மையாகவே அங்கு இருப்பதில் அவள் மனம் வெறுத்துப் போயிருக்குமானல், நீங்கள் எனக்குத் தெளிவாகச் சொல்லிவிடுங்கள். சிறிதும் தாமதிக்காதீர்கள். அவளுக்கு நான், எனக்கு அவள்; இல்லை, எங்கள் இருவருக்கும் நீங்கள் என்றபடி மூவரும் ஒருவருக்கொருவர் உயிருக்கு உயிரானவர். அப்படி யிருக்கையில், நாம் ஒருவரிடம் ஒருவர் உள்ளத்தைத் திறந்து பேசவில்லை என்றல், பின் வேறு என்ன இருக்கிறது? பிறகு நமது இன்பமான தருணங்களிலும் துன்பமான தருணங்களிலும் நாம் ஆறுதல் பெறுவது எப்படி?'

இந்த நீண்ட பேச்சிற்குப் பிறகு நான் சிறிது நிறுத்தினேன். மேற்கொண்டு என்ன பேசுவது என்று எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. இருந்த எனது சொற்பொழிவு எல்லாம் வீணகப் போய்விட்டாற்போல் ஆயிற்று. இப்பொழுது அதன் பலனக என்ன நடக்கப்போகிறது என்பதைப் பார்ப்ப தற்காகவே நான் நிறுத்தினேன். சுபாவமாகவே இனிமை நிறைந்த, ஆனல் வருத்தம் தோய்ந்த அவள் முகத்தை நான் எளிய பார்வையுடன் பார்த்தவண்ணம் நின்றிருந்தேன். வெகுநேரம் ஆயிற்று. சுந்தரி ஒன்றுமே பேசவில்லை. பிறகு மெல்லிய இனிய குரலில் அவள் சொன்னள்: 'பாவுராவ், நீங்கள் இன்று சொன்னதற்கு இன்னும் ஐந்து நாட்களில் நான் பதில் கொடுப்பேன். ஆனல் இன்று அதைக் கொடுக்க முடியாது!' சுந்தரி மேலே பேசினது என்ன என்பது என் செவிகளில் விழவில்லை. ஏனெனில், அதற்குள் இலேசாக மூடப் பட்டிருந்த கதவுகளின் இடைவெளி மூலமாக, அருகில் யாரோ நின்றிருப்பதாக நான் உணர்ந்தேன். அத்துடன் அப்படி நின்று

கொண்டிருப்பது யாராக இருக்கும் என்பதைப்பற்றியும் சந்தேகம் தோன்றி, மனத்தில் கோபம் நிறைந்தது. நான் மெள்ள ஒவ்வோர் அடியாகக் கதவின் அருகில் நகர்ந்து சென்றேன். யாராக இருக்கும் என்று எனக்குச் சந்தேகம் ஏற்பட்டதோ, அவர்தானு அல்லது வேறு யாராவதா என்று உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதுதான் எனது நோக்கமாக இருந்தது.

ஆனுல், எனது இறுதிக் காலடி கதவருகில் விழுவதற்கும், வெளியில் இருந்தவர் அங்கிருந்து ஓட்டம் பிடிப்பதற்கும் சரியாக இருந்தது. நான் கதவைத் திறந்து பார்த்தேன். ஆனுல் ஒரு பலனும் இல்லை. மேற்கொண்டு பேசவேண்டியதை, கதவை நன்ருகத் திறந்து வைத்துக்கொண்டுதான் பேசவேண்டும் என்று முடிவு செய்தேன். ஆனுல், என்ன பயன்? நான் ஏதோ சொல்லவே இருந்தேன். அதற்குள் சுந்தரியின் அம்மா வந்துவிட்டாள். நான் இன்று சீக்கிரத்திலேயே வந்ததைப்பற்றி அவளுக்கும் ஆச்சரியம் ஏற்பட்டு, அதை அவள் சொல்லியும் காண்பித்தாள். நான் வெறும் 'சும்மாத்தான்' என்ற பதிலை உதிர்த்துத் தட்டிக் கழிக்கப் பார்த்தேன். சிறிது நேரத்தில் அண்ணுவும் வந்தார். பிறகு எங்கள் எல்லாருக்கும் இடையில் இயல்பான பேச்சு வார்த்தை தொடங்கியது. இன்னமும் பதினைந்து நிமிடங்கள் கிடைத்திருந்தால், சுந்தரியிடமிருந்து அக்காவைப்பற்றிய உண்மையான விவரங்களை நிச்சயம் வெளிக்கொணர்ந்திருப்பேன் என்று என் மனத்துக்கு உறுதியாகப் பட்டது. ஆனுல், என்ன பயன்? மீண்டும் அவளைத் தனியாகச் சந்திக்கும் வாய்ப்பு எனக்கு அந்த ஞாயிற்றுக்கிழமை கிடைக்கவில்லை.

அதன் பின்னர் மூன்று நாட்களில் என் பெயருக்கு அக்காவின் கடிதம் ஒன்று வந்தது. நான் அதைத் திறந்து பார்த்தேன். ஆனுல் உள்ளே இருந்த கடிதம் எனக்கு எழுதப்பட்டதாக இல்லை. முதல் நான்கு வரிகளிலிருந்தே அது சுந்தரிக்கு எழுதப்பட்டது என்பதை நான் தெரிந்துகொண்டுவிட்டேன். அக்கா எனக்கு ஒன்றும், சுந்தரிக்கு ஒன்றுமாக இரு கடிதங்களை எழுதி, உறையில் அவற்றைப் போடும்போது மட்டும் அவளுடையதை எனக்கும், என்னுடையதை அவளுக்குமாக மாற்றிப் போட்டுவிட்டிருக் கிருள். சுந்தரிக்கு அக்கா எழுதின அந்த நீண்ட கடிதத்தைப் பார்த்ததும், எனது சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள அந்த முழுக் கடிதத்தையும் படிக்கவேண்டும் என்று எவ்வளவு ஆசை ஏற்பட்டது!

# 38. அக்காவின் கடிதம்

ஆனால், அந்த ஆசைக்கு நான் அடிமை ஆகவில்லை. எனது உள்ளத்தின் நற்பகுதி அந்தக் கடிதத்தை என்னைப் படிக்க விடவில்லை. அதிலிருந்த செய்தியை அறிந்துகொள்ள இன்னொரு வழியைக் கையாளுவதாக நான் நிச்சயித்தேன். 'இந்த உனது கடிதம் தவறி எனது உறையில் வந்திருக்கிறது. இதை எடுத்துக் கொள். ஆனால், அதிலுள்ள செய்தியை எனக்கு உண்மையாகச் சொல்' என்று சுந்தரியை வேண்டிக்கொள்வது. அந்த வேண்டுதலை அவள் அங்கீகரிக்கும் வரை அவளை வற்புறுத்துவது என்று நான் முடிவு செய்தேன். அதன்படியே நான் சுந்தரியிடம் போய் அந்தக் கடிதத்தை அவளுக்குக் காண்பித்தேன். அவளும் எனக்கான கடிதத்தை என்னிடம் கொடுத்தாள். எனக்கு எழுதப்பட்ட கடிதம் மிகவும் சுருக்கமாக இருந்தது. அதில், 'நீ சொல்வதுபோல் ஒன்றும் இல்லை. என்னைப்பற்றி எப்பொழுதும் கவலைப்பட்டுக்கொண்டே வீணாக மனத்தைக் குழப்பிக்கொண்டு உன் படிப்பைக் கெடுத்துக் கொள்ளாதே. அப்படியே நான் சிறிது துன்பம் அநுபவிக்கிறேன் என்றாலும் தான் என்ன? அது என் தலையெழுத்து. அதைப்பற்றி நீ கவலைப்படுவதினால் என்ன பயன்?'

இவ்வாறு அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது. அதைப் படித்ததும் எனக்கு எப்படி ஆறுதல் ஏற்படும்? அதிலும் சுந்தரிக்கான அவளுடைய கடிதம் நீட்டி முழக்கி எழுதப்பட்டிருந்ததையும், அதில் ஓரிரு இடங்களில் கண்ணீர்த் துளிகள் விழுந்து அங்குள்ள எழுத்துக்களின் மை பரவியிருந்ததையும் பார்த்திருந்த எனக்கு, அவள் போலியாக ஏதோ ஆறுதல் கூறி என்னைச் சமாதானப்படுத்த முயலுவதாகத்தான் தோன்றியது.

சுந்தரி அந்தக் கடிதத்தை மனமொன்றிப் படிக்கலானாள். அவள் முகத்தையே விடாமல் பார்த்துக்கொண்டிருப்பது சரியல்ல என்று மனத்துக்குத் தோன்றவே, நானும் எனது கடிதத்தை மீண்டும் படிக்கும் பாவனையில் என் கண்களுக்கு முன்னால் அதைப் பிடித்தேன். ஆனால், எனது பார்வை எனது கடிதத்தில் இருக்

கும் செய்தியைப் படிப்பதில் சிறிதளவும் மூழ்காமல், எனது அக்காவின் கடிதத்திலுள்ள விஷயத்தின் தெளிவான பிரதிபிம்பம் அந்த அழகிய முக மண்டலத்தின் மீது விழுவதைக் காணவே முயன்றது. என் மனத்தில் தோன்றிய சந்தேகம் உண்மையானது தான் என்று நம்புவதற்கு ஆதாரமிருப்பதாக எனக்குப் பட்டது. அந்தக் கடிதத்தை எனக்குப் படிப்பதற்காகக் கொடுக்கும்படி அவளிடம் வேண்டிக்கொள்ள முடிவு செய்தேன்.

முகத்தில் கம்பீரத்துடன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு சுந்தரியிடம் சொன்னேன்: 'அக்காவின் கடிதத்தில் விசேஷமாக ஏதோ இருக்கவேண்டும். இல்லையென்றால் தங்கள் கண்களில் கண்ணீர் வந்திருக்காது. அந்த விஷயம் என்ன என்று எனக்குச் சொல்லுங்கள். சென்ற சில நாட்களாகவே இந்த விஷயத்தை எனக்குத் தெளிவுபடுத்த வேண்டும் என்று உங்களைக் கேட்டுக்கொண்டு வருகிறேன். இன்று இதே கடிதம் எதிர்பாராமல் என் கைக்குக் கிடைத்திருந்தது. ஆனால், பிறருடைய தவறை முறை பிறழ்ந்த வகையில் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது என்று நான் அந்தக் கடிதத்தை அப்படியே படிக்காமல் தங்களிடம் திருப்பிக் கொடுத்துவிட்டேன். அதைப் படிப்பதற்காக என் உள்ளம் எவ்வளவு துடித்துக்கொண்டிருந்தது என்பதைச் சொல்லி முடியாது. ஆனால், அந்தத் துடிப்பை நான் கட்டுப்படுத்திக் கொண்டேன். இனியும் அதைக் கட்டுப் படுத்திக் கொள்வது முடியாத காரியம். தாங்கள் இந்தக் கடிதத்தைக் காண்பிக்கப் போவதில்லை என்றால், நான் உடனடியாக மாமாவிடம் சென்று, அக்காவை அழைத்து வரப் போகிறேன். பிறகு எனக்கு என்ன ஆகுமோ, அது தாராளமாக ஆகட்டும்!' எனது இந்த உறுதியான பேச்சைக் கேட்டுச் சுந்தரிக்குச் சிறிது ஆச்சரியமும், ஆறுதலும் ஏற்பட்டது போல் தோன்றியது. கணப்பொழுது மௌனமாக இருந்து, பிறகு சட்டென்று அவள் என்னிடம் சொன்னாள்: 'ஆமாம், இனிமேலும் அக்கா தனது நிலைமையையும், தனது கருத்தையும் தங்களிடமிருந்து மறைத்து வைத்துக்கொள்ளக்கூடாது என்பது சரிதான். ஆனால் தங்களுக்குத் தெரிவிக்காது இருப்பதில் அவளுக்கு எந்தவிதமான தப்பெண்ணமும் கிடையாது. உங்களுடைய படிப்பு நடந்துகொண்டிருக்கிறது. இந்தச் சமயத்தில் இப்படிப்பட்ட கவலைகள் உங்களுடைய படிப்புக்குத் தடங்கலாக அமையக்கூடாது என்பதே அவளுடைய நோக்கம். எனக்கு

இன்றுவரை அவளிடமிருந்து பல கடிதங்கள் வந்துள்ளன. அவற்றுள் பெரும்பாலானவற்றில் தனது நிலைமையைப்பற்றித் தம்பியிடம் தெரிவிக்க வேண்டாம் என்று குறிப்பாக எடுத்துச் சொல்லியிருக்கிருள். தங்களைக் காரணமின்றிக் கவலைக்கு ஆளாக்க வேண்டாம் என்பதுதான் தன்னுடைய நோக்கம் என்றும் அவள் தெளிவுபடுத்தியிருக்கிருள். ஆனல், உங்களுக்கு அவை யாவும் தெரியாமல் இருப்பதால்தான் இவ்வளவு வேதனை ஏற்படுகிறது என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தக் கடிதத்தை நீங்கள் தாராளமாகப் படியுங்கள். அதில் அவளைப் பற்றிய எல்லா விவரங்களும் இருக்கின்றன. அவளை அந்த நிலையிலிருந்து விடுவியுங்கள். ஏதாவது வழி செய்துதான் ஆக வேண்டும் என்று எனக்கும் தோன்ற ஆரம்பித்திருக்கிறது. அவளுக்கே கூட இவ்வாறு தோன்றத் தொடங்கியிருக்கிறது. ஆகவே, இப்பொழுது நாம் ஏதேனுமோர் உபாயத்தைத் தோற்றுவித்தாலும், அது அவளுக்கு வேண்டாததாகப் படாது.'

முதலில் எழுதப்பட்டிருந்த விஷயத்தில் அவளைப்பற்றியும், சுந்தரியைப்பற்றியும் மட்டுந்தான் ஏதோ எழுதியிருந்தாள். அதன் பிறகு அவள் என்னைப்பற்றி எழுதி, இவ்வாறு குறிப்பிட்டிருந்தாள்:

'ஆமாம். இப்பொழுது நானும், தம்பியும் உயிருடன் இருக்கும் வரை அவனுக்கு நானும், எனக்கு அவனுமாக இருப்பது என்னவோ உண்மைதான். ஆனல், இதே காரணத்தினல்தான் நான் அவனுக்கு எனது நிலையின் உண்மையைத் தெரிவிக்கவில்லை. இந்த வயதில் அவன் தனது படிப்பில் கவனத்தைச் செலுத்துவதா அல்லது என்னைப் போன்ற துர்ப்பாக்கியம் செய்த பிறவியைப்பற்றிக் கவலைப்படுவதா? அவனது படிப்பும், பரீட்சையும் முடிந்து அவன் சம்பாதிப்பவனக ஆகிவிட்டால், பிறகு எனது பாரம் அவனைத் தவிர்த்து வேறு யார் மீது விழப் போகிறது? ஆனல், இன்று எனக்கு வேதனை கொடுத்துக்கொண்டிருக்கும் சின்னஞ் சிறு விஷயங்களைப்பற்றியெல்லாம்கூட நான் தவருமல் அவனுக்கு எழுதத் தொடங்கினல், அவன் மனம் எப்படி அமைதியுடன் படிப்பில் ஈடுபடும்? எனது நிலையைப்பற்றித் தெளிவாக எழுதும்படியும், எனக்குத் துன்பம் ஏற்பட்டுக்கொண்டிருந்தால் என்ன வேண்டுமானலும் செய்வதாகவும்,என்னைத் தன்னிடத்தில் அழைத்து வைத்துக்கொள்வதாகவும், இதற்காக நான் சிறிதும் தயங்கவேண்டாம் என்றும் அவன் எப்பொழுதுமே தன் கடிதங்

களில் எழுதுகிறுன். கடைசியாக வந்த அவனுடைய கடிதத்தில் அவன் அழுத்தந்திருத்தமாக எழுதியிருக்கிறுன். ஒரு வேளை நான் அவனுக்கு உண்மையைத் தெரிவித்துவிட்டால், பிறகு அவன் எனக்காகத் தன் படிப்பை விட்டு எங்கேயாவது ஐந்து—பத்து ரூபாய்க்கு ஏதேனும் வேலையைப் பிடித்துக்கொண்டுவிட்டால் என்ன ஆகும்? மேலும், அவனுடைய குணம் எனக்கு நன்ருகத் தெரியும். ஒரு முறை மனத்தில் ஓர் ஆவேசம் தோன்றிவிட்டால், பிறகு அவன் எதையும் செய்யத் தயங்கமாட்டான். ஆனுல், அப்படிச் செய்ய வைத்து அவனது வாழ்வை மண்ணுக்க நான் சிறிதும் விரும்பவில்லை. எனது வாழ்க்கையோ அடியோடு பாழடைந்து போயிற்று. இப்போது, என் காரணமாக அவனது வாழ்க்கையும் அவ்வாறு ஆகவேண்டுமா என்ன? எனது இன்னல் களைப் போக்குவதற்காக, அவனது படிப்பு முதலியவற்றில் ஓர் இடைஞ்சலும் ஏற்படாத வகையில், நீங்கள் இருவரும் சேர்ந்து ஏதேனும் ஓர் உபாயத்தைச் செய்தால், நான் அதை மிக மகிழ்வுடன் ஏற்றுக்கொள்வேன். மாமா பாவம், எப்பொழுதும் ஒன்றுமே பேசுவதில்லை. முதலில் அவர் இங்கு அதிகமாக இருப்பதே யில்லை. ஆனுல், மாமியும் பாட்டியும் எப்போதும் ஏதாவது இறக்கித் தாழ்த்திப் பேசியவாறிருக்கிறுர்கள். அதன் காரணமாக, அந்தப் பழைய யமவேதனையி னின்றும் விடுபடுவதற்காக உயிருக்கு என்ன நேர்ந்தாலும் பரவா யில்லை என்ற உறுதியை மேற்கொண்டு வெளியில் வந்தேனே, அதேபோல் இப்போதும் செய்யவேண்டும் என்று தோன்று கிறது. நேற்று, நேற்றேதான், சாட்சாத் பெரிய மாமியே எனக்குக் கேட்கும் வண்ணம் இரைந்து சொன்னுள்: ''ஏங்க, இந்த முற்போக்கான பெண், அம்மா தன் கணவனை விட்டாள் என்று இவளும் விட்டாள். ஆண்கள் ஏதோ செய்தார்கள், சொன்னுர்கள் என்பதற்காக உங்களில் யாரேனும் தமது வீடு வாசலைப் புறக்கணித்திருக்கிறீர்களா? இவர்கள்தான் பெரிய மனிதர்கள்! அம்மா செய்ததைப்போல் தானும் செய்ய வேண்டு மென்று இவள் சொல்கிறுள் அல்லவா? மேலும் நம் வீட்டிலோ இருவருக்குமே சலுகை அப்படியே கிடைத்தது. பிறகு வேறு என்ன வேண்டும்? தன் வீட்டிற்கு நடையைக் கட்டு என்று நாம் இந்த அம்மாளுக்கு அழுத்தந் திருத்தமாகச் சொல்லியிருந்தால், அதைக் கேட்காமலிருக்க அவளுக்குத் தைரியம் உண்டா, என்ன? இப்போது போ என்றுல் பேசாமல் பணிவுடன் போகவேண்

டியதுதான். எப்படிப் போகமாட்டாள்? என் கையில் இருந்தால் . . .?'' மேலே அவர்களுக்குள் என்ன பேச்சு நடந்தது என்பதை நான் கேட்கவில்லை. என்னல் கேட்க முடியவில்லை. எனக்கு அழுகை குமுறிக்கொண்டு வந்தது. நான் அங்கிருந்து கிளம்பிச் சென்றேன். எனது உயிரை நானே போக்கிக்கொள்ள வேண்டியதுதான் என்று மனம் முடிவு செய்தது!'

அதன்பின் வெகுநேரம் என்னல் மேற்கொண்டு ஒன்றும் படிக்க முடியாமல் போயிற்று. தொடர்ந்து அவள் என்ன செய்திருப்பாள், என்ன இல்லை என்பதைப்பற்றிப் பலவிதமான எண்ணங்கள் என் மனத்தில் எழலாயின. மேற்கொண்டு எழுதியிருந்த விஷயத்தைப் படிப்பதற்கு வேண்டிய துணிச்சல் எனக்கு ஏற்படவில்லை. 'ஏதேனும் தாறுமாருக நடந்துவிட்டிருக்காதே?' என்று தோன்றியது; கூடவே அவள் கைப்பட எழுதிய கடிதமே என் கையில் இருந்தது. ஆகவே, பயப்படும்படியாக எதுவும் நிகழ்ந்திருக்காது என்றும் தோன்றியது. உள்ளத்தில் சற்றுத் தைரியம் ஏற்பட்டு, நான் மேலே படிக்கலானேன்.

'ஆனல் தனக்கு ஒரு முடிவு தேடிக்கொள்வது என்பது அவ்வளவு எளிதான காரியம் அல்ல. அதற்குக்கூட மிகுந்த மனேதிடம் வேண்டியிருக்கிறது. அது என்னிடம் இல்லை. இருந்திருந்தால் நான் இன்றுவரை ஏன் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன்? நான் எனது அம்மாவிற்கு ஏற்ற பெண் தான். அவள் தனது சீலத்திற்கோ, கொள்கைக்கோ சிறிதும் கறைபட விடவில்லை. மேலும், வீணுக ஊரார் பழிக்கு என்றும் அஞ்சவில்லை. அதுபோலவே நானும் நடந்துகொள்வேன். என்றும் பின்வாங்கமாட்டேன். படிப்பில் எனக்கு மிகுந்த ஆசை ஏற்பட்டது. ஆனல், அதைக்கூடப் பூர்த்தி செய்துகொள்வதில் எத்தனை இடையூறுகள் ஏற்பட்டன? இன்றும் ஏற்படுகின்றன? ஆனல், அந்த எல்லா இடைஞ்சல்களையும் தூரத் தள்ளி நான் இன்று இப்படிப்பட்ட நீண்ட கடிதம் எழுதத் தொடங்கியிருக்கிறேன் என்பது, ஏ சுந்தரி அக்கா, எதற்கு உதாரணம்? எந்தத் தாயின் குணங்கள் எனக்கு இதில் வெற்றியைக் கொடுத்திருக்கின்றனவோ, அதே தாயின் குணங்கள் என்னுடைய உடலில் நிச்சயமாக இறங்கியிருக்கின்றன என்று எனக்கு உறுதியாகப் படுகிறது. அதனல் நான் பெருமையும் கொள்கிறேன். என்ன ஆனலும் ஆகட்டும். மற்றப் பெண்களின் வாழ்க்கையைப் போல் நமது வாழ்க்கை ஓடப்போவதில்லை. ஆகவே, நாம் இப்படி

ஏதேனும் ஒரு வகையில் வாழ்ந்து தொலைக்கவேண்டும் என்று நான் முடிவு செய்திருக்கிறேன். அப்படியிருக்க, அது இன்று செயற்பட்டால் என்ன? இல்லை, இன்னும் சில நாட்களில் செயற் பட்டால் என்ன?'

அக்காவின் கடிதத்தின் பிற்பகுதியைப் படித்தவுடன் நான் உண்மையிலேயே மிகவும் பிரமித்துப் போனேன். கடிதத்தை நான் தனிமையில் படித்துக்கொண்டிருக்கவில்லை. என் முன்னால் யாரோ ஒருவர் இருக்கிறார் என்பதைக்கூட நான் அந்த நேரத்தில் மறந்தேன். சட்டென்று, 'ஆம்! உலகத்திற்கு ஓர் உதாரண மாகத் திகழுவோம்!' என்ற சொற்கள் என் வாயிலிருந்து வெளிப்பட்டன. இப்படிக் கூறியவாறு நான் எனது கையை உதறினேன். அதைப் பார்த்துச் சுந்தரிக்கு என்ன தோன்றி யிருக்கும்? அவள் ஒன்றும் பேசவில்லை. நான் சிறிது நினைவுக்கு வந்தேன். எனக்கே என்னவோபோல் இருந்தது. அந்தக் கடிதத் தைச் சுந்தரியின் முன்னால் நீட்டியவாறு நான் சொன்னேன்: 'இந்தக் கடிதத்தை எந்தக் கைகள் எழுதினவோ, அதே கைகள் இன்னும் என்ன என்ன பெரிய பெரிய காரியங்கள் சாதிக்க மாட்டா? அக்காவை இங்கு வரவழைத்து அவள் விருப்பப்படி அவளைப் பள்ளிக்கு அனுப்ப ஏற்பாடு செய்தாலென்ன? அப்படிச் செய்வதைத் தவிர இப்பொழுது நமக்கு வேறு வழியே இல்லை என்று தோன்றுகிறது.'

இவ்வளவு பேசி, அவளிடமிருந்து என்ன பதில் வருகிறது என்று எதிர்பார்த்த வண்ணம் நான் நின்றேன். கணப்பொழுது கழிந்ததும் அவள் தனது வருத்தம் தோய்ந்த, ஆனால், இனிய பாணியில் என்னிடம் சொன்னாள்: 'நீங்கள் சொல்வது என்னமோ முற்றும் உண்மை. ஆனால், எந்தக் காரியத்தையும் நன்கு ஆலோசிக்காமல் செய்யக்கூடாது.'

'வெகுதூரம் இப்பொழுது என்னவென்று யோசிக்க முடியும்? மேலும் அவ்வளவு தூரம் யோசிப்பதற்கு இப்பொழுது சமயமும் எங்கு இருக்கிறது?' நான் சிறிது பொறுமை யிழந்து, சிறிது எரிச்சலுடன் அவளைத் திருப்பிக் கேட்டேன்.

'யோசிப்பதற்குச் சமயம் இல்லை என்று எப்பொழுதுமே ஏற்படாது. சமயம் இல்லை என்று யோசிக்காமலேயே ஒரு சில காரியங்களைச் செய்துவிடுவது சரியல்ல என்று எனக்குத் தோன்று கிறது. நீங்கள் திடீரென்று அக்காவை இங்கு அழைத்து வந்தால், மாமா என்ன சொல்வார்? அவர் இன்றுவரை

எந்த விதத்திலும் அவளைத் துன்புறுத்தவில்லை. அப்படியிருக்க நீங்கள்தான் இப்படித் திடீரென்று அவரை எதற்குப் புண்படுத்த வேண்டும்? இரண்டாவதாக, மாமாவைப் புண்படுத்தியதன் காரணமாக அவர் தமது உதவியை நிறுத்திவிட்டால், அது சரியாயிருக்குமா? இன்று உங்களுக்கு அவருடைய உதவி எவ்வளவு தேவைப்படுகிறது?'

'யாருக்கு? எனக்கா? எனக்கு உதவியின் அவசியம் இருக்கிறது என்று நான் அக்காவை எவ்வளவு நாட்கள் இந்த நரகவேதனையை அநுபவிக்க வைக்க முடியும்? சே சே! அப்பப்பா என்றால் மாமா எனக்கு உதவி செய்யாமல் போய்விடுவார். அவ்வளவுதானே? அதனால் எனக்கு ஒரு வருத்தமும் ஏற்படாது.' நான் அவளையே பார்த்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தேன். அவள் கீழே தரையின்மீது பார்வையைச் செலுத்தியவண்ணம் நின்றுகொண் டிருந்தாள். அதற்குள் அவள் முகத்தில் கவலையின் சாயல் பரவியதுபோல் தோன்றியது. நாம் அடக்கமின்றிப் பேசி விட்டோம் என்பதற்காக அவள் வருந்தியிருக்க மாட்டாளே? இப்படி என் மனத்தில் தோன்றவே, நான் பேசியதை எல்லாம் மீண்டும் உள்ளத்தில் சொல்லிப் பார்த்துக்கொண்டேன்; அவளுக்குப் பிடிக்காத வகையில் ஏதேனும் சொல்லிவிட்டோமா என்ன என்று உள்ளத்தினுள் துழாவிப் பார்த்தேன். ஆனால், அப்படி ஒன்றும் இருந்திருக்காதுதான். ஏனெனில் சிறிது நேரத்தில் அவள் சொன்னாள்: 'ஆனால், நீங்கள் என்ன செய்யப் போகிறீர்களோ? அதனால் அக்காவிற்குச் சுகம் ஏற்படத்தான் செய்யும் என்று நிச்சயமாக எப்படிச் சொல்ல முடியும்?'

'அப்படியென்றால் . . .?' இவ்வாறு கேட்டுப் பதிலை எதிர் பார்த்தவண்ணம் நான் சுந்தரியைப் பார்க்கலானேன். ஆனால், எனது இந்தப் பொறுமையிழந்த கேள்வியினால் சிறப்பாக ஒரு பயனும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஏனெனில், அவள் முன் போலவே அமைதியுடன் சொன்னாள்.

'ஊராரைப்பற்றி நான் ஒன்றுமே சொல்லவில்லை. ஆனால், அக்காவிற்கு அவள் கணவனிடமிருந்து இடையூறு ஏற்படாமல் இருக்கும் என்று எப்படிச் சொல்ல முடியும்? அவள் பள்ளிக்குச் செல்லத் தொடங்கினாள் என்று தெரிந்ததும் அவர் தினமும் வந்து தொல்லை கொடுக்க ஆரம்பித்தால் என்ன ஆகும்? அப்படி அவர் செய்ய முடியாதா என்ன?'

இந்தப் பேச்சைக் கேட்டு முதலில் நான் அடங்கிவிடவில்லை. ஒரேயடியாக, 'ம்! அந்தக் கடன்காரன் என்ன செய்துவிடுவான்? அவனுக்கு என்ன சாமர்த்தியம் இருக்கிறது?' என்று நான் சட்டென்று சொல்லிவிட்டேன். ஆனால், 'சுந்தரியின் பேச்சில், அவள் தோற்றுவித்த சந்தேகத்தில், ஓர் உண்மை இருக்கிறது. நன்றாக யோசித்துப் பார்க்கவேண்டும்' என்றும் எனக்கு உடனேயே தோன்றியது. இறுதியில், மறுநாளே புறப்பட வேண்டும் என்று இருந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டு, அண்ணாவிடம் எல்லா விவரங்களையும் சொல்லி, அவர் கருத்து என்னவோ அதன்படியே செய்வதற்கு நாங்கள் முடிவு செய்தோம்.

# 39. புரட்சியின் துவக்கம்

மாமாவுடன் ஆலோசனை செய்த பின்னர் மேற்கொண்ட முடிவின்படி நான் போய் அக்காவை அழைத்துக்கொண்டு வந்து விட்டேன். அழைத்து வருவதில் ஏற்பட்ட இன்னல்கள் கொஞ்ச நஞ்சமல்ல. ஆனால், நான் அவளை அழைத்து வரவும், அவள் என்னுடன் புறப்பட்டு வரவும் முடிவு செய்திருந்ததால், நாங்கள் அந்த இன்னல்களைச் சுலபமாகச் சமாளித்தோம். மாமா அந்தச் சமயத்தில் வீட்டில் இருக்கவில்லை. ஜில்லாவில் சுற்றுப் பயணம் செய்யப் போயிருந்தார். ஒரு கடிதத்தை எழுதி நான் அவருக்கு எனது முடிவைத் தெரிவித்தேன். மேலும் மாமிகள், பாட்டி இவர்களுடைய பேச்சு—கூச்சல்களில் சிறிதும் கவனம் செலுத்தாமல், 'இந்த இரண்டு பாவிகளும் என்றும் உருப்படமாட்டார்கள் என்று நாங்கள் ஊகித்தே இருந்தோம். நூலைப்போல்தானே சேலையும். அப்பாவைக் கொண்டவன்; அவர் நாடோடியாகப் போனார். அப்படித்தான் இவனும் விளக்கு ஏற்றப்போகிறான்' முதலிய அவர்களுடைய பேச்சுக்களை அசட்டை செய்து, எங்கள் திட்டங்களை நாங்கள் வெற்றிகரமாகச் செயல்படுத்தினோம்.

அக்காவை நான் அழைத்து வந்த நான்காவது அல்லது ஐந்தாவது நாளே அவள் விருப்பப்படி அவள் சுந்தரியுடன் பள்ளிக்குப் போவதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டேன். அவளுடைய முழு வரலாற்றையும் கேட்டு மிகவும் வருத்தமுற்ற தலைமை ஆசிரியை, அவளுக்கு ஏதோ சம்பளச் சலுகை கிடைக்கவும் ஏற்பாடு செய்தார்கள். இவ்வாறாகத் துவக்கத்தில் எத்தனையோ எதிர்ப்புகளுக்கு இடையில் எங்களுடைய காரியங்கள் யாவும் அநுகூலமாகவே முடிந்தன. எத்தகைய இடையூறும் ஏற்படவில்லை. அக்கா இங்கு வந்திருக்கிறாள் என்ற செய்தி இன்னமும் அவள் கணவனுக்குத் தெரிந்திருக்காது என்று தோன்றியது. இவ்வாறே இன்னும் சில நாட்கள் கடந்து விட்டால் பிறகு கவலையில்லை என்று நினைத்து நாங்கள் மகிழ்ந்தோம்.

அதற்குள் எனக்கு ஒரு நாள் ஒரு கடிதம் வந்தது. அது மாமாவின் கடிதமாக இருந்தது. மாமாவின் கடிதம் வருவதற்கு ஒரு

காரணமும் இருக்கவில்லை. ஏனெனில், அக்காவை அழைத்து வரும்பொழுது அவர் வீட்டில் இல்லாத காரணத்தினுல், நான் அவருக்கு எழுதிய கடிதம் அவருக்குக் கிடைத்த பிறகும், அவர் எனக்கு ஒரு பதிலும் எழுதியிருக்கவில்லை. நமது பக்கத்திலிருந்து கடிதம் முதலியன எழுதுவதில் ஒரு குறையும் வைக்கவேண்டாம் என்று கருதி, நான் அவருக்கு வழக்கம்போல் கடிதங்கள் எழுதிக் கொண்டுதான் இருந்தேன். நான் இவ்வாறு செய்வது வெறும் வெளிவேடம் என்று அவருக்குத் தோன்றும். குறைந்தபட்சம் அவ்வாறு அவருக்குத் தோன்றவேண்டும் என்பதற்காக மாமிகள், பாட்டி ஆகியோர் கூட்டத்தின் முயற்சி தொடங்கும் என்பதைப்பற்றியும் எனக்குச் சந்தேகம் இருக்கவில்லை. ஆனுல், அவ்வாறு நானே சந்தேகம் கொண்டு நானுகவே கடிதப் போக்குவரவை நிறுத்துவது எனக்குச் சரியாகப் படவில்லை. என்னுடைய கடிதங்களுக்கு மாமாவிடமிருந்து பதில் கிடைக்க வில்லை என்றபோதிலும்கூட, ஓர் ஆண்டு முழுவதும் என் தரப்பி லிருந்து கடிதங்களை ஒழுங்காக அனுப்பிக்கொண்டிருக்க நான் முடிவு செய்தேன். ஆனுல், அது சாத்தியமாகாமல் போயிற்று. அக்காவை அழைத்து வந்து முழுசாக ஒரு மாதம் ஆவதற் குள்ளேயே மாமாவின் கடிதம் வந்திருக்கவேண்டும் என்று நினைக்கிறேன்.

மாமாவைப்பற்றி எனக்கு மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது. மாமாவின் எண்ணங்கள் இவ்வாறு இருக்கும், மாமாவிற்கு இப்படியும் கடிதம் எழுதத் தெரியும் என்று நான் சிறிதும் எதிர் பார்த்திருக்கவில்லை. அவரைப்பற்றிய என் எண்ணங்கள் கிட்டத்தட்ட இந்த வகையில்தான் அமைந்திருந்தன. ஏதோ மாமா என்று நமக்கு ஒருவர் இருக்கிருர்; மெள்ள மெள்ள முன்னேறிப் பெரும் பதவியை அடைந்தவர்; தம்முடைய சொற்பமான ஆங்கில மொழி அறிவுடனேயே காரியத்தை நடத்திக்கொள்பவர். 'இராமனுக்கும் அமைதி, இராவணனுக்கும் அமைதி' என்று குடும்ப வண்டியை நல்லது, தீயது எதனுலும் பாதிக்கப்படாமல் ஓட்டிச் செல்பவர். பெரிய எண்ணத்திலோ அல்லது பெரிய காரியத்திலோ ஈடுபடுவதற்கு வேண்டிய திண்மை, விருப்பம் இரண்டுமே இல்லாத மனிதர். ஆனுல், இன்றைய அவருடைய இந்தக் கடிதத்திலிருந்து, அதுவும் அக் கடிதத்தில் கண்டிருந்த செய்தியிலிருந்து, நான் நினைத்த தெல்லாம் தவறு என்றும், தமது பரம்பரையில் வந்தவர்களைப்

போலவே எண்ணக்கூடிய திறமையும், அந்த எண்ணங்களை நல்ல தெளிவும், வேகமும் உள்ள மொழியில் எழுதி வெளிப் படுத்தும் அறிவும் மாமாவுக்கும் இருக்கிறது என்பதை நான் அறிந்தேன். நான் அவர் கடிதத்தை மீண்டும் மீண்டும் படித்துப் பார்த்தேன். படிக்கப் படிக்க, அக்கடிதத்தின் பொருட்செறிவு, பதப் பிரயோகங்களின் நேர்த்தி, அதில் அடங்கியிருந்த அறி வுரையின் சிறப்பு ஆகியவை என்னைக் கவர்ந்தன. என் மனம் அவற்றைப் பாராட்டியது. மாமாவிடம் எனக்கு ஒரு புதிய மதிப்புத் தோன்றியது. கடிதம் பெரும்பாலும் அமைதியான தொரு தொனியில் எழுதப்பட்டிருந்தது இந்த மதிப்பை அதிகரித்தது.

சிவராம் பந்த் அவர்கள் எப்படி எனக்குக் கடிதம் எழுது வாரோ, அதேபோன்று இந்தக் கடிதம் எழுதப்பட்டிருந்தது என்று சொன்னாலும் பொருந்தும். நான் நினைத்திருந்தது முற்றும் பொய்யாயிற்று. வந்தால், மாமாவிடமிருந்து திட்டி எழுதிக் கடிதம் வரும் அல்லது கடிதமே வராது என்று எனக்குத் தோன்றியிருந்தது. ஒரு வேளை கொஞ்சம் திட்டியும், கொஞ்சம் இனிய முறையிலும் எழுதி, நான் மேற்கொண்டிருக்கும் வழியி லிருந்து என்னைத் திருப்பிவிடுவதற்கு முயற்சி செய்வார் என்றும் ஒரு முறை தோன்றியது. இல்லை, விடுமுறை எடுத்துக்கொண்டு நம்மிடம் வருவார், வந்து அக்காவை அழைத்துச் செல்வார் என்றும் ஒரு முறை தோன்றியது. ஆனால், இவற்றுள் ஒன்று கூட நடக்கவில்லை. அவருடைய கடிதம் என்னுடைய எதிர் பார்ப்புகளுக்கு முற்றும் மாறாக அமைந்திருந்தது. எங்கள் இருவரின்மீதும் அவர் சீற்றமும், வருத்தமும் அடைந்திருந்தார் என்பது மட்டும் வெளிப்படையாகத் தெரிந்தது. கடிதத்தின் முதற் பாகத்தில் பழித்து எழுதிய வாக்கியங்களும், கடிதம் முழுதிலும் இருந்த 'தாங்கள்', 'தங்களுடைய சகோதரி' (அக்கா வின் பெயர் எங்குமே குறிப்பிடப்படவில்லை), 'தங்களைப் போன்ற மனிதர்கள்' என்னும் மரியாதையை (?)க் குறிக்கும் வார்த்தைகளும், அவருடைய மனோநிலை எப்படி இருந்தது; குறைந்த பட்சம் கடிதம் எழுதத் தொடங்கிய சமயத் தில் அவருடைய உள்ளம் எவ்வளவு கொதிப்பும், கோபமும் கொண்டதாக இருந்தது என்பதற்குச் சாட்சியாக இருந்தன. ஆனால், கடிதம் எழுத எழுத அவர் உள்ளத்தின் கொதிப்பு குறைந்து அமைதி கொள்ள ஆரம்பித்தது என்றும் தோன்றியது.

ஏனெனில், கடிதத்தின் கடைசிப் பகுதி மிகவும் அமைதியான முறையில் அமைந்திருந்தது. அவர் ஏதாவது உள்நோக்கத்துடன் இவ்வாறு அமைதியாக எழுதவில்லையோ என்றுகூடச் சந்தேகம் ஏற்பட்டது. கடிதத்தைப் படித்து முடித்த பின்னர் நான் வெகு நேரம் யோசனையில் ஆழ்ந்தவாறு அமர்ந்திருந்தேன். இறுதியில், நான் எந்த நோக்கத்துடன் அக்காவை இங்குக் கொண்டு வந்தேனே, அந்த நோக்கம் திட்டமிட்டவாறு நிறைவேறு மானல், அதனுல் ஒன்றும் கெட்டுப்போகவில்லை என்று மாமா விற்கும் ஒரு வேளை தோன்றியிருக்கும் என்று எனக்குப் பட்டது. அக்கா அறிவு கூர்மை கொண்டவள்; அந்த அறிவு துருப்பிடித்துப் போவதைவிட, இவ்வாறு ஊட்டம் பெற்று வளர்ச்சியடைவது நல்லதுதானே என்றும் அவருக்குத் தோன்றியிருக்கலாம்.

இவ்வாறு உண்மையிலேயே அவருக்குத் தோன்றியதோ இல்லையோ, ஆனுல் அப்படித் தோன்றியதாகக் குறைந்தபட்சம் நான் என் மனத்தில் தோன்ற வைத்துக்கொண்டு எனக்கு ஆறுதலளித்துக் கொண்டேன். எங்காவது சிறிது வாய்ப்புக் கிடைத்தாலும், மனிதன் தான் விரும்பியபடி அனுகூலமான அல்லது பிரதிகூலமான கற்பனையைச் செய்து இன்பமோ, வருத்தமோ அடைகிறுன். இந்த எனது செயலும் அப்படிப் பட்ட ஒன்றுதானே, என்னவோ?

அக்காவின் கணவன் இது சம்பந்தமாக இன்னமும் ஒரு தொல்லையும் கொடுக்கவில்லை. சமீபகாலமாக அவன் என் கண் களிலும் கூடப் படவில்லை. இதைப்பற்றி மட்டும் எனக்குச் சில சமயங்களில் மிகுந்த ஆச்சரியம் ஏற்படும். இதனுல் என்னுடைய எல்லாத் திட்டங்களும் இடையூறின்றிக் கைகூடும் என்ற ஆறுதல் எனக்கு ஏற்பட்டது. அக்காவின் படிப்பு விரைவாக முன்னேறிக் கொண்டிருந்தது. உயர்ந்த அறிவு, அதையும்விட மிக அதிக மான ஆர்வம், இடைவிடா உழைப்பு இந்த மூன்றும் ஒன்று சேர்ந்தால் எதுதான் நிறைவேறுமற் போகும்?

எங்கும் அமைதி நிலவியது. காற்று அடையாளங்கூட இல்லை. இந்த அநுகூலமான சூழ்நிலையைப்பற்றிச் சில சமயங்களில் எங்களுக்கே மிகுந்த ஆச்சரியம் ஏற்படும். ஆனுல், இந்த அமைதி பின்னுல் வரவிருந்த பெரும் புயலின் முன் அடையாளந் தான் என்பதை நாங்கள் பின்னுல் அறிந்தோம்.

# 40. இறுதியில்

சனிக்கிழமையன்று சுந்தரிக்கும், அக்காவிற்கும் முழு நாளும் விடுமுறையாக இருந்தது. எங்கள் வகுப்பிற்கும் அன்றைய தினம் பாடம் இருக்காததால் நான் வெள்ளிக்கிழமை மாலையி லேயே ஊருக்கு வந்திருந்தேன். இரவில் நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்பொழுது, பேச்சுவாக்கில் உடற்பயிற்சியைப் பற்றிய பேச்சு கிளம்பியது. 'காலை நேரத்தில், திறந்தவெளியில் செய்யும் தேகப்பயிற்சிதான் மிகச் சிறந்தது என்று ஓரிருவர் கூறினார்கள். ஆகவே, தினந்தோறும் இல்லை என்றாலும், அவ்வப்பொழுது வெளியில் உலாவிவர ஏன் செல்லக்கூடாது?' என்று நாங்கள் நினைத்தோம்.

மறு நாள் காலையில் சூரியோதயத்திற்கு முன்னால் எங்கே யாவது உலாவி வரச் செல்வது என்று அப்பொழுதே முடிவு செய்தோம். அண்ணா வருவதா வேண்டாமா என்று யோசித்துக்கொண்டிருந்தார். நாங்கள் அவர் மனத்தை எங்கள் வழிக்குத் திருப்பினோம். சுந்தரியின் அம்மாவை வரச் செய்வது மட்டும் எளிதாக இருக்கவில்லை. ஏனெனில், வீட்டில் யாராவது இருந்து பதினொரு மணிக்குள் அண்ணாவிற் காகச் சமையலைச் செய்து வைக்கவேண்டி யிருந்தது. ஆகவே அவர் வருவதற்கு இணங்கவில்லை. இருந்தபோதிலும் நாங்கள் அவரையும் வற்புறுத்தி எல்லாரும் சேர்ந்து 'சதுர் சிருங்கி'யின் பக்கம் உலாவப் போய் எட்டு மணிக்குள் திரும்பி வந்துவிடுவது என்றும், அண்ணாவிற்கு நேரம் ஆகிவிடும் என்று தோன்றினால், அவருக்கு மட்டும் வேண்டிய அளவு சட்டென்று சாதம் வடித்து அவரை அனுப்பிவிட்டு, பிறகு மற்றவர்களுக்காக மெதுவாக ஆனாலும் பரவாயில்லை என்றும் முடிவு செய்தோம். இது எல் லாருக்கும் சௌகரியமான ஏற்பாடாக இருந்தது.

மறுநாள் விடிகாலையில் எழுந்து நாங்கள் எங்களுடைய முந்தின நாளின் முடிவின்படி புறப்படத் தயாரானோம். நாங்கள் கிளம்பிய சமயத்தில் வானம் நன்கு வெளுத்திருக்கவில்லை. மிக மங்கலான வெளிச்சந்தான் பரவியிருந்தது. இலேசான ஒரு குளிர் அந்த

நேரத்தை மிகவும் இன்பகரமாகச் செய்தது. எங்கள் எல்லோருடைய உள்ளங்களிலும் குதூகலம் நிறைந்திருந்தது. வீட்டிலிருந்து கிளம்பி ஊருக்கு வெளியில் செல்லும்வரை நாங்கள் அதிகம் ஒன்றும் பேசவில்லை. ஆனால் அவ்வாறு வெளியில் போனதும் ஓர் ஆட்டுக்குட்டி அல்லது கன்றுக்குட்டி காற்றுப் பட்டதும் ஒரேயடியாக ஆனந்தத்தால் துள்ளிக் குதிப்பதுபோல், எங்களுடைய உள்ளமும் துள்ள ஆரம்பித்தது. இளையவர்களாகிய எங்கள் உடலில் ஒரு புதிய விறுவிறுப்புத் தோன்றியது. அதற்கு முன்பும்கூட அந்தச் 'சதுர் சிருங்கி'யின் பக்கம் நான் அடிக்கடி வந்திருப்பவன்தான். ஆனால் அன்று ஏற்பட்ட அளவு இன்பம், அதற்குமுன் என்றுமே எனக்கு ஏற்பட்டதில்லை.

இளைஞர்களான எங்களுடைய போக்கு விரைந்து சென்று, 'இதைப் பார், அதைப் பார்' என்று சொல்வதில் இருந்ததாலும், தனக்காக எங்கள் போக்கைத் தடுத்து நிறுத்தும் அளவிற்குத் தன்னலம் கருதும் தன்மை அண்ணாவின் உடலில் இல்லாததாலும், அவர் தாமாகவே எங்களை மேலே தொடர்ந்து செல்லச் சொன்னார். அவர் சொல்வதற்கு முன்னாலேயே எங்கள் உள்ளமும், கால்களும் அவ்வேலையைச் செய்துகொண்டுதான் இருந்தன. சிறிது நேரத்திலேயே எங்களிடையே இருந்த இடைவெளி அதிகமாயிற்று. அதற்குள் அக்கா அருகில் இருந்த ஒரு குன்றின்மீது ஏறி, அங்கிருந்தவாறு உதயகால சூரியனின் சிவந்த வடிவம் மெள்ள மெள்ள மேலே எழும் அழகைப் பார்க்கலாம் என யோசனை சொன்னாள். அந்த யோசனை எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. நாங்கள் அந்தக் குன்றை நோக்கி நடந்தோம். குன்று அப்படி ஒன்றும் உயரமானதாக இருக்கவில்லை. அதன்மேலே செல்லும் பாதையும் நடப்பதற்குச் சிரமமானதாக இருக்கவில்லை. நாங்கள் அந்தக் குன்றின்மேல் நல்லதோர் இடத்தை அடைந்தோம்.

இன்பமானதோர் அநுபவம் ஏற்படும்போது நமது அன்புக்குரியவர்கள் அருகில் இருந்தால், அந்த இன்பம் பன்மடங்காகப் பெருகுகிறது. நாங்கள் குன்றின்மேலிருந்து கீழ்த்திசை வானைப் பார்த்த வண்ணம் நின்றோம். அது நடு நடுவே இடைவெளிகளுடன், மூன்று வர்ணங்கள் கொண்டதாக இருந்தது. பெரும்பாலும் சிவப்பு நிறம்; ஓரங்களில் சற்றே மஞ்சள் நிறமும் வெள்ளை நிறமும். இந்த வர்ணங்களில் ஒவ்வொரு கணமும்

மாறுதல் ஏற்பட்டவாறும் இருந்தது. சூரியன் மேலே செல்லச் செல்ல, எனக்குப் புதுமையானதொரு கிளர்ச்சி ஏற்பட்டவாறு இருந்தது.

அக்காவும் சுந்தரியும் மனிதனின் நற்குணங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்க, நான் மௌனமாக அவர்கள் இருவரின் பேச்சையும் கேட்டுக்கொண்டிருந்தேன். எனக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. அதற்குள் கறுப்பும் வெளுப்புமாக இருந்த ஒரு முயல் திடீரென்று தனது வளையிலிருந்து வெளிப்பட்டு வேகமாக ஓடியது. அதன் பக்கமாகச் சுந்தரியின் பார்வை செல்ல, எங்கள் கவனத்தையும் அவள் அதன் பக்கம் திருப்பினாள். அந்த ஒரு சிறு காரணத்தால், அவர்களுடைய சம்பாஷணையின் போக்கு மாறி, மீண்டும் இயற்கையின் அழகினைப்பற்றியும், இதேபோல் தினந்தோறும் காலையில் உலாவக் கிடைத்தால் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும் என்பதைப்பற்றியும் பேசுவதில் முனைந்தது. அதற்குள் பெரியவர்களும் எங்களைக் கூப்பிடலானார்கள். நாங்களும் சீக்கிரம் வீடு திரும்பவேண்டுமென்பது நினைவு வந்து, விரைந்து சென்றோம். இப்பொழுது நாங்கள் ஐந்து பேரும் ஒன்றாகச் சேர்ந்து நடக்கலானோம். 'நாங்கள் எப்படி நேரத்தைக் கழித்தோம், என்ன என்ன பேசினோம்?' என்பதைப்பற்றியெல்லாம் அண்ணா எங்களைக் கேள்வி கேட்டார். தனக்கும் சுந்தரிக்குமிடையே நடந்த விவாதத்தைப்பற்றி அக்கா விவரமாகக் கூறினாள். அண்ணா அதைக் கேட்டு வெறுமனே நகைத்தார். அவர் அதுபற்றி ஒன்றும் சொல்லவில்லை. இப்பொழுது நாங்கள் பாலத்தைக் கடந்து இறங்கி வந்திருந்தோம். மேலும் இப்பொழுது வருவோர் போவோரும் அதிகமாகிக்கொண்டே இருந்ததனால், எங்கள் பேச்சை நிறுத்தி வைக்கவேண்டி வந்தது.

நான் மிகவும் மௌனமாக நடந்துகொண்டிருந்தேன். ஆனால் காலையில் ஏற்பட்ட அநுபவத்தால் நான் மிகவும் மகிழ்ந்திருந்தேன். இந்த அநுபவம் எனக்கு மிகவும் புதுமையானதாக இருந்தது. எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்தில் நான் மிகவும் மூழ்கியிருந்ததால், சுற்றுப்புறக் காட்சிகள் எதுவும் என் மனத்தில் பதியவில்லை. இன்று என் மனத்தில் ஏதோ ஒரு வேலை சம்பந்தமாக மிகவும் விசித்திரமான ஓர் எண்ணம் தோன்றியிருந்தது. அதுவும் அந்த எண்ணம் என் கருத்துப்படி மிகவும் மகத்துவம் கொண்டதாக இருந்தது. எனது அன்றைய நிலையில், அந்த எண்ணத்தின் வெற்றி கானல் நீராகத்தான் இருந்தது. இருந்த

போதிலும் கானல் நீரைக் கண்டு ஏமாந்து போகும் மனிதர்கள் எவ்வாறு அந்த நீரின்மேல் ஆசை கொண்டு விடுகிறுர்களோ, அதேபோல் நான் அந்த எண்ணத்தின்பால் கவரப்பட்டுவிட்டிருந்தேன். 'அந்த எண்ணத்தைச் செயல்படுத்துவது சாதிக்க முடியாத காரியம் இல்லே. அதற்காக உழைக்கவேண்டும் என்பது தான் தேவை' என்று எனக்கு உறுதியாகப் பட்டது. அந்த எண்ணம் என்னேப்பற்றியதாக மட்டும் இருக்கவில்லே. இருந்தும் அதில் எனக்கு ஏதேனும் இடையூறு ஏற்படும் என்று எனக்குத் தோன்றவில்லே. இந்த எண்ணத்தைப்பற்றி இடையருது யோசிப்பதில் எனது அறிவைத் திளேக்க வைத்து நான் ஓர் இயந்திரப் பொம்மைபோல் நடந்துகொண்டிருந்தேன். என்னுடன் இருந்தவர்கள் சிறிது முன்ஞல் சென்றிருந்தார்கள். அதற்குள் என்னிடம் திடீரென்று யாரோ, 'என்ன பாவு ராவ், இப்பொழுது நீங்கள் இந்த வழியைத் தொடங்கியிருக்கிறீர்கள்போலிருக்கிறது?' என்று வினவினர். 'பாவு ராவ்' என்ற சொல்லேக் கேட்டவுடனேயே நான் திடுக்கிட்டேன். மேலும் என்னே இப்படிப் பரிகாசமான கேள்வியைக் கேட்பவன் யாராக இருக்கும் என்று மனத்தில் எண்ணி, சட்டென்று மேலே பார்த்தால், எங்கள் மைத்துனரின் வீட்டில் எல்லா வேலேகளேயும் கவனிக்கும் அவர் தோழர் என் முன்ஞல் நிற்கிறுர்.

அவரைப் பார்த்தவுடனேயே திடுக்கிட்டேன். உடலிலிருந்து சிறப்பாகச் செவிகளிலிருந்து ஆவி வந்ததுபோல் எனக்குத் தோன்றியது. நான் அளவற்ற கோபத்துடன் அவரைப் பார்க்கலானேன். ஆனுல், அந்த ஆள் சிறிதும் பின்வாங்காதவன். அவன் என்னிடம் சொன்ஞன்: 'தங்களுக்கு இந்த வழி சிறப்பானதாகத் தோன்றிஞலும், நமது மிகப் பழமையான குலத்திற்கு இது முற்றிலும் உகந்ததல்ல. எங்கள் காதில் அது விழவில்லே என்பதில்லே. ஆனுல் நாங்களே இதுவரை அதைக் கண்டுகொள்ளாதவராக இருந்தோம். ஆனுல், இனிமேலும் அதன் மீது கவனம் செலுத்தாமல் இருக்க முடியாது. வருகிறவர்களெல்லாம் எங்களேக் கேட்கிறுர்கள், ''என்னங்க! இது என்ன நீங்கள் ஆரம்பித்திருக்கிறீர்கள்? உங்களேப் போன்றவர்கள் இப்படிப்பட்ட விஷயங்களே மௌனமாகப் பார்த்துக்கொண்டிருக்கவேண்டுமா?'' என்று.'

நான் அந்தக் கடன்காரனின் இவ்வளவு பேச்சை எப்படித் தான் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தேனே என்று எனக்கே

பின்னர் ஆச்சரியம் ஏற்பட்டது. அவன் இன்னமும் பரிகாசம் செய்துகொண்டுதான் இருந்தான். நான் எனது சினத்தை உள்ளுக்குள்ளேயே விழுங்கிக்கொண்டிருந்தேன். அந்தச் சீற்றத்தின் முதல் அலை என்னைத் தனதாக்கிக்கொண்டிருக்குமேயானால், அப்பொழுது எனது கையால் மிகப் பயங்கரமான செயல் நடந்திருக்கும்; நான் அந்த மனிதனுக்கு நல்ல பூசை கொடுத்திருப்பேன். எனது கை அதற்காகத் துடிதுடித்துக்கொண்டிருந்தது. எங்களுடைய அம்மாவின் வேண்டாத வற்புறுத்தலால் அக்காவின் கல்யாணம் தாறுமாறாக நடந்தது என்பது உண்மைதான். எனினும் அதன் பின்னருங்கூட அவள் ஓரளவு சுகத்துடன் இருந்திருப்பாள். ஆனால் இந்த நேரத்தில் என் முன்னால் நின்று கன்னா பின்னா என்று பேசும் அந்தக் கடன்கார மனிதனால் அவள் குடும்பம் முழுதும் பாழடைந்தது. சில விஷயங்கள், என்றுமே அவற்றைப்பற்றிப் பேச முடியாதவாறு இருக்கின்றன. நாம் தனிமையில் இருக்கும்போதுகூட, நமது உள்ளத்தில் அவற்றைப்பற்றி எண்ணிப் பார்ப்பதற்கும் அச்சம் ஏற்படுகிறது. வேறு என்ன சொல்ல? என் அத்திம்பேரின்மீது இந்தப் பாவி மனிதனின் பாரம் விழுந்திருந்தது. மேலும் அவன் வீட்டைத் துடைத்து வழித்துக் கட்டும் காரியங்களில் இறங்கியிருந்தான். அப்படிப்பட்ட காரியங்களில் ஒன்றாகத் தான் இதுவும் இருந்தது. அவனைப்பற்றிப் பேசுவதுகூட எனக்கு இன்பமளிக்கும் செயலாக இல்லை. தெருவில் சந்திக்காமல் வேறு எங்காகிலும் அவன் எதிர்ப்பட்டிருந்தால், அவனுக்கு நன்றாகக் கற்பித்திருப்பேன். ஆனால், என்னுடைய கோபம் இன்னும் எல்லையைத் தொட்டிருக்கவில்லை. நான் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தேன். கேட்கக் கேட்கப் பின்வரும் சொற்கள் என் காதில் விழுந்தன:

'எங்களுக்கு என்ன? எல்லாருக்கும் நாங்கள் சொல்வது இது தான்: ''அவள் ஒரேயடியாகப் போய்விட்டாள் என்று நாங்கள் எண்ணிக்கொள்கிறோம்.'' அதனால் என்ன? ஊரில் எத்தனை பேர் ஓடிப் போகவில்லை?'

வாசகர்களே! ஈயத்தைக் காய்ச்சிக் காதில் ஊற்றிய அநுபவம் என்றாவது யாருக்கேனும் ஏற்பட்டிருக்கிறதா? இருக்காது. ஆனால், எனக்கு அது அந்த நேரத்தில் ஏற்பட்டது. அவருடைய அந்தக் கொடிய வார்த்தைகள் எனக்கு அதுபோல் தோன்றின. நான் கோபத்தில் கண்மண் தெரியாதவன் ஆனேன்.

என் கைகள் மின்னல் வேகத்தில் என் காலணிகளை நோக்கிச் சென்றன. எண்ணக் குறைவும் அளவற்ற சீற்றமும் என்னை முழுதும் கவ்விக்கொண்டன. நான் காலணியை எடுத்து அவனை அடிக்கும் எண்ணத்தைக் கொண்டேன். இதைச் சொல்ல எனக்கு மிகவும் வெட்கமாக இருக்கிறது. ஆனால், நடந்ததைச் சொல்லத் தானே வேண்டும்? நான் கையில் காலணியைத் தூக்கினேனோ இல்லையோ, உடனேயே அந்தக் கடன்காரன் திடுக்கிட்டுப் பின்வாங்கினான். அவன் மட்டும் அந்தச் சமயத்தில் அப்படிப் பின்னால் நகர்ந்திருக்கவில்லை என்றால், அன்றைய தினம் என் கையால் நடுத்தெருவில் எல்லோர் முன்னிலையிலும் மிகவும் முட்டாள்தனமான அந்தக் காரியம் உண்மையிலேயே நடந்து, பின்னால் எத்தனையெத்தனை துன்பங்களுக்கு அது காரணமாகி யிருக்கும் என்பதைப்பற்றி ஒன்றும் சொல்ல முடியாது. ஆனால், நல்ல வேளையாக, அப்படி ஒன்றும் என் கையால் நேரவில்லை. அந்தப் பாவி மனிதன் பின்னோக்கி நகர்வதற்கும், அதே சமயத் தில் நான் நினைவு பெற்று 'இது என்ன, என் கையால் நடக்க இருந்தது?' என்று மனத்தில் நினைப்பதற்கும் சரியாக இருந்தது. அந்த ஒரு நிமிடமானது என்னைக் காப்பாற்றியது. வெறி சற்றே அடங்கி நான் அமைதியடைந்தேன். நம் அன்பிற்குரிய சகோதரியை, இப்படிப்பட்ட ஒரு மனிதன், 'அவள் ஓடிப்போய் விட்டாள்' என்று நம்மிடமே சொன்னால், அதைவிட நம் கோபத்திற்கு வேறு என்ன காரணம் வேண்டும்?

அந்த ஆளின் சொற்கள் என் மண்டையில் சுழன்றுகொண் டிருக்க, நான் தனியாக வீடு நோக்கி நடந்தேன்.

வீட்டினுள் நுழைந்ததுமே முதலில் அக்காதான் என் கண்ணில் பட்டாள். அவள் உடனே, 'யார் அவன் உன்னைச் சந்தித்தவன்? என்ன அவ்வளவு பேசிக்கொண்டிருந்தாய்? இப்படித் திடுக்கிட்ட வன்போல் ஏன் காணப்படுகிறாய்?' என்ற கேள்விகளைக் கேட் டாள். இப்படி அவள் கேட்டதும், மிகப் பாடுபட்டு நான் அடக்கி வைத்திருந்த கண்ணீர், கரை உடைந்து பெருகியோடும் வெள்ளம்போல என் கண்களிலிருந்து ஓடத் தொடங்கும்போல் இருந்தது. நான் சட்டென்று ஒரு பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டு, அங்கிருந்து விரைவாக வேறிடத்துக்குச் சென்றேன்.

அண்ணாவின் அறைக்குச் சென்று நான் எனது கல்லூரி நோட்டுப் புத்தகம் ஒன்றை எடுத்து, அதில் ஏதோ எழுதும் நோக்கத்துடன் உட்கார்ந்தேன். அதற்குள் அறைக்கு வெளியில்

யாரோ ஏதோ முணுமுணுத்துக்கொண்டிருப்பதுபோல் எனக்குத் தோன்றியது. அப்படி முணுமுணுத்துக்கொண்டிருப்பது அக்காவும் சுந்தரியுந்தான் என்றும் தோன்றியது. ஆனால், அவர்கள் என்ன பேசிக்கொண்டிருந்தார்கள் என்பதை அறிய நான் செய்த முயற்சிகள் வீணாயின. 'முற்றும் நிச்சயமாகத்தான்', 'அவன்தானடீ சுந்தரே', 'ஏதோ' நடந்திருக்கிறது', 'மூடி வைக்கப் பார்த்துக்கொண்டிருந்தான்' என்ற சில வார்த்தைகள் என் காதில் விழுந்தன. அவ்வளவுதான். முழு வாக்கியமாக ஒருவருடையதும் கேட்கவில்லை. அதற்குள் கதவின்மீது யாரோ கை வைத்தார்கள் என்றும் எனக்குத் தோன்றியது. உடனேயே நான் எனது வேலையில் முற்றும் ஆழ்ந்துபோனவன்போல் கீழே பார்க்க ஆரம்பித்தேன். அக்கா உள்ளே நுழைந்தாள். நேரே என்னிடம் வந்து சொல்லலானாள்: 'தம்பி, உண்மையாகச் சொல். காலையில் அந்தப் பாவி உன்னிடம் என்ன சொல்லிக் கொண்டிருந்தான் என்பதை நான் அவனைத் தொலைவிலிருந்து கவனித்தேன். யார் என்பதை நன்றாக உணர்ந்துகொண்டேன். நான் அறிவைப் பயன்படுத்தி எல்லாம் தெரிந்துகொண்டிருக்கிறேன். எனினும், உன் வாய் மூலமாக அதை எனக்குத் தெரியப்படுத்து.'

அவளுடைய அந்தப் பேச்சைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். அவள் அவனைப் பார்த்திருப்பாள் அல்லது அறிந்திருப்பாள் என்று நான் சிறிதும் நினைத்திருக்கவில்லை. இவர்கள் யாவரும் வெகுதூரம் சென்ற பிறகு முற்றும் வேறான பாதையிலிருந்து வந்து அவன் என்னை மடக்கியிருந்தான். அதைத் தவிர, இன்னாருடன் பேசிக்கொண்டு நின்றிருந்தேன் என்பதை, தான் அறிந்திருந்ததாக அவள் அதுவரை காண்பித்திருக்கவில்லை. அப்படி இருக்கும்பொழுது, திடீரென்று அவள் இப்படிக் கேட்டதும் நான் திடுக்கிட்டேன். இப்பொழுது இவளுக்கு என்ன சொல்வது என்று எண்ணி நான் குழப்பம் அடைந்தேன் என்றால், அதில் ஆச்சரியம் என்ன? ஆனால், அவள் உடனேயே என்னிடம் சொன்னாள்: 'நீ என்னிடமிருந்து எதையுமே ஒளித்து வைக்காதே. இனிமேல், யாராவது ஏதாவது சொன்னதைப்பற்றி என் காதில் விழுந்தாலுங்கூட எனக்கு அதனால் ஒன்றும் தோன்றப் போவதில்லை. நான் வீட்டில் இருக்கும்பொழுது என் கண் முன்னால் நடந்த அநியாயமான நிகழ்ச்சிகள், எனக்குக் கேட்கவேண்டி வந்த தொடர்பற்ற, அநியாயமான பேச்சுக்கள், எனக்குப்

பொறுத்துக்கொள்ளவேண்டி வந்த சொந்தத் தாயைப்பற்றிய நிந்தனைகள்—இவற்றிற்கும் மேலாக இனியும் ஏதாவது இருக்கப் போகிறதா? அடே, நீ எதற்காக இப்படிப்பட்ட விஷயங்களை மனத்தில் உறைக்க அநுமதிக்கிறாய்? யாராவது ஏதாவது சொன்னாலுங்கூட, இந்தக் காதால் கேட்டு அந்தக் காதால் விட்டுவிடு. அதனுடைய அநியாயத்தை மனத்தில் கொள் ளாதே. நான் இப்பொழுது நல்ல கல்மனம் கொண்டவளாகி இருக்கிறேன். தினந்தோறும் பள்ளிக்கூடத்திற்குப் போகும் பொழுது காலிப்பசங்கள் வழியில் இடையறாது பரிகாசங்கள் செய்து வந்ததையும், இன்னமும் அவ்வப்பொழுது செய்து வரு வதையும், அவர்கள் பேசும் பேச்சையும் கேட்டு, எனது செவி களும், மேலும் எனது உள்ளமும்கூட இப்பொழுது கல்லைப்போல் கடினமாகிவிட்டிருக்கின்றன. இந்தப் பரிகாசக்காரர்கள் மிகவும் உதவி செய்பவர்கள்தான் என்றுகூடச் சுந்தரியும், நானும் சொல்லி வருகிறோம். அவர்கள் இப்படி ஏளனம் செய்திருக்க வில்லை என்றால் உள்ளம் சுட்டுக் காய்ந்து இவ்வாறு உறுதியடைந் திருக்காது, அல்லவா? தங்கத்தின் தரத்தைப் பரீட்சிக்கும் கல் போன்றவர்கள்தான் அவர்கள். எங்களுக்கு ஒன்றுமே தோன்றுவ தில்லை. அப்படியிருக்க உனக்கு ஏன் இவ்வளவு வருத்தம் ஏற்படு கிறது? ஏதாவது சிறப்பாக இருக்குமானால், நிச்சயமாக நீ எனக்குச் சொல். மனத்தில் ஒன்றும் வைத்துக்கொள்ளாதே. சொல், அந்தப் பாவி என்ன சொன்னான் என்று!'

அக்காவின் இந்த வீரம் மிக்க பேச்சைக் கேட்டு, நான் உண்மை யாகவே என்னையே எண்ணி வெட்கம் அடைந்தேன்.

# 41. இது என்ன எதிர்பாராதது?

அதே நாள் காலையில், என் பெயருக்குக் கல்லூரிக்கு வந்திருந்த ஒரு கடிதத்தை என்னுடைய நண்பன் என் கையில் கொண்டு வந்து கொடுத்தான். அந்தக் கடிதத்தினுல் எதிர்பாராத ஓர் இடத்திலிருந்து ஒரு புதுத் தொல்லை முளைத்தது. அந்த இடம் சிறிதும் எதிர்பாராததாக—என்றுமே மனத்தில் வராததாக—இருந்தது. அதனுல் அதைப் படித்ததும் நான் மிகுந்த விசித்திர நிலையை அநுபவித்தேன். எங்களுடைய தகப்பனுர் மறுபடியும் என்றுவது எங்களுக்கு எழுதுவார் என்ருே அல்லது 'டக்'கென்று எங்கள் முன்னுல் வந்து நின்று, 'அடே, நீங்கள் என்னை எப்படி மறந்தீர்கள்? நானும் உங்களுடைய இன்ப துன்பங்களுக்குக் காரணமாக இருக்கிறவன்தான்' என்று சொல்லுவார் அல்லது தோன்ற வைப்பார் என்ருே, நாங்கள் சிறிதும் எதிர்பார்த்திருக்கவில்லை.

அந்தக் கடிதம் அவரிடமிருந்துதான் வந்திருந்தது. 'வெகு நாட்களாக நான் அங்கு வரவேண்டும், வரவேண்டும் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனுல், சில நாட்களாக முடியப் போகிறது, முடியப்போகிறது என்ற நிலைக்கு வந்துகொண்டிருந்த என்னுடைய வேலை இப்பொழுது முற்றும் முடியும் நிலையை அடைந்துகொண்டிருக்கிறது. சனீச்வரனின் ஜபம் நடந்து கொண்டிருக்கிறது. இப்போதைக்கு என்னுடைய மற்றக் கிரகங்களும் நன்ருக இருக்கின்றன. அப்பொழுது இந்த வேலை அமோகமான அளவில் வெற்றியடையத்தான் போகிறது. வேலை வெற்றி பெற்றுவிட்டால் பிறகு உங்களுக்கு என்ன கவலை? பணத்துக்குக் குறைவே இருக்காது. உன்னை நான் சிவில் சர்வீஸ் பரீட்சைக்கு அனுப்புவேன். விரும்பினுல், வக்கீல் படிப்பையும் மேற்கொள். இரண்டு பரீட்சைகளையுமே எழுதினுயானுல் மிகவும் உத்தமம். இப்பொழுது பணக் குறைவு ஒன்றும் இல்லை. இந்த வேலை முடிகின்ற நாள், பத்தாயிரம் ரூபாய் என் கைக்கு வரப்

போகிறது. அதை முழுதாக உன் பெயரில் பாங்கில் வைத்த தாகக் கொள். என் கைகளில் ஒன்பது விரல்களின்மீது சங்கு இருப்பதால் எனக்குப் பணம் சேர்க்க இவ்வளவு தாமதம் ஆயிற்று. ஆனல், ஒரு விரலின்மீது சக்கரம் இருப்பதால், தாமதம் ஏற்பட்டுங்கூட, இறுதியில் பணம் கிடைத்துவிட்டது. அந்த ஒரு சக்கரம் மட்டும் இல்லாமல் இருந்திருந்தால், ''பத்து சங்குகளை உடையவன் ஊதாரி'' என்ற நிலை ஏற்பட்டிருந்திருக்கும். அவள் காலமான செய்தி எனக்குத் தெரியவந்தது. அதனல் எனக்கு அளவற்ற வருத்தம் ஏற்பட்டது. விரைவிலேயே வரவிருக்கும் இன்ப நாட்களைக் காண அவள் இருந்திருந்தால் நன்ருக இருந்திருக்கும். ஆனல், அவள் தலையில் அவ்வாறு எழுதியிருக்கவில்லை என்ருல், அதற்கு யார் என்ன செய்யமுடியும்? அது போகட்டும். இப்பொழுது நீங்கள் இருவரும் இருக்கிறீர்கள்; நீங்கள் நன்ருகச் செல்வத்தின் சுகத்தை அநுபவித்தீர்கள் என்ருல் ஆச்சு. நீ எங்கு இருக்கிருய், என்ன செய்கிருய் என்பதைத் தெரிந்துகொள்வதற்காகச் சிறிது நாட்களுக்குமுன் நான் மாமாவிற்கு ஒரு கடிதம் எழுதியிருந்தேன். அவரிடமிருந்து வந்த பதிலிலிருந்து, நீ இப்பொழுது கல்லூரியில் படித்துக்கொண்டிருப்பதாகவும், மிகவும் கெட்டிக்காரனுக இருக்கிருய் என்றும் தெரியவந்தது. அதைப் படித்து நான் மிகவும் மகிழ்ந்தேன். அதனல்தான் இப்பொழுது என் கையில் பணம் வந்ததும் ''சிவில் சர்வென்ட்'', ''பாரிஸ்டர்'' மேலும் பலவிதமான பரீட்சைகளையும் கொடுப்பதற்காக உன்னை வெளிநாட்டுக்கு அனுப்ப வேண்டும் என்று என் மனத்தில் தோன்றியிருக்கிறது. நமக்கு நல்ல பெயரைக் கொண்டுவா. இன்னும் ஐந்தாறு நாட்களில் நான் அங்கு வரப்போகிறேன். பிறகு மறுபடியும் வேலை முடியும் நாட்களில் இங்குத் திரும்பி வருவேன். இப்பொழுது வேலை முடியப்போகிறது என்பதில் சந்தேகம் இல்லை. நீ கல்லூரியில் இருப்பதால், நான் வரும்பொழுது மாப்பிள்ளையின் வீட்டில்தான் இறங்குவேன் என்பது நிச்சயம். மாமனர் தன் வீட்டில் தங்க வந்திருக்கிருர் என்று அவரும் ஆனந்தப்படுவார். நான் நிறைய சாமான்களையும் என்னுடன் எடுத்துக்கொண்டு வரப்போகிறேன். இனிச் சாமான்களுக்கு என்ன குறைவு? நீ இருபத்தாரும் தேதி மாப்பிள்ளை அவர்கள் வீட்டிற்கு என்னைத் தேடிச் செல். அன்று நான் அங்கு இருப்பேன். நீ உன் சகோதரிக்கு முன்னதாகவே ஒன்றும் தெரிவிக்கவேண்டாம். நான் திடீரென்று

போய் இறங்கி அவர்கள் எப்படி எதிர்பாராத இன்பம் அடையப் போகிறார்கள் என்று பார்க்கப் போகிறேன்! இப்பொழுது நம்முடைய செல்வ நிலை அவர்களுடையதைவிட மேலானதா, இல்லையா என்று காண்பிப்போம் . . .'

இத்தகைய விசித்திரமான செய்தியைக் கொண்ட அந்தக் கடிதம் என் கையில் கிடைத்ததும், இது என்ன புதுத் தொல்லை நம்மீது வருகிறது என்று எனக்குத் தோன்றியது. இப்பொழுது இதைப்பற்றி அண்ணாவிடம் சொல்ல என் மனம் விழைந்தது. அதன்படியே நான் அவரிடம் சொல்லவும் செய்தேன். மேலும் அக்காவிடமும் சொல்லிவிட்டேன். அக்காவிடமிருந்து இப்பொழுது எதையும் மறைத்து வைப்பதில் ஓர் அர்த்தமும் இருக்கவில்லை. அவள் அறியாதவள் இல்லை. நம்மைவிட அவள் மிகுந்த மனோதிடம் கொண்டவள் என்று எனக்கு இப்பொழுது தோன்றத் தொடங்கியிருந்தது. மேலும், இந்தக் குறிப்பிட்ட விஷயத்தில், நான் பயந்திருந்ததுபோல அவளுக்குத் துளியும் பயம் ஏற்படவில்லை. நான் முதலில் அவளுக்கு அதைச் சொன்னபொழுது மிகவும் அஞ்சியவாறும், தயங்கித் தயங்கியும் சொன்னேன். ஆனால், அதைக் கேட்ட பின்னர் அவள் கணப்பொழுது மௌனமாக உட்கார்ந்திருந்து, பின் சட்டென்று என்னிடம் சொன்னாள்: 'இவ்வளவுதானே! நாம் அஞ்சுவதற்கு ஒரே ஒரு காரணம் மிஞ்சியிருந்தது. ஆனால் அதுவும் இனித் தொலைவில் நகர்ந்து செல்லும் நேரம் விரைந்து வந்துகொண்டிருக்கிறது, இல்லையா? அவரும் ஒரு முறை இங்கு வந்து அவர் சொல்வதும் என்ன என்று தெரிந்துவிட்டால் நல்லதுதானே! ஒரு முறை இனி யாருக்கும் அஞ்சவேண்டியது இல்லை என்று தெரிந்துவிட்டால் நிம்மதி ஆகிவிடும்.'

அவளுடைய திண்மையான பேச்சைக் கேட்டு நான் மிக ஆச்சரியம் அடைந்தேன். மேலும், நான் எனக்குள்ளேயே சொல்லிக்கொண்டேன்: 'பெண்களைக் கோழை என்று யார் வேண்டுமானாலும் சொல்லட்டும். ஆனால், என்னைப் பொறுத்த வரையில் அவர்களைப்போல் தைரியம் கொண்டவர்கள் மிகவும் குறைவு!' அக்காவை வாழ்த்தும் எனது குணம், அவளது அந்தத் திண்மையும் பெருந்தன்மையும் கொண்ட சொற்களினால் மேலும் ஊட்டம் பெற்றது.

# 42. ஒரு முறை அதுவும் நடந்துவிட்டது!

'அப்பா எப்போது வரப்போகிறார்? வந்து அவர் என்ன சொல்லப் போகிறார்? அதன் பலனை எப்பொழுது தெரிந்து கொள்ளப் போகிறோம்?' என்று நான் ஆவலுடன் எதிர்பார்க்கத் தொடங்கினேன். அவர், அக்காவின் கணவனுடன் தங்குவதற்குப் பதிலாக, தான் இறங்குவதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்யும்படி எனக்கு எழுதியிருந்தாரே ஆனால், எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! ஆனால், அவர் எங்கே அப்படிச் செய்வார்? அதிலும் அவருக்குப் பணத்தினுடையவும் பணக்காரர்களுடையவும் ஆசை மிக அதிகம். அப்பொழுது பணக்கார மாப்பிள்ளையின் வீட்டில் போய் இறங்குவதில் பெருமைப்படும்படியாகத்தான் நிலைமை இருந்தது. எனவே, அதைப்பற்றிய கவலை என்னை அதிகமாகப் பாதிப்பதை நான் தவிர்க்க விரும்பினேன். அதே சமயத்தில், அவர் விருப்பத்தைப் பூர்த்தி செய்து அவரை என் வசப்படுத்திக்கொண்டு, அவரை என் எண்ணங்களின்பால் கவர முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்றும் தோன்றியது.

ஆனால் இது எப்படி நிறைவேறும்? புனாவுக்கு வந்தவுடன் நேராக அவர் அங்கேயே தங்கச் சென்று, அங்கு இருப்பவர்கள் அவர் மனத்தில் ஏதேனும் புகுத்தி வைத்துவிட்டால், அதை அவர் மனத்திலிருந்து அகற்றி, நான் சொல்வதை உண்மையென அவரை நம்ப வைப்பது மிகவும் கடினமான காரியமாகிவிடும்; அல்லது முடியாத காரியமாகவே ஆகிவிடும். இப்படி எல்லாம் என் மனத்தில் தோன்றாமல் இருக்கவில்லைதான். அதற்குள் தாம் வருவதாக அவர் எழுதியிருந்ததால் நான் ரயிலடியிலேயே அவரைப் போய்ச் சந்தித்து, நேரடியாக எங்காவது தங்கும் இடத்திற்கு அவரை அழைத்துச் செல்வது என்று முடிவு செய்தேன். ஆனால், என் தகப்பனார் ஆயிற்றே! சொன்னபடி அவர் எங்கு வரப்போகிறார்? நான் இடையறாது தொடர்ந்தாற்போல் ஆறு நாட்கள் காலையில் உலாவுவதற்கு என்று ரயிலடிவரை சென்று ஒவ்வொரு வண்டியிலும் அவரைத் தேட ஆரம்பித்தேன். ஆனால் என்றுமே அவர் வரவேயில்லை. கடைசியில்

நிராசை அடைந்து நான் போவதை நிறுத்திவிட்டேன். ஆனால், என்ன வேடிக்கை! நான் என்று போகவில்லையோ, அதே நாள் அவர் வந்து, என் மைத்துனரின் வீட்டில் போய் இறங்கினார். 'எவையெல்லாம் நடக்கவேண்டும் என்று இருக்கின்றனவோ, அவையெல்லாம் நடந்தேதான் தீருமென்று இதைத்தான் சொல்கிறார்கள்போலும்' என்று எண்ணி என் மனத்தைத் தேற்றிக்கொண்டேன். வேறு என்ன செய்வேன்? இராவ்ஜீ வந்தார். என் மைத்துனர் வீட்டில் தங்கச் சென்றார். அக்கா அங்கு இல்லாதிருந்த நிலையில், அவளைப்பற்றியும், என்னைப் பற்றியும் முற்றும் தாறுமாறான செய்திகளை அவருக்கு அந்த மனிதர்கள் தெரிவித்தார்கள். மேலும் நேரிடையாகவும் மறைமுகமாகவும் எங்களை மிகவும் நிந்திக்கவும் செய்தார்கள். இவ்வளவு எல்லாம் நடக்கவேண்டி யிருந்தது. எனவே, அவையெல்லாம் நடந்துதானே தீரும்? கடைசியில் ஒரு நாள் புனாவுக்கு அவர் வந்த இரண்டாம் நாளே கல்லூரிக்கு வந்தார். அங்கு அவர் என்னைத் தனியாக ஓரிடத்திற்கு அழைத்துச் சென்று, நான் சீர்திருத்தவாதி ஆகிவிட்டேனென்றும், முழுக் குடும்பத்திற்கும், குலத்துக்கும் களங்கமேற்படுத்தும் செயலைச் செய்துவிட்டேன் என்றும் என்மீது குற்றம் சாட்டினார்.

நான் அவ்வளவையும் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தேன். அவர் பேச்சு நிற்காமல் தொடர்ந்துகொண்டே யிருந்தது. நான் நடுவில் ஏதாவது பேச முயன்றால், அவர் இன்னமும் உரத்த குரலில் பேசினார்: 'நீ இப்படிப்பட்டவனாக உருவெடுப்பாய் என்று நான் நினைத்திருக்கவில்லை. நீ எங்களுடைய ஒரே பிள்ளை. உன்னைத்தான் நாங்கள் முற்றும் நம்பியிருந்தோம். நீதான் எங்களுக்குத் தண்ணீர் ஊற்றப் போகிறவன். நீ இப்படிப்பட்ட வலையில் விழுவாய் என்று நாங்கள் எதிர்பார்த்திருக்கவில்லை. நானும் இன்றுவரை பல தாறுமாறான காரியங்களைச் செய்திருக்கிறேன். ஆனால் இப்படிப்பட்ட பொல்லாத்தனமான வேலைகள் என்றும் எங்கள் கனவில்கூட உதித்ததில்லை. யார் உனக்கு இதையெல்லாம் கற்றுக் கொடுத்தார்கள்? அந்த மனிதன் இவ்வளவு மோசமானவனாக இருப்பான் என்றும், மேலும் ஒரு சிறு பிள்ளையையும், பெண்ணையும், அதுவும் இன்னொருவனின் மனைவியை, இவ்வாறு வழி தவறிப் போகச் செய்யும் இழிவான காரியத்தைச் செய்வான் என்றும் நான் என்றுமே நினைத்திருக்கவில்லை.'

இந்தக் கடைசி வார்த்தைகள் காதில் விழுந்த பிறகு மட்டும் என்னல் மௌனமாக இருக்கமுடியவில்லை. நான் ஒரேயடியாக அவரிடம் கூறினேன்: 'நீங்கள் என்ன பேசுகிறீர்கள்? அந்த மனிதர் உங்களுக்கு என்ன கேடு செய்தார்? கணவனின் தொல்லையினல் அவதிப்பட்டுக்கொண்டிருந்த எனது அக்காவை நானுகவே அவர் வீட்டில் கொண்டு விட்டு வைத்தேன். அவளுக்கு அவர் புகலிடம் அளித்தார். மேலும், எங்களது வாழ்வைச் சுமுகமானதாக அவர் ஆக்கினுர். இதற்காக அவருக்கு இந்தப் பரிசா? அவர் என்ன செய்தார்? நீங்கள் அந்தப் பொல்லாத கிழவனின் வேண்டாத பேச்சைக் கேட்டுக்கொண்டு உங்களுக்குத் தோன்றியபடியெல்லாம் எங்களைப் பேசுகிறீர்கள் என்பது ஒரு புறமிருக்க, அவரையும் வேறு எதற்கு நடுவில் பிடித்திழுக்கிறீர்கள்? உங்களுக்கு என்ன செய்தார் அவர்?'

'அவர் என்ன செய்தாரா? அவர்தாம் எல்லாம் செய்தார். அவர்தாம் பெண்ணைக் கணவன் வீட்டை - விட்டு வரச்சொன்னுர். அவள் அப்படிச் செய்திருக்கவில்லையென்ருல், அவள் கணவனுக்கு இல்லாத கெட்ட பழக்கங்கள் ஏற்பட்டிருக்கும் இந்த நிலை வந்திருக்காது. இப்போது . . .'

'என்ன? அவள் போனதால்தான் அவருக்கு இந்தப் பழக்கங்கள் எல்லாம் ஏற்பட்டன என்று நீங்கள் சொல்கிறீர்களா? இப்படி உங்கள் மனத்தில் அவர், அந்தத் திருடன், எண்ணம் உருவாக்கியிருக்கிருரா? அந்தத் தெருப் பெண்களின் புடைவைகளை அக்கா துவைக்கவேண்டும்; தனது கணவனின் கால்களையும், அவர்களுடைய கால்களையும் அவள் பிடித்துக் கொடுக்கவேண்டும்; அவர் செய்த பரிகாசத்தையும், உள்ளத்தைக் குத்தி வேதனைப்படுத்தும் அவர் பேச்சுக்களையும் அவள் பொறுத்துக்கொள்ளவேண்டும்; அவர் வீட்டிலும் வாசலிலும் நடத்திய கொள்ளையை மௌனமாகப் பார்த்தவாறிருக்கவேண்டும்; பின்னர் கடைசியில் காரணமின்றி அடியும் வாங்கவேண்டும். இவை யாவும் உங்களுக்குச் சம்மதமாயிருந்தனவா? இந்த அளவுக்கு நிலைமை வந்து, இறுதியில் அவருடைய கூட்டாளியான பழிகாரப் பேர்வழியினுடைய பயங்கரமான அவமானங்களையும் கூடப் பொறுத்துக்கொண்டு, அவள் அப்படியே பேசாமல் தலை வணங்கி இருக்கவேண்டும் என்றுதான் நீங்கள் சொல்கிறீர்களா? நாங்கள் நேராக உங்கள் முன்னல் நின்று சொல்வதெல்லாம் உங்களுக்கு உண்மையெனப் படவில்லை. ஆனல் அந்த ஆள்

ஏதோ சொல்வதை உண்மையென எண்ணி நீங்கள் எங்கள்மீது கோபத்தைக் காட்ட வருகிறீர்கள்.'

இந்த வார்த்தைகளை நான் அளவற்ற ஆவேசத்துடனும், பரபரப்புடனும் பேசினேன். இறுதியில் ஒரு வார்த்தை கூடப் பேசமுடியாத ஒரு நிலையையும் அடைந்தேன். உதடுகள் துடிக்கலாயின. உடலெல்லாம் நடுங்கத் தொடங்கியது. எனது மைத்துனரின்மீதும், அவருடைய கூட்டாளியான அந்தச் சண்டாளனின்மீதும் எனக்கு வந்தது பாருங்கள் கோபம்; அதைப்பற்றி ஒன்றும் கேட்காதீர்கள். ஆனால், என்ன செய்வேன்? நான் யாரிடம் பேசிக்கொண்டிருந்தேனோ, அவர் சாட்சாத் என் தகப்பனாராகவே இருந்த காரணத்தினால் எனக்கு இதைவிடத் தெளிவாக ஒன்றும் சொல்லமுடியவில்லை.

எனது பேச்சு இராவ்ஜீயின் மனத்தை ஓரளவு தொட்டிருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ஆனால், உண்மை என்னவோ? அவர் மனத்தை என்ன தொடும், எது என்ன செய்யும்? நான் என் பேச்சை நிறுத்தமட்டும் செய்தேன். அவர் உடனே என்னிடம் சொன்னார்: 'பலே! பலே! உனக்கு நன்றாகக் கற்றுக்கொடுத்திருக்கிறார்கள் என்றுதான் சொல்லவேண்டும். நீ இப்படிப் பேசுவாய் என்பது எனக்கு முன்பே தெரிந்திருந்தது. ஆகவே இதில் எதிர்பாராதது ஒன்றும் இல்லை. ஆனால், இதோ பார், நான் இப்படி ஏமாறுபவன் அல்ல, தெரிந்ததா? இப்பொழுது அந்தப் பெண்ணை, பேசாமல் தன் வீட்டிற்குப் போகச் சொல். இப்போதைக்கு நான் அங்கு இருக்கிறேன். அவள் கணவனுக்கு என்ன கோபம் வந்திருக்குமோ, அதையெல்லாம் நீக்கலாம். அவரது மன்னிப்பைக் கோரலாம். இப்பொழுது நான் சொன்னபடி கேட்டால் நல்லது, இல்லையென்றால் நான் பொல்லாதவனாக வேண்டி வரும். நான் சொன்னவாறு செய்யும் உறுதி கொண்டவன் என்பது உனக்குத் தெரியும்.'

இவ்வாறு அவர் சொன்னதும், அதற்குமேல் நான் என்ன பேசுவது? நான் அவரிடம் சொன்னது இவ்வளவுதான்: 'விரும்பினால் நீங்களே அவளைப் போய்ப் பாருங்கள். நான் என் வாயால் அவளிடம் ஒன்றுமே சொல்லப் போவதில்லை.'

'அதிகப் பிரசங்கி! யாரிடம் நீ இவ்வாறு பதில் கூறிக்கொண்டிருக்கிறாய்? சுய நினைவுடன்தான் இருக்கிறாயா? இல்லை கள்ளு கிள்ளு குடித்திருக்கிறாயா? கல்லூரியில் இருந்துகொண்டு அந்தப் பழக்கத்தையும் கற்றுக்கொள்ளாமல் இருக்கமாட்டாய்தான்.

மேலும் கல்லூரிக்கு வரும் அவசியந்தான் உனக்கு எதற்கு? இருக்கவே இருக்கிருனே, அந்த உங்களுடைய குரு! என்ன படுமோசமான ஆள் அவன்!'

இப்பொழுது நான் சொன்னபடியே கடைசியில் ஆயிற்று. நான் அவர் சொன்னதைக் கேட்கத் தயாராக இருக்கவில்லை. அக்கா விடம் அவ்வாறு சொல்ல என்னுல் முடியாது என்ற எனது உறுதி அசைக்கமுடியாதது என்பதை உணர்ந்து, அவர் தமது முயற்சியை விட்டு விட்டு, வெறும் வசைமாரியைப் பொழிந்த வண்ணம், 'நீ இப்பொழுது அந்தப் பாவி மனிதனின் (சிவராம் பந்த் அவர்களின்) வீட்டிற்குப் போய் அவளுக்கு நன்ருகப் புரியும் படி சொல். அவள் புரிந்துகொண்டால் சரி, இல்லையென்ருல் வாயில் அடித்து அவளை அவள் கணவனின் வீட்டிற்கு இழுத்துச் செல்வேன்' என்ற தனது முடிவை அவர் எனக்கு வெளிப்படுத் திஞர். இந்த முடிவை நான் முன்பே எதிர்பார்த்திருந்தேன். இதுபற்றி அக்காவிற்கு முன்னதாகவே தெரிவித்து அவளை முன் னெச்சரிக்கைப் படுத்தவேண்டும் என்றும் நான் முடிவு செய் திருந்தேன். ஆகவே, அவரது பேச்சு என்னை வியப்பில் ஆழ்த்த வில்லை.

வெகுநேரம் என்மீதும், பிறகு கல்லூரியில் படிக்கும் எல்லார் மீதும், பின் மொத்தத்தில் ஆங்கிலம் படிப்பவர் எல்லார்மீதும் வசைமாரி பொழிந்தவாறிருந்தார். அதற்குப் பிறகு, 'இனி மேல் உனக்கும் எனக்கும் ஒரு தொடர்பும் இல்லை. இனி நான் உனக்கு ஒரு பைசாவும் கொடுக்கப் போவதில்லை' என்று மிரட்டவும் செய்தார். அந்த மிரட்டலைக் கேட்டு, அப்படிப் பட்ட மனேநிலையிலுங்கூட என்னுல் சிரிக்காமல் இருக்க முடிய வில்லை. பிறகு அவர் போய்விட்டார்.

நான் நினைத்தபடி மறுநாளே இராவ்ஜீ. அக்காவைப் பார்க்க அவளிடம் வந்தார். உண்டு, இல்லை என்று எல்லாவற்றையும் ஒரு முறை முடித்துக்கொண்டுவிட வேண்டும்; தம்மைச் சந்திக்கவில்லை என்று அவர் நினைக்கும்படி ஆகவேண்டாம் என்று அக்கா அன்றைய தினம் வேண்டுமென்றே வீட்டில் தங்கி யிருந்தாள். மேலும் இன்று அல்லது நாளை நம்மீது வரத்தான் செய்யும் என்றிருப்பதைத் தவிர்க்க முயல்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது? முன்சென்று அதை வரவேற்று அதற்கு ஒரு முடிவு காண்பதுதானே நல்லது? இராவ்ஜீ வந்ததுமே அவளை ஒரு பக்க மாக அழைத்துச் சென்ருர். அங்கு நன்ருக நான்கைந்து மணி

நேரம் இருவரும் பேசினார்கள். நான் காலையிலேயே கல்லூரிக்குத் திரும்பிவிட்டிருந்தேன். நடந்ததெல்லாம் பின்னால் எனக்குத் தெரியவந்தது. வார்த்தைக்கு வார்த்தை தெரியவில்லை என்றாலும், அக்கா தனது உறுதியைச் சிறிதும் கைவிடாமல், தான் நினைத்திருந்தவாறே எல்லாவற்றையும் அவரிடம் சொன்னாளென்று அறிந்தேன். ஆனால், குறிப்பாக ஒரு பயனும் ஏற்பட்டிருக்காது என்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

ஏனெனில், மறுநாள் இராவ்ஜீ அந்தப் பொல்லாத உதவியாளரையும் உடன் அழைத்துக்கொண்டு சிவராம் பந்த் அவர்களிடம் வந்து, இறந்த காலத்திலும் இல்லை, எதிர்காலத்திலும் இல்லை என்ற வசைகளைப் பொழிந்தார். நாகரிகம் அடைந்த மனிதர்களுக்குக் காதினாலும் கேட்கப் பொறுக்காத இழிவான சொற்களை அவ்விருவரும் அந்த மூன்று நங்கையரின் முன் சொன்னார்கள். சுந்தரியின் கல்யாணமாகாத நிலையைக் குறித்தும் கூட நான்கு வார்த்தைகளைச் சொல்லாமல் அவர்களால் இருக்கமுடியவில்லை.

சிவராம் பந்த் அவர்கள் மிகவும் சாந்தமானவர்; பொறுமையே உருவெடுத்தவர். அப்படியிருந்தும் அவரது உள்ளங்கூடச் சினத்தினால் நிதானமிழக்கும் நிலையை அடையும் வேளை வந்தது. அவர் அவர்களிடம் தெளிவாகச் சொன்னார்: ‘உங்கள் பெண்ணை நீங்கள் தாராளமாக அழைத்துச் செல்லுங்கள். நான் குறுக்கே ஒரு வார்த்தை பேசினாலோ அல்லது உங்களைத் தடுத்தாலோ பிறகு நீங்கள் என்னைப் பேசுங்கள்.’ ஆனால், அவர் பேச்சைக் கேட்க யார் தயாராக இருந்தார்கள்? கடைசியில் ஏற்பட்ட நிலையைப் பார்த்து அக்காவிற்கு அளவற்ற கோபம் வரவே, அவள் முன்னால் வந்தாள். அவள் மரியாதை முதலியவற்றை ஒருபக்கம் தள்ளி, இராவ்ஜீயிடம் ஒரேயடியாகச் சொல்லலானாள்: ‘நீங்கள் இப்பொழுது மீண்டும் இங்கு வந்து காரணமின்றி இவர்களைப் பழித்தீர்களானால், இதோ புறப்படுங்கள்; நான் உங்களுடன் வருகிறேன். மேலும் உங்களுக்கு முன்னால், எல்லாருக்கும் முன்னால் அந்த வாசற்படியில் நான் உயிரைக் கொடுத்தேன் என்றால் நீங்கள் எல்லாரும் விடுபட்டுவிடுவீர்கள். மேலும் நானும் விடுபட்டுவிடுவேன். மீண்டும் உங்கள் பெயருக்குக் களங்கம் வேண்டாம். மேலும் இவர்களுடைய, தம்பியுடைய, எல்லாருடைய துன்பமும் நீங்கும். கிளம்புங்கள், கிளம்புங்கள்! இல்லை, அங்கேதான் எதற்கு? இங்கு, இங்கேயே

உங்கள் முன்னாலேயே ஆகிவிடட்டும். ஏன் இவ்வளவு வேதனைப்படுகிறீர்கள்? எனது அம்மாவின் கொலை இப்படித் தான் உங்கள் தலையில் இருக்கிறது. என்னுடையதும் சேரட்டும்!'

அக்காவின் சொற்கள் இதயத்தின் ஆழத்திலிருந்து வந்தவை போல் தோன்றின. அவளுடைய தோற்றமும் மிகவும் பயங்கர மானதாகக் காணப்பட்டது. எனினும், அந்தப் பொல்லாத கிழவனை அவை சிறிதளவும் தொட்டதாகத் தெரியவில்லை. ஆனால், இராவ்ஜீயின் மனம் மட்டும் அவற்றால் சற்றே கலங்கியதாகத் தோன்றியது. அவளுடைய இறுதிச் சொற்கள் அவருடைய மனத்தில் தைத்ததாக எனக்குத் தோன்றியது. அவர் மெள்ள எழுந்து அங்கிருந்து நடையைக் கட்டினார். 'தன் காரணமாகச் சிவராம் பந்த் அவர் களுக்கும் அவர் குடும்பத்தினருக்கும் அளவற்ற துன்பம் ஏற்பட் டிருக்கிறது. இந்தத் துன்பம் இப்படியே அநேகமாகத் தொடர்ந்தவாறு இருக்கும். எனவே உடனடியாக அதுபற்றி ஏதாவது செய்யவேண்டும்' என்று அக்காவின் மனத்தில் தோன்றி, அவள் உடனேயே தன்னை வந்து பார்க்கும்படி எனக்குக் கடிதம் எழுதினாள். அந்தக் கடிதத்தைப் பார்த்ததுமே என் உள்ளத்தில் ஆயிரம் ஆயிரம் விதமான, ஆயிரக்கணக்கான எண்ணங்கள் எழுந்தன. அக்கா திரும்பிப் போக முடிவு செய்து விட்டிருக்கமாட்டாளே? இராவ்ஜீ எங்காவது இனிக்க இனிக்கப் பேசியோ அல்லது மிரட்டிப் புரட்டியோ அவள் மனத்தைத் திருப்பியிருக்கமாட்டாரே? இப்படி ஒருமுறை மனத்தில் தோன்றியது. ஆனால் உடனேயே அவளுடைய உறுதி அவ்வளவு பலவீனமானதல்ல; என்ன செய்தாலும் அது இப்பொழுது மீண்டும் திரும்பப் போவதில்லை என்றும் தோன்றியது.

உடனேயே போய் நமது சந்தேகத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ளவேண்டும் என்று எண்ணி நான் விரைந்து போகவும் செய்தேன். அக்கா வீட்டில் தனியாகத்தான் இருந்தாள். சுந்தரி பள்ளிக்குச் சென்றிருந்தாள். அவள் தாய் வேறு எங்கோ வேலையாகப் போயிருந்தாள். நான் போனதுமே அவள் முந்தின நாளும், அதன்பின் இரவிலும் நடந்த எல்லா விஷயங்களைப் பற்றியும் எனக்குச் சொன்னாள். பிறகு கடைசியாக அவள் என்னிடம் சொல்லலானாள்: 'தம்பி, எனது வாழ்க்கை முழுதும் பிறருக்குத் துன்பம் கொடுப்பதிலும், துன்பம் அடைவதிலும் தான் கழியப்போகிறதாடா? அம்மா இருந்தவரை அம்மாவுக்கு;

பிறகு சில நாட்கள் மாமாவிற்கு, பாட்டிக்கு, மாமிகளுக்கு. மேற்கொண்டு இப்பொழுது உனக்கும், பிறகு கடைசியில் எந்த விதத்திலும் சம்பந்தப்படாத ஒரு மனிதரான சிவராம் பந்த் அவர்களைப் போன்ற உத்தமரான மூன்றும் மனிதருக்கும் என்றால் எத்தனைதான் துன்பம்? பழி பொறுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது? இன்றுவரை அவரை யாருமே இதுபோல் திட்டியிருக்கமாட்டார்கள். இன்றுவரை அவரை யாரும் இப்படி இழிவாகப் பேசியிருக்கமாட்டார்கள். அப்படிப்பட்ட அந்தத் திட்டுக்களை, அப்படிப்பட்ட அந்த இழிவான பேச்சுக்களை, என் காரணமாகவே அவருக்குப் பொறுத்துக்கொள்ளவேண்டி வந்தது. தம்பி, சிவராம் பந்த் எவ்வளவு நல்லவர்! எத்தனை எத்தனை உதவிகள் நமக்கு அவர் செய்திருக்கிறார். ஒவ்வொரு பிறவியிலும் அவருக்குப் பணிவிடை செய்தாலும் இந்த உதவி களுக்கு ஈடு செய்ததாகாது. நேற்று இரவு இராவ்ஜீயும் அந்தச் சண்டாளனும் போன பிறகு நான் அழுதுகொண்டேயிருந்தேன். என் பொருட்டுச் சிவராம் பந்த் அவர்களுக்கு இப்படிப்பட்ட வசைகளைக் கேட்கவேண்டி வந்தது என்பதை உள்ளம் நினைக்க நினைக்க அழுகை பொங்கிப் பொங்கி வரலாயிற்று. இது அவர் கவனத்தில் வந்ததும் எப்படியெல்லாம் எனக்கு ஆறுதல் சொன்னார் தெரியுமா? இறுதியில் என்னிடம் சொன்னார்: ''எனக்குத் திட்டுக் கேட்டுக்கொள்ளவேண்டி வந்தது என்பதற் காக நீ வருத்தப்படவேண்டாம். எனக்குச் சொந்தப் பெண் ஒருத்தி உங்களைப் போல் இருந்து, உங்களைப் போன்ற நிலை அவளுக்கு ஏற்பட்டிருந்தால், இப்படியே நான் அவளை என் வீட்டில் கொண்டு வைத்திருப்பேன். அப்படிச் செய்த பின்னர், அவள் மாமனார் வீட்டினர் வந்து இவ்வாறே என்னைத் திட்டி யிருந்தால், நான் என்ன செய்திருப்பேன்? உங்களை நான் சுந்தரி யின் மூத்த சகோதரி எனக் கருதுகிறேன். அவர்கள் என்னை வந்து திட்டினார்கள் என்பதற்காக நீங்கள் சிறிதளவும் வருத்தப் படாதீர்கள்.'' தம்பி, இப்படிச் சொல்பவர், அதுவும் இப்படிப் பட்ட வேளையில் வேறு யாராவது காணக் கிடைப்பார்களாடா? தம்பி, நம்மீது, என்மீது, அவருடைய உபகாரங்களின் சுமை எவ்வளவு அதிகமாயிருக்கிறது. எப்பொழுது இதிலிருந்து விடுபடுவோமோ அப்பொழுது ஆகட்டும். ஆனால், நமக்காக இப்பொழுது அவரை இன்னும் எத்தனை துன்பத்துக்கு ஆளாக்கு வது? நான் என்ன செய்வது என்று எனக்கு ஒன்றும் தோன்ற

வில்லை. மனத்தில் தோன்றுகிறது, ''எங்கேயாவது தொலைவிலுள்ள ஏதாவது ஓர் ஊருக்குப் போய்க் கூலி வேலை செய்து நம் வயிற்றை நிரப்பிக்கொள்ள வேண்டும்; இந்த வனவாசம் வேண்டாம்'' என்று. சே! இப்பொழுது இவருக்கு இன்னமும் துன்பம், அதுவும் என்னால் கொடுப்பது சரியாகப் படவில்லை. நேற்று நடந்ததைப் பார்த்து, யாராவது இரண்டாவது, மூன்றாவது ஆளாக இருந்திருந்தால் சொல்லியிருப்பான், இவளை அழைத்துக்கொண்டு, இப்பொழுதே இங்கிருந்து நடையைக் கட்டுங்கள், நானே வீட்டிற்கு வெளியில் உந்தித் தள்ளுகிறேன் என்று. என்ன நான் சொல்வது உண்மையா, பொய்யா?'

## 43. புறுவை விட்டுச் செல்லும் நிகழ்ச்சி

அவளுக்கு என்ன பதிலைச் சொல்வது என்று எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவள் சொல்வது வார்த்தைக்கு வார்த்தை உண்மையாகப் பட்டது. எங்களால் சிவராம் பந்த் அவர்களுக்கும், அவர் குடும்பத்தினருக்கும் அளவற்ற இன்னல்கள் ஏற்பட்டன என்பது உண்மை. அவர் அதைப்பற்றி என்றுமே ஒரு சின்னஞ்சிறு வார்த்தைகூடச் சொல்லவில்லை என்பதும் உண்மை. அவருடைய பெருந்தன்மை எங்களுக்கு அவர்மீது மிகவும் மதிப்பு ஏற்படச் செய்தது. அதே சமயத்தில், எவ்வளவு நாட்கள்தான் அவருக்குத் துன்பம் கொடுத்தவாறிருப்பது என்று சங்கடம் கொள்ளவும் வைத்தது. ஓரிரு சீர்திருத்தவாதிகள் எங்கள் கதையைக் கேட்டு, அக்கா பம்பாயில் இன்ன பெரிய மனிதரின் வீட்டில் போய் இருந்தால், அவளை அவர்கள் நன்கு கவனித்துக்கொள்வார்கள் என்று எங்களுக்குச் சொன்னார்கள். இப்படித் தவிக்கும் பெண்களுக்கும், விதவைகளுக்கும் உதவி செய்வதில் அவர் மிகவும் புகழ் பெற்றவராம். மற்றும் ஓரிருவர் (மற்றவர் பையில் கையைப் போட்டுத் தானதர்மம் செய்பவர்கள்) அக்காவை இன்ன இடத்தில், மடத்தை (மிஷனரியை)ச் சேர்ந்தவர்கள் நடத்தும் ஒரு ‘போர்டிங்’கில் கொண்டு விட்டு வைத்தால், அவளுடைய படிப்பும் சிறந்த முறையில் நடக்கும், பிறகு நல்ல வழியையும் அவள் அடைவாள் என்று தங்கள் கருத்தைத் தெரிவித்தார்கள். மேலும் அப்படிப்பட்டவர்களின் வசத்தில் இருந்தால், இந்த இழிவான மனிதர்களின் துன்பத்திற்கும் அவள் ஆளாகமாட்டாள் என்றும் அவர்கள் சொன்னார்கள். மற்றும் வேறு சிலர், வேறு ஏதாவது சொல்லச் செய்தார்கள். இப்படி எங்களைக் கேட்காமல் கொள்ளாமல் எங்களுக்கு உபதேசங்களும், ஆலோசனைகளும் கிடைக்கத் தொடங்கின. அவர்கள் எல்லார்மீதும் எனக்கு அளவற்ற கோபம் ஏற்பட்டது. ஒருவராயினும் நான் இன்னது செய்கிறேன், நான் இன்ன உதவியைச் செய்கிறேன் என்று சொல்லியிருந்தால் கேளுங்கள். ஆனால்,

ஆலோசனை கொடுப்பதற்குக் கணக்கற்றவர்கள் தயாராக இருந்தார்கள். ஓர் ஆள் சிவராம் பந்த் அவர்களிடம் வந்து, மடத்தைச் சேர்ந்தவர்கள் நடத்தும் ஒரு கழகத்தை மிகவும் புகழ்ந்து கூறி, 'நீங்கள் அவனை அவசியம் அங்கே கொண்டு விடுங்கள்' என்றார். இதுபற்றி அவர் சொல்ல விரும்பியதை யெல்லாம் சொல்லிவிட்டு அவர் எழுந்துபோனதும், அவற்றை யெல்லாம் கேட்டுச் சினத்தால் எரிந்துகொண்டிருந்த அக்கா என்னிடம் வந்து சொன்னாள். 'பார்த்தாயா, நம்மால் அண்ணா வுக்கு எவ்வளவு தொல்லைகள் ஏற்படுகின்றன? இப்பொழுது இவர்களை என்ன செய்யச் சொன்னாலும், இந்த அக்கா தம்பி இருவரும் பேசாமல் அதன்படி செய்துவிடுவார்கள் என்று இந்த வம்புக்காரர்களுக்குத் தோன்றுகிறது. ஆனால், இவர்களுக்கு இவ்வளவுகூடப் புரிவதில்லை. ஏதாவது ஓரிரண்டு காரியங்களை யாராவது சிறிதே உலக வழக்கத்திற்கு எதிராகச் செய்தார்கள் என்றால் . . . ஆனால், அதை நான் எதற்குச் சொல்லவேண்டும்?'

இவ்வளவுதான் அவள் பேசினாள். மேலே அவள் என்ன பேச விருந்தாள் என்பதை நான் ஊகித்து அறிந்துவிட்டேன். இடையிலேயே அவளுக்குச் சொன்னேன்: 'போகட்டும் விடு. நாம் கோபமும், வருத்தமும் கொள்ள வேறு விஷயங்களுக்கு என்ன குறைவா? இன்னும் எத்தனையோ காரியங்களைப்பற்றி நாம் யோசிக்க வேண்டியிருக்கிறது. இவர்களை நாம் கவனிக்கவே கூடாது.'

இவ்வாறு நான் அவளைச் சமாதானப்படுத்தினேன். இனி நம் நிலை என்ன ஆகும்? இப்பொழுது இராவ்ஜீயும், அந்த மற்றக் குழுவினரும் இன்னும் என்ன செய்வார்கள் என்பதைப்பற்றி நாங்கள் வெகு நேரம் தர்க்கம் செய்தோம். சிவராம் பந்த் அவர்களுக்கும் அதுபற்றி மிகுந்த கவலை ஏற்பட்டது. எங்கள் மீது அவர் கொண்டிருந்த அன்பு, சொந்தத் தந்தையின் அன்பைப்போல இருந்தது. எங்களது வருங்கால நிலைபற்றி எங்களைவிடப் பல மடங்கு அதிகமாக அவர் கவலை கொண்டிருந் தார் என்பதை நாங்கள் உணர்ந்திருந்தோம். நாங்கள் எங்களை அவரிடமிருந்து பிரித்துக்கொண்டு, அவரிடம் பாத்தியதையும் உரிமையும் இல்லாதவர்களாக நினைத்துக்கொள்வதையே அவர் விரும்பவில்லை. சில சமயங்களில் எனக்குத் தோன்றும், நான் எனது படிப்பை இனி விட்டுவிட்டு அக்காவை அழைத்துக் கொண்டு தொலைவில் எங்காவது போய், இருவர் வயிற்றையும்

நிரப்பிக்கொள்வதற்காக ஏதாவது ஒரு வேலையைத் தேடிக் கொண்டு அமைதியாக இருக்கலாம் என்று. இதைத் தவிர இன்னும் எத்தனையோ எண்ணங்கள் எத்தனையோ சமயங்களில் எங்கள் உள்ளங்களில் தோன்றின. ஆனால், அவற்றுள் ஒன்றுகூட உண்மையில் செயல்படுத்தக்கூடியதாக இருக்கவில்லை. நாலாப் பக்கங்களிலும் தீப்பிடித்துக்கொண்ட வீட்டில் மாட்டிக் கொண்ட மனிதன் எப்படிக் குழப்பமடைந்து நிலை கலங்கி நாலா புறமும் ஓட ஆரம்பிக்கின்றானே அதுபோல்தான் அந்த ஆபத்துக் காலத்தில் எனது மனநிலை ஆகியிருந்தது.

சிவராம் அண்ணாவிற்கு எங்களால் தொல்லை இல்லாதவாறு இருக்கவேண்டும் என்றும், அக்காவும் நானும் இப்பொழுது ஏற் பட்டிருக்கும் சங்கடத்திலிருந்து விடுபட்டு அமைதியான உள்ளத் தோடு, ஒருவருக்கு அருகில் ஒருவராக இருவரும் எங்கேயாவது சேர்ந்திருக்கவேண்டும் என்றும் நான் விரும்பினேன். ஆனால், எவ்வளவோ யோசித்தும், இந்த விருப்பத்தை எப்படி நிறை வேற்றிக் கொள்வதென்று எனக்குத் தெரியவில்லை. புனாவை விட்டு எங்காகிலும் வெகு தொலைவில் சென்றுவிடவேண்டும் என்று தோன்றியது. அதே சமயத்தில் எங்களுடைய அந்த உத்தேசத்தைப்பற்றிய சந்தேகங்கூட யாருக்கும் ஏற்படக் கூடா தென்றும் தோன்றியது. இராவ்ஜீக்கும், அவர்களுடைய கூட்டாளிகளுக்கும் இதுபற்றித் தெரிந்துவிட்டால், பிறகு எங்கள் பின்னால் காவல் வைப்பதற்கும், எங்களைத் தடுத்து வைப் பதற்கும் அவர்கள் பின்வாங்கமாட்டார்கள் என்பதை நாங்கள் உணர்ந்திருந்தோம். இராவ்ஜீ இந்தத் தருணத்தில் ஒருமுறை கூட எங்களிடம் நேரில் வரவில்லை. அதன் உட்பொருள் எனக்கு விளங்கவில்லை. ஆனால், அவர் சொல்லியனுப்பிய செய்தி என்று மட்டும் ஏதேனும் தாறுமாறான சொற்களை யாராவது வந்து சொல்லிச் சென்று கொண்டிருந்தார்கள்.

ஏழெட்டு நாட்கள் வரை இப்படி வெறும் செய்தி வந்துகொண் டிருந்தது. ஆனால், இராவ்ஜீ இருந்த இடம் தெரியவில்லை. இராவ்ஜீ ஒருவேளை புனாவிலிருந்து சென்றுவிட்டிருப்பாரோ என்ற சந்தேகமும் ஏற்பட்டது. இராவ்ஜீ இங்கு இல்லவே இல்லை. இங்கிருப்பவர்கள் தாமாகவே நடுநடுவில் ஏதேனும் செய்தியைக் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று தோன்றி யது. இப்படிப்பட்ட எண்ணம் தோன்றியவுடன், இராவ்ஜீயைத் தேடவேண்டும் என்று நினைத்து, வெளியில் போகவே இருந்

தேன். அதற்குள், 'இராவ்ஜீ நாளைக் காலையில் உங்களிடம் வந்து பலாத்காரமாகப் பாயி சாகேப் அவர்களை அழைத்துச் செல்லப் போகிறுர்' என்ற செய்தி வந்து குதித்தது. நாங்கள் கலவரம் அடைந்தோம். அவர் சொன்னபடி செய்யத் தவறமாட்டார் என்று எங்களுக்கு உறுதியாகப்பட்டது. அதனுல் மனத்திற்கு இன்னமும் வருத்தமாக இருந்தது. இன்றே இரவோடு இரவாக எங்காகிலும் புறப்பட்டுச் சென்றுவிடவேண்டும் என்று என் மனம் முடிவு செய்தது. தோளில் தூக்கிச் செல்லக்கூடிய மூட்டையாக, அக்காவின் இரு சேலைகளையும், எனது இரு வேட்டிகளையும், என்னிடம் ஏதோ சிறிது மிகுந்திருந்த பணத்தையும், சிவராம் பந்த் அவர்கள் கொடுத்த சிறிது பணத்தையும் எடுத்துக்கொண்டு அன்று இரவு புனைவைவிட்டுப் போய்விடுவது என்ற எங்கள் முடிவு உறுதிப்பட்டது.

சிவராம் பந்த் அவர்களின் குடும்பத்தாரைவிட்டு நாங்கள் இன்னும் சில ஆண்டுகளாவது பிரிந்து இருக்கப்போகிறேும் என்பது மனத்தில் எழுந்ததும், அதையொட்டி ஏற்பட்ட உள்ளத்தை விண்டு செல்லும் நிகழ்ச்சியைப்பற்றி இங்கு விவரித்துச் சொல்ல என்னுல் முடியாது. நான் அதைச் சொல்ல முயற்சி செய்யப் போவதும் இல்லை. அதை வாசகர்களின் கற்பனைக்கு விடுகிறேன். நாங்கள் எங்குப் போகப்போகிறேும் என்பதை ஒருவருக்குமே தெரிவிக்கவில்லை. பேசாமல் இரவு ஆனவுடன் பம்பாய்க்குச் செல்லும் வண்டியில் சென்று ஏறினேும்.

# 44. இரகசிய உதவி

மறுநாள் காலை வண்டி பம்பாயை அடைந்தது. சிவராம் பந்த் அவர்கள் தனது நண்பனுக்குக் கடிதம் கொடுத்திருந்தார். அவர் வீட்டில் நாங்கள் போய் இறங்கினோம். மதியப் பொழுதிற்குப் பின்னர் நான் வெறுமனே வெளியில் கிளம்பினேன். நான் யார் வீட்டில் இறங்கியிருந்தேனோ, அவர் வீட்டு ஓர் ஆளும் என்னுடன் இருந்தான். அவன், பூலேஸ்வர், மாதவன் தோட்டம் முதலான இடங்களுக்கு என்னை அழைத்துச் சென்றான். எவ்வளவு கூட்டம்! இன்றுவரை இப்படிப்பட்ட கூட்டத்தை நான் பார்த்ததாக நினைவில்லை. பம்பாய் பற்றிய எனது நினைவுகளும், மிகவும் சிறு பிராயத்தில் ஏற்பட்டவையாதலால் தெளிவாக இல்லை. அந்தக் கூட்டத்தில் நான் அங்கும் இங்கும் பார்த்துக்கொண்டிருந்தபொழுது, திடீரென்று எனக்கு ஏதோ விசித்திரமாகப் பட்டது. நான் திடுக்கிட்டு நடுத்தெருவில் நின்ற வண்ணம் இருந்தேன். என் வாயிலிருந்தும் என்னையறியாமல், 'அப்படியென்றால் நாம் அஞ்சியது வீண்தான் என்று சொல்ல வேண்டும்!' என்ற சொற்கள் வெளிப்பட்டன. நான் பார்த்தது உண்மைதானா இல்லையா என்ற சந்தேகம் ஏற்பட்டு, நான் மீண்டும் நன்றாக உற்றுக் கவனித்தேன். ஆனால், அதற்குள் அந்தக் காட்சி மறைந்துவிட்டிருந்தது.

நான் பிரமித்துப் போய் அங்கும் இங்கும் பார்க்கத் தொடங்கினேன். ஆனால், எல்லாம் வீண்! என்னுடன் இருந்த ஆள், 'என்ன பார்க்கிறீர்கள்?', 'என்ன பார்க்கிறீர்கள்?' என்று என்னைக் கேட்கலானான். ஆனால், அவனுக்கு என்ன பதில் கொடுப்பது, என்ன சொல்வது என்று எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை. கலவரமடைந்தவனாக அதேபோல் பார்த்துக்கொண்டே நின்றேன், அவ்வளவுதான்! அந்த ஆள் என்னைப் பைத்தியமென நினைத்திருப்பான் என்பது நிச்சயம். ஆனால், எனக்கு அவனைப் பற்றிய கவனமே இல்லை. சற்றுமுன் கண்ட காட்சி உண்மையா அல்லது பொய்யா என்பதை அறிந்துகொள்ளும் துடிப்பில் இருந்தேன் நான். சற்று நேரத்துக்குப் பிறகு, சுயநினைவு

பெற்றவனாய், அந்த ஆளுடன் நடக்க ஆரம்பித்தேன். சற்று முன் வரையில் அந்த ஆள் காண்பித்த காட்சிகளைக் காண்பதில் மனம் ஒன்றிப் போயிருந்தது. ஆனால், இப்போது என்னால் வெவ்வேறு காட்சிகளில் சிரத்தை கொள்ளவோ, உற்சாக மடையவோ முடியாமல் போயிற்று. நான் தானாகவே இயங்கும் பொம்மலாட்டப் பொம்மைபோல் நடந்துகொண்டிருந்தேன்.

மனத்தில் நான் பார்த்த அல்லது பார்த்ததாக நினைத்த, அந்தக் காட்சியே மீண்டும் மீண்டும் சுற்றி வந்துகொண்டிருந்தது. இங்கும் அங்கும் சிறிது நேரம் சுற்றின பிறகு நான், உடனேயே 'நாம் வீட்டிற்குத் திரும்பிப் போகலாம்' என்று அந்த ஆளிடம் வற்புறுத்தலானேன். அவனும் எனது பதறிய நிலையைக் கண்டு, எனக்கு வேறெதுவும் காண்பிக்க முயலாமல் வீட்டை நோக்கி நடக்கலானான். வீட்டிற்குப் போனதுமே அக்காவிடம் விஷயத் தைச் சொன்னேன். அவளுக்கும் அதைக் கேட்டு மிகுந்த வியப்பு ஏற்பட்டது. என்னைப் போலவே அவளும் நாம் வீணில் புனவை விட்டு வந்தோமே என்று எண்ணினாள். ஆனால், நான் பார்த்த காட்சி உண்மையானதுதானா அல்லது வெறும் பிரமையா என்று உறுதியாகத் தெரிந்துகொள்ளாமல் எப்படி நிச்சயமாக முடிவு செய்வது? அதை உறுதிப்படுத்திக் கொள்வதுதான் எப்படி?

நான் அண்ணாவிற்குக் கடிதம் எழுதி, நடந்தவற்றைப்பற்றித் தெரிவித்தேன். அடுத்த இரண்டு நாட்களில் நகரெங்கும் நன்றாகத் தேடி, நான் அந்தக் கடைத் தெருவில் பார்த்தது என் தந்தையைத்தானா என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ளவேண்டும் என்று முடிவு செய்தேன். ஆம். அன்று மார்வாடிக் கடைத் தெருவில் நான் பிரமிப்படைந்து நின்ற காரணம், என் அப்பா வைப் போன்ற ஒருவரை அங்கே பார்த்ததுபோல எனக்குத் தோன்றியதுதான். எனக்கு இரண்டுவிதமான சந்தேகங்கள் ஏற்பட்டன. ஒன்று, அவர் எங்கள் பின்னாலேயே தொடர்ந்து வந்திருக்கவேண்டும் அல்லது எப்பொழுதோ அவர் புனவை விட்டுக் கிளம்பியிருக்க வேண்டும். அவர் பெயரில் பொய்யான செய்தியை யாரேனும் எங்களிடம் அனுப்பி, வேண்மென்றே எங்களைத் துன்பத்திற்கு ஆளாக்கியிருக்க வேண்டும். இந்த இரண்டாவது சந்தேகம் ஒருவேளை உண்மையாக இருக்குமே யானால், எவ்வளவு பெரிய வேண்டாத தொல்லை எங்களுக்குக் காரணமின்றியே ஏற்பட்டிருந்தது? நாங்கள் எங்களுடைய தந்தைக்குப் பயந்துகொண்டிருந்தோம். ஏனெனில், அவர்

ஒரு வேளை அங்கு இருந்து அக்காவைப் பலவந்தமாக இழுத்துச் செல்லவேண்டும் என்று மனத்தில் கொண்டிருந்தால், எங்களால் அதனை எதிர்த்து நடந்துகொள்ள முடிந்திருக்காது. ஆனால், அவர் அவ்வாறு செய்வதாக இருக்கவில்லை என்றால், அவர் முன்பே புனாவை விட்டுச் சென்றிருப்பாரேயானால், அப்படி நாங்கள் பயந்திருக்க வேண்டிய அவசியமே இருக்கவில்லை. மாறாக, நாங்கள் புனாவை விட்டுப் போவது என்ற யோசனை யைக் குறிப்பால் அறிந்துகொண்டு, ஒரு வேளை எங்களைப் பின் தொடர்ந்து வந்திருப்பாரேயானால், மிகவும் ஜாக்கிரதையுடன் நடந்துகொண்டு, அவரிடமிருந்து தப்பித்துக்கொள்ளவேண்டும். ஆனால், எங்கள் சந்தேகத்தைத் தீர்த்துக்கொண்டாலொழிய பம்பாயை விட்டுச் செல்வது என்பது முடியாது. அவர் முன்பே இங்கு வந்துவிட்டிருந்தாரென்றால், நாங்கள் பேசாமல் புனாவுக் குத் திரும்பிச் சென்று பழையபடி இருக்கலாம். சரி, எங்களைத் தான் பின்பற்றி வந்திருக்கிறாரென்றால், உடனடியாகப் பழைய வழியில் இல்லாமல், ஒரு புது வழியை மேற்கொண்டு, பம்பாயை விட்டுச் செல்ல உபாயம் தேடவேண்டியிருந்தது. கடைசியில் மூன்றாம் நாள் அண்ணாவின் கடிதம் வந்தது. அதில் அவர் எல்லாம் தெரிவித்திருந்தார். எங்கள் தந்தையார் எட்டு நாட்களுக்கு முன்பே புறப்பட்டுப் போய்விட்டார் என்றும், போகும் முன்பு அவருக்கும், மாப்பிள்ளைக்கும் தீவிரமாகச் சண்டை நடந்தது என்றும் அவர் எழுதியிருந்தார். இந்த நற்செய்தியைப் படித்ததுமே நாங்கள் திரும்பிச் சென்றோம்.

புனாவில் இருக்கும்பொழுதே தெரிந்திருந்தால் மிக நன்றாக இருந்திருக்கும். ஆனால், பம்பாய்க்கு வந்த பிறகாவது தெரிந்தது நல்லதாகப் போயிற்று. ஏனெனில், மேலும் இரண்டு நாட்கள் வரை இந்தச் செய்தியைப்பற்றி எங்களுக்குத் தெரியா மலேயே இருந்திருந்தால், நாங்கள் அதற்கு முன்பே இங்கிருந்து எங்கே கிளம்பிப் போயிருப்போம் என்று சொல்ல முடியாது. பிறகு எவ்வளவு பாடு! இப்பொழுது எனது அப்பாவிற்கும், மைத்துனருக்கும் சண்டையாகிவிட்டதால், இனி அப்பாவிட மிருந்து எங்களுக்கு எந்தக் காரணத்தைக் கொண்டும் எந்த இன்னலும் ஏற்பட வாய்ப்பில்லை. நாங்கள் புனாவில் பழையபடி இருக்கத் தொடங்கினோம். அந்த எங்கள் விரோதி, அந்தப் பொறாமைக்காரன் ஓரிரு முறை வந்தான். ஆனால், நாங்கள் அவனுக்குச் சிறிதளவும் இடம் கொடுக்கவில்லை. ஆகவே,

மீண்டும் அவன் எங்கள் வழிக்கு வரவில்லை. இவ்வாருக, எங்களது இடைக்கால இடையூறுகள் நீங்கி எங்களது தினசரி வாழ்க்கை முன்போல் ஒழுங்காக நடக்க ஆரம்பித்தது.

இவ்வாறு சுமார் இரண்டு மாதங்கள் சென்றன. ஒரு நாள் கல்லூரியில் அமைதியாக உட்கார்ந்து எதைப்பற்றியோ யோசித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது தபால்காரன் வந்து என்னிடம் ஓர் உறையைக் கொடுத்துச் சென்ருன். இந்த உறை சிறிது கனமாகப் பட்டது. அதன்மேல் தபால் தலைகள் நிறைய இருந்தன. அது ரிஜிஸ்தர் செய்யப்பட்ட கடிதம். எனக்கு ஒன்றும் புரியவில்லை. என் பெயருக்கு ரிஜிஸ்தர் கடிதம் வரும் வாய்ப்பு மிகவும் குறைவு. ஆகவே, நான் மிகவும் குழப்பம் அடைந்தேன். விலாசத்திலிருந்த கையெழுத்தும் யாருடையது என்று தெரியவில்லை. கையெழுத்திட்டு நான் அந்தத் தபாலைப் பெற்றுக்கொண்டேன். அதைத் திறந்து பார்த்தால் அதற்குள் ஓர் இருபது ரூபாய் நோட்டு*, ஓர் ஐந்து ரூபாய் நோட்டு ஆகிய இரு நோட்டுக்களைத் தவிர வேறு ஒன்றும் இருக்கவில்லை. இல்லை, வேறு ஒன்றும் இருக்கவில்லை என்பது உண்மையல்ல. இன்னும் ஏதோகூட அதில் இருந்தது. அது ஒரு சிறு கடிதம். அதில், ‘உங்களது தோழமையை அடையும் பேறு பெற்ற ஒருவர், உங்களுடைய துன்ப காலத்தில் உங்களுக்கு உதவியாக இருக்கவேண்டும் என்று இந்தத் தொகையை அனுப்பிக்கொண்டிருக்கிருர். அதை அப்படியே ஏற்றுக்கொள்வது உங்களுக்கு விசித்திரமாகப் படும். ஆனுல் அதைக் கடனுக இன்றும், பிற்காலத்திலும் ஏற்றுக்கொள்ளவேண்டும். பின்னர் தங்கள் நற்காலம் உதித்தவுடன் (தங்கள் நற்காலம் விரைவிலேயே வரப்போகிறது என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.) நானே தங்களிடம் வந்து எனது மொத்தத் தொகையைத் திருப்பிக் கேட்பேன். நண்பனின் உதவியை என்றும் புறக்கணிக்க வேண்டாம்.’

அந்த எழுத்துக்களை உற்று நோக்கியும் எழுதியவர் யார் என்று ஊகிக்கவே முடியவில்லை. உறையின் மீது ஊரின் முத்திரையும் மிகவும் மங்கலாக இருந்ததனுல் அதைப்பற்றியும் ஒன்றும் தெரியவில்லை. மொத்தத்தில் ஏதோ கதை படிப்பது போலத் தோன்றியது. உகந்த நேரத்தில் மீண்டும் அண்ணுவிடம் சென்றபொழுது, அவருக்கு மட்டும் இதைப்பற்றிச் சொன்னேன்.

* ஆசிரியர் காலத்தில் இருந்தது.

ஆனுல் எனக்குச் சொல்வதற்கு என்று அவரிடமும் அதுபோலவே ஒரு விசித்திரம் இருந்தது. எனக்கு வந்தது போலவே அவருக்கும் ஊர், பெயர் இல்லாத ஒரு கடிதம் வந்திருந்தது. அந்தக் கடிதம் சுமார் பத்துப் பன்னிரண்டு வாக்கியங்களைக் கொண்டதாக இருந்தது. அதில் கீழ்க்காணும் விசித்திரமான செய்தி இருந்தது:

'உங்கள் உயர்ந்த குணங்களை அறிந்துகொள்ளும் மனிதன் மக்கட் குழுவில் யாருமே இல்லை என்று நீங்கள் நினைக்காதீர்கள். நீங்கள் மௌனமாக ஒரு மூலையில் இருக்கிறீர்கள். ஆனுல் ஆத்ம தியாகம் தங்கள் கையால் ஒவ்வொரு கணமும் நடந்துகொண்டிருக்கிறது என்பதைக் குறைந்தபட்சம் நானுவது அறிந்திருக்கிறேன். மக்களால் ஏற்றுக்கொள்ளப்படும் விஷயங்கள் பணத்தினுல் நடக்கின்றன. ஆனுல், மக்களுக்கு ஏற்காத போதிலும் நல்லவையாக உள்ளவை, வெறும் பணத்தினுல் கைகூடுவதில்லை. அவற்றிற்குத் தங்கள் உடலில் உள்ளவற்றைப் போன்ற இணையற்ற குணங்கள்தாம் தேவைப்படுகின்றன. அந்தக் குணங்கள் தங்கள் வசம் இருக்கின்றன; பணம் இல்லை. ஆனுல், அதனுல் நீங்கள் என்றும் நிலைகுலையவில்லை. எனவே இந்தக் கடிதம் எழுதுபவர் தங்களிடம் வேண்டிக்கொள்வது இவ்வளவுதான்: எப்பொழுதாவது இந்தக் கடிதம் எழுதுபவரிடமிருந்து உங்களுக்கு ஏதாவது பணம் வந்தால் அதை மறுக்கவேண்டாம். நீங்கள் பணமற்றவராகி அதை எங்களிடமிருந்துதான் பெறுபவராக ஆகப்போகிறீர்கள் என்று இதன் பொருளல்ல. ஆனுல், உங்கள் மூலம் அந்தப் பணத்தினுல் எத்தகைய நற்பயன் விளையுமோ, அந்த நற்பயன் என் கையால் ஆகாது என்று அதை நான் உங்களிடம் அனுப்பப் போகிறேன். அது எங்கிருந்து வருகிறது என்பதைக் கண்டுபிடிக்கும் தொல்லையில் விழாமல் இருந்தால் நல்லது.'

இந்தக் கடிதத்தில் கண்ட கையெழுத்தும், எனக்குப் பணத்துடன் வந்த கடிதக் கையெழுத்தும் ஒன்றுபோல் இருக்கவில்லை. நாங்கள் இருவருமே அந்த எழுத்துக்களை மிகவும் கூர்ந்து கவனித்துப் பார்த்தோம். ஆனுல் அவற்றுள் ஒற்றுமை இருப்பதாகவே தெரியவில்லை. அக்காவும், சுந்தரியுங்கூட அந்த இரு கையெழுத்துக்களையும் ஒப்பிட்டுப் பார்த்தார்கள். இதில் வியப்பிற்குறியது என்னவென்ருல், என் கடிதத் துண்டிலிருந்த கையெழுத்து ஆணினுடையது அல்ல என்று அக்கா தர்க்கம்

செய்தாள். அவள் அவ்வாறு எண்ணுவதற்குரிய காரணம் என்ன என்றும் அவள் எங்களுக்குச் சொன்னாள். அதைக் கேட்டு எங்களுக்கும் அதேபோல் தோன்ற ஆரம்பித்தது. முக்கிய வேறுபாடு என்னவென்றால், என் கடிதத் துண்டில் எழுத்துக்கள் சிறிது கவனமாக எழுதப்பட்டிருந்தன. மேலும் அவற்றின் அமைப்பு ஆண்கள் கையால் பொதுவாக அமைக்கப்படுவது போல் இருக்கவில்லை. முக்கியமாக, 'அனுப்பி வைத்திருக் கிறேன்' என்ற வார்த்தையில், கடைசி இரண்டு எழுத்துக்களில் சிறிது திருத்தம் காணப்பட்டது. முதலில் பெண்பாலுக்கேற்ற முடிவு எழுதப்பட்டு, பிறகு அது ஆண்பாலுக்கேற்ற முடிவாகத் திருத்தப்பட்டிருந்தது. இந்த விஷயம் அக்காவைத் தவிர வேறு யாருடைய கவனத்திலும் வந்திருக்கவில்லை. அக்காவின் கவனத்தில்தான் எப்படி வந்ததோ? அவள் அதை எங்களுக்கு எடுத்துக் காட்டிய பிறகுதான் எங்களுக்கு அது புலப்பட்டது. ஆனால், பணம் அனுப்பியவர் ஆணா பெண்ணா என்பதை அறிந்துகொண்டு என்ன ஆகப்போவதாக இருந்தது? யார் என்று தெரிந்துகொள்வது முடியாததாகத்தான் இருந்தது.

குழப்பமடைந்த நாங்கள் விலாசத்தை மீண்டும் மீண்டும் பார்த்தோம். தபால் முத்திரையையும் மீண்டும் உற்றுப் பார்த்தோம். ஒரு கடிதத்தை எழுதியது பெண், மற்றதை எழுதியது ஆண் என்பது தெரிந்தது. அக்கா மறுபடியும் ஒரு விசித்திரமான வாதத்தை கூறினாள்: 'இந்த இருவரும் யாரோ கணவன் மனைவியராக அல்லது அண்ணன் தங்கையாக இருக்க வேண்டும். அநேகமாக, கணவன்—மனைவியர்தாம். மேலும் இருவருமே பரோபகாரிகளாக இருந்து, இருவரும் ஒரே சமயத்தில் இந்த இரு கடிதங்களையும் எழுதியிருக்கவேண்டும்.' அக்காவின் இந்த வாதம், எங்களுக்கு ஒரு நீண்ட கதையின் ஒரு பகுதியைப்போலத் தோன்றியது. ஏனெனில், இவ்வாறான கணவன்—மனைவியர் எங்கு இருப்பார்கள்? இங்கிலாந்து முதலிய நாடுகளில் இருந்தாலும் இருக்கலாம். ஆனால் நம் நாட்டில் இருப்பார்கள் என்று நம்ப முடியவில்லை. நம் நாட்டில் பரோபகாரிகளே கிடையாது என்று நான் சொல்ல வரவில்லை. ஆனால் இந்தக் கடிதங்களை எழுதினவர்கள் எந்த முறையில் பரோபகாரம் செய்ய ஆரம்பித்திருந்தார்களோ, அந்த முறையில் பரோபகாரம் செய்யும் ஆண்களும், பெண்களும் நம்மிடையே இருக்கவே முடியாது என்றுதான் எனக்குத் தோன்றியது. அதே

சமயத்தில், அக்காவின் விளக்கத்தை விடுத்து வேறொரு விளக் கத்தை என்னால் கூறவும் முடியவில்லை. இறுதியில் தர்க்க மற்றவனாகி நான், 'சரி, மேற்கொண்டு என்ன ஆகிறது என்பதைப் பார்க்கலாம்!' என்று சொல்லி அமைதியாக இருந் தேன். ஆனால், மேற்கொண்டு என்ன என்று தெரிந்தால் எங்களைவிட வாசகர்களுக்கு அதிக ஆச்சரியம் ஏற்படும். எந்தத் தேதியன்று எனக்கு முதல் ஐந்து—இருபது (ரூபாய்) நோட்டுக் கள் வந்தனவோ, அதே தேதியன்று அடுத்த மாதமும் அவ்வளவு பணம் வந்தது. ஆனால், இம்முறை பணத்துடன் கடிதம் முதலான வேறு ஒன்றுமே இருக்கவில்லை. கடிதத்தின் மீது விலாசம் அதே பழைய கையெழுத்தில் எழுதப்பட்டிருந்தது. அதைப் போன்றே அண்ணாவுக்கும் ஒரு நூறு ரூபாய் நோட்டு வந்தது. ஆனால் அத்துடனும் கடிதமொன்றும் இருக்கவில்லை.

# 45. அமைதியான நாட்கள்

இப்படி இரகசியமான முறையில் வந்த பணம் எங்கள் நல்ல காலத்தின் ஆரம்பத்திற்குத்தான் அறிகுறி என்று எங்களுக்குத் தோன்றலாயிற்று. ஏனெனில், அந்த நாளிலிருந்து யாரிட மிருந்தும் எங்களுக்கு எவ்விதத் தொல்லையும் ஏற்படவில்லை. அது மட்டும் அல்ல. என்றுமே எந்தப் பொருளின் குறைவும் எங்களுக்கு இருக்கவில்லை என்ற நிலை ஏற்பட்டது. எனது படிப்பு அமைதியாகவும் இடையூறின்றியும் நடந்தது. கல்லூரியின் இறுதி வகுப்பையும் முடித்துக்கொண்டு எல்லாப் பரீட்சை களிலும் சிறந்த முறையில் தேர்வு பெற்றேன். இறுதிப் பரீட் சைக்கு உட்காரும் காலம் நெருங்கியது. மறுபக்கம் அக்கா, அவள் தோழி—இவ்விருவரின் படிப்பும் சிறந்த முறையில் நடந்து கொண்டிருந்தது. மேலும், மெல்ல மெல்ல எங்கள் எஞ்சியுள்ள ஆயுட்காலத்தை எவ்வாறு கழிக்கப்போகிறோம், என்ன ஆகப் போகிறோம் என்பதுபற்றிய திட்டங்களையும் நாங்கள் போடத் தொடங்கியிருந்தோம். அண்ணாவின் பரந்த கற்பனைகள் இது வரை அவ்வளவாக வெளிப்பட்டுக் கொண்டிருக்கவில்லை. ஆனால், இப்பொழுது சமீப காலமாக அவை தாராளமாக வெளிப்படத் தொடங்கின. முன்பும் அவ்வப்போது அவர் என்னிடமும், அந்த இருவரிடமும் தன் மனத்தில் உள்ள ஏதேதோ எண்ணங்களைச் சொல்வதுண்டுதான். ஆனால், கலைக் கல்லூரியில் எனது படிப்பின் முடிவு நெருங்க நெருங்கத்தான், அவரது உள்ளம் மேலும் தெளிவாகத் தொடங்கியது. சில விஷயங்களில் அவர் எங்களைக் கலந்து ஆலோசிக்கலானார். இன்றுவரை அவருடைய எல்லாப் பேச்சுக்களும் வெறும் உபதேசம்போல் இருக்கும். ஆனால், இப்பொழுதெல்லாம் அவர் தமக்குச் சமமான நண்பர்களுடன் கலந்து ஆலோசிப்பவர்போல் காணப் படலானார். ஒரு சனிக்கிழமையன்று அவர் தமது அலுவ லகத்திலிருந்து கிளம்பினார். வீட்டிற்குப் போகாமல் நேராக என் கல்லூரிக்கு வந்தார். மாலையில் அவரும் நானும் ஊரை நோக்கி நடந்தே சென்றோம். அவரும் நானும் தனியாகத்

தான். மாலை நேரத்து அமைதியான சூழ்நிலை. ஆற்றங்கரை ஓரத்தில் அந்த மௌனம் நிலவுகிற அகன்ற பாதை. மெள்ள வீசும் குளிர்ந்த காற்று. இவ்வளவும் சுமுகமாக இருந்ததால் தானோ என்னவோ அவர் உள்ளம் வழக்கத்தைவிட அதிகமாக மலர்ந்து காணப்பட்டது. அதைக் கண்டு என் மனம் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தது. இப்பொழுது இங்கிருந்து வீடு போய்ச் சேர எவ்வளவோ நேரம் ஆகும். எனவே நமக்கு எவ்வளவோ பேசுவதற்கு வாய்ப்புக் கிடைக்கும் என்று எனக்குத் தோன்றியது.

நடந்துகொண்டே இருக்கும்போது திடீரென்று எனக்கு ஏதோ ஒரு விஷயம் நினைவிற்கு வந்தது. உடனேயே நான் அவரிடம் சொன்னேன்: 'உண்மையாகவே அண்ணா, நான் உங்களை எங்களது துணைவன் ஒருவனுடன் சந்திக்க வைத்து, உங்களையும் அவனையும் ஒருவருக்கொருவரை அறிமுகப்படுத்த இருந்தேன். அவன் அவ்வாறு செய்யும்படி இரண்டு மூன்று முறை என்னை வேண்டினான். ஆனால், நான் வீட்டிற்கு வந்தபொழுதெல்லாம் அவனைப்பற்றிய பேச்சை எடுக்க எனக்கு நினைவிருக்கவில்லை. இன்று எதிர்பாராமல் நீங்களாகவே இங்கு வந்தீர்கள். அப்பொழுதும் எனக்கு நினைவிற்கு வரவில்லை. பாவம், அவன் நிலையும் முழுக்க முழுக்க என் நிலையைப் போன்றதுதான், அவனுடைய சகோதரி விதவை என்ற ஒரு வேற்றுமையைத் தவிர. என்னுடைய நிலை அவனுக்குத் தெரிந்தவுடன், அவனாகவே என்னிடம் வந்து அறிமுகம் செய்துகொண்டு எனக்கு எல்லா விவரங்களும் சொல்லலானான். புக்ககத்தில் அவன் தங்கை அநுபவிக்கும் கொடுமைகளைச் சொன்னான். அவன் சொல்லும் விவரங்களைக் கேட்கும்போது, அக்காவின் நிலை எவ்வளவோ சிறந்தது என்று தோன்றுகிறது.'

'இப்படி சில ஜீவன்களும் உலகில் இருப்பார்கள். இவன் எங்கிருந்து வந்தான்?'

'அங்குள்ள கோலாப்பூரைச் சேர்ந்தவன். சமீபத்தில் இறுதிப் பரீட்சைக்குப் படிப்பதற்காக வந்திருக்கிறான். நான் ஒரு நாள் அவனை உங்களிடம் அழைத்து வருகிறேன். என்ன, தடையொன்றும் இல்லையே?'

அண்ணா சிரித்துக்கொண்டே, 'அடே, தடை என்ன இருக்கிறது!' என்று சொல்லி, சிறிது நேரம் மௌனமாக இருந்து, பிறகு என்னிடம் சொன்னார்: 'ஆனால், என்னிடம் வந்து அவன் என்ன செய்யப் போகிறான்?'

நானும் அவரைப் போலவே சிரித்துவிட்டுச் சொன்னேன்: அவனுடைய தங்கைக்கும் நீங்கள் தங்களிடம் புகலிடம் தந்து ஏற்றுக்கொள்ளுங்கள் என்று உங்களிடம் வேண்டப்போகிறான். வேறு என்ன?' எனது இந்தச் சொற்களைக் கேட்டு அவர் ஒன்றுமே பேசவில்லை. பிறகு வெகுநேரம் கழித்து அவர் என்னிடம் சொன்னார்: 'தம்பி, இப்பொழுது நீ பெரியவனாகிக்கொண்டிருக் கிறாய். இப்பொழுது உனது இறுதிப் பரீட்சை சிறிதே நாட்களில் வரப்போகிறது. அது முடிந்த பிறகு உனக்கு என்ன செய்ய வேண்டும் என்று தோன்றுகிறது?' இந்தக் கேள்வியை மிகுந்த தீவிர பாவத்துடன் கேட்டார். அவருக்கு இப்பொழுது உறுதி யுடன் என்ன பதிலைக் கொடுப்பது என்று தெரியாமல் சிறிது தயங்கினேன். இப்படிப்பட்ட கேள்விக்கு என்னிடம் ஒரு பதில் இருந்தது. ஆனால், அந்தப் பதிலைக் கேட்டு அண்ணாவுக்கு ஆனந்தம் ஏற்படாது. அவருக்கு ஓர் உறுதியான பதில் வேண்டும். இதை நான் உணர்ந்திருந்தபோதிலும், என் உள்ளத்தில் வெகு நாளாக வட்டமிட்டுக்கொண்டிருந்த பதிலைத் தான் நான் இச்சமயம் அவரிடம் கூறினேன். நான் சொன் னேன்: 'அண்ணா, எப்படியாவது நம்மால் நம் நாட்டிற்கு நலம் ஏற்படும் வகையில் நான்கு காரியங்கள் நடக்கவேண்டும். இவ்வளவுதான், வேறு என்ன? நான் இவ்வளவு நாட்களாக உங்கள் நிழலில் இருந்திருக்கிறேன். அப்பொழுது இதைத் தவிர வேறு எந்தக் குறிக்கோள் என் மனத்தில் இருக்கமுடியும்? மேலும், எனது அந்தப் புதிய நண்பன் இருக்கிறானே, அவ னுடைய குறிக்கோளும் இதேதான்.'

அண்ணா சிறிது சிரித்தாற்போல் எனக்குத் தோன்றியது. ஆனால், அவ்வாறு ஒன்றுமே வெளிப்படுத்திக்கொள்ளாமல் அவர் என்னிடம் சொன்னார்: 'குறிக்கோள் என்னவோ மிகச் சிறந்தது தான். ஆனால், அந்தக் குறிக்கோளை நிறைவேற்றிக்கொள்ள ஏதேனும் குறிப்பிட்ட வழியை மனத்தில் கொண்டு வந்திருக்கிறீர் களா? தம்பி, நமது நாடு தாழ்ந்த நிலையில் இருக்கிறது. ஆகவே, அதை மேலுயர்த்துவதற்காகப் பாடுபடுவதைவிட மேலான குறிக்கோள் வேறு என்ன இருக்கப்போகிறது, அப்பனே? ஆனால், வீடு கட்டும் எண்ணம் இருப்பதாக வைத்துக்கொள். அதற்காகக் கூட ஒரு மாதிரிப் படம் வரைந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அதற்காகப் பண ஏற்பாடு என்ன இருக்கிறது, எவ்வளவு இருக் கிறது என்பதைப்பற்றி ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. அது

போலவே நாட்டின் நலத்தைக் கோரிச் செய்யப் போகும் காரியத்திலும் இல்லையா? நாட்டு நலம், சீர்திருத்தம், விடுதலை—இவை மிகவும் இனிய பொருளாழம் கொண்ட சொற்களாகப் படுகின்றன, இல்லையா, சொல்? ஆனால், அவற்றின் பொருளின் ஆழம் எவ்வளவு பேரின் கவனத்திற்கு வருகிறது? உன்னுடையதையே எடுத்துக்கொள். இப்பொழுது கொஞ்ச நாட்களாக நீ நாட்டின் நலங் கருதிச் செய்யும் சேவையே தனது குறிக்கோள் எனச் சொல்லிக்கொண்டிருக்கிறாய். ஆனால், அதற்குகந்த வழி எது? நாட்டின் நலம் என்பது ஒன்றும் கடைத்தெருவில் கிடைக்கும் பொருள் இல்லையல்லவா, சட்டென்று போய்த் தூக்கி எடுத்துக்கொண்டு வந்தோம் என்பதற்கு? சொல், இப்பொழுது நாட்டின் நலத்திற்காக நீ நான்கு காரியங்களைச் செய்யப் போகிறாய் என்றால் என்ன செய்யப் போகிறாய்?'

நான் மௌனமாக இருப்பதைக் கண்டு அவர் சொன்னார்: 'தம்பி, உன்னைப்போல் மாணவப் பருவத்தில் இருக்கும் வரை, எல்லோருக்கும் உலகத்தைப்பற்றி விசேடமாக ஒன்றும் தெரியாமல் இருப்பதாலோ என்னவோ, அவர்கள் மனத்தில் பலதரப்பட்ட எண்ணங்கள் உதிக்கின்றன. எவருக்கேனும் பல பரீட்சைகள் எழுதி, ஒவ்வொன்றிலும் முதலாவதாகத் தேறி, மேற்கொண்டு உயர்ந்த வேலையை அடையப் பெற்று, சுகமாக இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. எவருக்கேனும் பெரிய வக்கீலாவேன், டாக்டர் ஆவேன் எனத் தோன்றுகிறது. வேறு யாரையேனும் கேட்டால், நாட்டிற்குத் தொண்டு செய்வதுதான் தனது எண்ணம் என்ற பதில் வரும். ஆனால் தம்பி, ''நான் குறிப்பிட்ட இன்ன அளவிற்குள் இருந்தவாறு, இன்ன வழியில் எனது நாட்டிற்காக 'அல்லது உடன்பிறந்த நாட்டு மக்களுக்காக ஏதேனும் தொழிலைச் செய்வதில் எனது நாட்களைச் செலவழிப்பேன்'' என்று முதலிலிருந்தே திட்டமிட்டு அதன்படி காரியத்தில் ஈடுபடும் மக்கள் எத்தனை பேர் கிடைப்பார்கள்? சொல். தனது நலத்தைப் பற்றிய கவலையின்றி, தேச நலம் கருதித் தேசத் தொண்டில் காலத்தைக் கழிக்கப்போகிறாய் அல்லவா, சொல்? அப்படி என்றால் பின் என்ன என்ன செய்யப் போகிறாய், எப்படிச் செய்யப்போகிறாய் என்பதைச் சொல்? உன் சகோதரியை நன்கு படித்தவளாக ஆக்கியிருக்கிறாய். உன்மீது இன்னும் குடும்பத்தின் பொறுப்பு விழவில்லை. இப்போதைக்கு இரண்டு பேரின் வயிற்றுக்கு வேண்டிய அளவு ஈட்டி ஜாம் ஜாம் என்று இருப்பதை

விட்டு வேறு எதனுடைய தேவையும் உனக்கு இல்லை. ஆகவே, இப்படிப்பட்ட நிலையில் நீ என்ன செய்யப் போகிறாய் என்று சொல்?'

இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்வதும் எனக்கு முடியாமற் போயிற்று. இன்றுவரை நான் செய்த எல்லாமே முன்னதாக யோசிக்கப்படாதவை. கேள்விகளைக் காதில் வாங்கிக்கொண்டு பேசாமல் நடப்பதைத் தவிர வேறு எதுவுமே என்னால் செய்ய முடியவில்லை. அதனால் எனக்கு என்னையே எண்ணி மிகுந்த விசித்திரமான வியப்பு ஏற்பட்டது. இன்றுவரை எத்தனை எத்தனை யோசனைகள் என் மனத்தில் உதித்திருக்கின்றன! ஆனால், அவற்றுள் நான்கைக்கூட வரையறுத்த வடிவில் என்னால் எடுத்துச் சொல்ல முடியவில்லை. பிறகு என்ன செய்வேன்? கடைசியில் அண்ணா சிரித்து என்னிடம் சொல்லலானார்: 'பார், இந்த விரும்பிய விஷயங்களுக்கும், வரையறுத்துக்கொண்ட விஷயங்களுக்கும் எவ்வளவு வேறுபாடு இருக்கிறது என்று பார்! ஆசையின் காரணமாக எவ்வளவோ விஷயங்களில் நாம் இப்படிச் செய்யலாம், அப்படிச் செய்யலாம் என்று நமக்குத் தோன்றிக் கொண்டிருக்கும். ஆனால், ''என்ன என்ன செய்யலாம்?'' என்று திட்டவட்டமாக வரையறுக்க முயலும்போது, நிராசைதான் ஏற்படுகிறது. அதனால்தான் முதலிலிருந்தே எல்லாக் காரியங்களையும் செய்யும் வகைக்கேற்றபடி வரையறை செய்துகொள்ள வேண்டும்.

'நான் எனது சுந்தரிக்குக் கல்யாணம் செய்யாமல் இருக்கிறேன். அதன் பின் ஓர் உத்தேசம் உண்டு. உனது சகோதரியையும் இந்தக் கல்வி நெறியில் செலுத்தி, இன்றைய நிலைக்கு அவளைக் கொண்டு வந்ததிலும் அதே கொள்கைதான் இருக்கிறது. அந்தக் கொள்கையை எனது சுந்தரியும், உனது சகோதரியும் இன்றுவரை மிக நல்ல முறையில் பாதுகாத்திருக்கிறார்கள். மேலும், இப்பொழுது அவர்களைக்கொண்டு அந்தக் கொள்கையை வெற்றியடையச் செய்வேன் என்று எனக்கு என்னவோ உறுதியான நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. ''அற்ப வயது, காலம் இப்படி, எவருடைய உதவியும் இல்லை'' என்ற நிலையில் என் பெண், முத்தைப் போன்று தூயவளாக இருந்து இந்த நிலைக்கு வந்தாள் என்பதைப்பற்றி எனக்கு எவ்வளவு ஆறுதல் ஏற்படுகிறது! இனி எப்பொழுதும் அவள் நல்வழியிலிருந்து தவறுவாள் என்று என் மனத்தில்கூடத் தோன்றுவதில்லை. உனது சகோ

தரியைப் போன்ற தோழி அவளுக்கு வாழ்நாள் முழுவதுக்கும் கிடைத்திருக்கிருள் என்பதும் எனக்குக் குறைவான ஆறுதலே ஏற்படுத்துகிறது என்பதில்லே. இன்று இப்பொழுது நான் உனக்குத் துவக்கத்திலிருந்து எனது உத்தேசத்தைச் சொல் கிறேன்.'

# 46. அடுத்து வந்த திட்டங்கள்

அவ்வளவு பேசியதும் அண்ணு மீண்டும் சிறிது நேரம் மௌன மாக இருந்தார். அவருடைய முகம் எப்பொழுதையும்விடச் சாந்தமாகவும் அதிகக் கம்பீரமாகவும் இருந்தது. சுபாவமாகவே கம்பீரமானதாக இருந்தாலும், விசேடமான எண்ணங்கள் உள்ளத்தில் குழம்பிக்கொண்டிருக்குமேயாஞல், சில முகங்களின் காம்பீர்யம் இன்னமும் சிறப்பானதாக ஆகிறது. விசேஷ சமயங் களில் விசேஷமான ஒளியில் இந்த முகங்களைப் பார்த்தால் அவை கம்பீரமே உருக்கொண்டாற்போல் காணப்படுகின்றன. அண்ணு வின் முகம் இப்படிப்பட்டவற்றுள் ஒன்ருக இருந்தது. எப் பொழுதும் சாந்தமாக, எப்பொழுதும் கம்பீரமாக இருப்பது அது. இப்போது மாலைச் சூரியனின் செக்கச் செவேலென அங்கும் இங்கும் படர்ந்திருந்த ஒளியழகில் அது இன்னமும் சாந்தமாகவும், கம்பீரமானதாகவும் காணப்பட்டது. அதிலும் அவரது உள்ளத்தில் இருந்த எண்ணங்கள் இன்னும் சிறப்பான நிறைவைக் கொடுப்பதாகத் தோன்றியது. பணிவு, வியப்பு, அன்பு ஆகிய மூன்று உணர்ச்சிகளும் நிறைந்த பார்வையினுல் நான் அவரைப் பார்த்துக்கொண்டிருந்தபொழுது, அவர் முகத்தி லிருந்து எனது பார்வையை அகற்றவே கூடாது என்று எனக்குத் தோன்றியது. செவிகளும் அவரிடமிருந்து தொடர்ந்து வரும் சொற்களை எதிர்நோக்கி நின்றன. அதற்குள் அவருடைய உதடு களும் அசையலாயின. தொடர்ந்து இச்சொற்கள் என் செவி களில் விழுந்தன: 'எந்த ஒரு கெட்டுப்போன விஷயத்தையும் சீர்திருத்தவேண்டும் என்ருல், அதை மேலாகச் சரிப்படுத்துவதில் ஒரு பயனும் இல்லை. அதன் அடி வரைக்கும் சென்று, ''அது பாழடைய உண்மையான காரணம் என்ன? அதைக் கெடுக்கும் மூல விதை எது?'' என்பதை ஆய்ந்து எடுத்து அதை வேரோடு அழித்துவிடவேண்டும். இதைத் தவிர வேறு சரியான வழியே இல்லை. அவ்வாறு செய்தாலொழிய எதுவும் ஒழுங்காக ஆகப் போவதில்லை. உனக்கு அப்படித் தோன்றவில்லையா, தம்பி?'

மீண்டும் அவர் சிறிது நேரம் நிறுத்திஞர். பிறகு தொடர்ந்து சொல்லலாஞர்: ''பல ஆண்டுகளுக்கு முன்ஞல் இதுபற்றி

எனக்கும் எனது நண்பனுக்கும் இடையில் பேச்சு நடந்தது. அது எனக்குத் தினந்தோறும் நினைவுக்கு வருகிறது. அந்த வேளை யும் இன்று இருப்பதுபோலவே இருந்தது. இதேபோன்ற மாலைப் பொழுது. கடலோரத்தில் இவ்வாறே சூரியன் மறைந்துகொண் டிருந்தான். நாட்கணக்கில் சரியாகக் கணக்கிட்டுப் பார்த்தால் அது நடந்து இன்றைக்குச் சரியாக இருபது ஆண்டுகள் ஆகின்றன.

'நாங்கள் இருவரும் ஆருயிர் நண்பர்கள். இள வயதினர். இருவருமே உலகில் ஏதாவது செய்து காண்பிக்கவேண்டும் என்று பேரார்வம் கொண்டவர்கள். இருவருடைய எண்ணங்களும் ஒன்றுபோல், இருவருடைய நிலையும் ஒன்றுபோல், இருவரும் ஏழைகள்; செல்வநிலையில் ஏழைகள். ஆனால் எண்ணங்களாலும் குறிக்கோளாலும் வறுமையடைந்தவர்கள் அல்ல. நாங்கள் இரட்டைப் பிறவியினரைப்போல் பழகிக்கொண்டிருந்தோம். உண்மையான நல்ல நிலையைக் காட்டிலும் கற்பித்த நல்ல நிலை யில்தான் இருவரும் ஒருவருடன் ஒருவர் சேர்ந்திருந்தோம். எங்கள் இருவருக்கும் கல்யாணம் ஆகிவிட்டிருந்தது. எங்கள் சின்னஞ்சிறு மனைவிகள் எங்கள் பெற்றோர்களுடன் இருந்தார் கள். புதுப்புதுக் கற்பனைகள் என்று எதைச் சொல்வார்களோ, அவை அந்தச் சமயத்தில் எங்கள் உள்ளத்தில் குடிகொண்டிருந் தன. அந்தக் காலத்தில், உண்மைத் தோழிகளென எங்களால் கருதப்பட்ட எங்கள் மனைவியர்களுடன், வாழ்க்கைப் பயணத்தில் அவர்களை உண்மைத் துணையெனக் கொண்டு செல்ல நாங்கள் எண்ணியிருந்தோம். ஆனால், எண்ணும்பொழுது எது மிக எளிது என்று தோன்றியதோ, அது காரியத்தில் அவ்வளவு எளிதாக நிறைவேறும் என்று தோன்றவில்லை.

'இருபதுஆண்டுகளுக்கு முன் இதே நாள் கடற்கரையில் உலா வும் பொழுது எங்கள் இருவருக்கும் இடையில் இதுபற்றிப் பேச்சு நடந்தது. எனது நண்பன் ஆழ்ந்து சிந்திக்கும் தன்மை கொண்ட வன். மெதுவாக என்னிடம் சொன்னான்: ''நாம் நமது மனைவி மாரை எப்படிச் சீர்திருத்தவேண்டும் என்றாலும் சீர்திருத்தி விடலாம் என்று சொல்லலாம். ஆனால் அது நடைமுறையில் சாத்தியமில்லை. முதலில், இந்த வேலையில் நாம் முனைந்ததும், நம் வீட்டில் இருப்பவர்களுடன் வாத விவாதம் செய்யவேண்டி வரும். அவர்கள் விருப்பத்திற்கு எதிராக நடக்கவேண்டி வரும். அவர்கள் உள்ளத்தைப் புண்படுத்த வேண்டி வரும். இவ்வளவு எல்லாம் செய்தும் நாம் கையில் எடுத்துக்கொண்ட காரியத்தில்

வெற்றி கிடைக்கும் என்று நிச்சயமாகச் சொல்லவும் முடியாது. எப்படி முடியும்? வயிற்றுப்பாட்டிற்காக ஏதேனும் தொழில் செய்தால்தான் வயிற்றுக்குக் கிடைக்கும் என்பதாக நம் இருவரின் நிலையும் இருக்கிறது. அதாவது நாம் வயிற்றுப்பாட்டுக்கான வேலையில் ஈடுபட்டிருக்க, குடும்பத்தின் எல்லாத் தொல்லைகளையும் மனைவிமார் பொறுத்துக்கொள்ள வேண்டி வரும். அவர்கள் அதைத் தாங்குவார்களேயானல், பிறகு நமது எண்ணத்தின்படி எப்படி, என்ன நடக்கப் போகிறது? வீட்டு வேலைகளைச் செய்வதிலேயே அவர்களுடைய எல்லா நேரமும் போய் விடும். எஞ்சிய சிறிது நேரத்தில் இளைப்பாருமல், அந்த நேரத்தை அவர்கள் ஏதாவது கற்றுக்கொள்ளுவதிலும் எழுதுவதிலும் செலுத்துவார்களேயானல் அல்லது அவர்கள் அவ்வாறு செய்ய வேண்டும் என்று நாம் அவர்களை வற்புறுத்துவோமேயானல், இன்பத்திற்குப் பதிலாக அவர்களுக்குத் துன்பந்தான் ஏற்படும். ஆகவே, நாம் அவர்களைப் படிப்பித்துச் சீர்திருத்தும் வேலையில் முனைவதில் ஒரு பயனும் இல்லை. நாம் செய்யவேண்டியது என்ன என்ருல், நாம் செய்ய விரும்பும் காரியங்களுக்கு ஏற்றவாறு நாம் அவர்களுடைய உள்ளங்களைத் தயாராக்கவேண்டும். அவர்கள் ஏன் படிக்கமாட்டார்கள்? ஆனல் அவர்களுக்கு அந்த விஷயங்களின் மதிப்பு, அவை யாவற்றின் மகத்துவமும் தெரியவேண்டும். அவை தெரிந்துவிட்டால் நமது வேலை பாதிக்குமேல் முடிந்து விட்டதாகக் கொள்ளலாம். என் மனைவி படித்தவளாக, அறிவாளியாக இல்லையென்ருலும், அவளுக்குக் கல்வியின் இனிமையும், மதிப்பும் தெரிய வந்தால், ஒரு பெரிய வேலை கைகூடியதாக நான் நினைக்கிறேன். எனக்கு ஒரு பெண் பிறந்தால் அவளை மட்டும் நான் நன்கு படிக்க வைப்பேன். அவள் கல்யாணத்தை விரைவில் செய்யமாட்டேன். எவ்வளவு காலம் அவளைக் கல்யாணமின்றி வைக்கமுடியுமோ, அநேகமாக அவ்வளவு காலம் அப்படியிருக்க அவள் மனம் ஏற்றுக்கொள்ளுமாறு செய்வேன். மேலும் கல்யாணம் செய்துகொண்டு குடும்பத்தில் சிக்குவதைவிட, கல்யாணமின்றி இருந்து வீட்டிற்கு வீடு சென்று பெண்களுக்குக் கல்விச் செல்வம் அளிப்பதிலும், பரோபகாரக் காரியங்களிலும் தன் ஆயுட்காலத்தை ஈடுபடுத்தவேண்டும் என்ற உபதேசத்தை அவள் உள்ளத்தில் திணிப்பேன்.'' எனது நண்பனின் அந்தப் பேச்சு அந்தச் சமயத்தில் எனக்கு மிகவும் விசித்திரமாகப் பட்டது. பெரும்பாலும் அவன் ஏதோ பைத்தியக்காரத்தனமாகப் பேசிக்

கொண்டிருக்கவேண்டும் என்று தோன்றியது. அவ்வாறே நான் அவனிடம் சொல்லிக் காண்பித்தேன். அந்த விஷயத்தில் எங்கள் இருவருக்கும் இடையில் பெரிய விவாதம் நடந்தது. அதற்கு முன்பெல்லாம் எங்கள் இருவரின் எண்ணங்களும் ஒன்ருகவே இருந்தன. ஆனுல் அன்றைய தினந்தான் அவனது எண்ணங்கள் மிகுந்த வேகத்தைக் கொண்டனவாகவும், தாறுமாருனவை யாகவும் காணப்பட்டன. அவனது அந்த எண்ணங்களின் மகத்து வமும், உண்மைத் தன்மையும் எனது அறிவிற்கு எட்டும் அள விற்கு அதைக் கிரகிக்கும் தன்மை என்னிடம் இருக்கவில்லை என்று தான் சொல்லவேண்டும். அவனுக்குப் படிப்பு முதலியவற்றில் மிகுந்த ஆசை உண்டு. மேலும் கதைகளில் வரும் கற்பனையைப் போன்று அவனது கற்பனை இருக்கும். அதனுல், சில சமயங் களில் நான் அவனைக் கேலி செய்வது வழக்கம். தினந்தோறும் ஏதாவதொரு புதிய கற்பனை அவன் மூளையில் உதிக்கும். நான் அவனை எப்பொழுதுமே ''உயரப் பறக்கிறவன்'' என்ற பெயரைச் சொல்லித்தான் கூப்பிடுவது வழக்கம். என்றைய தினம் எங்கள் இருவருக்கும் இடையில் மேற்கூறிய பேச்சு நடந்ததோ, அன்றைய தினமே இரவில் அவனுக்குத் திடீரென்று காய்ச்சல் வரத் தொடங்கி, சரியாக ஒன்பதாவது நாள் அவன் கால மாஞன். அவனுக்கு ''டைபாய்ட்'' ஜுரம் வந்திருந்தது. இறுதி மூன்று நாட்கள் அவன் இடையருது பிதற்றிக்கொண்டே யிருந் தான். முதல் நாள் என்னிடம் என்னவெல்லாம் பேசினுனே, அவற்றையெல்லாம் அந்த மூன்று நாட்களும் உளறிக்கொண் டிருந்தான். நான் இரவும் பகலும் அவனிடமே இருந்தேன். இறுதி நாள், இறக்கும் தறுவாயில் சற்றே நினைவிற்கு வந்தவன் போல் காணப்பட்டான். ஆனுல் அவன் என்ன பேசினுன் என்பது எனக்கு விளங்கவில்லை. ''இப்பொழுது ஒன்றும் முடியாது. எப்படி முடியும்? நீயே செய்!'' இப்படி அவன் ஏதாவது சொல்லிக்கொண்டிருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

'நான் அவனுடைய ஒவ்வொரு வார்த்தையையும் காது கொடுத்துக் கேட்க முயன்றுகொண்டிருந்தேன். ஆனுல், மேற் கொண்டு ஒரு வார்த்தையும் காதில் விழவில்லை. சுமார் நள்ளிரவு நேரத்தில் அவன் காலமானுன். எனது சொந்த ஐம்புலன்களுமே மடிந்தனபோல் எனக்குத் தோன்றியது. நான் அளவற்ற வருத்தம் அடைந்தேன். பம்பாய் நகரம் எவ்வளவு விசால மானது! ஆனுல் என்னையும் அவனையும் தவிர எங்களுக்கு வேறு

உலகமே தெரிந்திருக்கவில்லை. இப்படிப்பட்ட நிலையில் அவன் என்னைவிட்டுச் சென்றதும் எனது நிலை எவ்வளவு பயங்கரமான தாக இருந்தது என்பதைப்பற்றி யாராலுமே கற்பனை செய்து பார்க்க முடியாது. அவன் தன் பெற்றோர்களுக்குப் பிறந்த ஒரே பிள்ளை. அவன் மனைவி இளம் வயதினள். எனது நிலையும் முற்றும் அது போன்றதுதான். அவனது மரணத்தைப்பற்றிய மிகத் துன்பகரமான செய்தியை அவன் வீட்டில் தெரிவித்து அவன் பெற்றோர், அவன் மனைவி—இவர்களுடைய உள்ளத்தைச் சுக்கு நூறாக்கும் மிகவும் துரதிர்ஷ்டமான பொறுப்பு என்மீது விழுந் தது. அதை நான் செய்தேன். அதே சமயத்தில் அந்த மூவருக்கும் நான்தான் ஆதாரம் என்று மனத்தில் எண்ணி, நான் உடனேயே எங்கேயாவது வேலையைப் பிடித்துக்கொள்ள நிச்சயம் செய் தேன். அவர்களுக்கு நாம் உதவவேண்டும் என்று நான் முடிவு செய்தேன். ஆனால், எனது நண்பனின் பெற்றோர்களுக்கு என் கையால் உதவி கிடைக்கவேண்டும் என்று இருக்கவில்லை. எனக்கு வேலை கிடைக்கும் முன்பே நண்பன் காலமடைந்து முழுதாக ஓர் ஆண்டுகூட முடிந்திருக்கவில்லை. அதற்குள்ளேயே அந்த மூவரின் முடிவும் ஏற்பட்டுவிட்டது. ஒரே ஆண்டில் அந்தக் குடும்பம் முழுதும் அழிவடைந்தது. அந்த நண்பனின் பின்னால் அவன் பெயரைச் சொல்லி வருத்தம் அடைவதற்கு என்று நான் ஒருவன்தான் மிஞ்சியிருந்தேன். அவனது அந்த இறுதிப் பேச்சுக் கள் (காய்ச்சலுக்கு முந்தின நாள் பேசியவை) எனக்கு இடை விடாமல் நினைவுக்கு வந்துகொண்டிருந்தன. எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக நான் அதைப்பற்றி நினைத்துப் பார்க்கலா னேனோ, அவ்வளவுக்கவ்வளவு அவன் பேசியதன் உண்மையான பொருளும், வெகுதூரம் பார்வையைச் செலுத்தும் அவனது அறிவுக் கூர்மையும் எனக்கு விளங்கலாயிற்று.

'மேலும், அவன் எதைச் செய்வதாக இருந்தானோ, அதை நாம் செய்தால்தான், நமது நண்பனின் நினைவை நாம் நிலைநிறுத்திக் கொண்டதாக ஆகும் என்று எனக்குத் தோன்றியது. கர்ம—தர்ம—யோகத்தினால் அது மிகச் சிறந்த முறையில் நிறைவேறியது. எனது மனைவி இவ்வளவு உத்தமியாக, இவ்வளவு நன்றாகப் புரிந்துகொண்டு நடப்பவளாக, இவ்வளவு உழைப்பவளாக இருப்பாள் என்று நான் எண்ணியிருக்கவில்லை. ஆனால், நினைத் திராதது நடப்பதைப் பின்னால் அனுபவத்தில் கண்டேன். நான் எதையாவது சொல்லவேண்டும், அதை அவள் மிகவும்

மகிழ்ச்சியுடன் செய்வதில் ஈடுபட்டுவிடுவாள். என்றென்றுமே அதைச் செய்யமாட்டேன் என்று பிடிவாதம் ஒன்றும் கிடையாது. நான் விரும்பியபடி எனக்கு ஒரு பெண்ணும் பிறந்தாள். அவளும் தன் தாயை மிகவும் ஒத்திருந்தாள். சிறு வயதிலிருந்து இன்று வரை என்றுமே அவளிடம், நானோ, அவளோ ஒரு வார்த்தை கூடப் பேசினதாக எனக்கு நினைவில்லை. நாங்கள் என்ன சொன்னாலும், என்ன சொல்லிக் கொடுத்தாலும், அவற்றை யெல்லாம் மௌனமாகவும், மகிழ்வுடனும் கேட்டுக்கொண்டு, அதன்படியே அவள் செய்கிறாள். ''எனது நண்பனின் விருப்பத் தின்படியே நாம் செய்து காண்பிக்கவேண்டும்; இந்த விதமாகத்தான் அவனது நினைவை நமது உள்ளத்தில் என் றென்றும் நிலைநிறுத்தி வைக்கவேண்டும்'' என்று அசைக்க முடியாத உறுதியை நான் கொண்டிருந்தேன். அந்த நண் பனின் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுவதுதான் எனது கடமை. அவனது எல்லா அலுவல்களையும் நான் கவனித்துக் கொள்ளவேண்டும் என்று எனக்கு உறுதியாகத் தோன்றியது. அந்த உறுதியைப் பெருமளவு நான் காரியத்தில் கடைப் பிடித்தும் வந்திருக்கிறேன். ஆனால் இன்றுவரை செய்த தெல்லாம்கூட ஒன்றுமே இல்லை. மிகக் கடினமான காரியங் களை இனிமேல்தான் நான் செய்ய வேண்டியிருந்தது.

'நான் சுந்தரியின் உள்ளத்தை எல்லா விஷயங்களுக்கும் ஏற்றதாக ஆக்கி வைத்திருக்கிறேன். இன்றுவரை முன் ஏற் பாடுகள் செய்வதில் நாட்கள் சென்றன. இப்பொழுது காரியத்தில் இறங்கும் நாட்கள் வந்திருக்கின்றன. இப் பொழுதுதான் அவளுக்கு மிகவும் கவனமாக நடந்துகொள்ள வேண்டிய மிகுந்த அவசியம் இருக்கிறது. இன்றுவரை எங்க ளுடைய பாதுகாப்பு அவளுக்கு இருந்தது. இன்னமும் அது இல்லை என்பது இல்லை. ஆனால் இப்பொழுது அவள் தன்னைத் தானே பாதுகாத்துக்கொண்டு ஏதாவது செய்ய வேண்டிய நாட்கள் வந்துவிட்டன. இப்பொழுது நீ, அவள், உன் னுடைய அக்கா, நாங்கள் இருவர்—எல்லாருமாகச் சேர்ந்து ஏதாவது செயலைத் தொடங்கலாம். நான் பிறர் கையில் சிக்கியவன்; என் கையால் ஏதாவது நடந்தால் அது ஒரு பட்ச மானதாகத்தான் இருக்கமுடியும். ஆனால் உனது நிலை அப்படிப்பட்டதில்லை. நீ எல்லா வகையிலும் காரியத்தில் ஈடுபடு. பார்க்கப் போனால், அரசாங்கக் காரியமா அல்லது

மக்கள் சமூகத்தின் சேவையா என்ற கேள்வியே, எதையுமே செய்யும் எண்ணம் இல்லாதவர்களுக்குத்தான். காரியம் செய்யவேண்டும் என்ற கருத்து உடையவர்கள் தங்களால் ஆகக்கூடிய காரியத்தில் விரைவில் இறங்கிவிடவேண்டும். உடலாலும், உள்ளத்தாலும், வாக்கினுலும் ஒன்றிப் போய், அந்தக் காரியத்தைச் செய்யவேண்டும். இன்றுவரை நான் எனது முழு நேரத்தையும் இங்கிலாந்து, மற்றும் இதர ஐரோப்பிய நாடுகளின் சரித்திரத்தைப் படிப்பதில் செல வழித்தேன். அதிலிருந்து ஒரு முக்கியமான படிப்பினையை நான் கற்றுக்கொண்டிருக்கிறேன். அது இதுதான்: ''முதலில் அது, அதற்குப் பிறகு இது. முதலில் அதைச் சீர்திருத்துங்கள், பின்னர் இதைச் சரிப்படுத்துங்கள், என்று சொல்வதில் ஒரு பொருளும் இல்லை. தேகம் முழுவதும் பலவீனம் அடைந் திருக்கும்பொழுது முதலில் ஒரு கையைப் பலப்படுத்திக் கொள்ளுங்கள். பிறகு உடலின் மற்றப் பகுதிகளைப் பார்த்துக் கொள்ளலாம்'' என்று சொல்வதைப் போலத்தான் இது. சுந்தரியையும், அக்காவையும் இப்பொழுது நாம் ஏதேனும் ஒரு வழியில் செலுத்துவோம். அவர்கள் இருவரும் எந்தப் பள்ளிக்கூடத்திற்குப் போய்க்கொண்டிருந்தார்களோ, அங்கு இருப்பவர்களின் வழிவகைகள் எப்படி இருக்கின்றன என்று கண்டறிந்து அவர்கள் நல்ல கெட்டிக்காரர்களாக ஆகியிருக் கிறார்கள். அவர்கள் எந்த வகையில் தமது வேலையில் ஈடுபட வேண்டும் என்பதைப்பற்றிக்கூட நான் யோசித்து வைத்திருக் கிறேன். உனக்கு அந்த வழி பிடித்திருக்கிறதா இல்லையா என்பதை மட்டுந்தான் பார்க்கவேண்டும்.'

அண்ணா இவ்வாறு பேசிக்கொண்டிருந்த பொழுது நான் சிறிதும் அசையாமல் கேட்டுக்கொண்டிருந்தேன். அவருடைய அந்த முழுப் பேச்சும் எனக்கு மிகவும் விசித்திரமாகப் பட்டது. என்ன செய்வதாக அவர் உத்தேசித்திருக்கிறார் என்பது ஒன்றும் என் அறிவிற்கு எட்டவில்லை. ஆனால், ஏதோ ஆழ்ந்த யோசனைக்குப் பிறகுதான் அவர் அந்த வழியைத் தேடி எடுத்திருக்கவேண்டும் என்று மட்டும் என் உள்ளத்திற்கு நிச்சய மாகப் பட்டது. நான் உடனேயே அவரிடம் சொன்னேன்: 'நீங்கள் என்ன எல்லாம் முடிவு செய்திருக்கிறீர்கள், சொல் லுங்கள்? நீங்கள் யோசித்திருப்பது எதுவாயினும் அது மிகச் சிறந்ததாகத்தான் இருக்கும் என்பதைப்பற்றி எனக்குச் சிறிதும்

சந்தேகமில்லை. என்னுடைய உள்ளத்திலும் அந்த எண்ணங்கள் தோன்றிக்கொண்டிருக்கின்றனவா என்பதை அப்புறம் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.'

சிறிது நேரம் மௌனமாக இருந்த அண்ணு, பின்னர் திடீரென்று என்னிடம் சொன்னூர்: 'அப்படியென்ருல் உனது எண்ணங்களையே முதலில் சொல். பிறகு நான் உனக்கு எனது எண்ணத்தைச் சொல்வேன்.'

அவர் முதலில் தனது எண்ணத்தைச் சொல்லவேண்டும் என்று என் மனம் விரும்பியது. ஆனூல், அப்படி அவரை வற்புறுத்தும் தைரியம் எனக்கு இருக்கவில்லை. கடைசியில் நான் அவரிடம் சொல்லலானேன்: 'எனது யோசனை எப்படிப் பட்டது என்று சொல்ல? அதில் எண்ணம் குறைவுதான். எனக்கு ஒரு முறை தோன்றியிருந்தது இதுதான்: நான், நீங்கள், மற்றும் எனக்குச் சமமான ஓரிரு சிநேகிதர்களுமாகச் சேர்ந்து, அக்கா, சுந்தரி, இவர்களைப் போன்ற பெண்களின் ஒரு சமூகத்தை நிலைநாட்டி, அவர்கள் இலவசக் கல்வியை அளிக்கத் துவங்கும்படி செய்யவேண்டும். ஆண்களாகிய நாம் வேறு ஏதாவது வயிற்றுப்பாட்டிற்காகத் தொழில் செய்து, இரண்டு மூன்று பேருடைய வயிற்றுப்பாட்டுக்கு வேண்டிய அளவு பணம் சேர்க்கவேண்டும். அக்காவும், சுந்தரியும் யாரேனும் புகலிடமற்ற விதவை போன்றவர்களுக்குக் கல்வி யளித்துத் தயார் செய்து, வீட்டிற்கு வீடு சென்று பெண்களுக்குத் தையல்வேலை, எழுத்து, படிப்பு முதலியவற்றைக் கற்றுக் கொடுக்க ஆரம்பிக்கவேண்டும். ஆண்களாகிய நாம் அரசாங்கச் சீர்திருத்தத்திற்காக எழுதியும், சொற்பொழிவாற்றியும் நம்மால் முடிந்தவரை உழைக்கவேண்டும். ஒருவருக்கு மற்றவருடைய உதவி தேவை என்பது உண்மை. ஆனூல், ஒவ்வொரு வேலையையும் பங்கிட்டுக் கொண்டதுபோல் செய்தாலொழிய என்ன நடக்கப்போகிறது?'

இதை நான் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது அடிக்கடி அண்ணுவின் முகத்தின் பக்கம் பார்த்துக்கொண்டிருந்தேன். நான் சொல்வது அவருக்குப் பிடித்ததா, இல்லையா என்றுதெரிந்து கொள்ளவே நான் இவ்வாறு செய்துகொண்டிருந்தேன். இப்பொழுது நான் பேசியதெல்லாம் முன்பே யோசித்து வைக்கப் பட்டதாக இருக்கவில்லைதான். சில சமயங்களில்தான் இப்படிப் பட்ட அரைகுறையான எண்ணங்கள் என் உள்ளத்தில்

தோன்றும். இன்று அண்ணுவின் பேச்சு மொத்தத்தில் அவ்வாறே தோன்றியபொழுது, அதிலும் சிறப்பாக எனது எண்ணத்தைப் பற்றி அவர் கேட்டபொழுது, உண்மையாகவே என் மனத்தில் ஒரு முடிவும் இல்லை, ஒழுங்காக ஓர் எண்ணமும் இல்லை என்பதை அவர் கண்களுக்கு முன்ஞல் எடுத்துக் காட்டுவதில் நான் வெட்க மடைந்தேன். இருந்தும் ஒரேயடியாக உணர்ச்சி வசப்பட்டது போல் ஆகி, நான் அரைகுறையான, பக்குவமடையாத எண்ணங்களுக்கே ஓரளவு அழகான உருவம் கொடுத்து அவர் முன்ஞல் அதை எடுத்து வைக்கலானேன். நமது பக்குவ மடையாத எண்ணங்கள் இப்படிப் பக்குவமடைந்த முறையில் அண்ணுவின் முன்ஞல் வைப்பதற்கேற்றபடி இருக்கும், அல்லது அவற்றை அம்முறையில் நம்மால் வைக்க முடியும், அல்லது வைக் கும்படி நம் நிலை ஏற்படும் என்று எனக்கு என்றுமே தோன்றியிருக்க வில்லை. மேலும் இன்று எந்த விதமான முன்னெச்சரிக்கையும் இன்றி என்னிடம் எதிர்பாராமல் கேள்வி கேட்கப்பட்டதும் எனது குரலும் எனது எண்ணங்களும் இவ்வாறு ஒத்துழைத் ததைப் பார்த்து எனக்கே என் மீது அளவற்ற ஆச்சரியம் ஏற் பட்டது. அவருக்கு முன்ஞல் எனது வருங்கால மக்கள் சமூகத்தின் அமைப்பைப்பற்றி நான் வரைந்த அந்த அற்புதமான கற்பனைச் சித்திரத்தைப்பற்றி என்ன சொல்ல? மேலும், பேசப் பேச நமது கடமைகளையெல்லாம் செய்து முடித்த பிறகு, முடிந்துபோன காரியங்களைப்பற்றி விவரித்துக்கொண்டிருப்பது போல எனக்கே தோன்றலாயிற்று. என்னுடைய கற்பனையின் ஓட்டத்திலேயே நான் இவ்வாறு இழுத்துச் செல்லப்பட்டுவிடு வேன் என்று நான் என்றுமே எண்ணியிருக்கவில்லை. ஆனுல், அந்த நாள் எல்லா வகையிலும் விசித்திரங்களைக் கொண்டதாக இருந்தது.

நான் என்னவெல்லாம் சொன்னேஞே, அவற்றுள் எவை அண்ணுவிற்குப் பிடித்தன, எவை பிடிக்கவில்லை என்பதைப்பற்றி ஒன்றும் சொல்லமுடியாது. ஆனுல் எனது மாபெரும் உற்சாகத் தைக் கண்டு மட்டும் அவர் மகிழ்ந்திருக்கவேண்டும். நான் பேசப் பேச அவர் அடிக்கடி மகிழ்ச்சியும், ஆச்சரியமும் கலந்த பார்வையுடன் என்னைப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர் அப்படிப் பார்க்கிருரா இல்லையா என்பதையும் நான் அதே அளவு ஆர்வத்துடன் இடையிடையே பார்த்துக்கொண்டிருந் தேன். நான் எல்லாம் பேசி முடித்ததும் சிறிது நிறுத்தினேன்,

அப்பொழுது அவர் என்னிடம் சொன்னார்: 'உன்னுடைய யோசனைகள் முன்னும் பின்னும் எவ்வளவோ மாறும். மேலும் மாற்றவேண்டியும் வரும். ஆனால் உனது ஆர்வமும், உனது உணர்ச்சி வேகமும், உனது உற்சாகமும் மட்டும் மாறாமல் இருந்தால் சரிதான். நீ செய்யவேண்டும் என்று இருக்கிற வேலைகளை வெற்றிகரமாக நிறைவேற்ற யோசனைகளைவிட ஆர்வமும், உற்சாகமும்தான் முக்கியமாக வேண்டும். வாய்ப்பு அமைய அமைய, யோசனைகள் உருவெடுக்கும். வாய்ப்புக் கிடைக்கக் கிடைக்க உற்சாகம் மட்டும் அவ்வளவு இருப்பதில்லை, அது குறைந்துகொண்டே போகிறது. இந்த விஷயத்தை மனத்தில் கொண்டு, செய்யவேண்டியதைச் செய்ய வேண்டும். வியாபாரத்தில் மார்க்கெட்டு நிலவரமும் முதலும் எவ்வாறு முக்கியமானவையோ, அதேபோல்தான் முக்கியமான காரியங்களில் ஆர்வமும், உற்சாகமும் ஆகும்.'

இவ்வளவு சொல்லிய பிறகு, அவர் தனது மனத்தில் என்ன என்ன யோசனைகள், என்ன என்ன விருப்பங்கள் இருந்தன என்பதைப் பற்றி விவரமாகச் சொல்லலானார். அவர் சொன்னார்: 'வீட்டுச் சீர்திருத்தத்திலிருந்து தொடங்கித்தான் மற்ற எல்லாச் சீர்திருத்தங்களும். என்னிடம் யாராவது இன்ன நாடு சீர்திருத்தம் அடைந்தது என்று சொல்வீர்களா, இல்லை சீர்திருத்தம் அடையாதது என்று சொல்வீர்களா என்று கேட்டால், நான் அவனிடம் சொல்வேன், ''அந்த நாட்டிலுள்ள குடும்ப ஏற்பாட்டின் நிலைபற்றிய செய்திகளைக் கொடுங்கள். குழந்தைகளின்மீது தாயின் ஆதிக்கம் எவ்வளவு இருக்கிறது என்று சொல்லுங்கள். அப்பொழுது நான் உங்களுடைய கேள்விக்குப் பதில் அளிப்பேன்.'' எந்தக் கற்பனையும், எந்த ஒரு விஷயமும் நாட்டிலுள்ள உயர்ந்த வகுப்பினரிடையே நன்றாகப் பரவவேண்டும் என்று தோன்றுகிறதோ அந்தக் கற்பனைகளும், அந்த விஷயங்களும் நாட்டிலுள்ள பெண்களின் மண்டையில் முதலில் நுழையவேண்டும். அவர்களுடைய பாலிலிருந்து அவை அவர்களுடைய குழந்தைகளின் உள்ளத்தில் இறங்குகின்றன என்பதை என்றுமே மறக்கக்கூடாது. தந்தைக்கும் குழந்தைகளுக்குமிடையே யுள்ள தொடர்பு மிகவும் குறைவு. தாய், இறுதியில் தாய்தான். எப்படிப் பிறவியைக் கொடுப்பவள் ஆவாளோ, அதேபோல் நல்லெண்ணங்களையும், நற்காரியங்களையும் கொடுப்பவளும் அவள்தான். இந்த

எண்ணத்தைக் கேட்டுச் சில பேருக்குச் சிரிப்பு வருகிறது. ஆனால் அதில் ஆழ்ந்த தத்துவம் இருக்கிறது. தாய் வழியில் நடக்கும் காரியங்கள் மிகவும் மெதுவாகவும், சிறிதளவும் யாருக்கும் தெரியாமலும் நடக்கின்றன. அவற்றிற்காகப் பெரிய பெரிய முயற்சிகளை வெளிப்படையாகச் செய்யவேண்டிய தேவையில்லை. அதனால்தான் அவற்றின் மகத்துவம் யாருக்கும் தெரிவதில்லை. ஆனால், எல்லாக் காரியங்களின், எல்லா எண்ணங்களின், பெரும் பாலான தொழில்களின் பிறப்பிடம் அதுதான். இந்த உண்மையை உள்ளத்தில்கொண்டு, அந்த வழியை மிகுந்த சிறப்புடையதாகச் செய்வதற்காக எவ்வளவு முயற்சிகள் நடக்குமோ அவ்வளவு நல்லது. இந்தக் கருத்துக்கள் எனது உள்ளத்தில் நன்றாகப் படிந்திருக்கின்றன. அவற்றின் தத்துவங் களைப்பற்றி நான் நிச்சயமாக அறிவேன். நான் மிகவும் எளியவன். எனக்கு ஒருவித மகத்துவமும் கிடையாது. ஆனால் என் கையால் எது முடியுமோ அதைச் செய்யவேண்டும் என்று வெகுநாட்க ளாக நான் நினைத்திருக்கிறேன். அவற்றை வெற்றி பெறச் செய்வதற்காக இல்லை, வெற்றியடையும் வழியில் அவற்றைச் செலுத்துவதற்காக, இன்றுவரை நான் மிகவும் மௌனமாக முயற்சி செய்தேன். நான் சுந்தரியைக் கல்யாணம் ஆகாதவளாக வைத்தேன். எல்லா உலக வழக்கங்களையும் ஒரு பக்கமாகத் தள்ளி வைத்து, வழியில் வந்த தடைகளைப் பொருட்படுத்தாமல், ஏற்பட்ட பழி, துன்பங்கள் எல்லாவற்றையும் மௌனமாகப் பொறுத்துக்கொண்டு இன்றுவரையிலான காரியங்களை ஏன் செய்து வந்தேன் என்பதை என்னால் எவ்வளவு நன்றாக முடியுமோ அவ்வளவு சிறந்த முறையில் அவள் உள்ளத்தின்மீது படிய வைத்திருக்கிறேன். அவள் மனத்தில் அது படிந்திருக்கிறது என்றும் என் மனத்திற்குத் தோன்ற ஆரம்பித்திருக்கிறது.

'பெண் என்றால் மணம் செய்துகொள்ளத்தான் வேண்டும் என்று மக்களுக்கு இடையில் இருக்கும் விசித்திரமான நம்பிக்கையை முற்றும் அகற்றுவதற்காகவும், கல்யாணமின்றி இருந்து பெண்களால் வேறு ஏதாவது சாதிக்க முடியுமா, இல்லையா என்பதைச் செய்து காண்பிப்பதற்காகவும் நான் அவளிடம் பல முறை பேசியிருக்கிறேன். மேலும் மிகவும் ஆனந்தப்படக்கூடிய செய்தி என்னவென்றால், எனது நோக்கம், எனது எண்ணங்கள் அவளுக்கு நன்றாகப் புரிந்திருப்பதோடு, அவளுக்கு அவை முற்றும் பிடித்தும் இருக்கின்றன. எந்த நோக்கத்தோடு

அவளை நான் விரும்பிய இந்த வழியில் வளர்த்தேனே, அந்த நோக்கம் ஈடேறச் செய்வதில் தனது காலத்தைக் கழிக்க வேண்டும் என்று அவள் உறுதிகொண்டிருக்கிருள். மேலும் அவளைப்போலவே செய்யவேண்டும் என்று உனது சகோதரியும் உறுதிகொண்டிருக்கிருள். உன்னிடமே இதைப்பற்றிப் பேசி, உனது எண்ணம் என்ன என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்பது எனது எண்ணமாக இருந்தது. எனவே இன்று நான் இங்கு வந்து உன்னிடம் பேச்சை எடுத்தேன். மேலும் நீ உனது எண்ணத்தைப்பற்றிச் சொன்னதையெல்லாம் கேட்டு எனக்கு மிகுந்த ஆறுதல் ஏற்பட்டது. சிறந்ததாக, மிகச் சிறந்ததாகப் பட்டது. இப்படிப்பட்ட எண்ணங்களைக் கொண்ட நான்கு பேர் கிளம்பிஞல்தான் ஏதாவது நடக்கும். உன்னுடன் துணை சேர, உனது எண்ணங்களையே கொண்ட, உன்னைப் போலவே உற்சாகம் கொண்ட இன்னும் சில பேர் உனக்குக் கிடைக்கவில்லையே என்பதுதான் எனக்கு ஓரளவுக்குக் குறையாகப் படுகிறது.'

'கிடைக்கவில்லை என்பதுமட்டும் உண்மைதான். ஆனல் அண்ணு, உங்களைப் போன்றவர்களின் அறிவுரையை அடையப் பெறும் பேறு எல்லாருக்குமே எங்கே கிடைக்கிறது?'

'கிடைக்கும், கிடைக்கும். தம்பி, நாம் முன்னுல் சென்று ஏதாவது செய்தாலொழிய பின்தங்கியிருக்கும் மக்கள் என்றுமே முன்னுல் வரமாட்டார்கள். நீ முன்னுல் செல்! உன் மனத் திண்மையினுலும், உறுதியினுலும் கையில் எடுத்துக்கொண்ட காரியங்களின் சிறப்பைப்பற்றி மக்கள் நம்பும்படி செய். அப்படிச் செய்தாயேயானுல் தாஞகவே யாராவது முன் வருவார்கள்; உன்னை வந்து அடைவார்கள். இருபத்தைந்து பேர் இருந்தால் நான் இதைச் செய்வேன், ஐம்பது பேர் இருந்தால் நான் அதைச் செய்வேன் என்று சொல்வதில் ஒரு பயனும் இல்லை. நாம் முன்னுல் சென்றுல், பின்னுல் மக்கள் வருகிருர்கள். வந்தாலும் நல்லது; வரவில்லையென்றுலும் நல்லதுதான்! நற்காரியத்தில் செலவழிக்கப்பட்ட உழைப்பு நற்பலனைத் தரும். இதில் யாருக்குமே எவ்விதச் சந்தேகமும் ஏற்படவேண்டாம்.'

இவ்வளவு பேசிப் பழங்காலச் சரித்திரத்திலிருந்து ஒரு சில உதாரணங்களை அவர் எனக்கு எடுத்துச் சொன்னுர். இது சம்பந்தமாக வெகு நேரம் பேசிக்கொண்டே நடந்தோம். அன்று மாலையிலும், இரவிலும் வீட்டார் எல்லாரும் ஒன்றுகூடி உட்கார்ந்து மேற்கொண்டு செய்யவேண்டிய ஏற்பாடுகளைப்

பற்றிப் பலவாருகப் பேசினேம். இப்பொழுது எங்களுக்குள் வேறுபாடுடைய எண்ணம் என்பதே இருக்கவில்லை. நாங்கள் ஒருவரிடம் ஒருவர் உள்ளம் திறந்து பேசினேம். காகூ (பெரியம்மா) எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு மட்டும் இருந்தார். அந்த வருங்கால ஏற்பாடு, அல்லது எங்களது அந்த வருங்கால யோசனைகள்—இவை யாவும் நன்ருக அவர் அறிவிற்கு எட்டினவோ, இல்லையோ? ஆனல் அவர் என்றுமே 'இது எதற்கு? அது எதற்கு? இவற்றிற்காக மக்கள் இவ்வாறு சொல்வார்கள், அவற்றிற்காக அவ்வாறு சொல்வார்கள். இதைச் செய்யவேண்டாம், அதைச் செய்யவேண்டாம்' என்று சொல்லி எந்தப் பேச்சையும் தடுக்கும் வழக்கமுடையவர் அல்ல.

அன்று இரவு வருங்காலக் கடமையைப்பற்றிய எங்கள் யோசனைகள் உருப்பெற்றன. சிலநாட்களுக்குள்ளேயே அவற்றைச் செயலில் உருவாக்கும் முடிவும் செய்யப்பட்டது. நாங்கள் துவங்கப் போகும் காரியத்தில் ஈடுபடுவதுதான் எங்கள் வாழ்வின் நோக்கம் ஆகும் என்று எங்களுள் ஒவ்வொருவருக்கும் தோன்றியது. எங்கள் மூவருக்குள் அக்காவின் உற்சாகமும், உறுதியும் எவ்வளவு தனிப்பட்டவையாக இருந்தன என்பதைப்பற்றி ஒன்றும் கேட்காதீர்கள். அவள் ஒரேயடியாகச் சொன்ஞள்: 'என்னைப் போன்று துர்ப்பாக்கியசாலிகளாக யாரெல்லாம் இருக்கிருர்களோ, அவர்களுக்கு எப்படியாவது ஒரு வழி ஏற்பட வேண்டும். அவர்கள் உடலில் அறிவு முதலான ஏதாவது திறமை இருந்தால், தனது துன்ப நிலையில் ஈயை ஓட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதைவிட, அல்லது தனது தலைவிதியை நொந்துகொண்டும், தன்னையே வெறுத்துக்கொண்டும் தற்கொலை செய்துகொள்வதைவிடப் பரோபகாரம் செய்யும் நெறியில் செல்வதற்கு வேண்டிய சாதனங்கள் அவர்களுக்குக் கிடைக்கவேண்டும். இவ்வளவிற்காக என் கையால் முடிந்ததை நான் செய்யப் போகிறேன்.'

# 47. முதலில் நடந்த சில வேடிக்கைகள்

என்னுடைய கல்லூரியின் இறுதிப் பரீட்சை முடிந்தவுடனேயே, (அதாவது முன் அத்தியாயத்தில் சொன்ன காலத்திற்குச் சுமார் இரண்டு மாதங்களுக்குள்) நான் பம்பாய்க்குச் சென்று தங்க நேர்ந்தது. எனது படிப்பைப் பி.ஏ. பரீட்சையுடன் முடித்துக் கொண்டுவிடவேண்டும் என்று நான் மனத்தில் நினைத்திருந்தேன். என்னுடைய எண்ணங்களைக் கரு நிலையிலேயே வெகு காலம் வைத்திருப்பதில் எனக்கு வெறுப்பு ஏற்பட்டிருந்தது. அவற்றிற்கு எப்பொழுது உண்மையான வடிவம் கொடுக்கப் போகிறோம் என்று ஆகியிருந்தது எனக்கு. ஆனால், எனக்கு ஒரு 'ஃபெலோஷிப்' கிடைத்தது. அத்துடன் எனது நலத்தை விரும்பும் ஒரு செல்வந்தரும் எனக்கு வேண்டிய அதிகப்படியான பணத்தை எனக்குக் கொடுப்பதாகச் சொல்லி, என்னை வற்புறுத்தியதன் காரணமாக, எல்.எல்.பி. (L.L.B.) பரீட்சை வரை படிக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. என்னைத் தவிர வேறு யாருமே, பி.ஏ. பரீட்சையுடன் நான் படிப்பை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்று நினைக்கவில்லை. சாட்சாத் அண்ணா, காகூ, அக்கா, சுந்தரி இவர்களுடைய உபதேசமும் எனது மனத்துக்கு விரோதமாகத்தான் இருந்தது. அதனால் எனக்கு என்னுடைய சொந்த விருப்பப்படி செய்ய முடியாமற் போயிற்று. இறுதியில் இவர்கள் எல்லோரும் விரும்பியபடியே நான் பம்பாய்க்குச் சென்று தங்கினேன். வேறு என்ன செய்வேன்? இவர்கள் எல்லோரும் என் நன்மையை மனத்தில் கொள்ளாதவர்கள் அல்ல. நிற்க.

நான் புனாவிலிருந்து கிளம்புவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு ஒரு வேடிக்கை நடந்தது. அதைப்பற்றி இப்பொழுது சொல்கிறேன். எங்கள் அக்கா ஓரளவு தீரம் கொண்டவளாக இருந்தாள். அப்பொழுது ஒரு நாள் வெறுமனே நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்பொழுது, பேச்சுவாக்கில் நான் சொன்னேன்: 'இவ்வளவு சிறிய காரியத்தை ஆரம்பிக்க உங்களுக்கு இவ்வளவு யோசனை வேண்டியிருக்கிறது. இன்னும் மேலே போகப் போகப்

பெரிய பெரிய காரியங்களைச் செய்யப் போகிறீர்கள். அவற்றை எப்படித்தான் செய்வீர்கள்? நான் உங்களில் ஒருவனாக இருந் திருந்தால் எப்பொழுதோ ஓரிரு வீடுகளுக்கு நானாகவே போயிருந் திருப்பேன். மேலும் சிறிது இனிக்க இனிக்கப் பேசி வீட்டி லிருக்கும் அம்மாளின் மனத்தை என்பால் திருப்பி, அவள் மீண்டும் நான் வரவேண்டும் என்று வற்புறுத்தும் அளவிற்கு என்னிடம் மனத்தைக் கவர்ந்திருப்பேன்! இதில் என்ன முடியாத பெரிய காரியம்? அதுவும் அக்கா தன்னை மிகுந்த தைரியசாலி என்று சொல்லிக்கொள்ளுகிறாள்! இதுதானா உன் தைரியம்?'

இந்த வார்த்தைகளை வெறும் கேலிக்காகத்தான் நான் சொன்னேன். குறிப்பிட்ட காரியம் எவ்வளவு கடினமானது என்பதை நான் அறிந்திருக்கவில்லை என்பதல்ல. ஆனால் அக்காவை வேடிக்கையாகத் தூண்டிவிடுவதற்கு என்றே அவ்வாறு சொன்னேன். ஆனால் அதே சொற்கள் அக்காவின் உள்ளத்தைப் புண்படுத்தினாற்போல் தோன்றியது. மறுநாள் எங்களுக்குத் தெரியாமல் அவள் எங்கேயோ போய்விட்டு வந்தாள். ஆனால் அவள் மாலையில் எங்களிடம் அன்றைத் தினம் நடந்த விஷயத்தைச் சொன்னபொழுது, சிரித்துச் சிரித்து எங்களுக்குப் போதுமாயிற்று. முற்றும் அநுபவம் அற்றவள் அவள். அன்று, தான் ஏதாவது செய்யவேண்டும் என்று முடிவு செய்துகொண்டிருக்கிறாள். மதியம் சாப்பாட்டுக் கடை முடிந்த பிறகு, சுந்தரிக்குக்கூடத் தெரிவிக்காமல் தான் மெள்ள வெளியில் நழுவியிருக்கிறாள். அவள் தண்ணீர் கொண்டு வருவதற்குக் குளத்திற்குச் செல்வது உண்டு. அப்பொழுது துணி முதலியவற் றைத் துவைப்பதற்கு என்று தினந்தோறும் அங்கு வரும் ஓர் இளம் பெண்ணின் அறிமுகம் அவளுக்கு ஏற்பட்டிருந்தது. பேச்சு வாக்கில் ஒரு நாள் அந்தப் பெண் கம்பளி நூலில் (wool) கழுத்துப் பட்டை போடுவதற்குத் தான் கற்றுக்கொள்ள விரும்புவதாகச் சொன்னாள். அதற்கு இவள் தான் கற்றுக்கொடுப்பதாகச் சொல்லியிருந்தாள். இரண்டு மூன்று மாதங்களுக்கு முற்பட்ட இந்தப் பேச்சை நினைவில் வைத்துக்கொண்டு இந்த அம்மாள் அன்று அந்தப் பெண்ணின் வீட்டிற்குப் போயிருக்கிறாள். அவள் வீட்டினரைப்பற்றி ஒன்றும் அறிந்ததில்லை. அவர்களை என்றும் பார்த்ததுமில்லை, ஒன்றுமில்லை. இவள் அவள் வீட்டு வாசலில் போய் நின்றதுமே அந்தப் பெண் உள்ளிருந்தவாறே இவளைப் பார்த்துவிட்டு, இவளிடம் ஓடி வந்தாளாம். இப்படி நாம்

வாசலை அடைவதற்குள்ளேயே அவள் ஓடி வந்ததும், அநேகமாக நாம் வந்ததை அறிந்து ஆனந்தம் அடைந்து உற்சாகத்துடன் வந்திருக்கவேண்டும் என்று அக்கா நினைத்தாள். 'இன்று நாம் முதல்முதலாக வேலையைத் தொடங்க வந்திருக்கிறோம். நமக்கு எவ்வளவு சிறந்த வெற்றி கிடைக்கப்போகிறது? ஆகவே மாலையில் வீட்டில் எல்லோருக்கும் மிகுந்த ஆச்சரியம் ஏற்படும். மேலும் தம்பிக்கு முன்னால் நமது பெருமையைச் சொல்லிக் கொள்ள முடியும்' என்றும் அவள் மனத்தில் தோன்றாமல் இருந்திருக்காது. அந்தப் பெண் மகிழ்ந்து ஓடி வந்ததைப் பார்த்ததும் அக்காவிற்குப் பேரானந்தம் ஏற்பட்டது என்பது உண்மை. ஆனால் இவ்வளவு உற்சாகத்தோடு ஏன் ஓடிவந்தாள் என்பதைத் தெரிந்துகொண்டதும் அக்காவின் எல்லா ஆனந்தமும் உடனேயே தணிந்து போயிற்று. அந்தப் பெண் வந்ததும் வாசலி லேயே கேட்டாள், 'ஏன் வந்தீர்கள்?' என்று. பழைய பேச்சை நினைவுபடுத்தி அக்கா அவளிடம் சொன்னாள்: 'நீங்கள் சொல்லி யிருந்ததை நினைவில் வைத்துக்கொண்டு உங்களுக்காக வேண்டு மென்றே நூலையும் ஊசிகளையும் எடுத்துக்கொண்டு வந்திருக் கிறேன். வாருங்கள், அரை நாழி உட்கார்ந்தீர்கள் என்றால், நான் உங்களுக்கு அந்த முறையை உடனேயே சொல்லித் தருகிறேன். இந்த நெய்யும் வேலையில் ஒரு பொருளும் இல்லை. இதைவிட எத்தனை எத்தனையோ சிறந்த வேலைகள் எனக்குத் தெரியும். அவற்றை நான் உங்களுக்குக் கற்றுக் கொடுப்பேன். எனக்கு இப்பொழுது நிறைய ஓய்வு நேரம் இருக்கிறது.'

இந்தச் சொற்களைக் கேட்டு அந்தப் பெண் மிகவும் மகிழ்வாள் என்று அக்கா எண்ணியிருந்தாள். ஆனால் அந்தப் பெண்ணின் முகத்தில் அவ்வாறான அறிகுறி ஒன்றும் தென்படவில்லை. மாறாக, அவள் வருத்தம் அடைந்தவளாகக் காணப்பட்டாள். அதுமட்டும் அல்ல. இந்த அம்மாளின் பேச்சு எப்பொழுது முடியப் போகிறது, தான் சொல்லவேண்டியிருப்பதை எப்பொழு தடா சொல்லப்போகிறோம் என்று அவளுக்கு ஆகியிருந்தது. கடைசியில் அக்காவின் பேச்சு முடிந்ததுமே அவள் சொல்ல லானாள்: 'அதெல்லாம் சரிதான். ஆனால் நீங்கள் இப்பொழுது இங்கிருந்து போய்விடுங்கள். இங்கே ஒரு கணப்பொழுதும் நிற்காதீர்கள். நல்ல வேளையாக மாமியார் உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருக்கும் சமயத்திற்குச் சரியாக வந்தீர்கள். உங்களுடன் நான் என்றோ பேசிக்கொண்டிருந்ததை அவர் பார்த்து

விட்டதாகத் தெரிகிறது. அதனுல்தான் என்னே நன்ருகத் திட்டினுர்கள். இன்று நீங்கள் வீட்டிற்கு வந்திருப்பதைப் பார்த்துவிட்டால், பின்னர் என்னே என்ன செய்வார் என்று சொல்லமுடியாது. எனக்கு எதையும் கற்றுக்கொடுக்கவும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். என்மீது தயவு செய்யுங்கள். இங்கிருந்து சீக்கிரம் போய்விடுங்கள். பிறகு மீண்டும் எப்பொழுதுமே வராதீர்கள். எனக்கு ஒன்றும் கற்றுக் கொள்ளவேண்டாம். போங்கள், போய்விடுங்கள். அவர் வந்தேவிட்டார். உங்களேப் பார்த்துவிட்டால், பிறகு எனக்கு நல்ல பாடம் கற்பிக்கப்படும்.' இவ்வளவு சொல்லி அஞ்சிக் கலவரம் அடைந்து அவள் அங்கிருந்து சென்றுவிட்டாள். தன்னேப் பார்த்தவுடன் விரைந்து வந்த அந்தப் பெண்ணின் உற்சாகம் தன்னே 'வா' என்று சொல்வதற்காக அல்ல, 'போய் விடுங்கள்' என்பதற்காகத்தான் என்பது அக்காவிற்குத் தெரிந்த வுடன், அவளும் வந்த சுருக்கில் வீடு திரும்பினுள். இவ்வாருன நிகழ்ச்சிகள் ஏற்படும் என்பது எங்களுக்கு நன்ருகத் தெரிந் திருந்தது. ஆகவே எங்களுக்கு அந்த நிகழ்ச்சி ஒரு வேடிக்கை யாகவே தோன்றியது. அதிலும் அக்கா இந்த நிகழ்ச்சி முழுவதையும் வர்ணித்துச் சொல்லும்பொழுது மிகவும் வேடிக்கை யாகச் சொன்னுள். அதைச் சொல்லும்பொழுது அவளுக்கே அடக்கமுடியாத சிரிப்பு வந்துகொண்டிருந்தது. நான் புனுவை விட்டுப் போன பின்னரும் இதேவிதமான, ஆனுல் சிறிது வேறுபட்ட ஒரு நிகழ்ச்சி நடந்தது. அதைப்பற்றி அவள் அதே போன்று வர்ணித்து எனக்குக் கடிதத்தின்மூலம் தெரிவித்திருந் தாள்:

'நீங்கள் இங்கிருந்தபொழுது நடந்த அந்த நிகழ்ச்சியைவிட இன்னும் வேடிக்கையான ஒரு நிகழ்ச்சி இரண்டு நாட்களுக்கு முன்பு நடந்தது. நேரில் சொல்லமுடியாமல் இருக்கிறது என்பதைத் தவிர்க்க ஒரு வழியும் இல்லே. எனவே கடிதத்தின் மூலம் தெரிவித்துக்கொள்கிறேன். நேரில் சொன்னுல் அது எவ்வளவு வேடிக்கையாக இருக்குமோ, அவ்வளவு எழுதித் தெரிவிப்பதில் இல்லேதான்.

'நீங்கள் போன பிற்பாடு அண்ணுவிடம் புதிய பையன் ஒருவன் வரத் தொடங்கியிருக்கிருன். அவன் இப்பொழுதுதான் முதல் பரீட்சைதேறிக் கல்லூரிக்குப்போக ஆரம்பித்திருக்கிருன். அண்ணு விடம் ஓரிரு முறை வந்து, தனது மனேவிக்குக் கல்வி அளிக்கத்

தான் விரும்புவதாகவும், தாயைத் தவிர தனக்கு வேறு யாரும் இல்லே, தனது தாயும் எதையும் ''மாட்டேன்'' என்று சொல்லாமல் விரைவில் கற்றுக்கொள்ளக்கூடியவள், அவள் எளிதில் புரிந்துகொள்ளும் தன்மை உடையவள், அப்படி இப்படி என்று பல விஷயங்களேச் சொன்ஞன். ''எனது மனேவியுங்கூடக் கற்றுக் கொள்வதற்குத் தயாராக இருக்கிருள். அவளுக்கு நான் சொல்லியிருக்கிறேன். கற்றுக்கொள்ளவேண்டும் என்று பேரார்வம் கொண்டவள். ஆனல் யாரேனும் சென்று அவளிடம் நல்லபடியாகச் சொல்லி அவளேக் கவரவேண்டும். அம்மாவின் உள்ளத்தைத் திருப்பவேண்டும்'' என்று பரிவுடனும் ஆர்வத்துடனும் அவன் நிறையப் பேசிஞன். ஆகவே இந்த வேலேயை நாம் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற எண்ணம் தானுகவே என் மனத்தில் எழுந்தது. எனவே அவனுடைய தாயிடம் செல்ல நாங்கள் முடிவு செய்தோம். இருவரும் சேர்ந்து ஒரே சமயத்தில் போகாமல் யாராவது ஒருவர் ஒரு முறை சென்று திரைக்குப்பின் என்னதான் இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்றும் முடிவு செய்தோம். யார் போவது என்ற விவாதம் நடக்க நடக்க, இறுதியில் அந்தப் பொறுப்பு என்மீதுதான் வந்தது. நானும் பெருமகிழ்ச்சியுடன் அதை ஏற்றுக்கொண்டேன். தக்க தருணத்தில் நான் அங்கே போனேன். முன்னதாகவே அந்தப் பையன், என் வருகையைப் பற்றித் தனது தாயிடம் தான் சொல்லி வைத்திருப்பதாகவும் எங்களிடம் சொல்லியிருந்தான்.

“இந்தத் தடவை நமக்கு ஒரு தடையும் ஏற்படப்போவதில்லே'' என்ற நம்பிக்கையுடன் நான் கிளம்பினேன். அந்தப் பையன் குடியிருக்கும் இடத்தை அடைந்து வாசலில் அடி வைத்ததுமே கீழ்க்கண்ட பேச்சு வார்த்தை என் காதில் விழுந்தது:

''வரட்டும் அவள், அவள்மீது வசைமாரி பொழிவேன் நான். பார்த்துக்கொண்டே இரு. என்றும் விடப்போவதில்லே. உனக்கு இந்தமாதிரி நாடகம் நடத்தவேண்டும் என்ருல், தாராளமாக உனது வீட்டுக்காரியையும் அழைத்துக்கொண்டு வெளியில் நடையைக் கட்டு. எனக்கு என்ன ஆகவேண்டுமோ அது ஆகட்டும்.''

''ஆனல் இதில் என்ன அம்மா தவறு? படிப்பு என்ருல் ஏதேனும் குற்றம் . . .''

''அதில் ஏதாவது இருக்கிறதோ இல்லேயோ? உனக்கு அவ்வாறு செய்யவேண்டுமாஞல் நானே வீட்டைவிட்டு வெளியில் போய் விடுகிறேன். பிறகு உனக்கு வேண்டிய குழப்பத்தை நீ செய்து கொள்.''

''சரி, வேண்டாம். இன்று நான் அவரை வரச்சொல்லியிருக் கிறேன். அவர் வரட்டும்; அப்பொழுது என்ன நடக்கிறது என்பதைப் பார். அவரை ஒன்றும் சொல்லாதே. உனக்குப் பிடிக்கவில்லே என்ருல் விட்டுவிடலாம். என்னுடைய அம்மா விற்குப் பிடிக்கவில்லே என்று அவரிடம் சொல்லிவிட்டால் போயிற்று! ஆனல் இன்று இப்பொழுது . . .''

''இன்றும் வேண்டாம், நாளேயும் வேண்டாம். இப்பொழுதே நீ போய் எங்கள் வீட்டிற்கு வரவேண்டாம் என்று சொல்லிவிடு. எதற்காகக் கூப்பிட்டாய்? இப்படிப்பட்ட வேண்டாத, பொல்லாத காரியங்களே நான் சற்றும் அநுமதிக்கப் போவ தில்லே. யார் வேண்டுமானுலும் வருவது, பெண்களுக்குச் சொல்லித் தருவது. வேறு வேலேயே இல்லே, பாழாய்ப் போனவர் களுக்கு. நீங்கள் கட்டிக்கொள்ளுங்கள் புடைவையை, அணிந்து கொள்ளுங்கள் கையில் வளேயல்களே. உங்கள் படிப்பு நாசமாய்ப் போகட்டும். வரட்டும் அவளே. . .? யார் வருகிருள் என்று பார்க் கிறேன். இந்தப் பாத்திரங்களேக் கழுவிய தண்ணீரையே அவள்மேல் ஊற்றுவேன், என் வீட்டு வாசலில் காலே வைத்தாளே யாஞல்! மேடமாக இருப்பாள், ஏதாவது ஒரு கிறிஸ்தவ மேடம்.''

''அட, இல்லேம்மா! இப்போது உனக்கு எவ்வளவுதான் சொல்வது?''

''வேண்டாம், சொல்லவே வேண்டாம். மேடம் இல்லா விட்டால் அவளேப்போல யாராவது ஒருத்தி இருப்பாள். இப்படிப்பட்ட வேலேயைச் செய்வதற்கு வேறு யாராவது நல்ல அம்மாள் வரப்போகிருளா என்ன? நல்லவளாக இருக்கிருள் என்பதற்காக என் வீட்டிற்கு ஒன்றும் வரவேண்டாம். நீ இன்னும் எத்தனேதான் சொன்னுலும் நான் கண்டவர்களே யெல்லாம் ஒன்றும் வீட்டிற்குள்ளே வரவிடமாட்டேன். அதற் குள்ளேயே அவள் வந்துவிட்டால் நன்ருகக் குளிப்பாட்டுகிறேன் இந்தப் பாத்திரம் தேய்த்துக் கழுவிய தண்ணீரிஞல்!''

'மேற்கூறிய இந்தப் பேச்சு வார்த்தை கதவருகில் சென்றதுமே காதில் விழுந்தது. அதிலும் இப்படி ஒரு குளியல் பயம்! பிறகு

வேறு என்ன வேண்டும்? அந்தப் பேச்சுவார்த்தையின் முதல் பேச்சைக் கேட்டவுடனேயே நான் எனது கால்களை இருந்த இடத்திலேயே பதியவைத்து நின்றேன். இறுதிவரை அந்தப் பேச்சை அங்கு நின்றவண்ணமே கேட்டேன். கடைசிப் பேச்சு காதில் விழுந்ததும், நம்மைக் குளிப்பாட்ட அந்த அம்மாள் எந்தத் தண்ணீரைத் தயார் செய்துகொண்டிருந்தாளோ, அநேகமாக அதைக் கொட்டுவதற்கு வெளியில் வந்துகொண்டிருக்கவேண்டும் என்ற அச்சம் ஏற்பட்டது. இந்தச் சமயத்தில் நாம் அங்கிருந்து ஓட்டம் பிடிக்கவில்லையென்றால், தனது உறுதிப்படி அவள் நம்மைக் குளிப்பாட்டாமல் விடமாட்டாளென்று தோன்றியது. அப்படிப்பட்ட மஞ்சள் நீராடுதலில் (மங்களகரமான குளியலின்) ஆசை எனக்கு இல்லாததால், நான் அங்கிருந்து திரும்பி வந்துவிட்டேன். செவிகளின்மீது விழுந்த சொல் மழை போதும். இப்பொழுது உடல்—உடைமீது நீர்—மழை வேறு வேண்டாம் என்று சொல்லி நான் அங்கிருந்து கிளம்பினேன். நான் அங்கிருந்து பத்து அடிகள் நகர்ந்து சென்றிருக்க மாட்டேன். அப்பொழுது என் பின்னால் உண்மையாகவே நீர்—மழை பொழிந்த ஒலி என் காதில் விழுந்தது. நான் திரும்பிப் பார்த்தேன். அதோ என் குளியலுக்கு என்று இருந்த நீர்தான்! பெரிய ஆபத்திலிருந்து தப்பிப் பிழைத்தோம் என்று எனக்குத் தோன்றியது. வீட்டிற்கு வந்த பின்னர் அன்றைத் தினம் நடந்தவற்றை நினைத்து மாலையில் எல்லாரும் விழுந்து விழுந்து சிரித்தோம் என்று சொல்ல வேண்டியதில்லை. அந்தச் சமயத்தில் மீண்டும் மீண்டும் உனது நினைவு வந்துகொண்டிருந்தது.

'பெரிய வேடிக்கை நடந்தது மறுநாள்தான். அந் நிகழ்ச்சி நடந்த அன்று, அதற்குப் பின்னர் அந்தப் பையன் வரவேயில்லை. நான் அவன் வீட்டின் வாசல் வரை சென்று அப்படியே திரும்பி வந்தேன் என்பது அவனுக்குத் தெரியவே தெரியாது. நான் போகவேயில்லை என்றுதான் அவன் நினைத்துக்கொண்டிருந்தான். ஆகவே, நான் போகவேயில்லை என்று எங்கள்மீதே குற்றம் சாட்டித் தன்னை எப்படியாகிலும் விடுவித்துக்கொள்ளும் நோக்கத்துடன் மறுநாள் அவன் அண்ணாவிடம் வந்து சொன்னான்: ''நேற்று உங்களிடமிருந்து ஒருவரும் வரவுமில்லை, ஒன்றுமில்லை. நான் எதிர்பார்த்துக்கொண்டே இருந்தேன். அவளும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.'' கடைசியில் இன்று அவள் என்னிடம் சொன்னாள்: ''அவர்களுக்கு நேரம் இல்லை என்றால்

எதற்காகத் தொல்லை கொடுக்கிறீர்கள்? மாமியார் மிகுந்த வற்புறுத்தலின்பேரில் ஒத்துக்கொண்டார்கள். அவர்கள் உள்ளத்தையும் ஏன் புண்படுத்துகிறீர்கள்? பரவாயில்லை, இப்பொழுது முடியவில்லையென்றால் சரிதான். இப்போதைக்கு வேண்டாம். உங்களுக்கும் வர முடிவதில்லை. வீணாக அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்.'' அந்தப் பையன் இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது என் செவிகள் அங்கேதான் ஒன்றி யிருந்தன. அவனுடைய அந்தப் பேச்சைக் கேட்டு வெடித்துக் கொண்டு வந்த என் சிரிப்பைப்பற்றி ஒன்றும் கேட்காதீர்கள். உடனேயே, ''வெறுமனே எதற்கு வேண்டாம் என்று சொல்கிறீர்கள். எங்களுக்கு அந்த மங்களகரமான குளியல் வேண்டாம் என்பதற்காக வேண்டாம் என்று சொல் லுங்கள்'' என்ற சொற்கள் என் உதடுவரைக்கும் வந்து விட்டன. மனிதத் தன்மை எப்படி இருக்கிறது பார்! அந்தப் பையனுக்குத் தன் தாய் கொடுத்த பூசையை வெளியில் தெரியா மல் மறைத்து, தனது பொய்க் கௌரவத்தை நிலைநாட்டிக் கொள் வதில் எவ்வளவு பெரிய ஆசை! அந்தச் சமயத்தில் மட்டும் நான் இப்படி ஏதாவது அவனிடம் சொல்லியிருந்தால், அவன் வெட்கத்தால் எவ்வளவு சுருங்கிப் போயிருப்பான்? ஆனால் நான் அவனை நல்லபடியாக, அமைதியுடன் போகவிட்டேன். எல்லாப் பக்கங்களிலிருந்தும் அவனைப்போல் தண்ணீரால் சூழப்பட்ட நிலையில் இருக்கும் இளைஞர்கள் எத்தனை எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள்!'

இப்படிப்பட்ட இன்னும் சில விசித்திர அநுபவங்கள் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. அவற்றிலிருந்து இக்குழுவினர் மெள்ள மெள்ள சாதுரியத்தைக் கற்றுக்கொள்ளலானார்கள். பிறருடைய பரிகாசம், இழிவான பேச்சு, வீண் பழி சுமத்துதல் ஆகியவற்றினால் மனத்தைத் தளரவிடாமல், அவற்றை வெறுமனே காதினால் கேட்டு வேடிக்கையாகச் சிரித்து ஒதுக்கி, அவர்கள் இருவரும் காலம் தள்ளிக்கொண்டிருந்தார்கள்.

ஏதாவது ஒரு குறிப்பிட்ட வகையில் பெண் கல்வி முதலியவை அளிப்பதற்காக முயற்சி செய்யவேண்டும் என்று இவ்விருவரும் மனத்தில் முடிவு செய்திருக்கிறார்கள் என்ற செய்தி மெள்ள மெள்ள மக்களுக்கு இடையில் பரவிக்கொண்டுதான் இருந்தது. ஒரு நாள் அண்ணாவின் பெயருக்கு ஒரு கடிதமும் வந்தது. அதைக்

கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த ஒரு மாணவன் எழுதியிருந்தான். அதில் கீழ்க்கண்டவாறு எழுதப்பட்டிருந்தது:

'பணிவுடன் வணக்கம். நலம். நலத்திற்கு எழுதவும். தங்கள் பெண், ஸ்ரீமான் பாவு ராவ் அவர்களின் சகோதரி—ஆகிய இருவரும் நற்கல்விச் செல்வம் பெற்றவர்களாக இருக்கிறார்கள் என்பது எல்லாரும் அறிந்த விஷயந்தான். அறிவு அடையப் பெறாத தங்கள் சகோதரிகளுக்கு அறிவின் ஒளியை அளிப்பதற்கென்று ஏதாவது வேலை செய்யவேண்டும் என்று அவர்கள் விரும்புவதாகவும், அதற்கான முயற்சிகளைத் தொடங்கியிருப்பதாகவும் நான் கேள்விப்பட்டேன். எங்கள் கல்லூரியில் நாங்கள் ஏழு நண்பர்கள் இருக்கிறோம். எங்கள் எல்லோருக்கும் அந்த இரு பண்டிதைகளிடமும் மிகுந்த மதிப்பு உண்டு. அதுமட்டுமல்ல. இப்படிப்பட்ட கல்விக் களஞ்சியமாகிய ஆரிய மங்கைகள் எள்ளளவும் தன்னலம் கருதாமல், கல்விச் செல்வம் பெறாத தங்கள் சகோதரிகளின் நலத்தைக் கருதி, இடையறாது உழைக்கத் தயாராக இருக்கும்பொழுது, இளைஞர் குழுவைச் சேர்ந்த நாங்கள், எங்கள் மனைவியரை அவர்கள் கூட்டுறவில் அனுப்பி வைத்து, அவர்கள் கல்வியின் பயனை இவர்கள் அடையும்படி செய்யவேண்டும் என்பது எங்களுடைய கடமையெனக் கருதுகிறோம். இதன் தொடர்பில் ஓரளவு இன்னலை எங்களுக்குப் பொறுத்துக் கொள்ளவேண்டி வந்தாலும், அதை நாங்கள் பொறுத்துக் கொள்ளவேண்டும்; அதை நாங்கள் பொறுத்துக் கொள்ளவும் செய்வோம். எங்கள் தோழர் குழுவில் உள்ள ஏழு பேரும் அவ்வாறு செய்ய முடிவு செய்து, அதற்காக மேற்கொண்டு என்ன செய்யவேண்டும் என்று அறிய விரும்பித் தங்களுக்குக் கடிதம் எழுத முடிவு செய்தோம். கடிதத்தை எழுதும் காரியம் என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. வார்த்தைக்கு வார்த்தை தாங்கள் சொல்கின்றபடியே செய்வதாக நாங்கள் அசைக்க முடியாத உறுதிகொண்டிருக்கிறோம். அதுபற்றி உங்களுக்குச் சிறிதும் சந்தேகம் வேண்டாம். எங்களால் இவ்வளவுகூடச் செய்ய முடியவில்லை என்றால், பிறகு எங்களுக்குக் கிடைத்த கல்வி, நாங்கள் கற்றுக்கொண்ட நற்குணங்கள் ஆகியவற்றின் பயன் தான் என்ன? நாங்கள் எல்லாருமே இன்று சுதந்தரமாக இருக்கிறோம் என்பதில்லை. ஆனால், இந்த ஒரு காரியத்தில் எங்களுக்கு என்ன தொல்லை ஏற்பட்டாலும் அதைப் பொறுத்துக்கொண்டு எங்கள் மனைவியரைக் கற்றறிந்த தங்கள் பெண்,

அவள் தோழி ஆகிய இவ்விருவரிடமும் ஒவ்வொரு நாளும் சில மணி நேரங்களுக்காவது அனுப்பி வைப்பது என்று நாங்கள் அசைக்க முடியாத உறுதிகொண்டிருக்கிறோம். ஆஹா! தங்களுடைய தைரியத்தையும், அவர்களுடைய மன உறுதியையும் எவ்வளவு புகழ்ந்தாலும் போதாது. இங்கிலாந்து முதலிய நாடுகளைச் சேர்ந்த ஜான் ஹெம்டன் முதலான ஆட்களுக்கு ஈடாகத் தங்கள் காரியம் சிறப்புடையதாக இருக்கிறது. நாங்கள் தங்களை மிகவும் மதிக்கிறோம். மேலும் தங்களுடையதும், தங்களால் இவ்வளவு சிறந்த நிலைக்கு உயர்ந்தவர்களுமான அவ்விரு பண்டிதைகளையும் நானும், எனது தோழர்களும் தாழ்ந்து பணிந்து வணங்குகின்றோம். அவர்கள் கையினால் துவக்கப்பட்டுள்ள இக்காரியத்தில் தங்களுக்கு வெற்றி கிடைக்கட்டும். மேலும் இளைஞர் வம்சத்திற்கு மங்களம் உண்டாகட்டும்! உங்களை நேரில் சந்தித்து, இதுபற்றிப் பேசவேண்டும் என்று நானும் எனது தோழர்களும் விரும்புகிறோம். எப்பொழுது உங்களுக்குச் சௌகரியப்படும் என்று தெரிவித்தீர்களேயானால் நான் மிகவும் நன்றியுள்ளவனாயிருப்பேன்.'

இந்தக் கடிதத்தை அண்ணா எனக்கு அனுப்பினார். அதுபற்றி எனது கருத்தையும் கேட்டார். நானென்ன சொல்வேன்? கடிதம் எழுதிய இளங்காளையினரைப் போன்றவன்தான் நானும். அந்தக் கடிதத்தைப் படித்ததும் எனக்குப் பெரிய நம்பிக்கை ஏற்பட்டது. இப்படிப்பட்ட மக்களின் எண்ணிக்கை இப்பொழுது தினந்தோறும் பெருகிக்கொண்டே சென்று, என் அக்கா, சுந்தரி இவர்களின் புகழ் திக்கெட்டும் பரவி, நமது இந்தியாவில், குறைந்தபட்சம் நமது பிராந்தியத்தில் இருக்கும் பெண்களுக்கிடையில், இப்பொழுது காற்று வேகத்தில் கல்வி பரவப் போகிறது. அந்தக் கடிதத்தை எழுதிய மாணவர்களை நேரில் வந்து சந்திக்கும்படி தாம் உடனேயே சொல்லியனுப்பியதாகவும், அவர்களுடன் நடந்த பேச்சுவார்த்தையின்பொழுது வெளிப்பட்ட அவர்களின் உற்சாகத்தையும், அவர்கள் உடற்திண்மையையும் வர்ணித்தும் அண்ணா எனக்கு எழுதியிருந்தார். இனிஅக்காவும், சுந்தரியும் தாம் விரும்பும் காரியங்களைச் செய்வதற்கு எந்தத் தடையுமில்லை என்ற நம்பிக்கை எனக்கு அந்தக் கடிதத்தைப் படித்ததும் ஏற்பட்டது. உடனேயே நான் அவர்கள் இருவருக்கும், 'இவ்வளவு நாள் நீங்கள் பொறுத்திருந்ததற்கு, நீங்கள் எதிர்பார்த்திருந்த ஒன்று நடக்கப் போகிறது. அதை

மேலும் விஸ்தரிப்பது உங்கள் கையில் இருக்கிறது. அது உங்கள் வேலைத்திறனைப் பொறுத்திருக்கிறது' என்றவாறெல்லாம் கடிதம் எழுதினேன். அவர்களிடமிருந்தும் அவ்வாறே ஒரு கடிதம் எனக்கு வந்தது. அதில், 'இப்பொழுது நாங்கள் எங்கள் திறமைக்குட்பட்ட அளவு சிறந்த முறையில் காரியத்தைத் துவங்கப் போகிறோம். பிறகு என்னதான் நடக்காது? எங்கள் மாணவிகளை நாங்கள் மிகவும் அறிவாளிகளாகவும் பணிவுடைய வர்களாகவும் ஆக்கப்போகிறோம். அதைக் கண்டு அவர்கள் மாமியார் வீட்டுக்காரர்களோ, மற்றப் பெரியவர்களோ எங்களைக் கூப்பிட்டு எங்களைப் புகழப் போகிறார்கள்.'

இப்படி எல்லா ஏற்பாடுகளும் நடந்தன. இடம் இப்போதைக்கு அண்ணாவின் வீடாக இருக்கும் என்று நிச்சயிக்கப்பட்டது. அங் கேயே மதியப்பொழுது அந்த ஏழு பேரும் வருவது என்று முடிவு செய்யப்பட்டது. இப்பொழுது நாளைக் குறிப்பிடுவதுதான் பாக்கி. மேலே நாளும் குறிப்பிடப்பட்டுவிட்டது. நேரமும் குறித் தாயிற்று. அந்த நேரத்திற்கு இந்த இருவரும் தயாராகி வந்து உட்கார்ந்தார்கள். சரியான நேரத்திற்கு ஒருவருமே வரவில்லை.

குறித்த நேரம் கடந்து சுமார் முக்கால் மணி நேரம் கழிந்த பிறகு ஓர் இளம் பெண் வந்தாள். அவளுக்குப்பின் அரைமணி நேரத்தில் மற்றும் ஒரு பெண் வந்தாள். அதன் பிறகு வேறு ஒருவருமே வரவில்லை. எந்த மாணவன் கடிதம் எழுதி இருந்தானோ, அவன் தன் மனைவியின் மூலமாகவே மற்றவர்களை ஒன்று சேர்த்து வண்டியில் அழைத்து வருவதாக இருந்தான். ஆனால், வேடிக்கை என்னவென்றால் அவன் மனைவியே இருந்த இடம் தெரியவில்லை. வந்திருந்த இருவரும்கூட, தங்கள் கணவன்மார்கள் கொடுத்த ஏதோ தொல்லை பொறுக்காமல், ஏதோ காரணத்தைச் சொல்லித் தப்பித்துத் தானாகவே வந்திருந் தார்கள். முதலில் தங்களை அழைத்துக்கொண்டு வரவிருந்தவள் வரவில்லை என்று அவர்களும் வருவதாக இருக்கவில்லை. ஆனால், தங்கள் மனத்தில் இருந்ததாலும், கணவன்மாரின் வற்புறுத்தல் பொறுக்கமாட்டாமலும் எப்படியோ வந்து சேர்ந்திருந்தார்கள். ஆனால் என்ன பயன்? சுமார் பதினைந்து நிமிடங்கள்கூட உட்கார வில்லை. அதற்குள், 'இப்பொழுது போகிறோம், இப்பொழுது போகிறோம்' என்று இடையறாது அவர்கள் தொணதொணப்புத் தொடங்கியது. 'நாங்கள் வீட்டில் இருப்பவர்களை ஏமாற்றி ஏதோ பொய்க் காரணத்தைச் சொல்லி வந்திருக்கிறோம்.

உடனேயே வீட்டிற்குத் திரும்பிச் சென்றே ஆகவேண்டும்' என்று மீண்டும் மீண்டும் அவர்கள் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

கடைசியாக, அன்றைத் தினம் ஒன்றுமே செய்யாமல் திரும்பியும் சென்றுவிட்டார்கள். மறுநாள் அந்த இருவரில் ஒருத்திதான் வந்தாள். அவளும் இவ்விருவரிடமும் வந்து குறை சொல்ல ஆரம்பித்தாள்: 'ஏனுங்க, நீங்களாவது எங்கள் வீட்டில் வந்து சொல்லுங்களேன், இங்கு வர முயலும்போது எங்களை இவ்வளவு தொல்லைப்படுத்தவேண்டாம் என்று. எங்கள் கையில் தவறி ஒரு காகிதத் துண்டைக் கண்டாலும், இல்லாத பேச்சை அவர்கள் பேச, அதை நாங்கள் பொறுத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. எங்களுக்கும் படிக்கவேண்டும் என்று தோன்றுவதில்லையா, என்ன? மிக அதிகமாகத் தோன்றுகிறது. ஆனால், ஐந்து நிமிடம் கற்றுக்கொள்வதற்குள், அதைப்பற்றிக் குத்திப் பேசுவதை ஆண்டுக்கணக்கில் கேட்டுக்கொள்ளவேண்டியிருக்கிறது. பிறகு என்னதான் செய்வது? இப்பொழுது நேற்றைக்குத்தானே நான் இங்கே வந்தேன். அதற்குள் என் வீட்டில் இருப்பவர்கள் என்னுடன் பேசுவதை நிறுத்திவிட்டார்கள். இப்படிப்பட்ட நிலையில் நாங்கள் வாழ்வது எப்படி?'

இப்படிப்பட்ட பேச்சை அந்தப் பெண்ணின் வாயினின்று கேட்டதும் அந்த இருவரும் அவளிடம் என்ன சொல்வார்கள்? அவளுடைய அந்தப் பரிதாபமான தோற்றம், உள்ளத்தைக் கரைக்கும் அந்தப் பேச்சு—இவற்றால் அவ்விருவருக்கும் மிகுந்த வருத்தம் ஏற்பட்டு, 'நீங்கள் வந்து போகவேண்டாம்' என்று அவளுக்குச் சொன்னார்கள். ஆனால் அவள் சொன்னாள்: 'இவ்வளவு எனக்குச் சொல்லி என்ன பயன்? அங்கே சொல்லுங்கள். எங்களுக்கு ''மத்தளத்திற்கு இருபுறமும் அடி'' என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. வீட்டிலிருப்பவர்கள் பேச்சை அனுசரிப்பதென்றால், அவர் விருப்பத்தில் மண். இவரைக் கவனித்துக்கொண்டால், அங்கே போச்சு. இப்பொழுது என்னதான் செய்வது?' கடைசியில் அவர்கள் பாதுகாப்பிற்காக ஏதாவது செய்கிறோமென்று ஏதோ சொல்லி அவளுக்கு ஆறுதல் கூறினோம். கடிதம் எழுதியவன் மறுபடியும் இப்பக்கத்துப் பெயரைக்கூட எடுக்கவில்லை. அண்ணா அவனுக்குக் கடிதம் அனுப்பவேயில்லை. ஆனால், எங்களால் அப்படிச் சும்மா இருக்க முடியவில்லை. அவனுடைய அந்த முதல் கடிதத்தைக் கண்டதும், அவனிடம் எவ்வளவு மதிப்பு ஏற்பட்டிருந்ததோ, அவ்வளவு

வெறுப்பு இப்பொழுது ஏற்பட்டிருந்ததால் அவர்களை அவமானப் படுத்தவேண்டும் என்ற விருப்பம் ஏற்பட்டது. உடனேயே ஒரு கடிதம் எழுதி அவனது முதற் கடிதத்தை நினைவுபடுத்தி, அவனுடைய அந்த எல்லாத் திட்டங்களும் ஏன் கவிழ்ந்தன என்று கேட்டேன். அவனது அந்த உறுதி எங்கே போயிற்று? 'அந்த உறுதியை நிறைவேற்றுவதற்காக வேறு ஏதாவது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா, என்ன?' என்றும் கேட்டேன். அவனிடமிருந்து கடிதமே வரவில்லை. நானும் விடாமல் கடிதத்திற்கு மேல் கடிதம் எழுதினேன். கடைசியில் அவனிடமிருந்து ஒரு மிகச் சிறிய கடிதம் வந்தது. அதில் அவன் தன் இயலாமையைக் குறிப்பிட்டு, இவ்வாறு எழுதியிருந்தான்: 'கையெடுத்துக் கும்பிடுவதைத் தவிர வேறு ஒன்றுமே நான் செய்யமுடியாதபடி சில விஷயங்கள் நடந்தன. மற்றபடி எனது உற்சாகம் பழைய படியே நிலைத்திருக்கிறது. ஆனால் என் செய்வேன்?' நானும் அதற்குமேல் கடிதம் எழுதி அவனைத் துன்புறுத்தவில்லை.

இதைப்பற்றித் தெரிந்துகொள்ள நான் முயற்சி செய்த தன் பயனாக, அவனுக்கு முன் தோன்றிய முக்கியமான தடை அவன் மனைவியேதான் என்று தெரியவந்தது. என்ன செய்தும் அவன் சொற்படி கல்வி கற்பதற்கு அவள் முனையவில்லை. இந்த எல்லாக் கடிதப் போக்குவரத்தும் முடிந்த பிறகு அதுபற்றி நான் அண்ணாவிற்கு ஒரு கடிதம் எழுதினேன். அதில் அந்த மாணவனைப்பற்றியும் அவனைப் போன்றவர்களைப்பற்றியும் நன்றாகப் பழித்து எழுதியிருந்தேன். ஆனால், அண்ணா தம்முடைய பதிலில், 'நடந்துபோனவற்றிற்காக அந்த மாணவனைக் குற்றம் சொல்வது தவறு. அதற்குமேல் அவனை வெட்கப்படுத்துவது அதைவிடப் பெருந்தவறு. அந்தக் கடிதத்தை எழுதிய போது அதை உண்மையாகவே மனப்பூர்வமாக அவன் எழுதினான். தனக்கு இவை யாவும் முடியக்கூடியவை என்று எண்ணியதால் எழுதினான். பின்னர் அவ்வாறு நடக்கவில்லை என்பது அவன் குற்றமல்ல. இப்படிப்பட்ட காரியங்களை நிறைவேற்றும் உற்சாகத்தை மனத்தில் கொண்டிருந்தும் அவனைப் போன்ற எத்தனை இளைஞர்களுக்கு அவலமென்ற வண்ணம் உட்கார்ந்திருக்கவேண்டி வருகிறது! அந்த உற்சாகம் இருக்கிறது என்பதே போற்றுவதற்குரிய விஷயம் ஆகும்' என்று எழுதியிருந்தார்.

# 48. அடுத்து எடுத்த அடிகள்!

இப்படிப்பட்ட விநோதங்கள் நடந்துகொண்டிருந்தன என்பது உண்மைதான். ஆனால் அதே சமயத்தில் அக்கம்பக்கத்தில் இருந்தவர்களின் சந்தேகங்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவாகிக் கொண்டிருந்தன. நாளுக்கு நாள் மக்களிடையே புதுப் புது எண்ணங்கள் மேலும் மேலும் அதிகமாகப் பரவிக்கொண்டிருந்தன. எங்களுக்கு மறைமுகமாகத் தானம் செய்யத் தொடங்கியிருந்த பெரியவர் இப்போதும் அவ்வப்பொழுது கொஞ்ச நஞ்சம் பணம் அனுப்பி எங்களுக்கு உதவி செய்யும் வேலையைத் தொடர்ந்துகொண்டுதான் இருந்தார். இதனால் புத்தகங்கள், தையல் சாமான்கள், துணி, கம்பளி நூல் (Woollen) முதலான பொருள்களுக்கு வீட்டில் குறைவே இருக்கவில்லை. அந்தப் பொருள்கள் யாவும் எங்களிடம் இருந்தன; மேலும் வேண்டிய அளவு வாங்கக்கூடிய நிலையும் எங்களுக்கு இருந்தது. ஆனால், அப்பொருள்களின் பயன் யாருக்காக என்று இருந்ததோ அல்லது யாரால் அவை பயன்படுத்தவேண்டும் என்று இருந்தனவோ, அந்த ஆட்கள் மட்டுந்தான் இருக்கவில்லை. அதற்கு உகந்த ஆட்கள் ஒரு முறை கிடைத்து, அவர்களுக்கு அந்த வேலையைப்பற்றித் தெரிந்து, அதில் விருப்பமும் ஏற்பட்டுவிட்டது என்றால், பிறகு இது நன்கு பரவும் என்று அவர்களுக்கும், எங்கள் எல்லாருக்கும் நம்பிக்கை இருந்தது. எதிர்பார்த்ததுபோல் இரண்டு இளம் பெண்கள் வருவதாக முடிவு செய்திருந்தார்கள். முதல் நாள் நேரில் வரவும் செய்தார்கள். இவர்களுக்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவே இல்லை. இவ்வளவு நாட்கள் தாங்கள் செய்த உழைப்பிற்கு இப்பொழுது பலன் ஏற்படக்கூடிய அறிகுறி யாவது தென்படலாயிற்று. இப்படிப்பட்ட நிலையில் அவர்கள் தங்கள் வேலையை மிகுந்த ஆர்வத்துடன் தொடங்கினார்கள் என்பதைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை. இரு ஆசிரியைகள், இரு மாணவிகள்! பிறகு வேறு என்ன வேண்டும்?

அவர்கள் இருவரும் தங்களுடைய எல்லா அறிவையும் தங்கள் மாணவிகளுக்கு அளித்து அவர்களை விரைவில் தயாராக்குவது

என்று முடிவு செய்தார்கள். அதுவும் இதைச் சாதிப்பதற்கு அவர்களுக்குக் கிடைக்கப் போகும் நேரம் நாளொன்றுக்கு ஒரு மணி அல்லது அரை மணி நேரந்தான்! இந்த நேரத்தையே எவ்வளவு சிறந்த முறையில் பயன்படுத்த முடியுமோ, அவ்வாறு பயன்படுத்த அவர்கள் முடிவு செய்ததாலும், அந்த மாணவிகளும் சிணுங்கிக் கொண்டிருக்கும் தன்மை அற்றவர்களாக இருந்ததாலும், அவர்கள் படிப்பு மிக நல்ல முறையில் நடந்தது.

கம்பளிச்சட்டை (ஸ்வெட்டர்) பின்னுதல், தையல் வேலை, சிறிது எழுதுதல், படித்தல்—இத்தனை வேலைகளையும் மாறி மாறிச் செய்யத் தொடங்கினார்கள். நேரம் மிகக் குறைவாயிருக்கிறதே, அதற்குள் என்ன என்னதான் ஆகப்போகிறதோ என்று எண்ணி இருசாராரும் மனம் தளர்ந்துவிடவில்லை. அத்தனை நேரத்தில் எவ்வளவு முடியுமோ, அவ்வளவு செய்ய அவர்கள் உறுதி கொண்டார்கள். அந்த இரு மாணவிகளுக்கும் முற்போக்கான முறையிலும், ஒழுங்கான முறையிலும் நடந்துகொள்ளக் கற்றுக் கொடுப்பதில் அவர்களுடைய ஆசிரியைகள் கண்ணும் கருத்துமாய் இருந்தனர்.

இரண்டே எழுத்துக்கள்தான் கற்றுக்கொண்டார்கள் அல்லது நான்கே தையல்கள் போட்டார்கள் என்றாலும் பரவாயில்லை; ஆனால், அதை அவர்கள் ஒழுங்காகச் செய்ய வேண்டும் என்பதில் கவனம் செலுத்தப்பட்டது. என்ன என்ன கற்றுக்கொண்டாலும் அவற்றில் எல்லாம் முக்கியமானது காரியம் செய்யும் அழகும், ஒழுங்கு முறையுந்தான் என்பதை மாணவிகள் உணரவேண்டுமென்பதற்காக அவ்விருவரும் மிகவும் பிரயாசை எடுத்துக்கொண்டார்கள்.

போகப் போக மாணவிகளின் எண்ணிக்கை இரண்டிலிருந்து மூன்று ஆயிற்று. பின்னர் மூன்றிலிருந்து விரைவிலேயே நான்கு ஆயிற்று. நான்கிலிருந்து ஐந்தும் ஆயிற்று. இப்படி மாணவிகளின் எண்ணிக்கை பெருகப் பெருக அவர்களுடைய நம்பிக்கையும் வளர்ந்துகொண்டே போயிற்று. தாங்கள் செய்துகொண்டிருக்கும் முயற்சிகளினால் ஏதாவது ஒரு பலன் ஏற்படப்போகிறது என்று அவர்களுக்குத் தோன்றலாயிற்று. வரும் குழுவினரின் எண்ணிக்கை பெருகவே, இந்த நேரத்தை மிகுந்த சுவையுள்ளதாக ஆக்கவேண்டும் என்று நினைத்து அதற்கேற்ற முயற்சிகளையும் அவர்கள் மேற்கொண்டிருந்தார்கள். சாதாரணமாகவே மனிதனுக்குப் பயனுள்ள பொருள்

களைக் காட்டிலும், நல்ல தோற்றங் கொண்ட, அதாவது பார்ப்பதற்குக் கவர்ச்சியுள்ள பொருள்கள் அதிகமாகப் பிடிக்கின்றன. பயனுள்ள அறிவைக் காட்டிலும் அலங்காரமான அறிவு அவனை ஈர்க்கிறது. கல்வி கற்பதற்காக வந்த பெண்கள் இதற்கு விலக்கானவர்களாக இல்லை. தமது குழந்தைகளுக்கோ அல்லது கணவனுக்கோ பயன்படும் வகையிலுள்ள பொருள்களைச் செய்வதிலோ அல்லது துணிமணிகள் தைப்பதிலோ அவர்கள் மனம் ஈடுபடுவதில்லை. ஆனால், நூலினால் (Woollen) கைக்குட்டை நெய்வது, மஃப்ளர் பின்னுவது, எம்ப்ராய்டரி வேலை செய்வது முதலான வெளியில் காட்டிக் கொள்வதற்கான பொருள்களைச் செய்வதில் அவர்கள் உள்ளம் முனைகிறது.

இப்படிப்பட்ட அவர்களது மனப்போக்கைத் தடுத்துப் பயனுள்ள கலையைக் கற்பதில் அவர்களை ஈடுபடச் செய்ய அக்காவும், சுந்தரியும் தனிப்பட்ட முயற்சிகளை மேற்கொண்டார்கள். வெளிக் கவர்ச்சியுள்ள பொருள்களை முற்றும் புறக்கணிக்கவேண்டும் என்று அவர்கள் சொல்லவேயில்லை. முதல் முதலில் கற்றுக்கொள்பவர்களின் மனத்திற்கு ஏற்றவாறே என்ன செய்யவேண்டும் என்பதை எண்ணி அறிந்தார்கள். பின்னர் மெல்ல மெல்ல உயர்ந்த லட்சியங்களை அவர்கள் மனத்தில் பதிய வைப்பதற்கு முயன்றார்கள். 'இன்ன இன்ன வேலைகளை நீங்கள் கற்றுக்கொண்டால் உங்களுக்கு இன்ன இன்ன பலன் ஏற்படும், காரணம் இன்றி இவ்வளவு பணம் வெளியில் அங்கும் இங்கும் போய்விடுகிறது. அதைப் போகாமல் தடுக்கலாம்' என்று பயனுள்ள யோசனைகளை அவர்கள் மனத்தில் பதிய வைக்க இருவரும் முயற்சி செய்தார்கள். அந்த முயற்சியில் நல்ல வெற்றியும் அடைந்தார்கள். ஸ்வெட்டர் முதலியவை பின்னும் வேலையை விடத் தையல் வேலையில் அவர்களுடைய கவனம் அதிகம் செல்லலாயிற்று. அவர்கள் கையில் சட்டை, கால்சட்டைகளின் துணிகள் பறக்கலாயின. போகப் போக இந்தக் குழுவினரைப்பற்றிய செய்தி மக்களிடையில் பரவலாயிற்று. அவ்வாறு பரவப் பரவ, அவர்களைப்பற்றிய பயங்களும் சந்தேகங்களும் குறையத் தொடங்கின. அவர்களை இன்னும் அதிகமான பெண்கள் பயன்படுத்திக்கொள்வார்கள் என்பதற்கான அறிகுறி தென்படலாயிற்று.

முதலில் அதிகமாகப் போனால் ஒரு மணி நேரம் உட்காரும் பெண்கள் இப்பொழுது இரண்டு மணி நேரங்கூட உட்கார ஆரம்பித்தார்கள். எந்த வீடு முற்றும் புறக்கணிக்க வேண்டிய ஒன்றாகக் கருதப்பட்டதோ, அதே வீடு இப்போது பெருமளவில் பெண்கள் மதியப்பொழுதில் வந்து கூடும் இடமாக ஆகிக்கொண்டிருந்தது.

நாள்தோறும் விரிவடைந்துகொண்டிருந்த தங்களது வகுப்பைப் பார்த்து அவர்கள் உள்ளம் பூரித்தது. தங்களால் முடிந்தவரை அதனை மேலும் பயனுள்ளதாக ஆக்குவதற்கு அவர்கள் முயன்றார்கள். நாள் முழுதும் அவர்களுடைய எண்ணங்களும், செய்யும் பல காரியங்களும் அது தொடர்பானதாகவே இருக்கும். சரித்திரத்திலிருந்து ஒரு கதையோ, புராணத்திலிருந்து ஓர் உபாக்கியானமோ இன்று சொல்ல வேண்டும் என்று முடிவு செய்ததும், உடனேயே அதுபற்றி எவ்வளவு முடியுமோ அவ்வளவு விவரங்களைச் சேகரித்து, அதை நன்கு தயார் செய்துகொண்டு பின்னர் நல்ல முறையில் அதை வகுப்பில் அளிப்பது என்பது அவர்களுடைய வழக்கமாக இருந்தது. இந்தப் பெண்களுக்கு என்ன தெரியும்? நாம் எதைச் சொன்னாலும் வேதவாக்கு என்று கொள்வார்கள் என்று நினைத்து, தங்கள் வேலையை ஏனோதானோ எனச் செய்துவிடலாம் என்று அவர்கள் நினைக்கவில்லை.

அவ்வப்பொழுது தங்கள் மாணவிகளுக்கு, தாங்கள் படித்திருக்கும் ஆங்கிலத்திலுள்ள கற்பனைக் கதைகளையும் சொல்வார்கள். சுருங்கச் சொன்னால், அங்கு வரும் பெண்களின் மனம் எப்படியாவது அங்கு ஈடுபடவேண்டும் என்பதாக அவர்களுடைய முழு முயற்சியும் இருந்தது. அவ்வப்போது 'பாண்டவப் பிரதாபம்', 'ஹரி விஜயம்', 'பக்திலீலாம்ருதம்' முதலான புத்தகங்களிலிருந்து சில பகுதிகளைப் படித்து, அதன் சாரத்தை நல்ல முறையில் சொல்லி, அவர்கள் மனத்தில் இறைவனைப்பற்றிய எண்ணங்களை நிறைக்க இவர்கள் முயற்சி செய்வதுண்டு. இந்த எல்லா முயற்சிகளைப்பற்றியும் நாட்குறிப்புப் புத்தகத்தில் எழுதுவதுபோல் எழுதி அக்கா என்னிடம் வாரம் ஒரு முறை அனுப்பிக்கொண்டிருந்தாள். ஆகவே, 'என் கையில் எடுத்துக்கொண்ட வேலையிலிருந்து நான் எப்பொழுது விடுபடுவேன், அவர்கள் இருவருக்கும் உதவியாக எப்பொழுது நானும் அவர்களுடன் போய்ச் சேர்ந்து கொள்வேன், அவர்கள் செய்துகொண்டிருப்பதுபோன்ற பரோப

காரக் காரியங்களை நானும் எப்போது செய்யப்போகிறேன்?' என்று எனக்கு ஆகியிருந்தது.

மேற்சொன்ன காரியங்களைச் செய்வதற்கு வேண்டிய கற்பனைத் திறனும், அவற்றைச் செயலாக்குவதற்கு வேண்டிய தீவிர முயற்சியும் அவர்களிடம் இருக்கும் என்று நான் முன்பு எண்ணியிருக்கவில்லை. ஆனால், அவர்களுடைய சொந்தக் கல்வி எந்த வழியில் அமைந்ததோ, அந்த வழிக்கு முற்றும் ஏற்றதாகவும், சகஜமானதாகவும் அவர்களுடைய எல்லாக் கற்பனைகளும் இருந்தன.

நான் எந்தப் பரீட்சை கொடுக்க இருந்தேனோ, அது இப்பொழுது மிகவும் நெருங்கிக்கொண்டிருந்தது. ஆகவே, அந்த எண்ணங்களை யெல்லாம் இப்போதைக்கு ஒரு பக்கம் ஒதுக்கி வைத்தேன். இவ்வாறு நான் செய்ததும் ஒரு வகையில் நல்லதாகப் போயிற்று. சிறிது நாட்களில் பரீட்சை முடிந்தது. இப்பொழுது நான் எனது கற்பனைகளுக்கேற்றவாறு என்ன செய்யவேண்டும் என்பதை எண்ணி, வருங்கால வாழ்க்கையை எவ்வகையில் அமைத்துக்கொள்ளவேண்டும் என்பதை முடிவு செய்வதற்காகப் புனவிற்குக் கிளம்பிப் போகவே இருந்தேன். அதற்குள் மறுபடியும் அக்காவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதிலிருந்த செய்தி முற்றும் விசித்திரமானதாக, சிறிதளவும் எதிர்பாராததாக, என் உள்ளத்தைப் பிளப்பதாக இருந்தது.

# 49. பொறுமையின் விளைவு!

கடிதத்தின் முதல் வாக்கியமே இதுதான்: 'நான் இந்தக் கடிதத்தை எழுதிக்கொண்டிருப்பது என் வீட்டிலிருந்து. நான் என் வீட்டிற்கு வந்திருக்கிறேன்.' இந்த ஒரு வாக்கியத்தைப் படித்தவுடனேயே என் உடலெல்லாம் எப்படி நெருப்பாக எரியலாயிற்று என்பதை வார்த்தைகளில் விவரிக்க முடியாது. கடிதத்தை மேற்கொண்டு படிக்கவேண்டும். அதில் அவள், தனது வீட்டிற்குச் செல்லவேண்டி நேர்ந்ததற்குரிய காரணங்களை எழுதியிருப்பாள், அவற்றை அறிந்துகொள்ளவேண்டும் . . .

ஆனால் அத்தனை பொறுமை யாருக்கு உண்டு? இன்றுவரை இவ்வாறெல்லாம் போராடிவிட்டுக் கடைசியில் அக்கா வீட்டிற்குச் சென்றாள். எந்த வீட்டை அவள் சுடுகாடு போன்றது என்று சொல்லியிருந்தாளோ, அதே வீட்டிற்குத் திரும்பிச் சென்றாள். அது மட்டும் அல்ல; அதைப்பற்றி எனக்குக் கடிதம் எழுதித் தெரிவித்துக்கொண்டிருக்கிறாள். இப்படிப்பட்ட எண்ணங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மனத்தில் தோன்ற, நான் அந்தக் கடிதத்தை முழுதும் படிக்கும் குழப்பத்தில் விழாமல் தூர விட்டெறிந்தேன். பிறகு அந்த அறையில் வெறுமனே அங்கும் இங்கும் சுற்ற ஆரம்பித்தேன். எனது எண்ணங்கள் என் வசத்தில் இருக்கவில்லை. நான் மிகவும் பொறுமையற்றவனாகி உடனேயே அக்காவுக்கு, 'நீ பெரிய தவறைச் செய்துவிட்டாய். எனக்குத் தெரியப்படுத்தவாவது செய்திருக்கலாம். நீ இப்படிச் செய்வாய் என்று கனவிலும்கூடத் தோன்றவில்லை. கடைசியில் உனக்கு இப்படித்தான் செய்யவேண்டும் என்று இருந்திருந்தால், இத்தனை நாட்கள் இப்படிப்பட்ட நாடகம் ஆடுவானேன்? பாட்டி, மாமா, மாமிகள், இராவ்ஜீ முதலியவர்களின் உள்ளத்தைப் புண் படுத்தி, உலகில் கெட்ட பெயரை வாங்கி, வகுப்பொன்று தொடங்குகிறேன் என்று ஆரம்பித்து, இவ்வளவு அட்டகாசங்களையும் செய்வதில் என்ன பொருள் இருந்தது? எத்தனை எத்தனையோ பரிதாபமான பெண்கள் சிற்றின்பத்தில் ஈடுபடும் தத்தம் கணவன்மாரிடம் செருப்படி வாங்கிக்கொண்டு, ஆனால்

மானத்துடன் அவன் வீட்டில் வயிறு வளர்த்துக்கொண்டு, அவன் சொல்லும் அசிங்கமான காரியங்களைச் செய்துகொண்டு, அவன் சொல்லைக் கேட்டு இழிந்த மனிதர்களின் துச்சமான சேவையைக் கூடச் செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களைச் சேர்ந்த ஒருத்தியாக நீயும் ஏன் இருக்கவில்லை?' என்றவாறெல்லாம் ஒரு கடிதம் எழுதினேன்.

மாலையில், நான் எழுதிய கடிதத்தைத் தபால் பெட்டியில் போட்டு வந்தபிறகு அமைதியுடன் யோசித்தவண்ணம் உட்கார்ந்திருந்தபொழுது, சினம் படிப்படியாக இறங்கிக் கொண்டே வந்தது. அதே அளவுக்குப் பொறுமை வளர்ந்து கொண்டே சென்றது. மிகத் துச்சமாகக் கருதி நான் தூக்கி யெறிந்திருந்த அதே கடிதத்தை எடுத்துப் படித்து, தான் செய்த காரியம் சரிதான் என்று சாதிப்பதற்கு என்ன காரணங்களை அவள் கொடுத்திருக்கிறாள் என்று பார்க்கவேண்டும் என்று மனத்தில் தோன்றியது. அதில் பின்வருமாறு எழுதப்பட் டிருந்தது:

'இதைப் படித்து உனக்கு ஆச்சரியம் ஏற்படும். ஆனால் ஆச்சரியம் ஏற்பட ஒரு காரணமும் இல்லை. சூழ்நிலையே அப்படி அமைந்திருக்கிறது. நான் இங்கு வந்து சரியாக நான்கு நாட்கள் ஆகின்றன. வீட்டில் வேறு ஒருவரும் இல்லை. நான் அழைத்ததின் பேரில் சுந்தரி மட்டும் இரண்டு நாட்களுக்குமுன் இங்கு வந்தாள். நான்கு நாட்களுக்கு முன்பு நாங்கள் வகுப்பு வேலையை முடித்துக் கொண்டு ஒரு பெண்ணுக்காக, மாதிரிக்கு என்று, ஒரு தொப்பியின் மேற்பக்கத்தில் நான் இரண்டு பூக்களைப் போட்டுக்கொண் டிருந்தேன். அதற்குள் எங்கள் வீட்டு வேலைக்காரன் ஓடிவந்து, ''கிளம்புங்கள். இப்பொழுது உடனேயே கிளம்பி வீட்டிற்கு வாருங்கள். வீட்டில் யாருமே இல்லை. (பிறகு அவ்விடத்துப் பெயரைச் சொல்லி) பாதி உடம்பில் வாதம் பிடித்துக் கிடக் கிறார்'' என்று சொன்னான். அதைக் கேட்டவுடனேயே எனது உள்ளத்தில் 'சுருக்' என்றது. எனது பலம் எல்லாம் உருகி, எனது கை கால்கள் லொடலொடவென்று நடுங்கலாயின. ''கடவுளே! இப்போது என்னடா செய்வேன்?'' என்ற சொற்கள் வாயிலிருந்து கிளம்ப, நான் அழத் தொடங்கிவிட்டேன். அதற்குள் அண்ணா வெளியிலிருந்து திரும்பி வந்தார். அவரிடமும் அந்த வேலைக்காரன் அதையே சொன்னான். நான் முதலில் போய், ''உண்மைதானா?'' என்று பார்த்து வருகிறேன் என்று

சட்டென்று அந்த வேலைக்காரனுடன் போனார். ஒருவேளை என்னை மாட்ட வைப்பதற்காக இந்த உபாயத்தைச் செய்திருக்கலாம் என்று அவருக்குத் தோன்றியது. ஆனால் தம்பி, மாட்ட வைப்பதற்காகச் செய்த உபாயமாக அது இருக்கவில்லை. வேலைக்காரன் சொன்ன செய்தி வார்த்தைக்கு வார்த்தை உண்மையாக இருந்தது. எங்கேயோ வெளியில் போய்விட்டுத் திரும்பி வந்து வாசற்படியில் கால் வைத்ததுமே, வாதம் தாக்கி விட்டது. வேலைக்காரர்கள் உள்ளே அழைத்துச் செல்ல, ஒருவன் அந்தத் துன்பகரமான செய்தியைச் சொல்ல எங்களிடம் வந்திருக்கிறான். அண்ணா அதை என்னிடம் வந்து சொன்னதும், கணப்பொழுதும் தாமதிக்காமல் சட்டென்று வீட்டுக்குப் போனேன். போனால், அங்கு என்ன பரிதாபமான நிலை! முகத்தைப் பார்க்க முடியவில்லை. இன்றுவரை நடந்த எல்லா விஷயங்களையும் நான் அடியோடு மறந்தேன். எனது உடலெல்லாம் நடுங்கியது. என்னடாப்பா செய்வது என்று ஆகிவிட்டது.

'ஒளியிழந்த கண்களால் என்னை அவர் பார்த்ததும் எனக்கு என்னவெல்லாமோ தோன்றியது. ஆனால் நான் அருகில் இருப்பதைப் பார்த்ததும் ஏதோ ஆறுதல் ஏற்பட்ட அறிகுறி அவர் கண்களில் தெரிந்தது. அண்ணாவும் டாக்டரை அழைத்து வந்து மருந்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறார். நான் இரவும் பகலும் அவர் பக்கத்திலேயே இருக்கிறேன். இடம் விட்டு அசைவதில்லை. வேறு யாரையும் இப்பொழுது வீட்டில் அடி எடுத்து வைக்க விடுவதில்லை. யாரும் வருவதும் இல்லை. இப்பொழுது யார் எதற்காக வரப்போகிறார்கள்? வீடு வழித்துத் துடைத்துவிட்டாற்போல் இருக்கிறது. ஒரு சாதாரணமான பாத்திரமோ, கிழிந்த போர்வையோ ஒன்றுமே இல்லை. இவ்வாறு இருந்தும், இன்று வரை இங்கிருந்து எல்லாவற்றையும் வழித்துச் சென்றவர்களே, இன்று என்னைப்பற்றி இழிவாகப் பேசத் தொடங்கியிருக்கிறார்கள். ''இப்பொழுது சமயம் வாய்த்தது என்று எல்லாவற்றையும் வழித்துச் செல்ல வந்திருக்கிறாள்'' என்று சொல்லுகிறார்கள். இன்னும் சிலர் சொல்கிறார்கள்: ''இவளை இங்கிருந்து அகற்ற வேண்டும். இவ்வளவு நாட்கள் இந்த வீட்டில் காலை வைக்கக் கூடாது என்று இருந்தவள், இப்போது மட்டும் ஏன் வந்தாள்?''

'இன்னும் எத்தனையோ விதங்களில் மக்கள் என்னைப்பற்றிக் கண்டவாறு பேச ஆரம்பித்திருக்கிறார்கள். இவை எல்லாம் காதில் விழத் தொடங்கியிருக்கிறது. ஆனால் நான் அவர்களைச்

சிறிதும் சட்டை செய்வதில்லை. வீட்டை விடுவதில் எனது நோக்கம் என்னவாக இருந்தது, மேலும், நான் எதற்காக வீட்டை விட்டேன் என்பது ஊராருக்கு என்ன தெரியப் போகிறது? நான் படித்தவள்; அதிலும் வீட்டை விட்டு நெறி தவறிச் சென்றவள்போல் நடந்துகொண்டு, அப்பா, மாமா முதலானவர்களின் பேச்சைத் துளியும் கேட்காமல் என் விருப்பத்தின்படி நடந்துகொண்டவள்; குலத்தின் கௌரவத்தைக் காப்பதற்காகவே கோர்ட்டு, கச்சேரி என்று போகவில்லை; என்றாலும் வழி கெட்டுப் போன ஓர் இழிவான பெண்ணைப்போல் கருதப்பட்டேன் நான். அப்படியிருக்க என்னைப் பற்றி மக்கள் என்னதான் கற்பனை செய்து பேசமாட்டார்கள்? வெறும் வாயை மெல்லும் மக்களுக்கு அவல்தானே வேண்டி யிருக்கிறது? இருக்கட்டும். எனக்கு இப்போது ஊராருடன் என்ன பேச்சுவேண்டி இருக்கிறது? இன்றுவரை ஏதோ காரணங் களினால் நான் அவ்வாறு நடந்துகொண்டாலும் (அப்படி நடந்து கொண்டதனால் எனக்கு அணுவளவும் பச்சாத்தாபம் இல்லை; எந்த நிலையில் நான் அவ்வாறு நடந்துகொண்டேனோ, அந்த நிலையில் அவ்வாறு நடந்துகொள்வதே எனக்கு முற்றும் சரியாகப்பட்டது.) இப்பொழுது எனது வைராக்கியத்தை ஒரு பக்கம் அகற்றி வைத்து, எனது தொண்டால் இந்த உயிர் பிழைப்பது முடியக்கூடிய காரியமாக இருந்தால், இரவும் பகலும் தொண்டு புரிந்து, இடையறாது கவனித்துக்கொண்டு அதைப் பிழைக்க வைப்பேன். மக்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும்! எந்தச் சமயத்தில் எது கடமை என்பதை நான் நன்றாக அறிவேன். உன்னைக்கூட இப்பொழுது உடனே கிளம்பி வரச் சொல்லி நான் எழுதுவதாக இருந்தேன். ஆனால் உனக்குப் பரீட்சை மும்முரம். மேலும் அண்ணா எனக்கு எல்லா வகையிலும் உதவியாக இருக்கிறார். ஆகவே உனக்கு ஏன் தொந்தரவு கொடுக்கவேண்டும்? உனது பரீட்சை முடிந்ததும் நீ வரத்தான் போகிறாய். இப்பொழுது இன்னும் எழுத எனக்கு நேரம் இல்லை. மருந்து கொடுக்கும் நேரம் ஆகிவிட்டது.'

இவ்வளவு, எழுதி காபூலி திராட்சை முதலிய பொருள்களை அனுப்பும்படி எழுதியிருந்தாள். கடிதத்தைப் படித்து முடித்ததுமே எனது உள்ளத்தில் 'சுருக்' என்றது. எனக்கு மிகுந்த வேதனை ஏற்பட்டது. அக்காவின் மீதிருந்த எனது நம்பிக்கை முழுதும் மீண்டும் முளைத்தெழுந்தது. நான் எவ்வளவு

அநியாயமாக அவள்மீது குற்றம் சாட்டினேன், எப்படிப் பைத்தியம்போல அவளுக்குக் கடிதம் எழுதினேன், அவள் அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு என்னைப்பற்றி என்ன நினைப்பாள் என்றெல்லாம் மனத்தில் எண்ணினேன். அந்தக் கடிதம் திரும்பிக் கிடைப்பது முடியாத காரியம். தந்தியடித்து அந்தக் கடிதத்தைப் படிக்காதே என்று சொன்னாலும் இனிமேல் சாத்தியமா?

எனது பொறுமையற்ற தன்மைக்காகவும், முட்டாள்தனத்திற்காகவும் என்னை நானே கடிந்துகொண்டேன். மறுநாள் காலையில் நாம் அங்கே போய் முன்னதாக அந்தக் கடிதத்தை அமுக்கிவிடவேண்டும் என்றும் மனத்தில் தோன்றியது. ஆனால் அதுவும் முடியாத காரியமாக இருந்தது. ஏனெனில் மறுநாள் எனக்குப் பம்பாயில் இருக்கவேண்டிய அவசியம் இருந்தது. இப்படிப் பட்ட நிலையில் நான் மிகவும் குழப்பம் அடைந்தேன். மனிதன் மிகவும் குழப்பம் அடைந்தான் என்றால், எப்படி அவன் கையால் ஒரு காரியமும் நடப்பதில்லையோ, அவ்வாறே என்னுடையதும் ஆயிற்று. எண்ணி எண்ணிக் குழம்பிப் போய்க் கடைசியில் நான் செய்வதறியாது போனேன். அந்த முதல் உணர்ச்சி வேகத்தில் நாம் கடிதம் எழுதினோமே, அதையாவது அண்ணாவுக்கோ, அண்ணாவின் விலாசத்துக்கோ எழுதினோமா? சே! நேராக அக்காவின் வீட்டு விலாசத்துக்கு . . . ஏன்? அவள் கையில் அது சென்று அவளை நன்கு உறுத்தவேண்டும் என்றுதான்.

கடைசியில், அவள் கையில் கடிதம் கிடைக்காமல் செய்யும் விஷயத்தில் ஒரு காரியமும் நடக்கவில்லை. எந்தச் சமயத்தில் அவளுக்கு யாரிடமிருந்தாவது அன்பின் ஆறுதல் வேண்டியிருந்ததோ, யாருடைய அன்பின் ஆதாரம் தேவையாக இருந்ததோ, அந்தச் சமயத்தில் அவளுடைய அன்புக்கும் நம்பிக்கைக்கும் காரணமான என்னிடமிருந்து அப்படிப்பட்ட கடிதம் போய் அதனால் அவளது சிதறிய உள்ளத்தின்மீது எத்தகைய பாதிப்பு ஏற்பட்டது என்பதைப்பற்றிய அறிவு, பின்னர் அவளிடமிருந்து எனக்கு வந்த கடிதத்திலிருந்து நான் தெரிந்து கொண்டேன்.

# 50. அக்காவின் கடிதம்

'தம்பி, நீ எனக்கு இந்த மாதிரி கடிதம் எழுதியிருப்பது எனக்கு அளவற்ற ஆச்சரியத்தைக் கொடுத்தது. அளவற்ற வருத்தமும் ஏற்பட்டது. நான் இவ்வளவு விவரமாக எழுதியும் உனக்கு இப்படித் தவருகப் படவேண்டுமா? நான் வீட்டை விட்டேன் என்பதால், அத்துடன் கருணை, பாசம், கடமை, அறிவு முதலிய எல்லா விஷயங்களேயும் விட்டு விட்டேன் என்று ஏன் உனக்குத் தோன்றியது? சே சே, இப்படி நீ எண்ணியிருந் தால் அது முற்றும் தவருகும். ஆனுல் தம்பி, இப்பொழுது வேளேயே இப்படி இருக்கிறது, இங்கு என்னேத் தவிர யாருமே இல்லே. இப்போதுதான் எனது பெண்மைக்கு உண்மையான பரீட்சை! பரீட்சை என்று எதற்குச் சொல்லவேண்டும்? பரீட்சை யாருக்குக் காண்பிக்கவேண்டும்? இது எனது மனத்தின் தன்மை. எனது கடமைகளே நான் செய்யவேண்டும், மேலும் அதைச் செய்வதில் என் மனம் இயற்கையாகவே முனேந்தும் இருக்கிறது. என் விருப்பத்துக்கு எதிராக இருந்தபோதி லும், ஒருமுறை எப்போது உறவு ஏற்பட்டு விட்டதோ, பிறகு அதை இறுதிவரையிலும் பாதுகாக்கவேண்டும். நான் அதைப் பாதுகாக்கவும் செய்வேன். இருந்தும் உனக்கு அது தவருகப் பட்டது என்ருல், விதியை எண்ணித் தலேயில் கை வைத்து உட்காருவதைத் தவிர நான் வேறு ஒன்றும் செய்வதற்கில்லே.'

இதேபோன்று, மேலும் பல்வேறு வார்த்தைகளில், ஆனுல் அதையே திருப்பித் திருப்பி அவள் எழுதியிருந்தாள். என் னுடைய கடிதத்தினுல் அவளுக்கு மிகுந்த வருத்தம் ஏற்பட் டிருக்கவேண்டும் என்பது வெளிப்படையாகவே தெரிந்தது. ஏன் ஏற்படாது? நான் அவளுக்கு அன்புடன் ஏதாவது ஆறுதல் கூறுவேன் என்று அவள் நினேத்திருப்பாள். ஆனுல் என்னிட மிருந்து இப்படி விசித்திரமான கடிதம் சென்ருல் . . . ? பிறகு என்ன? அவளுடைய இந்தக் கடிதத்தைப் படித்து எனக்கு அளவற்ற பச்சாத்தாபம் ஏற்பட்டது.

ஆண்கள் எவ்வளவு பொறுமையற்றவர்கள், இரக்கமற்றவர் கள்! பெண்கள் எவ்வளவு பொறுமை உள்ளவர்கள், இரக்கம் கொண்டவர்கள். அப்படி என் மனத்தில் ஒரு பக்கம் தோன்றி யது. யாரை நான், 'Frailty, thy name is woman' என்று நினைத் திருந்தேனோ அவர்களையே, 'பெண்கள் என்றால் பெருந்தன்மை யின் வடிவமே ஆவார்கள்' என்று சொல்லிக்கொண்டேன்.

அக்காவின் கணவன் எந்த வகையில் அக்காவை நடத்தினாரோ, அந்த வகையில், ஏன், நூறில் ஒரு பாகம் அதேபோல் என்னை நடத்தியிருந்தாலும், நான் மனத்தில் பகை வளர்த்துக் கொண்டு அதற்குப் பழி வாங்கியிருப்பேன்; என்றும் விட்டிருக்க மாட்டேன். ஆனால் அக்கா அவை யாவற்றையும் மறந்து, கடமையே பெரிதென்று எண்ணி, தனது பழிகாரனும், பொல்லா தவனுமான கணவனைக் கவனித்துக்கொள்ளவேண்டும் என்று கணப்போதும் தாமதிக்காமல் ஓடிச் சென்றாள். எனது கடிதத் துக்கும் இந்த வகையிலான பதிலை அனுப்பினாள். அவளுடைய பெருந்தன்மைக்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்?

இதன் பிறகு நான்கைந்து நாட்களில் அண்ணாவின் கடிதமும் வந்தது. கடிதத்தில் ஊரில் நடந்தவற்றையெல்லாம் அவர் எனக்குத் தெரிவித்திருந்தார். அதேபோல அந்தச் சமயத்தில் அக்கா நடந்துகொண்ட முறையைப்பற்றியும் எனக்கு எழுதி னார். அந்தக் கடிதத்தில் கொடுக்கப்பட்டிருந்த விவரங்களை என்னால் இங்கே குறிப்பிடாமல் இருக்கமுடியவில்லை. அவர் எழுதி யிருந்தார்:

'தம்பி, உனது சகோதரியைப் போன்று பொறுமையும், நியாயமும், உறுதியும், பரந்த உள்ளத்தையும் பெற்ற வேறு ஒரு பெண்ணை நான் இன்றுவரை எங்குமே பார்த்ததும் இல்லை, கேட்டதும் இல்லை. அவள் இப்பொழுது இருக்கும் நிலையினின்றும் வேறுபட்ட நிலையில், இன்னொரு நாட்டில் இருந்திருந்தால், மிக உன்னதப் பதவியை அடைந்திருப் பாள். இதில் அணுவளவும் சந்தேகம் இல்லை. கணவன் வீட்டை விட்டு வெளிப்பட்டு, படித்து முன்னேறுவது என்று முடிவு செய்த பொழுது அவளது பிடிவாதத்தை நான் பார்த்தேன். அப் பொழுதிலிருந்தே எனக்கு அவளிடம் மிகுந்த மதிப்பு ஏற்பட்டது. ஆனால், இப்பொழுது குறிப்பிட்ட நிகழ்ச்சியினால் அவள் ஒரு தெய்விகப் பெண்தான் என்று எனக்கு முழுக்க முழுக்க நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. சிறிது நாட்களுக்கு முன்பு

அவளுக்குத் தன் கணவனின் வீட்டை நினைத்து எவ்வளவு வெறுப்பு ஏற்பட்டுக்கொண்டிருந்ததோ, அவற்றையெல்லாம் ஒரு பக்கம் தள்ளி வைத்து, அவள் மிகுந்த அன்புடன் மனைவி என்ற நிலையில் தனது பெண்மையின் கடமைகளைச் செய்து கொண்டிருக்கிறாள். தனது உயிரையே கொடுத்து அவர் உயிரைக் காக்கவும் தயாராக இருக்கிறாள். அவருக்கு இரத்த தானம் கொடுத்தால் அவர் பிழைத்து விடுவார் என்று ஒரு வேளை டாக்டர் அவளிடம் சொன்னாலும்கூட, அவள் தனது இரத்தத்தைக் கொடுப்பதற்குச் சற்றும் தயங்கமாட்டாள் என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியும். தனது உயிரே போனாலும் பரவாயில்லை; ஆனால் கணவன் உயிரைக் காத்துத் தான் ஆகவேண்டும் என்று அவள் உறுதி பூண்டிருக்கிறாள்.'

இங்கு எனது பரீட்சையின் மும்முரம். அங்கிருந்து அக்காவின் கணவனின் உடல் நிலைபற்றி ஆறுதல் அளிக்கும் கடிதங்களே வரவில்லை. நாளுக்கு நாள் அவரது உடல்நிலை மிகவும் மோசமடைந்துகொண்டே வந்தது. கூடவே, அக்கா தனது உடல் நிலை பற்றிச் சிறிதும் பொருட்படுத்தாமலிருக்க ஆரம்பித்திருக்கிறாள் என்று கேட்டு, எனக்கு ஒன்றும் தோன்றாமற் போயிற்று.

# 51. இடையில் நிகழ்ந்தவை

பரீட்சையின் இறுதித் தாள் கையிலிருந்து சென்றதும் அன்று இரவே நான் புறப்பட்டு அக்காவிடம் வந்து சேர்ந்தேன். எல்லாம் அப்படி அப்படியே இருந்தன. அவள் உடல்நிலை மட்டும் மேலும் குன்றிக்கொண்டே வந்தது, அவளுடைய கணவனின் உடல் நிலையில் ஒரு குணமும் தென்படவில்லை. டாக்டர் வருவதும், மருந்து கொடுப்பதும் நடந்துகொண்டே இருந்தது. இப்பொழுது மேற்கொண்டு என்ன ஆகும் என்று சொல்வது மிகவும் கடினமாக இருந்தது. அவனுக்கு நினைவு ஒன்றும் இருக்கவில்லை. யாராவது இழுத்து வாயைப் பிடித்துத் திறந்துதான் மருந்து, பால் ஆகாரம் கொடுக்கவேண்டி யிருந்தது. நல்லதோ, பொல்லாததோ எந்த விதமான மாறுதலும் இல்லை. முதல் நாள் இருந்ததுபோலவே நிலைமை மாறுதலின்றித் தொடர்ந்து இருந்து வருகிறது என்று டாக்டர் சொன்னார். அவர் அக்காவைச் சுட்டிக் காட்டி என்னிடம் மெதுவாகச் சொன்னார்: 'அவர் இப்படிப் பணிவிடை செய்யவில்லை என்றால், நோயுற்று விழுந்த மூன்றே நாட்களுக்குள் அவருடைய முடிவு ஏற்பட்டிருந்திருக்கும். எங்கள் மருந்தினாலும் இல்லை, வேறு எதனாலும் இல்லை. இவருடைய கவனிப்பினாலும், மிகுந்த விசித்திரமான பணிவிடையாலுந்தான் அவர் இவ்வளவு நாள் பிழைத்திருக்கிறார். எங்களை இங்கு வைத்திருந்தால்கூட, எங்களால் இவ்வளவு சிறந்த ஏற்பாடு செய்திருக்கமுடியாது!'

இப்படிப்பட்ட நிலையில் மேலும் சுமார் பதினைந்து, இருபது நாட்கள் கடந்து சென்றன. நான் பயந்ததுபோலவே, அக்கா நோயுற்றாள். அப்படியிருந்தும் அவள் தனது வேதனைகளை ஒருபக்கம் ஒதுக்கி வைத்துக் கடமையென்று தான் மேற்கொண்ட காரியங்களுக்காக எழுந்துவிடுவாள். போகப் போக அவள் படுத்த படுக்கையானாள். இவ்வாறு நடக்கப் போகிறது என்பது எங்களுக்கு முன்பே தெரிந்திருந்தது. இங்கு அக்கா, அங்கு அவள் கணவன்—இருவரும் படுக்கையில் கிடந்தார்கள். அக்காவின் உடம்பில் எழுந்து நடமாடுவதற்குச்

சக்தி இருக்கவில்லை. ஆனால் படுத்த படுக்கையிலிருந்தே தன் கணவனின் மருந்து—உணவுபற்றிக் கேட்டு அறிவாள். தானே மருந்து உட்கொள்ளும் நிலையில் இருந்தாள்; ஆனால் அந்த நிலையிலும் அவனைப்பற்றிய விசாரணையும், கவலையுந்தான்.

இதைக் கண்டதும் என் மனத்தில் மிக விசித்திரமான எண்ணங்கள் எழத் தொடங்கின. அவை என்ன என்பதை நான் தெளிவாகச் சொல்லப் போகிறேன். ஆனால் அதைக் கேட்டுச் சிலருக்கு என்னுடைய கொடூரம் என்று சொல்லுங்கள் அல்லது சுயநலம் என்று சொல்லுங்கள், அதை எண்ணி மிகுந்த வியப்பு ஏற்படும்.

இப்போது இந்த ஆள் தன் காரியத்தை முடித்துக்கொண்டு விட்டால் நல்லது என்று நான் எண்ணலானேன். அவன் பிழைப்பான் என்ற நம்பிக்கை இப்பொழுது இருக்கவில்லை. உடல் நிலை தேறினாலும் எழுந்து நடமாடுவது முடியாத காரியம் என்று டாக்டர் சொன்னார். என்றாலும் இன்று இருக்கும் நிலையிலேயே இன்னும் ஐந்தாறு மாதங்கள் அல்லது பெரும்பாலும் ஓர் ஆண்டுவரைகூடப் பிழைத்திருப்பார். இப்படிப்பட்ட நிலையில் பிழைத்திருப்பதில் அவனுக்கு அணுவளவும் பயன் இருக்கவில்லை. ஆனால் அக்காவுக்கு மட்டும் அளவற்ற துன்பம் இருந்தது. அந்தக் கவலை நீங்கிவிட்டால் எப்படியாவது அவள் உள்ளத்தை அமைதிப்படுத்தி அவளைச் சரியாக்கலாம் என்று தோன்றியது. 'என் சகோதரியைத் தொல்லைப்படுத்திப் பழி வாங்கி, இறுதியில் அவள் சாவுக்கும் காரணம் ஆகும் அத்திம்பேர் மரணத்தை எட்டியிருக்கும்போது, அவன் இறந்தாலே நல்லது' என்று ஒருவன் நினைப்பதில் என்ன தவறு? எனக்கு அதில் எந்தத் தவறும் இருப்பதாகத் தோன்றவில்லை.

எவ்வளவோ நாட்கள் இதே நிலை தொடர்ந்து இருந்து வந்தது. ஒருவருக்கும் ஒன்றும் தோன்றாமல் ஆயிற்று. அக்கா மனம் விரும்பி மருந்தொன்றும் சாப்பிடவில்லை. ஆனால், அவள் கணவனின் உடல் நிலையில் எந்தவிதமான மாறுதலும் காணப்படவில்லை. இப்படிப்பட்ட நிலையில் நாங்கள் மிகவும் கலங்கிவிட்டோம். நாட்கள் எப்படியோ கடந்துகொண்டிருந்தன. ஒன்றரை மாதம் சென்றது. எனது பரீட்சை முடிவு வெளிப்பட்டது. நான் மிக நல்ல முறையில் தேறியிருந்தேன்.

இப்போது நான் விரும்பியபடி பல காரியங்களைச் செய்வதிலும் அக்கா, சுந்தரி ஆகியோர் செய்யும் காரியத்தில் உதவி செய்வதிலும் ஒரு தடையும் இல்லை. ஆனால் இந்த இடைக்

காலத்தில் இவ்வாறு ஒரு விசித்திரத் தடை ஏற்பட்டு விட்டிருந்தது. அவன், பாவம் முன்போல் நல்ல உடல் நிலையுடன் இருந்தால், அக்காவின்பாடு திண்டாட்டந்தான். ஆனால் இப்பொழுது விசித்திரமான நிலை ஏற்பட்டிருந்தது. மூன்று மாதங்கள் ஆயின; நான்கு மாதங்கள் ஆயின. அக்காவின் உடல் நிலை இன்னும் மோசமாகியது. அவளுக்கு க்ஷயரோகம் பீடித்திருப்பதன் அறிகுறிகள் தென்படலாயின. இங்கே அவள் கணவன் அப்படியே கிடந்தான். ஏதாவது ஒரு கடும் பகைமையைத் தீர்த்துக்கொள்பவன் உறுதியுடன் ஏதாவது செய்து கொண்டிருக்கவேண்டும் என்ற வகையில் அவனுடையது நடந்து கொண்டிருந்தது என்று எங்களுக்குத் தோன்றியது.

ஆனால், இதே போன்ற நிலை எவ்வளவு நாள் நீடிக்கும்? மேலும் சில நாட்களுக்குப் பிறகு, ஒரு நாள் சூரியன் மறைகிற நேரத்துக்கு அவன் காலமானான். அந்தச் செய்தியைக் கேட்டு அக்காவுக்கு எவ்வளவு வருத்தம் ஏற்பட்டது, அவள் எவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்தாள் என்பதை நான் இங்கு விவரிக்கப் போவதில்லை. ஏனெனில், இந்த விவரங்களைப் படித்து அதைப் பற்றி எவ்வளவு அறிந்துகொள்ளமுடியுமோ, அதைவிட அதிகமாக வாசகர்களுக்கு இதுவரை தாங்கள் படித்திருப்பதைக் கொண்டு அறிந்துகொள்வது எளிதாகும்.

'இப்பொழுது இந்தச் சோகத்தினால் அவளுடைய உடல்நிலை பயங்கரமான முறையில் பாதிக்கப்படுமோ என்னவோ?' என்று நாங்கள் பயந்திருந்தோம். ஆனால் எங்களுடைய நற்காலத்தினால் அப்படி ஒன்றும் நடக்கவில்லை. நாங்கள் கவனித்துக் கொண்ட முறையினால் என்று சொல்லுங்கள் அல்லது அவளுக்கே தோன்றிய நல்லறிவினால் என்று சொன்னாலும் சரி, அவள் குணமடைந்துகொண்டே வந்தாள். அவள் உடல் நிலை விரைவாகத் தேறிக்கொண்டே வந்தது. இதைப் பார்த்து அண்ணா, சுந்தரி, சுந்தரியின் தாய், நான் ஆகிய எல்லாரும் மிக மிக மகிழ்ந்தோம். அக்கா, சுந்தரி இருவரிடமும் படிப்பதற்காக வரத் தொடங்கியிருந்த இரு மாணவிகளும் அவளைப் பார்ப்பதற்காக வந்திருந்தார்கள். அவளுக்கு ஆறுதல் கூறினார்கள். அவர்களைப் பார்த்ததிலிருந்து அவள் மனத்தில் உற்சாகம் ஏற்பட்டதாக எனக்குத் தோன்றியது. சில நாட்களுக்கு முன்பு தான் தொடங்கியிருந்த காரியத்தைத் தொடர்ந்து நடத்துவதில் தனது வாழ்நாட்களைச் செலவழிக்கவேண்டும் என்றும்

அவள் மனத்தில் தோன்றி, தனது உடல் நிலையைத் தேற்றிக்கொள்ளும் உற்சாகத்தை அடைந்திருப்பாள். எங்கள் பேச்சு, கூட்டுறவைவிட, அந்த இரு பெண்களின் பேச்சும் கூட்டுறவும் அவள் உள்ளத்தில் சிறந்த மாறுதலை ஏற்படுத்தின என்பதில் சந்தேகம் இல்லை. அவள் இப்பொழுதெல்லாம் பேசுவதைக்கூடக் குறைத்துக்கொண்டிருந்தாள். அவளைப் பேச வைப்பதற்காக நாங்கள் பலமுறையிலும் முயன்று பார்ப்பதுண்டு. ஆனால் ஒரு சில சமயங்களில் புன்னகை செய்வதைத் தவிர அல்லது 'ம்', 'ஆமாம்' என்ற சொற்களைச் சொல்வதைத் தவிர, அவள் வேறு ஒன்றுமே செய்யவில்லை. எப்பொழுது பார்த்தாலும் அவள் ஏதோ சிந்தனையில் மூழ்கியவளாகக் காணப்பட்டாள்.

எனது பரீட்சை முடிந்துவிட்டதால், இப்பொழுது இன்ன வேலையில் ஈடுபடுவதற்குமுன் இன்ன காரியம் முடிய வேண்டியது மிகுந்திருக்கிறது, அது முடிந்தால் ஒழிய இன்னது செய்யக்கூடாது அல்லது செய்வது முடியாது என்ற கட்டுப்பாடுகள் எதுவும் எனக்கு இல்லை.

இறுதியில் ஒருவாறாக இடைக்காலத்தில் ஏற்பட்ட எல்லாத் துன்பங்களும் நீங்கி, நாங்கள் மீண்டும் பழையபடி தத்தம் விருப்பப்படி மக்களின் சேவையில் ஈடுபடுவதற்கேற்ற சூழ்நிலை உருவாகியிருந்தது. அக்காவின் உடல்நிலை மட்டும் முதலில் இருந்த நிலைக்கு வரவேண்டியிருந்தது. அது முற்றும் பழைய நிலைக்கு வருமோ வராதோ என்பதுபற்றிச் சந்தேகம் ஏற்பட்டது. ஆனால் அவள் மனத்தின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்குப் போதுமான அளவு உடல்நிலை தேறுவதற்கு அதிக காலம் பிடிக்கவில்லை. அவள் உடல்நிலை அதைவிடத் துரிதமாகக்கூடச் சீரடைந்திருக்கும். ஆனால் இடையில் கணவனின் கடன்காரர்களும் மிகுந்த தொல்லை கொடுக்க ஆரம்பித்தார்கள். குடிப் பழக்கத்தினாலும், தீயப் பழக்கங்கள் கொண்டவர்கள் மற்றும் பலமுறைகளிலும் கெடுத்ததனாலும், அவர் ஏராளமாகக் கடன் வாங்கியிருந்தார். அவருடைய வாழ்வுக் காலத்திலேயே இடையறாது அதைத் திருப்பிக் கேட்கத் தொடங்கியிருந்தார்கள். ஆனால் அப்போது ஏதாவது காரணங்களைச் சொல்லி அவர்களைத் தட்டிக் கழிக்க முடிந்துகொண்டிருந்தது. இப்பொழுது அப்படிப்பட்ட வழி ஒன்றும் இருக்கவில்லை. இருந்தபோதிலும் நான் அமைதியோடு எல்லா

விவரங்களும் தயார் செய்து, கொடுக்கவேண்டியது வரவேண்டியதுபற்றி அனுமானம் செய்தேன். கொடுக்கவேண்டியதுதான் அதிகமாக இருந்தது; வரவேண்டியது மிகவும் குறைவாக இருந்தது. ஆகவே, வரவேண்டிய தொகைபற்றிய கணக்கு ஒரு பயனும் தரக்கூடியதாக இருக்கவில்லை. யாராவது நேர்மையுடன் தருவார்களா, இல்லையா என்பதும் சந்தேகந்தான்.

இறுதியில் வீட்டில் இருந்த சில நகை நட்டுகள், பண்டம் பாத்திரங்கள் எல்லாவற்றையும் விற்றுவிட்டு எப்படியோ ஒரு வகையில் கடனை அடைத்துவிட்டோம். வீட்டை விற்க வேண்டிய நிலையும் வந்தது. அக்காவுக்குத் தனக்கென்று ஒன்றுமே மிஞ்சியிருக்கவில்லை. இதற்கும் மேலாக அந்தப் பாவி மனிதன் தூண்டுதல்களினால் முன்னோர் சொத்தான நிலத்தின்மீதும் உரிமை கொண்டாடிக்கொண்டு தம்பி முறையில் ஒருவன் சண்டைக்காக வந்திருந்தது முற்றிலும் வேறு விஷயம். இவ்வளவு துன்பத்தில் சிறிதளவு இன்பம் என்னவென்றால், ஓராண்டிற்குள்ளேயே அக்காவின் தலைமீதிருந்த அந்தத் தொல்லைகள் எல்லாம் விடுபட்டு அவளுக்கு வீடு மட்டும் தங்கியது. வேறு என்ன இனமான நிலம் இருந்ததோ, அதிலிருந்து அவளுக்குச் சேரவேண்டிய உணவுப் பொருள் கிடைக்கலாயிற்று. மற்றவை எல்லாம் அடமானமாகக் கிடந்து கடனை அடைப்பதில் பயன்பட்டன.

# 52. ஊரார் வாய்

ஒரு சின்னஞ்சிறு வீடு இருந்தது. அந்த வீட்டின் வாசலில் ஒரு பலகை தொங்கிக்கொண்டிருந்தது. அந்தப் பலகையின்மீது ஓர் ஆளின் பெயரும் அதைத் தொடர்ந்து பி.ஏ., எல்.எல்.பி. என்ற எழுத்துக்களும், பிறகு கீழே ஒரு வரியில் வக்கீல், ஹைகோர்ட்டு—பம்பாய் என்ற எழுத்துக்களும் இருந்தன. வீட்டில் இருப்பவர்கள் ஐந்து பேர். ஆனால் தற்போதைக்கு ஓர் அறையில் உட்கார்ந்திருக்கும் மூன்று மனிதர்களே நாம் கவனிக்கப் போகிறவர்கள். இந்த மூன்று பேர்களில் ஓர் இளைஞரும், இவரைவிடச் சற்றும் பெரிய இளம் பெண்ணும், மிகுந்த வயதான ஓர் அம்மாளும் இருந்தார்கள். அவர்களுக்கிடையே ஏதோ விசித்திரமான பேச்சு நடந்துகொண்டிருந்தது. பெரும்பாலும் மூவரில் ஒவ்வொருவர் உள்ளத்துக்கும் இன்னலைக் கொடுக்கும்படியான பொருளைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந்திருக்கவேண்டும் என்று தோன்றியது. ஏனெனில் மூவரில் ஒவ்வொருவர் முகத்திலும் சினம், வருத்தம், எரிச்சல் இப்படி ஏதாவது ஓர் உணர்ச்சி தென்பட்டுக்கொண்டிருந்தது. அந்த ஆணின் நெற்றியில் சுருக்கங்கள் ஏற்பட்டிருந்தன. இளம் பெண்ணின் முகத்தோற்றம் விவரிக்கமுடியாத அளவுக்கு விசித்திரமாக மாறியிருந்தது. முதிய அம்மாளின் முகம் ஓரளவு பரிதாபகரமாக, ஓரளவு துன்புற்றதாக, ஓரளவு சினங்கொண்டதாக, ஓரளவு வருத்தம் அடைந்ததாகக் காணப்பட்டது. முதலில் ஏதோ பேச்சு நடந்து முடிந்த பின்னர் இக்குழு இடையில் சற்று நேரம் மௌனமாக இருந்தது. இப்பொழுது முதலில் யார் பேசுவது என்பதுபற்றி அவர்கள் யோசனையில் ஆழ்ந்திருந்தது போலத் தோன்றியது. அந்த முதிய அம்மாள் தனக்குத்தானே ஏதோ முணுமுணுத்துக்கொண்டாள். பிறகு மெள்ள அந்த இளைஞன் பக்கம் பார்வையைத் திருப்பிச் சொன்னாள்:

'தம்பி, இது நல்லது அல்லடா, நல்லதல்ல. அடே, நீ இவ்வளவு பெரிய மனிதன் ஆகிவிடுவாய், எங்களுக்கு இப்படிப் பட்ட நாட்கள் வரும் என்று என்றுமே தோன்றவில்லை. மேலும் அப்படிப்பட்ட நாட்களைப் பார்த்து நாம் இன்பத்தில்

மூழ்கியிருக்கும் நேரம் வந்திருக்கும்பொழுது, உனக்கு இப்படியெல்லாம் தோன்றுவது நன்முக இல்லே. இன்று உன் தாய் இருந்திருந்தால் எவ்வளவு ஆனந்தம் அடைந்திருப்பாள்? ஆனுல் இன்று அவள் இல்லே என்பது நல்லதாகப் போயிற்று என்று நான் சொல்கிறேன். அவளுக்கு முன்னுல் நான் சாகவில்லேயே என்பதுதான் என் வருத்தம். அவள் இருக்கும்போது நீங்கள் இதைச் செய்திருந்தீர்களேயானுல், அவள் ஒரு கணமும் தன் உயிரை வைத்துக்கொண்டிருந்திருக்கமாட்டாள். நான்தான் பாழாய்ப் போனவள் எங்கிருந்து பிழைத்தேனே புரியவில்லே! உங்கள் அரண்மனேயில் அவளுக்கு ஒரு சுகமும் கிடைத்திருக்காது. கணவன் என்றும் ஒரு சுகமும் கொடுக்கவில்லே. அந்த வகையில் அவர் மிகவும் பாடுபடுத்தினுர். நீங்கள் இந்த வகையில் படுத்தியிருப்பீர்கள். எல்லாம் சேர்ந்து ஒன்றுபோல்தானே! தம்பி, எங்களே யாரும் வெளியில் முகத்தைக் காண்பிக்க விடுவதில்லே. ஏன் உங்களுக்கு இத்தனே நீசத்தனம் வந்திருக்கிறது? ஏன் இந்தப் பாழ் எண்ணம் உனக்கு?'

'பாட்டி, நான் அப்படி என்னதான் செய்தேன்? யார் வீட்டிலாவது திருடினேனு, எங்கேயாவது கன்னம் வைத்தேனு, இல்லே, என்னேக் கொலேக் குற்றவாளி எனக் கருதித் தூக்குத் தண்டனேக்கு ஆளாக்கியிருக்கிருர்களா? உங்களுக்கு வெளியில் தலேகாட்ட முடியாதபடியும், நீசத்தனமானதுமான காரியம் நான் என்னதான் செய்திருக்கிறேன் என்று சொல். உங்கள் மானம் போகும்படி நான் என்ன செய்திருக்கிறேன் என்று சொல்.'

'அவை எல்லாம் செய்திருந்தால்கூடப் பரவாயில்லே. ஆச்சு, அவன் தலேயெழுத்தே அவ்வளவுதான்; அதற்கு யார் என்ன செய்யமுடியும் என்று எல்லாரும் சொல்லியிருப்பார்கள். ஆனுல் இவ்வளவு பெயரும் புகழும் சம்பாதித்த பின்னர் இப்படிச் செய்வது என்முல்...? நமது ஏழு வம்சத்திலும் யாரும் என்றும் இப்படிப்பட்ட இழிவான காரியங்களேப் பார்த்திருக்கமாட்டார்கள். அடே, இன்றுவரை நான் ஒன்றும் பேசவில்லே, என்ன வேண்டுமானுலும் செய்துகொண்டு போகட்டும் என்று விட்டுக் கொடுத்தேன். ஆனுல் இப்போது என்னுல் இனிப் பேசாமல் இருக்கமுடியாது என்று ஆகிவிட்டது. எனவே இப்பொழுது என்னவாவது சொல்லி எப்படியாவது உங்களே வழிக்குக் கொண்டு வரவேண்டும் என்று கிளம்பி வந்தேன்.'

'எங்களுக்கு என்ன சொல்லுவது? எங்களை என்ன வழிக்குக் கொண்டு வருவது? நாங்கள் வழி தவறியிருந்தால்தானே நீ எங்களை வழிக்குக் கொண்டு வருவதற்கு? நீ வந்தது ரொம்ப நல்லதாகப் போயிற்று. நாங்கள் எவ்வளவு சிறந்த முறையில் நடந்துகொள்கிறோம் என்பதாவது உனக்குத் தெரியவரும். ஒரு முறை உன் மனத்துக்கு நம்பிக்கை ஏற்படட்டும்!'

'அடே, என்ன நல்ல முறையில் நடந்துகொள்கிறீர்கள்? நீங்கள் உங்களுடைய கருத்துப்படி ரொம்பவும் நன்றாக நடந்து கொண்டாலும், ஊராருக்கு அப்படித் தோன்றவேண்டாமா? ஊரார் எல்லாரும் ''சீ, தூ'' என்கிறார்கள்!'

'ஆனால், நீ கண்ணெதிரில் காணப்போவது உண்மையா, இல்லை, ஊரார் சொல்வது உண்மையா?'

'ஊரார் வந்து பொய்யா சொல்லப் போகிறார்கள்? சரி, அது தொலைந்து போகட்டும். ஊரார் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். ஆனால் நீங்கள் இனியாவது தத்தம் முறையில் ஒழுங்காக நடந்துகொள்ளுங்கள்.'

'மீண்டும் நீங்கள் சொன்னதையே சொல்கிறீர்கள்! பாட்டி, நாங்கள் அணுவளவும் வழிதவறி நடந்துகொள்ளவில்லை. மிகச் சிறந்த முறையில் நடந்துகொள்கிறோம். நீ யாரோ, ஏதோ சொல்கிறார்களென்பதற்காக அதை நம்பிக் குழம்பக்கூடாது.'

ஆனால் பாட்டிக்கு எங்கிருந்து நம்பிக்கை ஏற்படப் போகிறது? அவள் மனத்தில் ஊரார் சொன்ன தகாத பொய்யும் புரட்டு மான செய்திகள் நிறைந்திருந்தன.

மேற்கூறிய பேச்சு வார்த்தை யார் யாருக்கிடையே நடந்து கொண்டிருந்தது, அந்தப் பலகை தொங்கிக்கொண்டிருந்த வீட்டின் அறையில், உட்கார்ந்திருந்த மூவரும் யார் யார் என்பது வாசகர்களின் கவனத்துக்கு வந்திருக்கும். அக்காவின் வாழ்வில் மேற்கூறிய துன்பகரமான சம்பவம் நிகழ்ந்த பின்னர், உடனேயே அநேகமாகப் பாட்டி வருவாள் என்று நாங்கள் எண்ணியிருந்தோம். ஆனால் எதிர்பார்த்தபடி நிகழவில்லை. எங்கள் குழு எப்படிப்பட்டதோ, மேலும் அப்படிப்பட்ட நேரத்தில் இவ்வாறு யாராகிலும் வந்து தொல்லை கொடுத்தால் என்ன செய்வது என்பதுபற்றி ஒன்றும் நிச்சயமாகச் சொல்லமுடியாது என்று நினைத்துத்தானோ என்னவோ, மாமா பாட்டியை இங்கு வர விடவில்லை. இருந்தபோதிலும் பாட்டியின் ஆர்வம் அளவற்றுப் போனதுடன், அக்காவின் கணவன் இறந்த பின்னர்

ஊரார் இல்லாததும் பொல்லாததும் பரப்பினர். அவை அவள் காதில் விழுந்தன. பிறகென்ன? அவள் மிகவும் பிடிவாதம் செய்தாள். மாமாவும் மாமியும் வேண்டாம், வேண்டாம் என்று சொல்லியும் பிடிவாதமாக எங்களிடம் புறப்பட்டு வந்தாள். வந்த அன்றே, உணவுகூட அருந்தாமல் அவள் என்னையும், அக்காவையும் மேற்கூறிய அறைக்கு அழைத்துச் சென்று எங்களைத் திட்டவும், எங்களுக்கு அறிவு புகட்டவும் தொடங்கினுள். அவள் எவ்வளவோ அழுதாள், எவ்வளவோ ஆர்ப்பாட்டம் செய்தாள். ஆனுல் அவள் என்ன சொல்ல விரும்புகிருள், எந்த விஷயத்தில் நாங்கள் நடந்துகொள்ளும் முறை சரியில்லை என்று கேள்விப்பட்டு அவள் வந்திருக்கிருள் என்பதை எங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை.

நான் அவற்றைத் தர்க்கத்திஞல் ஊகித்து அறிந்தேன். ஆனுல் நாமாகவே எதற்கு அதைச் சொல்லவேண்டும் என்று எண்ணி, அதைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசாமல், அவள் பேசுவதையெல்லாம் கேட்டுக்கொண்டு, மேற்கூறிய வண்ணம் இடையிடையில் நானும் அவளிடம் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தேன். ஆனுல் நாங்கள் சொன்னதைக் கேட்டு அவளா ஆறுதல் கொள்பவள்! சிறிது நேரத்துக்கு முன்புதான் இரயிலிலிருந்து அவள் வந்திருந்தாள். மிகவும் களைத்துப் போயிருந்தாள் என்பதனுல் முதலில் குளித்துச் சாப்பிட்ட பின்னர் பேசலாம் என்று பலவாருக நாங்கள் அவளுக்குச் சொல்லிப் பார்த்தோம். ஆனுல் அவள் கேட்கவேயில்லை. அவள் சொன்னுள்: 'நீங்கள் இந்த மாதிரி செய்வதை விட்டு, நல்ல முறையில் நடந்துகொள்ள இணங்கவில்லை என்ருல், நான் இப்பொழுது உட்கார்ந்த இடத்திலேயே உண்ணுவிரதம் இருந்து உயிர் துறப்பேன்!' என்ன சொன்னுலும் அவள் ஒன்றும் கேட்கவில்லை. 'நாங்கள் கெட்ட வழியில் நடந்துகொள்கிருேம் என்ருல் அதற்குப் பொருள் என்ன?' என்று கேட்டால், அதற்கும் ஒன்றும் சொல்லவில்லை. இப்பொழுது என்ன செய்வது என்று நாங்கள் மிகவும் கவலைப்பட ஆரம்பித்தோம். அக்கா கீழேயே பார்த்தவண்ணம் கண்ணீரைப் பெருக்கியவாறு உட்கார்ந்திருந்தாள். இடையிடையே ஒரு வெறுமையான பார்வையை என்மேல் வீசினுள்.

இறுதியில் நான் மிகவும் துன்புற்றேன். கண்மூடித்தனமாக, 'இனி நாங்கள் தவருன வழியில் நடந்துகொள்ளாமல் நீ சொல்கிறபடியே நடந்துகொள்கிருேம்' என்று அவளுக்கு

வாக்குக் கொடுப்பதோ, இல்லை, அவ்வாறு சொல்வதோ என் மனத்திற்கு அடியோடு பிடிக்கவில்லை. ஏனெனில் அவளுக்குத் தீயவை எனத் தோன்றிய காரியங்களைச் செய்யாமல் இருப்பது என்றால் முடியாத காரியமாக இருந்தது. ஆகவே இவற்றை யெல்லாம் யோசித்துப் பார்த்து நான் பாட்டியிடம் அமைதி யுடன் சொன்னேன்: 'பாட்டி, இப்படி வெறுமனே கவலைப்படு வதினால் என்ன ஆகப்போகிறது? உன்னிடம் யாரோ எங்களைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறார்களோ, அதை நீ எங்களுக்குத் தெளிவாகத் தெரிவித்தால்தான் நாங்கள் உனக்கு ஏதாவது சொல்லமுடியும். அதைச் சொல்லாமல் நீ பாட்டுக்கு வெறு மனே, "நீங்கள் இப்படிச் செய்கிறீர்கள், அப்படி நடந்துகொள்கி றீர்கள்!" என்று சொல்லி உன் மனத்தை வருத்திக்கொண்டால் பிறகு என்ன செய்வது? நீ சாப்பிடுவதற்கு எழுந்திருக்கப் போவ தில்லை என்றால், நாங்களும் எழுந்திருக்கப் போவதில்லை!'

இவ்வளவு பேசி நான் மௌனம் ஆனேன். வயதானவர்களின் பிடிவாதம் என்றால் சிறு விஷயமல்ல என்பதை அந்தச் சமயத்தில் நான் நன்கு உணர்ந்தேன். முன்பு ஓரிரு முறை எனது சம வயதின ரான ஓரிரு நண்பர்கள் இன்ன வேலையைச் செய்யவேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்தும், பின்னர் அதைச் செய்யாமற் போனதற்குக் காரணம் வீட்டிலிருக்கும் வயது முதிர்ந்த பெரி யோர்கள், அதிலும் முக்கியமாக வயதான அம்மா, பாட்டி இவர்கள் என்று சொன்னபொழுது, எனக்கு அது அவர்க ளுடைய கோழைத்தனமாகவும், மன பலவீனமாகவுமே தோன்றி யிருந்தது. நான் அதற்காக அவர்களைக் கடிந்துகொள்ளவும் செய்திருக்கிறேன். 'உங்கள் உடலில் தைரியம் கிடையாது. உங்களுக்குப் பணத்தின் ஆசையை விடமுடிவதில்லை. நீங்கள் வீண் சாக்குப் போக்குச் சொல்லுகிறீர்கள்' என்றவாறு நான் பலவிதமாக அவர்கள்மீது சொல்லடியைப் பிரயோகித்திருக் கிறேன். ஆனால் இன்று பாட்டியின் நச்சரிப்பைக் கண்டு, எனது உள்ளத்தின் நிலை எப்படி என்ன ஆயிற்று என்பதை நான் அலசிப் பார்க்கலானேன்.

அப்போது மனிதன் தன் விருப்பத்துக்கு எதிராக நடந்து கொள்வதற்கு, வெறும் பணத்தின் ஆசை அல்லது கோழைத் தனம் மட்டுமே காரணமாக ஆவதில்லை என்று எனக்கே தோன்ற லாயிற்று. யார் குழந்தைப் பருவத்திலிருந்தே நம்மை அளவற்ற அன்புடன் வளர்த்தார்களோ, யாருடைய கட்டளையை நிறை

வேற்றுவதிலும், நமது சொந்த விருப்பம் அவர்களுடைய மனத்துக்கு எதிராக இருக்குமாளுலும் அதை அடக்கி வைப்பதிலும் நமது குழந்தைப் பருவம் கழிந்ததோ, அவர்கள் எந்த ஒரு விஷயத்துக்காகவும் பிடிவாதம் பிடித்து, அதற்காக நச்சரிக்கவும் ஆரம்பித்துவிட்டால், நாம் நமது உள்ளத்தை அடக்கிக் கொண்டு, அவர்கள் விருப்பத்துக்கு ஏற்றவாறு செய்வதற்கு முனைந்துவிடுகிறேம். இது உள்ளத்தின் இரகசியமான அன்பின் காரணமாக ஏற்படுவதாகும். அந்த அன்பை தூர விலக்கி விடுவது மிகவும் கடினமான காரியமாகும். அதிலும் அதைத் தூர விலக்கி அவருடைய உள்ளத்தைப் புண்படுத்துவது என்பது நன்றி கொன்ற குற்றத்திற்கு ஆளாவதாக ஆகும் என்று நமது உள்ளமே நமக்குச் சொல்ல ஆரம்பிக்கிறது.

குறைந்தபட்சம் எனது நிலை அப்படி ஆயிற்று. மேலும் நான் தெளிவாகச் சொல்கிறேன், பாட்டி எங்களிடம் புதிர்போடுவது போல், ‘நீங்கள் உங்களுடைய பழக்கங்களை விட்டு விடுங்கள்’ என்று சொல்லாமல், இன்னது செய்கிறீர்கள், அதை இனிமேல் செய்வதை விட்டுவிடுங்கள் என்று தெளிவாகச் சொல்லியிருந்தால், அந்தச் சமயத்தில் இருந்த மனோநிலையில், நாளுவது குறைந்தபட்சம் வேறு ஏதாவது ஒரு விஷயத்தைச் சட்டென்று ஒத்துக்கொண் டிருந்திருப்பேன். ஆளுல் நல்ல காலமாக, அவள் எல்லாவற்றையும் புதிர்போல் சொல்லி, மொத்தத்தில் எங்களுடைய பழக்கத்துக்காக எங்களைக் குற்றம் சாட்டிக்கொண்டிருந்தாள். அதளுல் எங்களுக்கு நினைத்தபடி வேண்டியதைச் சொல்லித் தட்டிக் கழிக்க முடிந்தது. அதிலும் இறுதியில் எனது பேச்சில் இருந்த உறுதியைக் கண்டு அவளுக்கும் ஏதோ விசித்திரமாகப் பட்டிருக்கவேண்டும். அவள் உடனேயே சிறிது மென்மையடைந்து என்னிடம் சொன்ளுள்: ‘பின் இது என்னடா இது? ஊரார் உன்னைப்பற்றி இல்லாததும் பொல்லாததும் வந்து சொல்கிருர்களே! நீங்கள் எங்களைச் சேர்ந்தவர்கள்; அப்படியிருக்கும் உங்களைப்பற்றி, அதுவும் இவ்வளவு பெயரும் புகழும் அடைந்த பின்னர், பல்வேறு வகைகளில் ஊரார் எங்களிடம் வந்து சொன்ளுல் எங்களுக்கு வருத்தமாக இருக்காதா? மனத்தில் கோபம் வராதா? சொல்லு நீயே!’

‘வரும். ஊரார் ஏதாவது தாறுமாருக வந்து சொன்ளுல், மனத்தில் வருத்தம் ஏற்படும், கோபம் வரும். ஆளுல் ஊரார் வந்து சொல்வது உண்மையாகவே கெட்டதா, நல்லதா,

உண்மையா, பொய்யா என்பதைப்பற்றி நாம் எண்ணிப் பார்க்க வேண்டாமா, பாட்டி? நம் குழந்தைகளைப்பற்றி ஊரார் ஏதேனும் பொல்லாததைச் சொன்னார்களோ, இல்லையோ, உடனேயே போய் அவர்களைச் சினந்து கடிந்துகொள்ள வேண்டுமா?'

'உனக்கு முன்னால் எனக்குப் பேசத் தெரியவில்லையப்பா! நீ இப்பொழுது பெரிய வக்கீல் ஆகிவிட்டாய். ஆனால் ஊரார் சொல்வது முற்றும் பொய்யாக இருக்கும் என்று ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை. பழுத்தால்தான் பழம் மரத்தினின்றும் கீழே விழுகிறது. முற்றினால்தான் விஷயம் எங்கும் பரவுகிறது. நெருப்பில்லாமல் புகையுமா? முளையில் ஏதாவது இல்லாமல் ஊரார் அதை வெளியில் இழுத்துப் பரப்பி அதை மிகைப்படுத்த முயலமாட்டார்கள் இல்லையா?'

அவள் இப்படி மறைமுகமாகவும், சுற்றி வளைத்தும் பேசுவதைக் கேட்டு இப்பொழுது எனக்கு வெறுப்பு ஏற்பட்டது. ஆனால், அவள் காதில் விழுந்த அச்செய்தியைப்பற்றி ஊகித்து அறிந்து கொண்டு, அதைக் குறித்து நானாகவே பேசுவது நன்றாக இருக்காது என்று நான் மௌனமாக இருந்தேன். இவ்வளவு நேரம் அக்கா ஒன்றும் பேசாமல் இருந்தாள். கண்ணீரால் நனைந்த கன்னங்களுடன்கூடிய ஒரு கற்சிலையை நாங்கள் எங்கள் அருகில் அமர வைத்தாற்போல் இருந்தாள். அதேபோல் தனது உள்ளத்தையும் அவள் கல்லைப்போல் கடினமாக்கிக்கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றியது. அவள் முகத்தில்தான் எவ்வளவு உறுதி காணப்பட்டது. இப்பொழுது கண்ணீர் வடிவது முற்றும் நின்றிருந்தது. கண்ணீரின் கறை மட்டும் தங்கியிருந்தது. அவள் பாட்டியிடம் பார்வையைக்கூடத் திருப்பவில்லை. யார் பக்கமுமே அவள் பார்வையைச் செலுத்தவில்லை என்று சொன்னாலும் பொருந்தும். அப்படியே எப்பொழுதாவது பார்வையைத் திருப்பினால், வெறுமனே சிற்சில சமயம் என்னைப் பார்ப்பாள். இது இருக்கட்டும். கடைசியில் நான் ஒன்றுமே பேசாமல் இருப்பதைப் பார்த்து, பாட்டி உடனேயே சொல்லலானாள்:

'இப்பொழுது ஏன் முற்றும் ஊமையாகிவிட்டாய்? நான் வந்த வழியே திரும்பிப் போய்விடட்டுமா? இந்தப் பாவிப் பெண்ணோ மிகவும் மோசமான உள்ளத்தைக் கொண்டவள். நான் வந்தது முதற்கொண்டு இடையறாது பேசிக்கொண்டே

யிருக்கிறேன்; ஆனால் அவள் வாயிலிருந்து ஒரு வார்த்தையாவது வெளிப்பட்டதா?'

அக்காவைக் குறித்து, பாட்டி இந்த வார்த்தைகளைச் சொன்னதுமே எனக்கு மிகுந்த வருத்தம் ஏற்பட்டது. அவள் இப்போது இருக்கிற நிலையில் பார்க்கப் போனால், பாட்டியைப் போன்ற வயதில் பெரியவர்கள் அன்பாகப் பேசவேண்டும். அது தான் இல்லை என்றாலும், ஒன்றும் பேசாமலாவது இருக்க வேண்டும். அதைவிட்டு, இரக்கம் இன்றிச் சொன்ன அவ் வார்த்தைகளைக் கேட்டதும் நான் அவளிடம் சொன்னேன்: 'பாட்டி, உனக்கு என்ன சொல்லவேண்டியிருக்கிறதோ என்னைச் சொல். என்னவெல்லாம் திட்ட வேண்டுமோ என்னைத் திட்டு. அவளிடம் துரும்பளவும் குற்றம் இல்லை. இப்பொழுது நீ அவளைத் திட்டுவாயானால், நான் அவளை இங்கிருந்து அழைத்துச் செல்வேன்; நானும் இங்கிருந்து போய்விடுவேன். பிறகு உனக்கு என்ன தோன்றுமோ, தோன்றட்டும். அவளுக்கு எதற்காகத் திட்டு? நான் எப்படிச் செய்யச் சொல்கிறேனோ, அப்படித்தான் அவள் செய்கிறாள்.'

'அடே, இதெல்லாம் அவளுடைய கூத்துத்தான். இது எனக்குத் தெரியாதா, என்ன? நீ சொன்னாய் என்று அவள் செய்ய வேண்டுமா என்ன? ஆண்களுக்கு என்ன செய்தாலும் நடக்கும் என்று இவள் இப்படிச் செய்யவேண்டுமா? போகட்டும், இன்றுவரை செய்தது செய்தாகிவிட்டது. இன்றுவரையிலான விஷயம் வேறாக இருந்தது. என்ன எப்படி நடந்தாலும் அவள் தலையில் கணவனின் பாதுகாப்பு இருந்தது. ஆனால், இப் பொழுது ஊரார் என் பேத்தியைப்பற்றி இப்பொழுது இப்படிச் சொல்லவும் பேசவும் வேண்டுமா? கடவுளே! என் பெண்ணை அழைத்துக்கொண்டாய். ஆனால் பாவியாகிய என்னை மட்டும் களங்கத்தைக் கொடுக்கும் இப்படிப்பட்ட பொல்லாத காரியங்களைப் பார்ப்பதற்காக ஏன் விட்டு வைத்தாய்? அவள் பெரும் புண்ணியசாலி! பாவிப் பெண்ணின் தகாத காரியங் களைப் பார்ப்பதற்குத் தங்கியிருக்கவில்லை. நான்தான் பாழாய்ப் போனவள் மகா பாதகி வாழ்ந்திருக்கிறேன். அடி மூதேவி, இப்படிச் செய்யவேண்டும் என்றால், எங்கள் குலத்தில் வந்து ஏன் பிறந்தாய்?'

இந்தக் கடைசி வாக்கியத்தை மிகுந்த வெறுப்புடனும் பல்லை யும் உதட்டையும் கடித்துக்கொண்டு மிகவும் கொடூரத்துடனும்

சொன்னாள். அதைக் கேட்டதும் எனது உடலெல்லாம் எரிந்தது. அக்கா மட்டும் பழையபடி முற்றும் அசைவற்று இருந்தாள். அவள் அருகில் யாருமே இல்லாததுபோல், அவள் முகத் தோற்றம் இருந்தது. புயலின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க, படகு ஒன்று அவ்வளவுக்கவ்வளவு தனது வேகத்தைக் குறைத்துக் கொள்வதுபோல் அவள் நிலை ஆகியிருந்தது. பெண்ணாக இருந்தும் இப்படிப்பட்ட நிகழ்ச்சியின்போதும்கூட இவ்வளவு அமைதியாக அவளால் எப்படி இருக்க முடிந்தது? நான் மட்டும் பாட்டியின் பேச்சினால் மேலும் மேலும் அதிகமாகப் பொறுமை யற்றவனாகிக்கொண் டிருந்தேன். வேறு யாராகிலும் இவ்வாறு ஏதாவது பேசியிருந்தால், நான் எப்போதோ எல்லாத் தொடர்பு களையும் அறுத்துவிட்டிருப்பேன். ஆனால் எவ்வளவுதான் கோபம் வந்தாலும், எவ்வளவுதான் ஆவேசம் ஏற்பட்டாலும், அவள் பாட்டி, அவள் முன் நம்மால் பேசமுடியாது என்ற எண்ணம் என்ன செய்தும் என் உள்ளத்தைவிட்டு அகலவேயில்லை. அதிலும் அவள் இன்னும் பட்டினியாக இருக்கிறாள் என்ற எண்ணம் உள்ளத்தை மிகவும் துன்புறுத்திக்கொண் டிருந்தது.

கடைசியில் நான் அவளிடம் சொன்னேன்: 'பாட்டி, நீ காரண மின்றிச் சினந்துகொண்டு ஏன் கடிந்துகொள்கிறாய்? வந்ததைப் போலவே எழுந்திரு. குளி. ஏதாவது கொஞ்சம் சாப்பிடு. பிறகு நாம் மெதுவாகப் பேசலாம். நாங்கள் இருவருங்கூட ஒன்றும் சாப்பிடவேயில்லை.'

'அப்படி என்றால் போங்கள், போய்ச் சாப்பிடுங்கள். ஏன் உட்கார்ந்திருக்கிறீர்கள்? நான் இங்கேயே உட்கார்ந்தவாறு பட்டினி கிடந்து உங்கள் காலடியில் உயிரைக் கொடுப்பேன். அடே, நாளை நீங்கள் கலப்பு மணம் செய்யப் போகிறீர்கள்; அப்படியிருக்க உங்கள் வீட்டில் நான் சாப்பிடுவேனா? மாலையில் இவளை என்னுடன் அனுப்புவதற்கு ஒத்துக்கொள்வாயேயானால், மேலும் இவளும் வருவதாக இருந்தால், நான் இங்கிருந்து எழுந் திருப்பேன். இல்லையென்றால், நான் ஒன்றும் எழுந்திருக்கப் போவ தில்லை. என் கண் முன்னால் அவள் ஜாதிவிட்டு ''சாகேப்''புடன் கல்யாணம் செய்துகொள்வதை நான் பொறுத்துக்கொள்ளப் போவதில்லை.'

அவள் மனத்தை இதுவரை எது குத்திக்கொண் டிருந்ததோ, பொல்லாத மனிதர்கள் அவள் மனத்தில் நிரப்பியிருந்த எந்தச் செய்தியினால் அவள் இவ்வளவு சினம் கொண்டு இங்கு வந்து,

வந்ததிலிருந்து சாப்பாட்டையும் ஒதுக்கிவிட்டு இவ்வளவு நேரம் எங்களைத் தாறுமாறாக, ஆனால் சுற்றி வளைத்துப் பேசிக்கொண்டிருந்தாளோ அது இப்பொழுது வெளிப்பட்டது. சே! சே! அவள் காதில் என்ன செய்தி விழுந்திருக்கும் என்பதை நான் வெகுவாக ஊகித்து அறிந்திருக்கிறேன் என்று நான் பெருமையுடன் மனத்தில் நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால் நான் நினைத்தது பொய்யாயிற்று. எந்த விசித்திரமான ஊரார் நிந்தனையைப்பற்றி அவள் சொன்னாளோ, அது எனது ஊகத்துக்கு முற்றும் அப்பாற்பட்டிருந்தது. கணவனின் உடல்நிலை குன்றியிருந்த காலத்தில் அவள் அவருக்குச் செய்த சேவையைப் பார்த்த பிறகும் அவளைப்பற்றி யாரேனும் இப்படித் தவறான ஊகம் கொள்வார்கள் என்று நான் என்றுமே நினைத்திருக்கவில்லை. அப்படியே பொல்லாத குணமும் நீசத்தனமும் கொண்ட ஓரிருவர் தவறான ஊகம் செய்தாலும், அவர்கள் இன்ன இன்னவாறுதான் பேசுவார்கள் என்பது எதிர்பார்க்கக்கூடியதாக இருந்தது. இன்றுவரை அவள் சுதந்தரமாக நடந்துகொண்ட முறையைக் கண்டு ஊராருக்கிடையில் இன்ன வதந்தி பரவக்கூடும் என்பது நினைக்கக் கூடியதாக இருந்தது. ஆனால், இப்பொழுது பாட்டி சொன்ன பயங்கரச் செய்தியோ, நான் சிறிதும் எதிர்பார்த்திராத ஒன்றாக இருந்தது. எந்த அளவுக்கு அது ஊகத்துக்கு அப்பாற்பட்டிருந்ததோ, அந்த அளவுக்கு அது வெறுப்புக்கு உரியதாகவும் இருந்தது. எனவே, அந்தச் சொற்கள் காதில் விழுந்ததுமே, எதிர்பாராமல் திடீரெனக் குண்டால் தாக்கப்பட்ட ஒருவன் எப்படித் துடிக்க ஆரம்பிப்பானோ, அப்படிப்பட்ட நிலையில் நான் இருந்தேன். மேலும் நான், 'பாட்டி, பாட்டி, இது என்ன நீ சொல்லிக்கொண்டிருக்கிறாய்? யாரோ பொல்லாத பாவிகள் உனக்கு இவ்வாறு சொன்னார்களா?' என்று இரைந்து பேசினேன். மேலும், 'அவர்கள் சொன்னார்கள் என்றாலும் நீ அதை உண்மை என்று எப்படி ஒப்புக்கொண்டாய்?' என்றும் கேட்டேன்.

இவ்வாறு பேசும்பொழுது நான் கொண்ட ஆவேசத்தையும், தோற்றத்தையும் கண்டு கிழவி ஒரேயடியாகத் திடுக்கிட்டுப் போனாள். அவள் சிறிதுநேரம் அசைவற்று உட்கார்ந்திருந்தாள். இப்போது என்ன பேசுவது என்பதே அவளுக்குத் தோன்றாமற் போனதாகத் தெரிந்தது. அந்தப் பயங்கரமான குற்றச் சாட்டைக் கேட்டு அக்காவும் மிகவும் நிலைகுலைந்தாற்போல்

காணப்பட்டாள். இருந்தபோதிலும், அவள் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. முற்றும் மௌனமாக உட்கார்ந்திருந் தாள். இவ்வளவு இழிந்த குற்றத்தைப் பொய் என்று வாயால் சொல்வதும்கூட அதற்கு முக்கியத்துவம் அளிப்பதாகும் என்று அவளுக்குத் தோன்றியிருக்கவேண்டும்.

என் கேள்விக்குப் பாட்டி ஒரு பதிலும் கொடுக்காமல் இருக்கவே, நான் மீண்டும் அவளிடம் சொன்னேன்: 'பாட்டி, இவ்வளவு அசிங்கமான பேச்சுக்களை நம்பி, நீ இவ்வாறு என்னை யும், அவளையும் பேசவேண்டும் என்பது எவ்வளவு வருந்தத் தக்கது? யாரோ உனக்கு இல்லாததும் பொல்லாததும் சொல்லி யிருக்கிறார்கள். மாமாவிற்கும்கூட இவையெல்லாம் உண்மை யாகப் பட்டதா? உங்கள் மனத்தில் எங்களைப்பற்றி இத்தகைய எண்ணங்களா நிறைந்திருக்கின்றன? நாங்கள் என்னதான் செய்தாலும், இப்படிப்பட்ட காரியத்தை—என் வாயால் சொல்லக்கூட முடியாத அப்படிப்பட்ட விஷயத்தை—நாங்கள் என்றென்றும் செய்யப்போவதில்லை என்பதை நீ உறுதியாக நம்பு. ஊரார் பேச்சை அடியோடு நம்பாதே. அவர்கள் என்ன வேண்டுமானாலும் கயிறு திரிப்பார்கள், வந்து அதை உன்னிடம் சொல்வார்கள். சேசே! நீ இப்பொழுது சொன்ன சொற்கள் இன்னமும் செவிகளில் அறைந்தாற்போல் உறைத்துக்கொண் டிருக்கின்றன.'

'ஐயய்யோ! இன்னமும் அவை காதுகளில் ஒலித்துக்கொண் டிருக்கின்றன என்றால் என்ன ஆயிற்று! அடே, உங்கள் பெரியதன மான காரியங்கள் எனக்குப் புரிவதில்லையா என்ன? நீ இதைவிட ஆர்ப்பாட்டம் செய்தாலும், நான் ஒன்றும் அவளை என்னுடன் அழைத்துச் செல்லாமல் போகப்போவதில்லை. எனக்கு இதைச் சொன்னவன் பொய் சொல்பவன் அல்ல. அவன் சொன்னதற்கு ஏற்றவாறே இங்கு எல்லா அறிகுறிகளும் எனக்குத் தென்படத் தொடங்கியிருக்கின்றன. இன்றுவரை நீங்கள் உங்க ளுடைய விருப்பப்படி கூத்தாடினீர்கள். நாங்கள் உங்களுக்குக் குறுக்கே வரவில்லை. அதுவரை உங்கள் தலைமீது ஏதோ பாது காப்பு இருந்தது. ஆனால், இப்போது அப்படியொன்றும் இல்லை. இப்பொழுது நீங்கள் என்ன செய்வீர்கள், என்ன செய்யமாட்டீர் கள் என்பதைப்பற்றி ஒன்றும் சொல்லமுடியாது. அந்த மாமிகள் இப்போது என்னை எப்படியெல்லாம் பேசுகிறார்கள் என்பதைக் கேட்க நீ வந்திருக்கவேண்டும். அடே, இப்படி எப்படிக்

குலத்தைக் கெடுப்பவனுக நீ மாறினுய்? இப்படியொரு மூதேவி யாக இவள் எப்படி உருவெடுத்தாள்? பாருங்கள், எப்படிப்பட்ட களங்கத்தைத் தலையில் இழுத்துப் போட்டுக்கொண் டிருக் கிறீர்கள்?'

இந்த இறுதிச் சொற்கள் எதைக் குறித்துச் சொல்லப்பட்டவை என்பதை நீங்கள் அறிந்துகொண்டிருப்பீர்கள். ஒரு பொல்லாத மாமியார், கேசத்துடன் இருக்கும் தனது விதவை மாட்டுப் பெண்ணை இந்த அளவு கடுமையாக ஏசியிருக்கமாட்டாள். அவள் எவ்வளவு மனம் கலங்கி இங்கு வந்திருக்கவேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும். எனக்கோ அவள் பேசியதைக் கேட்டு உடல் முழுதும் ரோமம் குத்திட்டு நின்றது. என் உடல் முழுதும் கோபம் பரவ, நான் பாட்டியிடம் சொன்னேன்: 'போதும், போதும் இப்போது. அளவுமீறிப் போய்விட்டது. இவ்வளவு பேசுவதற்கு ஒரு தேவையும் இல்லை. எங்களுக்குத் தோன்றியபடியெல்லாம் நாங்கள் செய்வோம். நீ விருப்பம் போல ஊரார் பேச்சைக் கேட்டுக்கொண்டிரு. மேலும் என்ன வேண்டுமானுலும் நினைத்துக்கொள். அங்கு . . .'

'பேசாமல் நினைத்துக்கொண்டு நான் சும்மா இருப்பேனு? அப்படிச் சும்மா இருக்கவேண்டும் என்ருல், இங்கு எதற்காக வந்திருப்பேன்? ஒன்று, இவளை நான் என்னுடன் அழைத்துச் செல்வேன். இல்லை, இங்கேயே உட்கார்ந்து உயிரை விடுவேன். இதைத் தவிர நான் வேறு ஒன்றுமே செய்யப்போவதில்லை.'

இப்பொழுது மேலே என்ன பேசுவது? யாராக இருந்தாலும் இதற்குமேல் என்ன செய்ய முடியும்? நானே மிகவும் கலவரம் அடைந்துவிட்டேன். இந்தத் துன்பம் இப்பொழுது எப்படி நீங்கும்? இது பெரிய தொல்லையாகப் போய்விட்டது. பாட்டியின் குணம் இதுவரை எங்களுக்கு—குறைந்தபட்சம் எனக்கு—புரிந் திருக்கவில்லை என்று ஆயிற்று. அவள் ஊராரின் பொல்லாத நாக்கில் நம்பிக்கை வைத்து, அவ்வளவு தொலைவிலிருந்து வந்து, இப்படி ஆர்ப்பாட்டம் செய்வாள் என்று நான் கனவிலும் எதிர்பார்த்திருக்கவில்லை. இவ்வளவு ஆர்ப்பாட்டமும் கூத்தும் செய்யும் திறமை கொண்டவளாக, பிடிவாதக்காரியாக, தன் விருப்பப்படி காரியத்தைச் சாதித்துக்கொள்ளக்கூடிய உறுதி கொண்டவளாக இருக்கமாட்டாள் என்று நான் நினைத்திருந் தேன். மேலும் உண்மையாகப் பார்க்கப்போனுல் அவள் அப்படி இருக்கவும் இல்லை. ஆனுல் மக்கள் அபவாதம் என்ற பேயானது

அன்று அவளைப் பிடித்துக்கொண்டிருந்தது. ஆகவே நாங்கள் அவளுக்கு எத்தனைதான் சொல்லியிருந்தாலும், எவ்வளவுதான் வேண்டிக்கொண்டிருந்தாலும், அது அவளை விட்டுப் போயிருக்காது என்பது வெளிப்படையாக இருந்தது.

நான் அசைவற்று நின்றேன்; மௌனமாக அக்காவைப் பார்த்தேன். நான் அப்படிப் பார்த்ததற்கு உண்மையான பொருள், 'இப்பொழுது நான் கையெடுத்துக் கும்பிட்டு விட்டேன்; அதாவது என்னால் ஒன்றும் செய்யமுடியாது என்பதும், நீ என்ன பேசவேண்டுமோ, பேசித் தன்னைத்தானே விடுவித்துக்கொள்' என்பதுந்தான்.

அக்கா எக்காரியத்திலும் மெதுவாகச் செல்பவள், மகா நதியைப்போல் பெருந்தன்மை கொண்டவள். அவள் என்னைப் பார்த்தாள்; பார்த்தவள் எனது எண்ணத்தைப் புரிந்துகொண்டவள் போல், சட்டென்று பாட்டியிடம் திரும்பிச் சொன்னாள்: 'பாட்டி, உனக்குத் தோன்றியபடியெல்லாம் திட்டு, வேண்டியதெல்லாம் பேசு. ஆனால் இப்போது ஒருமுறை நான் சொல்கிறேன், நீ கேட்டுக்கொண்டால் நல்லது. உனக்கு யார் என்ன சொல்லியிருந்தாலும் அவை யாவும் பொய். அதில் ஒரு வார்த்தைகூட உண்மை இல்லை என்பதையே நான் உனக்குச் சொல்ல விரும்புகிறேன்.' அவள் சிறிது நிறுத்தினாள். அவள் தனது எண்ணத்தைத் தெள்ளத் தெளிவாக எடுத்துச் சொல்வதற்கு உகந்த வார்த்தைகளை யோசித்துக்கொண்டிருந்தவள்போல் தோன்றியது. அதற்குள் பொறுமையற்றவளாகி, பாட்டி பேசுவதற்கு முனைந்தாள். ஆனால் அதற்குள் கையால் சைகை செய்து அவளை நிறுத்தச் சொல்லி, பிறகு உடனேயே மேலே தொடர்ந்து அவள் சொன்னாள்: 'இன்றுவரையிலான எனது நடத்தையைக் கொண்டு நான் மீண்டும் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன் என்று உன்னிடம் ஒருவேளை யாராவது சொல்லலாம்; ஆனால் அப்படி யாராவது சொன்னால் அவன் முகத்தில் செருப்பை எடுத்து அடி. அப்படிப்பட்ட காரியத்தை என்னால் செய்யமுடியாது. எனக்கு அது பிடிக்காத காரியம். என் சம்மதத்தைக் கொண்டு யாரையும், என்றும் அவ்வாறு செய்யவிடப் போவதில்லை. சபதம் வேண்டுமானாலும் நான் செய்யத் தயார்.'

'நான் இப்போது என் வாழ்நாட்களைப் பரோபகாரத்திலும், நல்வழியிலுந்தான் செலவழிக்கப் போகிறேன். அந்தப் பரோப

காரம் அந்தணர்களுக்கு உணவு அளித்து வைதீகக் காரியங்களைச் செய்வது மட்டும் அல்ல. நீங்கள் என்னை அதைச் செய், இதைச் செய் என்றோ, இப்படி நடந்துகொள், அப்படி நடந்துகொள் என்றோ சொன்னால், அது நடக்கப் போவதில்லை. யாருடன் எனது வாழ்வின் முடிச்சைப் போட்டீர்களோ அவருடன் சேர்ந்திருக்கவில்லை என்றால், என்னைப்பற்றி ஊரார் என்ன பேசுவார்கள், என்ன திரிப்பார்கள், என்ன செய்திகளைப் பரப்புவார்கள், எப்படி நிந்தனை செய்வார்கள் ஆகியவற்றை யெல்லாம் நான் தெரிந்துகொள்ளாமல் இருக்கிறேன் என்ப தில்லை. ஆனால் நான் அவர்களுக்கெல்லாம் பயப்படப்போவதில்லை. கெட்ட வழியில் நடப்பது—உண்மையிலேயே எது கெட்டதோ அதைச் செய்வது என்பது—கனவிலும் என்னால் முடியாத காரியம். இதை நீ நினைவில் வைத்துக்கொள். வெறும் ஊரா ருக்குப் பயப்பட்டுக்கொண்டு இதைச் செய்யவேண்டும், அதைச் செய்யவேண்டும் என்பதற்கு உயிர் போனாலும் நான் உடன்படப் போவதில்லை. இந்தத் தம்பி என்னை உயிரினும் இனியவளாகக் கருதுகிறான். ஆனால் தேவையேற்பட்டால் அவனுடைய பேச்சை யும் நான் தட்டாமலிருக்கப் போவதில்லை. பிறகு இதற்குமேல் என்ன சொல்லட்டும்? இதை நான் உனக்கு அழுத்தந்திருத்த மாகச் சொல்லுகிறேன். நான் இன்று உன்னுடன் வரப்போவ தில்லை. நான் புனாவில் இருக்க விரும்புகிறேன். இப்போதைக்கு வேறு எங்கும் போகப் போவதில்லை. புனாவில் இருப்பவர்கள் மிகவும் கெட்டவர்கள், பிறரை நிந்திப்பவர்கள், ஏளனம் செய்ப வர்கள், நல்ல காரியங்களுக்கு தடை விதிப்பது அவர்க ளுடைய கொள்கை. ஆனாலும் எதை நான் செய்து காண்பிக்க விரும்புகிறேனோ, அதை நான் இங்கேயே செய்வேன். வெளியில் எங்கும் போகப்போவதில்லை. நான் உண்மையிலேயே களங்க மற்றவள், தூய்மையானவள் என்றால் அவர்கள் எள்ளளவும் எனக்குத் தீங்கிழைக்கமுடியாது. எனது காரியத்தை நான் நடத்திச் செல்வேன்!'

அக்கா இவை யாவற்றையும் மிகுந்த திடமும், கம்பீரமும் நிறைந்த குரலில், விசித்திரமான தோற்றத்துடன் பேசினதைக் கேட்டதும் பாட்டியுங்கூடத் திடுக்கிட்டுவிட்டாள். உண்மை யில் அந்தக் கிழவி ஏதோ ஏற்பாடு செய்துகொண்டுதான் வந்திருக்கிறாள். அவள் எந்தப் பேச்சையும் கேட்பதாக இல்லை. ஆனால் அக்கா பேசிக்கொண்டிருந்தபோது அவள் முற்றும்

வாயடைத்துப் போய் உட்கார்ந்திருந்தாள். அக்காவின் பேச்சு முடிந்தபின்னர், அவள் தன் பேச்சைத் துவக்கினாள். அவளுடைய பேச்சு எந்தப் பயனையும் ஏற்படுத்தவில்லை. தான் நினைத்தபடி ஒன்றும் நடக்காது என்று அவள் உணரலானாள். அந்த நிலையிலும் உறுதியான ஒரு விஷயத்தைப்பற்றி அக்கா அவளுக்கு உறுதி கொடுத்ததால், அது அவளுடைய சினத்தைத் தணிப்பதற்குப் பெருங் காரணம் ஆகியிருக்கவேண்டும். 'நீ நாளைக்கு அப்படிச் செய்வாய். உன்னுடைய வாக்குறுதியில் என்ன பொருள் இருக்கிறது? நீ இப்படிப்பட்டவள்தான்!' என்றெல்லாம் அவள் சொன்னபோதே, அவளுடைய வாக்குறுதியின் உண்மையிலும் அவளுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்கவேண்டும் எனத் தெரிந்தது. ஆனால் ஒரேயடியாக எப்படி அமைதி அடைந்துவிடுவது? அக்காவின் வாயினின்றும் மீண்டும் அந்த வாக்குறுதி, அந்தச் சபதம் வெளிப்படவேண்டும் என்று அவள் உள்ளூற விரும்பினாள். இவ்வாறான அவளது விருப்பத்தை அறிந்து, அக்கா அதை நிறைவேற்றவும் செய்தாள். தன்னுடன் அக்காவை அழைத்துச் செல்லவேண்டும் என்று அவள் மனம் மிகவும் விழைந்தது. ஆனால் அக்கா ஒருமுறை சொன்னாளென்றால் சொன்னதுதான். யாராலும் மாற்றமுடியாது. ஆகவே, கடைசியில் அவள், 'நான் மறு விவாகம் செய்துகொள்ளப் போவதில்லை' என்று உறுதி கொடுத்தபோது, அதிலேயே இன்புற்று, ஆனால் அந்த இன்பத்தை எனக்கோ, வேறு எவருக்குமோ தெரியப்படுத்தக்கூடாது என்ற நோக்கத்துடன் அவள் என்னிடம் சொல்லலானாள்:

'போகிறேனப்பா, நான் இப்பொழுது. உங்கள் வீட்டில் நான் கணப்போதும் தங்கப் போவதில்லை, தண்ணீர்கூடக் குடிக்கப் போவதில்லை. இவள் இவ்வளவு முற்போக்கானவளாக ஆவாள், இப்படிப்பட்ட காரியங்களைச் செய்ய முற்படுவதுடன், எனக்கு இப்படிப்பட்ட பதிலையும் கொடுப்பாள் என்று எனக்குக் கனவிலும் தோன்றவில்லை. ஆனால் சிறிதும் முறையற்ற பாவியாக அவள் உருவெடுத்திருக்கிறாள். எல்லாம் தலைவிதிப்படி தானே நடக்கும்! அது என்றும் தவறப் போவதில்லை. நடக்க வேண்டியது நடந்தேவிட்டது என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் அது முற்றும் உச்ச நிலையை எட்டி விடவேண்டாம் என்று தடுத்து நிறுத்த வந்தேன். ஆனால் உங்கள் உள்ளத்தில் ஈவு இரக்கம் ஒன்றும் இல்லை. நான் உயிரைக் கொடுக்கிறேன்

என்ருல்கூட, கிழவி இறந்தால் நல்லதாகப் போயிற்று, மீண்டும் நம் குறுக்கே வரமாட்டாள் என்றே நீங்கள் நிம்மதி கொள்வீர்கள்.' அப்படி அவள் பேசியதைக் கேட்டு எனக்கு என்னவோபோல் இருந்தது. நான் அவளிடம் சொல்லவும் செய்தேன்: 'பாட்டி, இது என்ன நீ சொல்கிருய்? இப்படி எங்களுக்கு எப்படித் தோன்றும்? நாங்கள் என்ன இராட்சதர் களா? இல்லே வேறு ஏதாவதா? நீ வந்ததில் எனக்கு மிகவும் ஆனந்தம். உண்மையில் நான் உன்னே . . .'

'ஆனந்தமாம்! அந்த ஆனந்தந்தானே எனக்கு இந்தப் பரிசு! சரிதாம்பா! நான் எதற்காக மீண்டும் இங்கே உங்கள் வீட்டுக்கு வரப்போகிறேன்? வந்ததற்கு இத்தனே செய்தீர்கள். போகி றேன் இப்பொழுது. இன்பமாக இருங்கள். மேலும் இப்படியே இரு பக்கத்திலும் உள்ள குலங்களுக்கு மையைத் தீட்டுங்கள். (அக்காவைப் பார்த்து) இப்பொழுது இரண்டாவது மாப்பிள்ளே தேடுவாய்; அவன் பிராமணனுகவாவது . . .'

'பாட்டி, பாட்டி, ஒரு முறை அவள் உனக்குச் சொன்னுள் அல்லவா, அப்படி ஒன்றும் அவள் என்றுமே செய்யப்போவ தில்லே என்று? ஏன் மீண்டும் மீண்டும் இவ்வாறு இதைச் சொல் கிருய்? எது அவள் மனத்தில் இல்லேயோ, அதை அவள் என்றுமே பேசிக் காண்பிக்கமாட்டாள். மேலும் எதை ஒரு முறை இல்லே அல்லது ஆமாம் என்று சொல்கிருளோ, அதை உண்மையாகச் செய்து காண்பிப்பாள். எதை, தான் செய்ய மாட்டேன் என்று அவள் உன்னிடம் சொன்னுளோ, அதை உண்மையாகவே உயிர்போன பின்புங்கூடச் செய்யமாட்டாள்.'

'போதும், அவளுக்காக நீ சிபாரிசுக்கு வருவது! எங்களுக்குப் பின்னுல் பிறந்தவன், எங்கள் தலேக்குமேல் ஏறி உட்காருகிருன். மிகவும் பெரிய ஆள் எனக்குச் சொல்ல வந்திருக்கிருன், அவள் அப்படியாக்கும், இப்படியாக்கும் என்று! உங்களே எப்படி நம்புவது இனி? நீங்கள் என்ன செய்வீர்கள், என்ன செய்ய மாட்டீர்கள் . . .'

ஆனுல், அக்காவின் உறுதி கொண்ட தன்மையில் அவளுக்கு முழு நம்பிக்கை உண்டு. அதனுல் அவளுக்கு இப்பொழுது சமாதானம் ஏற்பட்டிருக்கவேண்டும் என்று அவளுடைய இந்தப் பேச்சே காட்டியது.

பின்னர் நாங்கள் அவளே மிகவும் வற்புறுத்தி அவளே ஏதோ சாப்பிடும்படி செய்தோம். ஆனுல் பழங்களேத் தவிர வேறு

எதுவுமே அவள் உட்கொள்ளவில்லை. அக்கா அவளுடன் வர வேண்டும் என்று பல வகைகளிலும் அவள் கெஞ்சிக் கேட்டுப் பார்த்தாள். மாட்டேன், மாட்டேன் என்று அக்கா சொல்லச் சொல்ல அவள் இரண்டு நாட்கள் தங்கினாள். அத்தனை காலத்துக்குள் அவள் எங்களையும், அண்ணாவையும் நிறையத் திட்டினாள். விரும்பியவாறெல்லாம் எங்களைப் பரிகசித்தாள். அக்கா, சுந்தரி இவர்களின் கையால் தண்ணீர்கூட அருந்தவில்லை. தனது பலகாரத்துக்கு வேண்டியதைத் தானே செய்துகொண்டாள். ஆனால் இரண்டு நாட்களுக்குள் பார்த்த எங்களது நடத்தையினால் மிகவும் அமைதி அடைந்தவளாக அவள் காணப்பட்டாள். அவள் மாமா வீட்டிலிருந்து வந்திருந்தாள். அவள் அக்காவை நிச்சயம் அழைத்துக்கொண்டு வருவதாகப் பிரதிக்ஞை செய்து வந்திருக்கவேண்டும் என்று தோன்றியது. அதனால் தான் அவள் திரும்பிப் போவதற்குப் பொய்க் காரணத்தைக் கொண்டு தயங்கிப் பின்வாங்கப் பார்த்தாள். ஆனால் இரண்டு நாட்கள் உபவாசம் செய்தும் கடைசியில் தன் காரியம் கைகூடுவதாக இல்லை என்று தெரிந்துகொண்டதும், அவள் மீண்டும் எங்களைத் திட்டிக்கொண்டே திரும்பிப் போய்ச் சேர்ந்தாள்.

# 53. புதிய பணி

தொடங்குவது எங்கிருந்து என்பதுதான் கேள்வி. அரை குறையாகக் கற்றவர்கள் மூலம் ஒன்றும் ஆவதில்லை என்பதை நான் உறுதியாக நம்புகிறேன். அவர்களிடமிருந்து நமக்கு ஓர் உதவியும் கிடைக்கப்போவதில்லை. மாறாக, இடையூறுகள்தான் ஏற்படும். அதைவிட யாருக்கு ஒன்றுமே தெரியாதோ அப்படிப் பட்ட ஆட்களைக் கொண்டு தொடங்குவது நல்லது. எழுதுவதை விடச் சொல்வதன் மூலம் காரியம் அதிகமாகக் கைகூடுகிறது. ஏதேனும் கட்டுரையை எழுதி அதன் பிரதிகளை அச்சடித்து, அவற்றை எல்லாருக்கும் விநியோகிப்பதன் மூலம் எந்த அளவுக்குக் காரியம் ஆகுமோ, அதைவிடச் சொற்பொழிவுகள் ஆற்றி அவற்றை ஒரே சமயத்தில் நூறு இருநூறு மக்களைக் கேட்க வைப்பதன் மூலம் மிகுந்த பயன் ஏற்படும் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். மக்கள் நல்லவர்களாக மாறியிருந்த போதிலும் யார் படிக்கிறார்கள்? அப்படி ஒருவேளை வாசித் தாலும், மனனம் செய்பவர்கள் யார்? இப்படிப்பட்ட நிலை இருந்ததனால், வாரத்தில் ஓரிரு நாட்களாவது குறிப்பிட்ட ஒரு நேரத்தில் உரைகள் நிகழ்த்த வேண்டும் என்று நான் எண்ணி யிருந்தேன். இந்த உரைகளைத் தொடங்குவதில் எனக்கு இரண்டு நோக்கங்கள் இருந்தன. ஒன்று, கேட்போரின் உள்ளத்தைச் சீர்ப்படுத்தவேண்டும்; பின்னர் அவர்களின் உள்ளத்தில் உயர்ந்த எண்ணங்களை நிரப்பி மெல்ல மெல்ல நம் மீது அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படுத்த வேண்டும். மாணவ ரிடையேயிருந்து கேட்போர் எவ்வளவு அதிகமாகக் கிடைப்பார் களோ அவ்வளவு சேர்க்கவேண்டும் என்பது முக்கியமான நோக்கம்.

மக்களைச் சீர்திருத்த முடியும் அல்லது அவர்களிடமிருந்து பின்னர் ஏதாவது விளையும் என்று நம்புவது தவறாகும். மாணவர்கள் இந்த நாட்டின் வருங்கால நிலைக்கு ஆதாரம் ஆவார்கள். அவர்கள் மனத்தில் நாம் எந்த அளவுக்கு மாறுதல்கள் ஏற்படுத்துகிறோமோ, அந்த அளவுக்கு ஏதாவது

பயன் ஏற்படும். நான் ஒரு பெரிய வீட்டில் ஒரு பெரிய அகன்ற திண்ணையை ஏற்பாடு செய்துகொண்டு எனது வேலையைத் துவங்கினேன். தினப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்வது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. முதலிலேயே வெறுமனே அளவற்ற கூட்டத்தைச் சேர்த்துக்கொண்டு, கடைசியில் அவர் களில் ஒருவருமே மிஞ்சாமல் போய்விடுவதைவிட, முதலில் சிறிய அளவில் தொழிலைத் துவங்கி, பின்னர் அதைப் பெரி தாக்குவது நல்லது.

இவ்வாறு எண்ணி, நான் மெல்ல ஒரு பள்ளியின் உயர் வகுப்பிலிருந்த சிலரையும், கல்லூரியைச் சேர்ந்த சில ரையும் அழைத்து அறிமுகப்படுத்திக்கொண்டு அவர்கள் மூலமாகச் சந்தடியின்றிப் பத்துப் பன்னிரண்டு பேர் களைச் சேர்த்தேன். அவர்களுக்கு இந்தியாவின் சரித்திரத்தி லிருந்து சுவையுள்ள ஒரு பகுதியை எடுத்துக் கதை வடிவத்தில் உபந்நியாசம் செய்தேன். இரண்டாம் முறை இங்கிலாந்தின் சரித்திரத்திலிருந்து அதே போன்ற ஒரு பகுதியை எடுத்து வியாக்கியானம் செய்தேன். அந்த இரு பகுதிகளுக்கும் இடையிலிருந்த ஒற்றுமை வேற்றுமைகளைக் காட்டி, மக்களுக்கு உரிமையுடைய அறிவு மேற்கு நாட்டில் எவ்வளவு இருக்கிறது, நமது நாட்டில் எவ்வளவு குறைவாக இருக்கிறது என்பதை விளங்கும்படி சொல்ல முயற்சி செய்தேன்.

மூன்றும் முறை பிரெஞ்சு நாட்டின் சரித்திரத்திலிருந்து ஒரு நிகழ்ச்சியை வர்ணித்துச் சொல்லி முதலிலிருந்து முடிவு வரை அதன் உண்மையைத் தெளிவுபடுத்தினேன். மெல்ல மெல்ல என் சொற்பொழிவுகளைக் கேட்க வருவோரின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே சென்றது. சில நாட்களில் அது நன்கு பெருகியது. அவ்வப்பொழுது நான் அண்ணாவையும் அங்கு அழைத்துச் சென்று அவரிடமிருந்தும் இந்த இளைஞர்க் குழுவினரை நல்லுரை கேட்க வைத்துக்கொண் டிருந்தேன். கூட்டத்தில் பேசுவதை அவர் அதிகமாக விரும்பாததனால், நான் அவருக்கு அதிகம் தொல்லை கொடுக்கவில்லை. முதலில் உரைகளைத் தொடங்கியபோது இன்ன பொருளைப்பற்றித்தான் பேசவேண்டும் என்று நான் முடிவு செய்திருக்கவில்லை. எனது முதல் நோக்கம், எப்படியாவது நமக்குப் பிடித்த வகையில் கேட்போர் குழுவைத் திரட்டவேண்டும் என்பதுதான். முதலில் எடுத்துக்கொண்ட வியாக்கியானங்கள் யாவும் முடிந்தவரை

வர்ணனைகளைக் கொண்டவையாகவும், இளைஞர்களின் உள்ளத்தைக் கவரும் தன்மையுடையனவாகவும் இருந்தன.

அடிமைத்தளையில் சிக்குண்டிருக்கும் மக்கள் தமக்குள் ஒற்றுமையுடன் இருந்து எல்லாக் காரியங்களிலும் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொண்டால் எப்படி அந்நிலையிலிருந்து விடுபடலாம் என்பதைக் கேட்கும் இளைஞர்களின் மனத்தில் பதியவைப்பதற்காக, பல்வேறு நாடுகளின் சரித்திரத்திலிருந்து மேற்கோள்களை எடுத்துக்காட்டி விவரிப்பதையும் நான் வழக்கமாகக் கொண்டிருந்தேன். மற்றும் சில சமயங்களில் நமது நாட்டு வரலாற்றிலிருந்து, நமது வீரத்தையும் ஆற்றலையும் எடுத்துக் கூறும் கதைகளையும் நான் சொல்வதுண்டு. அர்த்த சாஸ்திரத்தைப் போன்ற மிகவும் பயனுள்ள சாஸ்திரங்களின் மூலதத்துவங்களைத் தற்காலத்துச் சூழ்நிலைக்குப் பொருந்தும்படி விளக்கிச் சொல்வதுண்டு. இன்னும் எப்போதாவது, தொழிலிலும் வியாபாரத்திலும் கவனம் செலுத்தாமல் இருந்தால் நாடு எங்ஙனம் கேடு அடைகிறது, அதனுல் பிறநாடுகளின் பிடியில் எப்படி நாம் சிக்க நேருகிறது என்பதைப்பற்றிச் சொல்வதுண்டு. 'கூட்டுறவுச் சங்கங்கள்' போன்ற நிறுவனங்களைப்பற்றிச் சுவையுள்ள செய்திகளைச் சொல்லி அவற்றின் பயன்களைத் தெளிவாக்குவதுண்டு.

வேறு சில சமயங்களில் மகாபாரதம், இராமாயணம் முதலிய புராணங்களிலிருக்கும் கதைகளையும், உபநிடதத்திலிருக்கும் சிறுகதைகளையும் உயர்ந்த தத்துவங்களையும் பயன்படுத்திக் கொண்டு, உயர்ந்த கருத்துகளைச் சர்ச்சை செய்வதுண்டு. போகப் போக இரசாயனம், உயிரியல் ஆகியவற்றைப் பற்றியும் சொல்லத் தெரிந்துகொண்டேன்.

என்னிடம் வரும் இளைஞர்கள் எனது எல்லாச் சொற்பொழிவுகளையும் கேட்பதில் ஈடுபாடு கொண்டவர்களாயிருப்பதை நான் கண்டேன். அவர்கள் என்னைக் கேள்விகள் கேட்பதும், அந்தக் கேள்விகளுக்கு நான் அறிந்த அளவுக்குப் பதில்களைக் கொடுப்பதுமாக, அவர்கள் மனத்தில் நீதி நெறிகளும், தேசாபிமானம் பற்றிய கருத்துகளும் நன்கு பதிய வேண்டுமென்ற முறையில் எனது முயற்சிகளை நடத்திக்கொண்டிருந்தேன். சில சமயங்களில், வெறும் உரைகளைக் கேட்டு அவர்களுக்கு அலுத்துப் போகவேண்டாம் என்று, புகழ்பெற்ற ஆங்கில உபந்நியாசங்களின் கதையையும் அவர்களுக்குச்

சொல்லலானேன். அதேபோல் நமது சொந்த நாட்டிலும் தற்சமயம் எப்படிப்பட்ட உழைப்பாளிகள் உருவெடுக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தி, எனது எண்ணங்களின் பக்கமாக அவர்களின் உள்ளங்களை ஈர்ப்பதற்காக அந்த வாய்ப்பைப் பயன்படுத்த முயன்றேன். நான் எனது லட்சியங் களை மனத்தில் கொண்டுதான் இப்படிச் செய்தேன்.

எனக்கு இவ்வளவு வெற்றி கிடைக்கும் என்றும், எனது மாணவர்க் குழுவினர் இந்த அளவு என்மீது அன்பும் மதிப்பும் கொள்வார்கள் என்றும் நான் சிறிதும் நினைத்திருக்கவேயில்லை. எனது காரியம் எவ்வித இடையூறுமின்றி நடந்துகொண் டிருந்தது. இப்போது ஓர் அடி முன்னேறும் சமயம் வந்திருக் கிறது என்று நான் எண்ணினேன். எனவே நான் அதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினேன். ஆனால் நான் எனது எண்ணத்தில் தவறினேன் என்பது தெளிவாகத் தொடங்கியது. புயல் வருவதற்கு உரிய இரகசியமான சின்னங்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன என்பது எனக்குத் தெரியவில்லை. அவை விரைவிலேயே வெளிப்பட்டு என்னைத் தட்டி எழுப்பின.

# 54. அதற்கும் பின்னர்

எனது மனத்தில் உதித்த எண்ணத்துக்கு ஏற்பப் பிரசங்கங்களின் தொடரை நான் தொடங்கினேன். அதைத் தவருமல் நடத்தியும் வந்தேன். வேறு எந்த விஷயங்களுமே அந்த வேலையின் குறுக்கே வராதவண்ணம் நான் பார்த்துக் கொண்டேன். அந்த உபந்நியாசங்களுக்காக எவ்வளவு உழைப்பை மேற்கொள்ள முடியுமோ அவ்வளவையும் செய்வதில் நான் ஒரு குறையும் வைக்கவில்லை. மேலும் அந்த உழைப்பின் பயனுங்கூட எனக்குக் கிடைக்கும் என்று தோன்றலாயிற்று. எனது மாணவர்க் குழுவும் பெருகிக்கொண்டே வந்தது. அவர்களைப் பார்க்கப் பார்க்க, இன்றில்லாவிட்டால் நாளை இவர்களில் ஒரு பகுதியினர் நம் காரியத்தில் நமக்குக் கைகொடுப்பதற்கு முன் வருவார்கள் என்று எனக்குத் தெளிவாகத் தெரிய வந்தது. இரண்டு மூன்று இளம் மாணவர்கள் நான் கூறும் ஒவ்வொரு வார்த்தையையும் தங்கள் உள்ளத்தில் கவனமாகச் சேகரித்து வைப்பதில் முனைந்தவர்களைப்போல் எனது பேச்சை, உடலும் உள்ளமும் ஒன்றக் கேட்பார்கள்; அவர்கள் உண்மையிலேயே அவ்வாறு செய்துகொண்டு இருந்திருக்க வேண்டும் என்ற நம்பிக்கை ஏற்படும் வகையில் ஓரிரு நிகழ்ச்சிகளும் நடந்தன.

அந்த இரண்டு மூன்று மாணவர்களுக்குள் ஒருவன் ஒரு நாள் என்னைத் தனியாகச் சந்தித்து என்னை மிகவும் புகழ்ந்தான். என்னுடன் தங்குவதற்குத் தான் மிகவும் விரும்புவதாகவும் தெளிவாக எடுத்துச் சொன்னுன். மற்ருெருவன் எனக்குக் கடிதம் எழுதி, சில விஷயங்களில் தனக்கு இருந்த சந்தேகங்களைப் பற்றிக் கேட்டிருந்தான். ஒருமுறை அவர்களுள் ஒருவன் எனது கட்சியை எடுத்துக்கொண்டு என்னை நிந்தித்துக்கொண்டிருந்த வேறு ஒரு மாணவனிடம் சண்டை போட்டுக்கொண்டிருந்த போது ஒரு சில வார்த்தைகள் எனது காதில் விழுந்தன. இவை யாவுமே மனத்துக்கு மிகவும் ஆறுதல் அளிக்கக்கூடியனவாக இருந்தன. அதுவும் எனது வேலையின் துவக்கக் காலத்தி

லேயே இப்படிப்பட்ட அநுபவம் எனக்கு ஏற்பட்டது என்றால், பிறகு வேறு என்ன வேண்டும்? நானும் ஒரு சாதாரண மனிதன் தானே! எனது வேலைகளைச் சிறந்தவை எனச் சொன்னதாலோ அல்லது அவற்றின் சார்பில் யாராவது சண்டை போடுவதைக் கேட்டதாலோ எனக்கு ஏன் ஆனந்தம் ஏற்படக்கூடாது?

என்னுடைய காரியத்தில் எனக்கு மேலும் மேலும் உற்சாகம் ஏற்பட்டது. நான், அக்கா, சுந்தரி அல்லது வேறு எவரிடமாவது பேச நேரும்போது அதைப்பற்றியே பேசுவதும், மற்றப்படி அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த பொறுப்புகளை எவ்வாறு அவர்கள் சிறப்பாக நிறைவேற்ற முடியும் என்பதைப்பற்றி வழக்கமாக அவர்களுக்குச் சொல்வதுமாக இருந்தேன். எனது மனம் விழைந்தபடியெல்லாம் நடக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ஆனால் அது எப்படி முடியும்? வெறும் உபந்நியாசங்களால் ஒன்றும் நடக்கப் போவதில்லை; ஏதாவது எழுத்து வேலையையும் தொடங்கவேண்டும் என்று என் மனம் எண்ணலாயிற்று. 'National Press'—தேசீய அச்சகம் என்று ஏதாவது நல்லதாகக் கிளம்பவேண்டும் என்ற எண்ணம் உள்ளத்தில் வேலை செய்துகொண்டிருந்தது. இது மிகவும் அதிகப்பிரசங்கித்தனமான எண்ணமாக இருந்தது. என்னைப்போன்ற அற்ப அறிவும் அற்ப சக்தியும் உடைய மனிதனால் ஆகக்கூடிய காரியம் அல்ல இது என்பதைத் தெளிவாக நான் உணர்ந்திருந்தேன்.

ஆனால் மனத்தில் எண்ணம் உதித்ததும், அந்த எண்ணத்தைச் செயலாக்குவதற்காக நாம் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று தோன்றுகிறது என்றாலே அது நம் கையால் ஆரம்பிப்பதற்கு ஏற்றதாக இருக்கிறது என்பதன் அறிகுறிதான் என்று எனக்குத் தோன்றியது. நான் எனது எண்ணத்தை தோழர்களுக்கும், அண்ணாவுக்கும் சொன்னேன். அண்ணாவின் மனத்தில் இந்த எண்ணம் வேலை செய்து கொண்டுதான் இருந்தது. ஆனால் இப்படிப்பட்ட எண்ணம் காரியத்தில் கைகூடுவதற்கு மற்றும் ஒரு பொருளின் தேவை உண்டு. அந்தப் பொருள் உலகில் மிகவும் குறைவாக இருக்கிறது; அதுவும் எங்களிடத்திலோ அது மிக மிகக் குறைவாக இருந்தது. என்னுடைய தோழர்கள் என்று யார் யார் இருந்தார்களோ, பெரும்பாலும் யார் என்னிடம் வந்து போய்க்கொண்டும், எனது காரியத்தைப்பற்றிக் குறைந்தபட்சம் என் முன்னால் புகழ்ந்து கொண்டுமிருந்தார்களோ, அவர்களிடம் நான் பலமுறை எனது

உபாயங்களைப்பற்றியும், அது சம்பந்தப்பட்ட இடையூறுகளைப் பற்றியும் சொல்லியிருந்தேன்.

இவ்வாறு சொன்னதற்குக் காரணம், அவர்களிடமிருந்து ஏதோ உதவியை எதிர்பார்த்தோ, கிடைக்குமென்று நம்பியோ அல்ல. ஒரே காரணம், எனது உள்ளம் முழுவதிலும் அந்த எண்ணமே நிறைந்து கிடந்தது என்பதுதான். எனவே யார் வந்தாலும், அது தானுகவே வெளிப்பட்டது.

இப்படிப்பட்ட நிலையில் ஒரு நாள் சற்றும் எதிர்பாராத விதமாக எனது எண்ணம் நிறைவேறும் நல்வாய்ப்பு வந்தது. நான் மிகவும் பாக்கியசாலி என்று இதற்காகத்தான் சொல்கிறேன். எந்த ஒரு காரியமும் நடக்கவேண்டும் என்ருல், அதற்கு ஒரு நல்ல காலம் வந்தால்தான் அது நடக்கிறது. இதுபோன்ற ஒரு நல்ல காலந்தான் இந்தச் சமயத்தில் எனக்கு வந்தது.

நான் ஒரு நாள் இரவு எங்கள் குழுவில் உட்கார்ந்துகொண்டு ஒரு புதுப் புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தேன். இப்பொழுதெல்லாம் இது எங்களுடைய தினப்படியான காரியமாக இருந்தது. இரவில் சாப்பாடு, மற்ற வேலைகள் யாவும் முடிந்ததும் எல்லாருமாகச் சேர்ந்து உட்காருவோம். ஒரு மணி நேரம், ஒன்றரை மணி நேரம் ஏதாவது ஒரு புத்தகத்தை எங்கள் மூவரில் யாரேனும் ஒருவர் உரக்கப் படிக்க, மற்றவர்கள் அதைக் கேட்போம். அண்ணு இரவு நேரத்தில் ஒன்றும் படிக்க மாட்டார். அவர் வெறுமனே கேட்டுக்கொண்டுதான் இருப்பார். காகூவும் (பெரியம்மாவும்) இப்பொழுதெல்லாம் உடல் நிலை குன்றியிருப்பதுபோல் இருந்ததன் காரணமாக அங்கு வந்து உட்காரமாட்டார். மற்றபடி எங்களுடைய பகல் பொழுது அவரவர் அலுவல்களில் கழிந்துகொண்டிருந்ததால், ஒருவரை ஒருவர் சந்திப்பதுகூடக் கடினமாக இருந்தது. ஆனல் அந்த இரவு நேரத்தில் நாங்கள் ஒன்ருக அமர்ந்து ஒருவர் மற்றவருடன் சேர்ந்திருப்பதன் இலாபத்தையும், மற்றவர் பேச்சைக் கேட்கும் இலாபத்தையும் அடைந்து வந்தோம்.

நாள் முழுதும் என்ன செய்தோம், எங்களுக்கு எப்படிப்பட்ட அநுபவங்கள் ஏற்பட்டன என்பதைப்பற்றியெல்லாம் அந்த நேரத்தில் நாங்கள் பேசுவோம். ஒவ்வொரு நாளும் இரவுப் பொழுதில் நாங்கள் ஏதாவது புதியதாகப் படிக்கவோ அல்லது தத்தம் எண்ணங்களைப்பற்றித் தர்க்கமோ செய்வோம். தினப் பத்திரிகையைப் பற்றிய எண்ணம் தினந்தோறும்

விவாதிக்கப்படும்; நாங்கள் உத்தேசித்திருந்த தினப் பத்திரிகை வெளியான பிறகு, அதில் எப்படிப்பட்ட கட்டுரைகளை எழுத வேண்டும், எவ்வகைப்பட்ட எண்ணங்களை வெளிப்படுத்த வேண்டும் முதலானவற்றைப்பற்றிய ஆலோசனைகள் நடக்கும். புதிய புத்தகங்களைப் படித்துக் கொண்டிருந்தால், நாம் எடுத்துக் கொண்ட காரியத்தில் பயன்படும்படி எந்த எண்ணங்கள் அவற்றினின்றும் வெளிப்படுகின்றன என்பதை நாங்கள் சந்திப்ப துண்டு.

இப்படி நாங்கள் மகிழ்ந்திருக்கும் சமயத்தில், நாங்கள் இன்ப துன்பங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது அக்கா திடீரென்று சொன்னாள்: 'அடே, உண்மையிலேயே நான் உன்னிடம் ஒன்று சொல்ல மறந்துவிட்டேன். அண்ணா (பாவு), இன்று மாலையில் உன் பெயரில் யாரோ ஒரு கடிதத்தைக் கொணர்ந்து கொடுத்தார்கள். நான் அவசரத்தில் அதை என் பெட்டியில் வைத்தேன். நீ வந்தாய், அப்பொழுது உன்னிடம் கொடுக்கவே மறந்துவிட்டேன்.' இவ்வாறு சொல்லி அவள் அந்தக் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள். அதை நான் திறந்து பார்த்தேன்; அது எனக்கு அறிமுகமான ஒருவருடையதாக இருந்தது. அதில் வேறு ஒன்றுமே எழுதப் பட்டிருக்கவில்லை. 'எனக்கு உங்களைத் தனிமையில் சந்திக்க வேண்டும். சொந்த வேலை. தொழில் சம்பந்தமானது அல்ல. நேரத்தைக் குறிப்பிட்டுத் தெரிவித்தால் நான் அந்தச் சமயத்தில் வருவேன். என்னுடன் மற்றும் ஒருவரும் தங்களைச் சந்திப்பதற்காக வரப்போகிறார்.' அதில் இருந்த செய்தியெல் லாம் இவ்வளவுதான். வேலையின் தொடர்பில் இல்லை, ஆனால், தனிமையில் சந்திக்க வேண்டும்: இதன் பொருள்தான் என்ன? எவரிடமிருந்து அந்தக் கடிதம் வந்திருந்ததோ, அவருடன் எனக்கு நெருக்கமான பரிச்சயம் இருக்கவில்லை. அவருக்கும் எனக்கும் இடையே கூடிப் பேசும்படியாகப் பொது விஷயம் என்ன இருக்க முடியும் என்பதைப்பற்றி என்னால் ஒன்றும் ஊகிக்க முடியவில்லை. எனது உள்ளத்தில் பல்வேறு எண்ணங்கள் தோன்றலாயின. அந்த ஆளின் மனத்தில் தனது பெண்ணையோ அல்லது அவருடைய வீட்டிலிருந்த வேறு ஏதாவதொரு பெண் மணியையோ, அக்கா, சுந்தரி இவ்விருவரிடமும் அனுப்பும் எண்ணம் இருக்கலாம் என்று எனக்குத் தோன்றியது. அவன் உள்ளத்தில் ஏதேனும் விண்ணப்பமோ, வேண்டுகோளோ

எழுதிக்கொள்ளும் எண்ணம் இருக்கலாம் என்று அக்காவிற்குத் தோன்றியது.

இவ்வாறு எங்கள் ஊகம் நடந்தது. கடைசியில் நான் அவனுக்கு நேரம் குறித்துத் தெரிவித்தேன். அவன் உடனேயே மறுநாள் வந்தான். அவ்விடத்து, இவ்விடத்துச் சாமானியப் பேச்சு சிறிது நேரத்தில் முடிந்த பிறகு தொடர்ந்து அவன் சொன்னான்: 'இந்த ஆளின் மனத்தில் இங்கு ஓர் அச்சகம் துவங்க வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. மேலும் அந்த அச்சகத்துக்கு வெளியிலிருந்து வேலையாள் வருவது வரட்டும். ஆனால் எப்பொழுதும் வழக்கப்படியான வேலை இருக்கவேண்டும். எனவே ஒரு தினப் பத்திரிகையைத் துவங்கவேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. தாங்கள் இந்த வேலையில் இவருக்கு உதவி செய்ய முடியுமா?'

அவருடைய அந்தக் கேள்வியைக் கேட்டு நான் மிகவும் வியப்படைந்தேன். எது எனக்கு இப்பொழுது சில நாட்களாக மிகவும் வேண்டியிருந்ததோ, அதுவே மிகவும் எதிர்பாராத வண்ணம் எதிர்நோக்கி வந்தது. அதுவும் சிறிதும் எதிர்பார்த்திராத ஓர் ஆளிடமிருந்து! அப்படிப்பட்ட நிலையில் ஆச்சரியம், ஆனந்தம் ஆகிய இவ்விரண்டின் பிரிக்கமுடியாத உணர்ச்சிக் கலவை தோன்றி என் மனத்தைத் தன்வசமாக்கிக் கொண்டு விடுவது இயல்புதானே? கணப்பொழுது மௌனமாக இருந்த நான், தொடர்ந்து அந்த ஆளிடம் சொன்னேன்:

'என்னிடமிருந்து இந்த வேலையில் இவருக்கு என்ன உதவி கிடைக்க முடியும்? இவருக்கு எந்த வேலையில் உதவி வேண்டும்? எந்த வேலையில் என்னால் முடியுமோ, அந்த வேலையில் நான் அவசியம் உதவி புரிவேன்.'

'இவருக்கு வேண்டியது பண உதவி அல்ல. அவர் தமது முதலைச் சேகரித்திருக்கிறார். துவங்கப் போகும் அச்சகத்தையும் மிகச் சிறந்த முறையில் துவங்கப் போகிறார். பிரசுரிக்கப் போகும் தினப் பத்திரிகையும் மிகச் சிறந்ததாகவும், உயர்ந்த எண்ணங்களைக் கொண்டதாகவும் இருக்கவேண்டும் என்பது இவரது எண்ணம். ஆகவே அந்தப் பத்திரிகையைத் தங்களைப் போன்றவர் கையில் கொடுக்கவேண்டும் என்று விரும்பி, அவர் என் மூலமாகத் தங்களிடம் வந்திருக்கிறார். நீங்களும், நானும் ஒருவருக்கொருவர் அறிமுகப்பட்டவர்கள். எனவே, நானும் தங்கள் எண்ணங்கள் மிக உயர்ந்தவை, தாங்கள் மக்களைத்

தெரிந்தெடுக்கும் வகை மிகச் சிறந்தது என்று சொல்லி அவரை அழைத்துக்கொண்டு வந்தேன். தாங்கள் இந்த வேலையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அவர் மிகவும் விரும்புகிறார்.'

அவர் கடைசியாகச் சொன்னதைக் கேட்டதும் என் மனத்தில் உள்ளூற மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. விரும்பிய வேலை கைகூடப் போகிறது என்று மேலாகத் தெரிய வந்ததும் யாருக்குத்தான் ஆனந்தம் ஏற்படாது? ஆனால் உணவு பரிமாறப் பட்ட தட்டுக்கும், வாய்க்கும் நடுவில் எவ்வளவோ இடைவெளி இருக்கிறது. அதிலும் நல்லுணவின் ஒரு கவளத்தைக் கையில் எடுத்துக் கொண்டு அதை வாயில் போடும் வரையில் என்ன ஆகும், என்ன ஆகாது என்ற சந்தேகம் உள்ளத்தை விட்டு எப்படிப் போகும்? நான் இவனுக்கு என்ன பதிலைக் கொடுப்பது என்னும் எண்ணத்தில் மூழ்கிப் போயிருந்தேன். அதற்குள் அந்த ஆள் சொன்னான்: 'இவர் தங்களது விளக்கவுரைகளைக் கேட்டிருக்கிறார். மேலும் முதலில் இவர்தாம் தங்களது பெயரை நினைவுக்குக் கொண்டு வந்தார். நானும் அவர் சொன்னதை ஆமோதித்தேன். எனவே இப்பொழுது இந்த வேலையை நீங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பது இவரது மட்டுமல்ல, எனது வேண்டுகோளும் ஆகும். நீங்கள் இந்த வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளுவீர்கள் என்று உறுதியுடன் நம்பி நான் வந்திருக்கிறேன்.'

உண்மையாகப் பார்க்கப் போனால் இவ்வளவு வற்புறுத்தல் எனக்கு எதற்காக வேண்டியிருந்தது? ஆனால் நான் குழம்பிய வண்ணம் இருந்ததற்குக் காரணம், இந்த ஆள் நான் எதை விரும்பினேனோ, அதையே கொணர்ந்திருந்த போதிலும், எனக்கு எந்த முறையில் வேண்டியிருந்ததோ அந்த முறையில் அது என் கையில் வருமா, இல்லையா என்று எனக்குச் சந்தேகம் ஏற்பட்டதுதான். அதனால் நான் உடனேயே சொன்னேன்: 'நீங்கள் என்னிடம் கேட்க வந்த இதே விஷயம் என் உள்ளத்திலும் வெகு நாட்களாக வேலை செய்து கொண்டிருக்கிறது. மேலும் அதைச் செயல்படுத்தும் வேலை எப்படி நிறைவேறும் என்பதை நானும் பல நாட்களாக எண்ணிக் கொண்டிருக்கிறேன். ஆகவே நீங்கள் கேட்பது எனக்குச் சரியான சமயத்தில் வந்திருக்கிறது. ஆனால் இப்பொழுது நான் யோசிப்பது எதற்கு என்றால் அச்சகம் துவங்குவதில் இவருடைய நோக்கம் பணம் சேர்க்கவேண்டும் என்பதாகத் தெரிகிறது.

தினப் பத்திரிகையைத் துவங்குவதின் நோக்கமும் அதுவாகத் தான் இருக்கும். என் மனத்திலும் எந்தப் பத்திரிகையைத் துவங்குகிறோமோ, அதன் மூலமாகப் பணம் கிடைக்குமானல் அது வேண்டாம் என்று இல்லை. ஆனல் முக்கியமான நோக்கம் வேருக இருக்கிறது. அந்த நோக்கத்தைப் பார்த்தால், அதிலிருந்து பணம் கிடைப்பதைவிட முக்காலும் கிடைக் காமலும் இருக்கக்கூடும் என்பதே! அதனலேயே நான் சிந்தனை யில் ஆழ்ந்தேன். மற்றப்படி நீங்கள் கொண்டு வந்த விஷயம் எனக்கும் எனது குழுவினருக்கும் மிகவும் வேண்டியதாகும்.'

அந்த ஆள் இதைக் கேட்டு மௌனமாக தன்னுடன் வந்திருந்த ஆளைப் பார்க்கலானர். அச்சகம் துவங்கும் ஆள் உடனேயே என்னிடம் திரும்பிச் சொல்லலானர்: 'உங்களுடைய எண்ணம் என்ன என்பதைத்தான் எனக்குத் தெரியப்படுத்துங்களேன்! எப்படியாவது பத்திரிகையை மக்களுக்கு இடையில் பிரபலமாக ஆக்கவேண்டும் என்ற கருத்தைத்தானே நீங்கள் கொண்டிருப் பீர்கள்?'

'இல்லை! இல்லை! எப்படியாவது மக்களுக்கு இடையில் பத்திரிகையைப் பிரபலமாக்க வேண்டும் என்று செயல்படக் கூடாது. நாங்கள் விரும்புவது எதுவோ அதை எழுதியும், வலியுறுத்தியும், அதை மக்களுக்கு இடையில் பிரபலமாக்க வேண்டும் என்பதே எங்களது நோக்கமாகும்.'

'அவ்வளவுதானே? அதை நானும் ஒத்துக்கொள்கிறேன். பத்திரிகையை நான் முற்றிலும் உங்கள் கையில் ஒப்படைத்து விடுகிறேன் என்ருல் சரிதானே? கட்டுரைகள் சம்பந்தமாக நான் ஒரு வார்த்தைகூடப் பேசப் போவதில்லை. பத்திரிகை யினல் இலாபம் ஒன்றும் ஏற்படவில்லை என்ருலும்கூட, நஷ்டம் ஏற்படாமல் இருக்கட்டும்.'

'அதைப்பற்றி எப்படிச் சொல்ல முடியும்? இன்று மக்களுக்கு முற்றும் புதுமையான, வெறுப்பை உண்டாக்கக்கூடிய வகை யில் புதுமையான எண்ணங்களைச் சிறிதும் அச்சமின்றி, தயக்க மின்றி, தைரியத்துடன் அவர்களுக்கு முன்னல் வைப்பதே எங்களுடைய முக்கியமான நோக்கமாகும். அரசியலைப்பற்றிய விஷயத்திலும் சரி, சமூகத்தைப்பற்றிய விஷயத்திலும் சரி, இன்று காணப்படும் இந்தத் தயக்கம் சிறிதும் நல்லதல்ல. மக்களுக்கும், அரசாங்கத்திற்கும்கூட வெறுமனே புகழை எதிர்பார்க்கும் சுவைதான் ஏற்பட்டிருக்கிறது. நல்லவையாக இருந்தாலும் சரி,

கெட்டவையாக இருந்தாலும் சரி, பழைய பழக்க வழக்கங்களைப் புகழ்ந்தால் மக்கள் மகிழ்ந்து போகிறார்கள். அரசாங்க அதிகாரிகளின் செயல்கள் நல்லவையாயினும் சரி, பொல்லாதவையாயினும் சரி, அவற்றைப் பாராட்டினால், ஆங்கில அரசின் குற்றங்களை எடுத்துக் காட்டாமல் வெறுமனே புகழைப் பாடினால் அரசாங்கம் ஆனந்தம் அடைகிறது! என்ன நடக்கவேண்டும் என்று நான் என் மனத்தில் விரும்புகிறேனோ அது முற்றும் வேறானது. நாம் படித்திருக்கும் இங்கிலாந்து, பிரான்சு, அமெரிக்கா முதலிய நாடுகளின் சரித்திரத்திலிருந்து நாம் எடுத்துக் கொள்ளக்கூடிய வகையில் என்ன இருக்கிறது. மேலும் நாம் எந்த வகையில் அதை எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதைக் காட்ட வேண்டும் என்பதே எங்கள் நோக்கமாகும். பிறகு அதனால் அரசாங்கம் கடிந்துகொள்ளட்டும், இல்லை மக்களின் விருப்பம் மடிந்து போகட்டும். ஆங்கிலக் கல்வியிலிருந்து நாங்கள் கற்றுக்கொண்ட பாடங்கள், ஒரே பக்கத்தின் (கட்சியின்) முன்னேற்றத்துக்காக இல்லை. அரசாங்கம் எங்களுக்குச் சொல்லும், ''நீங்கள் உங்களது சமூகத்தின் முன்னேற்றத்திற்கான வேலைகளில் ஈடுபடுங்கள். அரசாங்க விஷயத்தைப்பற்றி நீங்கள் சிறிதும் கவலைப்படவேண்டாம்'' என்று; மறுபக்கம் மக்கள் எங்களுக்குச் சொல்வார்கள், ''எங்கள் சமூகத்தின் நிலை மிகச் சிறந்ததாக இருக்கிறது. அதில் அணுவளவும் மாற்றம் வேண்டாம்; சீர்கெட்டிருப்பது எல்லாம் அரசாங்கத்தின் நிலைதான். ஆகவே நீங்கள் அதில் கவனத்தைச் செலுத்துங்கள்'' என்று.

'இப்படிப்பட்ட வித்திரமான நிலையில் புதிய குழுவினரின் புதிய எண்ணங்களை மக்களுக்கு முன்பும், அரசாங்கத்துக்கு முன்னாலும் தெளிவாக வைக்கும் கடினமான காரியத்தை மேற்கொள்ள வேண்டும் என்பது எங்களுடைய எண்ணம். அந்த எண்ணம் உங்களுக்குப் பிடித்திருக்கிறதென்றால், உங்களுக்கு என்னுடைய முழு உதவியும் உண்டு. மற்றப்படி இதர விஷயங்களில் பத்திரிகையை எவ்வளவு சுவையுடையதாக ஆக்கமுடியுமோ, அவ்வளவு சுவையுடையதாக ஆக்குவதற்கு முயலுவோம். எங்களிடம் நான்கு எழுத்தாளர்கள் வீட்டிலேயே இருக்கிறார்கள். மேலும் எங்களுக்கு அதிலிருந்து ஒரு பைசாகூட வேண்டாம். இவ்வளவுதான் நான் சொல்ல விரும்புவது.

நீங்கள் இப்போது எல்லாவற்றைப் பற்றியும் யோசித்துப் பார்த்து, உங்கள் முடிவை எங்களுக்குச் சொல்லுங்கள்.'

இது எனது சிறிய ஒரு சொற்பொழிவாகவே ஆகிவிட்டது. ஆனால் நான் பேசிய வார்த்தைகள் யாவும் எனது உள்ளத் தாழத்திலிருந்து வெளிப்பட்டன என்பதை அந்த ஆள் உணர்ந் திருக்க வேண்டும்.

அச்சகத்தைத் துவங்கும் எண்ணத்தைக் கொண்ட அந்த ஆளை என்னிடம் அழைத்து வந்தவர் மெதுவாக அவரைப் பார்த்துச் சொன்னார்: 'அப்படியென்றால் சரி. இவர் யோசித்துப் பிறகு தங்களுக்குத் தெரிவிப்பார்.'

ஆனால் அந்த ஆள் உடனேயே என்னிடம் திரும்பிச் சொன்னார்: 'இல்லை, இல்லை. இதில் யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? முடிவு செய்தாகிவிட்டது. நீங்கள் 'அறிவிப்புப் பத்திரம்' எழுதி எனக்கு நாளைக்குக் கொடுங்கள். இதில் இப்பொழுது எள்ளளவும் மாறுதல் ஏற்படப் போவதில்லை. பத்திரிகைக்குப் பெயர் என்ன கொடுக்கப் போகிறீர்கள்?'

'பெயரா?' நான் வியப்படைந்து கேட்டேன். அதுபற்றி நான் யோசித்திருக்கவே இல்லை. ஆனால் சட்டென்று மீண்டும் சொன்னேன்! 'பெயரா? ''புதிய எண்ணங்கள்'' என்பதுதான் பெயர்.'

# 55. வரவேற்பு

தினப் பத்திரிகையைத் தொடங்கியதிலிருந்தும், சிறிது சிறிதாக அதற்கு முன்பிருந்தும்கூட என்னுடைய ஒரு புதிய பகுதி செயல் பட ஆரம்பித்தது. இதுவரை நான் செய்தவற்றைப் பற்றியெல் லாம் தினப் பத்திரிகைகளில் குறிப்பிட்டு வந்தபோதிலும், அவைபற்றிப் பாழாய்ப் போன தினப் பத்திரிகைகள் விரும்பிய வாறெல்லாம் நிந்தித்தபொழுதிலும், அவை யாவும் அமுங்கிய நிலையிலேயே இருந்தன. ஆனல் நான் வக்கீல் ஆனபிறகு பிரசங்கங்கள் செய்யத் தொடங்கி, இறுதியில் 'புதிய எண்ணங்கள்' என்ற முற்போக்கான பெயராலேயே அச்சமின்றி என் சொந்தப் பெயரையும் போட்டுத் தினப் பத்திரிகையைத் தொடங்கியபொழுது, ஒருவாறுக நான் சமூகத்தில் ஒரு பெரிய ஆளாக, அலட்சியப்படுத்த முடியாதவளுக ஆகிவிட்டதாக, புதுமை செய்பவர்களைப் பரிகசிப்பதில் இன்பமடையும் நிந்தனைக் காரர்களுக்குத் தோன்றிவிட்டது போலிருக்கிறது. ஆகவே அப்பொழுதிலிருந்து அவர்கள் எந்த விஷயத்தையும், எந்தத் தொடர்பையும் பவித்திரமாகக் கருதாமல், என்மீதும், எனது சகோதரியின்மீதும், எனது பழங்கால வாழ்க்கை விவரங்களின் மீதும், சுந்தரியின்மீதும், அண்ணுவின்மீதும் தாங்கள் விரும்பியபடியெல்லாம் நிந்தனை மாரியைப் பொழிந்து எழுத ஆரம்பித்தார்கள். அவர்கள் எழுதியதிலிருந்து நான் ஒரு சில உதாரணங்களைக் கொடுத்தால், பழைய எண்ணங்களைக் கொண்ட வகுப்பினருக்கும்கூட அதைக் கேட்க அசிங்கமாக இருக்கும் என்று எனக்கு உறுதியாகச் சொல்லமுடியும். எனவே அப்படிச் செய்வதில் ஒரு பொருளும் இல்லை. ஆனல் உதாரணத் துக்காக என்றே ஒரு பத்திரிகையிலிருந்து—இந்தப் பத்திரிகை பழைய எண்ணங்களின் இருப்பிடம் என்று சொல்லிக்கொள் கிறது—ஒரு கூற்றை எடுத்துக் காட்டுகிறேன். எங்கள் பத்திரிகை யின் முதல் இதழ் வெளிவந்ததுமே அதைப்பற்றிய கருத்தெனக் கீழ்க்காணும் செய்தி பிரசுரிக்கப்பட்டிருந்தது:

'எங்களுக்கு'ப் புதிய தொல்லை கொடுக்கும் சகோதரர்கள் கிடைத்திருக்கிறுர்கள். இந்தச் சகோதரர்களுக்குத் தாங்கள்

அளிக்கும் தொந்தரவைப்பற்றி வெட்கங்கூடக் கிடையாது. அவர்கள் தங்கள் பெயரையும் ''இன்னல்'' என்றுதான் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பத்திரிகையின் முக்கிய பொறுப்பை வகிப்பவர், சமீபத்தில்தான் இறக்கை முளைத்த, பொல்லாத ஓர் இளைஞர். பல்கலைக் கழகம் தெரிந்தெடுத்த நான்கு ஆங்கிலப் புத்தகங்களை மனப்பாடம் செய்து அதில் பாண்டித்தியம் பெற்றார்கள். மேலும் ''பீனல் கோடின்'' நான்கு சிறு பகுதிகள் நாக்கின் நுனியில் இருக்கும்படி உபாயத்தைச் செய்து கொண்டார்கள். இதுதான் அவர்களுடைய ''புதிய எண்ணங்களை'' உருவாக்கும் சாமர்த்தியம் ஆகும். முதலிலிருந்தே இவருடைய இயற்கைச் சுபாவத்தைப் பார்த்தால், அது மொத்தத்தில் இன்னல் கொடுப்பதாகவே இருந்திருக்கிறது என்பது தெரிகிறது. சிறு வயதிலிருந்தே தம் தந்தையை இவர் என்றுமே கண்டதில்லை. இவர் அன்னையார் பிறந்தகத்திலேயே வாழ்வைக் கடத்தினார். மாமாவின் ஆதரவில் எல்லாப் படிப்பையும் முடித்துக்கொண்டு அவர் கட்டளையை மீறி அவருக்குத் தாறுமாறாகப் பதிலைச் சொல்லி, நன்றி கொன்ற தன்மையை உச்சநிலைக்குக் கொண்டு சென்றார். இப்பொழுது என்னவென்றால், தான் ஆகாயத்தை எட்டிப் பிடித்துவிட்டதாக எண்ணிக்கொண்டிருக்கிறார். சிறிது நாட்களுக்கு முன்புதான் இவர் பள்ளியிலிருக்கும் நான்கு பிள்ளைகளைச் சேர்த்துக் கொண்டு அவர்களுடைய ஒரு வகுப்பை அமைத்து, சிறிது அறிவை அளிக்கும் வேலையைத் தொடங்கியிருக்கிறார். எவ்வளவு தூரம் பழைய கொள்கைகளினின்றும் விலகிச் செல்ல முடியுமோ, அவ்வளவு தூரம் செல்வதற்கு இவர் முயற்சி செய்து கொண்டிருக்கிறார். ஆகவே இவருடைய ''புதிய எண்ணங்கள்'' எப்படிப்பட்டனவாக இருக்கும் என்பது தானாகவே எல்லாருக்கும் தெளிவாகிவிடும். இவர்களுக்கு இந்த வேலையில் உதவியாக யார் யார் இருக்கிறார்கள் என்பதையும் இங்கே சொல்லிவிட்டால், இந்தப் புதுச் சகோதரர்கள் எப்படி உருப்படப் போகிறார்கள் என்பது வாசகர்களுக்குத் தானாகவே தெளிவாக விளங்கிவிடும். ஒருவர், தனது பெண்ணை மணமின்றி வைத்திருப்பதால் சீர்திருத்தவாதிகளால் எப்போதும் புகழப்படுபவர்; தமது பெண்ணைக் கிறிஸ்தவ மிஷனரியைச் சேர்ந்தவர்களிடம் கல்வி கற்பதற்காக அனுப்பி, பக்கா மேம்சாகேப் ஆக்கி வைத்திருப்பவர். இரண்டாவது உதவியாளர் இந்த ஆளின்

மேற்கூறப்பட்ட பெண் ஆவாள். மூன்றாவது உதவியாளர் ''புதிய எண்ணங்கள்'' கொண்டவரின் சொந்தத் தங்கை. இந்த வீரப் பெண்மணியைப்பற்றி—அவள் செய்த கணவனின்—தியாகத்தைப்பற்றியும், அதன்பின் அவள் மேற்கொண்ட நடத்தையைப்பற்றியும் நாம் இதற்கு முன்பே பல முறைகள் வாசகர்களுக்கு அறிவித்திருக்கிறோம். ஆகவே, தனது பெண்ணை ஆங்கிலேயர்களைப்போல் திருமணமின்றி வைத்துக் கட்டுப்பாடின்றிப் பழகவிடும் தைரியத்தைக் கொண்ட காரணத்தினால் புகழைப் பெற்ற ஒரு மனிதரும், அவருடைய கன்னிப் பெண்ணும், கணவனைத் தியாகம் செய்வதுதான் மேன்மையுள்ள செயல் என்று கருதிக் கட்டுப்பாடின்றிப் பழகும் ஓர் இளம் பெண்ணும், கடைசியாக, இன்னமும் முகத்தில் மீசையின் அரும்பு முளைக்காத, பல்கலைக் கழகம் கொடுத்த இரண்டு வாலை அடையப் பெற்றதனால் செருக்கடைந்து, தந்தையை மனிதரெனப் பாராட்டாமல் தள்ளி வைத்து நன்றி கொன்ற தன்மையின் பெருமையைக் கொண்டு ''புதிய எண்ணங்களைச்'' சொல்லும் பெருந்தன்மையைப் பறையறைந்துகொள்ளும் இளைஞர்; இவர்களால் சீராட்டப்பட்டு உருவாக்கப்படும் அந்த எமது சகோதரர்கள் எப்படிப்பட்டவர்களாக உருப்படுவார்கள் என்பதை ஊகித்துப் பார்க்கும் வேலையை வாசகர்களின்மீதே ஒப்படைத்து, நமது இந்தப் பொல்லாத சகோதரர்களை நாங்கள் தூர விலக்கி வைக்கிறோம்.'

எங்கள் பத்திரிகைக்குக் கிடைத்த 'வரவேற்பு' இப்படிப்பட்டதாக இருந்தது. இந்தச் சமயத்திலிருந்தே எங்களுடைய ஒவ்வோர் இதழும் வெளிப்பட்டதால், எங்களுடைய சொந்தப் பழக்க வழக்கங்களைப்பற்றி ஏதாவது தாறுமாறாகக் குறிப்பிட்டுக் கட்டுரைகள் வெளிவந்தவாறே இருந்தன.

ஓரிரவு நான் ஓர் அழகிய சிறு கதைக்கு விளக்கவுரை கொடுத்துக்கொண்டிருந்தேன். கேட்க வந்திருந்த குழுவினர் விளக்கத்தைக் கேட்பதில் மெய்ம்மறந்து போயிருந்தார்கள். அதற்குள் எனது தோழரின் பின்புறமாக உட்கார்ந்திருந்த ஒருவர் தனதருகில் அமர்ந்திருந்த ஒருவரிடம் சொல்லலானார்: 'யாரடா இவன்? சீர்திருத்தவாதிகளில் ஒருவனாகத்தான் காணப்படுகிறான். ஆனால் . . .'

'சே சே, சீர்திருத்தவாதி இல்லை. இப்பொழுது எவ்வளவு நாட்களாக நான் இங்கு வந்துகொண் டிருக்கிறேன். ஆனால்

ஒருநாள்கூட அப்படிப்பட்ட சீர்திருத்த எண்ணங்களோ அல்லது உரையோ வெளிப்படவில்லை. அப்படி இருந்திருந்தால் நான் இங்கு என்றுமே வந்திருக்க மாட்டேன். சுவையுள்ள விஷயங் களைப்பற்றி, ஏதாவது பிரயோகத்துடனும் ஏதாவது படங்களைக் காண்பித்தும், உள்ளத்தைக் கவரும் வகையில் விளக்கம் தருகிறான். சில சமயங்களில் சரித்திரத்திலிருந்து ஏதேனும் கதைகளை, சில சமயங்களில் புராணத்திலிருக்கும் கதைகளை, சில சமயங்களில் சாஸ்திரங்களில் உள்ள உண்மைகளை—இப்படி ஏதாவது ஒரு புதிய விஷயத்தைப்பற்றிச் சுவையான முறையில் சொல்கிறான். ஆனால், இன்றுவரை பெண் கல்வியைப்பற்றியோ அல்லது மறுமணத்தைப்பற்றியோ அவன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.'

'அடே, அப்படியென்றால் இவன் அந்தத் தந்திரமுள்ள கிறிஸ்தவ மிஷனரிகளைப்போல் போலிச் சீர்திருத்தவாதியாக இருக்கவேண்டும். பார்த்துக்கொண்டே யிருப்பான், நீங்கள் நன்கு கவரப்பட்டுவிட்டதாகக் காணப்பட்டால், சட் டென்று உங்கள்மீது பாய்ந்து உங்களைத் தங்கள் பிடியில் இழுத் துக்கொண்டு விடுவான். எனக்கு யாரோ இவனைப்பற்றிய விவரங் களை முன்பு சொன்னார்கள். அருகில் உட்கார்ந்திருந்த என்னிடம், இவன் தன்னிலையினின்றும் தவறிய பக்கா சீர்திருத்தவாதி என்று சொன்னார்கள். இவனை நன்கு ஏளனம் செய்யவேண்டும். நமது அந்த விநாயக் ராவ் இல்லையா? அவரும், இவனும் சேர்ந்து படித்தவர்கள்தானும். எனவே முதலிலிருந்து இவரைப்பற்றி எல் லாம் அவருக்கு நன்கு தெரியும். அவர் ஏதோ ஒருநாள் இங்கு வந்து நன்கு இவர் காலை வாரிவிடப் போகிறாராம். பார்க்க லாமே என்ன ஆகப்போகிறது என்று? நமக்கு வேடிக்கை பார்ப் பதற்கு என்ன ஆயிற்று?'

இவ்வளவு பேசிய பிறகு மேற்கொண்டு பேச்சே நின்று விட்டது. குறைந்தபட்சம் எனது தோழனுக்குக் காதில் ஒன்றும் விழவில்லை. அந்தச் சம்பாஷணையின் இறுதிப் பகுதியில் நான் சற்றுத் திடுக்கிட்டுப்போனது என்னவோ உண்மை. திடுக்கிட்ட தற்குக் காரணம் எனது காலை வாரிவிடுவார்கள் என்பதோ, என்னைப் பரிகாசம் செய்வார்கள் என்பதோ அல்ல; அப்படித் தோன்றுவதற்கு அடியோடு ஒரு காரணமும் இருக்கவில்லை. நாம் துவங்கிய வேலையை அமைதியுடன் செய்யவேண்டும் என்று மனத்தில் எண்ணியிருந்தேன். அதில் ஒருவேளை காரணமின்றித்

தடங்கல் ஏற்படுமோ என்றே நான் அஞ்சினேன். நான் என் வரைக்கும் மிகவும் யோசித்துத்தான் பேசுவது. எந்த ஒரு வேலையும் மிகவும் நிதானமாகச் செய்வதினுல் எவ்வளவு கைகூடுமோ அவ்வளவு, அவசரத்திலுைம், ஆர்ப்பாட்டத்தி னுலும் கைகூடுவதில்லை. மேலும் அவசரப்பட்டுச் செய்வதை நான் விரும்பவும் இல்லை. ஆகவே, நான் உண்மையாகவே மக்க ளுக்கு என்றுமே பிடிக்காதிருக்கும் விஷயங்களைப்பற்றி நேரிடை யாகப் பேசுவதில்லை. ஏதாவது ஒரு கற்றுத் தேர்ந்த ஒரு பெண்ணின் வாழ்க்கையைச் சொல்லி ஒரு கணப்போதில் சொல்லக்கூடிய விஷயமே போதுமானது. ஏதாவது நல்ல பலன் ஏற்படக்கூடியதாக இருக்குமானுல், அது அவ்வளவினுலேயே ஏற்படும் என்பதில் எனக்கு முழு நம்பிக்கை உண்டு.

ஆயிரக்கணக்கான வறண்ட விளக்கவுரைகளினுல் நடக்காதது, ஏதாவதோர் அழகிய உதாரணத்தினுல் நடக்கும் என்பதை அறிந்து நான் மேற்கொண்ட எனது வேலையைத் தொடர்ந்து நடத்தி வந்தேன். மேலும் அதில் வெற்றி கிடைக்கும் என்று நம்புவதற்குரிய அறிகுறிகளும் தென்பட்டன.

என்னைச் சுற்றி நாலா பக்கங்களிலும் நான் செய்து வந்த வேலையில் சிரத்தை கொண்ட வேறு சிலர் தோன்றுவார் கள் என்று நம்புவதற்கும் ஆதாரம் இருந்தது. இவற்றை யெல்லாம் பார்த்தும், அதிலும் முக்கியமாக ஒரு நாள் எங்கள் வீட்டினர் எல்லாரும் என் பேச்சைக் கேட்பதற்காக வந்து உட் கார்ந்ததைப் பார்த்தும், சிலருடைய வயிறு எரிய ஆரம்பித் திருக்கவேண்டும். ஏனெனில், அதன் பிறகு இரண்டாம் முறை பிரசங்கம் செய்ய வந்தபொழுது, அவையோரின் எண்ணிக்கை எப்பொழுதையும்விட அதிகமாயிருந்தது. மேலும் எங்களைப் பற்றிய அவதூறுகள் நிறைந்த கையெழுத்துப் பிரதிகள் அந்தச் சமூகத்தினருக்கு இடையில் அங்கும் இங்கும் விநியோகிக்கப்பட் டிருந்தன என்பது தெரிய வந்தது. அவை மிகவும் மோசமான வார்த்தைகளைக் கொண்டு அமைந்தவையாக, எங்கள்மீது தகாத குற்றச்சாட்டுகளை உடையவையாக இருந்தன. அன்றைத் தினம் அவையோர் எல்லோரும் அந்தப் பிரதியைப் படித்துக் கொண்டிருந்தார்கள் என்பதை நான் கண்டேன். அது என்ன வென்று நான் கேட்டறிய முற்பட்டபொழுது முதலில் அதன் இரகசியம் ஒன்றும் பிடிபடவில்லை. கடைசியில் அதன் ஒரு பிரதி என் கையில் கிடைக்கவே நான் அதைப் படித்துப் பார்த்தேன்.

எதிர்பாராத வகையில் நல்லகாலமாக அன்றைத் தினம் எங்கள் வீட்டு மக்கள் யாருமே அன்று அங்கு இருக்கவில்லை. இருந்த போதிலும் அங்கிருந்த ஓர் அதிகப்பிரசங்கி—அதிகப்பிரசங்கி என்று சொல்லுங்கள் அல்லது இழிந்தவன் என்று சொல்லுங் கள், எது சொன்னாலும் ஒன்றுதான்—ஒருவன் எழுந்து நின்று, இந்தக் கடிதத்தில் எழுதியுள்ள விஷயங்கள் உண்மைதானா என்று என்னைக் கேட்டான். இப்படிக் கேட்டால் அதற்கு என்ன பதில் சொல்லுவது? எங்களுடைய இந்தக் காரி யங்களுக்கு மக்களின் ஆதரவு அதிகரித்து வருவதைப் பார்த்து யாருக்குப் பொறுக்கவில்லையோ, அவனே இப்படிப்பட்ட காரி யத்தைச் செய்திருக்கவேண்டும் என்று நான் நிச்சயமாக அறிந் திருந்தேன். ஆனால், இப்படி வெறுமனே தாள்களை விநியோகம் செய்வதனால் என்ன பயன்? அவன் யார் என்பதைக் கேட்டு அறிந்துகொள்ளுவது எங்களால் எளிதில் முடியக்கூடியதாக இருந்ததா? அப்படி முடிந்திருந்தாலும், அதனால் மேற்கொண்டு என்ன பயன் ஏற்படக்கூடியதாக இருந்தது? அந்த ஆள் அந்த நேரத்தில் அந்தக் கேள்வியைக் கேட்டதும் எனது உடல் எல்லாம் சினத்தால் எரிந்தது.

அன்றைத் தினம் வேண்டுமென்றே பெரிய கூட்டம் கூட்டி, அவர்களிடையே இந்தத் தாள்கள் விநியோகிக்கப்பட்டிருந்தன. அதன் பொருள் எனக்கு இப்பொழுதுதான் புரிந்தது. நான் மனிதன்தான். அதிலும், எந்த வேலையை இந்த வகையில் நான் தொடங்கியிருந்தேனோ, அந்த வேலைக்காக எந்தவித அலாதி யான அமைதி வேண்டியிருந்ததோ, அதை நான் இன்னமும் பெற் றிருக்கவில்லை. அது அனுபவத்தினால்தான் ஏற்படுகிறது. இதனால் நான் மிகவும் கோபத்துடன் அந்தத் தாள்களை அச் சடித்து விநியோகம் செய்தவனைப்பற்றியும், அவனுடைய இழிந்த நோக்கத்தைப்பற்றியும் சற்றுப் படபடப்பாகப் பேசி விட்டேன். பிறகு என்ன? ஆட்கள் தயாராக வந்திருந்தார் கள். அவர்கள் கைதட்டியும், ஹுர்யோ என்று இரைச்சலிட்டும் ஆர்ப்பாட்டம் செய்தார்கள். யாரோ இடையிலேயே எழுந்து நின்று தாறுமாறாகப் பேசி எல்லாரையும் சிரிக்க வைத்தான். இவ்வாறெல்லாம் நடந்துகொண்டிருந்தது. எனது பிரசங்கத் தொடரில் இப்படியெல்லாம் ஆகும் என்று நான் எண்ணியிருக்கவில்லை. இன்று நடந்தது, முற்றும் எதிர் பாராதது, திடீரென நடந்தது. அதை யாராவது வெறுப்புக்

காரணமாக, வேண்டுமென்றே திட்டமிட்டுச் செய்திருக்க வேண்டும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இருக்கவில்லை. அதற்கு முந்தின நாள் அக்கா, சுந்தரி முதலானவர்கள் பிரசங் கத்துக்கு வந்திருந்தார்கள். அதேபோன்று அன்றும் வருவார்கள் என்று இந்தத் துர்ப்புத்தியுடைய மக்கள் உறுதியாக எண்ணி ஞர்கள் போலும். அவர்கள் வருவதாகவும் இருந்தார்கள். ஆனால், அன்றைத் தினம் அவர்கள் வரவில்லை என்பது சிறிதும் எதிர்பாராமல் நடந்தது. அவர்கள் இருந்திருந்தால், அங்கிருந்த பொல்லாத மனிதர்கள் ஒருவேளை அவர்களையும் பரிகசித்திருப் பார்களோ, என்னவோ? யார் அறிவார்?

இப்பொழுது எனக்கு என்ன பேசுவது, என்ன செய்வது என்று புரியவில்லை. பெரிய குழப்பத்தில் சிக்கியவன் போலானேன். எனது மனோதிடம் குன்றிப் போய்விட்டது. மௌனமாக உட்காரலாம் என்றால், அவர்கள் செய்த கலாட்டா பொறுக்க முடியவில்லை. இறுதியில் இப்படிப்பட்ட வேளையிலும் எப்படி ஒரு தீரம் வருகிறதோ அது வந்து, இப்படிப்பட்ட சூழ்நிலையில் நம்மைவிட உயர்ந்த மனிதர்கள் என்ன செய்தார்கள் என்ற நினைவு வந்து, நான் மௌனமாக எனது இடத்தில் ஒரு புத்த கத்தின் தாள்களைப் புரட்டிய வண்ணம் உட்கார்ந்திருந்தேன்.

அவையினர் என்ன பேசினாலும் பேசட்டும், கை படும் அளவிற்கு வரவில்லையென்றால் பிழைத்தோம் என்று மனத் தில் சொல்லிக்கொண்டேன். நான் மிகவும் அமைதியுடன் புத்த கத்தின் தாள்களைப் புரட்டிக்கொண்டிருக்கிறேன் என்பதைப் பார்த்ததும், புத்தகத்தையே தட்டிவிடவேண்டும் என்று ஒரு சிலரின் மனத்தில் தோன்றியிருக்கலாம். அதுபோன்ற சொற் களும் ஓரிருவரின் வாயிலிருந்து கிளம்பின. ஒருவன் மற்றொரு வனைத் தள்ளிக்கொண்டே எனக்கு அருகில் வந்தான். வந்து அவனிடம், 'ஏய், உன் மனைவி வீட்டில் தங்குவதில்லை என்றால் விட்டுவிடு அவளை. இவர்களிடம் வந்திருப்பாள்!' என்றும் சொன்னான். அதைக் கேட்டு என் உடலெல்லாம் இரத்தம் கொதித்தது. ஆனால் என்ன செய்வேன்? நான் பாட்டுக்குப் பேசாமல் உட்கார்ந்திருந்தேன். ஒருவன் கேட்டான்: 'பிரசங்கம் செய்கிறாயா? செய்யேன், பிரசங்கம்! ஏன் பேசாமல் இருக்கிறாய்?'

இவ்வாறு ஒவ்வொருவரும் ஏதாவது கேட்டுக்கொண் டிருந்தார்கள். ஆனால், ஒரு வேடிக்கை நான் பார்த்தது என்ன வென்றால், இப்படிப் போக்கிரித்தனமும், பொல்லாத்தனமும்

செய்யும் குழுவினர் குறிப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகவும், இன்றுவரை என்றுமே வந்திராதவர்களாகவுமே இருந்தார்கள். சிறிது நேரத்திலேயே நான் விடுபடுவேன் என்று நினைத்திருந்தேன். ஆனால் அதற்குரிய ஓர் அறிகுறியும் தென்படவில்லை. ஆகவே இப்பொழுது ஏதாவது வழி செய்து தான் ஆகவேண்டும் என்று நான் திடத்துடன் எழுந்திருந்தேன். பேசாமல் எனது கைத்தடியை எடுத்துக்கொண்டு வெளியில் போவதற்கு வழியான கதவை நோக்கி மெதுவாக, ஆனால் உறுதியுடன் அடியெடுத்து வைத்துச் செல்லலானேன். இப்பொழுது சட்டென்று விரைந்து வெளியில் சென்றாலொழிய வேறு வழியில்லை என்று எனக்கு நிச்சயமாகத் தோன்றியது. கதவருகில் செல்லும்வரை எனது வீறுப்பைக் காண்பித்தாலொழிய வேறு வழியில்லை. இப்படிப்பட்ட கூத்துக்களைச் செய்வதற்காக வருபவர்கள் எல்லோருமே தைரியம் உடையவர்களாக இருக்கிறார்கள் என்பதில்லை. நாம் வீறுப்பைக் காண்பித்தால் தப்பித்துக்கொண்டு விடலாம் என்று எண்ணி நான் நடந்தேன். கதவருகில் சிறிது தள்ளுதல், உந்துதல் காரணமாகத் துன்பம் ஏற்பட்டது. ஆனால், தலைப்பாகை, சிலைப்பாகை ஏதோ விழுந்ததுடன் சரி; நான் தப்பிக் கிளம்பிச் சென்றேன்.

இந்தப் புதிய குறையை அனுபவித்த பிறகு உள்ளம் எவ்வளவு உற்சாகம் இழந்ததாக ஆயிற்று! இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் இங்கிலாந்தில் சிலருடைய வாழ்க்கையில் நடந்திருப்பதை நான் படித்திருக்கிறேன். இல்லை என்பது இல்லை. ஆனால், புத்தகத்தில் படித்தறிவதிலும், உண்மையில் கண்டறிவதிலும்—இல்லை, நேரில் அநுபவித்து உணர்வதிலும்—எவ்வளவு வேறுபாடு? மக்களுக்குப் பிடிக்காத எந்த ஒரு விஷயமும், அது எவ்வளவுதான் சிறந்தது ஆயினும், அதைச் செய்பவனுக்கும், அதைச் செய்யுங்கள் என்று விளக்கிச் சொல்பவனுக்கும் இப்படிப்பட்ட தொல்லைகளை ஏற்படுத்தத்தான் செய்யும். நடந்த நிகழ்ச்சிகளைப்பற்றிய எல்லா விவரங்களையும் வீட்டிலுள்ள எல்லோரிடமும் நான் சொன்னேன். ஒரு விபத்திலும் சிக்கிக்கொள்ளாமல் நழுவி நல்லபடியாக நான் வந்து சேர்ந்ததை எண்ணி அவர்கள் எல்லோரும் மிகவும் மகிழ்ந்தார்கள். நடந்தவற்றையெல்லாம் கேட்டு அக்கா மிகவும் வருத்தம் அடைந்தாள். மக்களின் பொல்லாத்தனத்தைப்பற்றி நாங்கள் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது சுந்தரியின் வாயினின்றும் சட்டென்று பின்

வரும் வாக்கியங்கள் வெளிப்பட்டன: 'இவ்வாறு மீண்டும் நடப்பதைவிட, இந்த உரைகளையே நிறுத்திவிடுவதுதான் நல்லது. அவற்றால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை. அதற்கு மாறாக, மறுபடியும் இவ்வாறு நிகழ்ந்தால், வேண்டாத துன்பங்கள்தான் ஏற்படும்.'

அவள் மிகுந்த கவலையுடன் இவ்வாறு சொன்னாள். எனவே அதைக் கேட்டதும் அந்தச் சமயத்தில் எனக்கு ஏதோ விசித்திரமான உணர்ச்சி ஏற்பட்டது. நான் கல்லாகிச் சமைந்து உட்கார்ந்திருந்தேன். அதற்குள் அக்கா நெற்றியில் சுருக்கங்களுடன் சுந்தரியைத் திரும்பிப் பார்த்தவாறு சொன்னாள்: 'என்ன? இப்படி ஒருமுறை நிகழ்ந்தது என்று ஏற்றுக் கொண்ட வேலையைக் கைவிட்டு விடுவதா? சரிதான்! வேண்டுமானால் நமது பாதுகாப்பிற்காக நாம் அதிகக் கவனத்துடன் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட கூட்டத்தினர் மீண்டும் அங்கு வராமல் இருப்பதற்காக ஏதாவது ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். ஆனால், இவ்வாறு நடந்தது என்பதற்காக நமது வேலையை அடியோடு விட்டுவிடுவது எனக்கு என்னவோம்மா பிடிக்கவில்லை. தம்பி, நீ என்ன, விளக்கவுரைகள் தருவதை நிறுத்திவிடப் போகிறாயா? பிறகு அதில் என்ன இருக்கிறது? உனக்குத் துன்பம் ஏற்பட்டிருக்கும், உயிருக்கே ஆபத்து ஏற்படுமோ என்றும் அச்சம் ஏற்பட்டிருக்கும். இது எனக்குத் தெரிகிறது. ஆனால் அதற்காக நமது வேலையை நிறுத்திவிடுவது ஒன்றும் சரியல்ல.'

இப்படிச் சொல்லி, என்னிடமிருந்து என்ன பதில் வருகிறது என்பதைப் பார்ப்பதற்காகத்தானோ என்னவோ அவள் ஆர்வம் மிகுந்த கண்களுடன் இமை கொட்டாமல் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் அவள் மிகுந்த விசித்திரமாகக் காணப்பட்டாள். அவளுடைய உள்மனம், நல்லொழுக்கங்கள், கொள்கைகள் யாவும் அவள் முகத்தில் தெளிவாக எனக்குத் தெரிந்தன.

நான் மிகுந்த மதிப்புடன் மௌனமாக அவளைப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தேன். அவளுடைய அந்தச் சொற்கள் நான் அநுபவித்ததையெல்லாம் முற்றும் மறக்கச் செய்தன. நான் எனக்குள்ளேயே சொல்லிக்கொண்டேன், 'சிறு வயதில் எதற்கும் அஞ்சுபவளாக இருந்த, அம்மாவின் முன்னால் நிற்பதற்குக்கூடத் தயங்கிக்கொண்டிருந்த, எப்பொழுது பார்த்தாலும் பாட்டியின் பின்னால் ஒடுங்கி நிற்கும் அதே அக்காதானா இவள்?' என்று.

# 56. என்ன ஆகப்போகிறது?

அக்காவின் கணவன் இறந்தும் பல நாட்கள்வரை அவளுடைய கணவனின் பக்கத்தைச் சார்ந்த மக்களால் ஏற்பட்ட துன்பம் அக்காவையும், எங்களையும் சூழ்ந்துகொண்டுதான் இருந்தது. இல்லாத பொல்லாத செய்திகளைக் கிளப்பி அவர்கள் அவளையும், எங்களையும் துன்புறுத்திக்கொண்டே இருந்தார்கள். யாரோ தூரத்து உறவுக்காரன் ஒருவனை அழைத்து வந்து வழக்குத் தொடுக்க வைத்தார்கள். அந்தத் தொல்லை பல நாள் இருக்கத்தான் செய்தது. மேற்கொண்டு பலவகைப்பட்ட பெயரில்லாத மொட்டைக் கடிதங்களை எழுதியும், அங்கிருந்து எங்களுக்குத் தொல்லை ஏற்படும் வகையில் உபாயங்கள் செய்யப்பட்டன. இந்த இடைக்காலத்தில் அக்காவின் கணவனைக் கெட்ட பழக்கங்களில் ஈடுபடும்படி செய்து, அவனுக்கு மோசம் செய்துவிட்டு, மீண்டும் துன்புறுத்துவதற்கென்று முளைத்து நின்ற அந்தப் பொல்லாதவன் தன் பெயராலும் ஒரு வழக்கைத் தொடுத்தான். ஆயிரம் ரூபாய்களுக்காக மேலும் அதை நிரூபிப்பதற்காக ஒரு கடன் பத்திரத்தை வெளிப்படுத்தினான். அந்தக் கடன் பத்திரத்தைப் பார்த்தால் அவளுடைய கணவன் சுமார் ஒரு வருஷத்துக்கு முன்பு எழுதிக் கொடுத்ததாகத் தெரிந்தது. கையெழுத்தும் ஒன்றுபோலவே இருந்தது. மற்ற எல்லா வழக்குகளும் தொடுக்கப்பட்டிருப்பதைப் பார்த்ததும் தன் விருப்பப்படி முடிவு ஏற்படப்போவதில்லை என்று அறிந்து, அவன் லேவாதேவிகளின் மூலம் வற்புறுத்திப் பழிவாங்கும் உபாயத்தைச் செய்தான் என எனக்குத் தோன்றியது. மற்ற எல்லா வகை இன்னல்களும் பரவாயில்லை என்றபடி இருந்தன. யாராவது நிந்தனை செய்தார்கள் என்பதாலோ, யாரேனும் பெயரில்லாத மொட்டைக் கடிதங்களை அனுப்பிப் போக்கிரித்தனம் செய்தார்கள் என்பதாலோ, அத்தனை வருத்தமாக இருக்கவில்லை. அதில் என்ன இருக்கிறது என்று அலட்சியப்படுத்தி மனத்தைச் சமாதானப்படுத்திக்கொள்ள முடிந்தது. ஆனால், இப்படிப் பணம் பறிக்கப்படுவது, அதுவும் அநியாயமான முறை

யில், எங்களுக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது. எதைக் கொடுக்கவேண்டும் என்பது நியாயமாக இருந்ததோ, அதைக் கொடுத்துவிடவேண்டியதுதான். அதில் அவளுக்கு அணுவளவும் வருத்தமும் ஏற்படவில்லை. ஆனால், எது நியாயமாகக் கொடுக்கவேண்டி இருக்கவில்லையோ, பொய்யாக உருவாக்கப்பட்டதோ, அதிலிருக்கும் பொய்மையைச் சந்தேகமின்றி நாங்கள் அறிந்திருந்ததால், அதைக் கொடுக்கவேண்டும் என்று அரசாங்கம் உத்தரவிட்டால் எப்படியிருக்கும்? அவை எல்லாவற்றையும் கொடுத்துவிட்டால் அல்லது அரசாங்கத்தின் முடிவுப்படி அவை யாவற்றையும் கொடுக்கவேண்டும் என்ற தீர்ப்பு ஏற்பட்டு, அதைத் தீர்க்கவேண்டிய பாரம் எங்கள் தலை மீது சுமத்தப்பட்டால், பிறகு என்ன மிகுந்திருக்கும்?

இப்படிப்பட்ட கவலைகளினால் எங்கள் மனம் துன்புற்றது. அப்படிக் கொடுக்கவேண்டியவற்றுள், பல உண்மையாகக் கொடுக்கப்படவேண்டியவையாக இருந்தாலும், சில முற்றும் பொய்யானவை—முற்றும் திரிக்கப்பட்டவை—என்பது எங்களுடைய உறுதியான நம்பிக்கை. ஆனால், எங்கள் மனத்தின் வெறும் நம்பிக்கை கோர்ட்டில் எப்படிப் பயன்படப் போகிறது? கோர்ட்டில் சரியான சான்றுகள் வேண்டும். நான் பெரிய வக்கீல் ஆகியிருந்தேன். மிகச் சிறந்த சட்டங்களை அறிந்திருந்தேன் என்றால் என்ன ஆயிற்று! அக்காவின் கணவன் ஒன்றும் பைத்தியக்காரன் ஆகியிருக்கவில்லை. கடன் பத்திரங்களின் கீழ் கையெழுத்து இட்டிருந்தது, அவனேதான் என்பதில் சந்தேகம் இருக்கவில்லை. ஆனால், கடன் பத்திரங்களில் எழுதப்பட்டிருந்த தொகையை அவர் கையில் வாங்கிக்கூட இருக்க மாட்டார் என்பதுதான் எங்கள் மனத்தில் இருந்த சந்தேகம். குறைந்தபட்சம் கடன் பத்திரத்தில் எழுதியிருந்த அளவுத் தொகை முழுவதையும் வாங்கியே இருக்கமாட்டார். ஆனால், இதை நிரூபிப்பது எப்படி?

இப்படிப்பட்ட தொல்லைகள் இடையறாது ஏற்பட்டுக்கொண்டிருக்கவே நாங்கள் எல்லாரும் மிகவும் துன்பத்தை அநுபவித்தோம். நான் தொழிலைத் தொடங்கியிருந்தேன். அதை மிகுந்த கவனத்துடன், எந்தக் காரணத்தினாலும் நிலைகுலைந்துவிடாமல், முடிந்தவரை நடத்திச் சென்றேன். ஆனால், நாளுக்கு நாள் அங்கேயும் பொல்லாத ஆட்களின் எண்ணிக்கை பெருகிக்கொண்டே வந்தது. முதலில் சிரத்தையுடன் சிலர் வந்துகொண்

டிருந்தபோது, ஏதாவது நற்பயன் ஏற்படும் என்று எனக்குத் தோன்றியிருந்தது. ஆனால், இப்பொழுது அப்படித் தோன்றாமல் போயிற்று. ஏனெனில், இப்போது வருபவர்கள் அறிவை அடையும் நோக்கத்துடன் வராமல், என் காலை வாரிவிடுவதற் காக என்றே வந்துகொண்டிருந்தார்கள்.

அன்றைத் தினம் அந்த விசித்திரமான நிகழ்ச்சி நடந்தது; அன்றிலிருந்து இந்தப் புதிய குழுவினர் வரத் தொடங்கினார்கள். முதல் முதலில் எவ்வளவோ நாட்கள் அவர்கள் வருவது எனக்குப் பிடிக்காமல் இருந்தது. மிகுந்த ஆர்வத்துடன் தொடங்கிய வேலை, இந்த வகையில்தான் நடக்கும் என்றால், அதை நிறுத்திவிட்டாலும் நல்லதுதான் என்று எனக்குத் தோன்றியது. எத்தனை நாடுகளைப்பற்றிய பல்வேறு விஷயங்களையும், நாட்டின் சரித்திரத்தில் காணும் முக்கியமான நிகழ்ச்சிகளையும், அவற்றினின்றும் கற்றுக் கொள்ளக்கூடிய பாடங்களையும் விளக்கிச் சொன்னாலும் கூட, அவற்றால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை. அந்த எனது முயற்சியின் சிறப்பைப்பற்றி யாருமே அறிந்துகொள்ளப் போவ தில்லை என்று எனக்குத் தோன்ற ஆரம்பித்திருந்தது. குடும்பத்தி லிருந்த மேற்கூறப்பட்ட கவலைகளும், அத்துடன் தொடங்கி யிருந்த வேலையில் வெற்றியடைவதுபற்றிய அவநம்பிக்கையும் சேர்ந்து என் மனத்தின் நிலை எப்படி இருந்திருக்கும் என்பதை நீங்களே ஊகித்துக்கொள்ளலாம். நான் மிகவும் கவலையில் மூழ்கியவனாக இருந்தேன். எனது கதையின் பிற்பகுதி யில் இந்த நாட்கள் (கிருஷ்ணபட்சத்தின்) தேய்பிறைக் காலத் தின் இரவைப்போல் இருந்தன. எனது முயற்சிகளினால் நற்பலன் ஏற்படும் அறிகுறிகள் கண்ணில் தென்படவேண்டும் என்ற ஆர்வம் எந்த அளவில் வளர்ந்து சென்றதோ, அதே அளவில் அந்த அடையாளங்கள் தென்படுவதற்குரிய வாய்ப்புகள் குறைந்து வருவதும் புலப்பட்டது.

அக்காவுக்கு இன்றுவரையிலான தனது வாழ்க்கையில் மிகுந்த அடிமைத்தனம் அனுபவிக்க வேண்டிவந்தது. ஆகவே இப்போதா வது கணவனுக்குப் பிறகு, பணம் முதலியவை இருந்து, அவ ளுடைய நாட்கள் அவள் தொடங்கிய வேலையில் இன்பகர மாகக் கழியவேண்டும் என்று என் மனம் விரும்பியது. அவள் கையினால் அந்தப் பணம் உகந்ததாக இல்லாத காரியங்களுக் காக என்ன, தனது சொந்தக் காரியங்களுக்காகக்கூடப் பயன்

படுத்தப்படாமல் ஏதேனும் பொதுக் காரியங்களில் ஈடுபடுத்தப் படும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இருக்கவில்லை. அதனால்தான், அவள் கையில் அவளுடைய எல்லாச் சொத்துக் களும் தங்கினால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நான் எண்ணினேன்.

அதனால் அவளிடம் பண விஷயத்தில் இப்படிப்பட்ட எண்ணத்தை வெளியிட்டபொழுது அவள் சட்டென்று என் னிடம் சொன்னாள்: 'தம்பி, அந்தப் பணத்தின் கதை என்ன வாக இருக்கிறது? மேலும் இத்தனை பணத்தை வைத்துக் கொண்டு எனக்கு என்னதான் செய்யவேண்டி இருக்கிறது? எனது நோக்கத்தின்படி ஏதாவது காரியம் செய்வதற் குப் பணம் தேவைப்படுமானால், இருக்கவேண்டியதுதான். அதற்காகப் பணம் வேண்டும்போல் தோன்றுகிறது. ஆனால் தங்கவில்லை என்றால் வேண்டாம். என்னைப்பற்றிய கவலை எனக் குச் சிறிதும் இல்லை. எனது வயிற்றுக்காக, எனது சுகத்துக்காக நான் கவலைப்பட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கவேண்டுமா? ஆனால், மதில்மீது இருக்கும் பூனை எந்தப் பக்கம் குதிக்கிறது என்று முடிவாகத் தெரிந்துவிடவேண்டும் என்று மட்டுந்தான் நான் விரும்புகிறேன். வேறு ஒன்றும் இல்லை. கடன்காரர்கள் தான் என்ன செய்வார்கள்?'

அவள் சொல்வது முக்காலும் சரியாகத்தான் இருந்தது. ஆனால், கடனை அடைத்துங்கூட அந்தச் சொத்து விஷயத்தி லிருந்து நாம் விடுபட்டுவிடுவோம், மீண்டும் அதனால் தொல்லை இருக்காது என்று அவளுக்குத் தோன்றியிருந்தது மட்டும் அவ் வளவு சரியானதாகப் படவில்லை. சொத்து சம்பந்தமாக ஏதாவது ஒரு தொல்லை இருந்துகொண்டே இருந்தது. ஒரு சொந்தக் காரன், தன் வழக்கில் தோற்றான் என்றால், உடனேயே மற்றொருவன் முளைத்து நின்றான். சொத்துக்களிலிருந்து நிரந்தர மான வருவாய் இருந்ததால், அதை அடையவேண்டும் என்ற பேராசை எவ்வளவோ பேருக்கு இருந்தது. மேலும் அவ ளுடைய அந்த அஜாதசத்ரு அவளுக்குத் தொல்லை கொடுக்கத் தான் வேண்டும் என்ற முடிவு செய்திருந்ததால், ஏதாவது சோளக்காட்டுப் பொம்மைகளை நிறுத்தி வைத்து அவளுக்கும், எங்களுக்கும் தொல்லை கொடுத்துக்கொண்டே இருந்தான்.

# 57. கடலில் அமைதியா?

என்ன செய்வது, என்ன செய்யாமல் இருப்பது என்று குழப்பம் அடைந்த நிலையில் நான் இருந்தேன். எந்தக் காரியம் மக்களின் முன்னேற்றத்துக்குக் காரணமாக இருக்கிறதோ, அது நம் கையால் ஆகவேண்டும் என்பது எனது பெரிய விருப்பம். ஆனால் அந்த ஆசை எப்படி நிறைவேறப் போகிறது? நான் எந்த ஒரு காரியத்தைச் செய்ய முற்பட்டாலும், அதன் அடியில் இருக்கும் எனது நோக்கம் மிகவும் தூயதாக இருந்தது. இருந்தபோதிலும் அது பல பேருக்குத் தெரியாமல் இருந்தது. அதைவிட மோசம், என் நோக்கங்களை விபரீதமாகப் புரிந்துகொண்டு, எனது வேலையில் எவ்வளவு இடையூறுகளைக் கொண்டுவரமுடியுமோ அவ்வளவையும் கொண்டுவருவதற்குச் சிலர் முயன்றார்கள். நான் உபந்நியாசம் செய்கிறேனென்று பாசாங்கு செய்தவாறு இளம் பையன்களைக் கெடுக்கிறேன் என்ற குற்றச்சாட்டை ஒவ்வொரு வாரமும் ஏதாவது ஒரு பத்திரிகை என்மீது சுமத்திக்கொண்டிருந்தது. எனது எழுத்து வேலைகளால், எனது விளக்கவுரைகளால், எனது நல்லுரைகளால் எனக்கு எத்தனை நண்பர்கள் ஏற்படவேண்டும் என்று நான் விரும்பியிருந்தேனோ, அவ்வளவு நண்பர்கள் கிடைக்கவில்லை. அது மட்டும் அல்ல, எத்தனையோ பகைவர்கள் தோன்றிவிட்டிருந்தார்கள். நான் தெருவில் போய்க் கொண்டிருக்கும்பொழுது மக்கள் என்மீது விசித்திரமான பார்வையை வீசினார்கள். சிலர் கண்களில் வெறுப்பு, சிலர் பார்வையில் வட்டியின் எண்ணம், சிலருடையதில் வேடிக்கை, பரிகாசம் முதலியன தெரியும். பலருடைய பார்வையில் நான் ஒரு விசித்திரப் பிராணியாக இருந்தேன். எனவே, அவர்களுக்கு விசித்திரமாகத் தோன்றி, அவர்களுடைய சீண்டுதல்களுக்கும் வசைமாரிகளுக்கும் இலக்காகி, எரிச்சலூட்டப்பட்டு, அவர்களால் வேடிக்கை பார்க்கப்படுவதற்கென்றே நான் பிறவி எடுத்திருக்கிறேன் என்றுதான் எல்லாரும் நினைத்ததாகத் தோன்றியது.

சில சமயங்களில் நான் முற்றும் நம்பிக்கை இழந்தவனாக ஆகிவிடுவதுண்டு. அப்படிப்பட்ட சமயங்களும் வந்தன. என்

கையால் ஏதாவது கைகூடும் என்ற நம்பிக்கை எள்ளளவும் எனக்கு ஏற்படவில்லை. ஒரு நாள் மாலையில் நான் தனியாகவே சுற்றப் போயிருந்தேன். நடந்து சென்றவாறே இருந்த நான், எந்தப் பக்கம் போகிறேன் என்பதைக்கூட உணரவில்லை. களைப்புற்றதாகத் தோன்றவே ஆற்றங்கரை அருகில் இருந்த ஒரு கற்பாறையின்மீது சென்று அமர்ந்தேன். நாலா புறத்திலும் அமைதி நிலவியிருந்தது. எங்கிருந்தும் எந்தவித மான ஒலியும் கேட்கவில்லை. உள்ளத்தில் இருந்த கேள்வி கண் முன்னால் உருவெடுத்து நின்றாற்போல் தோன்றியது. எனக்கு வேண்டியதெல்லாம் ஒன்றுதான். அதைச் சாதிக்கும் வழியும் ஒன்றே ஒன்றுதான் இருக்கவேண்டும். அது எது? பற்பல வித மான சாதனங்கள் இல்லை என்பதை எனது உள்ளம் தெளிவாகத் தெரிந்துகொண்டது. ஆனால், அந்த ஒரே சாதனந்தான் எது?

இந்தக் கேள்வி அன்று மாலை என்னை மிகவும் பைத்தியமாக ஆக்கியது. உட்கார்ந்திருந்த இடத்திலேயே நான் வெகுநேரம் இருந்தேன். வீட்டுக்குப் போவதைப்பற்றியோ, வேறு எதைப் பற்றியுமோ எனக்கு அடியோடு நினைவு இருக்கவில்லை. எவ் வளவோ நேரத்திற்குப் பிறகு சிறிது தன்னுணர்வு பெற்றேன்!

அன்று நிலவு பொழிந்துகொண் டிருந்தது. சூழ்நிலையில் எங்கும் அமைதி. அப்பொழுது மனிதர் நடமாடும் சத்தமோ, பறவைகளின் ஒலியோ கேட்கவில்லை. காற்று மரக்கிளைகளை அசைத்துச் சென்றதனால், அந்த அசைவினால் ஏற்பட்ட ஒலி மட்டுமே காதில் விழுந்துகொண்டிருந்தது. குளிர்ந்த காற்று வீசிக்கொண் டிருந்தது. உள்ளத்தைத் திகைக்க வைக்கும் எண்ணங்களில் மூழ்கி, அவற்றை விடுவிப்பதில் ஈடுபடுவதற்கு அந்தச் சமயம் மிகவும் ஏற்றதாக இருந்தது. ஆனால், அந்த எண்ணங்கள் அவ்வளவு எளிதில் ஒரு முடிவுக்கு வரக்கூடியவை யாகவா இருந்தன? இறுதியில் ஒரு முடிவும் தோன்றாமல் போகவே நான் அங்கிருந்து எழுந்து சென்றேன். சட்டென்று பையில் கையைப் போட்டுக் கடிகாரத்தை எடுத்துப் பார்த்தால் மணி ஒன்பது அடிக்கவிருந்தது. எனக்குப் பைத்தியம் பிடித்ததுபோல் ஆகியிருந்ததால்தான் இப்படிப் பொழுதுபோனது தெரியாமல் இருந்தேன் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

வீட்டில் இருப்பவர்கள் எவ்வளவு கவலைப்படுவார்கள்! அவர்கள் மனத்தில் என்ன என்ன எண்ணங்கள் தோன்றி யிருக்குமோ என்ற கேள்வி என் உள்ளத்தில் எழுந்ததும் எனக்கு

மிகவும் வருத்தமாக இருந்தது. நான் எவ்வளவோ தொலைவில் வந்துவிட்டிருந்தேன். வீட்டைச் சென்று அடைவதற்குக் குறைந்தபட்சம் முக்கால் மணி நேரமாவது ஆகும் என்று தோன்றியது. நான் விரைந்து கிளம்பினேன்.

நான் நினைத்தபடியே என்னைப்பற்றிய கவலையினால் வீட்டினர் மிகவும் கலவரம் அடைந்திருந்தார்கள். அண்ணாவும், அக்காவும் என்னைத் தேடுவதற்காக வெளியில் சென்றிருந்தார்கள். வீட்டில் மிகுந்திருந்தவர்கள் உள்ளுக்கும் வாசலுக்கும், மாடிக்கும் கீழுக்கு மாக நடைபோட்டுக்கொண்டிருந்தார்கள். முன்போன்ற சம்பவம் நிகழ்ந்து, எனக்கு ஏதேனும் ஆகிவிட்டிருக்காதே? இல்லை, நான் எங்கோ தனியாகப் போவதைப் பார்த்து யாரேனும் என்னைத் தொடர்ந்து வந்து அடித்திருக்கமாட்டார்களே? இந்தக் கேள்விகள் அவர்களுடைய மனத்தில் தோன்றுவது இயற்கை தான். இவ்வாறான அச்சம் அவர்களுக்கு ஏற்படுவது முற்றும் சகஜந்தானே! ஏனெனில், அவ்வாறு என்னைத் தண்டிக்கப் போவதாகச் சிலரிடமிருந்து பயமுறுத்தல் ஏற்பட்டிருந்தது.

நல்லபடியாக நான் வீட்டையடைந்ததும் எல்லாரும் ஆனந்தம் அடைந்தார்கள். அக்காவும், அண்ணாவும் சிறிது நேரத்திலேயே திரும்பி வந்தார்கள். அவர்கள் என்ன என்ன செய்தார்கள், எங்கெல்லாம் சென்று என்னைத் தேடினார்கள் என்பதையெல்லாம் என்னிடம் சொன்னார்கள். என்னால் சிரிக்கத்தான் முடிந்தது. வெகுநேரம் ஆகிவிட்டிருந்ததால் விரைவிலேயே நாங்கள் யாவரும் உறங்கச் சென்றோம்.

அன்று இரவிலும் என்னுடைய எண்ணங்களைத் தவிர எனக்கு வேறு எந்த நினைவும் இருக்கவில்லை. சொன்னால் யாருக்கும் நம்பிக்கை ஏற்படாது. ஆனால், சொல்லப் போவது வார்த்தைக்கு வார்த்தை உண்மை. அன்று இரவு எனக்குக் கணப்போதும் தூக்கம் வரவில்லை. ஏதோ உயிருக்கே ஏற்பட்ட ஆபத்தில் சிக்கியவனைப்போல் நான் தீவிரமாக ஆலோசித்துக்கொண்டிருந்தேன். சிறிது நேரம் படுக்கையில் கிடந்தேன். பிறகு தூக்கம் வரவில்லை என்று அருகிலிருந்த ஒரு புதிய புத்தகத்தை எடுத்து அதன் தாள்களைப் புரட்டியவண்ணம் இருந்தேன். அதைப் படிப்பதிலும் மனம் செல்லவில்லை. பிறகு வெறுமனே அங்கும் இங்கும் நடை போடலானேன். இந்த எல்லாச் செயல்களையும் செய்யும்போது மூளை யோசிக்கும் தன் தொழிலை இடையறாது செய்துகொண்டுதான் இருந்தது. முன்பு எதைப்பற்றி

யோசித்துக்கொண்டிருந்தேனே, அந்த முக்கியக் கேள்விக்கு விடை கண்டுபிடிக்க வேண்டுமென்று நான் தவித்துக் கொண்டிருந்தேன். அங்கும் இங்கும் நடந்து நடந்து களைத்துப் போனேன். பிறகு ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன். அங்கிருந்து எழுந்தேன். புத்தகங்கள் வைத்திருந்த ஒரு சிறிய அலமாரி இருந்தது, அதன் அருகில் சென்று நின்றேன். எண்ணிக்கையில் சொற்பமானவையாக இருந்தபொழுதிலும் அதில் நல்ல நல்ல புத்தகங்கள் இருந்தன. அதன்முன் நின்று உணர்ச்சியிழந்த கண்க ளால் அவற்றின்மீது பார்வையைச் செலுத்தினேன், அந்தப் புத்தகங்களைக் காண்பதாலேயே எனது மண்டையைக் குழப்பிக் கொண்டிருக்கும் கேள்விகளுக்கு ஏதோ பதில் கிடைத்துவிடும் போல்!

இப்படிப்பட்ட உணர்ச்சி வேகத்தைக் கொடுக்கும் எழுத் தாளர்களின் புத்தகங்கள் அவற்றில் இருந்தன. அவற்றை நான் படித்திருந்தேன். சிலவற்றை இரண்டு அல்லது மூன்று முறைகளும் கூடப் படித்திருந்தேன். ஆனால், இந்தச் சமயத்தில் அவற்றி லிருந்து சேகரித்த அறிவின் நேரடியான உதவி எனக்குக் கிடைக் கும் என்று தோன்றவில்லை. அதை அடையப் பெறுவது எப்படி? இதற்கான பதிலை இரவு எனக்குக் கொடுக்குமா? என்ன செய் தாலும் கொடுக்காது. எனது மண்டை கொதிக்க ஆரம்பித்தது. நான் பைத்தியமாக ஆகிவிடப்போவதில்லையே? என்னையே நான் இந்தக் கேள்வி கேட்டுக்கொண்டேன். ஆனால், அந்தக் கேள்வி யின் பதில், 'இல்லை; என்னைத் துன்புறுத்திக்கொண்டிருக்கும் கேள்விகள் பைத்தியமாக்கும் கேள்விகள் அல்ல' என்றுதான் தோன்றியது. மேலும் அப்படி ஒருவேளை பைத்தியம் பிடித்துவிடு மானாலும், அதனால் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. இப்படி யாருக்குப் பைத்தியம் பிடிக்குமோ அவன்தான் பாக்கியசாலி! இப்படிப் பைத்தியம் பிடித்தால்தான் நம் கையால் ஏதாவது நடக்கும் என்றும் மனத்தில் தோன்றியது. அப்படிப் பைத்தியம் பிடிக்கும் அளவிற்கு இந்த உடல் புண்ணியம் செய்யவில்லை. அப்படிப்பட்ட பைத்தியத்தினால் பைத்தியம் ஆகிறவர்களும், கடைசியில் எல்லா மக்கள் இனத்தினரின் நல்லாசிகளைப் பெறுப வர்களுமான பைத்தியங்கள் இவ்வுலகில் மிகக் குறைந்த அளவில் தான் உருவாகியிருக்கிறார்கள். அவர்களில் ஒருவராக நாம் நிச்சயமாக இல்லை என்றும் உள்ளம் எனக்குச் சொல்லியது.

மேற்சொன்னவாறு நான் இரவைக் கழித்துக்கொண் டிருந்தேன். படிப்பதில் மனம் ஈடுபடவில்லை. உறக்கமும் வரவில்லை. கடைசியில் பின்புறத்திலிருந்த சன்னலின் அருகில் நாற்காலியைப் போட்டுக்கொண்டு நிம்மதியாக உட்கார்ந்து வீட்டின் புறக்கடைப் பக்கம் பார்த்துக்கொண் டிருந்தேன்.

நிலவு அநேகமாக மறைந்துகொண்டு வந்தது. விடியற்காலைப் பொழுது நெருங்கிக்கொண்டிருந்தது. இரண்டு அல்லது இரண்டரை மணி இருக்கலாம். குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. எனது தலை சிறிது குளிர்ந்து தணிந்தது. உள்ளம் தோட்டத்தில் இருந்த சில பூக்களைப்போல் விரிந்து மலர்ந்துகொண்டிருந்தது. அதற்குள், அந்தத் தோட்டத்தில் ஏதேனும் ஒரு மனிதன் இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ஏன் இவ்வாறு தோன்றியது, ஏன் இப்படிப்பட்ட பிரமை ஏற்பட்டது என்பதைப்பற்றி ஒன்றும் சொல்லமுடியாது. ஆனால், இப்படித் திடீரென்று தோன்றியது உண்மை. அந்தத் தோட்டத்தில் சில சமயங்களில் நாங்கள் உட்காருவது உண்டு.

'வேண்டும், வேண்டாம்' என்று தயங்கித் தயங்கிக் கடைசியில் நாங்கள் அங்கு ஒரு பெஞ்சையும், இரண்டு நாற்காலிகளையும் போட்டு வைத்திருந்தோம். அப்பொழுது அதன்மீது யாரோ உட்கார்ந்திருப்பதாகத் தெரிந்தது. ஆனால், 'இப்படிப்பட்ட இரண்டுங்கெட்டான் நேரத்தில் யார் உட்காருவார்கள்?' என்ற கேள்வியும் மனத்தில் எழுந்தது. எனக்கு ஏற்பட்ட பிரமை பொருளற்றது என்று எண்ணி நான் சும்மா இருந்தேன். ஆனால், அங்கு யாரோ இருப்பதாகவும், அவர் நீண்ட பெருமூச்சு விட்டதாகவும், கனைத்ததாகவும் எனக்கு மீண்டும் தோன்றியது. யாராக இருக்கமுடியும் என்பதைப்பற்றி ஒன்றும் யோசித்து அறிய முடியவில்லை.

இந்தக் காலைப் போதில் இப்படிப்பட்ட விசித்திரமான நேரத்தில், யார் எதற்காக உட்கார்ந்திருப்பார்கள் என்பதை அறிய நான் நன்கு கவனித்துப் பார்க்கலானேன். யாராவது இருக்கவேண்டும் என்ற பிரமை ஏற்படக் காரணம் அங்கு நடமாட்டம் கேட்டதனலா அல்லது ஒரு காரணமும் இன்றியே தானு? மீண்டும் ஒருமுறை அதேபோன்ற சத்தம் கேட்டது. ஓரிடத்தில் ஒருமுறை நிழல் விழுந்ததுபோல் தோன்றியது. அப்பொழுது அங்கு யாரோ நிச்சயமாக இருக்கிருர்கள் என்று மனத்திற்கு உறுதியாகப் பட்டது. ஆனல், யார் இருக்கிருர்கள்

என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது? நாம் இருக்கும் இடத்தி லேயே உட்கார்ந்தவண்ணம் அங்குக் கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தால் அந்த ஆள் வெளியில் போகும்பொழுதாகிலும் கண்ணில் படுவான் என்று தோன்றியது.

என்ன செய்வது என்பதொன்றும் என் அறிவுக்குப் புலப்பட வில்லை. இருந்தபொழுதிலும் நான் மௌனமாக அங்கே பார்த்த வண்ணம் இருந்தேன். சிறிதே நேரத்தில் அத்தோட்டத்தி லிருந்து ஒரு மனித உருவம் வெளிப்பட்டது. என்னுடைய கண்கள் எதைப் பார்த்தனவோ, அதன் மீது எனக்கு நம்பிக்கையே ஏற்படாத அளவு, அவ்வளவு விசித்திரமாக எனக்குப் பட்டது. நான் பார்த்தது உண்மைதானு? உண்மை யாக இருக்குமானுல், இந்த இரவில், இந்தத் தோட்டத் திலா? அறிவுக்கு ஒன்றுமே எட்டவில்லை. நான் மீண்டும் மீண்டும் கண்களை நன்கு திறந்து பார்த்தேன்; நன்கு கூர்ந்து கவனித்துப் பார்த்தேன். முதலில் தோன்றியது பிரமையாக இருக்குமோ என்ற ஐயத்தில் அப்படிப் பார்த்தேன். எனக்குத் தோன்றிய அதே உருவந்தான் அது, எனக்குத் தெளிவாகத் தெரிந்தது.

நான் சட்டென்று வெளியில் வந்து அந்த உருவத்தின்முன் சென்று பளிச்சென்று கேட்டேன்:

'இந்த இரவில் நீ இங்கே? . . .'

அடியோடு பதிலே இல்லை.

நாங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டே இருந்தோம். அவளோ அசைவற்ற சிலை போன்று மௌனமாக என் முன்னுல் நின்றுகொண்டிருந்தாள். அவள் மனத்தில் என்ன தோன்றிக்கொண் டிருந்ததோ, அது அவளுக்குத்தான் தெரியும்!

மீண்டும் நான் சொன்னேன்:

'உன் மனத்தில் ஏதாவது தீவிரமான கவலை ஏற்பட்டிருக்க வேண்டும். அவ்வாறு இல்லை என்ருல், நீ இவ்வாறு நிச்சயம் செய்யமாட்டாய். என்ன ஆயிற்று? எதனுல் உனக்கு இவ்வளவு கவலை ஏற்பட்டிருக்கிறது? என்னிடம் ஏன் சொல்லக் கூடாது?'

அப்பொழுதும் பதில் இல்லை.

அவள் எனக்கு ஒரு பதிலும் கொடுக்கவில்லை. எனவே நாமாகவே முன்சென்று என்ன விஷயம் என்று பார்த்து

வரவேண்டும் என்று எண்ணி நான் தோட்டத்தை நோக்கிச் செல்லலானேன். ஆனால் அவள் சட்டென்று தனது கையைத் தூக்கி என்னைத் தடுத்தாள். அந்தச் சமயத்தில் அவளுடைய தோற்றம் மிகுந்த கம்பீரமாகக் காணப்பட்டது. அவளுடைய முகத்தில் இருந்த காம்பீர்யத்தைப் பார்த்து, நான் திடுக்கிட்டுச் சிறிது பின்னால் நகர்ந்தேன். ஆனால் அவளுடைய செயலினால் எனது சந்தேகம் உறுதிப்பட்டது. அந்தத் தோட்டத்தில் உண்மையாகவே யாராவது இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. இவ்வாறு எனது சந்தேகம் உறுதி பெற்ற பின்னர் எனது உள்ளம் மிகவும் குழப்பம் அடைந்தது. நான் விசித்திரமாக அவளைப் பார்க்கலானேன். நான் ஒன்றுமே பேசவில்லை என்றாலுங்கூட, எனது கண்களையும் முகத்தையும் பார்த்தே, எனது உள்ளத்தில் ஏதோ விசித்திர மான எண்ணம் உதித்திருக்கவேண்டும் என்பதை அவள் ஊகித் திருக்கவேண்டும். அவள் முகம் மிகவும் வெளுத்துப் போயிருந்ததுபோல் தெரிந்தது. ஆனால் அந்த நிலையிலும் அவளுடைய முகத்தில் இளம் புன்னகை தவழ்ந்தது போல் எனக்குத் தோன்றியது. கவலையினால் முதலிலேயே வெளுத்துப் போயிருந்த முகத்தில் புன்னகை தோன்றியதும் அது மேலும் விசித்திரமாகக் காணப்பட்டது.

வாசகர்களே, அந்த நேரத்தில் என் மனத்தின் நிலை எப்படி இருந்திருக்கும் என்பதை ஊகித்து அறிவது கடினம். அவள் என்னைத் தோட்டத்தில் போகவிடவில்லை என்பதனால், அங்கு வேறு யாராவது இருக்கவேண்டும் என்று எனக்கு உறுதியாகப்பட்டது. அதனால் என் உள்ளத்தில் தகாத எண்ணம் ஒன்றும் ஏற்படவில்லை. சே, அப்படிப்பட்ட எண்ணங்கள் தோன்றவே முடியாததாக இருந்தன. அவளுடைய மனோதிடத்தைப்பற்றி எனக்கு அவ்வளவு நம்பிக்கை; மேலும் இதுவரை கொடுக்கப்பட்ட சரித்திரம் முழுவதையும் படித்தபிறகு வாசகர்களுக்கும் நம்பிக்கை ஏற்பட் டிருக்கும். எனவே அவ்வாறு தகாத எண்ணங்கள் கனவிலும் என் இதயத்தில் உதித்திருக்கமாட்டா, உதிக்கப் போவது மில்லை. ஆனால் வெறும் சந்தேகங் கொண்ட நிலையே மிகுந்த விசித்திரமாக இருக்கிறது. நான் அத்தகைய ஒரு விசித்திரமான நிலையில்தான் இருந்தேன்.

மீண்டும் நான் தோட்டத்தில் செல்ல எண்ணினேன், போகவும் முற்பட்டேன். அப்போதும் அவள் மீண்டும் என்னைப் போகாதே என்று சைகை செய்தாள். அப்பொழுது என்னால் உண்மையாகவே பேசாமல் இருக்கமுடியவில்லை. நான் உடனேயே அவளிடம் சொன்னேன்: 'இது என்ன இது? ஒன்று, இந்த இரவில் நீ உனது தூக்கத்தையும் கெடுத்துக்கொண்டு இங்கு எதற்காக வந்தாய்? இரண்டாவது, அந்தப் பூங்காவில் அப்படி என்னதான் இருக்கிறது? நான் இருமுறை அங்கே போக முயற்சி செய்தேன். இருமுறையும் நீ அங்கு என்னைப் போகாதே என்று சைகை செய்தாய். இப்படிச் செய்ததன் பொருள்தான் என்ன? என்னிடம் சொல்லக் கூடாதா?' இவ்வளவு கூறியும் அவள் வாயைத் திறக்கவேயில்லை. ஏதோ அவளது பேசும் திறனே அவளை விட்டுச் சென்றுவிட்டது போல் தோன்றியது. அவளது மௌனத்தைக் கண்டு நான் சிறிது சினந்து அவளிடம் சொன்னேன்:

'உனக்கு என்மீது அணுவளவும் நம்பிக்கை கிடையாது என்பதுதான் உண்மை. இல்லையென்றால் நீ இப்படி என்றுமே நடந்துகொள்பவள் அல்ல. இப்பொழுது நானும் எந்த விஷயத்திலும் உன்னை நம்பவில்லை என்றால்? சரி, இதோ நான் திரும்பிச் செல்கிறேன். மீண்டும் உனது எந்த ஒரு காரியத்தைப்பற்றியும் அல்லது வேறு எதைப்பற்றியும் உன்னிடம் நான் ஒன்றும் கேட்கப் போவதே இல்லை.'

'என்னதான் இது?' என்ற கேள்வியைக் கேட்டுக் கேட்டுக் களைத்துப் போன நான் சினம் அடைந்துவிட்டேன்.

நான் மீண்டும் அவளிடம் சொன்னேன்: 'சரி அக்கா, நான் ஒருமுறை உன்னைக் கடிந்துகொள்ளத்தான் வேண்டும் என்று நினைக்கிறாயா? அப்படியிருந்தால் சொல். அக்கா, உனக்கு நானும், எனக்கு நீயும் தவிர நமக்கு வேறு யாராவது இருக்கிறார்களா?' ஆனால் அவள் வாயைத் திறக்கவில்லை. அவள் கண்களிலிருந்து மட்டும் இரண்டு சொட்டுக் கண்ணீர் குபுக்கென்று கிளம்பி உருண்டு விழுந்ததாக எனக்குத் தோன்றியது. அச்சொட்டுக்களைப் பார்த்து எனது உள்மனம் மிக மிக வருந்தியது. 'அக்கா என்றால் ஒரு சமுத்திரம்' என்று எப்பொழுதுமே நான் அவளைப்பற்றிச் சொல்வதுண்டு. எப்பொழுதுமே தனது மனத்தைத் தளரவிடாத அவள் கண்கள் கலங்கியதைப் பார்த்ததும் நான் மனம் கலங்கி முன்னால்

நகர்ந்தேன். அவளுடைய கையை இறுகப் பிடித்துக்கொண்டு அவளிடம் சொன்னேன்: 'அக்கா, உன் மனத்துக்கு இவ்வளவு வருத்தத்தைக் கொடுக்கும் விஷயந்தான் என்ன? இந்தக் கண்ணீர் எதற்காக? எனக்குச் சொல்லவே மாட்டாயா? என்னை அந்தப் பூந்தோட்டத்தில் செல்ல விடமாட்டேன் என்கிறாய்? இந்த மர்மந்தான் என்ன? எனக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரிவிக்கக்கூடாது என்பது உனது எண்ணமா?'

'சொல்கிறேன். அவை யாவும் உன்னைப்பற்றியதுதான். தம்பி, நீ வேண்டாத குதர்க்கங்கள் எல்லாம் செய்யத் தொடங்கிவிடாதே.' மிகுந்த வருத்தம் கலந்த தொனியில் வார்த்தைகள் வெளிப்பட்டன.

'நான், அதுவும் உன் விஷயத்தில் குதர்க்கம் செய்வேனா? சே! சே!'

'என் விஷயத்தில் செய்யவேண்டாம். ஆனால் அவை யாவும் உன்னைப்பற்றியதாக இருக்கிறது என்று சொன்னதால், அது என்னவாக இருக்கும் என்று யோசித்துக்கொண்டிருக்காதே. சொன்னேன், அவ்வளவுதான். வேறு ஒன்றும் இல்லை.'

'என்னைப்பற்றியதாக இருக்கிறது; ஆனால் அதை என்னிடம் சொல்லமாட்டாயா?'

'சொல்வேன். அதற்கான வாய்ப்பு வந்தது என்றால் சொல்வேன்.'

'வாய்ப்பு எங்கே வரப்போகிறது, அக்கா? இப்போதே ஏன் சொல்லமாட்டாய்?'

'சொல்வேன், சொல்வேன். ஆனால் இப்பொழுது இந்த வேளையில் அல்ல!'

'சரி, பூந்தோட்டத்தில் இன்னும் யார் இருக்கிறார்கள்?'

'யாரும் இல்லை.'

'பின் என்னை ஏன் அங்கே போகவிடவில்லை? இப்பொழுது நான் போகட்டுமா?'

'அங்கே போய் என்ன செய்யவேண்டும்? அங்கு ஒன்றுமே இல்லை . . .'

சற்று நேரம் அவள் மௌனமாக நின்றாள். பிறகு உடனே என்னை உத்தேசித்துக் கீழ்க்காணும் சொற்கள் அவள் வாயிலிருந்து வெளிப்பட்டன:

'அதன் பிறகு மட்டும் எனக்கு என்ன ஆகும், யார் அறிவார்? தம்பி, பிறகு நான் உயிரோடு இருக்கமாட்டேன்.'

என்ன சொற்கள் இவை? இந்தச் சொற்களின் பொருள் என்ன? 'பிறகு' என்றால் எப்பொழுது? எல்லாம் ஒன்றைவிட ஒன்று மர்மமாகவே இருந்தன. அவள் இந்த வார்த்தைகளைச் சொன்னால், நான் உடனேயே அவள் கூறியதன் பொருள் என்ன என்று கேட்பேன் என்று எண்ணி, என் தோளின் மீது கையை வைத்து, 'வா, நாம் உள்ளே போகலாம். தம்பி, நீ என்றும் இரவில் இவ்வளவு நேரம் விழித்துக்கொண்டிருக்க மாட்டாய். அப்படியிருக்க இன்று எப்படி இப்படித் தூங்காமல்?' என்று கேட்டாள்.

அதற்கு நான் சாதாரணமாகவே அவளைக் கேட்டேன்: 'என்றும் விழித்துக்கொண் டிருப்பதில்லை என்று உனக்கு எப்படித் தெரியும்?'

'எப்படித் தெரியும் என்றால்? என்றும் கண்ணில் படவில்லை என்பதால்தான்!' அவள் படபடவென்று பேசினாள்.

அதையே பிடித்துக்கொண்டு உடனேயே நான் கேட்டேன்: 'அப்படியென்றால் இப்பொழுது சில நாட்களாகவே நீ இப்படி இரவில் இரண்டுங்கெட்டான் நேரத்தில் தோட்டத்துக்கு வருகிறாயா, என்ன?'

'கொஞ்ச நாட்களாக இல்லை. இன்று மூன்றாம் நாள், இல்லை, இன்று மூன்றாம் இரவு. வீட்டில் இப்பொழுது யாராவது விழித்துக்கொண்டிருப்பார்கள், தெரியுமா? வா சீக்கிரம் போகலாம்.'

எனது கேள்விக்குப் பதில் கொடுப்பதிலிருந்து அவள் இவ்வாறாகத் தப்பித்துக் கொண்டாள். எனது எல்லா எண்ணங்களையும் திசை திருப்பி விடுவதற்காக அவள் என்னிடம் சொன்னாள்:

'தம்பி, ஏன் இப்படி வேதனையால் தாக்குண்டவனாகக் காணப் படுகிறாய்? இன்று இரவு உனக்கு நல்ல தூக்கம் வரவில்லையாக்கும்? இப்படி ஏண்டா ஆயிற்று? நீ இந்த ஜன்னலைத் திறந்து அதன் அருகில் ஏதோ யோசித்தவண்ணம் நின்றுகொண்டிருந்தாய் என்று தோன்றுகிறது? மேலும் இந்த மூன்று புத்தகங்களும் திறந்துகிடக்கிறாற் போலிருக்கிறது. ஒரே சமயத்தில் மூன்று புத்தகங்களை வாசித்துக்கொண் டிருந்தாயோ? உன்னுடைய உள்ளமும் ஏதோ காரணத்தினால் அமைதியிழந்து போனது போலிருக்கிறது! இந்தப் புத்தகங்களை நீ படிப்பதற்காக எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. சே, உள்ளம் அமைதி

யற்றுக் கிடந்தாலொழிய ஒன்று, இரண்டு, மூன்று புத்தகங்கள் இந்த வேளையில் இப்படிக் கலைந்திருக்கா. மேலும் இது, அடடே இது என்ன? இந்தப் படுக்கையோ போட்டது போட்டபடியே இருக்கிறது. இதன்மேல் உடல் பட்டதாகக்கூடத் தெரியவில்லை. தம்பி, உண்மையாகச் சொல். உனது உள்ளத்தை ஏதோ விசித்திரமான எண்ணம் நிச்சயம் குழப்பிக் கொண்டிருக்கிறது!'

அவள் இவை யாவற்றையும் எவ்வளவு சீக்கிரம் பேசினுள்? பேசிக்கொண் டிருக்கும்பொழுது அறையில் இங்கும் அங்கும் எவ்வளவு முறை அலைந்தாள் என்பதைப்பற்றியெல்லாம் ஒன்றும் கேட்காதீர்கள். தனது எண்ணங்களிலிருந்து தன் மனத்தையே விடுவித்துக் கொள்ளவேண்டும் என்றே அல்லது நான் மீண்டும் ஒருவேளை அவளைக் கேள்வி கேட்பேன், அதை நான் கேட்காமலிருக்க வேண்டும் என்றே, அவள் ஒன்றன் பின் ஒன்ருகச் சரமாரியாகக் கேள்விகளைக் கேட்கத் தொடங்கினுள். நான் அவளுடைய அந்தக் கேள்விகளின் தொடரைப் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தேன்.

இடையில் அவள் நிறுத்தினுள். சிரித்தாள். இந்தச் சிரிப்பு பலாத்காரமாக வரவழைக்கப்பட்டதாக இருந்தது என்பது எனக்குப் புரிந்தது. மேலும் என் பக்கம் திரும்பி அவள் சொன்னுள்:

'தம்பி, குடும்பத்தில் விழவேண்டும் என்ற விருப்பம் ஏற்பட்டு விடவில்லையே?'

வெறும் வேடிக்கை. ஆனுல் அதை இப்படிப்பட்ட நேரத்தில், இப்படிப்பட்ட சூழ்நிலையில், அதுவும் அவளிடமிருந்து நான் எதிர்பார்க்கவில்லை. நான் கேட்ட வார்த்தைகளை இதே அக்கா தான் சொன்னுளா, என்ன? அவளுக்கு இந்த வேடிக்கை தோன்றுமா? ஒன்றல்ல, இரண்டல்ல! எவ்வளவோ எண்ணங்கள் ஒன்றன்பின் ஒன்ருக என் மனத்தில் அச்சமயத்தில் உதித்தன. நான் வியப்புடன் அவளைப் பார்த்துக்கொண்டே யிருந்தேன். அவள் எப்படியாவது என் மனத்திலிருந்து சற்று முன்னர் நிகழ்ந்தவை பற்றிய எல்லா எண்ணங்களையும் அகற்றிவிடவேண்டும் என்று முயன்று கொண்டிருக்கிருள் என்று எனக்கு உறுதியாகப் பட்டது. அந்த உத்தேசத்துடன்தான், எந்த எந்த எண்ணங்கள் அவள் மனத்தில் வந்தனவோ, இல்லை, அந்தச் சமயத்தில் வேண்டுமென்றே கொண்டுவர முடிந்ததோ, அவை யாவற்றையும் அவள் விரை

வாக வெளிப்படுத்திக்கொண் டிருந்தாள். நான் ஒரு பதிலும் கொடுக்காததைப் பார்த்து, அவள் மீண்டும் என்னிடம் சொன்னாள்:

'ஏன், நான் பேசியதைக் கேட்டுக் கோபம் ஏற்படுகிறதா? ஆனால் அப்படிப்பட்ட எண்ணம் உள்ளத்தில் தோன்றிச் சித்தத்தைக் குலைக்கும் வயதுடையவனாகத்தானே நீ இருக்கிறாய்? உன் மனத்தில் அந்த எண்ணம் தோன்றியிருக்குமானால், என்னை ஓர் இடையூறாகக் கருதாதே, என்ன? எனக்கு என்னவோ, அதனால் அளவற்ற மகிழ்ச்சிதான் ஏற்படும். தம்பி, இப்பொழுது உண்மையிலேயே நான் உனக்குச் சொல்கிறேன், உனக்கு ஏற்ற . . .'

மேற்கொண்டு என்னால் கேட்கமுடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. உடனேயே நான் சொன்னேன்: 'அக்கா, இன்று உனக்கு நிச்சயமாகவே பைத்தியம் பிடித்திருக்கிறது. உறக்க மின்மையினால் உனது தலை சுழல ஆரம்பித்திருக்கிறது என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. நீ இப்பொழுது போய்ப் படுத்துக்கொள். முன்பு சொன்னவற்றைப்பற்றி நான் உன்னிடம் ஒன்றுமே கேட்கவில்லை. மேலும் நீ தானாகவே சொல்லும் வரையிலும் கேட்கப் போவதில்லை. ஆனால் இப்படி எல்லாம் மட்டும் பேசாதே. போ.' ஆனால் நான் இப்பொழுது அவளிடம் 'போ, போ' என்று வற்புறுத்திச் சொல்லக் காரணமே இருக்கவில்லை. வீட்டிலிருந்த எல்லாருமே எழுந்துவிட்ட காரணத்தினால் அது தானாகவே நடந்துவிட்டது. எனது கவலை மட்டும் இருந்தபடியே இருந்தது.

# 58. விதியின் விளையாட்டு

மேற்கூறப்பட்ட சம்பவம் நிகழ்ந்து சுமார் பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன. நான் அக்காவிற்குக் கொடுத்த வாக்கின்படி மீண்டும் அந்த இரவில் நடந்த நிகழ்ச்சியைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவளுடைய நடவடிக்கைகளை மட்டும் கூர்ந்து கவனித்து வந்தேன். அப்படிக் கவனித்துப் பார்த்ததில் அவள் மனத்தில் ஏதோ கோளாறு இருப்பதை நான் தெரிந்து கொண்டேன். அவள் இப்பொழுதெல்லாம் எல்லா விஷயங்களிலும் நம்பிக்கை இழந்தவளாகக் காணப்பட்டாள். அவளுடைய அன்புத் தோழி சுந்தரி. ஆனால் அந்தத் தோழியிடங்கூட அவள் இப்பொழுதெல்லாம் மனம்விட்டுப் பேசுவதில்லை. எப்பொழுதும் ஓரிடத்தில் தனியாக உட்கார்ந்திருப்பதும், ஏதாவது சிந்தனையில் ஆழ்ந்திருப்பதுமே அவளுக்கு விருப்பமான செயல்களாக இருந்தன. அவள், தான் தொடங்கிய காரியத்தில் பழையபடி மனம் ஈடுபட்டவளாகக் காணப்படவில்லை. நாள்தோறும் செய்ய வேண்டிய காரியங்களை அவள் செய்து வந்தாள். ஆனால் எவ்வளவு உற்சாகத்துடன் செய்யவேண்டுமோ அவ்வளவு உற்சாகத்துடன் அவள் காணப்படவில்லை. அவளுடைய உற்சாகமின்மையினால் எங்கள் வீட்டிலும், வாசலிலும் அதேபோன்ற நிழல் விழுந்திருப்பதுபோல் தோன்றியது. எனது உள்ளமும் மிகுந்த வேதனை அடைந்தது. அதனால் தினமும் வழக்கப்படியான காரியங்களைத் தவிர என்னாலும் வேறு ஒன்றும் செய்யமுடியவில்லை.

நானும் எப்போதும் எனது எண்ணங்களில் மூழ்கியவனாக இருந்தேன். ஏதாவது தனிச் சிறப்புடைய காரியத்தைச் செய்ய வேண்டும், ஏதாவது பெரிய காரியத்தைச் சாதிக்கவேண்டும், அதை நம் கையால் நிறைவேற்றமுடியும்—அது என்ன? என் போன்ற ஏழ்மை நிலையில் இருக்கும் மனிதனால் என்ன செய்ய முடியும்? நான் இன்றுவரை கல்விச் செல்வத்தைத் திரட்டினேன்; அதன் பயனை ஏழை எளியவர்கள் அடையும்படி செய்ய வேண்டும். அதை நான் அளிப்பதில் ஒரு குறையும் வைக்கவில்லை. எனக்காகவும், என்னை நம்பியிருந்தவர்களுக்காகவும் வாழ்வதற்குத் தேவையான அளவிற்குமேல் செல்வத்தைத் திரட்டும்

வீண் காரியத்தில் ஈடுபடக்கூடாது என்று நான் எண்ணி யிருந்தேன்.

அந்த எண்ணம் நிறைவேறவில்லை என்றும் சொல்லமுடியாது. மொத்தத்தில் ஒரு தனி மனிதன் எந்த அளவு மக்களின் சேவை, நாட்டின் சேவை செய்யமுடியுமோ, அவ்வளவு செய்வதற்காக நான் முயலாமல் இல்லை. பிறருக்கு என்ன அநுபவம் ஏற்பட்டிருக்குமோ, அது இருக்கட்டும். ஆனால் எனது கடமையை நான் செய்துகொண்டிருக்கிறேன் என்ற ஆறுதல் எனக்கு இருந்தது. ஆனால் அந்த ஆறுதலும் இப்பொழுது இல்லாமற் போய்விட்டது.

ஏனெனில் நான் செய்துகொண்டிருப்பது ஒன்றும் போதுமானதாக இருக்கவில்லை. தனி ஒருவன் செய்யும் முயற்சிகள் குறிப்பிடத்தக்க சிறப்பைக் கொண்டனவாக இருப்பதில்லை; மேலும் எதிர்பார்த்த பலனையும் கொடுப்பதில்லை என்று எனக்கு நிச்சயமாகப் பட்டது. பலர் ஒன்றாகச் சேர்ந்தால்தான் எந்தக் காரியமும் ஆகும். நம்மைப் போன்று இன்னும் ஏழெட்டுப் பேர்கள் ஒன்று சேர்ந்து ஏதாவது காரியத்தைச் செய்வார்களே யானால், வயிற்றுக்கு வேண்டிய அளவு பொருளைமட்டுமே ஈட்டி, மற்ற எல்லா உழைப்பையும்—உடல், வாக்கு, உள்ளம் இம்மூன்றினாலும்—நமது நாட்டின் நலத்திற்காக என்றே செயல்பட வேண்டும் என்ற விரதத்தை மேற்கொள்ளும் இன்னும் ஒரு சிலர் கிடைப்பார்களேயானால், மேலும் தங்கள் விரதத்தை நிறைவேற்றுவதற்காக ஊர் ஊராகச் செல்வார்களேயானால், அப்பொழுதுதான் ஏதாவது வெற்றி கிடைத்தாலும் கிடைக்கும் என்று என் மனம் எண்ணியது. அப்படிப்பட்ட மனிதர்கள் கிடைப்பார்களா என்ன?

எவ்வாறு என் உள்ளத்தில் இவ்வெண்ணங்கள் தோன்றி இரவும் பகலும் என்னைக் குழப்பினவோ, அவ்வாறே யார் யாருக்கு ஏற்பட்டுக்கொண்டிருக்குமோ, அவர்கள் எல்லாரும் ஓரிடத்தில் கூடி ஏதாவது செய்வார்களா என்ன? இப்படி மீண்டும் மீண்டும் என் உள்ளத்தில் தோன்றிக்கொண்டிருந்தது.

என் கண் முன்னால் அம் மக்களின் 'மிஷனரி முயற்சி' மீண்டும் மீண்டும் தோன்றியது. 'தன்னையே அர்ப்பணிக்கும் தத்துவம் இவர்களுக்கு மட்டுமே ஏன் தோன்றவேண்டும்?'—என்ற கேள்வி எப்பொழுதுமே என் மனத்தில் எழும். 'இவர்கள் மட்டுமே ஏன் தம்மையே அர்ப்பணிக்கும் பணியில் ஈடுபடவேண்டும்? இவர்களுக்கு எந்தப் பொருளின் அவசியமும் இல்லை. ஆனால் செயலில்

ஈடுபடும் இவர்களுடைய தன்மை எவ்வளவு மேலானது? அதுவும் நமது நாடு மிகவும் தாழ்ந்த நிலையை அடைந்திருக்கும்பொழுது, அதைப் பார்த்து நமக்கு ஒன்றுமே தோன்றுவதில்லையா? சில இளைஞர்களின் கூட்டம் நாடு முழுதும் சுற்றுப் பயணம் செய்து அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் மக்களைத் தட்டி எழுப்பி, தமது உரிமைகளைப்பற்றி அவர்கள் அறியும்படி செய்வதற்காக ஏன் முன்வரக்கூடாது? என்னால் செய்யமுடியுமா? செய்யும் தகுதி என்னிடம் இருக்கிறதா? எனக்கு இன்னும் நான்கு பேர்களாவது கூட்டாளிகளாகக் கிடைப்பார்களா?'

இந்த எண்ணங்கள் இப்போது என் மனத்தில் எழுந்தன. ஒரு நாள் மாலை நேரத்தில், முன் அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ள நிகழ்ச்சிக்குச் சுமார் பதினைந்து நாட்களுக்குப் பிறகு, நான் இந்த எண்ணங்களில் ஆழ்ந்தவண்ணம் உட்கார்ந்திருந்தபொழுது, திடீரென்று புதுமையான ஓர் எண்ணம் என்னுள் தோன்றியது. எனது இதயவானம் பல நிறங்கொண்டு மிளிர்ந்தது. அங்கே குழுமியிருந்த மேகங்கள் கலைந்து மறைந்து சென்றன. மிகுந்திருந்த ஒரு சிலவும் வெளிவானத்தில் இருப்பவற்றைப்போல் ஒளி பெற்று சிறந்த அழகைக் கொடுத்தன. அந்த எண்ணத்தினால் எனக்கு மிகுந்த ஆறுதல் ஏற்பட்டது. எண்ணம் என்னவோ சிறந்தது; மிகவும் உயர்ந்தது. ஆரியர்களின் கொள்கையை, சீலத்தை அனுசரித்தது. அந்த எண்ணத்தினால் ஏற்பட்ட மகிழ்ச்சியினால் உள்ளம் மலர்ந்தது. பல நாட்களாக என் முகத்தில் மலர்ந்திராத இன்ப நிறைவின் அறிகுறியான புன்னகை அந்தச் சமயத்தில் மலர்ந்திருக்கவேண்டும். இருக்க வேண்டும் என்று ஏன் சொல்லவேண்டும். இருக்கத்தான் செய்தது.

என் முன்னால் ஒரு நிலைக்கண்ணாடி இருந்தது. அதில் எனது முகம் தெரிந்தது. என்னுள் இன்று ஏதோ புத்துணர்ச்சி பிறந்திருக்கிறது என்று அதைப் பார்த்ததும் எனக்குத் தோன்றியது. இந்தப் புத்துணர்ச்சி உண்மை உருவம் எடுக்குமா? இந்தப் புத்துணர்ச்சியின் நற்பலன் என் கண்ணில் படுமா? ஆசிரியர் என்ற சொல்லை அனுசரித்து, அதற்கு முற்றும் உகந்தவாறு, பழைமைவாதிகள் அல்லது சீர்திருத்த வாதிகள் இருவருக்குமே அதிருப்தி ஏற்படாதவண்ணம் ஒரு வழியை முதல் முதலாகத் தோற்றுவித்த பெருமையை நான்

அடைவேனு? தொடங்குவதற்கு முன்னுல் எனக்கு நான்கு இளைஞர்களாயினும் கிடைப்பார்களா?

இந்தக் கேள்விகள் என் மனத்தில் இப்போது இடையருது எழுந்தன. ஆச்சரியத்திலும் பேராச்சரியம் என்ன என்ருல், 'கிடைக்கும், அந்தப் பெருமை நமக்குக் கிடைக்கும். கிடைப் பார்கள்; நமது வாழ்வுக்காலத்தில் நமது எண்ணம் உண்மையின் உருவத்தை அடைந்து, நமக்கு உதவி செய்யும் இளைஞர்கள் கிடைப்பார்கள்' என்று நம்பிக்கையைத் தோற்றுவிக்கும் பதில்களே எனது மனத்தில் மீண்டும் மீண்டும் எழுந்தன. முன்பு தோன்றியதைப்போல் இப்பொழுது அவநம்பிக்கையான பதில் தோன்றவில்லை. 'என்ன, எப்படி ஆகும்?' என்பதுபோன்ற எண்ணங்கள் உள்ளத்தில் இடம் பெறவில்லை.

இந்தச் செய்தியே அன்றைய மனுேநிலையின் சிறப்பாக இருந் தது. அந்தக் குதூகலமான எண்ணம் என்னை எழுப்பியது. ஆறுதல் உணர்வுடன், எனக்கு நானே நகைத்துக்கொண்டவாறே நான் இங்கும் அங்கும் நடைபோட ஆரம்பித்தேன்.கற்பனைக்கோட்டை களாக ஏன் இருக்கமாட்டா? ஆனுல் அவை மிகவும் உயர்ந்த கற்பனைக் கோட்டைகளாக இருந்தன. நான் மேற்கொண்டு செய்யவேண்டிய ஏற்பாடுகளைப்பற்றிச் சிந்தித்தவண்ணம் சுற்றிச் சுற்றி நடந்துகொண்டே யிருந்தேன். ஒருமுறை ஏதோ ஒரு வருங்கால நிகழ்ச்சியின் சித்திரம் என் கண்முன்னுல் தோன்றவே நான் பெரிதாகச் சிரித்துக்கொண்டேன். இதுமட்டும் அல்ல; பழைய கொள்கைகளைப் பின்பற்றிச் செல்லும் மக்களும், புது முறைகளை அரவணைத்துச் செல்லும் மக்களும் நமது இந்தப் புது வழியினுல் சமாதானம் அடைவார்கள் என்றும், அவர்களுக்கு இந்தப் புதிய மார்க்கம் மிகவும் பிடிக்கும் என்றும் உறுதியாகப் படவே நான் கைதட்டினேன். நான் எவ்வளவு சிரித்தேன்! எனக்கு எவ்வளவு ஆனந்தம் ஏற்பட்டது! சரியான வழி இன்று எனக்குக் கிடைத்தது. நமது முன்னேர்கள் இந்த வழியை விரும்பித்தான் ஏற்படுத்தினுர்கள்; சந்தேகமின்றி இதே நோக்கத்துடன்தான். ஆனுல் இப்பொழுது மட்டும் மக்கள் அதைத் தகாத நேரத்தில், எந்த நேரத்தில் அந்த வழியை ஏற்றுக்கொள்வதனுல் அணுவளவும் பயனில்லையோ, அப் பொழுது ஏற்றுக்கொள்ளுகிருர்கள்!

இவ்வாருக எல்லா எண்ணங்களும் ஓடிக்கொண்டிருந்தன. நானே உள்ளுக்குள் மகிழ்ந்திருந்தேன். அதற்குள் அண்ணு அங்கு

வந்தார். நான் மகிழ்ந்திருப்பதைக் கண்டு அவருக்கும் மிகுந்த விசித்திரமாகப் பட்டிருக்கும். இப்பொழுது சில நாட்களாக மகிழ்ந்த நிலையில் என்னை அவர் பார்த்திருக்கவில்லை. அவர் அந்தச் சமயத்தில் ஒன்றும் பேசிக் காண்பிக்கவில்லை. ஆனால் பேச்சைக் காட்டிலும் உடனடியாக—அகத்தின் அழகைக் காட்டிக்கொடுக்கும்படியான முகம்—அப்படிப்பட்ட அவருடைய முகம் அவருடைய உள்ளத்திலிருந்த வியப்பை வெளிப் படுத்தியது. அவரால் தம்மையே கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அவர் என்னிடம் சொன்னார்: 'தனியாக இவ் வளவு மகிழ்வுடன் தனக்குத்தானே ஏன் சிரித்துக்கொண் டிருக்கிறாய்?'

'மர்மமாக இருந்து வந்த ஒன்று தெளிவாகிவிட்டது என்று சிரிப்பு வந்தது, அவ்வளவுதான். சிறப்பாக ஒன்றும் இல்லை.'

'அது என்ன, அப்படிப்பட்ட ஒரு மர்மம்?'

'வேறு என்னவாக இருக்கும்? இன்று வரையில் என் உள்ளத்தைக் குழப்பிக்கொண்டிருந்த எண்ணம், இன்று முற்றும் மனத்துக்குப் பிடித்த முறையில் அதைச் செயல்படுத்தும் வழியை எனக்குப் புலப்படுத்தியிருக்கிறது. மேலும், அண்ணா . . .'

என்றால் மேலே பேச முடியவில்லை. என் எண்ணங் களின் மேன்மை என் உள்ளத்தில் தலைதூக்கி நின்றது. அந்த எண்ணங்கள் என்னையும், எனது கொள்கைகளையும் ஒன்று சேர வந்தடைந்து அவற்றை நிறைவேற்றினால் எவ்வளவு சிறந்த காரியம் கைகூடும் என்பதைப்பற்றியும் விசித்திரமான கற்பனை ஏற்பட்டது. உடலில் ஒரு புத்துணர்ச்சி பரவ, நான் எழுந்து நின்றேன். எண்ணத்தின் ஆழத்திற்கு உகந்த தீவிரத்துடன் நான் ஏதோ சொல்லவே இருந்தேன். அதற்குள் அக்காவும் அங்கு வந்தாள். அவளைப் பார்த்தவுடனேயே எனது உணர்ச்சி வேகம் மேலும் பெருகியது. எனது எண்ணம் இவளுக்குத் தெரிந்தால், இவளுக்கு அளவற்ற மகிழ்ச்சி ஏற்படும், இவள் மனமார என்னை வாழ்த்துவாள் என்ற எண்ணம் என் உள்ளத்தில் ஓடியது. அதைத் தொடர்ந்து உடனேயே, கணப்பொழுது அமுக்கி வைத்திருந்த அந்த எனது எண்ணத்தை வெளியிட்டேன்: 'அண்ணா, அக்கா, இன்று என் மனத்தில் மிக உயர்ந்த எண்ணம் ஒன்று உதித்திருக்கிறது. அந்த எண்ணத்தை நிறைவேற்றப் போவதாக நான் உங்கள் இருவர் முன்பிலும் ஆணையிட்டு உறுதி யான முடிவு கொள்கிறேன். அந்த முடிவில் அணுவளவும்

மாறுதல் ஏற்படப் போவதில்லை. இந்த விஷயத்தில் உங்களுடைய பாதங்களே எனக்குச் சாட்சி; நீங்கள் இருவருமே எனது குரு; எனக்குப் பெரியவர்கள்!'

இந்த எனது பேச்சைக் கேட்டு இருவருமே என்னை மிகுந்த விசித்திரமான பார்வையுடன் பார்க்கலானார்கள். 'நான் என்ன பேசிக்கொண்டிருக்கிறேன்? இதெல்லாம் என்ன? எனது மூளை குழம்பிவிடவில்லையே? எனக்குப் பிரமை ஒன்றும் ஏற்பட்டுவிட வில்லையே? அந்த எனது எண்ணம் என்ன, அந்த முடிவு எப்படிப் பட்டது, மேலும் அதை நிறைவேற்றுவதற்காக அவர்கள் காலில் விழுந்து ஆணையிடுவானேன்?' அவர்களுக்கு ஒன்றுமே விளங்கவில்லை என்பது அவர்களுடைய முகத் தோற்றத்தி லிருந்து தெளிவாகத் தெரிந்தது.

இங்கே எனது உள்மனம் மட்டும் மிகுந்த அமைதி அடைந்தது. நான் எனது கடமையைச் செய்வதற்கு உகந்த வகையில் வேலையைத் தொடங்கினேன் என்று எனது உள்ளம் எனக்குச் சொல்லியது. மூல எண்ணத்தில் இப்பொழுது அணுவளவும் மாறுதல் ஏற்படப்போவதில்லை என்று முடிவு செய்தாகிவிட்டது. அதனால் மனத்துக்கு அவ்வளவு அமைதி ஏற்பட்டது. ஆனால் மனம் அந்த எண்ணத்தின் தொடர்பில் மேற்கொண்டு செய்ய வேண்டிய ஏற்பாடுகளின் ஆலோசனையில் ஆழ்ந்தது. அக்காவும், அண்ணாவும் மிகுந்த வியப்புடன் என்னைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தார்கள் என்பதை நான் கவனிக்கவில்லை. நான் எனது எண்ணங்களிலேயே மெய்ம்மறந்து போனேன். திடீ ரென்று ஓர் உயர்ந்த வேலையைச் செய்வதற்காக ஒருவருக்குப் புத்துணர்ச்சி பிறப்பதுபோல் எனது நிலையும் ஆயிற்று. அதைத் தவிர, இப்பொழுது எனக்கு வேறு ஒன்றுமே புலப்படாத தாயிற்று. அவர்கள் இருவரும் அங்கு இருக்கிறார்கள், நமது உறுதியை நிறைவேற்றுவதாக அவர்கள் மீதே ஆணையிட்டுச் சொல்லியிருக்கிறேன்! இவை யாவும் இப்பொழுது முற்றும் எனது நினைவை விட்டு அகன்றுவிட்டன.

அண்ணாவும், அக்காவும் மட்டும் என்னை மௌனமாகப் பார்த்த வண்ணம் சிறிது நேரம் நின்றிருந்தார்கள். மெய்ம்மறந்த எனது நிலையைக் கலைக்கும் உத்தேசத்துடன் அக்கா எனது தோளில் கையை வைத்து என்னைக் குலுக்கி என்னிடம் சொன்னாள்: 'தம்பி, இன்று நீ இதென்ன பைத்தியம்போல் செய்துகொண்டிருக்கிறாய்? உனக்கு ஏதேனும் பிரமையா?

இதோ பார், அண்ணு உன்னிடம் முக்கியமாக ஏதோ சொல்ல வேண்டும் என்றுதான் வந்தார். அவர் சொல்ல வந்ததைக் கேட்பதை விட்டு என்னடா இது பைத்தியம்போல் பேசிக் கொண்டிருக்கிருய்? எந்தக் காரியத்தைச் செய்யும் புத்துணர்ச்சி உனக்கு ஏற்பட்டிருக்கிறது? உனது உள்ளத்தில் என்ன தோன்றி யிருக்கிறது? எதைச் செய்யவென்று எங்கள் மீது ஆணையிட்டு நீ உறுதி பூண்டாய்? ம்! சொல்லுடா, அப்படிப்பட்ட உனது உறுதிதான் என்னவென்று?'

'இதுதானு அண்ணு சொல்ல வந்தார்? பலே! இதை நான் உங்களுக்கு இரண்டொரு நாட்களில் சொல்லவே இருந்தேன். இன்று இப்பொழுதே சொல்லமுடியாது. இன்னும் என்னுடைய எல்லா ஏற்பாடுகளும் உருவாகவில்லை; இல்லையென்ருல் சொல்லியிருப்பேன். நான்கைந்து நாட்களில் சொல்லுவேன். திட்டம் மிகவும் சிறந்ததாக இருக்கிறது. நான் அதை உங்க ளுக்குச் சொன்னுல் நீங்கள் மிகவும் மகிழ்வீர்கள். ஆனுல் இன்று கேட்காதீர்கள். நான் அதைச் செயலில் நிறைவேற்றிக் காண்பிப் பேன் என்று இப்பொழுதுதான் உங்கள் இருவரின் காலையும் தொட்டுச் சபதம் செய்திருக்கிறேன். அதனுல் எனது உள்ளம் சிறிது அமைதி அடைந்திருக்கிறது. இன்னும் இரண்டொரு நாட்களுக்குப் பின்னர் நானுகவே எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லுவேன்.'

'அடேயப்பா! நான்கு நாட்களுக்குப் பிறகு சொல்ல முடியும், இப்போது முடியாது என்றவாறு அப்படி என்னதான் இருக் கிறது? எதை அண்ணு கேட்க வந்தாரோ, எது எனக்கும் மிகவும் உத்தமம் என்று பட்டதோ, அதுவேதானே?'

'நீங்கள் என்ன கேட்க இருக்கிறீர்கள் என்பது எனக்கு என்ன தெரியும்? அது தெரியும் வரை அதுதான் இதுவா அல்லது வேறு ஏதாவதா என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? நான் அதை இரண்டு மூன்று நாட்களில் சொல்லுவேன், அதுவரை என்னைக் கேட்காதீர்கள்.'

'சரி, கேட்கமாட்டோம். ஆனுல் அண்ணு என்ன சொல்ல வந்தார் என்பதையாவது காதில் போட்டுக்கொள்வாயா?'

'ஆமாம், ஆமாம்! அக்கா, நீ என்ன இப்படி ஏதோபோல, இத்தனை இடைவெளி ஏற்பட்டதுபோல் பேசுகிருய்? அவர் சொல்லி அதுவும் நான் கேட்காமல் இருப்பேனு?'

'யாருக்குத் தெரியும், இன்று நிலை ஏதோ விசித்திரமாக இருக்கிறதே! "உனது முடிவைச் சொல்வதற்கே நான்கு நாட்கள் என்றால், மற்றவர் முடிவைக் கேட்பதற்கும் நான்கு நாட்கள் ஆகுமோ என்னவோ?" என்று நினைத்தேன். ஆனால் எங்களுடைய முடிவும் உனக்கு இன்பத்தையே தரும்.'

'சரி, சரி. போதும் இப்பொழுது. அண்ணாவைப் பேச விடு. என்ன கேலி பண்ணுகிறாய்? அண்ணா, நீங்கள் சொல்லவேண்டியதைச் சொல்லுங்கள். உங்கள் சொல்லை நான் என்றைக்காவது தட்டியிருக்கிறேனா? நீங்கள்தான் எனக்குத் தந்தைபோல்.'

'இன்றுவரை வெறுமனே அவ்வாறு கருதப்பட்டவராக மட்டும் இருந்தார். ஆனால் இன்று உண்மையாகவே அவ்வாறு ஆகப் போகும் எண்ணம் அவருக்கு இருக்கிறது. தனது தந்தையும், தனது மனைவியின் தந்தையும் ஒன்றுபோல்தானே?' அக்கா ஒரேயடியாக என்னைப் பார்த்துச் சிரித்தபடி சொன்னாள். அதைக் கேட்டதும் எனக்கு ஏதோ விசித்திரமாகப் பட்டது. அவள் பேசுவதன் பொருளைப்பற்றி என் உள்ளத்தில் சந்தேகம் தோன்றியது. நான் அவளையும், அண்ணாவையும் பார்த்த வண்ணம் அசைவின்றி நின்றிருந்தேன்.

அதற்குள் அண்ணா என்னிடம் வந்தார். என் தோளின்மீது கையை வைத்து அவர் என்னைப் பார்த்தவாறிருந்தார். பிறகு சட்டென்று என்னிடம் சொன்னார்: 'தம்பி, இன்றுவரை நான் சுந்தரியின் கல்யாணத்தை ஏன் செய்யாமல் இருந்தேன் என்பது உனக்குத் தெரிந்ததுதான். அவள் முற்றும் சுதந்தரமாக இருந்து, தனது சகோதரிகளின் குலத்தின் நலத்திற்கான பணிகளில் ஈடுபட்டவாறிருக்க வேண்டும் என்பதுதான் எனது நோக்கமாக இருந்தது. ஆனால் தனித்து, சுதந்தரமாக இருந்து எதையும் செய்யும் அளவிற்கு அவள் தைரியம் கொண்டவளாக இல்லை என்று எனது உள்ளம் எனக்குச் சொல்ல ஆரம்பித்திருக்கிறது. உனது அக்காவைப்போல் அவள் இல்லை. சில பெண்கள் கொடியைப்போல் தனது இனத்தைச் சேர்ந்த வேறொருவனின் ஆதாரத்தை எதிர்பார்க்கிறார்கள். சில பேர்களுக்கு முற்றும் சுதந்தரமாக இருக்க முடிகிறது. சுந்தரி முதல் வகுப்பைச் சேர்ந்தவள். உனது அக்கா இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தவள். இன்றுவரை அவளுக்கு எனது ஆதாரம் இருந்தது. ஆனால் ஏதோ காரணத்தினால் நேற்று எனக்கு வைத்தியரிடம் போகவேண்டியிருந்தது. அப்பொழுது அவர் எனது உடலை

நன்கு பரீட்சித்துப் பார்த்தார். எனது காலம் எப்போது முடிந்துபோகும் என்பதைப்பற்றி ஒன்றும் நிச்சயமாகச் சொல்ல முடியாது என்று அவர் தெளிவாகச் சொல்லிவிட்டார். எனது இதயம் மிகவும் பலவீனம் அடைந்திருப்பதாகவும், இதயத்தின் நிலையும் கவலைக்கு இடமாக இருப்பதாகவும் அவர் உடலைச் சோதித்த பின்னர் கூறினார். எனவே எனக்கு இப்பொழுது சுந்தரியின் திருமணத்தைச் செய்துவிட வேண்டும் என்று தோன்ற ஆரம்பித்துவிட்டது. உனது அக்காவின் கருத்தும் அதுவாகவே இருக்கிறது. அது மட்டும் அல்ல, அவள் இது விஷயமாக என்னை மிகவும் ஊக்குவித்தாள், உற்சாகப்படுத்தினாள். அதனால் இன்று நான் உனது எண்ணத்தை அறிய விரும்பி இங்கு வந்தேன். சுந்தரியும், நீயும் மிகச் சிறிய வயதிலிருந்தே ஒரே இடத்தில் வளர்ந்தீர்கள். ஒருவருடைய குணங்களை மற்றவர் நன்கு தெரிந்துகொண்டிருக்கிறீர்கள். மேலும் ஒருவரைப்பற்றி ஒருவர் நீங்கள் நல்ல எண்ணம் கொண்டவர்கள். இவற்றையெல்லாம் யோசித்துப் பார்த்தும், உனது அக்காவின் கருத்தும் முற்றும் இதற்கு ஒத்ததாக இருக்கிறது என்பதை அறிந்தும், நான் உன்னிடம் இதைப்பற்றிப் பேசுகிறேன்.'

வாசகர்களே, எப்போதாவது ஏதேனும் ஒரு கற்சிலையினிடம் ஏதாவது பேசியவாறு நின்றுகொண்டிருந்த அநுபவம் உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறதா? ஏற்பட்டிருக்குமானால், அண்ணா என்னிடம் பேசிக்கொண்டிருந்தபொழுது அவருக்கு எப்படிப்பட்ட அநுபவம் ஏற்பட்டிருக்கும் என்பதை நீங்கள் உணர முடியும். கற்சிலையைப் பொறுத்தவரையில், அதனிடம் யாரேனும் ஒருவர் பேசியவண்ணம் நின்றால், அவருடைய சொற்கள் அந்தக் கல்லின்மீது மோதி, எதிரொலியாவது கிளம்பும். ஆனால் எனது நிலை முற்றும் வேறுபட்டதாக இருந்தது. அவருடைய சொற்கள் எனது செவிகளில் நுழைந்துகொண்டிருந்தன, அவ்வளவுதான்! முதல் வாக்கியத்தின் பொருளையும் நான் மனத்தில் கொண்டேன். ஆனால் அதன் பிறகு நான் முழுச் செவிடனாக, முற்றும் குருடனாக, முற்றும் கற்சிலையாக மாறிவிட்டேன். என்ன பதில் தருவது என்பது ஒன்றும் எனக்குப் புலப்படவேயில்லை. இப்பொழுது எதை என்னிடம் அவர் கேட்டாரோ அதை நேற்றைக்குக் கேட்டிருந்தால்? . . . நான் மௌனமாகத் தலை குனிந்தவண்ணம் நின்றிருந்தேன். ஒரு

வார்த்தைகூடப் பேசவில்லை; என்னால் பேசவே முடியவில்லை. அக்கா அதைப் பார்த்துச் சிறிது திடுக்கிட்டவள்போல் காணப் பட்டாள். 'நான் உடனடியாக அண்ணாவின் கூற்றுக்கு உடன் படுவேன். எனது பலநாள் கனவு நினைவானது என எண்ணி நான் இன்பத்தில் திளைத்துப் போவேன்' என்று அவளுக்குத் தோன்றி யிருக்கவேண்டும். ஆனால் நான் ஒன்றுமே பேசாமல் இருப்பதைப் பார்த்து, நான் சிறிது நாணமுற்று இருக்கவேண்டும் என்று எண்ணி அவள் என்னிடம் சொன்னாள்: 'தம்பி, நீ என்ன இப்பொழுது சிறியவனடா? வெட்கம் அடைந்தவனைப்போல் செய்கிறாயே, மனத்தில் ஒன்றும் இல்லாததுபோல்? நான் இரண்டு நாட்களுக்கு முன்பே உன்னைக் கேட்கவில்லையா? இப்பொழுது ஏன்?' அப்பொழுதும் நான் ஒன்றுமே பேச வில்லை. எனது கண்களினின்றும் இரண்டு சொட்டுக் கண்ணீர் மட்டும் வெளிப்பட்டுக் கீழே விழுந்தது.

அண்ணா, அக்கா இருவருக்குமே அதைப் பார்த்து மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டிருக்கவேண்டும். இருந்தாலும் அக்கா என் னிடம் சொன்னாள்: 'பிறகு என்ன, சம்மதம்தானே?'

இப்பொழுது பதில் கொடுத்தாலொழிய வேறு வழியில்லை என்று நிச்சயமாகத் தெரிந்துவிடவே, நான் சட்டென்று சொன்னேன்: 'முடியாது! முடியாது!'

'முடியாதா?' இருவருமே அளவற்ற வியப்புடனும், வருத்தத் துடனும் சொன்னார்கள்: 'முடியாதா? ஏன் முடியாது?'

'ஏனெனில், நான் இப்பொழுது உங்களுடைய அடிகளைச் சாட்சியெனக் கொண்டு, கொண்ட சபதத்தினால் கட்டுண்டு விட்டேன்!'

# 59. சோதனைக் காலம்

எனது வாயினின்றும் அந்தச் சொற்கள் எவ்வளவு ஆவேசத்துடனும், வருத்தத்துடனும், வேதனையுடனும் வெளிப்பட்டன! எந்தப் பேச்சை அவர்கள் என் முன்னால் எடுத்தார்களோ, அது இன்றுவரையிலான எனது வாழ்வின் ஆசையாக இருந்தது. சிறு வயதிலிருந்து—சுந்தரியைப் பார்த்த சமயத்திலிருந்தே என்று சொன்னாலும்கூடத் தவறில்லை—எண்ணத்தில், உள்ளத்தில், கனவில் சுந்தரி எனது மனைவியாகவேண்டும் என்ற விருப்பம். ஆனால் அண்ணாவின் விருப்பம் அவ்வாறு இல்லை என்று அறிந்து, நான் நெஞ்சினுள்ளேயே அதையெல்லாம் அடக்கிக்கொண்டு விட்டிருந்தேன். இன்று அந்த விருப்பம் நிறைவேறும் சமயம் வந்தது. அண்ணாவும், அக்காவும் நேரிலேயே வந்து அந்தப் பேச்சை எடுத்தார்கள். எனக்கோ 'முடியாது! இப்பொழுது முடியவே முடியாது!' என்ற சொற்களைச் சொல்லும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது. கடவுளின் இந்தச் சோதனையைத்தான் என்னென்று சொல்வது? ஒரே நாள், ஒரே ஒரு நாள் முன்னால் அண்ணா என்னிடம் வந்து அந்தப் பேச்சை எடுத்திருந்தால் அல்லது குறைந்தபட்சம் அவர் வந்ததற்கு அரைமணி நேரத்துக்கு முன்பு வந்திருந்தால், எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! ஆனால் அப்படி நடக்கவேண்டியதாக இருக்கவில்லை. விதியின் வழி வேறாக இருந்தது. நானே சபதம் செய்துவிட்டிருந்தேன். ஏதோ ஒரு விரதத்தை நான் மேற்கொண்டாகிவிட்டது; அதுவும் சபதம் செய்து எடுத்துக்கொண்ட விரதம். இனிமேல் என்ன பயன் என்று எனக்குத் தோன்றியது.

வில்லிலிருந்து கிளம்பிய அம்பைப்போல் வாயிலிருந்து கிளம்பிய சொல்லும் போனது போனதுதான். ஆனால் போனதைப்பற்றி எனக்கு மிகுந்த வருத்தம் ஏற்பட்டது. எனது வாழ்வின் ஆசை நிறைவேறும் சமயம் வந்தபொழுது, எனக்கு அதன்மேல் தண்ணீர் ஊற்றிவிடும் நிலை ஏற்படவேண்டும் என்பது எத்தனை கொடூரமானது. யாருடைய வாழ்வில் இதேபோன்று நிகழ்ந்திருக்கிறதோ, அவர்கள்தான் இதைப்பற்றி யோசித்து அறிந்து

கொள்ளமுடியும். மற்றவர்களுக்கு என்ன தெரியப்போகிறது? எனது நடத்தையைப்பற்றி அவர்களுக்கு அடியோடு ஒன்றுமே விளங்கவில்லை. எனக்கு ஏற்பட்டிருந்த அந்த நிலையில் என் வாயிலிருந்தும் ஒரு வார்த்தை கிளம்பாமற் போய்விட்டது. நான் தலை குனிந்தவண்ணம் எனது உள்ளத்திலேயே எனது அந்த விசித்திர நிலையைப்பற்றி எண்ணிக்கொண் டிருந்தேன். அவர்கள் இருவரும் மௌனமாக ஒருவரை ஒருவரும், நடுநடுவே என்னையும் பார்த்துக்கொண்ருந்தார்கள். என்றால் ஒன்றுமே பேச முடியவில்லை; எனது பதிலைக் கேட்டு வியப்பினால் திடுக்கிட்டுப் போன அவர்களுக்கும் ஒன்றும் பேசமுடியாமல் போயிற்று. சிறிது நேரம் கடந்தது. பிறகு மென்மையான சொற்களால் அக்கா என்னிடம் சொன்னாள்: 'தம்பி, தம்பி! நீ இது என்ன சொல்லுகிறாய், முடியாது என்று? இதில் முடியாதது என்னடா? நீ வேறு எங்காவது ஒத்துக்கொண்டு விடவில்லையே?'

அவள் வாயினின்றும் இந்தக் கடைசிச் சொற்கள் வெளிப் பட்டதுமே எனக்கு எப்படியோ இருந்தது. எந்த உயரிய நோக்கத்தின் காரணமாக இன்பத்தின் இவ்வளவு பெரும் பொக்கிஷத்தைத் தள்ளி வைத்தேனோ, அந்த நோக்கம் ஒரு பக்கம் இருக்க, நான் வேறு ஏதோ ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள இணங்கிவிட்டதால் 'முடியாது, முடியாது!' என்று சொல்வதாக அவள் மனத்தில் சந்தேகம் ஏற்பட்டதே எனக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது. அவளுடைய அந்தக் கேள்வி தேளின் கொடுக்கைப்போல் 'டொக்' என்று என்னைக் கொட்டியது. சட்டென்று எனது குரல் ஒலித் தெழுந்தது. நான் அவளிடம் சொன்னேன்: 'அக்கா, அக்கா! இது என்ன, என்னை நீ கேட்கிறாய்? அப்படி நடக்கமுடியுமா, என்ன?'

'முடியாதுதான். ஆனால் எந்த விஷயம் எங்களுக்கு மிகவும் இயற்கையாகப் பட்டதோ, அதை நீ முடியாது முடியாது என்று சொல்லிக்கொண் டிருக்கிறாய் என்றால், எங்களுக்கு முடியாது என்று தோன்றும் ஏதேனும் ஒரு விஷயம் முடியக்கூடியதாகவும் இருக்கலாம். இல்லை என்று யார் சொல்லமுடியும்?'

அக்காவின் இந்தப் பேச்சு வேதனையாகவும், வருத்தமாக வும் இருந்தது. நான் முடியாது என்று சொன்னது அவளுடைய மனத்தை மிகவும் புண்படுத்திவிட்டிருந்தது. அவள் மிகுந்த நம்பிக்கையுடனும், மிகுந்த ஆனந்தத்துடனும் அண்ணாவை

அழைத்து வந்திருந்தாள். எனது பதிலினால் அவளுடைய அந்த நம்பிக்கையும், ஆனந்தமும் இடியினால் தாக்குண்டவை போலாயின. அந்த வருத்தத்தின் வேகத்தில் அவள் இவ்வாறு பேசிக்கொண்டிருந்தாள். மேலே குறிப்பிட்ட அளவு பேசி அவள் நிறுத்தினாள். பிறகு மீண்டும் என்னிடம் சொன்னாள்: 'அப்படி நான் சொல்வதுபோல் ஒன்றும் இல்லை என்றால், பின் முடியாது என்று ஏன் சொன்னாய்? இதில் முடியாதது என்ன இருக்கிறது? இதில் இடையூறாக இருப்பது என்ன? அடே, சிறு வயதிலிருந்தே நீ இந்த ஆசையைக் கொண்டிருந்தாய். யாரிட மாவது சொன்னால் ஆச்சரியம் அடைவார்கள். ஆனால் இவள் காரணமாக ஒருமுறை நோயுற்று விழுந்து வேதனையை அநுப வித்தாய். இன்று அதே ஆசை சாத்தியமாகும் நிலையில் இருக்கும்போது ''முடியாது!'' என்று சொல்கிறாய். இதை என்னென்று சொல்லுவது? இதை என்னவென்று நினைப்பது? உனது உள்ளம் மாறிவிட்டது என்று சொல்லவேண்டுமென்றால், அப்படியும் ஒரு காரணமும் தெரியவில்லை. அப்படி உண்மை யாகவே மாறியிருக்குமானால், உன்னைப்போல் துரதிர்ஷ்டசாலி ஒருவருமே இல்லை என்றுதான் சொல்லவேண்டும். அடே, இப்படிப்பட்ட இரத்தினம் கிடைக்க ஏழு பிறவிகளில் கடுந்தவம் செய்யவேண்டியிருக்கும். அப்பனே, எங்கிருக்கிறாய்? இதில் முடியாதது என்ன? உனது அந்தக் கடிதம், சிறு வயதில் கனவைப்பற்றி எழுதிக்கொண்டிருந்தாயே? நினைவிருக்கிறதா? மறந்துபோய்விட்டது போலிருக்கிறது அது. முடியாது? அதை இன்று நேரில் கேட்க வந்தேன் என்பதால் ''முடியாது!'' என்ற பதிலா . . . ?'

அவள் பேசியதை நான் மௌனமாகக் கேட்டுக்கொண்டேன். அவளுக்கு என்ன பதிலைக் கொடுப்பது என்றே எனக்குப் புரிய வில்லை. அவளுடைய மனத்தில் என்ன சந்தேகம் ஏற்பட்டிருக்கும் என்பதும் எனக்கு விளங்கவில்லை. எனது எண்ணத்தை இப்பொழுதே எப்படி இவர்களுக்குச் சொல்லுவது? மேலும் அது எந்த அளவுக்கு அவர்களுக்குப் பிடிக்கும் என்பதைப்பற்றியும் எனக்குச் சந்தேகம் ஏற்பட்டது. சோதனை மிகுந்த நேரம் அது!

வாழ்வு முழுவதிலும் எந்த நோக்கம் உள்ளத்தில் கொள்ளப் பட்டதோ, அது நிறைவேறும் வாய்ப்பு ஒரு பக்கம். மறுபுறம், இத்தனை நாட்களாக உள்ளத்தில் குழம்பிக்கொண்டிருந்து, கடைசியில் இப்பொழுதுதான் சபதம் செய்து மேற்கொண்ட

அந்த விரதம்? எவ்வளவு விசித்திரமான நிலை? செய்த சபதத்தை மீறுவதா அல்லது வந்த சுகங்களைத் தூக்கி எறிவதா? இப்படிப் பட்ட பெண் கிடைக்கப் போவதில்லை. கல்யாணம் ஆன பிறகு என்னுடையதைப் போன்ற குடும்பம் யாருடையது இருக்கப் போகிறது? எவ்வளவு பேர் என்னைப் பார்த்துப் பொறாமைப்படுவார்கள்!

இந்த எண்ணங்களும், வருங்கால இன்பக் காட்சிகளும் என் கண்முன் தோன்றலாயின. கூடவே நான் இரண்டு மூன்று நாட்களாக, சிறப்பாகப் பல நாட்களாக, மனத்தில் எண்ண மிட்டு வந்த விரதத்தை உறுதியுடன் நிறைவேற்ற நிச்சயம் செய்துகொண்டதும், சபதம் எடுத்துக்கொண்டதும் நினைவு வந்தது. அது சம்பந்தமான எண்ணங்களும் மனத்தில் எழுந்தன.

முற்றும் புதிய ஒரு கழகத்தை நிறுவி, பரோபகாரம் செய்வதற்காக உடலைத் தேய்க்கும் குழுவைத் திரட்டவும், ஒருவகையான தனி நிறுவனத்தையே ஏற்படுத்தவும் எண்ணியிருப்பதெல்லாம் கண்முன் தோன்றின. உள்ளத்தில் இடைவிடாத குழப்பம் ஏற்பட்டது. இப்பொழுது இந்த இருவர் உள்ளத்தில் இந்த எண்ணம் உதித்திருக்கிறது. அதுவும் அக்காவின் உள்ளத்துடன் அந்த எண்ணம் பிணைந்துவிட்டிருக்கிறது, அவள்தான் இதற்குத் தூபமிட்டிருக்கிறாள். எனவே இவர்களுக்கு எனது எண்ணம் அடியோடு பிடிக்கப் போவதில்லை என்பது தெள்ளத் தெளிவாக எனக்குத் தெரிய வந்தது. எனவே 'எப்படிச் சொல்வது, என்ன சொல்வது?' என்ற பிரச்சினை எனக்கு உண்மையில் ஏற்படத்தான் செய்தது. சொல்வதனால் ஏதாவது பலன் கிடைக்கக்கூடும் என்ற நம்பிக்கை எனக்கு இப்பொழுது ஏற்பட வில்லை. எந்த ஒரு குணத்தினால் அக்கா தனித்தன்மை உடையவளாக எனக்குக் காட்சியளித்தாளோ, அதே குணம் இப்பொழுது எனக்குக் குறுக்கே வரும் என்று எனக்குத் தோன்றலாயிற்று. கொண்ட உறுதியைக் காப்பாற்றுதல், பேசுவதை, சொல்லுவதை, மனத்தில் நினைப்பதையெல்லாம் உண்மையாகச் செய்து காண்பிப்பது—இவை எல்லாந்தான் அவள் குண விசேஷங்கள். இவையே இப்பொழுது எனக்குக் குறுக்கே இடையூறாக வரப்போகிறது என்பதுபற்றி எனக்குச் சந்தேகம் இருக்க வில்லை.

நான் ஒன்றும் பேசாமல், மௌனமாகக் கேட்டுக்கொண்டிருக்கிறேன் என்பதைப் பார்த்து அவளுக்கு வருத்தமாக இருந்திருக்கவேண்டும். சிறிது நேரத்திற்குப் பிறகு அவள் மீண்டும் என்னிடம் சொன்னாள்: 'ஏன் இப்பொழுது பேச மாட்டேன் என்கிறாய்? எங்களைச் சாட்சியாகக் கொண்டு செய்த சபதந்தான் என்ன? மேலும் அது என்ன என்று எங்களுக்குத் தெரிவிக்காமலேயே என்ன சபதம் செய்துகொண்டாய்? கல்யாணம் செய்துகொள்வதுதான் என்றால் மறு கல்யாணம் செய்துகொள்வது என்று அர்த்தம்?'

அதைக் கேட்டதும் என்னால் பதில் கொடுக்காமல் இருக்க முடியவில்லை. நான் சட்டென்று அவளிடம் சொன்னேன்: 'அக்கா, என்ன இந்தக் கேள்வியைக் கேட்கிறாயே நீ? இப்படி நான் எப்படிச் சபதம் செய்வேன்? அது என்ன என்பதை நான் உங்களுக்குச் சொல்வதாகத்தான் இருந்தேன். ஆனால் அதற்குள் அண்ணா . . .' மேற்கொண்டு அதுபற்றி என்னால் பேசமுடியவில்லை. எனவே நான் சட்டென்று வடித்து எடுத்துச் சொன்னேன்: 'நான் இப்பொழுது உங்களுக்குச் சொல்லத்தான் போகிறேன். உங்களுக்குச் சொல்லாமல் எதையும் எப்படிச் செய்வேன்?'

'சொல்லாமலேயே சபதம் செய்யும்பொழுது, சொல்லாமல் அதைச் செய்துவிடுவதில் என்ன தடை இருக்கிறது?' அவள் மிகுந்த வருத்தத்தினால் உந்தப்பட்டுப் பேசினாள். அவள் மிகவும் உற்சாகம் இழந்தவளாக ஆனாள். அவளுடைய பெரிய நம்பிக்கை கைவிட்டுப் போய்விட்டது.

இவ்வளவு சொல்லியதும் அவள் மௌனமாக நின்றாள். அண்ணாவோ முதலிலிருந்தே ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவருக்கும் மிகுந்த வருத்தம் ஏற்பட்டிருக்கவேண்டும். தாம் சொல்வதை நான் என்றும் மீறவேமாட்டேன் என்று அவருக்கு என்னிடம் மிகுந்த நம்பிக்கை இருந்தது. ஆனால் எனது பதில் அவரைத் துன்பத்தில் ஆழ்த்தியது. என்ன பேசுவது, என்ன சொல்வது என்றே எனக்குப் புலப்படாமல் போயிற்று. ஒரே காரணத்தினால் நாங்கள் மூவருமே மிகவும் வருத்தம் அடைந்து, ஒருவருக்கு அருகில் ஒருவர் நின்றுகொண்டு ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டிருந்தோம். சுந்தரி அங்கு இருக்கவில்லை என்பது நல்லதாகப் போயிற்று. சிறிது நேரம் இவ்வாறு நின்ற பிறகு இதற்கு ஒரு முடிவு ஏற்பட்டுவிடட்டும் என்பதைப்

புலப்படுத்தும் குரலில் என்னிடம் சொன்னாள்: 'அப்படியானால் என்னதான் காரணம்? எதனால் இப்படி ''முடியாது'' என்பதை யாவது ஒரு முறை தெரிவித்துவிடுங்கள்!'

'தெரிவிப்பேன். உனக்கும் அண்ணாவுக்கும் தெரிவிக்காமல் நான் ஒன்றுமே செய்யப் போவதில்லை. ஆனால் இது அதற்குகந்த சமயம் அல்ல. இப்பொழுது உனது மனம் அமைதியாக இல்லை. மிகவும் குழம்பியிருக்கிறது. ஆனால் அப்படிக் குழப்பிக் கொள்ளாதே. இப்போதே நான் உன்னிடம் ஏதாவது சொன் னால், உனக்கு மிகவும் வேடிக்கையாகப்படும்; விசித்திரமான சிரிப்பு வரும். எனக்கு ஏதோ பைத்தியம் பிடித்திருக்கிறது என்று சொல்வாய். உன்னுடைய உள்ளம் அமைதி அடை யட்டும். பிறகு நான் உனக்கு எல்லாம் சொல்வேன். எனது கையினால் எந்தச் சபதம் செய்யப்பட்டிருக்கிறது, மேலும் அது எத்தனை மகத்துவம் கொண்டது என்பதைக் கேட்டுக்கொள்ளும் மனநிலை உன்னிடம் இப்பொழுது இல்லை.' இவ்வளவு சொல்லி நான் மௌனமாக உட்கார்ந்திருந்தேன். எனது உள்ளம் ஏதோ பெரும் பிரச்சினையினால் குழம்பியிருக்கிறது என்பதை அண்ணா ஊகித்துக்கொண்டார். எனவே இப்படிப்பட்ட நிலையில் தனிமையில் யோசிப்பதே சிறந்தது என்பதை அறிந்துகொண்டு அவர் போவதற்காக எழுந்தார். கிளம்பிக்கொண்டிருக்கும் போது அவர் சொன்னதெல்லாம் இவ்வளவுதான்: 'என்னதான் ஆனாலும் உண்மை விரதத்தின் நெறியை விட்டுச் செல்லக் கூடாது. உண்மையான இன்பம் அதில்தான் இருக்கிறது.'

இதற்குமேல் ஒரு வார்த்தைகூட அதிகமாக அவர் பேசவில்லை. உடனேயே அங்கிருந்து கிளம்பிப் போய்விட்டார். ஆனால் அவருடைய கடைசி வார்த்தைகள் எனது இதயத்தோடு பிணைந்துவிட்டன. அந்த இறுதிச் சொற்களினால்தான் எனக்கு எவ்வளவு திடம் ஏற்பட்டது!

# 60. மனப் போராட்டம்

மூளையில் நெருப்புப் பற்றிக்கொண்டதுபோல் ஆயிற்று. எனக்குத் தேவைப்பட்டிருந்த தனிமை எனக்குக் கிடைத்தது. ஆனால் ஒரு பயனும் இருக்கவில்லை. எண்ணங்கள் உள்ளத்தை வாட்டி எடுத்தன. என் செய்வேன்? இப்படிப்பட்ட சமயத்தில் நான் என்னதான் செய்வேன்? எங்கேயாவது வெளியில் போவதா? ஆற்றங்கரைக்கு? சதுர்ஷ்ருங்கியின் குன்றின்மீது குளிர்ந்த காற்று வீசுமிடத்தில்? அங்கு மூளையின் கொதிப்பு தணியுமா? சே, எங்கிருந்து தணியப் போகிறது? பற்பல எண்ணங்களுக்கிடையில் பயங்கரமான போர் நடந்தது. அந்த எண்ணங்களுக்கிடையில் சமரசம் காண்பது முடியாத காரிய மாக இருந்தது. ஒரு பக்கத்து எண்ணங்களால் நான் அடித்துச் செல்லப்பட்டேன். அவற்றிலிருந்து என்னை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. வேறு எண்ணங்கள் இப்பொழுது சில ஆண்டுகளாக என்னை முற்றுகை இட்டிருந்தன. நான் அவற்றால் தாக்கப்பட்டிருந்தேன். ஆனால் இன்று அவற்றை விட்டு நான் என்னை முற்றும் விலக்கிக் கொள்ளத் திட்டம் போட்டேன். அவை என்னை மனமகிழ்ந்து விட்டுச் செல்ல அணுவளவும் தயாராக இருக்கவில்லை. என்னைத் தம் கைக்குள் கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ளத் துடித்துக்கொண்டிருந்தன. எனது நிலை மிகுந்த விசித்திரமாக ஆகியிருந்தது.

இந்த எண்ணங்களின் போராட்டத்திற்கு நடுவில் சிக்கியிருந்த எனக்கு ஏதாவது ஒன்றின் ஆதாரம் வேண்டியிருந்தது. அக்கா வும், நானும் இந்த நேரத்தில் ஒத்துப் போகக்கூடிய நிலைமை இருக்கவில்லை. எனது திட்டம், எனது விருப்பம், எனது ஆர்வம், தன்னையே அர்ப்பணிக்க வேண்டும் என்ற துடிப்பு முதலான விஷயங்களின் சூட்சுமத்தை, அவற்றின் மகத்துவத்தை அறிந்து கொள்வதற்கு வேண்டிய அறிவு அவளிடம் இருக்கவில்லை என்பதல்ல. அது பெருமளவில் இருந்தது. ஆனால் இப்பொழுது அவளுடைய உள்ளம் அந்த விஷயங்களின் மகத்துவத்தைக் கவனத்தில் கொள்ளும் நிலையில் இருக்கவில்லை. அவள் எடுத்த

விஷயத்தை நான் மறுத்ததால் அவளுக்குத் தான் அவமதிக்கப் பட்டதாகத் தோன்றியிருந்தது. எனவே அவள் எல்லா விஷயங் களைப்பற்றியும் ஒரு தரப்பில் இருந்தவாறே ஆய்ந்திருப்பாள் என்று எனக்கு நிச்சயமாகத் தோன்றியது. அதனுல்தான் தற் சமயம் நான் அவளிடம் எதையும் சொல்லவேண்டும் என்ற எண்ணத்துக்கு என்னுள் இடம் கொடுக்கவில்லை.

எனது நம்பிக்கைக்குப் பாத்திரமான இரண்டாவது நபர் அண்ணு. அவரும் இப்படிப்பட்ட வேளையில் எந்த அளவுக்குப் பொறுமையுடன் எனக்கு அறிவுரை கொடுப்பார் என்பதைப் பற்றியும் சந்தேகம் ஏற்பட்டது. இப்படிப்பட்ட நேரத்தில் எனக்கு ஏதாவது ஓர் ஆதாரம் வேண்டியிருந்தது. யாருடைய ஆதாரமாவது தேவையாக இருந்தது. ஏதாவது ஒரு புத்தகத்தி னுடையதோ, ஏதாவது ஒரு வேதாந்தியுடையதோ, ஏதாவது ஒரு வாக்கியத்தினுடையதோ எப்படிப்பட்டதாகிலும் ஓர் ஆதாரம் வேண்டியிருந்தது. நான் மிகவும் துன்புற்றிருந்தேன்.

அக்கம்பக்கத்திலிருந்த புத்தகங்களிலிருந்து வெறுமனே சில புத்தகங்களை இங்குமங்குமாக நகர்த்தி வைத்தேன். சில தாள் களைப் புரட்டினேன். ‘எங்கேயாவது எதிர்பாராதவிதமாக ஏதா வது ஒரு வாக்கியம் கிடைக்கும், அதன் மூலம் என் மனத்தில் ஊக்கம் பிறக்கும், எனது மனம் உறுதிகொண்டதாக ஆகும். இல்லையெனில், சந்தேகங்கள் யாவும் மறைந்து ஏதாவது ஒரு முடிவு ஏற்படும்’ என்ற நம்பிக்கை இருந்தது. ஆனுல் எல்லாம் வீண்! எண்ணி எண்ணிப் பார்த்துக்கொண்டே இருந்தேன். எண்ணங்களின் உலகிலேயே எனது வாசம் இருந்தது என்று தோன்றும் அளவிற்கு நான் எண்ணங்களில் மூழ்கியிருந்தேன்.

வருங்கால வாழ்வைப்பற்றிய இருவிதமான காட்சிகள் என் கண்முன் ஓடுவதுபோலிருந்தது. ஒருபுறத்தில் இருந்த திரைப் படக் காட்சியில் நான் சுந்தரியை மணந்து குடும்ப சுகத்தில் திளைத்தவனுகக் காணப்படுகிறேன். அக்கா என் அருகில் இருக் கிருள். அவளுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. அவள் மடியில் என்னையே உரித்து வைத்தது போன்றிருக்கும் ஒரு சிறு பையன் அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டு கலகலவென்று சிரித்துக் கொண்டிருக்கிருன். சுந்தரியின் தாயின் மடியில் இருக்கும் ஒரு பெண் அவளைப் பாட்டி, பாட்டி என்று சொல்லி அழைத்து ஏதோ கேட்டவாறும், ஏதோ சொல்லிக்கொண்டும் இருக் கிருள். இவ்வாருன காட்சிகள் தெரிந்தன.

எங்கள் கல்யாணம் முடிந்தபிறகு நாட்டின் நலம் கருதி எங்க ளால் என்னவெல்லாம் செய்யமுடியும் என்று எங்களுக்குத் தோன்றியிருந்ததோ, அந்தக் காட்சிகள் யாவும் மிகவும் மங்க லாகத் தெரிந்து கொண்டிருந்தன. ஓரிடத்தில் அக்காவும், சுந்தரி யும் சேர்ந்து சில மங்கையர்க்கு ஏ, பி, சி கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள் அல்லது தொப்பியும் கழுத்துப்பட்டையும் நெய்யச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். இதற்கு அப்பாற்பட்டு ஒன்றுமே தெரியவில்லை. நானும் எங்கோ ஏதோ ஒரு சபையில் சொற்பொழிவு ஆற்றிக் கொண்டிருக்கிறேன் அல்லது யாருக்காக என்றே விண்ணப்பம் எழுதிக் கொடுத்துக்கொண் டிருக்கிறேன். தினசரிப் பத்திரிகை யின் பையன் 'காபி' வாங்கிக்கொண்டு செல்வதற்காக வந்திருக் கிறான் என்று ஏதோ கட்டுரையைப் பரபரவென்று எழுதிக் கொண்டிருக்கிறேன். அதற்கு மேற்பட்டு ஒன்றும் தெரியவில்லை.

மற்றொரு பக்கம் இருந்த திரைப்படத்தில் எனது வேடம் மிகுந்த விசித்திரமாக இருக்கிறது. நான் ஒரு புதிய சங்கத்தை, புதிய மடத்தை நிறுவுவதற்காக விரைகிறேன். கல்வி கற்றவுடன் என்னைப் போலவே மணமின்றி இருந்து, சுயநலத்தை முடிந்த அளவு தியாகம் செய்து, நாட்டின் நலத்திற்காக, மக்கட்தொகை செறிந்த சமூகத்தின் நலத்திற்காக மட்டுமே செயலில் இறங்க வேண்டும் என்று அறிவுரை கூறிக்கொண் டிருக்கிறேன். எனது இடையறாத உழைப்பின் பயனாக எனக்கு ஓரளவு வெற்றி கிடைத்து, முதலில் இரண்டு, பின்னர் நான்கைந்து என்று இளைஞர்கள் எனக்குக் கிடைத்திருந்தார்கள். நாங்கள் எல்லாரு மாகச் சேர்ந்து ஒரு மடத்தை நிறுவியிருக்கிறோம்.

குழப்பம் அடைந்த ஒரு வழிப்போக்கன் எவ்வாறு இரு பாதைகள் பிரிந்து செல்லும் இடத்தில் நின்றுகொண்டு எந்தப் பாதையில் மேற்கொண்டு செல்ல வேண்டும் என்று புரியாமல் திகைத்துப் போகிறானோ, அதைப் போன்றதாகத்தான் எனது நிலையும் ஆகியிருந்தது. என்ன செய்தும் இன்ன வழியைத் தான் பின்பற்ற வேண்டும் என்பது எனக்குத் தெளிவாகவில்லை. என் முன்னால் எனது கற்பனையின்படி வருங்காலத்தின் இரு வகைப்பட்ட சித்திரங்களும் தோன்றி நின்றன. ஒன்று, மிகுந்த சுகம் தருவதாக, பார்ப்பதற்கு இன்பகரமாகவும் எளிதாகவும் தெரிந்தது. இரண்டாவது, மனத்திற்கு அவ்வளவு சுகம் தருவதாக இல்லை. அதில் குடும்ப சுகமும், இகலோகச் சுகமும்

எள்ளளவும் இல்லை என்று தோன்றியது. ஆனால் தன்னலத்தைக் கெடுத்துக்கொண்டாவது பிறர் நலத்துக்காகப் பாடுபட வேண்டும் என்பது என்னுடைய நோக்கமாக இருந்தது.

மனிதன் தன் சுகத்தை இழந்தாலும் பரவாயில்லை. ஆனால் சமூகத்தின் நலனைப் பெருக்கவேண்டும். தனிமனிதன் எப்பொழுதாகிலும் அழிந்துவிடுகிறான்; ஆனால் சமூகம் அழிவதற்குப் பல கோடி ஆண்டுகள் பிடிக்கின்றன. நாங்கள் இந்துக்கள்—ஆரிய வசிஷ்ட வாமதேவர்களது, இராம அரிசந்திரருடைய குலத்தவர்கள். தன்னலங் கருதுபவர்கள் அல்ல, பிறர் நலத்தையே பெரிதெனக் கொள்பவர்கள். இந்தப் பிறர் நலம் கருதும் தன்மையே போய்விட்டதனால்தான் இந்தத் தாழ்ந்த நிலையை அடைந்திருக்கிறோம். இந்த நிலை மாறி, முன்னேற்றம் அடையும் விருப்பம் இருந்தால், அதற்கு வேண்டிய குணங்கள் உடலில் இருக்கவேண்டும். அஃதின்றி அது நிறைவேறாது.

இவ்வாறான எண்ணங்கள் இரவும் பகலும் இடையறாது என் உள்ளத்தில் ஓடிக்கொண்டிருந்தன. புதிய விரதம், புதிய சங்கம் நிறுவுவதற்கான நோக்கம் எனது உள்ளத்தில் பிறந்து வளர்ந்தது. அதற்கு நிச்சயமாகப் பலன் ஏற்பட்டது. அப்படியிருக்க இப்போது அதன்மீது திடீரென்று குளிர்காற்றுப் பட்டு அது காய்ந்து போய்விட்டது. இவ்வாறான எண்ணங்களில் எவ்வளவு நேரம் மூழ்கியிருந்தேனோ? நான் அங்கும் இங்கும் அலைந்துகொண்டிருந்தபொழுது என்னையறியாமலேயே சன்னலின் அருகில் சென்றேன். அப்பொழுது யார் என் கண்ணில் பட்டது?

என் வாழ்வின் தொடர் எவளுடைய வாழ்வின் தொடருடன் ஒன்று சேரவேண்டும் என்று எனது பல நாள் ஆசையாக இருந்ததோ, அதே சுந்தரி என் கண்ணில் பட்டாள். எனது உள்ளத்தில் என்ன ஓடிக்கொண்டிருக்கிறது, எனது நிலை எப்படிப்பட்டதாக ஆகியிருக்கிறது என்று அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்று எனக்கு ஏனோ தோன்றியது. மனத்தில் தோன்றியது: 'இந்த எல்லாருடைய விருப்பத்திற்கும் எதிராக, நமது சொந்த சுகத்தை விட்டுக்கொடுத்து இந்தத் தொழிலில் எதற்காக இறங்க வேண்டும்? குடும்பத்தில் காலை வைத்ததனால் நாட்டின் சேவையைச் செய்ய முடியாதா? எவ்வளவு நடக்குமோ அதுவே நன்று. வேறு ஒரு கழகத்தில் காலை வைத்து நமக்கு வேறு உதவி கிடைக்கவில்லை என்றால் பிறகு என்ன ஆகும்? நான் தனித்துச் செய்யும் உழைப்பு எந்த அளவுக்குப் பயன்படும்? அதன் முடிவு என்ன

ஆகும்? அக்கா சொல்வதும், எனக்குத் தோன்றுவதுமான அந்த நிலையில் நம் குடும்பத்தினர் எல்லாரும் ஒன்று சேர்ந்து எவ்வளவோ காரியம் செய்ய முடியும்.'

ஒரு முறை இவ்வாறுன எண்ணங்கள் உள்ளத்தில் வரத் தொடங்கியதும், மற்ற எண்ணங்கள் ஒவ்வொரு கணமும் மேலும் மேலும் அதிகமாக இருளில் மறைந்து செல்கின்றுற்போல் தெரிந்தன. ஆனுல் அப்படி நேரிடுவதாக இருக்கவில்லை. அதனுல் நான் சட்டென்று விழித்துக்கொண்டேன். 'நான் மோகத்தின் வலையில் சிக்கியிருக்கிறேன். என்னைச் சுற்றிலும் அந்த வலை மெள்ள மெள்ள மேலும் மேலும் இறுகிக்கொண்டே வருகிறது' என்று எனக்குத் திடீரென்று தோன்றலாயிற்று. அப்படித் தோன்றியதுமே, எப்படி ஒரு மனிதன் துடிதுடித்து உடலை உதறித் தன்னை அதிலிருந்து விடுவித்துக்கொள்ளப் பார்க்கிறுனே, அதேபோல் எனது நிலை ஆயிற்று. நான் அந்த வலையினுள்ளே சிக்கிக்கொண்டிருக்கிறேன் என்பதை அறிந்தவுடனேயே, நான் சன்னலை விட்டுச் சட்டென்று பின்வாங்கினேன். 'சபதம் செய்தது செய்தாகி விட்டது' என்று மனத்தை உறுதிப் படுத்திக்கொண்டேன். எனது சுகத்தைக் கைவிட்டு விடத்தான் வேண்டும். தனி ஒருவனுகி நின்று எனது கையினுல் ஒன்றுமே முடியப்போவதில்லை என்பது வெட்டவெளிச்சமாகத் தெரிந்தே இருந்தது. ஆனுல் அதற்காகப் பின்வாங்குவது, செய்த சபதத்தை மீறுவது, முற்றும் தவறுனது, அநியாயமானது. முடிவு செய்தாகி விட்டது!

அண்ணுவை அழைத்து அல்லது அவரிடம் போய் நமது முடிவைப்பற்றி அவருக்குத் தெரிவிக்க வேண்டும் என்று எண்ணினேன். பிறகு என்ன ஆகுமோ அது ஆகட்டும். இப்படி நினைத்த படியே நான் எழுந்தேன். மெல்ல அடி எடுத்துவைத்து அண்ணு உட்கார்ந்திருந்த இடத்தை அடைந்தேன். சென்றது என்னவோ மிகவும் பயந்தவாறுதான். எனது வாயினின்றும் வார்த்தைகள் எப்படி, என்ன வெளிப்படும் என்பதைப்பற்றித்தான் எனக்கு அச்சம் ஏற்பட்டது. அதிலும் அவரே, அதில் சம்பந்தப்பட்டிருந்தார். அதனுல் இன்னும் மிகுந்த விசித்திரமான நிலை ஏற்பட்டது. இருந்தபோதிலும் அவருக்குத் தெளிவாக எழுதி அல்லது அழைத்து நேரில் சொல்வதைத் தவிர வேறு எந்த வழியுமே இருக்கவில்லை. எழுதுவதைவிடச் சொல்வதே நல்லது என்று எனது பழைய அநுபவங்கள் எனக்குச் சொல்லலாயின. எனவே

அவ்வாறே செய்ய நான் முடிவு செய்தேன். மேலே கூறியவாறு நான் அவரிடம் சென்றேன்.

அவர் தனியாகவே சமுக்காளத்தின்மீது படுத்துக் கிடந்தார். காலையில் நடந்ததைப் பற்றித்தான் அவர் ஏதாவது யோசித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். அவரது முகம் வாடிக் கிடந்தது வெளிப்படையாகத் தெரிந்தது. நான் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன். அவரை நெருங்கி அவரிடம் சொன்னேன்: 'அண்ணு, இவ்வளவு நாட்களில் முதல் முதலாக உங்களுக்குப் பிடிக்காத விஷயத்தைச் சொல்ல எனக்கு அனுமதி கொடுங்கள் என்று சொல்லவேண்டிய நிர்ப்பந்தம் எனக்கு ஏற்பட்டிருக் கிறது. அதற்காக நான் மிகவும் வருந்துகிறேன். ஆனால் வேறு வழியில்லையென்று நான் இப்பொழுது உங்கள் முன்னிலையில் எல்லா விஷயங்களையும் கூறப்போகிறேன். அவற்றை நீங்கள் கேட்டுக்கொள்ளுங்கள். பிறகு நிதானமாக அவற்றைப்பற்றி யோசித்து, என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றி எனக்குச் சொல்லுங்கள். உங்களிடம் கேட்காமல், சொல்லாமல் நான் சபதம் செய்துவிட்டேன். ஆனால் அது ஒருவேளை அறியாமையைக் குறிக்கிறது என்றால் நான் அதை முறித்து விடுவேன். ஆனால் நீங்கள் ஒருமுறை எனது எல்லா எண்ணங்களையும், அந்த எண்ணங்கள் எப்படி வந்தன என்பதுபற்றிய உண்மைகளையும் கேட்டுக்கொள்ளுங்கள். எனது அறைக்கு நீங்கள் வந்தால் மிகவும் நல்லதாகும். இடையில் ஒருவருடைய தடங்கலும் இல்லாமல் எல்லாம் விவரமாகச் சொல்லுவேன்.'

இவ்வளவு சொல்லி நான் மௌனமானேன். அவர் பேசாமல் எழுந்தார். எனக்கு முன்னால் என் அறைக்குள் சென்றார். எதிரில் இருந்த சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தார். ஆவலுடன் என் முகத்தைப் பார்க்கலானார். நான் மெள்ள இன்னொரு நாற்காலியை அவருடைய நாற்காலிக்கருகில் இழுத்துப் போட்டுக்கொண்டேன். முதலிலிருந்து முடிவுவரை எனது எண்ணங்களின் தொடரையும், நிச்சயம் செய்துகொண்ட அதன் முடிவையும், சபதத்தையும் சொன்னேன். எல்லா விவரங்களையும் கேட்டுக்கொண்டிருந்தபொழுது அவர் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. கற்சிலையைப்போல் அமைதி யுடன் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தார். இடையில் அவர் என்னை ஒரு கேள்விகூடக் கேட்கவில்லை. அதுமட்டும் அல்ல, அவர் எனது முழுப் பேச்சும் முடிந்தபிறகும்கூட எவ்வளவோ

நேரம் மௌனமாக இருந்தார். இவ்வளவு மௌனமாக அமர்ந்திருக்கக் காரணம் என்னவாக இருக்கும்? மொத்தத்தில் எனது எண்ணங்கள் அவருக்கு வேடிக்கையாகப் பட்டிருக்காதே? 'என்ன பைத்தியக்கார ஆள் இவன்! இவன் கையால் இப்படிப்பட்ட உயர்ந்த காரியங்கள் எப்படி ஆகும்? மேலும் ஓர் எறும்பு இமாலயத்தைத் தூக்க முயல்வதுபோல் இவன் இந்த முயற்சியில் இறங்கத்தான் ஏன் பார்க்கிறுன்?' இப்படி அவருக்குத் தோன்றியிருக்காதே?

இவ்வாறுன கேள்விகள் என் மனத்தில் தோன்ற, இப்பொழுது நான் சொன்னவற்றுக்கு என்ன பதில் சொல்லப் போகிறுர், என்ன அறிவுரை கொடுக்கப்போகிறுர் என்பதை அறிவதற்காக நான் பேரார்வம் உடையவன் ஆனேன். நான் கண்கொட்டாமல் அவரையே பார்த்துக்கொண்டிருந்தேன். அவரிடமிருந்து ஒரு பதிலும் வரவில்லே. நான் சொன்ன விஷயங்கள், எனது எண்ணங்கள் முற்றும் புதியனவாக இருந்தன என்பதால், அவற்றைப்பற்றி அவர் ஆலோசித்துக் கொண்டிருந்தாரா என்ன? அல்லது இந்தக் கற்பனேக் கோட்டையைப்பற்றி எல்லாம் கேட்டு அவருக்குப் பிடிக்கவில்லேயோ? எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது, நான் வழிதவறி ஏமாந்து விட்டேன் என்று ஒருவேளே அவருக்குத் தோன்றிவிட்டிருக்குமோ? இவ்வாறுகப் பல சந்தேகங்கள் என் உள்ளத்தில் வரத் தொடங்கின.

அவரிடமிருந்து ஏதாவது பதில் வரவேண்டும், அவருடைய எண்ணத்தை அறியவேண்டும் என்று எனக்கு மிகுந்த ஆசை ஏற்பட்டது. எந்த ஒரு விஷயத்தைப்பற்றியும் தீவிர ஆசை ஏற்பட்டுவிட்டால், பின்னர் அது நிறைவேறுவதில் கணப்பொழுது தாமதம் ஏற்பட்டாலும், அது மணிக்கணக்காகப் படுகிறது. எனது நிலே ஒருவேளே அப்படித்தான் ஆகியிருந்திருக்கும். நான் எல்லா விவரங்களேயும் சொல்லி முடித்தபிறகு, அதிகமாகப் போனுல் ஒன்று அல்லது ஒன்றரை நிமிடம் அவர் மௌனமாக உட்கார்ந்து இருந்திருப்பார். ஆனுல் அந்த ஒன்று, ஒன்றரை நிமிடம் எனக்கு ஒரு மணி, ஒன்றரை மணி நேரமாகத் தோன்றியது. நான் மிகவும் பொறுமையற்றவன் ஆனேன்.

கடைசியில் என்னுல் பேசாமல் இருக்கமுடியவில்லே. நான் அண்ணுவிடம் சொன்னேன்: 'அண்ணு, ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்? நான் சொன்னவை யாவும் உங்கள் கவனத்திற்கு

வந்ததல்லவா? நான் சொல்வதுபோல் இப்படிப்பட்ட முயற்சிகளைச் செய்து பார்ப்பதற்காக, என்னைப் போன்ற சில கட்டுமஸ்தான இளைஞர்கள் தங்களது உடல், பொருள், ஆவியை இந்த உயர்ந்த காரியத்திற்காக அர்ப்பணிக்கவேண்டிய அவசியம் இருக்கிறதல்லவா? இப்படி ஏதேனும் ஒரு குழு அமைந்தாலொழிய, மேலும் அவர்களுடைய பணிகளில் ஒத்துழைப்பதற்காகச் சில தலைமுறைகள் வரை அவ்வாறே ஆசை, பட்சபாதம் என்பவை இல்லாத மக்கள் கிடைத்தாலொழிய, திட்டமிட்ட கொள்கை நிறைவேறப் போவதில்லை என்பது உண்மைதானே? பழைய விஷயங்களில் இவை நல்லவை, இவை கெட்டவை என்ற அளவுக்கு அறிந்துகொண்டு செல்வதனால் பயனில்லை. மக்களிடையில் அரசியலைப்பற்றிய விஷயத்திலும், சமூகம் முதலான இதர பல விஷயங்களிலும் அறிவைப் பரப்பும் காரியத்தைச் செய்யவேண்டும். அந்த அறிவு பள்ளிகளின் மூலமாகவோ அல்லது வேறு வழிகளின் மூலமோ ஏற்படப்போவதில்லை. எனவே நான் தனியாக ஒரு கழகத்தை நிறுவி, தனியொரு சங்கத்தை ஏற்படுத்தி, நல்ல கல்வியறிவு பெற்றவர்களை அதன்படி நடப்பவர்களாக ஆக்கி, ஊர் ஊராக அவர்கள் போகும்படி செய்யவேண்டும் என்பது உங்களுக்குச் சரியென்று படவில்லையா?' என்ற கேள்விகளைத் தொடர்ந்து கேட்டு, ஏதோ அவரை விழிப்படைச் செய்வதுபோல் செய்தேன்.

அவருடைய பதிலை அறிய நான் எவ்வளவு ஆர்வம் கொண்டவனாக ஆனேன் என்பதை அவர் நன்கு உணர்ந்து கொண்டதுபோல் தோன்றியது. ஏனெனில் சிந்தனையில் ஆழ்ந்தவாறு என்னைப் பார்த்துச் சொல்லலானார்: 'உனக்கு ஏற்பட்டுள்ள இந்தப் புத்துணர்ச்சி முற்றும் உகந்ததுதான். உனக்குப் புத்துணர்ச்சிதான் ஏற்பட்டிருக்கிறது என்று நான் எண்ணுகிறேன். நீ காரியத்தைத் துவங்கு. பயமில்லாமல் தொடங்கு. இதில் ஒரு வேளை உனக்கு வெற்றி கிடைக்காமல், பின்பற்றுவோர் உனக்குக் கிடைக்காமல் இருக்கலாம். ஆனால் உனது இந்த எண்ணங்கள் நிரூபணமாகும். மனிதனுக்கு என்னதான் ஆனாலும் சரி, ஆனால் அவனுடைய எண்ணங்கள் சமூக நலத்திற்கேற்றவையாகவும், உண்மைத் தத்துவம் கொண்டவையாகவும் இருக்குமேயானால், அவை என்றென்றும் நிலைத்திருக்கும். சிறிதும் தயங்காமல் நீ இந்தக் காரியத்தில் இறங்கு. அப்படிப்பட்ட சங்கத்தை நிறுவு. தன்னையே அர்ப்

பணித்துக் காட்டும் ஓர் உதாரணம் எவ்வளவோ பயன் தரும். நாங்கள் சொல்லிக்கொண்டிருந்த அந்த வழி இன்பகரமானது என்பது உண்மை. ஆனால் அழியாது நிலைபெற்று நிற்கும் நலத்தைக் கொண்டது அல்ல. இதில் உனக்கு வெற்றி கிடைத்தாலும் சரி, கிடைக்கவில்லை என்றாலும் சரி, அநேகமாகக் கிடைக்காது என்பது நிச்சயம், நீ இந்த வழியைக் கைவிடாதே. சாவு வந்து மனிதனின் உடல் அழிவடைகிறது. ஆனால் அவனது உயிரும், அந்த உயிரின் உயர்ந்த எண்ணங்களும் மேலும் மேலும் ஓங்கி உயர்ந்துகொண்டே போகும். என்றும் அதிலிருந்து கீழே இறங்காது.' இவ்வளவே பேசி அவர் மௌனமாக உட்கார்ந்தார். நான் எனது நம்பிக்கையை அதன் இறுதி எல்லை வரையிலும் உயர்த்திச் சென்று அவருடைய பதிலை ஊகித்துப் பார்த்திருந்தாலுங்கூட, அது இவ்வளவு அனுகூலமானதாகக் கிடைத்திருக்காது. அந்தப் பதிலைக் கேட்டு நான் பெரு வியப்பில் ஆழ்ந்தேன். அதுமட்டும் அல்ல; 'என் ஆவேசத்தை உணர்ந்து, என்னை மகிழ்விக்கவேண்டும் என்பதற்காக அவர் இவ்வாறான பதிலைக் கொடுத்தாரோ?' என்ற கேள்வியும் என் மனத்தில் எழுந்தது. அதனால்தான் நான் அவர் முகத்தை மிகவும் கவனத்துடன் உற்று நோக்கினேன். ஆனால் அந்த முகத்தின் மீது சோகமும், மனநிறைவும் தவிர வேறு ஒன்றுமே தென்படவில்லை.

# 61. மேற்கொண்டு

நான் மிகுந்த பரிவுடனும் மதிப்புடனும் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எனது கண்கள் கண்ணீரால் நிறைந் திருந்தன. உள்ளம் மிகவும் மகிழ்ந்திருந்தது. இந்த மனிதர் அசாதாரணமான ஒருவர் என்பதில் இதுவரை எனக்கு ஏதாவது சந்தேகம் இருந்திருக்குமானாலும்கூட, அது இன்று அடியோடு நீங்கிவிட்டது. அவருடைய முகத்தில் காணப்பட்ட சோகம் மிகுந்த விசித்திரமானதாக இருந்தது. தாம் விரும்பியபடி நான் நடந்துகொள்ளாததால் அவருக்கு மிகவும் வருத்தமாக இருந்திருக்கவேண்டும் என்பது வெளிப்படையாகத் தெரிந்து கொண்டிருந்தது. நாம் என்ன சொன்னாலும் இவன் செய்வான், அதற்கு எதிராகச் சொல்லமாட்டான் என்று அவருக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால் அவர் அந்த நம்பிக்கையைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. அவர் எந்த வாக்கியங்களில் எனது புதிய கழகத்தை அனுசரித்துச் செல்லச் சொன்னாரோ, அந்த வாக்கியங்கள் அழியாத சத்தியங்களைச் சார்ந்தனவாக இருந்தன. 'சாவு ஏற்பட்டு என்றாகிலும் ஒரு நாள் மனிதனின் உடல் அழிவை அடைகிறது. ஆனால் அவனது உயிரும், உயிரின் உயர்ந்த எண்ணங்களும் மேலே உயர்ந்துகொண்டே இருக் கின்றன. என்றும் அவை அழிவை அடைவதில்லை.' இந்த வாக்கியங்கள் சாதாரணமானவை அல்ல. இந்த வாக்கியங்கள், இந்த எண்ணங்கள் சாதாரண மனிதனுக்குத் தோன்றுபவை யல்ல. அசாதாரணமான மனிதனுக்கே இந்த எண்ணங்கள் தோன்றும். இருந்த இடத்திலேயே அவர் வெகுநேரம் உட்கார்ந் திருந்தார். எண்ணத்தில் ஆழ்ந்திருப்பவர்போல் காணப் பட்டார். நான் மௌனமாக அவரைப் பார்த்தவண்ணம் இருந்தேன். அவரது ஒன்றிய நிலையைக் கலைக்க மனம் வர வில்லை. ஏதோ கற்சிலையைப் போன்ற நிலையில் நாங்கள் இருவரும் இருந்தோம். அவர் தமது கண்களை அரைகுறையாக மூடிய வண்ணம் கீழே பார்த்துக்கொண்டிருந்தார். நான் மௌனமாக அவரைப் பார்த்துக்கொண்டிருந்தேன். இன்றுவரையிலான

அவருடைய வாழ்க்கையை நிகழ்ச்சிவாரியாக மனத்தில் எண்ணிப் பார்த்து நான்பாட்டுக்கு வியந்துகொண்டிருந்தேன்.

எந்த மனிதரின் பாதுகாப்பிலும், போதனையிலும் நான் வளர்ந்தேனே, அந்த மனிதரின் உண்மையான மேன்மை இன்றுதான் எனக்குத் தெரிந்தது என்று சொல்வதிலும் தவறில்லை. நான் என் மனத்திலேயே சொல்லிக்கொண்டேன்: 'இவரைப்போல் மௌனமாக முன்னேறிக்கொண்டு செல்லும் மக்கள் இந்த உலகில் எவ்வளவு குறைவாக இருப்பார்கள்? இவரைப் போன்றவர்களின் கையினால் என்ன என்ன காரியங்கள் நடக்கின்றன, எவ்வளவு அதிகமான லாபம் ஏற்படுகிறது என்பவற்றைப்பற்றி உலகத்தினரால் கற்பனையும் செய்ய முடியுமா? இவர்தாம் உண்மையான போதனையாளர்; இவர்தாம் உண்மையான செயலாளர். இவருடைய ஒரு வாக்கியத்தினால் ஆகக்கூடிய காரியம், வளவளவென்று பேசிக்கொண் டிருப்பவர்களின் இலட்சக்கணக்கான வாக்கியங்களினால் ஆவதில்லை.'

இவை போன்ற எண்ணங்கள் உள்ளத்தில் தோன்றிக்கொண்டிருக்க, நான் என் வருங்காலத்தைப்பற்றியும் ஏதேதோ எண்ணமிட்டவாறு இருந்தேன். அதற்குள் அண்ணாவின் வருத்தம் தோய்ந்த சொற்கள், கரகரத்த குரலில் என் காதுகளில் விழுந்தன: 'தம்பி, நீ உனது வழியைப் பின்பற்றுவதற்கு முன்பு ஒரு விஷயத்தை மட்டும் நான் உனக்குச் சொல்லப் போகிறேன். உனக்கு இன்றுவரை குறைந்த அநுபவம் ஏற்பட்டிருக்கிறது என்பது இல்லை. மக்கள் உன்னை எப்படி நடத்துவார்கள் என்பதுபற்றியும் உனக்கு நல்ல அநுபவம் உண்டு. ஆகவே நீ புதிய மடத்தை நிறுவி, புதிய பரம்பரையை, புதிய முறைகளைத் தொடங்குவாயேயானால், தொந்தரவுகள் தொடங்கிவிடும். வெறும் தொல்லைகளினால் நீ நிலைகுலைந்து விடமாட்டாய் என்பதைப்பற்றி எனக்குச் சந்தேகம் இல்லை. ஆனால் உனக்கு நான் சொல்ல விரும்புவது இதுதான்:

'நிலையற்றது எது, நிரந்தரமானது எது என்பதை ஆலோசித்த பின்பே எதைச் செய்யவேண்டுமோ, அதைச் செய்துகொண்டு போ. இன்றுவரை பல சமூகங்கள், பல கழகங்கள், பல குழுக்கள் தோன்றின. ஆனால் உனது கழகம் முற்றும் வேறுபட்டது என்று நான் நினைக்கிறேன். நீ சரியான கழகத்தை உருவகப் படுத்திக்கொண்டிருப்பதாக நான் நிச்சயம் நம்புகிறேன்.

''அறியாமையை ஒழிப்பது, அதற்காக ஓய்வில்லாது முயல்வது,

அறிவை வளர்ப்பது'' இவையே சரியான வழி. மூடியிருக்கும் மக்களின் கண்களைத் திறப்பதுதான் உண்மையான வேலை. மற்ற எல்லா நெறிகளும் மேலுக்குத்தான். உங்களுக்கு வேண்டிய சீர்திருத்தங்களை, அவர்களுடைய கண்களைத் திறக்காமல், அவர்களுடைய கைகளைப் பிடித்து எப்படியாவது செய்ய வைப்பதனால் அணுவளவும் பயனில்லை. அவர்களுடைய கண்களைத் திறந்துவிடுவோமானால், எல்லாம் தானாகவே நடந்துவிடும். பிறகு யாருடைய வற்புறுத்தலும் வேண்டாம், எவருடைய உபதேசமும், அறிவுரையும் வேண்டாம். அறிவின் ஒளிப் பிரவாகத்தில் ஒருமுறை சிக்கிவிட்டார்கள் என்றால், பிறகு அடியெடுத்து முன்னேக்கிச் செல்ல முற்பட்டுவிட்டார்கள் என்றே கொள்ளவேண்டும். எனவே நீங்கள் எனக்காகச் செய்யவேண்டியது என்ன? இதுதான் முதல் வேலை. விஞ்ஞான அறிவையும், பல்வேறு சாஸ்திரங்களின் அறிவையும், தத்துவங் களின் அறிவையும் பரப்புவதைத் தவிர வேறு வழியே இல்லை. வருபவர்களையெல்லாம் உள்ளே சேர்த்துக்கொண்டு விடக் கூடாது என்பது மற்றொரு விஷயம். வேலை வெட்டி இல்லாதவர் கள், வேறு எங்குமே இருப்பதற்கு இடம் அற்றவர்கள் வந்து இந்த நெறியை மேற்கொள்கிறோம் என்று சொன்னால், அவர்களால் ஒரு பயனும் இல்லை.'

இவ்வளவு பேசி முடித்ததும் அவர் மீண்டும் மௌனமாக அமர்ந்தார்; மீண்டும் எண்ணத்தில் ஆழ்ந்துவிட்டார். இவ்வளவு நேரம் நாங்கள் அங்கு உட்கார்ந்திருந்தபொழுது, அக்கா எப்படி எங்களைத் தேடிக்கொண்டு வரவில்லை என்பது எனக்கு வியப்பை அளித்தது. இப்பொழுது எனது உள்ளம் அந்த எண்ணத்திற்குத் திரும்பும் அளவுக்கு அமைதி அடைந்திருந்தது. இதுவரை அது அப்படியிருக்கவில்லை. அக்காவைப்பற்றிய எண்ணம் தோன்றியவுடனேயே மீண்டும் என் உள்ளத்தில், 'அவளுக்கு என்ன தோன்றும்? அண்ணவைப் பற்றிய சந்தேகம் நீங்கிவிட்டது. ஆனல் அவளைப்பற்றிய ஏற் பாடு என்ன?' என்ற கேள்விகள் எழுந்தன.

உடனேயே நான் அண்ணவிடம் சொன்னேன்: 'அண்ண, அக்காவை யார் சமாதானப்படுத்துவார்கள்? அவள் நமது எண்ணத்திற்கு ஒத்துவருபவளாக ஆவாளா என்ன? அப்படி அவள் ஆனளேயானல் சரி, இல்லையென்றால் அவள்

உள்ளத்தைப் புண்படுத்துவது எனக்கு மிகுந்த வேதனையைக் கொடுக்கும்.'

'அதைப்பற்றிய கவலை வேண்டாம். நான் அவளுக்குச் சொல்வேன். அவள் உள்ளத்தில் இந்த விஷயம் பதியாது என்று நீ எண்ணிக் கொண்டிருக்கிருய்? அவள் சிறிது பிடிவாதம் கொண்டவள். ஆனுல் அவளுக்கு இந்த விஷயத்தின் மகத்துவம் எவ்வளவு தெரிந்திருக்கிறதோ, அவ்வளவு உனக்கும் எனக்குங்கூட ஒருவேளை தெரிந்திருக்காது. இப்பொழுது நான் அவளுக்கு எல்லாம் சொல்லுவேன். இப்பொழுது உன்னிடம் இன்னும் ஒரே ஒரு விஷயம் சொல்ல வேண்டும்போல் இருக்கிறது. அதை இப்பொழுது சொல்லுகிறேன். அது மிகுந்த மகத்துவம் கொண்டதாகும். அது இவ்வளவுதான்: நீ எடுத்துக்கொண்ட காரியத்தில், நீ இப்பொழுது துவங்கப் போகும் நெறியில், உனக்கு வெற்றி கிடைக்கும் என்று நீ அளவற்ற நம்பிக்கை கொண்டிருப்பாயேயானுல் அதன் உருவம் மிகவும் மென்மை கொண்டதாக இருக்கட்டும். மிக அதிகமான நம்பிக்கை கொள்வாயேயானுல், நீ ஏமாற்றம் அடைவாய். நீ எந்த ஒரு மரத்துக்காக விதை இடப்போகிருயோ, அந்த மரம் அரையாண்டு, ஓராண்டில் முளைத்து எழக்கூடியதல்ல. பல ஆண்டுகளுக்குப் பின்பே அதிலிருந்து முளை தோன்றும். அதற்கு மேற்கொண்டு இன்னும் சில ஆண்டுகளில்தான் இலைகள் வெளிப்பட்டுப் பின்னர் கிளைகள் முதலியவை வளரும். மலர்களுக்கோ எவ்வளவோ ஆண்டுகள் பிடிக்கும். பழங்களைப்பற்றி இப்பொழுது கற்பனைகூடச் செய்து பார்க்கவேண்டாம். நீ விதையை விதைக்கப் போகிருய். அதன் முளையாவது உன் பார்வையில் பட்டால், அதுவே பெரிய வெற்றி எனக்கொள். அவ்வளவுதான்! இப்பொழுது நான் போகிறேன். உனது காரியத்தில் எப்படிப்பட்ட இடையூறுகள் ஏற்பட்டாலும் உனது நம்பிக்கையைத் தளரவிடாமல் இருந்தாய் என்ருல் ஆச்சு. இதுதான் என்னுடைய ஆசீர்வாதம்; இதுவே உனக்கு நான் செய்யும் உபதேசம்.'

பிறகு அவர் சிறிது நேரம் நிறுத்திஞர். அவர் கண்களில் நீர் நிரம்பியது. தொண்டை அடைத்துக்கொண்டது. அவர் மீண்டும் என்னிடம் சொன்ஞர்: 'நான் இருக்கும்வரை சரிதான். ஆனுல் எனக்குப் பிறகு இரண்டு விஷயங்கள் உன்

கையிலும், உனது அக்காவின் கையிலும் ஒப்படைக்கப் போகிறேன். ஒன்று, இப்பொழுது பல நாட்களாக நான் ஏற்பாடு செய்துகொண்டிருக்கும் கழகம்; இரண்டாவது, எனது பெண். அவள் இப்பொழுது உனது மனைவி ஆகப் போவதில்லை. இருந்தபோதிலும், தங்கை என்னும் முறையில் நீ அவளைப் பார்த்துக்கொள். அவள் சுதந்தரமாகத் தனித்து இருப்பது முடியாத காரியம். அவளுக்கு யாருடைய ஆதாரமாவது வேண்டும். நீயும், உனது அக்காவுந்தான் அவளுக்கு ஆதாரங்கள். அவள் அம்மா, பாவம் ஒன்றும் அறியாதவள். அவளால் அவ்வாறான உபயோகம் ஏற்படாது.' மேற்கொண்டு அவரால் பேசமுடியவில்லை. இல்லையெனில் அவர் வேண்டுமென்றே பேசவில்லையோ என்னவோ? சட்டென்று அங்கிருந்து போய்விட்டார்.

அவருடைய பேச்சைக் கேட்டு எனது உள்ளம் உண்மையிலேயே மிகவும் வேதனைப்பட்டது. நான் அப்படியே அங்கு உட்கார்ந்து கிடந்தேன். சிறிது நேரத்தில் சாப்பிடுவதற்காக என்னை அழைத்தார்கள். சாப்பிடும்பொழுது அங்கு மௌனம் நிலவியது. வழக்கப்படி யாரும் யாருடனும் பேசவில்லை. அக்காவிடம் இதுவரை அண்ணா எதுவும் சொன்னதற்கு ஒரு அடையாளமும் காணப்படவில்லை. அப்படி ஒருவேளை சொல்லியிருந்தால், அவளுடைய மனப்போக்கில் நல்லதோ, பொல்லாததோ ஏதேனும் மாறுதல் ஏற்பட்டிருக்கும்; ஆனால் அவ்வாறு ஒன்றும் காணப்படவில்லை. அவளுடைய முகம் முன்போலவே கடுமையாகக் காணப்பட்டது. ஒரு முறை அவளுக்கும், எனக்கும் இடையில் பேச்சுவார்த்தை நடந்து ஒரு முடிவு ஏற்பட்டிருந்தால், மிகவும் நன்றாக இருந்திருக்கும் என்று எனக்குத் தோன்றியது. ஆனால் எப்படி ஒரு முடிவு ஏற்படும் என்பது இப்போது விளங்கவில்லை.

அவளுக்கும், எனக்குமிடையில் எப்படிப்பட்ட மனத்தாங்கலும் ஏற்படுவது எனக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அண்ணா இப்பொழுது சீக்கிரமே அவளிடம் ஒருமுறை பேச்செடுத்து அவளுடைய மனத்தைத் தெளிவுபடுத்தவேண்டும் என்று தோன்றியது. அதுவும் சீக்கிரமே நடந்தது.

அன்றைய மாலை அண்ணா அவளைத் தனியாக அழைத்துச் சென்று எல்லா விவரங்களையும் சொன்னார். அவ்வாறு

சொன்னதால் அவளுடைய மனம் உடனேயே மகிழ்ச்சி அடைந்துவிடவில்லைதான். ஆனால் அவள் மனத்தில் ஓரளவு மென்மை ஏற்பட்டது என்று நான் உணர்ந்தேன். அவள் விருப்பத்தின்படி நடக்கவில்லை என்ற ஏமாற்றத்தின் காரணமாக அவளுக்கு வருத்தம் ஏற்படுவது சகஜந்தான். ஆனால் அந்த வருத்தம் அதிக நேரம் தங்கவில்லை. அவளுக்கும், எங்களுக்கும் இடையில் கருத்து வேறுபாடுகள் நீங்கி ஒற்றுமை ஏற்பட்டு அவளும் எங்களுடன் சேர்ந்து எனது திட்டத்தைப்பற்றியும், திட்டத்தை நிறைவேற்றுவதற்கான வழிகளைப்பற்றியும் அமைதியுடன் பேசலானாள். அதுமட்டும் அல்ல; அவள் அந்தத் திட்டத்தில் ஆழ நுழைந்து சென்றாள் என்று சொன்னாலும் பொருந்தும்.

அன்று இரவு அவளே எனது அறைக்குள் வந்து சொன்னாள்: 'தம்பி, நான் உன்மீது கோபமாயிருக்கிறேன் என்ற எண்ணத்திற்கே இடம் கொடுக்காதே. நான் உனக்குச் சொல்லிக் கொண்டிருந்தது முடியாத காரியம் என்றால் இப்பொழுது அதற்காக நான் ஒன்றும் சொல்லவில்லை. நீ சபதம் செய்திருக்கிறாயெனில், இப்பொழுது அதை மீறுவது உனக்கு இவ்வளவு பயங்கரமாகப் படுகிறதென்றால், நான் ஒன்றும் சொல்லப் போவதில்லை. குடும்பத்தில் ஈடுபடுவது உனது கடமை இல்லை என்று உனக்கு உறுதியாகத் தோன்றியிருக்குமேயானால், நான் ஒன்றும் சொல்லமாட்டேன். நமது கடமை எதுவோ, அதைச் செய்வதுதான் உத்தமம் என்ற பாடத்தைத்தான் நான் கற்றுக்கொண்டிருக்கிறேன். இந்தப் பாடத்தைத்தான் நான் பயிற்சி செய்வேன். ஆனால் . . . ஆனால் தம்பி, சமீப காலமாக உனது உடல்நிலை எவ்வளவு மோசமாக ஆகியிருக்கிறது என்பதை ஓரளவுக்காவது நீ அறிவாயா? இப்பொழுதெல்லாம் நீ மிகவும் சோர்ந்து களைத்துக் காணப்படுகிறாய். நான் ஒரு விசித்திரமான பிராணி என்று உனக்குத் தோன்றினால் தோன்றட்டும். ஆனால் நான் இரவில் அகால வேளையில் அந்தப் பந்தலில் சென்று உட்கார்ந்திருப்பதை நீ பார்த்திருக்கிறாய். அந்தச் செய்கைக்கும் உன்னுடைய இந்த நிலைக்கும் தொடர்பு உண்டு. எனது தூக்கத்தைக் கெடுத்துக்கொண்டு நான் அந்த வேளையில் பைத்தியத்தைப் போல் அங்கே போய் உட்கார்ந்திருந்தது உன் பொருட்டுத் தான்.'

'என் பொருட்டா?' நான் மிகவும் ஆச்சரியமடைந்தேன். என்னுடன் எப்படித் தொடர்பு கொண்டதாக இருக்க முடியும் என்பதை என்னுல் அனுமானித்துக்கூடப் பார்க்க முடியவில்லை. என்ன தொடர்பு இருக்கும்?

'ஆமாம்; உன்னுடன் தொடர்புகொண்டதுதான். முதலில் அந்தத் தொடர்பு என்ன என்பதை நான் உனக்குச் சொல்லப் போவதாக இருக்கவில்லை. ஆனுல், இப்பொழுது உனது முடிவு தெரிந்த பிறகு அதுபற்றி ஏற்பட்டிருந்த கவலை நீங்கி விட்டது. ஆகவே, அதைச் சொல்வதனுல் ஒன்றும் பரவாயில்லை என்று தோன்றி இப்போது சொல்லவேண்டும்போல் இருக் கிறது.'

'அப்படிப்பட்ட தொடர்புதான் என்ன? எனக்கோ அதைப் பற்றி ஒன்றும் ஊகித்துக்கூடப் பார்க்க முடியவில்லை.'

'தேவி என் முன்னுல் தோன்றி, உனக்கு ஏதோ ஆபத்து ஏற்படப் போகிறது என்றும், அதிலிருந்து நீ தப்பித்துக் கொள்ளப்போவதில்லை என்றும் என்னிடம் சொன்னுள். அந்தத் தோற்றம் மிகவும் தெளிவாகத் தெரிந்தது.'

அப்படிப்பட்ட அந்த நிலையில் நான் பெரிதாகச் சிரித்தேன். எனது சிரிப்பை அடக்கவே முடியவில்லை. நான் அவளிடம் சொன் னேன்: 'ஆகவே அக்கா, இப்பொழுது நீங்களும் தோற்றம், தேவி வருதல் முதலியவற்றை நம்பத் தொடங்கியிருக்கிறீர்கள் என்று சொல்லுங்கள்!'

'நீ சிரித்தாலும் சரி, என்ன செய்தாலும் சரி! என் முன்னுல் அந்தத் தோற்றம் உண்மையாகவே வந்தது.'

'அது எப்படி?' நான் மிகவும் அலட்சியமாகச் சிரித்தவாறு அவளைக் கேட்டேன்.

'ஒருமுறை கனவிலும், மூன்று முறைகள் நேரிலும்!'

'கனவில் தோன்றுவதைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனுல், நேரில் தோன்றுவது என்பது எப்படி முடியும்?'

நான் அலட்சியமாகச் சிரித்ததை அவள் சிறிதும் கவனத்தில் கொள்ளவில்லை. அவள் சாதாரணமாகவே என்னிடம் சொல்ல லானுள்: 'ஒருமுறை என் முன்னுல் தேவி நெற்றியில் நிறைய குங்குமம் பூசிக்கொண்டவளாகத் தோன்றி, ''அவன் ஏதோ அபாயத்தில் மாட்டிக்கொள்ளப் போகிறுன், அவனை நீ கவனித் துக்கொள்'' என்று இரைந்து சொன்னுள். நன்கு மும்முறை எனக்கு அடித்துச் சொன்னுள். மேலும் . . .'

இதைக் கேட்டு நான் சிரித்தேன். அக்காவைப் போன்ற பெண், நேரில் தோன்றியது, கனவில் தோன்றியது என்பதைப்பற்றி யெல்லாம் முற்றும் உண்மையெனச் சொல்லும் அந்தக் காட்சியே எனக்குச் சிரிப்புக்கு இடமாகத் தோன்றியது. இதெல் லாம் என்ன? அக்கா இப்படிப்பட்ட விஷயங்களை எல்லாம் உண்மையென நம்பி இப்படிப் பேசுவாள் என்பதே எனக்கு நம்பமுடியாததாக இருந்தது. ஆனால், இப்பொழுது நான் அதைக் கண்ணெதிரில் பார்த்துக்கொண்டிருந்தேன்; காதால் நேரில் கேட்டுக்கொண்டிருந்தேன். எனது செவிகளும், எனது கண்களுமே அதற்கு இப்போது சாட்சியாக இருந்தன. எனவே, சிரிப்பதைத் தவிர என்னால் வேறு ஒன்றுமே செய்ய முடியவில்லை. மேலும் சிரிப்பையோ அடக்கவே முடியவில்லை. நான் மிகவும் பலமாகச் சிரித்தேன். வேறு யாராவது இருந்திருந்தால் அல்லது அக்காவே வேறு மனநிலையில் இருந்திருந்தால், அளவற்ற கோபம் அடைந்திருப்பாள். ஆனால், அவள் இப்பொழுது என் னிடம் என்ன சொல்லிக்கொண் டிருந்தாளோ, அந்த விஷயத் தில் அவள் மூழ்கிப் போயிருந்தாள். அவளுடைய முகமும் கம்பீர மாகத் தோன்றியது. அவள் மீண்டும் தன் முன்னால் அந்தத் தோற்றத்தைக் கண்டுகொண்டிருந்தாளோ என்று தோன்றியது.

பெண்கள் மர்மமானவர்கள் என்பது பொதுவாக உணர்ந்த உண்மைதான். ஆனால், இவ்வாறான தோற்றம், காட்சி ஆகியவைகளை நம்பும் நிலையிலிருந்து அக்கா மிகவும் உயர்ந்திருப் பாள் என்று நான் நிச்சயமாக எண்ணியிருந்தேன். அவளுடைய படிப்பு, இத்தனை நாட்கள் அவள் நடந்துகொண்ட முறை முதலியவற்றால் எனக்கு அவ்வாறு தோன்றுவதற்கு ஏற்ற காரணங்கள் இருந்தன. ஆனால், அவளுடைய இப்போதைய தோற்றத்திலிருந்து, அவள் இப்படிப்பட்ட விஷயங்களையெல் லாம் உண்மையென நம்புகிறாள் என்பதில் நான் சந்தேகம் கொள்வதற்கு இடமே இருக்கவில்லை. நிற்க, நானோ மிகவும் பலமாகச் சிரித்தேன். அவ்வளவு சிரித்ததன் காரணமாக, பிறகு எனக்கே மிகவும் வருத்தமாக இருந்தது. ஆகவே, நான் சிறிது நேரம் அசைவற்று மௌனமாக உட்கார்ந்திருந்தேன்.

அவள் மேலே சொன்னாள்: 'வெறும் கனவில் அவள் மீண்டும் மீண்டும் எனக்கு அடித்துச் சொன்னாள் என்பது மட்டுமல்ல. அதன் பிறகு நான் எனது தூக்கத்தையே இழந்து, இரவு நேரங் களில் அத்தோட்டத்தில் சென்று அலைந்துகொண் டிருக்கத்

தொடங்கினேன். அப்போது அவள் நேரில் பிரத்தியட்சமாக என் முன் தோன்றினுள். ஒரு முறை இரு முறை அல்ல, மூன்று இரவுகளில் தொடர்ந்து காட்சி அளித்தாள். எனது செவிகளில் அதே வார்த்தைகள் மீண்டும் விழுந்தன.'

'அதே என்றுல் எந்த வார்த்தைகள்?' இப்பொழுது நான் கம்பீரத்துடன் கேட்டேன். இந்தக் கம்பீரம் கடன் வாங்கிய தாக இருக்கவில்லை. அவளுடைய காம்பீர்யமே என்னிடத்தில் உண்மையாகவே தோன்றியது என்று சொன்னுலும் பொருந்தும். அவளுடைய அத்தனைக் கம்பீரப் பேச்சுக்கு முன்னுல் ஏளனமோ, அலட்சியமோ அதிக நேரம் நிற்கவே முடியாது.

'அந்த வார்த்தைகள் உனக்கு அபாயம் ஏற்படப்போவதைப்பற்றியும், உன்னைப் பாதுகாப்பதைப்பற்றியுமே இருந்தன.' அக்கா இவ்வாறு சொல்லிச் சிறிது நேரம் நிறுத்தினுள். நானும் மௌனமாக இருந்தேன். பிறகு தொடர்ந்து சொன்னுள்: 'அவள் சொன்னது முற்றும் உண்மையாகவே ஆயிற்று என்றுதான் சொல்லவேண்டும். நல்ல குடும்ப வாழ்வில் இறங்க வேண்டியவன் நீ. அப்படியிருக்க நீ இப்போது இப்படிப்பட்ட நிலைக்குப் போகப் போகிருய் என்றுல் அந்த அபாயம் வந்து விட்டது என்றுதான் சொல்லவேண்டும்.'

'இதில் அபாயம் என்ன? நீ என்ன உளறிக்கொண்டிருக்கிருய்?'

'நீ என்ன வேண்டுமானுலும் சொல். எனக்கு அது அப்படித் தான் தோன்றுகிறது. இப்பொழுது எனது கவலை நீங்கியது போல்தான் ஆயிற்று. இப்போது உனது மறுவாழ்வு அல்லவா ஏற்படப் போகிறது?'

நான் சிரித்தேன். மேலும் இந்த விஷயத்திலிருந்து அவளை விடுவிப்பதற்காகவே நான் பேச்சை மாற்றி எனது வருங்கால வாழ்வு சம்பந்தமாக அவளிடம் சொல்லலானேன். அண்ணுவிடம் சொன்னதுபோலவே அவளிடமும் எல்லாம் சொன்னேன். அவ்வாறெல்லாம் செய்வதால் நமக்கு எப்படி வெற்றி கிடைக்கும், பிறகு என்ன என்ன ஆகும் என்பதைப்பற்றியெல்லாம் அழகிய சித்திரங்களைத் தீட்டி அவள் முன்னுல் வைத்தேன். இவற்றுல் அவள் கண்களில் ஆச்சரியமும் ஆனந்தமும் பளிச்சிட வேண்டும் என்று நான் விரும்பினேன். பழையபடி அவள் மகிழ்ந்திருப்பதை எப்போது காண்பேன் என்று ஆகியிருந்தது எனக்கு. ஆனுல், அவளுடைய உள்ளம் இன்னும் அவ்வளவு

மகிழ்ச்சியை உணரும் நிலைக்கு வந்திருக்கவில்லை. அவள் என் பேச்சை வெறுமனே கேட்டுக்கொண்டாள், அவ்வளவுதான். இதுவரை வீட்டிலிருந்த வேறு யாருக்கும், எங்கள் மூவருக்கும் இடையில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைப்பற்றி ஒன்றுமே தெரிந்திருக்கவில்லை என்று தோன்றியது. சுந்தரியின் தாய்க்கோ உண்மையிலேயே ஒன்றும் தெரிந்திருக்கவில்லை. ஆனால், சுந்தரியின் விஷயம் அவ்வாறு இருக்கவில்லை என்று அக்கா சொன்னதிலிருந்து தெரிந்தது.

# 62. மகத்துவமுள்ள இரு கடிதங்கள்

அக்காவும், நானும் பேசி முடிந்த பிறகு, எனது ஆருயிர்த் தோழியிடமும் எனது எண்ணத்தை நானகவே தெரியப்படுத்த வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அதனுடைய உட்பொருள் அவளுக்கு அக்காவின் மூலமாகத் தெரிந்தே இருந்தது என்று அக்காவின் பேச்சிலிருந்து நான் அறிந்துகொண்டிருந்தேன். ஆனல், அதை நானும் அவளிடம் சொல்வது மிகவும் உகந்ததாகும் என்று என் உள்ளம் கருதியது. ஆனல், அது அவ்வளவு சுலபமாகச் செயல்படுத்தக்கூடிய காரியமா என்ன? நான் சுந்தரியிடம் இந்த விஷயத்தைப்பற்றித் தெளிவாக மனம் திறந்து பேசுவது எப்படி? என் வாயிலிருந்து சொற்கள் எப்படி வெளிப்படும்? இவ்வாருன கேள்விகள் ஒன்றன்பின் ஒன்ருக என் கண்களின் முன்னல் தோன்றி நின்றன. நான் அக்காவிடம் எனது எண்ணத்தைப்பற்றிச் சொன்னேன். ஆனல், அவள் அப்படிச் செய்யவேண்டாம் என்று எனக்கு அறிவுரை சொன்னுள். அவள் கூறியதாவது: ‘நீ இப்பொழுது மேற்கொண்டு செய்யவேண்டிய உனது வேலையைக் கவனி. இப்பொழுது இந்தக் குழப்பங்களில் நீ ஏன் விழுகிருய்? உன்னுடைய இந்தத் திட்டத்தினல் அவள் ஆறுதல் அடைந்திருக்கிருள் என்று நீ நினைத்துக்கொண்டிருக்கிருய்?’

அக்காவின் பேச்சினல் எனக்கு அவளது (அக்காவின்) உள்ளம் மட்டும் தெளிவாகத் தெரிந்தது. இன்னமும் அவள் உள்ளம் எனது முடிவை ஏற்றுக்கொள்வதற்குத் தயாராகவில்லை; எனது வருங்கால வாழ்வின் அமைப்பு அவளுக்கு இன்னமும் ஏற்கவில்லை என்பதைக் காண்பிக்கும் வகையில் இருந்தது அவளுடைய குரல். இவளுடைய உள்ளமே இன்னமும் தெளிவு அடையவில்லை என்ருல் இவள் எங்கிருந்து எனக்கு உதவி அளிக்கப் போகிருள் என்று உள்ளத்தில் தோன்றவே, நான் மௌனமாக உட்கார்ந்தேன்.

எனது புது ஆசிரமத்தில் அடியெடுத்து வைப்பதற்கு முன்பு, சில ஏற்பாடுகளை நான் செய்யவேண்டியிருந்தது. அந்த

ஏற்பாடுகளில் நான் எனது கவனத்தைச் செலுத்தினேன். அந்தக் காரியங்களிலேயே நான் ஈடுபட்டிருந்தேன். புதுக் கழகத்தை நிறுவி, எப்படி அதைப் பலப்படுத்தவேண்டும் என்ற எண்ணத்தில் ஆழ்ந்து, அதற்கு எத்தகைய முயற்சிகளைச் செய்ய வேண்டும் என்பதை நான் யோசித்துக்கொண்டிருக்கையில், எனக்கு எங்களுடைய மாமாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. எங்கள் மாமா எவ்வளவு அமைதியாகவும், தன்னிலே தவறுதவ ராகவும் இருந்தார் என்பதை முன்பே கூறியிருக்கிறேன். ஆனால், எங்களுக்கும் அவருக்கும் இடையில் இருந்த அந்தத் தொடர்பு துண்டிக்கப்பட்டதுபோல் ஆகியிருந்தது. எப்பொழுதாவது ஓரிரு முறை என்னிடமிருந்து அவருக்கும், அவரிடமிருந்து எனக்கும் கடிதங்கள் வந்து போயின. அவ்வளவுதான். ஒருவரிடம் ஒருவர் வருவது, போவது, சந்திப்பது என்பதன் பெயர்கூடக் கிடையாது.

இதனால் எனது புதியத் திட்டத்தை அவருக்குத் தெரிவித்து, அவரது கருத்தைக் கேட்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுத தில் ஆச்சரியமென்ன? இந்நிலையில், அவரிடமிருந்து இது சம்பந்த மாகவே கடிதம் வந்ததைப் பார்த்ததும் எனக்கு அளவற்ற ஆச்சரியம் ஏற்பட்டது. வீட்டில் இருப்பவர்களைத் தவிர வேறு யாருக்குமே இன்னமும் நான் எனது திட்டத்தைப்பற்றிச் சொல்லியிருக்கவில்லை. அப்படியிருக்க அது அவருக்குத் தெரிந் தது எப்படி? மேலும் அவருக்குத் தெரிந்தவுடனேயே இவ்வளவு அவசரமாக அவர் கடிதம் எழுதியது எப்படி? இரண்டு விஷயங் களுமே மிகுந்த வியப்பைத் தருவனவாக இருந்தன. நான் அந்தக் கடிதத்தைப் படித்த பின்னர், எளிய வகையில் தெளிவான ஒரு பதிலை அவருக்கு எழுதினேன். அவருடைய அந்தக் கடிதம், என்னுடைய அந்தப் பதில் இரண்டையுமே இங்கே கொடுத் தால் நல்லது என்று கருதி, நான் அவற்றை இங்கே தருகிறேன். முதலில் அவருடைய கடிதம்:

‘சுபம். அநேக ஆசீர்வாதங்கள். இப்பொழுது வெகு நாட்களாக நமக்கிடையில் ஒரு கடிதப் போக்குவரத்தும் இல்லை. இதனால் ஒருவருடைய நலத்தை மற்றவர் அறிந்துகொள்ளவும் வழியில்லை. எனவே, ஏதாகிலும் இடமாறுதல் ஆகியிருந்தாலோ அல்லது ஆகப்போவதாக இருந்தாலோ ஒன்றும் தெரிந்துகொள்வது முடியாத காரியமாக இருந்தது. அது இருக்கட்டும். இவ்விடம் நாங்கள் யாவரும் நலம். நான் வணங்கத் தகுந்த எனது அன்னை

யாரின் உடல் நலம் மட்டும் நாளுக்கு நாள் குன்றிக்கொண்டே வருகிறது. இனி அவள் ஐந்தாறு மாதங்கள்கூடப் பிழைத்திருப்பாளோ இல்லையோ என்பது ஐயந்தான். அவ்வாறிருக்கையில் இன்னும் ஏதேனும் செய்திகள் அவள் காதில் விழுந்தால் அவளுக்கு மிகுந்த துன்பம் ஏற்படுகிறது, வேதனை அடைகிருள். அவள் இன்னல் தாளாமல் உட்கார்ந்துவிடுகிருள். நான் மொத்தத்தில் உங்களுடைய நிலைபற்றியும், உங்களுடைய பழக்க வழக்கங்களைப்பற்றியும் என்றுமே ஒன்றும் எழுதுவதில்லை. அதைப்பற்றி எழுதுவதனுல் எதிர்பார்த்தவாறு ஒரு பயனும் ஏற்படும் என்றும் தோன்றவில்லை. நீங்கள் இப்பொழுது சிறு வயதினர் அல்ல. அது மட்டுமல்லாமல், படிப்பு முதலியவை உங்களிடம் நிறைந்திருப்பதனுல் வெறுமனே யோசனையின்றி எந்த ஒரு காரியமும் நடந்துகொண்டிருக்கும் என்று உண்மையாகவே என் மனத்திற்குத் தோன்றவில்லை. நாங்கள் பழைய தலைமுறையைச் சேர்ந்த மனிதர்கள். எனவே, எங்களுடைய பழக்கவழக்கங்களும் பழைய தலைமுறையைச் சார்ந்தவைதாம். ஒவ்வொரு தலைமுறைக்கும் அவை ஓரளவுக்காவது மாறத்தான் செய்கின்றன. இது இயற்கையானதுதான். புதுக்காலம், புதிய முறைகள் இவை வெளிப்படையானவைதான். அப்படியிருக்கவே நீங்கள் 'வழி தவறிச் சென்றீர்கள்', 'தங்களுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது' முதலான தகாத பதில்களைத் தரும் காரியம் நான் என்றுமே செய்யப்போவதில்லை. மேலும் இன்றுவரை உங்களுடைய ஒருசில பழக்க முறைகள் எனக்கு அணுவளவும் பிடித்திருக்கவில்லை என்றுலும், நான் அவற்றைப் பற்றி உங்களுக்குத் தாறுமாருக எழுதவில்லை. புதிய எண்ணங்களின் உதயம் ஆயிற்று என்றுல், அந்த எண்ணங்களை முன்னுல் தள்ளிச் செல்லும் சில ஆட்களும் கூடவே தோன்றத்தான் செய்வார்கள். ஆனுல், அப்படிப்பட்ட ஆட்கள் தமது குடும்பத்தில், தமது உறவினர் கூட்டத்தில் அல்லது அன்புத் தோழர்களின் இடையில் இருக்கவேண்டாம் என்று எல்லாருக்குமே தோன்றுவது இயற்கைதான். அதுபோலவே எனக்கும் தோன்றியது. இன்னமும் தோன்றிக்கொண்டிருக்கிறது. ஆனுல், அப்படித் தோன்றுவதன் பயன் என்ன? பயன் ஒன்றும் ஏற்படக்கூடும் என்று தோன்றவில்லை என்றுதான் இன்றுவரை நான் ஒன்றுமே எழுதவும் இல்லை, வேறு வழியாகவும் எனது கருத்தைத் தெரிவிக்கவும் இல்லை. ஆனுல், இப்பொழுது எந்தப் புதியதொரு

செய்தி என் செவிகளில் விழுந்ததோ, அதைக் கேட்ட பின்னர் என்னுல் அமைதியுடன் இருக்க முடியவில்லே. அதிலும் அம்மா வின் செவிகளிலும் அந்தச் செய்தி விழுந்திருக்கிறது. அதனுல் மிகவும் வருத்தம் அடைந்திருக்கிருள். தங்களுக்குக் கடிதம் எழுதவேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்திலேயே தோன்றி யிருந்தது. அதற்குள் அம்மாவும் மிகவும் வற்புறுத்திஞள். ஆகவே உடனேயே உட்கார்ந்து இதை எழுதிக்கொண்டிருக்கிறேன். இதைப்பற்றித் தாங்கள் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். ''நாங்கள் பழைய தலைமுறையைச் சேர்ந்தவர்கள், முற்றிலும் அறிவற்ற முட்டாள்கள், எங்களுக்கு எந்த ஒரு புதிய விஷயத் தைப்பற்றியும் அறிவு கிடையாது'' என்பது தங்கள் கருத்தாக இருக்குமானுல், பிறகு நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லே. தாங்கள் உடனடியாக இந்தக் கடிதத்தைக் கிழித்தெறிந்துவிட வேண்டும். படிப்பதற்கான இன்னலே மேற்கொள்ளவேண்டாம். ஆனுல், அப்படித் தங்கள் கருத்து இருக்கும் என்று நான் நினைக்க வில்லே. அப்படி உண்மையாகவே நான் நினைத்திருந்தால், இந்தக் கடிதத்தை எழுதும் தொல்லேயில் நான் விழுந்திருக்கவே மாட்டேன். நிற்க.

'நீங்கள் தங்களது வக்கீல் முதலிய தொழில்களேவிட்டு இப் போது ஆசிரமத்தை நிலேநிறுத்தி, ஒரு புதிய சங்கத்தை நிறுவப்போகிறீர்கள் என்று எனக்கு இப்பொழுதுதான் தெரியவந்தது. புதிய வேடத்தில் தாங்கள், தங்களது எண்ணங் களேப் பரப்புவதற்காக விரைந்து முன்னேறப் போகிறீர்கள் என்பதுதான் இதன் பொருள் என நான் கொள்கிறேன். எங்களுடைய விருப்பப்படி இல்லேயென்றுலும், தங்களது சொந்த விருப்பத்தின்படியே தாங்கள் மணம் செய்துகொண்டு குடும்ப வாழ்வின் சுகத்தை அடைவீர்கள் என்று இன்றுவரை நாங்கள் யாவரும் மிகவும் நம்பிக்கை கொண்டிருந்தோம். இறைவனின் அருளினுல் தங்களுக்கு அறிவுச் செல்வம் கிடைத்திருக்கிறது. எங்கள் கருத்துப்படி உகந்ததற்றது என்றிருப்பினும், தங்கள் கருத்துப்படி உகந்ததென இருக்கும் கல்யாணத்தைச் செய்து கொண்டு குடும்ப சுகத்தை ஏற்றுக்கொள்ளும் நல்ல வாய்ப்பும் தங்களுக்குக் கிடைத்திருக்கிறது. அதனுல் நாங்கள் விரும்பிய படி நடந்தது என்பதனுல் ஏற்படும் இன்பம் எங்களுக்கு இல்லே என்றுலும், தாங்கள் தங்களது விருப்பத்தின்படி நடந்து கொண்டு இன்புற்றிருக்கிறீர்கள். தங்களுக்கு நான்கு

குழந்தைகள் பிறந்தன என்பதைப் பார்த்தாவது எங்களுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டிருந்திருக்கும். அது மட்டும் அல்ல; எமது சகோதரியின் குலத்தைத் தாங்கள் நல்ல நிலைக்குக் கொண்டு வந்தீர்கள் என்று தோன்றி, அது எங்கள் சமாதானத்திற்கும், இன்பத்திற்கும் இடமாக இருந்திருக்கும். ஆனால், தங்களுடைய இந்தப் புதிய திட்டத்தினால் அதற்கும் இடம் இல்லாமல் போய்க் கொண்டிருக்கிறது.

'இந்த இளம் வயதில் உறவினர்கள் எல்லாரையும்விட்டுப் பிரிந்து மடத்தை நிறுவனம் செய்யவேண்டும் என்ற எண்ணத்தைக் கொண்டு வருவதைப் போன்ற பைத்தியக்காரத்தனமான எண்ணம் வேறு எதுவுமே இல்லை. இப்படிப்பட்ட இந்த எண்ணத்தினால் தாங்கள் அடையப் போவது என்ன? அவ்வாறு செய்வதாகத் தாங்கள் சபதம் செய்துகொண்டிருப்பதாகவும், மேலும் அந்தச் சபதத்தைமீற விரும்பவில்லையென்றும் நான் கேள்விப்பட்டேன். மேற்கொண்ட சபதத்தை மீறாமல் இருப்பது நல்லது. ஆனால் அந்தச் சபதம் ஆய்ந்து அறிந்து மேற்கொள்ளப்பட்டதா, இல்லை அறியாமல் செய்துகொண்டதா, அதைக் கடைப்பிடிப்பதனால் தனக்கும், தனது உறவினர், நண்பர்களுக்கும் நலனைத் தருமா, இல்லை கெடுதலை விளைவிக்குமா—என்பதைப்பற்றியும் சிந்திக்கவேண்டும்தானே! நாம் எல்லோரும் மனிதர்கள். பீஷ்மனைப் போன்ற தெய்விகம் பொருந்திய நபர்கள் அல்ல. எனவே, சொன்னதைச் செய்தேவிடுவோம் என்ற நம்பிக்கை நமக்கு இருப்பது என்பது முடியாததுதான்.

'ஆசிரம வாழ்வை அடைந்து, தங்கள் கையினால் அந்த ஆசிரமத்திற்கு ஏதேனும் சிறந்த காரியம் ஆகப்போகிறதா? தங்களது இன்றுவரையிலான ஆசார—விசாரங்கள் அந்த ஆசிரமத்தில் எத்துணை அளவுக்குப் பொருந்தியனவாக மிளிரும்? தற்போதுள்ள தங்களது நிலையில் நின்று தாங்கள் எப்படி நடந்து கொள்கிறீர்களோ, அவ்வாறே அந்த மாற்று நிலையில் நடந்து கொண்டீர்களே ஆனால், மக்கள் உங்களை ''சீ, தூ'' என்று சொல்லி வெறுப்பைக் காட்டிக்கொள்ளத் தயங்குவார்களா? தங்களது புதிய எண்ணங்களையும், தங்களது புதிய வழக்கங்களையும் விட்டுவிட்டுத் தாங்கள் உண்மையாகவே வனவாசம் மேற்கொள்வதாக இருப்பீர்களேயானால், பிறகு ஒரு தடையும் இல்லை. அதில் புகழும் கிடைக்கும். ஆனால், இது முடியாத காரியம் என்பது நமக்கே தெளிவாகத் தெரிகிறது. இது இப்படி

இருக்கும்போது, வீணுகத் தங்களது சுகத்தைக் கைவிட்டு அந்தப் புதிய வேடத்தை—பழைய ஆட்களான நாங்கள் மிகவும் பவித்திரமானது, மிகவும் புனிதமானது என்று கருதும் அந்த வேடத்தை—பரிகாசத்துக்குள்ளாக்குவதால் உங்களுக்கு என்ன கிடைக்கப் போகிறது? இன்றுவரை நான் தங்களது இக்காரியங்கள் சம்பந்தமாக ஒன்றுமே எழுதவில்லை. இன்று எழுதினதற்குக் காரணம், தாங்கள் இப்பொழுது பைத்தியக்காரத்தனமான வழியில் அடியெடுத்து வைக்கப்போகிறீர்கள் என்ற அச்சம் ஏற்பட்டிருப்பதுதான். தாங்கள் எந்த வழியை இப்பொழுது மேற்கொள்ளப் போகிறீர்களோ, அந்த வழியின் மூலமாக நீங்கள் விரும்புகிற விதமான வாழ்க்கை அமையும் என்று எனக்குத் தோன்றவில்லை. அப்படி அது அமையாமல் போகும்போது, உங்களை மக்கள் ''சீ, தூ'' என்று இகழ்வார்கள். அந்தப் புனிதமான நிலையை இகழ்வார்கள். தாங்கள் எல்லாவிதமான இன்பங்களையும் இழந்தவராக ஆவீர்கள். மேலும் எல்லாமே தாறுமாறுனதாக ஆகிவிடும். அதைவிடத் தாங்கள் குடும்ப வாழ்வை மேற்கொண்டு, தங்களது குலத்தைப் பெருக்கவேண்டும். தொலைவில் இருந்தாகிலும் எங்களுக்குத் தங்களுடைய சுகத்தைக் கண்டு ஆறுதல் கொள்ளும் வாய்ப்பை அளிக்கவேண்டும். இப்பொழுது அம்மாவின் பிராயம் குறைந்துகொண்டே வருகிறது. எனதும்கூட அதிகமாக மிகுந்திருக்கிறது என்பதில்லை. எனவே, இப்பொழுதாவது தாங்கள் எங்கள் சொற்படி கேட்டு, அதன்படி செய்யுங்கள். இவ்வளவுதான் நான் சொல்லவேண்டியிருக்கிறது. மற்றபடி வேறு ஒன்றும் இல்லை. இதைத் தவிர வேறு என்ன எழுதுவது . . . '

இன்னும் சில விவரங்கள் இருந்தன. ஆனல், அவை விசேஷ மகத்துவம் கொண்டவையாக இல்லை என்ற காரணத்தினல் அவற்றை நான் இங்கே கொடுக்கவில்லை. இந்தக் கடிதத்தைப் படித்து எனக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. எனது திட்டம் மாமாவுக்குத் தெரிந்திருக்கும் என்றே, அப்படியே தெரிந்திருந்தாலும் அவர் அது குறித்து எனக்கு இதுபோன்ற கடிதம் எழுதுவார் என்றே நான் சிறிதும் எதிர்பார்த்திருக்கவில்லை. ஆனல் பிரத்தியட்சமாக அந்தக் கடிதமே எனது கையில் இருந்தது. அதிலும் அதில் எது இருக்காது என்று எனக்குத் தோன்றியிருந்ததோ, அதுவே இருந்தது. மாமா சொல்லியிருந்தபடி பேச்சுவாக்கில் யாராவது அவரிடம் போய் எனது புதிய எண்ணத்தைச் சொல்லி

யிருப்பதற்கு வாய்ப்பில்லை. முதலாவதாக, அது இன்னும் யாருக்கும் தெளிவான விளக்கத்துடன் தெரிந்திருக்கவில்லை. இரண்டாவதாக, எனக்கு உடனேயே கடிதம் எழுதவேண்டும் என்ற விருப்பம் அவருக்கு ஏற்படும் வகையில் அந்த அளவுக்கு விவரமாக அவருக்குச் சொல்லக்கூடியவர் யாரும் இருந்ததாக வும் தெரியவில்லை. ஆனால், ஒரு சந்தேகம் ஏற்படத்தான் செய் தது. எனது பிரதிக்ஞையை மாற்றி எனது உள்ளத்தைப் பழைய நிலைக்குத் திருப்பவேண்டும் என்ற ஆசை அக்காவின் மனத்தில் இன்னமும் இருந்தது. ஆகவே, அவள்தான் எந்த வழி புலப்படுமோ அதைத் திட்டமிட்டு, முயற்சி செய்து பார்க்க வேண்டும் என்று எண்ணியிருக்கவேண்டும். தொடர்ந்து அவளே தான் மாமாவுக்குக் கடிதம் எழுதியிருக்கவேண்டும் என்று என் மனத்தில் உறுதியான நம்பிக்கை ஏற்பட்டது. இருந்த போதிலும், நான் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. மாமாவின் கடிதம் வந்ததைப்பற்றிக்கூடத் தெரிவிக்கவில்லை.

இரு முறை மாமாவின் கடிதத்தைப் படித்தேன். அதிலிருந்த விவரங்களைப்பற்றிச் சிந்தித்துப் பார்த்தேன். கடிதத்துக்குப் பதில் எழுதுவதா, வேண்டாமா? எழுதினால் எந்த அளவிற்கு அது பயன்தரும்? இதுபோன்ற விஷயங்களைப்பற்றிச் சிந்தித் தேன். பிறகு உடனேயே கடிதம் எழுதவேண்டும் என்றும், அதில் தெளிவாக எல்லா விவரங்களையும், எனது எண்ணங்கள், அவ்வாறான எண்ணங்கள் தோன்றுவதற்கான காரணங்கள், மேற்கொண்ட திட்டங்கள், அதில் வெற்றி பெறும் நம்பிக்கை முதலான எல்லா விஷயங்களையும் எழுதித் தெரிவிப்பதாகவும் முடிவு செய்தேன். உடனேயே காகிதம், எழுதுகோல், மை முதலானவற்றை எடுத்து வைத்துக்கொண்டு கடிதம் எழுதி னேன். அதனுடைய ஒரு பிரதியை நான் ஏதோ நோக்கத் துடன் என்னிடம் வைத்துக்கொண்டேன். அது இன்றும் என் னிடம் இருக்கிறது. அதை இங்கே தருகிறேன். இன்றுவரை எனது வருங்காலத்தைப்பற்றிய எண்ணங்களின் தொடர்பினால் வாசகர்களுக்கு எனது இந்த வாழ்வின் கதையைப்பற்றிய எல்லா விவரங்களும் பலமுறை மேலாகத் தெரிய வந்திருக் கின்றன. ஆனால், நல்ல விவரமாக, ஒழுங்கான தொடர்ச்சி யுடன், நல்ல விளக்கத்தோடு அவை யாவற்றையும் அறிந்து கொள்வதற்கு இந்தக் கடிதம் பயன்படும். எனது வாழ்வுக் கதையின் சாரமாகும் இந்தக் கடிதம். அதைப் படித்ததும் என்

வாழ்வின் கதையை நான் எழுத முற்பட்டதன் நோக்கமும் விளங்கும். இதைப் படித்த பிறகு யாருக்குமே எனது எண்ணங்களைப்பற்றியோ அல்லது காரியங்களைப்பற்றியோ தவருன கருத்து இருக்கவேண்டாம். அந்தக் கடிதம் இதுதான்:

'சுபம். பெற்றேரின் திருவடிகளில் குழந்தை பாவு செய்யும் சாஷ்டாங்க நமஸ்காரங்கள். யாவரும் நலம். அறிய ஆவல். தங்களுடைய அன்பான கடிதம் கிடைக்கப் பெற்றேன். அதற்குப் பதில் எழுதுவதா வேண்டாமா, எழுதுவதானுல் என்ன எழுதுவது என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன். ஏனெனில், சில விஷயங்களில் இளையவர்களைப்பற்றிப் பெரியவர்களின் மனத்தில் ஒரு முறை தவருன அபிப்பிராயம் ஏற்பட்டுவிட்டால், பிறகு சிறியவர்கள் அந்தத் தவருன எண்ணத்தைப் போக்குவதற்காக நேரிடையாக எவ்வளவுதான் முயன்ருலும், அதனுல் ஒரு பயனும் ஏற்படாமல், அந்தத் தவருன எண்ணம் அழியாது நிலைபெற்று நின்று விடுகிறது. அது மட்டும் அல்ல; அது மேலும் வலுப்பெறுகிறது. அதிலும் கடிதம் எழுதுவதால் இத்தகைய விளைவுதான் ஏற்படுகிறது. கடிதத்திலுள்ள வார்த்தைகளின் அமைப்பு மிக எளிய முறையில் குழப்பமில்லாமல்தான் இருக்கும். ஆனுலும் பெரும்பாலும் அதனுடைய பொருள் விபரீதமாகத் தோன்றி, அதன் எளிமையினுல் பயனில்லாமல் போகிறது. எனது இந்தக் கடிதத்தைப் பொருத்தவரையில் அவ்வாறு ஆகும் என்று நான் நினைக்கவில்லை. ஏனெனில், தாங்கள் இன்றுவரை என்னிடம் பழகிய முறையில் எளிமையே பெரும்பாலும் இருந்ததனுல், எனக்கு அவ்வாருன அச்சம் கிடையாது. எனவே, நான் தங்களுக்குத் தெளிவான முறையில் பதில் எழுதவேண்டும் என்று முடிவு செய்தேன். அந்த முடிவை இப்பொழுது செயலாக்குகிறேன்.

'இன்றுவரை நான் நடந்துகொண்ட முறை தங்களுக்குப் பிடிக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. அது மட்டும் அல்ல; தங்களுடைய ஆதரவினுலேயே நான் இவ்வளவு தகுதியுடைய நிலைக்கு உயர்ந்திருந்தும், கடைசியில் பெரும்பாலான விஷயங்களில் நான் தங்கள் விருப்பத்திற்கு எதிராக நடந்துகொண்டிருப்பதாகவும், இது நன்றி கொன்ற தன்மையைக் குறிக்கும் ஒரு காரியம் என்றும் மனத்தில் தோன்றியிருக்கவேண்டும். அவ்வாறு சொல்லிக் காண்பிக்கவோ அல்லது எழுதிக் காண்பிக்கவோ இல்லை என்ற ஒரு குறைதான். மேலும் தங்கள் நிலை

யில் நின்று நான் எனது முழு நடத்தையின்மீதும் பார்வையைச் செலுத்தினுல், நானுங்கூட இப்படிப்பட்ட நடத்தையை நன்றி கொன்ற தன்மைக்கு அறிகுறியே என்றுதான் சொல்வேன். ஆனுல் எனது நடைமுறையைக் கவனிக்கும் மற்ருெரு பார்வையும் உண்டு. அந்தப் பார்வை எனது நிலேயில் இருக்கும் மக்களுடையது. எனது மிகச் சிறிய வயதிலிருந்து இன்று வரை ஒரே குறிக்கோளுடன் நான் நடந்து கொண்டேன் நான் என்று சொல்லவில்லே. இவ்வாறு சிறுவயதிலிருந்து ஒரேயடியாகப் பெரியவனுக வளரும் வரையில் ஒரே குறிக்கோளுடன் நடந்துகொள்வது எந்த ஒரு சாதாரணமான மனிதனுக்கும், ஏன், பெரும்பாலும் அசாதாரணமான மனிதனுக்கும் கூட முடியாததாகும். நிகழ்ச்சிகள் மாற மாற நிலேயில் வேறுபாடு ஏற்படுவதனுல்கூட இருப்போரும் வேறுபட்டு ஒரு மனிதன் நடைமுறை முதலானவற்றிலும் வேறுபாடுகள் ஏற்படுகின்றன என்பது பொதுவாகக் காணப்பட்டு வரும் ஒரு நிகழ்ச்சி. இருந்த போதிலும் சுமார் ஐந்து அல்லது ஐந்தரை ஆண்டுகளாக, எனக்கு மிகச் சிறந்த குரு கிடைத்ததிலிருந்து, நான் ஒரே குறிக்கோளுடன் நடந்துகொண்டேன்; குறைந்தபட்சம் நடந்து கொள்ள முயற்சி செய்தேன். அந்தக் குறிக்கோள் சத்தியத்தைச் சார்ந்தது. எந்த விஷயம் எனக்குச் 'சத்தியமாக'த் தோன்றியதோ, எது முழுதும் உண்மையாக இருந்து 'மக்களின் நலத்துக்கானது' எனத் தோன்றியதோ அதை ஏற்றுக்கொள்வதில் நான் என்றுமே தயங்கியதில்லே. அதுபோலவே ஏழை எளியவருக்கு, துன்புறுத்துவோரிடமிருந்து தொல்லே ஏற்பட்டுக் கொண்டிருந்தால், அதை நீக்குவதற்காக நான் முயற்சி செய்தவாறிருக்கவேண்டும் என்ற குறிக்கோளேயும் நான் மேற்கொண்டேன்.

'இறைவனின் அருளினுல் எனது கல்வியில் முன்னேற்றம் ஏற்பட்டவுடனேயே நான் பேராசையுள்ளவனுகிவிடவில்லே. நிறையச் செல்வம் திரட்ட வேண்டும், மக்களிடமிருந்து வேண்டாத புகழ்ச்சியைப் பெறவேண்டும் என்றெல்லாம் என் மனத்தில் தோன்றி எனது அறிவைக் கெடுக்கவில்லே. வெறும் முதல் பிரவேசப் பரீட்சை நான் தேறியபொழுது சத்தியத்தைப்பற்றியும், நல்லதைப்பற்றியும் எனக்கு எந்த உணர்ச்சி, வேகம், ஆவேசம் இருந்ததோ, அதுதான் நிலே பெற்று நின்றது. மேலும் வக்கீல் தொழிலேச் செய்தோ அல்லது

எங்கேயாவது முன்சீப் பதவிக்கு விண்ணப்பம் செய்தோ பணம் ஈட்டுவதைவிட ஏதாவது நற்காரியத்தில் இறங்கவேண்டும் என்ற எண்ணத்தில்தான் என் மனம் ஈடுபட்டது.

'இப்படிப்பட்ட எண்ணம் நிலை பெற்று, அத்துடன் உண்மை எது, நல்லது எது என்பதைப்பற்றிய தெளிவும் என் மனத்தில் ஏற்படவே, அதன்பின்பு நான் வேறு எதையுமே பொருட்படுத்த வில்லை. நமக்கு எது சத்தியம் என்றே, ''சத்'' நல்லது என்றே தோன்றுகிறதோ, அதுவே நம்முடைய மதிப்பிற் குரியவர்களுக்கும் தோன்றுகிறதோ இல்லையோ, நாம் இந்த வழியை மேற்கொள்வதனுல் அவர்கள் சினந்துகொள் வார்களோ என்னவோ என்பதைப்பற்றியெல்லாம் யோசித்துப் பார்க்கவேண்டும் என்று எனக்குத் தோன்றவேயில்லை.

'சிறு வயதிலிருந்து என்னைப்பற்றி எனக்கு என்னவெல் லாம் நினைவு இருக்கிறதோ, அதிலிருந்து என் விஷயமாக நான் சிறப்பாக அறிந்துகொண்டது இதுதான்: நான் தீவிர விருப்பம் கொண்டவன், உணர்ச்சி வேகம் கொண்டவன். எந்த ஒரு விஷயமும் ஒரு முறை உண்மையாக, நல்லதாக, விரும்பத் தகுந்ததாகத் தோன்றிவிட்டால், அதைச் செய்ய வேண்டும் என்று மனம் நினைத்துவிட்டால், பிறகு வேறு ஒன் றுமே எனக்குப் புலப்படாது போகும். சிறு வயதில் இந்தக் குணத்துக்குப் பிடிவாதம் என்று சொல்லி எனக்குப் பலமுறை தண்டனையும் கிடைத்தது. ஆனுல் அந்தக் குணம் இன்ன மும் என் உடலில் இருக்கிறது. மேலும் உண்மையைச் சொல் வதானுல், எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து நான் எத்தனை காரியங்களைச் செய்திருக்கிறேனே, அவற்றுள் ஒரு காரியத் தைப்பற்றியும்கூட எனக்கு அணுவளவும் பச்சாத்தாபம் ஏற்பட்டதில்லை. மேலும் அப்படிப் பச்சாத்தாபப்படுவதற்குக் காரணம் ஏற்படும் எனவும் தோன்றவில்லை. ஒரு சில முயற்சி களில் தோல்வியடைந்தேன் என்றுல் என்ன? இன்றுவரை நான் என்ன என்னவெல்லாம் செய்தேனு, அவை யாவற்றையும் நல்லறிவோடு செய்தேன். இனி நான் செய்பவையும் என் அறிவு சரியானதென்று சுட்டிக்காட்டுபவையாகவே இருக்கும்.

'மக்களின் நலத்துக்காகப் பாடுபடவேண்டுமென்று விரும்பு கிற ஒருவன் முதல்முதலாகச் செய்ய வேண்டியது மக்களி டையே கல்வியறிவு பெருகச் செய்வதுதான். சாமானிய மக்களின் தற்போதைய நிலையை உயர்த்த வேண்டும். மக்களின் காரண

மாகவே நாம் அறிவை அடையப் பெறுகிறோம்; எனவே நாம் அந்த அறிவை நம் பொறுப்பில் வைக்கப்பட்ட அடமானப் பொருள் என்றே கருதி, அதை அவரிடம் திருப்பி ஒப்படைக்க வேண்டும். நமது அறிவு வயிறு வளர்ப்பதற்கான சாதனம் மட்டும் அல்ல. வயிற்றை நிரப்பும் அளவுக்கு மட்டுமே நாம் அதைப் பயன்படுத்துகிறோமா என்றால், அதுவுமில்லை.

'பொருளைச் சேகரித்து வைப்பதற்காகவும் நாம் அதன் விற்பனையைச் செய்கிறோம். அவ்வாறு குறைந்தபட்சம் நான் செய்யப் போவதில்லை. மேலும் அவ்வாறு செய்யாமலிருக்குமாறு மற்றவர்களுக்கும் நான் இரவு பகல் உபதேசம் செய்வேன். காவி உடையை அணிந்து ''நாராயண, நாராயண'' என்று சொல்லி வீட்டிற்கு வீடு சென்று உஞ்சவிருத்தி பெறுவதற்காக நான் ஆசிரம வாழ்வை மேற்கொள்ளவில்லை. நான் எனது வயிற்றை உழைப்பினால் நிரப்பிக் கொள்வேன். நான் மற்றவர்களை எனது கழகத்தில் வந்து சேரச் சொல்லி உபதேசம் செய்யப்போவது, வெளி வேடத்திற்காகவோ, இல்லாத எனது பெருமையைப் பறைசாற்றிக் கொள்வதற்காகவோ அல்ல. ஆனால் ஊரார் உறவினரை விட்டு, குடும்ப வாழ்வில் இறங்காமல், அறிவாளிகள் என்ற முறையில் உலகத்தினிடம் கடன்பட்டிருக்கிறோம் என்ற காரணத்தினால், அந்தக் கடனைத் தீர்க்க வேண்டும் என்பதற்காகவே என்னைப் போன்றவர்கள் ஐந்து பேராகிலும் கிடைத்தார்களேயானால் நான் மிகவும் மகிழ்வேன். சத்தியம், சத், உண்மை, நல்லது என்ற வார்த்தைகளே எங்களது குறிக்கோளின் மையங்கள் என்று நான் அவர்களுக்குச் சொல்லுவேன். இந்த இரண்டையுமே கருத்தில் கொண்டு எல்லாக் காரியங்களையும் செய்யவேண்டும்.

'முற்காலத்தில் ஆசிரமத் தொகுப்பின் நான்காவது நிலையில் நாம் குடும்ப வாழ்க்கையைத் துறந்து, பிறரையும் அதிலிருந்து விலகியிருக்கச் சொல்லிக்கொண்டிருந்தோம். ஆனால் நான் அந்த நான்காவது ஆசிரம நிலையில் எனது தோழர்களிடம் இவ்வாறு சொல்லப் போகிறேன்: நாம் அவ்வளவு எளிதில் எல்லாவற்றையும் தியாகம் ஏன் செய்யவேண்டும்? எல்லா மக்களுக்கும் எல்லாவற்றையும் மிகச் சிறந்த முறையில் அநுபவிக்கும் நிலை ஏற்படவேண்டும் என்பதற்காகவா? நாம் குடும்ப வாழ்க்கையைத் துறந்து மக்களுக்கு அறிவைக் கொடுப்பதற்காகப் பைத்தியம் போல் ஏன் அலையவேண்டும்? அவர்களுக்கு இந்த வாழ்க்கையில்

வேண்டிய இன்பம் கிடைக்கவேண்டும் என்பதற்காகத்தான்! எனது கழகத்தில் வந்து சேருவோர் தமது சுகத்தை எளிதில் தியாகம் செய்து மற்ற எல்லாரையும் இன்புற்றிருக்கச் செய்வ தற்காக முயற்சி செய்யவேண்டும் என்பதே எங்கள் நோக்கம்.

'எங்கு அரசாங்க அதிகாரிகளின் கையிலேயே குற்றங்கள் இழைக்கப்படுகின்றனவோ, அங்கே சென்று அவற்றை விலக்க வேண்டும்; மக்களுக்குத் தங்களுடைய கடமையை உணர்த்த வேண்டும்; எங்கு ஏதாவது ஒரு சில பழக்கவழக்கங்களினால் மக்களுக்குத் துன்பங்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றனவோ, அவற்றை ஒழித்துவிடவேண்டும் என்று மக்களுக்கு உபதேசம் செய்யவேண்டும். சுருங்கச் சொன்னால், யார் எதை எளிதில் செய்ய முடியுமோ, அதை அவர்கள் செய்யவேண்டும். மேலும் அதைச் செய்வதாகச் சபதம் செய்து எனது புதிய கழகத்தில் வந்து சேரவேண்டும். குடும்பத்தைத் துறக்கவேண்டும். இப்படி நடந்தாலொழிய, என்றுமே எப்படிப்பட்ட காரியமும் நிறை வேறப் போவதில்லை என்பதை நான் உறுதியாக நம்புகிறேன். நான் இதைப்பற்றி இப்போது சில நாட்களாக ஆலோசித்துக் கொண்டிருக்கிறேன்.

'இன்று வரை கற்றறிந்த மக்களாகிய நாம் உணவு முதலான வற்றை அடையப் பெறுவதைத் தவிர, வேறு எந்தக் காரியத்தைக் கடமை என்று எண்ணிச் செய்திருக்கிறோம்? எந்த மக்களின் காரணமாக நாம் நமது முழுக் கல்வியையும் பெற் றோமோ, அவர்களின் கடனைத் தீர்க்கவேண்டும் என்பதற்காக நாம் அணுவளவாகிலும் முயற்சி செய்திருக்கிறோமா? என்ன வெல்லாம் நாம் செய்திருக்கிறோமோ, அவை யாவும் மேலுக் காகத்தான்.

'நாம் ஏழை எளியவர்களின் நடுவில் என்றுமே கலந்து நடந்து கொள்ளவில்லை. அவர்களுடைய விருப்பங்கள், எண்ணங்கள், முக்கிய குறிக்கோள்கள் என்ன என்பதுபற்றி என்றுமே ஒரு வார்த்தை கேட்டுப் பார்க்கவில்லை. அவர்களுடைய எந்த எண்ணங்கள், எந்த விருப்பங்கள் உகந்தவை அல்ல என்று நமக்குத் தோன்றியதோ, அந்த எண் ணங்களையும், அந்த விருப்பங்களையும் அகற்றிவிடுவதற்காக நாம் என்றும் சட்டென்று முன்வரவில்லை. அவர்களுடைய தோற்றத்தை மாற்றுவதற்காக நம் தரப்பில் என்றுமே முயற்சி செய்யப்படவில்லை. அவர்களுக்கும் நமக்கும் இடையில் இருக்கும்

வேறுபாடுகளை அகற்றுவதற்காக என்றும் நாம் முயலவில்லை. இதை யாராவது மறுக்கமுடியுமா? எவர்களுடைய வரிப்பணத்தினுல், அரசாங்கம் நம்மை அறிவொளி பெறச் செய்தார்களோ, அவர்களுக்கு நாம் நமது அறிவின் பயனைக் கொடுப்பதற்காக முயன்ருேமா? அவர்களுடைய கடனிலிருந்து விடுபடுவதற்காக நாம் என்ன காரியம் செய்தோம்? இதற்குத் தீர்மானமாக ''ஒன்றும் இல்லை'' என்ற பதிலைக் கொடுப்பதற்கு யாராவது தயக்கம் கொள்வார்களேயானுல், அதுபற்றி அவர்களது உள்ளத்தில் சந்தேகமில்லாமல் இல்லை என்பது நிச்சயம்.

'எனக்கு இந்தப் புதிய வழி தோன்றுவதற்குக் காரணம் மேலே கூறப்பட்டுள்ள எண்ணங்கள்தாம். ''தங்களுக்கு நான் இப்படிப் பட்ட நீண்ட கடிதம் எழுதுவதும், மேலும் அதில் இப்படிப்பட்ட முறையில் வளவளவென்று எழுதியிருப்பதும் ஒருவேளை மிகவும் விசித்திரமாகப் படலாம். இவற்றை ஓர் இளம்பிள்ளையின் அதிகப்பிரசங்கித்தனமாகக் கூட நீங்கள் நினைக்கலாம். ஆனுல் மாமா, நான் அப்படி நினைக்கவில்லை. பிறர் நலத்திற்காகக் காரியம் செய்வதற்கும், மக்களின் கடனிலிருந்து விடுபடுவதற்குமான மிகச் சிறந்த வழி இதுதான் என்று எனது உள்ளம் உறுதியாக நினைக்கிறது. இந்தப் புதிய பணிக்காக எனது முழு வாழ்வையும், முழுச் சக்தியையும், ஓரளவுக்கு மிகுந்திருக்கும் அறிவையும் அர்ப்பணிப்பதாக முடிவு செய்திருக்கிறேன். பெரியவர்களாகிய நீங்கள் குறுக்கே வராமல் இருக்கவேண்டும் என்று மனப்பூர்வமாக, தங்கள் பாதங்களில் வணங்கி வேண்டிக் கொள்கிறேன். இது சம்பந்தமாகத் தங்கள் ஆசியைப் பெறுவதற்காக நான் வருவதாகவே இருந்தேன். ஆனுல் அதற்குள் தங்களிடமிருந்து இந்தக் கடிதம் வந்தது. எனவே என்ன எழுதுவது, என்ன இல்லை என்ற குழப்பம் ஏற்பட்டுவிட்டது. இறுதியில் ''தங்களுக்குத் தெளிவான முறையில் எல்லாவற்றையுமே எழுதிவிடவேண்டும்; பிறகு தாங்கள் என்ன சொன்னுலும், தங்களுக்கு என்ன தோன்றினுலும் சரி'' என்று எண்ணி இந்தக் கடிதத்தை எழுதியுள்ளேன். அதற்காக என்னை மன்னிக்க வேண்டும். குழந்தை மனத்தில் கொண்டுள்ள, கரத்தால் துவங்கியுள்ள காரியத்தில் வெற்றி கிடைக்கவேண்டும் என்று ஆசி கூற வேண்டும். இதுதான் எனது வேண்டுகோள்.'

இவ்வாருகக் கடிதம் எழுதி, நான் யோசனையில் நேரத்தைச் செலவிடாமல் அதை அனுப்பிவைத்தேன். அந்தக் கடிதத்தினுல்

மாமாவுக்கு ஏதாவது சமாதானம் ஏற்படும் அல்லது நாம் ஏற்றுக்கொள்ளும் புதுச்சங்கத்தின் சிறப்புக்களைப்பற்றி அவருக்கு நம்பிக்கை ஏற்படும் என்ற ஆசை எனக்கில்லை. ஆனால் நமது பக்கத்தை நாம் தெளிவாக அவர் முன்னால் வைத்தோம் என்ற ஆறுதல் ஏற்படும் என்றுதான் நான் அதை எழுதி அனுப்பினேன்.

நான் எனது ஆசிரம வாழ்வைத் தொடங்கிச் செயலில் இறங்கிய பின்னர் சிறிதே நாட்களில், ஒரு நாள் ஒரு மாணவரை, அவையில் எனது முதல் புதிய தோழனை அடையப் பெற்றேன். நான் பம்பாயில் தங்கச் சென்றிருந்தேன். மாணவர்களைக் கூட்டிச் சொற்பொழிவுகள் செய்தேன். ஒரு முறை வைத்தியக் கல்லூரி மாணவர்களின் இடையிலும் சொற்பொழிவாற்றினேன். பேச்சின்பொழுது மொத்தத்தில் எனது நோக்கம் என்ன என்பதைத் தெளிவாகச் சொல்லி அந்த வாய்ப்புக்கும், கூடியிருந்த அவையினருக்கும் ஏற்ற வகையில் பேசினேன். நான் அவர்களிடம் சொன்னேன்: 'முன்னேற்றப் பாதையில் இருக்கும் இளம் வைத்தியர்களே! உங்களிடம் இருக்கும் மருந்துப் பச்சிலைகள் முதலியவை எந்த ஒரு மனிதனின் உள்ளத்தையும் எப்படிச் சட்டென்று உங்களிடம் ஈர்க்கின்றன! ஏதேனும் ஒரு நோயாளியிடம் இனிக்க இனிக்கப் பேசி அவனை உற்சாகப்படுத்தி, மனப்பூர்வமாக மருந்தைக் கொடுத்து அவன் உடல் நிலையைத் தேற்றினால், அவன் உங்களைத் தனக்கு உயிர்த்தானம் அளித்தவனாகக் கருதுகிறான். உங்களுடைய உழைப்பினால் தான் அடைந்த பயனுக்கு, உங்களுக்குப் பொருளைக் கொடுத்து ஈடு கட்டியிருந்தாலும்கூட, அவன் தன்னை உங்களுக்குக் கடன்பட்டவனாகக் கருதுகிறான். எவ்வளவு பெருஞ் சக்தி படைத்தவர்கள், நீங்கள்! என்னைப் போன்ற சட்டம் பயின்ற ஒரு மனிதன், மக்களுக்குத் தாங்கள் பிறருக்குக் கொடுத்த பணத்தைத் திரும்பப் பெறுவது எப்படி என்ற அறிவைக் கொடுக்கமுடியும். அவர்களுடைய உரிமைகள் பறி போய்க்கொண் டிருக்குமானால், ஏதேனும் அநியாயம் ஏற்பட்டுக்கொண் டிருக்குமானால், மனு எழுதுவித்து, சட்டத்தின் தந்திரத்தினால் அவனை ஏதேனும் ஒரு சட்டத்தின் பிடியிலிருந்து விலக்கமுடியும். ஆனால் நீங்கள் அவர்களுக்கு உயிர்த்தானம் அளிக்கிறீர்கள், ஆரோக்கியதானம் அளிக்கிறீர்கள். அவர்களுடைய குடும்பத்தை, குழந்தை குட்டிகளை, அன்புத் தோழர்களை, உற்றார் உறவினரை இன்புற்றிருக்கும்படி செய்

கிறீர்கள். இவ்வாறு நீங்கள் அவர்களுக்கு இலவசமாக உதவி புரிந்து எங்ஙனம் நோயின் பிடியிலிருந்து விடுவிக்கிறீர்களோ, அதுபோலவே அறியாமையின் பிடியிலிருந்தும் அவர்களை விடுவிக்க முயல்வீர்களேயானால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

'தூய அறிவு, தூய நடத்தை இவற்றிற்காக வைத்தியர்கள் எவ்வளவு செய்யமுடியுமோ, அவ்வளவு எங்களைப் போன்ற ஆயிரக்கணக்கான நல்லுரையாளர்களின் உபதேசங்களினால் முடியாததாகும். நீங்கள் இன்ன நேரத்தில்தான், இன்ன அளவில் தான் தண்ணீர் குடிக்கவேண்டும் என்று சொன்னால், அதே சமயத்தில், அதே அளவில்தான் மக்கள் தண்ணீர் குடிக்கிறார்கள். உங்களுடைய பரோபகாரம் நிறைந்த தொழிலில் பாண்டித்தியம் பெற்று, அந்த அறிவைப் பரோபகாரக் காரியங்களில் பயன்படுத்துவது என்று முடிவு செய்து ஓர் இளைஞனாயினும் எனது வழியை வந்து அடைவானேயானால், அவன் இரண்டு நாட்களில் செய்யக்கூடிய காரியத்தை, என்னைப் போன்றவனால் இரண்டு ஆண்டுகளிலும் செய்யமுடியாது . . .'

இவ்வாறு, நான் வைத்தியப் படிப்பின் அளவற்ற உபயோகங்களை எனது அவையினரின் கண் முன்னால் கொண்டு வந்தேன். அவர்கள் என் போன்ற ஒருவனின் பணிக்கு எந்த எந்த வகையிலெல்லாம் உதவமுடியும், என்ன என்ன செய்யமுடியும் என்பதையெல்லாம் எடுத்துக் கூறினேன். புதிய ஆசிரமத்தில் ஒரு வைத்தியர் அவசியம் இருக்கவேண்டும் என்று எனக்கு மிகவும் ஆசையாக இருந்தது. மேலும் வைத்தியரின் தொழிலைப்பற்றி நான் பேசியது உண்மையிலேயே என் மனத்தாழத்திலிருந்து எழுந்ததாக இருந்தது.

பேச்சு முடிவுற்றது. முறைப்படி நன்றி தெரிவித்த பிறகு, நான் புறப்பட்டுக்கொண்டிருந்தபொழுது, இன்னமும் உதட்டின் மேலோ அல்லது மோவாய்க் கட்டையின்மீதோ பூனைமயிர்கூடத் தோன்றியிராத ஓர் இளம் மாணவன் என் அருகில் வந்தான். அவனுடைய அகன்ற கண்கள் அவனது உள் மனத்திலிருந்த ஆழ்ந்த எண்ணங்களைப் பிரதிபலித்துக் கொண்டிருந்தன. அவனுடைய உள்மனம் எனது உள்மனத்துடன் வந்து கலந்தாற்போல எனக்குத் தோன்றியது. எனது துடிதுடிப்பு அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்திருக்கிறது என்றும் எனக்குத் தோன்றியது. அவனுடைய அந்தத் தோற்றத்தைக் கண்டு எனக்கு அளவற்ற இன்பம் ஏற்பட்டது. அவன் எனது உண்மையான சகோதரன், ஓடிச் சென்று அவனை அணைத்துக்

கொள்ளவேண்டும் என்று என் மனம் எண்ணியது. ஆனால் நான் இருந்த இடத்திலேயே கல்லாகச் சமைந்து நின்றேன். அவனும் சுமார் இரண்டு நிமிடங்கள் என்னையே கண்கொட்டாது பார்த்த வண்ணம் நின்றிருந்தான். அவனுடைய உள்மனம் எண்ணங் களினால் முழுதும் நிறைந்திருந்ததாகத் தோன்றியது. ஆனால் அவை வார்த்தைகளாக வெளிக் கிளம்பவில்லை. நிறைகுடத்து நீர் தளும்பாததுபோல், நிறை உள்ளம் வார்த்தைகளின் உருவில் ததும்பி வெளிப்படாததாயிற்று. நிறை உள்ளத்துக்கு வார்த்தை களின் குறை ஏற்படுகிறது. இது சகஜந்தான். அந்தச் சமயத்தில் எனக்கும் கூட அதே அநுபவம் ஏற்பட்டது. இந்த இளைஞன் தான் எனது முதல் தோழன் ஆகப்போகிறானென்றும், என் வேலைகளில் மிகவும் உதவியாக இருக்கப் போகிறானென்றும் எனக்குத் தோன்றியது. அவனால் பேசமுடியவில்லை என்பதைக் கண்டதும், நானே அவனிடம் சொன்னேன்: 'என்ன, உங்கள் மனத்தில் என்னிடம் ஏதோ சொல்லவேண்டும் என்று இருக்கிறாற் போல் தோன்றுகிறதே! என்ன சொல்லவேண்டும் என்று இருக் கிறதோ அதைச் சொல்லுங்கள்.'

'சொல்ல வேண்டியிருக்கிறதுதான்.' அவன் என்னிடம் ஆங்கிலத்தில் சொன்னான். 'எனக்கு எவ்வளவோ பேசவேண்டும் என்று இருக்கிறது. உங்களைப் பின்பற்றுபவனாக நான் ஆக விரும்புகிறேன். மேலும் இன்னும் எவ்வளவு எவ்வளவோ சொல்ல வேண்டியிருக்கிறது. ஆனால் சொல்லுவதற்கு உகந்த இடமும், உகந்த சமயமும் இதுவல்ல. நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள் என்பதைச் சொன்னீர்களானால், நீங்கள் சொல்லும் நேரத்துக்கு அங்கு வந்து உங்களைச் சந்தித்து, எல்லாச் செய்திகளையும் சொல்லுவேன்.'

# 63. ஏற்பாடுகளும் நிறுவனமும்

அவனுக்கும், எனக்கும் இடையில் நடந்த பேச்சு வார்த்தையைப்பற்றி விவரமாக நான் இங்கே குறிப்பிடப் போவதில்லை. அதன் சாரத்தை மட்டும் தருகிறேன். அவன் சொன்னதாவது:

'நான் இப்பொழுது சில ஆண்டுகளாக—உயர்நிலைப்பள்ளியில் இருக்கும்பொழுதே என்று சொன்னாலும் பொருந்தும் —உங்களைப்பற்றிய செய்திகளைக் கேள்விப்பட்டு வருகிறேன். துவக்கத்திலிருந்தே உங்களுடைய பத்திரிகையை நான் மனப்பூர்வமாகப் படித்து வந்திருக்கிறேன். உங்களுடைய எண்ணங்கள், கருத்துக்கள், கட்டுரைகள், எனது காதில் விழுந்த உங்களுடைய குணச்சிறப்புக்கள் எல்லாம், எனது உள்ளத்தில் சிறப்பான மாறுதலை ஏற்படுத்தியிருக்கின்றன. உங்களை நேரில் காணவேண்டும் என்று பல நாட்களாக எனக்கு ஆசை இருந்தது. அது இன்று நிறைவேறியது. அதுமட்டும் அல்லாமல், உங்களுடன் பேசும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது என்பதனால் நான் மிகவும் மகிழ்கிறேன். எனக்கு எவ்வளவு ஆறுதல் ஏற்பட்டது, எவ்வளவு ஆனந்தம் ஏற்பட்டது என்பதை என்னால் எடுத்துச் சொல்ல முடியாது. நான் உங்களது கழகத்தில் சேரப் போகிறேன்; உங்களுடைய கூட்டுறவில் காலத்தைக் கழிக்கப் போகிறேன். இப்படிச் செய்வதில் எனக்கு இடையூறுகள் உண்டு. எனது பெற்றோர் என்னை இவ்வாறு செய்யவிடப் போவதில்லை. கடந்த ஆண்டே எனக்குக் கல்யாணத்தைச் செய்துவிடவேண்டும் என்று அவர்கள் மனத்தில் இருந்தது. ஆனால் நான் மிகவும் பிடிவாதம் செய்யவே, ஓர் ஆண்டு அந்த எண்ணத்தை ஒதுக்கி வைத்தார்கள். இப்பொழுது மீண்டும் அதைப்பற்றித் தொண தொணக்க ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால் நான் உங்களது விரதத்தைத்தான் மேற்கொள்ள விரும்புகிறேன். இன்றுவரை எனது முடிவு எனது உள்ளத்தின் உள்ளேயே அடங்கியிருந்தது; இப்பொழுது அதை நான் உங்களிடம் வெளிப்படுத்துகிறேன்.

இன்றுவரை அதிலிருந்த குறை இன்று முற்றும் நீங்கி விட்டது என்று எனக்கு உறுதியான நம்பிக்கை ஏற்பட்டிருக் கிறது. இந்த ஆண்டுக்கான பரீட்சை முடிந்துவிட்டது என்ருல், நான் உங்களிடம் வந்துவிடுவேன். எனக்கு இன்னும் இரண்டு தம்பிகள் இருக்கிருர்கள். அவர்கள் பெற்ருேர்களிடம் இருப்பார்கள். நானும் அவர்களைக் கைவிடுகிறேன் என்ப தில்லை. ஆனுல் நான் இந்த வழியில் நுழையப் போகிறேன்...'

முழுதாக அவனுக்குப் பதினெட்டு அல்லது பத்தொன்பது ஆண்டுகள்கூட நிறைந்திருக்குமோ, என்னவோ? அவன் பேச்சில் இருந்த வார்த்தைகளின் அமைப்பு மிகச் சிறந்ததாக இருந்தது என்பதில்லை. ஆனுல் அவன் எத்தகைய குரலில், எத்தகைய ஆர்வத்துடன், எத்தகைய ஆவேசத்துடன், எத்துணை உணர்ச்சி வசப்பட்டுப் பேசினுனே, அது எந்த ஒரு மனிதனுக் கும் சிலிர்ப்பு ஏற்படுத்தாமல் இருக்கமுடியாது. அவனுக்கே எவ்வளவு மெய்ச் சிலிர்ப்பு ஏற்பட்டிருந்தது! என்னுடன் உண்மையாக ஒத்துழைக்கப் போகும் ஒரு கூட்டாளி கிடைத்து விட்டான் என்று நான் எண்ணினேன்.

இத்தனை நாட்களாக நான் செய்து வந்த உபதேசத்தின் பலன் எனக்குக் கிடைத்து விட்டது. அவனுடைய வீட்டைப்பற்றிய விவரங்களை நான் அவனிடம் கேட்டேன். அவனும் மொத்தத்தில் என் உள்ளக் கருத்து என்ன என்று என்னிடம் கேட்டான். நான் அவனுக்கு அதை விளக்கினேன். சுருங்கச் சொன்னுல், ஒன்று, ஒன்றரை மணி நேரத்துக்குள் நானும், அவனும், குழந்தைப் பருவத்திலிருந்தே நெருங்கிய நட்புறவு கொண்டவர்களைப் போல அவ்வளவு நெருங்கிய நண்பர்கள் ஆனேம்.

இது போலவே இன்னும் ஒருசில மாணவர்க் கூட்டத்தினர் என்னைச் சந்திக்க வந்தார்கள். அவர்களும் பலவிதமான கேள்வி களை என்னிடம் கேட்டார்கள். ஒருசிலர், 'நாங்களும் சீக்கிரத் திலேயே உங்கள் கழகத்தில் வந்து சேருகிருேம். இப்படிப் பட்ட கழகம் முன்பே துவக்கப்படவேண்டிய அவசியம் இருந்தது. இவ்வாருன உழைப்பாளிகள் இல்லையென்ருல் நாம் முன்னேறு வது எப்படி?' என்பனபோன்ற வழக்கப்படியான பேச்சுப் பேசி என்னை இன்புறுத்த முயன்ருர்கள். ஆனுல் இதுபோன்ற பேச்சுக்களினுலா ஆனந்தம் ஏற்படுகிறது? நானும் அவர்களுக்கு அதே ரீதியில் பதில்கள் கூறி அவர்களை வழியனுப்பி வைத்தேன்.

வேறு சிலர் உரைகள் நிகழ்த்துவதற்காகத் தங்களது நண்பர்களின் சார்பில் என்னை அழைத்தார்கள். யாராவது உரை நிகழ்த்த எங்கேயாவது என்னைக் கூப்பிட்டால், 'மாட்டேன்' என்று சொல்லக்கூடாது என்பது எனது உறுதியான கொள்கையாக இருந்தது. அதன்படி நான் எல்லா அழைப்புக்களையும் ஏற்றுக்கொண்டு அவர்களுக்குகந்த நேரத்தை அறிந்துகொண்டேன். எனது உரைகள் குறிப்பாக மாணவர்களுக்கு இடையிலும், சாதாரண மக்களின் கூட்டத்திலும் நடக்கும். எனது உரைகளை நான் ஒரே பொருளைப்பற்றி மட்டும் நிகழ்த்தவில்லை. சில சமயங்களில் சாத்திரங்களைப் பற்றி, சில சமயங்களில் ஏதேனும் ஒரு புண்ணிய புருஷனின் வாழ்க்கைச் சரித்திரத்தைப்பற்றி, சில சமயங்களில் நமது நாட்டின் அரசியல் அல்லது சமூக நிலைபற்றி—இவ்வாறு பேச்சுப் பொருள், அவையினருக்குத் தக்கபடி மாறுபட்டிருக்கும்.

ஆனால் எந்த ஒரு பொருளை எடுத்துக்கொண்டாலும் கடைசியில் எனது நிரந்தரமான பொருளை முன்னால் தள்ளி அதைப்பற்றி மக்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்காமல் விடவில்லை. வெறுமனேயே யாராவது என்னைப் புகழத் தொடங்கினால், முடிந்த அளவுக்கு நான் அவர்கள் உற்சாகத்தைக் குறைத்து வந்தேன். ஓரிடத்தில் நான் ஒரு மனிதருக்குப் பின்வருமாறு பதில் கொடுத்தேன்: 'என்னைப் புகழத்தான் வேண்டும் என்று உங்களுக்கு இருக்குமானால், குடும்ப வாழ்வைத் துறந்து எனது நெறியில் வந்து சேருங்கள். மக்களின் சேவைக்காக உங்கள் உடலையும், உள்ளத்தையும் அர்ப்பணம் செய்யுங்கள். இப்படிச் செய்தீர்களேயானால் நீங்கள் என்னை உண்மையிலேயே புகழ்ந்ததாக ஆகும்.'

இப்படியாக எனது வாழ்க்கை ஓடிக்கொண்டிருந்தது. இங்கிருந்து மேலே தொடர்ந்து நடந்தவற்றைப்பற்றி நானே எழுதுவதைவிட வேறு யாராவது எழுதுவது மிகவும் விரும்பத்தகுந்தது. ஏனெனில், இதுவரை கொடுக்கப்பட்டுள்ள எல்லா நிகழ்ச்சிகளும் என்னை மட்டும் சேர்ந்ததாகவோ அல்லது என்னுடன் மிக நெருங்கிய தொடர்பைக் கொண்டவர்களைச் சேர்ந்ததாகவோதான் இருந்தன. இனிமேல் வரும் நிகழ்ச்சிகள், எந்த மக்களுடன் எனது தொடர்பு ஏற்பட்டதோ, அவர்களைப்பற்றியதாக இருக்கின்றன. அந்த நிகழ்ச்சிகளின் விவரம் மூன்றுமவரிடமிருந்து வெளிப்பட்டால்தான்

நல்லது. இருந்தபோதிலும் எனது மடம் நிறுவப்பட்டு அது எப்படி வளர்ந்துகொண்டே போயிற்று என்பதைப்பற்றித் தெரிய வேண்டும் என்பதற்காக எனது தினப்படியான காரியங்களை நான் இங்கே தருகிறேன்.

என் சொந்தக் காரியங்களுக்காக மிகவும் குறைவான நேரமே நான் செலவிட்டேன். விடியற்காலையில் நான்கு மணிக்கு முன்பே எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு சுமார் ஆறரை மணிக்கு எழுதுவதற்காக உட்காருவதுண்டு. எங்கேயாவது ஏதாவது சொற்பொழிவு செய்ய வேண்டியிருந்தால் நான் அநேகமாக அதை எழுதி வைத்துக்கொள்வதுண்டு. குறைந்தபட்சம் அவற்றைப்பற்றி நன்கு ஆலோசித்து விவரமான குறிப்புகளைத் தயார் செய்து கொள்வதுண்டு அல்லது 'புது எண்ணங்கள்' என்னும் எனது பத்திரிகைக்காக ஏதாவது எழுத வேண்டியதிருந்தால் அதை இந்த நேரத்தில் எழுதுவது வழக்கம். மேற்கொண்டு சில நாட்களில் 'நாட்டின் முன்னேற்றமும் வீழ்ச்சியும்' என்ற தலைப்பில் ஒரு மிகப் பெரிய புத்தகத்தை எழுத வேண்டும் என்று மனத்தில் நினைத்து, அதன் தொடர்பில் விவரங்களைச் சேகரிக்கும் முயற்சியில் நான் அந்த நேரத்தைப் பயன்படுத்திக்கொண்டேன்.

நான்கரை மணியிலிருந்து காலையில் ஏழரை மணி வரை இந்த வேலை நடக்கும். முடிந்தவரையில் இந்த வேலையில் ஒரு விதத் தடங்கலும் ஏற்படாமல் நான் பார்த்துக்கொண்டேன். அதன் பின்னர் குளியல் முதலியவற்றை முடித்துக்கொண்டு நான் இருந்த ஊரில் வசிக்கும் சாதாரண மக்களிடம், வீட்டுக்கு வீடு சென்றோ அல்லது அவர்களை எங்கேயாவது ஓரிடத்தில் கூட்டியோ கல்வி முதலியவற்றைப்பற்றி அவர்களுக்கு விளக்கி அவற்றை அறிமுகப்படுத்தி வைத்தேன். இந்த வேலையை முடித்துக் கொண்டு சுமார் பத்து—பத்தரை மணிக்கு வீட்டுக்குத் திரும்பி வந்து, சாப்பிட்ட பிறகு மீண்டும் ஏதேனும் படிப்பதற்காக உட்காருவேன்.

இரண்டு மூன்று மணி நேரம் படித்த பிறகு மீண்டும் அதே வேலைக்காக என்று வெளிப்பட்டு, எல்லாவிதமான மக்களுடனும் கலந்துகொண்டு அவர்களுடைய தேவைகள், குறிக்கோள்கள், நோக்கங்கள், தொழில்கள் ஆகிய இவற்றைப்பற்றித் தெரிந்து கொள்வதற்காகவும், அவர்கள் உள்ளத்தில் புதுப் புதுக் கற்பனைகளை உண்டாக்குவதற்காகவும் முயல்வேன். மாலையில் எங்கே

யாவது குறிப்பிட்ட இடத்தில் ஏதாவது உபயோகமுள்ள பொருள்பற்றி விளக்கவுரை செய்து உயர் நிலையில் இருக்கும் மக்கள், தாழ்ந்த நிலையில் இருக்கும் மக்களைப்பற்றி அறிந்துகொள்ளச் செய்வேன். திரும்பி வந்தபிறகு நாள்முழுதும் நடந்தவற்றைப்பற்றி எனது நண்பர்களுடன் பேசுவது, கடிதம் எழுத வேண்டியவர்களுக்கெல்லாம் கடிதம் எழுதுவது, நாட் குறிப்புப் புத்தகத்தில் நாள் முழுதும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் குறிப்புகளை எழுதுவது, பின்னர் சுமார் ஒரு மணி நேரம் ஆன்மிகச் சம்பந்தமான புத்தகம் எதையாவது படித்து, சுமார் பதினொரு மணிக்குப் படுத்துக்கொள்வது. இந்த வேலைகளில் முடிந்தவரை நான் ஒரு மாறுதலும் ஏற்படாதவண்ணம் பார்த்துக் கொண்டேன்.

சனிக்கிழமையும், ஞாயிற்றுக்கிழமையும் மட்டும் பள்ளிகளுக்கும், காரியாலயங்களுக்கும், சில இடங்களில் தொழிலாளர்களுக்கும் விடுமுறை இருக்கும். அந்த நாட்களில் படிக்கும் நேரத்தைக் குறைத்துக்கொண்டு வெளி வேலைகளில் அதிக நேரத்தைச் செலவழிப்பேன். சனிக்கிழமை மதியப் பொழுதில் பள்ளிச் சிறுவர்களை ஒன்றுசேர்த்து அவர்களுக்கேற்ற பொருள்களைப்பற்றிப் பேசுவதுண்டு. அவர்களுக்குள் ஒவ்வொரு வகுப்பிலுள்ள சிறுவர்களும் மகாத்மாக்களைப்பற்றி எளிய மொழியில் எழுதிய ஒரு சில புத்தகங்களைப் படிக்கவேண்டும் என்ற ஒரு புதிய ஏற்பாட்டையும் தொடங்கினேன். யாராவது எதைப்பற்றியாகிலும் என்னிடம் கேட்பதற்காக என்று வந்தால், மிகுந்த ஆர்வத்தோடு அவர்களுக்கு வேண்டியதைச் சொல்வேன். என்னுடைய நண்பர்களும் அவ்வாறே செய்து வந்தார்கள்.

சுருங்கச் சொன்னால், நேரத்தை எனது அறிவுக்கு ஏற்றவாறு எவ்வளவு சிறந்த முறையில் பயன்படுத்திக்கொள்ள முடியுமோ அந்த அளவுக்குப் பயன்படுத்த நான் முயன்று வந்தேன். இந்த எனது வேலைத்தொடரில் தடங்கல் ஏற்படவில்லை என்பதில்லை. ஏற்பட்டுக்கொண்டிருந்தது. ஆனால் முடிந்தவரையில் நான் அந்த இடையூறுகளுக்கு வளைந்து கொடுக்காமல் இருந்தேன். ஏதோ இலேசாகத் தலை வலித்தாற்போல் இருந்தால் உடனே படுத்துக்கொண்டு விடுவது என்பது என்னிடம் கிடையாது. நமது இந்த வாழ்வு இந்த நற்காரியத்துக்காகவென்றே இருக்கிறது; அதற்காக அதைப் பயன்படுத்த வேண்டும் என்று நான் மிகமிக உறுதியான முடிவைக்

கொண்டிருந்தேன். அக்காவிற்கு நான் அடிக்கடி கடிதம் அனுப்பிக்கொண் டிருந்தேன். நான் அவளுக்கு எழுதுவது இது தான்: 'நீ துவங்கியுள்ள காரியம் எனது காரியத்தையும் விட மிகவும் கடினமானது. உனக்கு என்னைவிட நூற்றுக்கணக் கான இடைஞ்சல்கள் ஏற்படும். எனினும் மனத்தைத் தளர விட்டு விடாதே. என்னைப்போல் ஊர் ஊராக அலைந்து உனக்கு உனது நற்காரியத்தைப் பரப்புவதற்கு உரிய நேரம் இன்னும் வர வில்லை. ஆனால் நீ இருக்கும் இடத்திலேயே முடிந்த அளவு சிறந்த முறையில் உனது முயற்சிகளைச் செய்துகொண்டிரு. நாம் நடப்போகும் செடியின் பழம், நிழல் ஆகியவற்றின் பயனை அடை யும் வாய்ப்பு நமக்குப் பெரும்பாலும் கிடைப்பதில்லை என்று அண்ணு சொன்னதை நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.'

ஏழை எளியவர்களான மக்களுக்கும் அவர்களுடைய குழந்தை களுக்கும் கல்வி அளிக்கவேண்டும் என்பதற்காக எவ்வளவு சௌகரியங்கள் செய்து கொடுக்க முடியுமோ அவ்வளவைச் செய்துகொடுக்க நான் முயன்றுவந்தேன். கல்வியை—உண்மை யான கல்வியைப் பரப்பவேண்டும் என்பதுதான் எனது உறுதியான குறிக்கோளாக இருந்தது. அந்த வேலையைச் செய் தால்தான் மக்களின் நிலை சீர்திருந்தும். அறிவின் கட்டுக் கடங்காத பிரவாகம் எந்தப் பக்கத்தில் விரைந்து செல்லுமோ, அந்தப் பக்கத்தில் இருக்கும் அறியாமை, எளிமை, பைத்தியக் காரத்தனமான நம்பிக்கைகள் போன்றவை அடித்துச் செல்லப் பட்டு விடுவது உறுதி. இவ்வாறு நான் உறுதியாக நம்பியதால், எந்த எந்த ஊரில் நான் முதல் முயற்சியைச் செய்து கொண்டிருந்தேனோ அங்கங்கே ஏழை எளியவர்களான மக்க ளுக்கு மிகக் குறைந்த செலவில், பெரும்பாலும் இலவச மாகவே கல்வி கிடைக்க ஏற்பாடு செய்தேன். என் முயற்சி யினால் பல ஊர்களில் வியாபாரிகளும், லேவாதேவி செய்பவர் களும் தங்கள் லாபத்திலிருந்து ஒவ்வோர் ஆண்டும் ரூபாய்க்கு ஒரு பைசா வீதம் தொகையைச் சேர்த்து இலவசப் பள்ளிக்கூடங்களை நிறுவினார்கள்.

இவ்வாறாக எனது வேலைகள் சுமார் இரண்டு மூன்று ஆண்டுகள் தொடர்ந்து நடந்து வந்தன. இந்தக் காலத்தில் எனக்கு மொத்தம் ஐந்து நண்பர்கள் கிடைத்தார்கள். எனது முதல் நண்பன் பம்பாயில் 'எல். எம். அண்டு எஸ்.' பரீட்சை தேறின

சில நாட்களிலேயே என்னிடம் வந்து சேர்ந்தான். அதன் காரண மாக அவனது தாய் தந்தையர் என்னை மிகவும் திட்டினார்கள். அந்தக் கடிதங்கள் இப்போதும் என்னிடம் இருக்கின்றன. எனது நண்பன் மட்டும் தனது உறுதியை அணுவளவும் தளரவிடவில்லை. அவன் என்னிடம் ஆழ்ந்த நம்பிக்கையும், அன்பும் கொண்டு மிக நெருங்கிய நண்பனானான். அவன் ஆசிரம வாழ்வை மேற் கொண்டு என்னை வந்து சேர்ந்தபோது, தினப் பத்திரிகைகளில் எங்கள் கழகத்தைப்பற்றிய நிந்தனையும் புகழும் தத்தம் அளவில் இடம் பெறத்தான் செய்தன. அதன் பின்னர் சில நாட்களிலேயே பி. ஏ. பட்டம் பெற்ற இருவர் வந்து சேர்ந் தனர். அதன் பின்னர் இன்னும் சிறிது நாட்களில் வெறும் மெட்ரிகுலேஷன் தேறியவன் ஒருவனும், கல்லூரியில் ஓரிரு ஆண்டுகளைக் கழித்தவன் ஒருவனுமாக இரண்டு பேர்களும் வந்தார்கள். நாங்கள் எல்லாரும் ஒரு மனத்தவர்களாக இருந் தோம். எங்களுக்குள் எந்த விஷயத்திலும் இன்றுவரை கருத்து வேறுபாடு இருக்கவில்லை. ஆறு பேர்களாகிய எங்களுக்குள் ஒருவன் பகவத்கீதையின் பரமபக்தன், இருவர் ஜடவாதிகள் (Materialists), ஒருவன் வேதாந்தி, மற்ற இருவர் தர்மத்தைப் பற்றிச் சிறிதுமே எண்ணிப் பார்த்திராதவர்கள். இதனால் தினமும் இரவு வேளையில் எங்களுக்கிடையில் தர்மத்தைப் பற்றிய சர்ச்சைகள் நடக்கும், தர்மத்தில் நம்பிக்கை இருப்பது அவசியமா என்பதைப்பற்றி. சுருங்கச் சொன்னால், எங்கள் ஆறு பேர்களைக் கொண்ட மடம் ஒன்று நல்ல முறையில் நிறுவப் பட்டது. இப்பொழுது நமது மடத்துக்கு எங்காவது மையமான இடம் ஒன்று வேண்டும் என்றும், அந்த இடத்தில் ஆசிரமம் வேண்டும் என்று சிறிது நாட்களில் என் மனத்தில் தோன்ற லாயிற்று. அதேபோல் கழகத்துக்கு ஏதாவது ஒரு பெயர் வேண்டும்; அஃதின்றி அதற்கு நல்ல ஒரு வடிவம் ஏற்படாது என்ற எண்ணமும் மனத்தில் உதித்ததைத் தொடர்ந்து, அதன் தொடர்பில் பற்பல கற்பனைகள் ஏற்பட, அதிலேயே பல நாட்கள் கழிந்துவிட்டன.

ஒரு நாள் எனக்கு மிகுந்த தலைவலி ஏற்பட்டிருந்தது. அதனால் நான் வெளியில் எங்கும் போகாமல் வீட்டிலேயே ஏதோ எழுதும் வேலையையும் படிக்கும் வேலையையும் செய்துகொண்டு உட்கார்ந் திருந்தேன். வெயில் நேரமாக இருந்தது. ஆகவே எனக்கு இன்னும் அதிக வேதனை ஏற்பட்டுக்கொண்டிருந்தது. சமீப

காலமாக எனது உடல் நிலை சிறிது குன்றியிருந்தது. நான் ஏதோ எழுதிக்கொண் டிருந்தேன். அதற்குள் அறையின் கதவைத் திறந்துகொண்டு இராமாநந்த் (எல். எம். அண்டு எஸ். நாங்கள் எங்களுடைய முதல் பெயர்களிலேயே உகந்த மாறுதலைச் செய்து பெயர்களை மாற்றியிருந்தோம்.) உள்ளே வந்தான். வந்து என்னிடம் சொன்னான்: 'நான் கிட்டத்தட்ட ஒரு மாதமாக ஏதோ சொல்லவேண்டும், சொல்லவேண்டும் என்று எண்ணியிருக்கிறேன். நமது மற்றத் தோழர்களும் என்னை வற்புறுத்திக்கொண் டிருக்கிறார்கள், நான் ஒருமுறை தங்களிடம் பேசவேண்டும் என்று. கடைசியில் இன்று என்னால் பேசாமல் இருக்கமுடியவில்லை.'

அவனுடையபேச்சு என்னைத் திடுக்கிட வைத்தது. அவன் என்ன பேசப்போகிறான் என்பதைப்பற்றி என்னால் ஊகிக்கவும் முடிய வில்லை. இவர்கள் என்னை விட்டுப் போக விரும்புகிறார்களோ என்று கணப்பொழுது மனத்தில் தோன்றியது. ஆனால், அவன் முகத்தில் இருந்த ஒளியைப் பார்த்ததும் அந்த எண்ணம் மறைந் தது. அவனுடைய முகம் மிகவும் ஆர்வம் கொண்டதாகவும் சிந்தனை படிந்ததாகவும் காணப்பட்டது. நான் கணப்பொழுது மௌனமானேன். மற்ற நால்வரும் வெளியில் நின்றுகொண்டிருப் பதாக எனக்குத் தோன்றியது. நான் இராமாநந்திடம் சொன் னேன்: 'இராமாநந்த், என் கையால் ஏதாவது தவறு ஏற்பட்டுக் கொண்டிருந்தால், எனது காரியத்தில் ஏதாவது குற்றம் இருந் தால், நமது முக்கியமான நோக்கத்தைப் பாதிக்கும் வகையில் ஒரு வேளை என்னால் ஏதாவது நிகழ்ந்துகொண்டிருக்குமானால் நிச்சய மாக என்னிடம் சொல்லுங்கள். ஆனால், எனது நோக்கத்தின் சிறப்பைப் பொறுத்தவரை ஒரு சந்தேகத்துக்கும் இடம் கொடுக் காதீர்கள். நமது வழியைக் கைவிட்டு விடாதீர்கள். சொல்லுங் கள், என்ன சொல்லவேண்டியிருக்கிறதோ அதைச் சொல்லி விடுங்கள். நான் சினந்துகொள்வேன் என்றோ, வருத்தம் அடை வேன் என்றோ ஏன் நீங்கள் பேசாமல் இருந்தீர்கள்? சொல் லுங்கள், எனது நடத்தையைப்பற்றிச் சொல்லவேண்டியிருக் கிறதா?'

என்னுடைய பேச்சைக் கேட்டதுமே அவன் கலங்கினாற்போல் காணப்பட்டான். நான் அவனையே பார்க்கலானேன். சிறிது நேரம் மௌனமாயிருந்த பிறகு, அவன் என்னிடம் சொன்னான்: 'உங்களுடைய நடத்தையில் குற்றம் கண்டுபிடிப்பது உங்க

ளுடைய பகைவனாலும் முடியாத காரியம் ஆகும். நாங்களோ தங்களிடம் அளவற்ற அன்பும், மதிப்பும் கொண்ட சீடர்கள். நாங்கள் என்ன குறை சொல்லப் போகிறோம்? எல்லாருடைய சார்பிலும் தங்களிடம் ஒரு வேண்டுதலைச் செய்வதற்காகவே நான் வந்திருக்கிறேன்.

'என்னிடம் வேண்டுதலா?' நான் வியப்படைந்து கேட்டேன். 'இராமாநந்த், நீங்களும் நானும் ஒரே வேலையில் ஈடுபட்ட அன்பர்கள். நம்மிடையே குரு சீடன் தொடர்பை எதற்காக ஏற்படுத்துகிறீர்கள்? உயர்வு தாழ்வு என்று இன்றுவரை இல்லாததை ஏன் கொண்டு வருகிறீர்கள்? நீங்களும், நானும் ஒரே தாயின் குழந்தைகள், ஒரு நாட்டின் குழந்தைகள், ஒரே உண்மையான காரியத்துக்காக முயற்சி செய்யும் சகோதரர்கள். எனவே, சொல்லவேண்டியதை மனம் திறந்து சொல்லுங்கள். வேண்டுதல், பிரார்த்தனை என்று சொல்லி வீணாக . . .'

'இல்லை!' இராமாநந்த் இடைமறித்துக் கூறினான்: 'நீங்கள் இந்த வேலையில் எங்களுடைய குரு என்ன, பரம குரு என்று நாங்கள் கருதுகிறோம். ஆனால், நீங்கள் விரும்பவில்லை என்றால் நான் அவ்வாறு சொல்லவில்லை. அது சம்பந்தமாகச் சர்ச்சை எதற்கு? பாவானந்த், நாங்கள் உங்களிடம் சொல்ல வந்தது இவ்வளவுதான்: இன்றிலிருந்து நீங்கள் இரண்டு இரண்டரை மாதங்கள் முற்றும் ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள்.'

'முற்றும் ஓய்வு!' நான் அளவற்ற வியப்புடன் சொன்னேன். 'முற்றும் ஓய்வா? இராமாநந்த், நாம் செய்யவேண்டிய காரியத்தின் துவக்கம் கூட இன்னமும் ஆகவில்லை. அதற்குள் ஓய்வின் பேச்சை எடுக்கிறீர்களே! சே சே! இந்த உடலில் உயிர் இருக்கும் வரை ஓய்வின் பெயரைக்கூட எடுக்காதீர்கள். விரதத்தை நிறைவேற்றுவதற்காகச் சபதம் செய்தபோது நம் வாயினின்றும் வெளிப்பட்ட வார்த்தைகள் என்ன என்று நினைவிருக்கிறதா? போங்கள், இராமாநந்த்! ஓய்வு, அதிலும் முற்றும் ஓய்வு என்பதைப்பற்றிப் பேசுவதில் காலத்தை வீணாக்கவேண்டாம். வேலையைச் செய்துகொண்டு வரலாம். நமது ஒவ்வொரு கணமும் நம்முடையது அல்ல, நமது நாட்டினுடையது ஆகும். அதில் நாம் குறை வைத்தோமானால், நாம் நேர்மையற்ற முறையில் நடந்துகொண்டதாக ஆகும். பேசவே பேசாதீர்கள், ஓய்வைப்பற்றி. இன்றுவரை நாம் எடுத்துக்கொண்ட ஓய்வு

குறைவாகப் போயிற்று என்ன? நம்மால் எது முடியுமோ, அதை நாம் செய்யத்தான் வேண்டும். அதுதான் நமது கடமை.'

கடைசி நான்கைந்து வாக்கியங்களைப் பேசும்பொழுது நான் மிகவும் உணர்ச்சி வசப்பட்டு, என்னை அறியாமலேயே சட்டென்று எழுந்து நின்றேன். ஆனால், பேச்சு முடிந்ததோ இல்லையோ, அதற்குள் அந்த உணர்ச்சியின் வேகம் குறைந்து எனக்குத் தலை சுற்றியதுபோல் ஆகியது. நான் தலையைப் பிடித்துக்கொண்டு கீழே உட்கார்ந்தேன். வெகு நேரம் எனக்கு ஒன்றுமே தெரிய வில்லை.

மீண்டும் நான் நினைவு பெற்றபோது எல்லாருமே உள்ளே வந்திருந்தார்கள். எல்லாரும் ஒன்றாக எனக்குச் சொல்லலானார் கள்: 'பாவாநந்த், நீங்கள் சில நாட்களுக்கு ஓய்வு எடுத்துக் கொள்ளத்தான் வேண்டும். நாங்கள் பலவந்தமாக உங்களை ஓய்வுகொள்ளச் செய்வோம்.'

இராமாநந்த் சொன்னான்: 'இப்பொழுது கிட்டத்தட்ட ஒன்று ஒன்றரை மாதமாக நான் உங்களுடைய உடல் நிலையை இடையறாது கவனித்துக்கொண்டு வருகிறேன். உங்களுடைய கண்களும், உங்களுடைய முகமும் எவ்வளவு ஒளியிழந்து காணப் படுகின்றன! உங்களுடைய குரலும் எவ்வளவு பலவீனமாக மாறி யிருக்கிறது! உடலைவிட வேலை உயர்ந்தது அல்ல. உங்களைப் போன்றவர்களது வாழ்வு இவ்வளவு சீக்கிரம் முடிவடைந்து விடுமானால், வேலை என்ன ஆவது? நீங்கள் இல்லாவிடில் நாங்கள் என்ன செய்வோம்? நீங்கள் பேசாமல் இருங்கள். என்ன செய்ய வேண்டுமோ அதை இருந்த இடத்திலிருந்து எங்களுக்குச் சொல் லுங்கள். ஆனால், இப்பொழுது பல நாட்களுக்கு நீங்கள் ஒன்றுமே செய்யவேண்டாம். நிச்சயமாக ஒன்றுமே செய்ய வேண்டாம்.'

நான் அவர்கள் சொன்னதைப் பரிகசிப்பதுபோல் சிரித்து விட்டு மௌனமாக உட்கார்ந்தேன்.

# 64. இறுதியில்

அவர்கள் தங்கள் சார்பில் நிறைய பேசிக்கொண்டே இருந்தார்கள். நான் மட்டியைப்போல் கேட்டுக்கொண்டிருந்தேன். கடைசியில் நான் சிரித்துக்கொண்டே சொன்னேன்: 'நீங்கள் இன்னும் எவ்வளவுதான் எனக்குச் சொன்னாலும், நான் உங்களுடைய இந்தப் பயமுறுத்தலுக்கு அஞ்சப் போவதில்லை. சின்னஞ்சிறு விஷயங்களுக்காகவும், சளி இருமலுக்காகவும் அஞ்சி, அஞ்சித்தான் எல்லாக் குழப்பங்களும் ஏற்படுகின்றன. இப்பொழுது நீங்கள் போய்விடுங்கள். இந்தக் கட்டுரையை முடிக்கவிடுங்கள். ஏன் என்னுடைய நேரத்தையும், உங்களுடைய நேரத்தையும் வீணாக்குகிறீர்கள்? நான்கு மணிக்குச் சரியாக எனக்கு ஓரிடத்தில் சொற்பொழிவுக்காகப் போக வேண்டியிருக்கிறது. எனவே அதற்காக நான் சில குறிப்புகளைக் கவனித்து வைத்துக்கொள்ள நேரம் கொடுங்கள்.'

இவ்வாறு கூறிவிட்டு நான் உடனேயே காகிதத்தின்மீது எழுதுகோலைச் செலுத்தத் தொடங்கினேன். இருந்தபோதிலும் எனது பார்வை அடிக்கடி அவர்கள் பக்கமே திரும்பிக்கொண்டிருந்தது. அவர்கள் ஒவ்வொருவருடைய முகத்தின்மீதும் ஏமாற்றத்தின் அறிகுறி தென்பட்டது. ஏதோ பேசவேண்டும் என்ற விருப்பம் இருந்தும் அவர்கள் பேசமுடியாத நிலையில் இருந்திருக்கவேண்டும் அல்லது என்னுடைய கடுமையான பேச்சின் காரணமாக அவ்வாறு ஆகியிருக்கவேண்டும் என்று தோன்றியது. அங்கு எனது கவனம் இல்லாததுபோல் நான் வேண்டுமென்றே காண்பித்துக்கொண்டேன். ஏனெனில், இப்பொழுது நான் இவர்களுடன் பேசத் தொடங்கினால் அல்லது விவாதம் செய்ய முற்பட்டால், அது நல்லது அல்ல என்று எனக்குத் தோன்றியது. கடைசியில் இராமாநந்த் என்னிடம் உரக்கச் சொன்னான்:

'என்னை ஒருமுறை உங்களுடைய இதயம் முதலியவற்றைச் சோதித்துப் பார்க்க விடுங்கள். அஃதின்றி நான் இன்று உங்களை வெளியில் போகவிடமாட்டேன்.'

'அடே, இப்படி ஒரேயடியாகச் சிறு பிள்ளைபோல் நடந்து கொள்ளாதே. என்னை எனது காரியத்தைச் செய்யவிடு. நீயும் உனது காரியத்தைச் செய். நமது வேலையைச் செய்யலாம். பின் மாலையில், இரவில் நிதானமாக எல்லாருடைய இதயத்தையும் சோதித்துப் பார்!' நான் அவனிடம் மிகவும் பரிகாச மான தொனியில் கூறினேன். கடைசியில் நான் கேட்கும் வழியாக இல்லை என்று கண்டதும் அவன் உற்சாகமற்றவனாகி அங்கிருந்து போய்விட்டான். மற்றவர்களையும் அதேபோல் நான் போகச் செய்தேன்.

சிறிது நேரத்திலேயே எனது வேலையையும் முடித்துக்கொண்டு நான் அங்கிருந்து கிளம்பினேன். ஆனால், நமக்கு ஏதோ ஆகிக் கொண்டிருக்கிறது என்று அன்றிலிருந்து என் மனத்தில் தோன்ற ஆரம்பித்தது. எனக்கு அடிக்கடி தலை சுற்றியது. தலையில் மிகுந்த வலி ஏற்பட்டது. மேலும் நான் விரும்பியபடி உற்சாகமாக இருக்க முடியவில்லை. இருந்தபோதிலும், இந்த எல்லா உணர்ச்சிகளும் பெருமளவில் கற்பனையினால் தோன்றியிருக்கவேண்டும் என்று எண்ணி, நான் என்றும் அவற்றை எனது வேலையின் முன்னால் தடையாக வரவிடவில்லை. இராமாநந்த் மட்டும் அன்றிலிருந்து தினமும் எனக்குத் தொல்லை கொடுக்கலானான். எனது மற்றக் கூட்டாளிகள் அவனுக்கு இந்தக் காரியத்தில் உதவி செய்தார்கள். என் உடல்நிலைமீது நான் கவனம் செலுத்தாம லிருக்கவே இது காரணமாயிற்று. வீண் கவலையை ஏற்படுத்தி இவர்கள் காரணமின்றி என்னைப் பயமுறுத்துகிறார்கள் என்று எனக்கு உறுதியாகப் பட்டது.

இப்படி உறுதியாகத் தோன்றியவுடன், அவர்கள் பேச்சை நான் மேலும் மதிக்கவில்லை. நான் நோயுற்று விழக்கூடும் என்றோ, இல்லை, நான் செய்யும் இந்த வேலை எனது உடல் திறனுக்கு அப்பாற்பட்டது என்றோ எனக்குத் தோன்ற வில்லை, ஆனால் அவர்களோ அதற்கு நேர்விரோதமான எண் ணத்தை என்னுள் தோற்றுவிக்க முயன்றுகொண்டிருந்தார்கள். கடைசியில் அவர்கள் அக்காவை வரவழைத்து அவளை எங்க ளுடன் தங்குவதற்காக வேண்டிக்கொள்ளத் திட்டம் போட் டார்கள். இந்தத் தகவலை என்று எனக்குத் தெரிவித்தார் களோ, அன்று என் கோபத்தை என்னால் அடக்கிக்கொள்ளவே முடியாமல் போயிற்று. நான் இராமாநந்திடம் சொன்னேன்: 'நீங்கள் எனக்காக இந்த வாழ்வை மேற்கொண்டீர்களா,

இல்லை, நற்காரியத்திற்காக வந்தீர்களா? இந்த நமது கழகத்தைப் பரப்புவதற்காகவும், அதிலிருந்து பிறர் நலத்திற்கான காரியம் ஏதேனும் செய்வதற்காகவும் வந்தீர்களா, இல்லை வெறுமனே ஒரு புதிய . . .?' பேசப் பேச எனது கோபம் தலைக்கு ஏறிக் கொண்டே போயிற்று. நான் என்ன பேசிக்கொண்டிருக் கிறேன், எங்கே இருக்கிறேன் என்ற நினைவே எனக்கு இருக்க வில்லை. மேலும் கிறுகிறு என்று சுற்றிக்கொண்டு வந்தது போலாகி நான் தடால் என்று கீழே விழுந்தேன். என்னை எப்படி நினைவுக்குக் கொண்டு வந்தார்கள் என்பது ஒன்றுமே எனக்குத் தெரியாது. ஆனால், அன்றைத் தினத்திலிருந்து உடலின் பலவீனம், உள்ளத்தின் விருப்பங்கள், உற்சாகம், இவற்றின் தீவிரம் ஆகிய இவ்விரண்டிற்கும் இடையில் இடை யறாது போராட்டம் நடந்துகொண்டே இருந்தது.

## 65. இராமாநந்த் எழுதிய பகுதி

ஆனால், அன்றைத் தினத்திலிருந்து உடலின் பலவீனம், உள்ளத்தின் விருப்பங்கள், உற்சாகம், இவற்றின் தீவிரம் ஆகிய இவ்விரண்டிற்கும் இடையில் இடையருது போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. இந்த வார்த்தைகளையே பாவாநந்த் தமது வாழ்க்கைச் சரித்திரத்தில் இறுதியாக எழுதியிருக்கிறார். இதற்குமேல் எதுவுமே எழுத அவருக்கு வாய்ப்புக் கிடைக்க வில்லை. உடல்நிலை சிறிது சுமாராக இருந்தால், நாங்கள் சிறிது அநுமதி கொடுத்தால், அவர் தமது தினக் குறிப்புப் புத்தகத்தில் ஏதாவது எழுதுவார். ஆனால் அவை மிகவும் குறை வாகவும் துண்டுபட்டதாகவும் இருக்கும். அவர் எழுதி வைத்த தற்குமேல், சொல்லத் தகுந்ததாக இருப்பதும் உண்மையாகவே மிகவும் குறைவுதான். எவருடைய வாழ்க்கையில் சிறு வயதி லிருந்தே உள்ளத்தின் உணர்ச்சி வேகத்தைக் கொண்ட—அதா வது உடல் பலத்தின் செலவு மிக அதிகமாக ஆகும் வகையில் இருக்கும் விஷயங்கள் அளவற்று நிகழ்ந்தனவோ, எவர் தமது உடற்பலம், மனோபலம் இரண்டும் எந்த அளவுக்குப் போதுமான தாகவும், அவற்றை எப்படிப் போதுமானதாக ஆக்கிக்கொள்வது என்பதைப்பற்றி மிகக் குறைந்த சிரத்தை எடுத்துக்கொண் டாரோ, அத்தகைய ஒருவர் பல நாள் நிலைத்திருப்பது இயலாத காரியம். எனது வைத்தியக் கலை அறிவின் ஆதாரத்தில், இவ்வுலகத்தின் போட்டியை எவன் இவ்வளவு வியக்கத் தகுந்த வேகத்துடன் விரைந்து சென்று வென்றானோ, அவன் தான் விரும்பிய இடத்தை அடைந்தவுடனேயே எப்படி விழவில்லை என்பதும், எப்படி நிலைபெற்று நின்றான் என்பதும் எனக்கு மிகுந்த வியப்பைக் கொடுத்தது.

எந்த நாளின் நிகழ்ச்சிகள் அவர் கைப்பட எழுதிய இறுதி அத்தியாயத்தில் வந்திருக்கின்றனவோ, அன்றைத் தினம் நாங்கள் அவரை நினைவுக்குக் கொண்டு வந்து சிறிது அமைதிப் படுத்திய பிறகு அரைமணி நேரம்கூட ஆகியிருக்காது. அதற்குள் அவர் மாணவர்களுக்கு இரசாயனப் பிரயோகங்களுடன் உரை

நிகழ்த்துவதாக ஒத்துக்கொண்ட ஓர் இடத்திற்குப் போக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார். நானும் எனது சகோதரர்களும் அவருக்கு மிகவும் சொல்லிப் பார்த்தோம். ஆனால் ஒரு பயனும் ஏற்படவில்லை. நானே போய் உரை நிகழ்த்துவதாகச் சொன்னேன். ஆனால் அதுவும் பலன் அளிக்க வில்லை. 'நானும் அங்கு வருவேன், என்னால் பேசமுடியாமற் போனால், நீ பேசு. ஆனால் நான் அங்கே போகாமல் இருக்க மாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்தார். இது மட்டுமல்ல, உரை நிகழவிருந்த இடத்துக்கு அருகில், நோயுற்ற ஒரு தொழிலாளியின் வீடு இருந்தது; அவனையும் போய் விசாரிக்காமல் நான் திரும்பி வரப்போவதில்லை என்று பிடிவாதம் பிடித்து, அவர் போவதற்காகக் கிளம்பினார்.

கடைசியில் வேறு வழியே இல்லை என்று ஆனதும், வேறு இடத்திலிருந்த எங்கள் வேலையை நிறுத்தி, இருவர் அவருடன் செல்ல முடிவு செய்தோம். அதற்கும் அவர் குறுக்கே விழுந்தார். ஆனால் நாங்கள் கேட்பதாக இல்லை என்று தெரிந் ததும், எங்களை அவர் தம்முடன் அழைத்துச் சென்றார். அங்கே போனதும் பேசத்தான் போகிறேன் என்று பிடிவாதம் செய்தார். எங்களுடையது ஒன்றும் நடக்கவில்லை. இறுதியில் பேசுவதற்காக எழுந்து நின்றார். கிட்டத்தட்ட முக்கால் மணி நேரம் பேசவும் செய்தார். ஆயிரம் முறை போதும் போதும் என்று நான் சைகை செய்திருப்பேன்; வாயாலும் சொல்லி யிருப்பேன். ஆனால் கேட்கவே இல்லை. அந்தச் பேச்சு முடிந்த பிறகு அந்த நோயாளியின் வீட்டிற்குச் சென்று ஈரத்தில் அரை மணி நேரம் உட்கார்ந்தார். வீட்டிற்கு வந்ததுமே மறு நாளைக் காக ஓரிடத்தில் உரை நிகழ்த்துமாறு அழைப்பு வந்திருந்தது. அதை 'ஏற்றுக்கொள்ளாதீர்கள், ஏற்றுக்கொள்ளாதீர்கள்' என்று நாங்கள் வேண்டிக்கொண் டிருந்தபொழுதிலும், அவர் அதை ஏற்றுக்கொண்டதைப்பற்றிக் கடிதம் எழுதி நேரத்தையும் குறித்து வைத்துக்கொண்டார்.

மேலும் நாங்கள் அந்தக் கடிதத்தைத் தபாலில் போடமாட் டோம் என்று எண்ணி, அந்த இரவு நேரத்தில் தானே அதைத் தபாலில் போடுவதற்காகச் சென்றார். வரும்பொழுது மழை வந்தது. ஆனால் அதற்காகச் சிறிதும் கவலைப்படவில்லை. காலையில் எழுந்தபொழுது அவருடைய தொண்டை மிகவும் கட்டிப் போயிருந்தது. அப்பொழுது நானும் சிறிது சினத்துடன், 'இன்று

உங்களை நான் என்னதான் ஆனாலும் பேசுவதற்காகப் போக விடப் போவதில்லை. இவ்வாறு செய்வதால் நீங்கள் தங்களுக்கே விரைவில் சாவைத்தான் கொண்டுவருவீர்கள்' என்று சொன்னேன்.

இதற்கு அவர் கொடுத்த பதில் எனக்கு நன்கு நினைவில் இருக்கிறது: 'வந்தால் அதில் தவறு என்ன? கொட்டகையில் துடிதுடித்துக் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து அழிந்து மறைவதைவிட, ஏரை இழுத்துக்கொண் டிருக்கும்பொழுது காளை இறந்துபோனால் நல்லதுதானே? வைத்தியங்களா! இப்படிப் பட்ட செயல்களினாலா சாவு வரும்? எனது உடல் நிலையோ தினந்தோறும் இருப்பதைவிட இன்று நன்றாகத்தான் இருக்கிறது. இன்றைய உரைக்கான பொருளும் நல்லதாக இருக்கிறது. அவையினர் கற்றறிந்த பண்டிதர்கள். ஆகவே இன்று நான் மிகச் சிறந்த முறையில் பேசப் போகிறேன். வைத்தியர்களாகிய நீங்கள் இப்படித்தான், அபாய விளைவுகளையே எண்ணிக் கவலைப்படுபவர்கள்.'

இவ்வாறு எங்களை அவர் நன்றாகத் தனது வழியிலிருந்து விலக்கிவிட்டார். என்ன செய்தும் கேட்கவே இல்லை. நாங்கள் ஐந்தாறு பேர் அவருக்கு எதிராக இருந்தும் ஒன்றும் நடக்கவில்லை. குறிப்பிட்ட நேரத்தில் அவர் அந்தப் பேச்சிற்காகச் சென்றார். அன்றைத் தினம் உண்மையாக அவர் மிகுந்த உணர்ச்சி வேகம் கொண்டவராக இருந்தார். 'நாம் என்றுமே தாழ்ந்துதான் இருக்கிறோமா?' என்பதுதான் பேச்சின் பொருளாக இருந்தது. அதன் தொடர்பில் நமது பழங்காலக் கௌரவத்தைப்பற்றி விவரித்துச் சொல்லவேண்டும் என்று மிகுந்த உணர்ச்சி வேகத்தினால் உந்தப்பட்டிருந்தார். பிறகு ஏன் கேட்கிறீர்கள்? அன்றைத் தினம் பாரத நாட்டின் சரித்திரத்தைப்பற்றி அவர் கொடுத்த விளக்கத்தில் அவருடைய ஆழ்ந்த அறிவு வெளிப்பட்டது. அதைக் கேட்டுக்கொண்டிருந்த அவையினர் அசைவற்று மௌனமாகியிருந்தனர். அன்று குரலையும் மிகவும் பெரிதாக்கி அவர் பேசினதால் எங்களுக்குக்கூட அந்தக் குரலை அறிந்துகொள்ள முடியவில்லை. நாட்டின் முன்னேற்றத்தைப்பற்றியும், இழிந்த நிலையைப்பற்றியும் விவரித்துப் பேசும்பொழுது அவருடைய சொற்பொழிவின் போக்கில் இன்பத்துடன் கூடிய பெருமையும், இன்னலுடன்கூடிய நாணமும் சேர்ந்தாற்போலக் காணப்பட்டன. முதலாவதைப்பற்றிச்

சொல்பவன்தான் இரண்டாவதைப்பற்றியும் சொல்லுகிறுஞ என்ன என்று சந்தேகம் ஏற்பட்டது. அவையினர் மெய்ம்மறந்து கேட்டுக்கொண்டிருந்தனர். கடைசியில் ஒருவன்' அந்தச் சொற் பொழிவில், ஆரியர்களின் பழமை பொருந்திய சிறப்பின் சம்பந்தமாகச் சந்தேகத்தைக் கிளப்பிச் சொற்பொழிவைப்பற்றி வேடிக்கை செய்யவேண்டும் என்று முயற்சி செய்தான்.

அவனுக்குப் பதிலளிக்கும்போது எல்லை கடந்து சென்ற அவ ருடைய ஆவேசத்தைப்பற்றி ஒன்றும் சொல்லி முடியாது. ஆனல் விளக்கு அணையும் நேரத்தில் அது ஒரு முறை பெரிதாக எரிவது போலத்தான் இந்த நிகழ்ச்சியும் என்பது எங்கள் கனவிலும் உதிக்கவில்லை. அது மட்டும் அல்ல; இன்றைய இந்தச் சொற்பொழிவை நாம் நடக்கவிட்டிருக்கவில்லை என்ருல் எவ் வளவு அநியாயம் ஆகியிருக்கும் என்றும் தோன்றியது.

அந்தச் சொற்பொழிவு அவருடைய எல்லாச் சொற்பொழிவு களிலும் மிகச் சிறந்ததாக இருந்தது. ஆனல் அதே சொற் பொழிவு இறுதியானதாகவும் இருக்கும் என்று எனக்குக்கூடத் தோன்றவில்லை. எந்த வார்த்தைகளினல் இன்று இவ்வளவு பெரிய அறிவாளி, ஆரிய பூமியின் பழைய சரித்திரமென்னும் பெருங்கடலில் தள்ளிச் சென்று முன்னேற்றம் வீழ்ச்சி என்னும் அலைகளின்மீது நம்மை நீந்த வைத்தாரோ, அந்த வார்த்தை களை இனி நாங்கள் மீண்டும் கேட்கப் போவதில்லை என்று துளியும் தோன்றியிருக்கவில்லை. ஆனல் எங்களுடைய துர்ப் பாக்கியத்தினல் அவ்வாறு ஏற்படத்தான் செய்தது. அன்று சொற்பொழிவு முடிந்து வந்ததும் நாங்கள் அவரை மிக மிகப் புகழ்ந்தோம். அவர் களைத்து இருந்ததனல், அவரை விரைவில் துயில் கொள்ளச் சொன்னேம். உண்மையாகவே மிகவும் களைத்துப் போயிருந்ததனல் அவரும், முதலில் மறுத்தாலும் கடைசியில் நாங்கள் சொன்னதை ஏற்றுக்கொண்டு போய்ப் படுத்தார்.

நான் எனது வழக்கப்படியான நேரத்துக்குப் படுத்துக் கொள்ளச் செல்லும்பொழுது அவருடைய அறைக்குச் சென்று காது கொடுத்துக் கேட்டேன். அப்பொழுது அவர் தூங்குவது போலத் தெரிந்தது. தூக்கத்தினல் அவருக்கு நல்ல ஓய்வு கிடைக்கும் என்று எண்ணி நானும் நிம்மதியுடன் எனது அறைக்குச் சென்றேன். ஆனல் தூக்கம் வரவில்லை. மாலையில் நிகழ்ந்த சொற்பொழிவும் அந்த நேரத்தில் கண்ட சொற்

பொழிவாளரின் உணர்ச்சி வசப்பட்ட தோற்றமும் நினைவுக்கு வந்துகொண்டிருந்தன. எல்லாக் காட்சிகளும் கண்முன் தோன்றின. 'இந்த உருவம் நம்மிடையே இல்லாமல் போய் விட்டால் என்ன செய்வது? நமது நற்காரியம் எப்படி நடக்கும்?' என்று திடீரென்று மனத்தில் தோன்றியது.

நான் என் தோழர்களிடமும், அவர்கள் என்னிடமும் இதைப் பற்றிப் பல முறை பேசியிருக்கிறோம். 'இந்த உருவம் எங்கள் உடலில் உள்ள உணர்ச்சி வேகம் ஆகும்; இது போனால் எல்லாப் பலமும், எல்லா உணர்ச்சி ஊக்கமும் போனதுபோல் ஆகும்.' நமது கைகால்கள் தளர்ந்துவிட்டன என்றுதான் கருத வேண்டும் என்பதே அவர்கள் எல்லாருடைய கருத்தாகவும் இருந்தது. இன்றும் இந்த எண்ணங்கள்தான் என் மனத்தில் எழுந் தன. அசுபத்தின் அறிகுறிகள் முன்பே தோன்றிவிடுகின்றன என்று சொல்கிறார்களே அதுபோல்தான் எனது நிலையும் ஆகியிருக்கிறது என்று எனக்குத் தோன்றியது. நான் நள்ளிரவு வரை இரண்டு மூன்று முறைகள் அவரது அறைக்குச் சென்று காது வைத்துக் கேட்டேன். ஆனால் உள்ளே அமைதி நிலவியது. பிறகு வெகுநேரம் கழிந்த பின்னர் தூக்கம் என் கண்களைத் தழுவியது.

காலையில் எழுந்தவுடனேயே நான் அவர் அறைக்குச் சென் றேன். அவர் விழித்துக்கொண் டிருக்கவில்லை. ஆனால் அவரது முகம் மிகவும் வெளுத்து, முற்றும் பழுப்பு நிறமேறியதாக ஆகி யிருந்தது. உடனேயே நான் நாடி முதலியவற்றைச் சோதித்துப் பார்த்தேன். எல்லாம் ஒழுங்காக இருக்கவேண்டியபடி இருந் தன. அவர் மிகவும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார். நான் எனது ஸ்டெதாஸ்கோப்பை எடுத்து அவரது மார்பைச் சோதித்துப் பார்க்க எண்ணினேன். மார்பின் துடிப்பு காதில் விழுந்ததுமே என் நெஞ்சு படபடக்கத் தொடங்கியது. அவருடைய இதய மும், புப்புசங்களும் மிகவும் தளர்ச்சி அடைந்திருந்தன. மார் பைச் சோதித்த பின்னர், முதுகுப்புறம் சோதிப்பதற்காக நான் அவரைத் திருப்பினேன். அதற்குள் அவர் விழித்துக் கொண்டு, 'யார் அது? என்ன?' என்று கேட்டார். நான் அவரிடம் அதற்குப் பதில் சொல்லி, 'இன்று உங்களைப் பரிசோதித்துப் பார்க்க விடுங்கள்' என்று வேண்டினேன்.

ஆச்சரியம் என்ன என்றால், அவர் உடனடியாக அதற்குச் சம்மதித்தார். எல்லாம் நன்கு பரிசோதித்துப் பார்த்த பின்னர்

அவர் என்ன ஆயிற்று என்ன இல்லை என்றெல்லாம் என்னைக் கேட்டார். நான் அவரிடம் சொல்லவில்லை. ஆனால், கூர்மையான அறிவைக் கொண்ட அவர் உடனேயே ஊகித்துக்கொண்டு விட்டார். தொடர்ந்து அவர் என்னிடம் சொல்லலானார்:

'எனது முடிவு நெருங்கி வந்திருக்கிறது என்பதைத்தானே நீ மறைத்து வைக்கப் போகிறாய்? ஆனால் அதை மறைப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது? அது என்றோ எனக்குத் தெரிந்துவிட்டது. அந்த எனது மேசையின்மீது பார், என்ன இருக்கிறது என்று!'

இந்தப் பேச்சைக் கேட்டதுமே நான் திடுக்கிட்டேன். ஆனால் அவர் தொடர்ந்து என்னிடம் சொன்னார்: 'நீ கலக்கம் அடையாதே. நான் போவதற்காக முற்றும் தயாராக இருக்கிறேன். என் கையினால் இன்னமும் நடந்திருக்குமானால் எனக்கு ஆனந்தமே ஏற்பட்டிருக்கும். ஆனால் துவங்கிய காரியம் உங்களைப் போன்றவர்களின் கையில் இருக்கும்போது வேறு என்ன வேண்டும்?'

இந்தப் பேச்சு நடந்துகொண்டிருந்தபொழுது நான் அவரது மேசையின் அருகில் சென்று பார்த்தேன். அங்கு ஒரு மிகப் பெரிய கத்தையும் அதைவிடச் சிறியதொரு கத்தையும், மேலும் ஒரு கனத்த கடிதமும் இருந்தன. அந்தக் கடிதத்தை நான் தூக்கிப் பார்த்தேன். அதன்மேல் எனது பெயர் எழுதப்பட்டிருந்தது; அதற்குமேல், 'எனது காலம் முடிந்த பிறகு படிக்கவும்' என்று பெரிய எழுத்துக்களால் எழுதப்பட்டிருந்தது.

அதைப் பார்த்ததுமே எனக்கு மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது. அந்த உருவத்தின் திடத்தை எண்ணி மிகுந்த மதிப்பு தோன்றி நான் வியப்பும் ஆர்வமும் கலந்த பார்வையுடன் அவரைப் பார்க்கலானேன். இதை எழுதும் வேலையை எப்போதுதான் செய்தாரோ? இந்தக் கேள்வியைக் கேட்பதுபோல் எனது கண்கள் அவரைப் பார்த்தன. அந்தக் கேள்வியை உணர்ந்து கொண்டவர்போல் அவர் என்னிடம் சொன்னார்: 'சுமார் ஒரு மணிக்கு நான் விழித்துக்கொண்டேன். அப்பொழுது இனி நான் அதிக நாட்கள் உயிருடன் இருக்கமாட்டேன் என்று எனக்கே திடீரென்று தோன்றலாயிற்று. எனது இதயம் மிகவும் வேகமாகப் படபடத்தது. சுமார் அரைமணி நேரம் நான் மிக வேகமாக மூச்சு விட்டுக்கொண்டிருந்தேன். பிறகு சிறிது பரவாயில்லை என்று தோன்றியதும் இந்தக் கடிதத்தை எழுதும் யோசனை உண்டாயிற்று. சுமார் நாலரை மணிவரை கடிதம்

எழுதி, இந்த இரு கத்தைகளை நன்கு கட்டி மேசையின்மீது வைத்துவிட்டு மீண்டும் போய் நான் படுத்துக்கொண்டேன். ''இனிமேல் எப்பொழுது வேண்டுமானாலும் சாவு வரட்டும்!'' என்று மனத்தில் சொல்லிக்கொண்டேன்.'

நான் அழுத்தமாகச் சொன்னேன்: 'இதோ பாருங்கள், இன்னும் எவ்வளவோ ஏற்பாடுகளைச் செய்யவேண்டியிருக்கிறது. அப்படியிருக்கச் சாவைப்பற்றி ஏன் பேசுகிறீர்கள்? அதெல்லாம் ஒன்றும் இல்லை. உங்களுக்கு உண்மையாகவே ஒன்றும் ஆகவில்லை. வெறும் பலவீனம் ஏற்பட்டிருக்கிறது, அவ்வளவுதான். ஓரிரு மாதங்கள் ஓய்வு, முழு ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். அதுவும் இங்கேயோ அல்லது பம்பாயிலோ அல்லது இதைப் போன்ற வேறு இடத்திலோ அல்ல. எங்கேயாவது சிறு கிராமத்தில் போய் எடுத்துக்கொள்ளுங்கள். நாளைக்கே கிளம்ப வேண்டும். அஃதின்றிப் பயன் இல்லை. இன்றுவரை நாங்கள் உங்கள் கட்டளைப்படி நடந்து வந்தோம். ஆனால் இப்பொழுது நீங்கள் எங்களுடைய சொற்படி நடந்துதான் ஆகவேண்டும்.'

அவர் ஒன்றுமே பேசவில்லை. அதற்குள் எங்களுடைய இன்னும் இரண்டு நண்பர்கள் வந்தார்கள். அவர்களிடம் நான் நடந்தவற்றையெல்லாம் சொன்னேன். அவர்களும், நானும் சேர்ந்து அவரை மிகவும் வற்புறுத்தத் தொடங்கினோம். அப்பொழுது அவரும் நாங்கள் சொன்னபடி செய்ய இசைந்தார்.

'நீங்கள் சொல்கிறபடி நான் செய்கிறேன். உங்களுக்குத் தோன்றிய இடத்துக்கு என்னைக் கொண்டு செல்லுங்கள். ஆனால் இப்பொழுது உங்களுடைய நம்பிக்கையெல்லாம் பயன் கொடுக்கப் போவதில்லை. மிஞ்சியிருப்பது சில நாட்கள்தான். வேலை செய்தவாறே சாவின் பிடியில் செல்லவேண்டும் என்பதுதான் எனது விருப்பம். அந்தத் துளி விருப்பத்தைக்கூடக் கவிழ்க்கப் பார்க்கிறீர்கள் நீங்கள், அவ்வளவுதான்!'

இவ்வளவு மட்டுமே பேசி அவர் மௌனமாகக் கிடந்தார். அவருடைய பேச்சில் உண்மை எவ்வளவு இருந்தது என்பது என்னைத் தவிர வேறு யாருக்கும் தெரிவதற்கு வழி இருக்கவில்லை. எனக்கு மிகுந்த வருத்தம் ஏற்பட்டது. ஆனால் நான் வேறு யாரிடமும் உ ண் மை யை வெளியிடவில்லை. இப்பொழுது கைகட்டி உட்காருவதில் ஒரு பொருளும் இல்லை. ஏதாவது ஒரு வழியைச் செய்தேயாகவேண்டும் என்று நினைத்து, எங்கள் இருப்பிடத்தை அங்கிருந்து வெப்பமுள்ள ஒரு பிரதேசத்துக்கு,

ஒரு குக்கிராமத்துக்கு மாற்றுவதாக முடிவு செய்தேன். அதற்கான ஏற்பாடுகளையும் செய்தேன்.

குக்கிராமத்தில் நாங்கள் அவரை எவ்வளவு கவனத்துடன் பார்த்துக்கொள்ள வேண்டுமோ, அவ்வளவு கவனத்துடன் பார்த்துக்கொண்ட போதிலும், நாங்கள் சொன்னபடி அவர் நடந்துகொள்ளவே இல்லை. சிறிதளவு தேவலை என்று ஆனால், அக்கம்பக்கத்திலுள்ள உழவர்களை ஒன்று கூட்டி, அவர்களைப் பற்றிய செய்திகளைத் திரட்டி, அவர்களுடைய தேவைகள் என்ன, அவர்களுடைய விருப்பங்கள் என்ன என்பதை அறிய முயன்றவாறு, அவர்களுடன் நான்கைந்து மணிநேரம் வெயிலிலும், காற்றிலும் பேசிக்கொண்டு உட்கார்ந்திருப்பார். இதனால் அவருடைய பலவீனம் மேலும் மேலும் பெருகிக்கொண்டே சென்று அது பயங்கரத் தோற்றத்தை எடுத்துக்கொண்டது. அந்தத் தோற்றம் முன்னதாகவே ஏற்பட்டிருந்ததுதான். எங்கள் திறமையினாலும், கவனிப்பினாலும் ஏதாவது நிகழ்ந்து, அந்தத் தோற்றம் மாறும் என்று நான் பிடிவாதமாக நம்பி வந்தேன். ஆனால் அவருடைய நோய் அதிகரித்துக்கொண்டே தான் சென்றது.

இறுதியில் அக்கா, அண்ணா முதலியவர்களுக்குத் தெரியப் படுத்தவேண்டும் என்று நாங்கள் முடிவு செய்தோம்.

# 66. இராமாநந்த் எழுதியது

எங்கள் கடிதம் போய்ச் சேர்ந்ததும், உடனேயே எல்லாரும் ஓடி வந்ததுபோல் புறப்பட்டு வந்தார்கள். சிவராம்பந்த் அண்ணு அவர்கள் சமீப காலமாக விடுமுறை எடுத்துக் கொண்டிருந்தார். என்று அவர்கள் எல்லாரும் வந்தார்களோ, அன்றைத் தினம் பாவாநந்த் அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆனுல் அவரைக் கேட்காமல் நாங்கள் இவர்களுக்குக் கடிதம் எழுதி வரவழைத்தோம் என்பதற்காக எங்கள் மீது சிறிது சினந்துகொண்டார். அவரைப் பார்த்ததும் அக்காவும், சுந்தரிபாய் அவர்களும் மிகவும் அழுதார்கள். அவர்கள் அவ்வாறு அழுததைப் பார்த்துக் கல்லும் கரைந்திருக்கும். பிறகு நாங்கள் என்ன மனிதர்களாகத்தானே இருந்தோம். எங்கள் நிலைபற்றிக் கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாது. சிவராம்பந்த் அண்ணு அவர்கள் வெறுமனே அவர் பக்கத்தில் உட்கார்ந்து மௌனமாகப் பார்த்துக்கொண் டிருந்தார். அவரது முகத்தில் பரவிய கருமையை, வருத்தத்தை வார்த்தைகளில் வர்ணிக்கமுடியாது. பாவுராவ்—பாவாநந்த் அவருக்குப் பிள்ளையைப் போன்று இல்லை, பிள்ளையாகவே இருந்தார். ஆகவே அவரது தற்போதைய நிலையைப் பார்த்து அவருக்கு இவ்வளவு வருத்தம் ஏற்படுவதிலும், உள்ளே சோகத்தீ பற்றி எரியத் தொடங்கி அதன் காரணமாக அவரது உள்ளமும், வெளியில் முகமும் முற்றும் கருத்துப் போவதிலும் என்ன வியப்பு இருக்கிறது? ஆனுல் அந்தத் திடம் கொண்ட மனிதன் ஒரு பெருமூச்சைக்கூட எங்கள் காதில் விழும்படி செய்யவில்லை.

அக்கா ஓலமிட்டு அழுதுகொண்டிருந்தார். அதுவரை பாவாநந்த் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஆனுல் அவருடைய வருத்தத்தின் முதல் வேகம் சிறிது குறைந்தவுடனேயே, அவரைப் பார்த்துச் சொன்னுர்: 'அக்கா, நீ இங்கு வந்து இவ்வாறு செய்வாய் என்று நான் நினைத்திருக்கவில்லை. நீ மிகுந்த திடம் கொண்டவள், எந்தக் காரணத்தைக் கொண்டும் நிலைகுலையாதவள், கதிகலங்காதவள் என்று நான் எண்ணியிருப்பது சும்மாவா?'

அக்கா ஒன்றுமே பேசவில்லை. அப்பொழுது அவரே மீண்டும் பேசினார்: 'நீ மிகுந்த தைரியத்தைக் காண்பிக்கவேண்டும். ஏனெனில் எத்தனையோ காரியங்களை நீ இன்னும் சாதிக்க வேண்டியிருக்கிறது!'

'தம்பி, தம்பி, வேண்டாம், எனக்கு அப்படிப்பட்ட விஷயங்கள் ஒன்றும். நீ இல்லாமல் எனக்கு என்னவேண்டியிருக்கிறது இவையெல்லாம்? நீ இல்லாமல் எனக்கு மற்ற எல்லாம் . . . '

'சே, சே, சே.' பாவு அவளை இடையிலேயே மறித்துப் பேசினார், 'இது என்ன பைத்தியம்போல் பேசிக்கொண் டிருக்கிறாய்? பெண்களே இப்படித்தான் என்று மக்கள் சொல்வார்கள். அண்ணா நீங்களும் இவ்வாறான முகத்தைக் கொண்டு உட்கார்ந்துவிட்டீர்களா? நீங்கள் சொல்லுங்கள், இவளுக்கு ஏதாவது—மேலும்—மேலும் . . . அங்கு . . . சு . . . '

மேற்கொண்டு அவரால் ஒரு வார்த்தைகூடப் பேசமுடியவில்லை. அவர் தொண்டை அடைத்துக்கொண்டு விட்டது. மற்ற எல்லாருக்கும் 'அழாதீர்கள், அழாதீர்கள்' என்று சொல்லும் திடத்தைக் கொண்ட அவரது கண்களிலேயே பொல பொலவென்று கண்ணீர் நிறைந்து வரத் தொடங்கியது. சுற்றிலும் நின்றிருந்த நாங்களோ முற்றும் உள்ளம் உருகிப் போய் விட்டோம். முதல் சந்திப்பின்பொழுது நிகழ்ந்த இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் இரண்டாவது நாள் எல்லாரும் ஒரு நிலைக்கு வந்தார்கள். இவர்கள் எல்லாரும் வழக்கமாகவே அருகில் இருந்ததனால் அவரை எந்தவிதமான சிரமமும் எடுத்துக்கொள்ள விடாமல் மிகவும் எச்சரிக்கையுடன் இருந்தனர்.

நாங்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து கால் மைல் வட்டாரத்துக்கு வேறு குக்கிராமமோ, வயலோகூட இருக்கவில்லை. அதனால் கிராமத்தவர், குடியானவர் என்று எவருக்கும் இடையில் சென்று சொற்பொழிவு ஆற்றுவதற்கு வாய்ப்பும் இருக்கவில்லை. இப்பொழுது அவ்வளவு தூரம் செல்வதற்கு வேண்டிய பலமும் அவர் உடலில் இருக்கவில்லை. மேலும் அது இருந்திருந்தாலும், வீட்டினர் அவரைப் போகவிட்டிருக்கமாட்டார்கள். ஆனால் இப்பொழுது வேறு ஒரு விசித்திரமான தொல்லை தோன்றி நின்றது. அவருடைய உடல்நிலை மிகவும் கெட்டுப் போயிருக்கிறது என்று கேள்விப்பட்டு அந்தக் கிராமத்து மக்களே இவரைப்பற்றிய செய்தியை அறிந்துகொள்வதற்காக வரத் தொடங்கினார்கள்.

'ஏழை எளியவர்களுக்கு என்ன, இவ்வளவு கற்றறிந்த பண்டிதனுகிய சந்நியாசி நம்மைப்பற்றி இவ்வளவு கவலை கொள்கிருன், நமக்காக அவன் குடும்ப வாழ்வைத் தியாகம் செய்தான், அவன் இன்ன பரீட்சை தேறியிருக்கிருன், அவனைப் பின்பற்றுவோர் இருக்கிருர்கள், அவர் இப்படி, இப்படி இருக்கிருர்கள் என்று ஒருமுறை செய்தி பரவியதும் அவர்கள் எப்படி இருக்கிருர்கள், யாராக இருக்கிருர்கள்?' என்று பார்க்கவேண்டும் என்ற விருப்பம் இயற்கையாகவே தோன்றியது. எனவே மக்கள் பரபரவென்று வரத் தொடங்கிஞர்கள். அத்தகைய ஒவ்வொருவரும் இவரைச் சந்திக்கவேண்டும், இவருடன் பேசவேண்டும் என்று ஆசைப்பட்டனர். யார் வந்தாலும் சரி, அவருடன் பேசித்தான் ஆகவேண்டும். அவன் ஏதாவது கேட்டால் அவனுக்குச் சொல்லவேண்டும். அவனுக்கு ஏதாவது எழுதிக் கொடுக்க வேண்டுமாஞல், அதை எழுதித் தரவேண்டும். இவ்வாறு இடையருது நடந்துகொண்டிருந்தது.

அந்த நிலையிலும் எங்களால் முடிந்தவரை அவர்களைத் தவிர்க்கப் பாடுபட்டோம். அதஞல் ஒரு பயனும் ஏற்படவில்லை. இவ்வாறு நடக்க நடக்க அவருடைய காய்ச்சல் அதிகரித்தது. காய்ச்சல் தினமும் வரவேண்டும், சிறிதும் குறையக்கூடாது. இரண்டாம் நாள் அதுவே மிகைப்படவேண்டும். இவ்வாருகத் தொடர்ந்து நடக்கத் தொடங்கியது. எங்களால் முடிந்த அளவு நாங்கள் முயற்சி செய்தும், ஒரு பயனும் ஏற்படவில்லை. எங்கள் மருந்திஞல் சிறப்பாக ஒன்றும் பலன் ஏற்படுவதாக இருக்கவில்லை. அதஞல் எவ்வளவு ஆகக்கூடியதாக இருந்ததோ, அதுவுங்கூட அவருடைய மூளையின் வேலையிஞல் பயனற்றதாகி விட்டிருக்கும். உடலில் நூற்றுநாலு, நூற்றுநாலரை வரை காய்ச்சல். ஆஞல் அங்கே சிறிதும் கவனம் செலுத்தாமல் எங்களிடம் ஏதாவது, 'இன்னதைப்பற்றி இன்ன இடத்தில் சென்று செய்தி தெரிந்துகொள்ள வேண்டும்; மேலும் அந்த மக்களுக்கு இன்னபடியாகச் சொற்பொழிவு நிகழ்த்தவேண்டும், இன்ன விண்ணப்பம் செய்ய வேண்டும், இன்ன இடத்தில் இப்படிப்பட்ட ஒரு பள்ளி வேண்டும், இன்ன இடத்திற்கான விண்ணப்பத்திற்கு அரசாங்கம் பொல்லாத்தனமான பதிலைக் கொடுத்திருக்கிறது. அதன்பேரில் இன்னவாறு ஏதாவது சொல்லவேண்டும், அந்த "புதிய எண்ணங்கள்" பத்திரிகையில் இன்ன வகையில் இன்ன பொருளைப்பற்றி

"ஆர்ட்டிகல்" எழுதவேண்டும் . . .' என்று எங்களிடம் சொல்லிக் கொண்டிருப்பார். அவ்வாறு பேசாமல் அமைதியாகப் படுத் திருங்கள் என்று சொன்னால் சினந்து கொள்வார். இவ்வாறாக நடந்துகொண்டிருந்தது.

எங்களால் முடிந்த அளவுக்கு முயன்று நாங்கள் சொன்னபடி அவரை நடந்துகொள்ள வைத்துக்கொண்டிருந்தோம். ஆனால், போகப் போக இன்று இருந்த பலம் நாளைக்கு இல்லை, நாளைக்கு இருந்தது அதற்கு அடுத்த நாள் இல்லை என்றவாறு ஆகிக்கொண் டிருந்தது. இனி இவர் நமக்குக் கிடைக்கமாட்டார் என்பது என்னவோ தெளிவாகிவிட்டது. இறுதியில் ஒருநாள் நான்கைந்து பேர் வந்திருந்தார்கள். அவரிடம் பேசப் பேச அவர்கள் இடை யிலேயே இவ்வாறு சொன்னார்கள்: 'நீங்கள் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்ற குழப்பத்திலேயே விழுந்துவிட்டீர்கள். இல்லை யென்றால் அரசாங்கப் பதவி அடைந்து இவ்வளவு நாட்களில் எவ்வளவோ பேரும் புகழும் அடைந்திருப்பீர்கள்!'

அதைக் கேட்டதுமே அவருக்கு ஏற்பட்ட ஆவேசத்தைப் பற்றி ஒன்றும் கேட்காதீர்கள்! 'பதவி! இடம்! எனது இப் போதைய பதவி என்ன குறைந்துவிட்டதா? இடம்! தற்போது நான் எந்த இடத்தில் இருக்கிறேனோ, அந்த இடம் தாழ்ந்தது என்று உங்களுக்குத் தோன்றுகிறதா? வெட்கக்கேடு! இதோ பாருங்கள், நமது நாட்டின் சேவகனாக இருக்கும் பதவி உங்க ளுக்குக் குறை உள்ளதாகப் படுகிறதா? நாட்டுக்குச் சேவை செய்யும் தொண்டனின் நிலை உங்களுக்குத் தாழ்வானதாகப் படுகிறதா? இந்த நிலை, இந்தத் தொண்டனின் பதவி, தாழ் வாகத் தோன்றினால் அதுதான் நமது தாழ்மையைக் குறிக்கும். இப்படிப்பட்ட வேலை இழிவாகத் தோன்றினால், பிறகு இதற்கும் அப்பாற்பட்ட பாழடைந்த நிலை வேறில்லை! இது, இது என்ன இது!' இவ்வாறு பேசப் பேச, அவர் அடைந்த உணர்ச்சி வேகத் தைக் கண்டதும், நாங்கள் இடையில் குறுக்கிட்டு அங்கிருந்து அவர்களைப் போகும்படி சொல்ல நேரிட்டது. பிறகு இவரை அமைதிப்படுத்தவும் மிகவும் சிரமப்பட வேண்டியிருந்தது.

அந்த ஆவேசத்தின் பலனாக என்ன ஏற்படவேண்டியிருந் ததோ இறுதியில் அது ஏற்படத்தான் செய்தது. அன்று இரவு அவருடைய காய்ச்சல் அளவு கடந்து சென்றது. அன்று இரவு மிகுந்த சுரத்தின் காரணமாக, தலை வலியினால் பிளக்க, நினை வற்ற நிலையில் பிதற்றத் தொடங்குவார்களே, அந்த நிலையும்

வந்தது. நான் எனது சார்பில் என்ன முயற்சிகளையெல்லாம் செய்து பார்க்கமுடியுமோ, அவற்றையெல்லாம் செய்து பார்த்தேன். மண்டையின் கொதிப்பைத் தணியச் செய்வதற்காக எனது அறிவிற்கு ஏற்றவாறு முடிந்த வழிகளையெல்லாம் செய்து பார்த்தேன். ஆனால் ஒரு பயனும் இல்லை. அவருடைய மண்டையின் கொதிப்பு மேலும் அதிகமாகிக்கொண்டே சென்றது. அவர் பிதற்ற ஆரம்பித்தார். எல்லாம் மதியம் பேசிய பொருள் பற்றித்தான். வேறு ஒன்றும் இல்லை. இடையிடையே ஏதாவது நீட்டி முழக்கிப் பேசுவார்; சட்டென்று பேச்சுக்கு நடுவில் என்னிடம், 'இராமாநந்த் உனக்கு என்ன தோன்றுகிறது? நீ எப்படி, என்ன செய்வாய்? இதை இப்படிச் செய்யாமல் இருக்காதே, தெரிந்ததா? நமக்கு இதை இப்படித்தான் செய்ய வேண்டும்' என்று ஏதாவது சொல்வார். இடையில் சட்டென்று எழுந்து உட்கார்ந்து ஆங்கிலத்தில் பரபரவென்று பேசுவார்; அதில் பெரும்பாலும் மேற்கொண்டு என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றிய எண்ணம் இருக்கும். இல்லையென்றால் அதே பொருள்பற்றி இன்னும் ஏதாவது . . . ஆனால் உள்ளத்தில், நினைவில் எல்லாம் அதேதான், வேறு எதுவுமே இல்லை.

அன்று இரவு நான் மிகவும் பயந்துகொண்டேன். ஏனெனில், அன்று இரவே முடிவு வரக்கூடிய நிலைமை இருந்தது. நாங்கள் மாறி மாறி முறை எடுத்துக்கொண்டு அவர் அருகில் உட்கார்ந்து அவரைக் கவனித்துக்கொள்வது என்று முடிவு செய்திருந்தோம். அக்கா, சுந்தரிபாய் இவ்விருவருமோ நிரந்தரமாகக் காவல் செய்துகொண்டிருந்தனர். 'இப்படி ஒன்றும் செய்யாதீர்கள், உங்கள் உடல்நிலை கெட்டுப் போகும்' என்று அக்காவிடம் பல முறை சொன்னேன். ஆனால் அவருடைய ஒரே பதில், 'எனது உடல்நிலைக்கு ஒரு கேடும் வராது. எந்த மனிதர்களின் தேவை இருக்கிறதோ, அவர்களுக்குத்தான் எல்லாக் கேடும் வருகிறது. எங்களைப் போன்ற ஒரு காசுக்கும் பயன்படாதவர்களைத்தான் இறைவன் முழுதாக நூறு ஆண்டு வாழவைக்கிறான். நான் இங்கிருந்து எழுந்திருக்கப் போவதில்லை' என்பதே.

அவர் தமது கணவனின் உடல்நிலை குன்றிய காலத்தில் எங்ஙனம் நடந்துகொண்டார் என்பதைப் பாவாநந்த் தனது வாழ்க்கைச் சரித்திரத்தில் விவரமாக எழுதியிருக்கிறார். அதையும்விட அதிகமான பாசத்துடனும், உறுதியுடனும் அவர் இப்போது உட்கார்ந்திருந்தார் என்று சொன்னாலும் பொருந்தும்.

இப்பொழுது அவருடைய மாமா முதலானவர்களும் வரவழைக்கப்பட்டிருந்தனர். அவர்களும் அவரைச் சமாதானப்படுத்தப் பார்த்தார்கள். ஆனால் ஒரு பயனும் ஏற்படவில்லை. இங்கே இவருடைய பிதற்றலோ அதிகமாகிக்கொண்டே யிருந்தது. சுமார் நள்ளிரவுப் பொழுதில் அவர் உரக்க என் பெயரைச் சொல்லி என்னைக் கூப்பிட்டார். பிறகு திடீரென்று சொல்லலானார்: 'உனக்கு அந்த அயரிஷ் தேசத்தொண்டரின் அச் சமயத்து உள்ளத்தைக் கவரும் பேச்சு நினைவிருக்கிறதா? அதில் அவர் நமது மக்களுக்கும் நல்ல அறிவுரையைப் புகட்டியிருக்கிறார். அந்தச் சொற்பொழிவு நினைவுக்கு வருகிறதா?'

இவ்வாறு சொல்லி அந்தச் சொற்பொழிவையே பரபரவென்று செய்யத் துவங்கினார். நான் திகைத்துப் போனேன். அந்தச் சொற்பொழிவின்போது அவர் எழுந்தது, நின்றுகொண்டது, கையை இப்படியும் அப்படியும் அசைத்தது எல்லாம் விசித்திர நிகழ்ச்சியாக இருந்தன. 'இவ்வளவு உடல் பலம் எங்கிருந்து வந்தது?' என்று வியந்துகொண்டே நான் எழுந்து நின்றேன். அந்தப் பேச்சு முடிந்ததும் அவர் சிரித்தார்; விசித்திரமாக, பயங்கரமாகச் சிரித்தார். மேலும், 'இவர் பெயர் தேசாபிமானி?' என்று சொல்லி அவர் தொப்பென்று கீழே விழுந்தார். ஒன்றும் பேசாமல் விழுந்தார். அந்தப் பேச்சினால் ஏற்பட்ட மிகுந்த சிரமத்தின் காரணமாக நேரத்தான் வேண்டியிருந்தது. அது நேரும் என்பதும் எனக்குத் தெரிந்தே இருந்தது. மீண்டும் நான் ஏதோ உபாயங்களைச் செய்து பார்த்தேன், ஆனால் அவையொன்றும் பயனளிக்கவில்லை. மீண்டும் அவர் பிதற்றலானார். அவர் லாங்ஃபெலோவின் புகழ் பெற்ற 'வாழ்க்கைத் தோத்திரம்' என்னும் கவிதையை இரைந்து சொல்லலானார். இந்த அற்புதமான நினைவுத்திறன் அந்தச் சமயத்தில் எப்படித் தூண்டப்பட்டது, என்ன ஆயிற்று என்பதெல்லாம், வைத்திய அறிவு கொண்ட எனக்கே ஒன்றும் விளங்கவில்லை. எனது அறிவே மரத்துப் போனதுபோல் ஆகியது. இறுதிப் பகுதியைச் சொல்வதற்குமுன் என்னைப் பார்த்து உரக்கக் கூவி அவர் சொன்னார்: 'சொல்லடா: சொல்!' பிறகு குரலைப் பெரிதாக்கிக்கொண்டு அவர் சொல்லிக்கொண்டே போனார்:

Let us then be up and doing
With a heart for any fate.

Still achieving still pursuing
Learn to labour and to wait.

இறுதிவரையில் அவர் தலையில் சுழன்றுகொண்டிருந்த எண்ணம் என்ன என்பது இந்த இரு விஷயங்களினுல் நன்கு தெரியவரும்.

இந்தப் பகுதியைக் குரலை நன்கு உயர்த்திச் சொன்ன பிறகு அவருக்கு மீண்டும் மிகுந்த களைப்பு ஏற்பட்டது; அவர் மௌனமாகப் படுத்துக் கிடந்தார். இந்த அறிகுறிகளெல்லாம் எதைக் குறிக்கின்றன என்பதை நான் நன்கு உணர்ந்து இருந்தேன். ஆனுல், அதைச் சொல்வதற்கு வழி இருக்கவில்லை. இவர் இன்னும் பன்னிரண்டு மணி நேரம்கூடப் பிழைத்திருக்க மாட்டார் என்று நிச்சயமாகத் தெரிந்தது. ஆகவே, நாங்கள் யாவரும் அவரை நெருங்கி உட்கார்ந்திருந்தோம். ஒவ்வொரு கணமும் நான் திடுக்கிட்டுக்கொண்டிருந்தேன். ஆனுல் காலையில் சுமார் ஆறு மணி அளவிற்கு எனது ஊகத்துக்கு எதிரான நிகழ்ச்சி நிகழ்ந்தது.

காலைப்போதில் சுமார் ஆறு மணிக்கு விளக்கு மங்கலாகிக் கொண்டே சென்று அணைந்துவிடும் என்று நான் நினைத்திருந்தேன். ஆனுல், அவ்வாறு ஏற்படவே இல்லை. காலையில் அவருடைய பிதற்றலும் நின்றுவிட்டது, சுரமும் இறங்கிவிட்டது. முகமும் சிறிது தெளிவடைந்தது. நாடியின் நிலைமையும் சீரடைந்தது. நான் மிகவும் குழப்பம் அடைந்துவிட்டேன். இந்த எல்லா அறிகுறிகளும் முற்றும் எனது ஊகத்திற்கு எதிராக ஏற்பட்டன. இவ்வளவு மட்டுமே அல்ல; அவர் நன்ருகப் பேசவும் தொடங்கினுர். அக்காவைப் பார்த்த வண்ணம் சொன்னுர்: 'அக்கா, இப்பொழுது நான் உங்களை விட்டுப் பிரிந்து செல்லப் போகிறேன் என்பதில் சந்தேகமில்லை. இன்ரு, நாளையா என்ற அளவுக்குத் தான் சந்தேகம் எல்லாம். நான் சிறு வயதிலிருந்து உனக்கு ஏதாவது அநியாயம் செய்திருந்தால், உன்னைத் துன்புறுத்தியிருந்தால், பின்னர் பல சமயங்களில் உனது விருப்பத்திற்கு எதிராக நடந்துகொண்டிருந்தால் யாவற்றுக்கும் என்னை மன்னித்து விடு.'

'தம்பி, தம்பி, இதென்ன இப்படிப் பேசுகிருய்?' இந்த வார்த்தைகள் எப்படியோ அக்காவின் வாயினின்றும் வெளிப்பட்டு, மேற்தொடர்ந்து சொற்கள் அடக்கமுடியாத வண்ணம் பெருகி வந்த அவரது அழுகையில் மறைந்து சென்றன. தம்பி அவரிடம் கவனமே செலுத்தாதவராகக் காணப்பட்டார்.

உடனேயே அவர் அண்ணுவின் பக்கம் பார்வையைத் திருப்பினுர். அவரை அருகில் அழைத்து அவரிடம் சொன்னுர்: 'நீங்கள் என்னுடைய தந்தை. நீங்கள் எனக்குச் செய்த உதவிகள் அளவற்றவை. உங்களுக்கு நான் பட்டிருக்கும் கடனைத் தீர்த்துக் கொள்ள என்னுல் முடியவில்லை. அதற்கு எதிராக ஒரு காரியத்தில் நன்றி கெட்டவனுகவே ஆனேன். ஆனுல், அதற்காக நீங்கள் என்னை மன்னியுங்கள்.' அதன் பிறகு அவர் சுந்தரியை அன்பொழுகும் கண்களால் பார்த்தார். அவளிடம் அவருக்கு என்னவெல்லாம் பேசவேண்டியிருந்ததோ, அவை எல்லாம் அந்தப் பார்வையில்—அந்தப் பொருள் செறிந்த பார்வையில்—இருந்தது. அவ்வாறு பார்த்தவாறே சிறிது நேரம் அவர் மௌனமாக உட்கார்ந்திருந்தார். பின்னர் என்னைத் தவிர மற்றவரெல்லாம் வெளியில் போகவேண்டும் என்று சொல்லி, அக்காவையும் சுந்தரியையும் தவிர மற்றவர் யாவரும் வெளியில் சென்றவுடன் அவர் என்னிடம் சொன்னுர்: 'இராமாநந்த், எனக்கு இந்த உலகத்தை விட்டுச் செல்வதில் வருத்தம் இல்லை என்பது இல்லை. மிகவும் வருத்தமாக இருக்கிறது. இவ்வளவு வருத்தம் எனக்கு இதற்கு முன்பு ஒரே ஒரு முறைதான் ஏற்பட்டது. நான் இந்தக் காரியத்தில் ஈடுபடவேண்டும் என்று எப்போது முடிவு செய்தேனே, எனது வாழ்வின் சகல சுகங்களையும் தியாகம் செய்து எப்பொழுது இதில் ஈடுபட்டேனே, அப்பொழுது எனக்கு எவ்வளவு வருத்தம் ஏற்பட்டதோ, அந்த அளவுக்கே இப்போதும் ஏற்பட்டுள்ளது. ஆனுல், எதைத் தவிர்க்க முடியாதோ, அதற்குமுன் நாம் தலை வணங்கத்தான் வேண்டும். ''கொடுத்தாலன்றிக் கிடைப்பதில்லை, செய்தாலன்றி ஏற்படுவதில்லை'' என்ற கூற்றை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். நமது இந்தக் காரியத்தைப்பற்றி நான் என்ன என்ன சொல்ல விரும்புகிறேனே, அவை யாவும் அந்தக் கடிதத்தில் நான் உனக்கு எழுதியிருக்கிறேன்.'

இவ்வளவு நீட்டி முழக்கிச் சொல்லும்பொழுது அவருக்கு மிக அதிகமாக மூச்சு வாங்கியது. எவ்வளவோ முறைகள் அவர் பேசும்பொழுது தடுமாறினுர். ஆனுல் கடைசிவரை அவர் எப்படியோ பேசி முடித்தார். ஆனுல் அவர் மிகுந்த களைப்பு அடைந்தார். அந்தக் களைப்பு அதிகரித்துக்கொண்டே போயிற்று. மிகவும் சோர்வு ஏற்பட்டுக்கொண்டிருந்தது. கை கால்கள் சில்லிட்டுப் போய்க்கொண்டிருந்தன. இப்பொழுது நான்கைந்து

மணி நேரத்திலேயே முடிவு வரப்போகிறது என்று எனக்கு நிச்சயமாகப் பட்டது. திடீரென்று நான் அழ ஆரம்பித்து விட்டேன். என்னுல் எனது உள்ளத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. சொந்தத் தந்தையென எனக்கு அவரிடம் மதிப்பு ஏற்பட்டிருந்தது. அவரோ என் கண்களுக்கு எதிராகவே எனது வைத்தியக் கலையறிவிற்குப் பிடிபடாமல், எனது உழைப்பிற்கும், முயற்சிக்கும் தலை வணங்காமல், என்னை யும், தாம் தொடங்கிய வேலையையும், தமது சகோதரியையும், அன்புத் தோழர்கள் எல்லாரையும் விட்டுப் பிரிந்து போகப் போகிமுர்! மீண்டும் அக்குரல் கேட்பதற்குக் கிடைக்கப் போவ தில்லை. மக்கட் சேவையின் அந்தக் கலகலப்பு இப்பொழுது பார்க்கக் கிடைக்கப் போவதில்லை. அந்த உதவி, அந்த நல்லுரை, அந்த உழைப்பு, அந்த உற்சாகம், ஆவேசம், மன ஒருமைப்பாடு ஆகியவற்றில் எதுவுமே காணக் கிடைக்கப் போவதில்லை.

இந்த எண்ணம் தோன்றியதுமே எந்தக் கல்மனம் கொண்ட மனிதனுக்குத்தான் கண்ணீர் வராமல் இருக்கும்? அதிலும் நாளே இப்பொழுது இரண்டு மூன்று ஆண்டுகளாக அவர் பக்கத்திலேயே இருந்தேன். அவருடைய ஒவ்வொரு கணப் பொழுதும் எப்படிக் கழிந்துகொண் டிருந்தது என்பதை நான் பார்த்துக்கொண் டிருந்தேன். அவருடைய ஒவ்வொரு வார்த்தை யையும் நான் கேட்டுக்கொண் டிருந்தேன். அப்படியிருக்க எனது நிலை எப்படி இருந்திருக்கும் என்பது நான் சொல்லி மக்களுக்கு என்ன விளங்கப் போகிறது?

அவருடைய நாடியைப் பிடித்துப் பார்த்தவண்ணம் நான் அசையாது உட்கார்ந்திருந்தேன். அழுதுகொண்டும் கண்களைத் துடைத்துக்கொண்டும் இருந்தேன். இன்னும் ஒரு வார்த்தை யாகிலும் பேசமாட்டாரா என்று ஏங்கியிருந்தேன். போகப் போக நிலைமை மேலும் பயங்கரமாகிக்கொண் டிருந்ததாக எனக் குத் தெரிந்தது. எப்படி ஒரு மனிதன் மிகவும் உழைத்துக் களைத் துப் போய், தரையில் படுத்ததுமே மெல்லத் தூக்கம் அவனைத் தழுவிக்கொள்கிறதோ, அதுபோலவே இந்த உலகில் செய்ய வேண்டிய அவரது உழைப்பு முடிவடைந்து அவர் மகா நித்திரை யில் நழுவிக்கொண் டிருந்தார். ஆனுல் இந்தப் பேருறக்கத்தி னின்றும் அவர் என்றுமே விழித்துக்கொள்ளப் போவதில்லை. எனவேதான், அவரை இந்தப் பேருறக்கம் தழுவாமல் பார்த்துக்

கொள்ளவேண்டும் என்ற எண்ணத்தின் வேகத்தில், நான் விரைந்து அவரை இரைந்து அழைத்தேன். அந்த அழைப்பு காதில் விழ, அவர் 'ஓ' என்று எனக்குப் பதிலளித்தார். அந்த மூடியிருந்ததும், ஒளியை மேலும் மேலும் இழந்துகொண் டிருந் ததுமான கண்களைத் திறக்க அவர் முயன்ருர். கூடவே மிகக் கம்மிய குரலில், 'என்ன சொல்கிருய்?' என்று என்னைக் கேட் டார். உண்மையில் எனக்கு ஒன்றும் கேட்கவேண்டியது இருக்க வில்லை. அவருக்கு இன்னும் நினைவு இருக்கிறதா இல்லையா என் பதையே நான் அறிய விரும்பினேன். இருக்கிறது என்ற உறுதி எனக்கு ஏற்படவே நான் அமைதியாக உட்கார்ந்தேன். கனத்தும், உணர்ச்சியற்றும் தளர்ந்தும் போன கண்களைத் திறப்பதற்காக முயன்ற வண்ணம், 'என்ன சொல்கிருய்?' என்ற வார்த்தைகளை அவர் முணு முணுத்தார். எனவே அப்பொழுது ஏதாவது பேசியாகவேண்டும் என்றும் எண்ணி நான் சொன்னேன்:

'பாவாநந்த், இப்பொழுது எங்களுடையது எப்படி நடக்கும்? நமது சங்கத்தின் நிலைமை என்ன ஆகும்?'

அதற்கு ஒரு கணப்போது வரை ஒரு பதிலும் வரவில்லை. இனி ஒரு பதிலும் வரப்போவதில்லை, வரவும் முடியாது என்று எனக்குத் தோன்றியது. ஆனுல் சிறிது நேரத்தில் கண்களின் இமைகளைத் திறப்பதற்கான முயற்சி வெளிப்பட்டது. பேசும் முயற்சியில் உதடுகள் அசைந்தன. பேசுவதற்குச் சிரமம் ஏற்பட்டுக்கொண் டிருந்தது என்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

'உங்களால் பேசமுடியவில்லை என்ருல் பேசாதீர்கள்' என்று நான் சொன்னேன். ஆனுல் அவர் வாயினின்றும் ஏதோ வார்த்தைகள் வெளிப்பட்டுக்கொண்டுதான் இருந்தன. நான் எனது செவியை அவரது வாயருகில் கொண்டு சென்றேன். அப் பொழுது பின்வரும் வார்த்தைகள் எனது காதில் விழுந்தன:

'ஒரு மனிதன் இறந்தான் என்ருல் என்ன ஆயிற்று? ஒரு சிப்பாய் விழுந்தான் என்ருல், மற்றவன் முன் சென்று போரிட வேண்டும்.'

இவையே அவரது இறுதி வார்த்தைகள். இதற்குமேல் ஒரு வார்த்தைகூட உச்சரிக்கப்படவில்லை. அந்த வார்த்தைகளை உச்சரித்த பிறகு சுமார் ஒரு மணி நேரத்துக்குள்ளேயே உண்மை யான தேசாபிமானத்தைக் கடைப்பிடிக்கும் அந்த ஆண் மகனின் உயிர், உடலையும் இந்த உலகத்தையும் விட்டுப் பிரிந்து சென்றது.

# 67. பின்னர்

'ஒரு மனிதன் போனுன் என்ருல் என்ன ஆயிற்று? ஒரு வீரன் விழுந்தான் என்ருல் மற்ெருரு வீரன் முன் வந்து போரிட வேண்டும்.' இடையருது நாட்டின் நலத்தைப்பற்றிப் பேசும் அதரங்களிலிருந்து கடைசியாக வெளிப்பட்ட வார்த்தைகள் இவைதாம் என்று நான் மேலே சொல்லியிருக்கிறேன். போர்க் களத்தில் முற்றும் முன்ஞேக்கி விரைந்து செல்லும் சேனுபதி தன்னைப் பின்பற்றும் சிப்பாய்களுக்கு இதற்கும் மேம்பட்ட எந்த உபதேசத்தைச் செய்ய முடிந்திருக்கும்? வேறு எந்த உபதேசத்தி ஞல் அவருடைய வீர உணர்ச்சி நிலை பெற்று நிற்க முடிந்திருக் கும்? தமது மிகவும் பலவீனம் அடைந்த குரலில் அவர் இந்த வார்த்தைகளைச் சொன்னபொழுது நான் உணர்ச்சி வேகம் அடைந்து எனது எல்லா நண்பர்களையும் கூப்பிட்டுச் சொன் னேன்: 'கேளுங்கள்! பாவாநந்த் அவர்களின் இறுதி வார்த்தை களைக் கேளுங்கள்! ஒரு மனிதன் போனுன் என்ருல் என்ன ஆயிற்று? ஒரு சிப்பாய் விழுந்தால், உடனேயே மற்றவன் முன்ஞல் வந்து போரிடவேண்டும்.'

அவருடைய இந்த வார்த்தைகளிஞல் நானே மிகவும் விசித்திர மான நிலையை அடைந்தேன். அவருடைய இறப்பிஞல் மிகுந்த சோகம் ஏற்பட்டிருந்த போதிலும், இந்த வார்த்தைகள் உள்ளத் தின் ஆழத்தில் ஏதோ விசித்திரமான உணர்ச்சியை உண்டாக் கின. என்ஞல் அதைத் தெளிவாக விளக்கிச் சொல்ல முடியாது. கடைசிவரையில் அந்தத் தன்னலமற்ற புண்ணிய புருஷர், தாம் மேற்கொண்ட காரியத்தைப்பற்றியே, தமது மடத்தைப் பற்றியே எண்ணிக்கொண்டிருந்தார். அதைத் தவிர வேறு எந்த ஓர் எண்ணத்துக்கும் அவருடைய உள்ளத்தில் இடம் இருக்கவில்லை.

'ஒரு மனிதன் போனுன் என்ருல் என்ன ஆயிற்று? ஒரு சிப்பாய் வீழ்ச்சி அடைந்தால், உடனேயே மற்றவன் முன்ஞல் வந்து போரிடவேண்டும்.'

எவ்வளவு பொருள் செறிந்த, எவ்வளவு பெருந்தன்மை கொண்ட வார்த்தைகள் இவை! இந்த வார்த்தைகள் எனது உள்ளத்திலும், எனது நண்பர்களின் உள்ளத்திலும் என்ன நிலையை ஏற்படுத்திவிட்டன என்பதை வார்த்தைகளால் விளக்கிச் சொல்வது கடினம். இந்த மகாத்மாவின் உயிர் உடலை விட்டுச் சென்றது. ஆனால் இந்த வார்த்தைகளின் வடிவில் அவர் தமது ஆத்மாவை எங்களிடம் வைத்திருக்கிறார் என்று மனத்தில் நன்கு படியவைத்துக்கொண்டு எனக்கு எனது வருத்தம் முழுவதையும் விழுங்கிவிட முடிந்தது. அந்த வாக்கியங்கள் எனக்கு மிகுந்த ஊக்கத்தை அளித்தன. அந்த வாக்கியங்கள் எனக்கு மேற்கொண்டு எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும் என்பதற்கு உரிய வழியைக் காண்பித்துக் கொடுத்தன. மேற்கொண்ட வேலைக்கு முன்னால் ஒரு தனி மனிதன் எந்த மூலைக்கு? இவ்வாறு எவ்வளவு பேர் இறக்கவேண்டியிருக்குமோ? இவ்வாறான எண்ணம் என் உள்ளத்தில் உதித்தது. அதைத் தொடர்ந்து வருத்தத்தின் கொந்தளிப்பு குறைந்தது.

அவருடைய உயிர் பிரிந்து சென்றதும் எல்லோருமே மனம் நொந்து வீரிட்டு அழுதார்கள். அவர்கள் எல்லாருக்கும் ஆறுதல் சொல்லி, உள்ளத்தைத் திடப்படுத்திக்கொள்ளும்படி சொல்லும் காரியம் தனியொருவனான என்மீது விழுந்தது. இருந்தபோதிலும் என் முன்னால் உறுதியாலும், திடத்தாலும் உருவான அவருடைய தோற்றம் பிரத்தியட்சமாகத் தெரிந்தது. இதனாலும், மூளையில் இடையறாது சுழன்றுகொண்டிருந்த அவருடைய அந்தக் கடைசி வார்த்தைகளினாலும் எனக்கு அந்தச் சமயத்தில் வேண்டிய அளவு மனோதிடம் கிடைத்தது. அந்தத் திடத்தை நான் பயன்படுத்திக்கொள்ளவும் செய்தேன். எனது உள்ளத்தை ஒரு நிலையில் வைத்து எல்லோரையும் அமைதிப்படுத்துவதில் நான் விரைந்து முனைந்தேன். அக்காவை அமைதிப்படுத்துவது முடியாத காரியமாக இருந்தது.

அண்ணா மேலாக அமைதியே உருக்கொண்ட மலைபோல் தோன்றினார். ஆனால் எங்ஙனம் உள்ளிருந்து நன்கு குடையப்பட்டுக் குடையப்பட்டு, வெளியில் மட்டும் சிறந்து காணப்பட வேண்டுமோ அதைப்போலவேதான் அவரது நிலை இருந்தது. சோகமானது அந்த மனிதரை உள்ளிருந்து வறுத்து, தீய்த்து எரித்துவிட்டிருக்க வேண்டும். ஆனால் அவர் அதைச் சிறிதும் வெளியே காட்டிக்கொள்ளவில்லை. அவர் கடலைப் போல் அமைதி

யும், திண்மையும் கொண்டவராகி உட்கார்ந்திருந்தார். அவருடைய பெண் உடனேயே அங்கிருந்து எழுந்து சென்றுவிட்டிருந்தாள். அவருடைய உள்ளத்தின் நிலையை விளக்கிச் சொல்வதோ முடியாத காரியம். சுந்தரி அக்கா அவர்கள், தானுகவே தனது அந்த நிலையை விளக்கி எழுதினுல்தான் யாரேனும் அதை அறிந்து கொள்ளமுடியும். ஆனுல் அவர் எழுதுவது எவ்வளவு கடினமோ, அவ்வளவு கடினமான வேலை வேறு ஒன்றுமே இல்லை. சில வருத்தங்களை, அறியாத உலகத்துக்கு முன்னுல் வைப்பது முற்றும் முடியாத காரியம், விரும்பத் தகுந்ததும் அல்ல. ஆனுல் ஒன்று மட்டும் சொல்கிறேன்: சுந்தரி அக்காவுக்கு ஏற்பட்ட வருத்தம், நான், அக்கா, அண்ணு ஆகிய எங்கள் மூவருக்குமோ அல்லது வேறு எவருக்குமோ ஏற்பட்ட வருத்தத்தைவிட ஆயிரமாயிரம் மடங்கு, இலட்சக்கணக்கான மடங்கு அதிகமாக இருக்க வேண்டும். பாவாநந்த் அவர்களின் உயிரின் பிரிவு சுந்தரி அக்கா அவர்களின் உயிரின் பிரிவேதான். எனவே அவருக்கு ஆறுதல் சொல்வது என்பது யாராலுமே முடியாத காரியமாக இருந்தது. ஒருவரும் அவ்வாறு செய்ய முயலவும் இல்லை. நிற்க.

இறுதிச் சடங்குகள் யாவும் முறைப்படி நடந்தன. நாங்கள் மிகவும் தள்ளி ஒரு மூலையில் இருந்ததனுல், மக்களின் கூட்டம், அதனுல் ஏற்படும் தொல்லைகள் ஒன்றும் அடியோடு இருக்கவில்லை. அக்கம்பக்கத்திலுள்ள கிராமங்களில்கூடச் செய்தி தாமதமாகப் போய்ச் சேர்ந்தது. ஆனுல் உரிய நேரத்தில் வேண்டிய கூட்டம் வந்து சேர்ந்துவிட்டது. வந்தவர்கள் யாவரும் தர்ம சிந்தனை உடையவர்களாக இருந்தமையால், அவர்கள் பாவாநந்த் அவர்களுக்கு மிகுந்த மரியாதை செலுத்தினுர்கள். அதை இங்கு விவரிப்பது முடியாத காரியம்; ஒவ்வொருவரும் மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனுல் இதில் ஆச்சரியம் என்ன? எந்த மனிதன் ஒரு சல்லிக் காசையும் பெறுமல் மக்களுடைய வேலையை மனப்பூர்வமாகச் செய்தானே, மக்களின் நலமொன்றையே கருதி எவன் தனது உயிரையே தியாகம் செய்து காண்பிக்கும் உதாரணத்தை உலகத்தின் முன் வைத்தானே, அவனுக்காக யார்தாம் துக்கப்படமாட்டார்கள்?

இரண்டு மூன்று நாட்கள் கடந்து சென்றன. எங்கள் எல்லாருடைய சோகத்தின் தீவிரமும் சிறிது குறைந்தது. மற்றக் காரியங்களைப்பற்றிச் சிந்தித்துப் பார்க்கும் நிலைக்கு உள்ளம் திரும்பி வந்தது. பாவாநந்த் அவர்கள் தயாராக்கி வைத்திருந்த கத்தை

களையும் அவருடைய கடிதத்தையும் திறந்து பார்க்கவேண்டும் என்று அந்த இரண்டு நாட்களில் எவ்வளவோ முறை உள்ளம் விரும்பியது. ஆனால் அக்கா, அண்ணு, சுந்தரி அக்கா இவர்களுக்கு முன்னுல் அவற்றையெல்லாம் எடுக்க வேண்டியிருக்குமே என்று எனது விருப்பத்தை அடக்கிக்கொண்டேன். இரண்டு மூன்று நாட்களில் நான் மெதுவாக எனது நண்பர்களையும், அண்ணுவையும் ஓரிடத்தில் ஒன்ருகச் சேர்த்து, அவர்களிடம் அந்தக் கத்தைகளைப்பற்றியும், கடிதத்தைப்பற்றியும் சொன்னேன். அந்தக் கத்தைகளைப் பிரித்துப் பார்ப்பதும், அந்தக் கடிதத்தின் உறையை உடைத்து உள்ளிருக்கும் கடிதத்தைப் படித்துப் பார்ப்பதும் இப்பொழுது நமது முதல் வேலை. அதில் ஒருவேளை நாம் யாவரும் இனிமேல் எந்தெந்த வகையில் நடந்துகொள்ளவேண்டும், மடத்தின் முன்னேற்றத்துக்காக என்னென்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றிச் சொல்லியிருப்பார். எவ்வளவு சீக்கிரம் இப்பொழுது அதைப் படித்துப் பார்க்க முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் அதைப் படிப்பது நல்லது என்று நான் அவர்களிடம் சொன்னேன். அவர்களுக்கும் அது சிறந்ததாகப் பட்டது. அக்காவையும், சுந்தரி அக்காவையும் அழைத்து வந்து அவ்வாறு இன்றே செய்துவிட வேண்டும் என்ற எனது நோக்கத்தைச் சொன்னேன்.

அக்காவை அழைத்து வரும் வேலையை அண்ணுவிடம் ஒப்படைத்துவிட்டு, நான் அந்தக் கத்தைகள் முதலியவற்றைக் கொண்டு வந்தேன். உறை மிகவும் கனமுள்ளதாக இருந்தது. உள்ளே மிகப் பெரிய கடிதம் அல்லது கட்டுரை இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றிக்கொண்டுதான் இருந்தது. அதில் நமது மடத்தின் வருங்கால நிலையைப்பற்றி ஏதாவது எழுதப்பட்டிருக்கும். எனவே வார்த்தைக்கு வார்த்தை அதன்படி நாம் செய்ய வேண்டும் என்று நானும் எனது நண்பர்களும் முடிவு செய்திருந்தோம். இதனுல்தான் அதை விரைவில் அறிய வேண்டும் என்று நாங்கள் மிகவும் ஆவல் கொண்டிருந்தோம். அண்ணு அக்காவை அழைத்து வந்தார். அவருடன் சுந்தரி அக்காவும் வந்தார்.

நாங்கள் யாவரும் ஓரிடத்தில் ஒன்ருகக் கூடி உட்கார்ந்தோம். இந்த எல்லாக் காட்சிகளையும் கண்டு எனதுள்ளம் மிகுந்த உணர்ச்சிவசப்பட்டது. அந்தக் கத்தைகளைப் பிரிப்பதிலும், அந்த உறையைக் கிழிப்பதிலும் இருந்த எனது ஆர்வம் கணப்போது முற்றும் அணைந்தது. நான் ஒருமுறை எல்லார்மீதும்

கண்ணேட்டத்தை விட்டேன். பிறகு பாவாநந்த் அவர்கள் வழக்கமாக உட்காரும் இடத்தைப் பார்த்துச் சிறிதுநேரம் மௌனமாகவும், அசைவற்றும் உட்கார்ந்தேன்.

என் நிலையைப் போன்றே மற்றவர்களுடையதும் இருந்தது. ஒருவருடைய வாயினின்றும் ஒரு வார்த்தைகூடக் கிளம்பவில்லை. யாரைப் பார்த்தாலும் சரி, அவரவர் தலையைக் குனிந்து கொண்டும், நடுநடுவில் பாவாநந்த் அவர்கள் வழக்கமாக உட்காரும் இடத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டவண்ணமும் உட்கார்ந்திருந்தார்கள். அந்தக் காகித உறையைத் தூக்குவதற்கு என் கை முன் செல்லாததாயிற்று. ஆனல் இப்படிப்பட்ட நிலை எவ்வளவு நேரம் நீடிக்கும்? சிறிது நேரத்தில் நான் எனது சோகத்தின் பெருக்கைக் கட்டுக்குள் கொணர்ந்தேன். தொடர்ந்து அந்தக் கனத்த உறையைக் கையில் எடுத்தேன். அதை எடுக்கும் பொழுது எனது விரல்கள் எவ்வளவு நடுங்கிக் கொண்டிருந்தன? என்ன இருந்தாலும், அதில் நமது மடத்தின் வருங்கால நிலையின் தொடர்பில் ஏதேனும் உபதேசங்கள் இருக்கும், அதற்கு அப்பாற்பட்டு ஒன்றும் இல்லை என்று எனக்கு உறுதியாகப் பட்டது. நிற்க.

உறையை நான் கையில் எடுத்துக்கொண்டேன். அதனுடைய ஓர் ஓரத்தைக் கிழித்தேன். எடுத்துப் பார்த்தால் அதில் மூன்று வகையான கடிதங்கள் இருந்தன. முதல் கடிதத்தை நான் பார்த்தேன். அதன்மீது எனது பெயர் எழுதப்பட்டிந்தது. இரண்டாவது அக்காவின் பெயரில் இருந்தது. முதல் இரண்டு கடிதங்களைப்பற்றி எனக்கு அவ்வளவு ஆச்சரியம் ஏற்படவில்லை. ஆனல் மூன்ருவது சுந்தரி அக்காவின் பெயரில் இருப்பதைப் பார்த்ததும் மட்டும் எனக்குச் சிறிது ஆச்சரியம் ஏற்பட்டது. சுந்தரி அக்காவின் பெயரில் நேரிடையாகக் கடிதம் இருக்கும் என்று எனக்குத் தோன்றியிருக்கவில்லை என்பது மட்டுமல்ல. ஆனல், அக்காவுக்கும் அண்ணுவுக்கும்கூடத் தோன்றியிருக்கவில்லை என்று தெரியவந்தது. மேலும் சாட்சாத் சுந்தரி அக்கா அவர்களுக்கே அந்தக் கடிதத்தைக் கண்டதும் மிகவும் ஆச்சரியம் ஏற்பட்டிருக்கவேண்டும். நான் பேசாமல் அந்தக் கடிதங்களை எடுத்தேன். எனது கடிதத்தை என் மடிமீது வைத்துக்கொண்டேன்; அக்காவின் கடிதத்தை அக்காவிடமும், சுந்தரி அக்காவின் கடிதத்தை அவரிடமும் கொடுத்தேன். உடனேயே அவர்களுடைய கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் வழி

யத் தொடங்கியது. சுந்தரி அக்கா நடுங்கும் தமது கரங்களை நீட்டி எப்படியோ எனது கையிலிருந்து அந்தக் கடிதத்தைப் பெற்றுக்கொண்டார். பிறகு அதே கையால் அவற்றை அண்ணா விடம் கொடுத்தார். அண்ணா நீர் ததும்பிய கண்களுடன் அவளைப் பார்த்து, தழுதழுத்த குரலில் அவளிடம் சொன்னார்:

'உன்னுடையதை நீ பாட்டுக்கு ஒரு மூலையில் போய்ப் படி. எனக்குக் காண்பிக்கவேண்டும் என்ற தேவையில்லை. அதில் ஒன்றும் தவருக இருக்காதுதான்!' மேற்கொண்டு அவரால் பேச முடியவில்லை. அவை யாவற்றையும் பார்த்து எனக்குத் தொண்டை அடைத்துக்கொண்டு வந்தது. அதை விளக்கிச் சொல்வது கடினம். இப்பொழுது என் கடிதத்தை நான் எப்படித் தான் படிப்பேனோ என்ருகிவிட்டது. ஆனால் அதைப் படிப்பது எனது கடமையாக இருந்தது. எனவே நான் எனது உள்ளத்து வேதனையின் அழுத்தத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு எனது கடிதத்தைப் பிரித்தேன். முதலில் ஒருமுறை மனத்துக்குள்ளேயே படித்துக்கொண்டேன். அங்கே அக்காவும் தனது கடிதத்தைப் படிக்கலானார். சுந்தரி அக்கா மட்டும் தனது கடிதத்தை ஒரு பக்கம் வைத்தார். அவர் செய்ததும் உகந்த காரியமாகத் தான் இருந்தது.

கண்ணீர்ப் பெருக்கு என்னை எவ்வளவு விரைவில் கடிதத்தைப் படிக்கும்படி செய்ததோ, அத்தனை சீக்கிரம் நான் அந்தக் கடிதத்தைப் படித்தேன். இடையில் ஆயிரம் முறை எனக்குக் கண் களைத் துடைத்துக்கொள்ளவேண்டியிருந்தது. அந்தக் கடிதத்தின் மீது விழுந்த கண்ணீருக்கு அளவேயில்லை. நிற்க, நான் மனத்துக் குள்ளேயே கடிதத்தைப் படித்த பின்பு சிறிது நேரம் தாமதித் தேன். பிறகு எனது கண்களை நன்கு துடைத்துக்கொண்டு, இப் போது ஒருமுறை எல்லாரும் தெரிந்து கொள்வதற்காக அதை இரைந்து வாசித்துக் காண்பிக்கவேண்டும் என்று மனத்தில் எண்ணி, ஒருமுறை பார்வையைச் செலுத்தினேன். அக்கா தனது கடிதத்தைப் படிப்பதில் மூழ்கியிருந்தார். மற்றவர் யாவரும் முற்றும் அசைவற்று மௌனமாகி, ஆர்வம் மிகுந்த தம் கண்களால் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நான் படித்த அந்தக் கடிதம் வருமாறு:

'ஸ்ரீ அநேக ஆசீர்வாதங்கள். இராமாநந்த், இப்போது அதிக நாட்கள் நான் உயிருடன் இருக்கப் போவதில்லை. இதை நீ அறிந்துகொண்டிருப்பாய். அதை நான் உனக்குச் சொல்ல

வேண்டும் என்பதில்லை. ஆனால், நண்பனே, மனோதிடத்தை இழந்துவிடாதே. எனது உற்சாகம், எனது உழைப்பின் சக்தி, அளவுக்குட்பட்ட எனது உடற்பலம், மனோபலம் ஆகியவை இன்றுவரை செலவழிந்த அளவைக் கவனித்தால், அதன்படி இனி நான் அதிக நாட்கள் உயிருடன் இருப்பது உண்மையிலேயே முடியாததாகும் என்று எண்ணிக்கொள். ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொல்லி இப்பொழுது சில நாட்களாக நீங்கள் என்னை வற்புறுத்திக்கொண்டிருந்தீர்கள். ஆனால் நண்பர்களே, இனி நான் எத்தனைதான் ஓய்வு எடுத்துக்கொண்டாலும், அதன் பயன் எனது வாழ்நாளை நீடிக்கச் செய்வதாக இருக்காது.

'உடனிருக்கும் இரண்டு காகிதக் கத்தைகளுள் ஒன்றில் இருப்பது இன்று வரையிலான எனது சரித்திரம் ஆகும். நீயும், வேறு சில நண்பர்களும் இன்றுவரை பல முறைகள் என்னிடம் எனது வாழ்க்கைச் சரித்திரத்தின் முழு விவரங்களையும் கேட்டீர்கள். ஆனால் நான் அதை உங்களுக்குச் சொல்லவில்லை. எனது வாழ்க்கைச் சரித்திரத்தை வேறு யாரும் எழுதுவதை நான் விரும்பவில்லை என்பதுதான் இதற்குக் காரணம். நீங்கள் எழுதினால், 'அன்பு பட்சபாதத்தைக் கொண்டது' என்ற வழக்குப்படி, நீங்கள் அதில் சிலவற்றை ஒரேயடியாக மிகைப் படுத்தி எழுதுவீர்கள். எனது நெறியை விரும்பாதவர்கள் எழுதினார்களே ஆனால், நேர் எதிர்முறையில் மிகைப்படுத்தி எழுதுவார்கள் என்று நான் கருதுகிறேன். இருவகையிலும் நடக்கவேண்டாம் என்றுதான், இப்போது சில மாதங்களாக நான் எனது வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதிக்கொண்டிருக் கிறேன். எனது வாழ்க்கைச் சரித்திரம் அடியோடு எழுதப்படக் கூடாது என்பதுதான் எனது உண்மையான விருப்பம். ஆனால் அந்த விருப்பத்தை நீங்கள் நிறைவேற்றப் போவதில்லை. நான் இறந்ததுமே எனது வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதுவீர்கள். இவ்வாறு பயம் ஏற்படும் வகையில் நீங்கள் பலமுறை நேரிலும், எதிர்முகமாகவும் அதன் பேச்சை எடுத்தீர்கள். அவ்வாறு, மிகைப்பாடுகளுடன் நீங்கள் எழுதும் வாய்ப்பே வரக்கூடாது என்றுதான், என் நினைவுக்கு வந்த அளவுக்கு, வேண்டுமென்றே நானே எழுதியிருக்கிறேன். அதை உனது கையில் ஒப்படைக் கிறேன். ஆனால் அதை உபயோகப்படுத்துவதற்கு ஒரு நிபந்தனை இருக்கிறது. நான் இறந்த பின்னர் பன்னிரண்டு ஆண்டுகள் வரை இந்த எழுத்து வேலைக்குச் சூரியதரிசனம் செய்விக்கக்

கூடாது. நிச்சயமாகப் பன்னிரண்டு ஆண்டுகள் முடிந்து போனால், மேலும் நான் விதைத்த விதையினின்றும் முளை தோன்றினால், அடுத்து அந்த முளை உயிர்கொண்டு பலப்பட்டு, அது அழகிய முறையில் தளிர்த்துச் செழித்து அது மரம் என்னும் நிலையை எட்டினால், அதற்கு அழிவின் பயம் இல்லை என்ற நிலை ஏற்பட்டால், பின்னர் இவ்வளவும் நடந்த பிறகு, எனது வாழ்க்கைச் சரித்திரத்தை உலகம் அறிந்து கொள்ளவேண்டும். அதை அறிய மக்கள் ஆவல் கொண்டிருக்கிறார்கள், எனது கதை என்ற முறையில் இல்லாததும், பொல்லாததும் எழுதிக்கொண் டிருக்கிறார்கள் அல்லது அவ்வாறு உங்களை எழுதும்படி வற்புறுத்திக்கொண் டிருக்கிறார்கள் என்ற நிலை உண்மையாகவே பன்னிரண்டு ஆண்டு களுக்குப் பின்னர் ஏற்பட்டதாக உனக்கும், உனது தோழர்களுக் கும் ஒருவேளை தோன்றினால், அப்போது இந்தச் சரித்திரத்தை, அதில் குறைக்கத் தோன்றியதைக் குறைத்து, ஆனால் எதையும் அதிகமாகச் சேர்க்காமல், உலகத்தின் முன் இதை வைப்பதற்கு நான் உனக்கு அநுமதி அளிக்கிறேன்.

'ஆனால் எனக்குப் பின் சில ஆண்டுகளிலேயே நமது மடம் தரை மட்டமாகிவிடுமானால், வேறு யாருமே அந்த மடத்தில் வந்து சேரவில்லை என்றால், அணுவளவும் யோசிக்காமல் இதில் எழுதப் பட்டுள்ள சரித்திரத்தை உலகினின்றும் அழித்துவிடு. நமது வேலை இனியும் என்ன ஆகும் என்பதைப்பற்றி என்னால் நிச்சய மாக ஒன்றும் சொல்லமுடியாது. இந்த வேலை எந்த அளவுக்கு முன்னேற முடியுமோ, அந்த அளவுக்கு முன்னேறவேண்டும் என்பது எனது விருப்பம். ஆனால் இந்த வேலை இனி அழிந்து போகாது என்ற உறுதியான நம்பிக்கை எனக்கு இருக்கிறது. ஆனால் யாருக்குத் தெரியும்? இன்றுவரை நமது மக்களின் எத்தனை எத்தனை வகையான முயற்சிகள் அடியோடு அழிந்து போயின! அவற்றைப் போலவே இதுவும் ஆனால், எனது கதை உலகிற்கு முன் தோன்றவேண்டும் என்று நான் துளியும் விரும்ப வில்லை. எனவே அதை நீங்கள் வெளிச்சத்திற்குக் கொண்டுவர வேண்டாம் என்று நான் உங்களுக்கு மிகவும் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். பன்னிரண்டு ஆண்டுகள் வரை நீ, அக்கா முதலியவர்கள், அதிகமாகப் போனால் நமது மடத்தைச் சார்ந்தவர்கள்—இவர்களைத் தவிர யாருடைய கண்களிலும் அதி லிருக்கும் கடிதங்கள் தென்படவேண்டாம். பின்னர், தென் படுவது, தென்படாதது இரண்டும் எந்த விஷயத்தைப் பொறுத்

திருக்கிறது என்பதை நான் மேலே சொல்லியிருக்கிறேன். எனவே இப்பொழுது வேறு ஒன்றுமே எழுதவில்லை. நான் எழுதியபடியே நீ நடந்துகொள்வாய் என்று எனக்கு உறுதியான நம்பிக்கை இருக்கிறது. இவ்வளவும் ஒரு கத்தையைப்பற்றி ஆயிற்று. இதே கத்தையில் உனக்கு இன்னும் ஒரு கடிதமும் கிடைக்கும். அது ஏது, என்ன என்பதை எனது வாழ்க்கைச் சரித்திரத்தைப் படித்தாயேயானால் உனக்கு விளங்கும். மேலும் அதில் என்ன இருக்கிறது, என்ன இல்லை என்பதை அறிந்துகொள்ளும் ஆசை ஏற்படும். ஆனால் நீ அதை அப்படியே அக்காவின் கையில் கொடுத்துவிடு. இவ்வளவும் ஒரு கத்தையைப்பற்றி ஆயிற்று.

'இரண்டாவது கத்தையில் இருப்பது, ''நாட்டின் முன்னேற்றமும், வீழ்ச்சியும்—இவற்றின் ஆராய்ச்சியும், காரணங்களும்'' என்ற பொருளின்மீது என்னால் எழுதப்பட்ட கட்டுரை ஆகும். இந்தக் கட்டுரையை எழுதுவதில் நான் பல ஆண்டுகளைச் செலவழித்தேன் என்று சொன்னாலும் பொருந்தும். இன்னமும் அது என் மனம் விழைந்தபடி முடிவுறவில்லைதான். ஆனால், எனக்குப் பிறகு அது விரைவிலேயே பிரசுரிக்கப்படவேண்டும் என்று நான் மிகவும் விரும்புகிறேன். ஏனெனில், அதில் நான் ஏற்றுக்கொண்ட வழியை ஆமோதித்து எழுதியிருக்கிறேன். நாட்டின் அரசாங்க முன்னேற்றத்திற்கும், பௌதிக வாழ்வின் முன்னேற்றத்திற்கும் சாதனங்கள் தேவைப்படுகின்றன. அவற்றிலிருந்து ஒழுக்கம், தர்மம் ஆகிய இரு நிலைகளிலும் முன்னேற்றத்துக்கு வெவ்வேறு காரணங்கள் தேவைப்படுகின்றன.

'மேலும் பத்தொன்பதாவது நூற்றாண்டுக்குப் பின் இப்போது வேறு வகைப்பட்ட சாதனங்களின் தேவை இருப்பதால், அதன் தரப்பிலேயே முயற்சிகள் செய்யப்படவேண்டும். இப்பொழுது இனிமேல் நாம் செய்யப் போகும் போர்கள் துப்பாக்கிப் போர்கள் அல்ல, எண்ணங்களின் போர்கள். நமது பகைவர்கள் இப்போது காட்டு மனிதர்களோ அநியாயம் செய்யும் அரசர்களோ அல்லர்; ஆனால், நமது அறியாமைதான். மேலும் அந்தப் பகைவனை வெல்வதற்கு அறிவின் பிரசாரமே தேவை. சிறந்த தீவிரமுடைய முன்னேற்றத்தின் விரைவிற்கான சாத்திரம் முதலான கருத்துக்களை நான் விளக்கியிருக்கிறேன். இப்பொழுது அறிவாளிகள், இலட்சியவாதிகள் ஆகியவர்களுடன் தான் நமது போர் நடக்க இருக்கிறது. இதற்காக நாமும் அறிவாளிகள் ஆகவேண்டும். மேலும் அறியாமையின் இருளில்

கிடக்கும் நமது சகோதரர்களையும் அறிவின் ஒளியில் கொண்டு வர முயலவேண்டும். அநேகமாக நமக்குள் சிலர், அவர்களை அறிவாளியாக ஆக்குவதில் தமது வாழ்வு முழுவதையுமே செலவழிக்க வேண்டியிருக்கும். இதைத்தான் நான் சிறப்பாக அதில் விளக்கியிருக்கிறேன். சரித்திரத்தைப்பற்றிய எனது அறிவு சிறப்பாக ஒன்றும் இல்லை. ஆனால், எவ்வளவு விவரங்கள் எனக்குத் தெரிந்தனவோ, அவை யாவற்றையும் கொடுத்து, இன்று ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உலகம் அறிவின் பலத்தின் ஆதாரத்தில்தான் முன்னேறிக்கொண்டிருக்கிறது என்பதை நிரூபித்துக் காண்பித்திருக்கிறேன். ஒரு காலத்தில் அறிவின் இடமாக நமது ஆரியநாடு இருந்தது. பின்னர் எகிப்து, அதன் பின்னர் ரோம் நாடு, பிறகு பிரெஞ்சு தேசம், ஜெர்மனி, இங்கிலாந்து, அமெரிக்கா முதலான நாடுகள் இந்த இடத்தைப் பிடித்துக்கொண்டன. இப்பொழுது ஜப்பானுக்கு இந்தக் கௌரவம் ஏற்பட்டிருக்கிறது. காலத்தின் சக்கரத்தைப்போல் சுழன்றுகொண்டே அறிவும் தனது இடத்தை மாற்றி வந்திருக்கிறது. ஓர் இடத்திலிருந்து புறப்பட்டு அது வேறு இடத்திற்குச் சென்றது. அதன் காரணமாக மூல இடத்தில் வீழ்ச்சி ஏற்பட்டது. ஆனால், அறிவுதான் என்றும் அழியாதது, என்றும் வளர்ந்துகொண்டே போவது. எந்த இடத்திலிருந்து அறிவு மறைந்ததோ, அந்த இடத்தின் சீரும் சிறப்புங்கூட தரைமட்டமாகிவிடுகிறது. இந்த எனது தத்துவத்தின்படி நான் எனது ஊகங்களை ஒன்று சேர்த்து, நான் எந்த வழியை வகுத்திருக்கிறேனோ அதுவே மிகச் சிறந்தது என்று நிரூபிக்க முயன்றிருக்கிறேன். எனவே, இந்தப் புத்தகத்தை நீ உனக்கு வேண்டிய அளவு விரைவில் வெளிப்படுத்து. அந்தப் புத்தகத்தினால் நமது கழகத்திற்கு நன்மை ஏற்படலாம். இல்லையென்றாலும், அதனால் கெடுதல் ஒன்றும் விளையப் போவதில்லை. புத்தகம் பயனற்றுப் போய்விட்டது என்று எண்ணிப் பேசாமல் உட்காரவேண்டியிருக்கும், அவ்வளவுதான். நமது எண்ணங்களை மக்களுக்கு முன்னால் வெளிப்படுத்தவேண்டும் என்பதுதான் நமது கடமை. அதைச் செய்வதால் கிடைக்கப் பெறும் ஆறுதலும் ஒரு பரிசுதான்.

'இப்பொழுது மூன்றாவதாகச் சொல்லவேண்டியது நமது மடத்தைப்பற்றி. நான் எவ்வளவு நாட்கள் உயிருடன் இருப்பேனோ அவ்வளவு நாட்கள் அதன் உயர்வுக்காக எத்தனை முயற்சிகளைச் செய்யமுடியுமோ, அத்தனையும் செய்வேன். ஆனால்,

எனக்குப் பிறகு நான் இந்த வேலையை உங்கள் நான்கைந்து பேர்கள்மீது ஒப்படைக்கிறேன். இராமாநந்த், ஒருவருக்கு மேற் பட்ட ஆட்கள் ஓரிடத்தில் வேலை செய்யும்பொழுது அங்கு எண்ணங்களில் வேறுபாடு ஏற்படத்தான் செய்யும் என்பது எனக்குத் தெரியும். ஆட்களின் எண்ணிக்கையின் அளவில் எண்ணங்கள் இருக்கத்தான் செய்யும். எல்லாருடைய எண்ணங் களையும் ஒன்றுக்கவேண்டும் என்பது நமது மடத்தின் நோக்கம் அல்ல. எண்ண வேறுபாடுகளில்தான் வாழ்வின் சாரமே இருக் கிறது. எனவே, எண்ணத்தில் ஒருமை இல்லையெனில் பாதக மில்லை. வேண்டியது எல்லாம் ஒன்றுதான். நோக்கம் ஒன்றுக இருக்கவேண்டும் என்பதுதான் அது. நமது நாட்டுக்குச் சேவை செய்யவேண்டும், நமது நாட்டின் நலத்தைச் சாதிக்கவேண்டும் என்பதுதான் நோக்கம். அந்த நோக்கத்தைச் சாதிப்பதற்காக நமது உடலையும், உள்ளத்தையும் அர்ப்பணிக்கவேண்டும். வயிற் றுக்கு வேண்டியதைக் காட்டிலும் அதிகமாகக் கிடைக்கப் பெற்ருல் அதை மடத்துக்குக் கொடுத்து, அதை மடத்தைச் சார்ந்ததெனக் கொள்ளவேண்டும். மடத்துக்காகச் சேர்ந்ததை எவ்வளவு அதிகரிக்க முடியுமோ அவ்வளவு அதிகரிக்கவேண்டும். இவற்றின்படி யார் நடப்பாரோ, இவற்றை அனுசரிப்பதாக யார் தீட்சை எடுத்துக்கொள்வாரோ, அவரை நமது சகோதரர் என்று கருதவேண்டும். எனது நோக்கம் என்ன என்பதை மீண்டும் மீண்டும் நான் உங்களுக்குச் சொல்லவேண்டும் என்ப தில்லை. எல்லாம் தெரிந்துகொண்டிருக்கிறீர்கள். அதன்படி செய் யுங்கள். இரவும் பகலும் உங்களுடைய வேலைத்திறன், அறிவுத் திறன், பேச்சுத்திறன் யாவற்றையும் தாய்நாட்டிற்காகத் தியாகம் செய்யுங்கள். இருபத்துநான்கு மணிநேரத்தில் எவ்வளவு நேரம் இந்த வேலையைச் செய்வதற்கான உடற் பாதுகாப்பிற்குத் தேவைப்படுமோ, அவ்வளவே அதற்காகச் செலவழிக்க வேண்டும். மற்ற எல்லா நேரத்தையும் ஏற்றுக்கொண்ட வேலை யில் ஈடுபடுத்துங்கள். இவ்வளவுதான் நான் உங்களிடம் கடைசி யாகக் கேட்டுக்கொள்வது. நீங்கள் வருங்கால நிலையை உரு வாக்கப் போகும் பெற்ருேர்கள்; உங்களுடைய பொறுப்பை உணர்ந்துகொண்டு வேலை செய்யுங்கள்.

'இன்ன இன்ன விஷயங்கள், இன்ன இன்ன வகையில் தான் நிகழும் என்று நம்பிக்கைகொண்டு நீங்கள் உங்களுடைய முயற்சியைச் செய்யுங்கள். ஆனுல், அந்த நம்பிக்கையில் மண்

விழுந்துவிட்டது, ஏமாற்றம் ஏற்பட்டது என்பதற்காக மேற்கொண்ட காரியத்தைக் கைவிட்டு விடாதீர்கள். இராமாநந்த், ஏற்றுக்கொண்ட வேலே ஐந்து அல்லது பத்து ஆண்டுகளில் முடியக்கூடியது அல்ல. எப்படி வயலில், நிலத்தில் மிகச் சிறந்த எருவைப் போட்டு நிலத்தைச் சீர்ப்படுத்த வேண்டியிருக்கிறதோ, அதேபோல்தான் இதுவும். முதல் முதலில் வேலே செய்யும் உழைப்பாளியின் முயற்சிகள் இந்த எருவைப் போன்றவைதான். சிறந்த விளேச்சலுக்காகச் சில வேலேயாட்களின் முயற்சிகளேயும், வாழ்வையுமே கொடுக்கவேண்டியிருக்கும். நமது நாடென்னும் பூமி இப்பொழுது பல ஆண்டுகளாக முற்றும் தரிசு நிலமாகக் கிடந்திருந்ததால், விளேச்சலற்றதாக ஆகியிருக்கிறது. மற்ற நாட்டினர் இப்பொழுது பல நூற்றுண்டுகளாக இந்தக் காய்ந்த தரிசு நிலத்தில் ஆட்சி செலுத்தி வருகிருர்கள். அந்த நிலப் பரப்பைச் சீர்ப்படுத்தி, மீண்டும் பயிர் செழித்ததாக ஆக்க எவ்வளவு உழைப்பாளர்களின் தேவை இருக்கிறது என்பதைப்பற்றி ஊகிப்பதுகூடக் கடினம்.

'நண்பர்களே! ஓர் ஆண்டு, இரண்டு ஆண்டுகள், ஐம்பது ஆண்டுகள் என்ருல் நாட்டின் வாழ்நாளில் ஒரு நாள், இரண்டு நாள், ஒரு மாதம் அல்லது ஓரிரு ஆண்டுகளேப் போலாகும். எங்ஙனம் குழந்தைக்கு இன்று சிறிது பாலே ஊட்டி நாளே அவன் எவ்வளவு பருமனுக ஆகிருன் என்று பார்த்து, பிறகு ஒரு வேறுபாடும் காணப்படவில்லே என்று வருந்துவதுபோன்ற பைத்தியக்காரத்தனம் வேறு இல்லேயோ, அதுபோலவே உங்களேயும், என்னேயும் போன்ற ஆட்கள் நாட்டின் நலத்துக்காக நான்கைந்து ஆண்டுகள் சிறிதளவு உழைத்துவிட்டு, என்ன நன்மை ஏற்பட்டிருக்கிறது என்பதை ஆய்ந்து பார்க்கத் துவங்கி, அதில் ஒன்றும் புலப்படவில்லே என்ருல் அதன் காரணமாகப் புலம்புவதும் நிகரற்ற பைத்தியக்காரத்தனந்தான் ஆகும். இராமாநந்த், உன்னேயும், என்னேயும் போன்ற நூற்றுக்கணக்கான மக்கள் வாழ்நாள் முழுதையுமே செலவு செய்வார்களேயாளுல், அதுவும் ஒருவர்பின் ஒருவராகத் தொடர்ந்து, அப்போதுதான் நாடு ஒரு சில அடிகளாவது முன்னேறிஞலும் முன்னேறும். சிறிய பையன்கள் மாங்கொட்டையை இப்பொழுது புதைத்து, கணப்பொழுதில் அதனின்றும் முளே தோன்றியதா, இல்லேயா என்று பார்ப்பதற்காகக் கிளறிப் பார்க்கிருர்களே, அதுபோல் செய்வதால் ஏதாவது பயன் ஏற்படுமா? இந்த விஷயத்தைப்பற்றி எண்ணிப்

பாருங்கள். நாம் இப்பொழுது செய்யும் முயற்சியினால் ஏற்படும் பயன்கள் நமக்குப் பின்னால் ஒரு நூற்றாண்டில் வரும் தலைமுறைக்குக் காணக் கிடைக்கும். ஆனால், அந்தப் பலன்கள் அந்தச் சமயத்தில் மிக நல்லவையாக இருக்கவேண்டும் என்பதற்காகவே உழைப்பின் தேவை இருக்கிறது—அவ்வாறு உழைக்க வேண்டியதும் நமது கடமையாகும். இந்த விஷயத்தை எப்பொழுதும் மறக்காமல் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.

'நண்பர்களே, நான் சொல்லும் இந்த விஷயங்கள் எல்லாம் என்னவோ என்று நினைக்காதீர்கள். இவை யாவற்றையும் நன்கு உள்ளத்தில் கொண்டுதான், நானும் இந்த வேலையில் ஈடுபட்டேன். அதேபோன்று நீங்களும் அவற்றை நன்கு நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். அவற்றை நினைவில் வைத்துக் கொண்டு செய்யவேண்டியதைச் செய்யுங்கள். உடனுக்குடனேயே பலனை எதிர்பார்த்தால் அல்லது கற்பனை செய்யப்பட்ட ஆசையின் அடிப்படையில் முயற்சிகளால் ஆன கட்டிடத்தைக் கட்டினால், அந்த நம்பிக்கை ஏமாற்றத்தில்தான் முடியும். அப்பொழுது உங்களுடைய நம்பிக்கை தளர்ந்து, முயற்சிகளால் எழுப்பப்பட்ட கட்டிடம் சரிந்து விழுந்துவிடும் என்பது நிச்சயம் என்று கொள்ளுங்கள். இந்த விஷயங்கள் உங்கள் பார்வையிலிருந்து மறையக்கூடாது என்பதற்காகவே நான் இவற்றை மீண்டும் மீண்டும் சொல்கிறேன். நமது முயற்சிகளின் பலன் கிடைக்கத்தான் போகிறது. ஆனால், அது நமக்குக் கிடைக்கப் போவதில்லை. இரண்டு, மூன்று தலைமுறைகளுக்குப் பின்னர் வரப்போகும் நமது கொள்ளு—எள்ளுப் பேரக் குழந்தைகளுக்குக் கிடைக்கும். இதனாலேயே நாம் விரைந்து முயற்சி செய்யவேண்டும் என்று மனத்தில் கொண்டு செய்ய வேண்டியதைச் செய்யுங்கள்.

'இந்தக் கடிதத்தில் நான் முக்கியமாக உங்களுக்குச் சொல்ல விரும்புவது இதுதான்: தன்னையே தியாகம் செய்பவனைத் தவிர வேறு எந்த மனிதனும் இந்த வழியில் அடியெடுத்து வைக்க வேண்டாம். பிள்ளை குட்டிகள், மனைவி, தாய் தந்தையர் முதலானவரின் மோக வலையில் இருந்துகொண்டே என்னால் முடிந்ததை நான் செய்வேன் என்று சொல்லுபவர்கள் மடத்தில் நுழைந்து, மடத்துக்கு அழிவைக் கொண்டுவருவதைத் தவிர வேறு ஒன்றும் செய்யப் போவதில்லை. அந்த மோக வலையில் இருந்தவாறு நற்காரியங்களைச் செய்யவே முடியாது என்று நான்

சொல்லவில்லை. முடியும்! நற்காரியத்தைச் செய்ய வேண்டும் என்றால், எந்த நிலையில் இருந்தும் செய்யமுடியும். ஆனால், நமது நோக்கத்தின்படி அதை முற்றும் முறைப்படி செய்ய வேண்டும் என்றால் அது முழுத்தியாகம் செய்தாலொழிய முடியவே முடியாது. இராமாநந்த், நீ உனது முழுத் தியாகத்தையும் செய்திருக்கிறாய். நீ உனது தாய் தந்தையரின் பாசத்தின் வலையை அறுத்து எறிந்துவிட்டு, இந்த வழியில் வந்திருக்கிறாய். உனது அந்தப் பெருந்தன்மையான காரியத்தை நான் என்னென்று புகழ்வேன்! ஆனால், இவ்வளவுமட்டும் சொல்கிறேன்: தாய் தந்தையரின் பாசத்தைக் காட்டிலும், மிகவும் அதிகமான கவர்ச்சியைக் கொண்ட பாசம் அதனின்றும் தன்னை விடுத்துக் கொள்ள அளவற்ற மனோதிடம் வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட பாசத்தினின்றும் தன்னை விடுவித்துக்கொண்டும் மக்கள் நமது இந்த வேலையில் ஈடுபட வருவார்களேயானால், மிக மிக விரைவில் நமது வேலை வளர்ச்சி பெறும். இதற்காக வென்று எவ்வளவு பேர் மணமின்றி இருக்க முற்பட்டு, நமது மடத்தில் வந்து சேருவார்களோ, அவ்வளவு பேரையும் ஒன்றுசேர்க்க நீ முயற்சி செய். அவர்களுடைய வேலைத்திறன் எவ்வளவு பயன்படுமோ, அவ்வளவு வேறு யாருடையதும் பயன்படப் போவதில்லை. இப்படிப்பட்ட இளைஞர்கள் தாம் நமது வேலைக்குகந்த ஆதாரக் கம்பங்கள் என்று நீ எண்ணிக் கொள். மேலும் இப்படிப்பட்ட தாங்கும் கம்பங்களைப் போன்றவர்கள் எந்த அளவில் கிடைப்பார்களோ, அவர்களை ஒன்றாகத் திரட்டு. நண்பனே, இராமாநந்தா! சந்நியாச தீட்சை பெற்ற மேதாவிச் சான்றோர்கள் பழங்காலத்தில் பரமார்த்தத்தை அடைந்து முக்திப்பேறு பெற்றுக் கொண்டிருந்தார்கள்.

'பரமார்த்தம், முக்தி இந்த இரு மகத்தான பொருள்களைப் பெறுவதற்காகத்தான் உற்றார் உறவினரை விட்டுப் பிரிந்து அறிவுடைச் சான்றோர் சந்நியாசம் பெற்றுக்கொண்டிருந்தார்கள். இப்போது நாமும் இந்த இரண்டு பொருள்களையும் அடைவதற்காகவே மிகுந்த அறிவாளிகளும் உழைப்பில் தேர்ந்தவர்களுமான இளைஞர்களுக்கு அழைப்பு விடுகிறோம். தன்னலத்தைத் தியாகம் செய்து, நாம் வகுத்த வழியில் அவர்களை இழுப்பதன் நோக்கமே இந்த மகத்தான பொருள்களின் இலாபத்திற்காகத் தான். பரமார்த்தம் என்பது எது? நமது நாட்டின் எக்காலத்திற்குமான நலந்தான் பரமார்த்தம். முக்தி என்பது எது? நமது

நாட்டின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலைதான் முக்தி. இந்த இரண்டு நிலையை அடைவதற்காக ஒய்வற்ற உழைப்பு செய்வதைப் போன்ற சிறந்த காரியம் வேறு எது உண்டு? நண்பர்களே! எனக்கு இன்னும் நூறு ஆண்டுகள்வரை வாழ்வு கிடைத்தாலும், அதையும் நான் முழுமையாக மேலான காரியங்களைச் செய்வதிலேயே செலவழிப்பேன். மேலும், ''மறுவாழ்வு கிடைக்கிறது, அது ஒரு வாழ்வின் முழுமையடையாத விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளும் வகையில் ஏற்படுகிறது'' என்பது உண்மையாக இருக்குமானுல், நான் சில நாட்களில் இறந்து போனுல், மீண்டும் பாரத நாட்டிலேயே எங்கேயாவது நான் பிறவி எடுத்து மறுபடியும் நமது மடத்தில் உழைப்பதற்கென்றே வருவேன் அல்லது வேறு எங்கேயாவது இப்படிப்பட்ட மடத்தையே நிறுவனம் செய்வேன். அதுமட்டுமல்ல, எனது உள்ளத்திலுள்ள இந்தப் பரமார்த்தம், முக்தி இரண்டும் கிடைக்கும் வரையில் நான் இவ்வாறே மீண்டும் மீண்டும் பிறவி எடுத்துக்கொண்டேயிருப்பேன் என்று நான் நம்புகிறேன்.

'இராமாநந்த், ந்ருஸிம்ஹாநந்த், நண்பர்களே, எனது இந்தக் கடிதம் இறுதியானது. நான் சீக்கிரமே இறக்கப் போகிறேன். ஆனுல் எனது ஆத்மா எப்பொழுதுமே உங்கள் கூடவே இருந்து கொண்டு எப்படி வேலை நடந்துகொண்டிருக்கிறது என்று கவனித்து வரும். எனது முழு நம்பிக்கையும் பிணைந்திருக்கும்; உங்களுக்கு இன்றுவரை என்மீது இருக்கும் அன்பை நிரூபித்துக் காண்பிக்கவேண்டும் என்று உண்மையாகவே எண்ணம் இருக்குமானுல், நீங்கள் இந்த மடத்தை, இந்தச் சம்பிரதாயத்தை நடத்துங்கள். உடலால், உள்ளத்தால், வாக்கினுல் அறிவைப் பரப்புங்கள். மக்களின் நிலையைப்பற்றி அரசாங்க அதிகாரிகளின் உள்ளத்தில் வேண்டுமென்றும், இயற்கையாகவும் இடம் பெற்றுள்ள அறியாமையை முற்றும் அகற்றிவிடுவதற்காக முயற்சி செய்யுங்கள். இன்றுவரை ஒன்றும் நடக்கவில்லை. ஆனுல், நீங்கள் மேலும் மேலும் அதிகமான முயற்சியைச் செய்ய ஆரம்பித்ததுமே, ஏழை எளியவர்களிடம் கலந்து அவர்களுடைய விருப்பம், நம்பிக்கை, தேவை ஆகியவற்றை அரசாங்க அதிகாரிகளுக்குத் தெரிவிக்கத் தொடங்கியதுமே, உங்களுக்கு அரசாங்க அதிகாரிகளிடமிருந்து அளவற்ற இடையூறுகள் ஏற்படும். உங்களுக்கு எதிராகச் சூழ்ச்சிகளைச் செய்வார்கள். நீங்கள் அரசாங்கத்தின் துரோகிகள், நீங்கள் புரட்சிக்காரர்கள், நீங்கள் ஆங்கிலே

யரின் ஆட்சியை இங்கிருந்து அழிக்கப் பார்க்கிறீர்கள், மக்களின் மனத்தைக் கலைக்கிறீர்கள் என்றெல்லாம் உங்கள்மீது குற்றம் சாட்டப்படும்.

'சமயம் வந்தால் இப்படிப்பட்ட அல்லது வேறு ஏதாகிலும் இல்லாததும், பொல்லாததுமான இழிவான குற்றச்சாட்டினால் சிறை வாசம் அநுபவிக்க வேண்டி வரலாம். அதுமட்டுமல்ல, ஒருவேளை ஒரு சிலர்மீது ''பீனல் கோடி''லிருக்கும் மிகவும் தகாத குற்றத்தைச் செய்ததாகப் பொய்யான குற்றத்தைச் சாட்ட ஆட்களை ஏற்பாடு செய்து உங்கள் மடத்தின் பெயரைக் கெடுக்கவும் செய்யக்கூடும். மடத்தைப்பற்றிய மற்ற விஷயங் களிலோ உங்களுக்கு ஊராரின் பழிச் சொற்களைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டிவரும். இந்த எல்லா விஷயங்களையும் கவனத்தில் வைத்துக்கொள்ளுங்கள். இன்று இது நமது வேலை யின் வெறும் துவக்கந்தான். எனவே, இன்னும் இவற்றின் உதயம் கூட ஆகவில்லை. ஆனால் நமது மடம் பலம் பெறப் பெற, இந்த விஷயங்களும் தீவிரம் அடைந்து செல்லும். அப் பொழுதுதான் நடக்க வேண்டிய உண்மையான போரும் ஆக வேண்டிய உண்மையான பரீட்சையும் தொடங்கும். சரியான இக்கட்டான நேரத்தில் நான் இருக்கமாட்டேனே என்ற காரணத் தினால்தான், நான் இறக்கப் போவதை எண்ணி எனக்கு வருத்த மாக இருக்கிறது. ஆனால், நான் உங்களுக்குச் சொல்லி வைக் கிறேன்; ஜாக்கிரதைப்படுத்தி வைக்கிறேன்; உங்களுடைய தைரியத்தின் மீது தண்ணீர் ஊற்றவேண்டும் என்பதற்காக அல்ல. ஆனால் அதன் மீது காற்று பட்டு, அது இன்னும் பற்றி எரிய வேண்டும் என்பதற்காக இவை யாவற்றையும் நான் உங்களுக்கு முன்னதாகவே சொல்லி வைக்கிறேன். நான் சொல்வதுபோல் நிச்சயம் நடக்கப் போகிறது என்றே நீங்கள் நூறுமடங்கு தைரி யத்துடன் முன்னால் அடியெடுத்து வைக்கவேண்டும். எங்கேயா வது குளங்களில் நீர் இல்லை, நீரை வரவழைக்க வேண்டும் என் றால், அந்த இடத்திலுள்ள பிசாசுகளுக்குப் பலி கொடுக்க வேண்டும் என்று முன்காலத்தில் ஒரு நம்பிக்கை இருந்தது.

'மேலும், இவ்வாறு பலி கொடுக்கும் முறை வந்தால் யாரேனும் பரோபகாரி ஆண் மகன் தனது உயிரைப் பலி கொடுக்க முற்படத்தான் செய்வான் என்றபடியே இப்பொழுதும் இருக் கிறது. நாம் மேற்கொண்ட வேலை நிறைவேற வேண்டுமானால், மக்களின் நிந்தனை, தன்னலம் என்ற இரண்டு கொடூர

மான பிசாசுகளுக்குப் பலி வேண்டும். அது நாமாக இருக்கலாம் என்றால், நமக்குப் பின்னர் வரும் பல தலைமுறைகள் செழித்துக் கொழித்து இருப்பது நடக்கக் கூடிய காரியமாகும்.

,நான் இவ்வாறு எழுதுவன எல்லாம் வெறும் படபடப்பு என்று தோன்றும். ஆனால் என்ன செய்வேன்? எனது உள்ளத்தில் இந்த எண்ணங்கள் இடையறாது தோன்றிக்கொண்டே யிருக்கின்றன. மேலும் அவை எனது மண்டையில் இவ்வளவு குழப்பத்தை உண்டாக்கி இருக்கின்றன. அவற்றை எந்தெந்த வகையில், எத்தனை முறைகள் சொல்லுவேன் என்று ஆகிவிட்டிருக்கிறது. இப்பொழுது மீண்டும் இவ்வளவு பேசுவதற்கு அல்லது எழுதுவதற்கு என்றுமே வாய்ப்பு கிடைக்கப் போவதில்லை என்று தோன்றுகிறது. எனவே, மனத்தில் இருப்பதையெல்லாம் ஒரு முறை வெளியில் கக்கிவிடவேண்டும் என்று நான் நினைத்தேன். ஆகவே, நண்பர்களே, இராமாநந்த், ந்ருஸிம்ஹாநந்த், எல்லாவற்றையும் எழுதி நான் உங்களுக்கு உபதேசம் செய்திருப்பதற்காக என்னை மன்னித்துவிடுங்கள். அதில் எந்தப் பகுதி வீணானது என்று தோன்றுகிறதோ அவற்றை நீக்கிவிடுங்கள். ஆனால், முக்கியமான பகுதியை எடுத்துவிடாதீர்கள். அதை எப்பொழுதுமே நினைவில் வைத்துக்கொண்டு வேண்டியதைச் செய்யுங்கள்; வேண்டியதைப் பொறுத்துக்கொள்ளுங்கள். ஆனால் இந்த விரதத்தை, இந்தத் தீட்சையைத் தடையின்றிப் பாதுகாத்துச் சொல்லுங்கள்.

'அவ்வளவுதான். இதற்குமேல் எனக்கு ஒன்றும் சொல்வதற்கு இல்லை. இந்தக் கடிதத்தைப் பிரித்துப் படிக்கும்பொழுது, எனது உயிர் உடலைவிட்டுப் பிரிந்து சென்றிருக்கும். எனது என்று ஒரு ''நினைவு'' மட்டும் உங்களிடம் தங்கியிருக்கும். அந்த ''நினைவு'' உங்களிடம் என்றென்றும் இருந்து, வேலையை நீங்கள் முன்னால் நடத்திச் செல்லவேண்டும். இதுதான் எனது கடைசி வேண்டுகோள், இதுதான் கடைசியாக நான் கேட்பது, இதுதான் கடைசிப் பிரார்த்தனை.'

எங்களைத் தவிர மற்றவர்களுக்கு இந்தக் கடிதத்தின் முக்கியத்துவம் ஏதாவது தோன்றினாலும் சரி, தோன்றவில்லையானாலும் சரி, எங்களுக்கு அந்தக் கடிதம் ஒரு தர்ம நூல் என்றுதான் தோன்றியது. அதில் செய்யப்பட்டிருக்கும் உபதேசம் எங்கள் இதயத்தின்மீது பொறித்துவிட்டாற்போல் படிந்திருக்கிறது. அந்தக் கடிதத்தைப் படிக்கும்வரை பாவாநந்த் எங்களது

தலைவர் என்று மட்டும் எங்களுக்குத் தோன்றியிருந்தது. அந்த நாளிலிருந்து அவர் எங்களது தர்ம குரு, பழமையான குரு, பரம குரு எனத் தோன்றலாயிற்று. அவரது அந்த உபதேசத்தைச் செயலாக்குவது என்று நாங்கள் யாவரும் உறுதி செய்து கொண்டோம்.

'தன்னலமற்ற பாவாநந்த் எங்களது தர்மத் தலைவர். அவரது சமயத்திற்கேற்ற உபதேசங்கள், மேலும் சிறப்பாக இந்தக் கடிதத்திலுள்ள உபதேசங்கள், எங்களுடைய தர்ம க்ரந்தங்கள். அவரது பிற்கால வாழ்க்கைச் சரித்திரமும் அப்படித்தான். அதற்கு ஏற்றவாறு நாங்கள் எங்களது வேலையை நடத்துவதென உறுதி செய்துகொண்டோம் என்பது மட்டும் அல்ல; மிகுந்த சிறப்புடன் பின்னர் அந்த வேலையைச் செய்தும் இருக்கிறோம். நான் சொல்வதில் அடங்கியுள்ள உண்மை மக்களுக்கு இன்று விளங்கப் போவதில்லை. நான் எழுதுகின்ற இவை யாவும் மிகைப்படுத்தி எழுதியனவாகத் தோன்றும். ஆனால், எங்களுடைய இந்த மடத்தைப்பற்றியும், நாங்கள் மேற்கொண்ட வேலை வளர்ந்து சென்ற கதையையும் யாரேனும் என்றாகிலும் எழுதினால், அப்பொழுது நான் சொல்வதில் அடங்கியிருக்கும் உண்மையின் அநுபவம் ஏற்படும்.

'இத்தனை ஆண்டுகளில் எடுத்துச் சொல்லும் அளவுக்கு ஒன்றும் நடக்கவில்லைதான்; அவ்வாறு நடக்காமல் இருப்பதற்கான காரணங்களை, பாவாநந்த் அவர்களின் கடிதத்தில் முன்பே தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. என்றாலும், மடம் மிகவும் நல்ல நிலையில் இருக்கிறது. இன்று மடத்தைச் சார்ந்தவர்களுடைய எண்ணிக்கையும், விரதத்தை மேற்கொண்டவர்களுடைய எண்ணிக்கையும் எவ்வளவோ பெருகியிருக்கிறது. மடத்தின் நான்கைந்து கிளைகளும் தோன்றியிருக்கின்றன.

'பாவாநந்த் தமது இறுதிக் கடிதத்தில் கடைசிக் கடைசியாக மடத்தைச் சேர்ந்த பொறுப்பாளிகளுக்கு முன் தோன்றக்கூடும் இன்னல்களைப்பற்றி என்ன என்ன குறிப்பிட்டிருந்தாரோ, அவை யாவும் வார்த்தைக்கு வார்த்தை உண்மையாகி, பலரும் தொல்லைக்கு ஆளானார்கள். எண்ணிக்கை பெருகினால், அங்கு எண்ண வேறுபாடும், தொடர்ந்து நம்பிக்கைத் துரோகமும் ஏற்படுவதற்கு இடமுண்டு. அதன் காரணமாகவும் பொறுப்பாளிகளுக்கு முன் பெருந்தொல்லைகள் ஏற்படுகின்றன. அவ்வாறும் நிகழ்ந்தது. ஒரு சிலர் நல்ல மாறுதலும் அடைந்

தார்கள். அவர்கள் எல்லாருடைய வாழ்க்கைச் சரித்திரமும், தற்காலத்து அரசாங்கத்தின் நிலேயும், சமூகத்தின் நிலேயும், அதிலும் குறிப்பாக அரசாங்கத்தின் நிலேயின் சரித்திரமாகும். இந்தச் சரித்திரம் வெளியிடப்பட்டால் மிகவும் நன்ருயிருக்கும். நடந்தவற்றின் காரணமாக மடத்துக்கு ஒரு தீங்கும் ஏற்படாமல், மாருக அவற்றிஞலேயே மடத்தின் புகழ் ஓங்கி வந்தது.

'பாவாநந்த் அவர்களின் நிபந்தனேயின்படியே சரித்திரத்தைப் பிரசுரிப்பதற்கு முற்பட்ட காலம் எப்பொழுதோ கடந்து சென்று விட்டது. இந்தச் சரித்திரத்தைச்சீக்கிரமே அச்சடித்துப்பிரசுரிக்க வேண்டும் என்று என் மனம் எப்போதிலிருந்தோ விரும்பிக் கொண்டிருந்தது. ஆனுல், கட்டளேயை மீறிய குற்றத்தை ஏற்றுக் கொண்டு எனது விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வது சரியல்ல என்று மனத்தில் எண்ணி, பாவாநந்த் அவர்கள் எழுதியவாறே குறிப்பிட்ட காலம் முடிவடையக் காத்திருந்தேன். அவ்வளவு மட்டுமே அல்ல, மேலும் சில ஆண்டுகளும் கடந்து செல்லக் காத் திருந்தேன். மடத்தினுடையதும், எந்த வேலேகளுக்கென மடம் நிறுவப்பட்டதோ அவற்றினுடையதும் சிறந்த முன்னேற்றம் ஏற் பட்டுக்கொண் டிருக்கிறது என்பது கண்களுக்கு முன்ஞல் தெளி வாகத் தெரிகிறது. எனவே இப்போது இந்தச் சரித்திரத்தைப் பிரசுரித்தேன். இந்த வாழ்க்கைச் சரித்திரம் யாருடையதோ, அவரே இதை எழுதியிருக்கிருர். அதிலும் பாவாநந்த் அவர்களேப் போன்ற பணிவுடைய மனிதர் எழுதியிருக்கிருர். எனவே இதில் எந்த வகையான புகழின் மிகைபாடும் இருக்கமுடியாது, இல்லவும் இல்லே. ஒரு குறைதான் உண்டு. அது இதுதான்— எங்கிருந்து அவருடைய வாழ்வின் வேலேகள் துவங்கியனவோ, அங்கிருந்து அவர் தற்புகழ்ச்சிக்குப் பயந்துகொண்டு மிகவும் குறைவாகவே எழுதியிருக்கிருர். அதில் சிறு குறிப்புகள் முதலிய வற்றைக் கொடுத்து அல்லது முஃனயிலேயே அதைக் குலுக்கி வடித்துச் சீர்ப்படுத்தி, மிகைப்படுத்தி அதை ஒழுங்காக ஆக்கவேண்டும் என்று என் மனம் விழைந்தது. ஆனுல், அப்படிச் செய்வது தகுந்ததாகப் படவில்லே. ஆனுல், ஒன்றுமட்டும் உண்மை: பாவாநந்த் என்ருல் ஏதாவது செய்து காண்பித்த உதாரணத்தை முன்ஞல் வைத்த பெரியவராக இருந்தார். அவருடைய வாழ்க்கைச் சரித்திரத்தை வாசகர்களுக்குமுன் வைத்து, ஒருமுறை Behold the man என்று மட்டும் சொல்லு கிறேன்'